ஸ்ரீ:

ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ பரப்ரஹ்மணே நம:



# ஏரார் குணமும் எழிலுருவும்

## எம்பெருமானின் ஸ்வரூப ரூப குணங்கள் ஒரு அறிமுகம்

(சரணாகதி கத்யத்தில் எம்பெருமானாரின் அநுபவப்ரகாரம்)

ஸ்ரீ அஹோபிலமடம்
45-வது பட்டம் ஸ்ரீமதழகியசிங்கர்
ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியாவில் அருளிய
அருள்மொழிகளின் தொகுப்பு

ஸ்ரீ அஹோபிலமடம்
45-வது பட்டம் ஸ்ரீமதழகியசிங்கர்
ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ திவ்யபாதுகா ஸேவக
ஸ்ரீவண்சடகோப ஸ்ரீ நாராயணயதீந்த்ர மஹாதேசிகனின்
75வது திருநக்ஷத்ர மஹோத்ஸவத்தில்
வெளியிடப்பட்டது.

வ்ருஷ ஹு	கார்த்திகை	உத்திரட்டாதி

நவம்பர் 26, 2001

First Edition : 2001

No. of Copies : 1000

முதற்பதிப்பு
வ்ருஷ ஞ
கார்த்திகை உத்திரட்டாதி
45-ம் பட்டம் ஸ்ரீமதழகியசிங்கர் 75வது திருநக்ஷத்ர மஹோத்ஸவத்தன்று சென்னையில் வெளியிடப்பட்டது.

Price : Rs.150/-

**Published by :**

**SRI AHOBILA MATH**

Printed at :
**SRI ANDAL PRINTERS**
4, Rosary Church Road Ist Lane,
Santhome, Chennai - 600 004.
Phone : 4620512, Mobile : 98400 76463

ஸ்ரீ:

ஸ்ரீமதே ஸ்ரீலக்ஷ்மீ ந்ருஸிம்ஹ பரப்ரஹ்மணே நம:
ஸ்ரீமதே ஸ்ரீலக்ஷ்மீ ந்ருஸிம்ஹ திவ்யபாதுகா ஸேவக
ஸ்ரீவண் ஶடகோப ஸ்ரீ நாராயண யதீந்த்ர
மஹாதேசிகாய நம:

# இந்நூலைப் பற்றி.......

எம்பெருமானால் மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஸ்வாமி நம்மாழ்வார் திருவாய்மொழி முதல் பாசுரத்தில் ''உயர்வற உயர்நலம் உடையவன் துயரறு சுடரடி தொழுது எழு என் மனனே'' என்கிறார். இறைவன், தான் எல்லா நற்குணங்களுக்கும் இருப்பிடமாய் இருக்கிற இருப்பைக் காட்டி ஆழ்வாரை வணங்குவித்தான். அவ்வணங்குதலும் அவனே காட்டித் தந்த சோதி வெள்ளத் திருமேனியின் திருவடியில் சிரம் தாழ்த்தும் செய்கையாம் என்றும், அதுவே பிறவித் துயரறுக்கும் சாதனம் என்றும் தன் மனத்துக்கு உரைக்கிறார் ஆழ்வார்.

இறைவன் அனைத்து நற்குணங்களும் நிரம்பிய பெரும் குணக்கடல் என்றால் அந்தக் குணங்கள் தாம் யாவை? அவனது சுடர்மிகு திருவுருவம் என்பது எத்தகையது? என்னும் கேள்விகளுக்கு விடையாக ஸ்ரீ பாஷ்யகாரர் நீண்ட பட்டியலே போட்டுத் தருகிறார் சரணாகதி கத்யத்தின் தொடக்கத்தில். இங்கு மட்டும் அல்ல. பரப்ரஹ்மம் என்பது உருவமோ, குணநலன்களோ இல்லாத ஒரு வெற்றுப் பொருள் என்று வாதிடும் மதத்தை வாய்ப்பு நேரும் போதெல்லாம் மறுக்கும் நோக்கத்துடன், பரம் பொருளைப்பற்றிய ப்ரஸ்தாவம் வரும்போதெல்லாம் குணநலன்களையும் ஒப்பற்ற திருமேனியையும் பற்றி வாய் நிறையப் பேசி மகிழ்கிறார்.

உதாஹரணம் - ஸ்ரீ பகவத்கீதைக்கு அருளிச் செய்த பாஷ்யத்தின் துவக்கத்தில், போர்க்களத்தில் அர்ஜுனனின் ஸாரதியாக நிற்கும் கண்ணனைப் பேசப் புகும்போது, கத்யத்தில் போலவே பல் வேறு அடைமொழிகளைக் கொண்டு ஸ்ரீமந்நாராயணனின் குணநலன்களையும் திருமேனிச் சிறப்பையும் விவரிக்கத் தவறவில்லை.

மேற்குறிப்பிட்டபடி சரணாகதி கத்யத்தில் ஸ்ரீ பாஷ்யகாரர் ஜ்ஞானம், பலம், ஐஶ்வர்யம், வீர்யம் என்று தொடங்கி இருபத்தைந்து குணங்களைக் குறிப்பிட்டு விட்டு, இன்னும் இவைபோன்று பற்பல எல்லையற்ற கல்யாண குணங்கள் நிரம்பிய பெருங்கடல் என்று பகவத் ஸ்வரூபத்தை வர்ணிக்கிறார். இந்தப் பட்டியலைப் படித்து அநுஸந்தானம் செய்பவருக்கு, சில வார்த்தைகளின் அர்த்தம் புரிந்தும், சில புரியாமலும், சில புரிந்தும் புரியாமலுமாகவும் இருப்பது கண்கூடு.

இவை ஒவ்வொன்றுக்கும் முழுக்கருத்து என்ன, ஒவ்வொரு குணத்தாலும் பரமாத்மாவின் ஸ்வபாவத்துக்கு என்ன ஏற்றம், ஒவ்வொன்றும் அவதார தசையில் எங்கு அநுபவிக்கக் கிடைக்கிறது, ஒவ்வொரு குணத்தாலும் பகவானை ஆஶ்ரயிக்கும் நமக்கு என்ன லாபம், இவ்வளவையும் நான்கு வருட காலம் ஸ்ரீ ந்ருஸிம்ஹ ப்ரியாவில் அருள்மொழிகள் மூலம் மிகத் தெளிவாகவும், விஸ்தாரமாகவும் சுவைபட விவரித்து நம்போன்ற பாமரமக்களுக்குப் பேருதவி புரிந்துள்ளார் ஸ்ரீமதழகியசிங்கர்.

குறிப்பாக, பெரியவாச்சான் பிள்ளை, நம்பிள்ளை, அழகிய மணவாளப் பெருமாள் நாயனார், ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் ஆகியோரின் கத்யத்ரய வ்யாக்யானங்களில் உள்ள உயரிய



கருத்துக்களை மட்டுமின்றி, அவர்களுடைய அஸாதாரணமான, ஈரத் தமிழ்ச்சுவை ததும்பும் வியாக்யான வாக்யங்களையும் அப்படியே எடுத்துக் காட்டி, அந்த வ்யாக்யான நடையைத் தாம் ரஸித்தது போல் பிறரும் ரஸிக்கும் வண்ணம் செய்துள்ளது இதாநீம் ஸ்ரீமதழகியசிங்கருக்கே உள்ள தனிச்சிறப்பு.

ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியாவில் இவ்விஷயங்கள் அருள் மொழிகளாக வெளிவந்து கொண்டிருந்தபோதே வாசகர்கள் இவற்றைப் பெரிதும் ரஸித்துப் பாராட்டி வந்துள்ளனர். விஷயத்தின் முக்யத்வத்தையும் சுவையையும் கருதி இவற்றைத் தொகுத்து ஒரு புத்தக உருவில் வெளியிட வேண்டுமென்று அன்பர்கள் பலர் விருப்பம் தெரிவித்தனர். ஸ்ரீமதழகியசிங்கரும் ஒப்புதல் அளித்ததன் பேரில் ஸ்ரீஅழகியசிங்கரின் 75-வது திருநக்ஷத்ர மஹோத்ஸவ ஸமயத்தில் இவற்றைத் தொகுத்துப் புத்தகமாக வெளியிடத் தீர்மானிக்கப்பட்டது.

இதற்கு முன் வருடங்களில் ஸ்ரீமதழகியசிங்கர் தாம் பதிப்பிடத் திருவுள்ளம் பற்றும் புத்தகங்களைப் பிழையில்லாமல் சரி பார்த்து அச்சிடும் பொறுப்பை பந்தல்குடி ஸ்ரீ ராமபத்ராசார்யரிடமே ஒப்படைத்தாயிருக்கிறது. அவ்வாறே இவ்வருள்மொழிகளைத் தொகுத்து ஒரு புத்தகவடிவம் கொடுத்து வெளியிடும்படி அந்த ஸ்வாமியையே ஸ்ரீ அழகியசிங்கர் நியமித்தாயிற்று. அவரும் ஶ்ரமம் பாராது உழைத்து இந்நூலுக்கு ஒரு அழகிய உருவம் கொடுத்து வெளிக்கொணர்ந்திருக்கிறார். இப்பணியில் இந்த ஸ்வாமியின் பத்நியும் வழக்கம் போல் உறுதுணையாக இருந்து ப்ரூஃப்களை அவ்வப்பொழுது திருத்திக் கொடுத்து உதவி வந்துள்ளார். இடையில் சில காலம் தன் பர்த்தாவுக்கு உடல் நலம் குன்றி அலுவலைக் கவனிக்க இயலாமல் போனபோதும் தானே முழுப் பொறுப்பேற்று இப்பணி தடங்கலில்லாமல் நிறைவேற

உதவியிருக்கிறார். தாம் நியமித்த இந்தக் கைங்கர்யத்தை இவ்விருவருமாக உரிய காலத்தில் செவ்வியமுறையில் நிறை வேற்றிய முறையை ஸ்ரீமதழகியசிங்கர் மிகவும் உகந்து பாராட்டியாகிறது.

கம்ப்யூட்டர் முறையில் பன்மொழியிலும் அச்சுக்கோத்து, அழகிய தோற்றத்தோடு புத்தகங்களைக் குறித்த காலத்தில் அச்சிட்டுத்தருவதில் அனுபவம் பெற்ற ஸ்ரீ ஆண்டாள் பிரிண்டர்ஸ் ஸ்ரீ ரவியும், ஸ்ரீமதழகியசிங்கர் ஸ்ரீ ராமபத்ராசாரியார் இவர்கள் கருத்தறிந்து இந்நூலை அழகிய முறையில் அச்சிட்டுக் கொடுத்திருக்கிறார். அவரது இத்தொண்டு மேன்மேலும் வளரவேண்டும் என்று ஸ்ரீமதழகியசிங்கர் ஆஶாஸித்தாகிறது.

## இந்நூலின் அமைப்பு

பகவானுடைய குணங்கள், திருமேனி இவற்றின் சிறப்பு பற்றி ஸ்ரீமதழகியசிங்கர் நான்கு வருஷ காலம் ஸ்ரீ ந்ருஸிம்ஹ ப்ரியாவில் 45 இதழ்களில் தொடர்ச்சியாக அருளிய அருள்மொழிகளை ஒன்றாகத் தொகுக்கும்போது, அவை இயல்பாகவே மூன்று தனிப்பகுதிகளாகப் பிரிகின்றன. முதற்பகுதி ஸ்ரீ பாஷ்யகாரர் சரணாகதி கத்யத்தில் பட்டியலிட்டுக் காண்பித்த பகவத் குணங்கள் ஒவ்வொன்றினுடையவும் முழுவிவரணமும் பயன்களும்.

இரண்டாவது பகுதியில் எம்பெருமானுடைய திருமேனியின் சிறப்புக்களும், குறிப்பாக அர்ச்சாவதாரத் திருமேனியின் ஏற்றமும் விளக்கப்படுகின்றன.

மூன்றாவது பகுதி, நம் தேசத்திலுள்ள எல்லா அர்ச்சா மூர்த்திகளுக்கும் மூலம் என்று கருதப்படும் ஸ்ரீரங்கம் ரங்கநாதனுடைய சயனத் திருக்கோலத்தைப் பற்றிய ரஸானுபவம்.



இம்மூன்றும் தனித்தனிப் பகுதிகளாகவே அச்சிடப்பட்டு இத்தொகுதியில் ஒன்றாகச் சேர்க்கப்பட்டுள்ளன. திவ்யதேச எம்பெருமான்கள், ஆழ்வாராசார்யர்கள் ஆகியோரின் வண்ணப் படங்கள் மேலட்டையிலும் உள்ளேயும் புத்தகத்துக்கு அழகூட்டுகின்றன.

பலமுறை படித்துச்சுவைத்துப் பயன்பெற வேண்டிய புத்தகம். எம்பெருமானிடம் - குறிப்பாக அர்ச்சாவதார ஸேவையில் - ஈடுபாட்டை வளர்ப்பதுடன், ஸ்வாமிதேசிகன் மற்றும் பிற பூர்வாசார்யர்களின் உரைகளையும், க்ரந்தங்களையும் மேன்மேலும் படித்து அனுபவிக்க வேண்டும் என்ற அவாவையும் இந்நூல் ஏற்படுத்தும் என்பது திண்ணம். ஆஸ்திகர்கள் பெரும் அளவில் இதை வாங்கிப் படித்துப் பயனடைவார்கள் என்று நம்புகிறோம்.

ஸ்ரீ நியமனப்படி,<br>
ந்யாயவேதாந்த வித்வான்<br>
தையார் வங்கீபுரம் ரங்கராஜாசார்யர்<br>
*(ஸ்ரீ ஸந்நிதி ஸ்ரீ கார்யம்)*

**ஸ்ரீமதஹோபிலமடம்**<br>
**சேலையூர்**<br>
**வ்ருஷ ஷு, கார்த்திகை மீ, 11வ**

ஸ்ரீ அஹோபிலமடம் 45வது பட்டம் ஸ்ரீமதழகியசிங்கர்



ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ திவ்ய பாதுகாஸேவக
ஸ்ரீ வண்சடகோப ஸ்ரீ நாராயணயதீந்த்ர மஹாதேசிகன்

# ஏரார் குணமும் எழிலுருவும்

## பாகம் 1

## உயர்வற உயர்நலம் உடையவன்

பொருளடக்கம் — பக்கம்

## 1. சரணாகதி கத்யமும் பகவத் குணங்களும் - ஆறுமுக்ய குணங்கள்

**श्रीमतो लक्ष्मणमुनेः सूक्तिभिः गतकल्मषाः ।**
**वयं सम्यग्विजानीमः तत्त्वं नारायणं परम् ॥**
**श्रीमद्भगवतस्सर्वान् गुणान् रामानुजो मुनिः ।**
**पृथुगद्ये समाख्याति तान् विद्याम मनागिह ॥**

ஸ்ரீமதோ லக்ஷ்மணமுநே: ஸூக்திபி: கதகல்மஷா: ।
வயம் ஸம்யக்விஜாநீம: தத்த்வம் நாராயணம் பரம் ॥
ஸ்ரீமத் பகவதஸ்ஸர்வாந் குணாந் ராமாநுஜோ முநி: ।
ப்ருதுகத்யே ஸமாக்யாதி தாந் வித்யாம மநாகிஹ ॥

சித்திரை மாதம் என்றதுமே ஸ்ரீபெரும்பூதூரும், ஸ்வாமி எம்பெருமானாரும் ஆஸ்திகர்களின் ஹ்ருதயங்களில் தோன்றுவது திண்ணம்.

**जयति सकलविद्यावाहिनीजन्मशैलः**
**जनिपथपरिवृत्तिश्रान्तिविश्रान்तिशाखी ।**
**निखिलकुमतिमायाशर्वरीबालसूर्यः**
**निगमजलधिवेलापूर्णचन्द्रो यतीन्द्रः ॥** *- யதிராஜ ஸப்ததி*

"உலகில் உள்ள வித்யைகளாகிற நதிகள் அனைத்துக்கும் உற்பத்தி ஸ்தானமாம் மலை போன்றவர் ஸ்வாமி எம்பெருமானார்.

ஸம்ஸாரமார்கத்தில் அநாதிகாலமாக ஏறியும் இறங்கியும் இளைத்தவர்களுக்கு இளைப்பாற்றி ஸுகம் தரும் நிழல் மரம் போன்றவர் ஸ்வாமி எம்பெருமானார்.

குமதிகள் (வக்ரபுத்தியுள்ளவர்கள்) கொண்டுள்ள மாயையாம் இரவுக்கு இளம் ஸூர்யன் போன்றவர் ஸ்வாமி எம்பெருமானார்.

வேதக் கடலின் கரையில் உதிக்கும் பூர்ண சந்த்ரன் போன்றவர் ஸ்வாமி எம்பெருமானார். அவரை நாம் அனைவரும் ஜய ஜய என்று போற்றிப் பாடுவோமே.''

- என்றிவ்வாறு எம்பெருமானாரின் சிறப்பை ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் மேற்கண்ட ஶ்லோகத்தில் அழகாக எடுத்துக் கூறுகிறார்.

ஸ்வாமி எம்பெருமானார் அருளிச் செய்த சரணாகதி கத்யம் ஒன்றே நம்மை உய்விப்பதற்கும், ஸ்வாமி எம்பெருமானார் பெருமையைப் பறை சாற்றுவதற்கும் போதுமான க்ரந்தமாகும். மிக லளிதமான வாக்யங்களால் அமைந்துள்ளது இது.

லக்ஷ்மீபதியான எம்பெருமானுக்கும் யதிபதியாம் எம்பெருமானாருக்கும் நிகழ்ந்த உரையாடல் இது. இருவரும் கருணைக் கடல்கள். சரணாகதி மந்த்ரம் எனப்படும் த்வய மந்த்ரத்தினுடைய ஸாரம் இது. பழம் பெருமை வாய்ந்த பரதத்த்வத்தை நமக்கு நன்கு காட்டுகின்றது இந்த சரணாகதி கத்யம்.

ஒரு ஸமயம் பங்குனி உத்திரத் திருநாளில் ஸ்ரீ ரங்கநாய்ச்சியாரும் ஸ்ரீ ரங்கநாதனும் சேர்ந்திருந்த சேர்த்தியிலே எம்பெருமானார் தாம் சரணாகதியை அநுஷ்டித்து, பின்புள்ளாரும் அநுஷ்டிக்க வேண்டும் என்று திருவுள்ளம் கொண்டு சரணாகதிகத்யத்தையும் மற்றும் ஸ்ரீரங்ககத்யம், ஸ்ரீ வைகுண்ட கத்யம் என்ற இரண்டையும் ஆக கத்ய த்ரயத்தையும் அருளிச் செய்தார் என்ற இந்த விஷயம்

ततः कदाचित् स हि रङ्गनायिका-
श्रीरङ्गनाथावपि फाल्गुनोत्तरे ।
मुदाभिषिक्तौ च तदा प्रपद्य तौ
गद्यत्रयं चाप्यवदद्यतीश्वरः ॥





தத: கதாசித் ஸ ஹி ரங்கநாயிகா-
ஸ்ரீ ரங்கநாதாவபி பால்குநோத்தரே ।
முதாபிஷிக்தௌ ச ததா ப்ரபத்ய தௌ
கத்யத்ரயம் சாப்யவதத் யதீஶ்வர: ॥

என்ற ப்ராசீன ஶ்லோகம் ஒன்று கூறுகிறது.

ஸ்வாமி எம்பெருமானார் நவரத்னம் போன்ற ஒன்பது க்ரந்தங்களை அருளிச் செய்துள்ளார். அவற்றை ஸ்வாமிதேசிகன் நான்கு வகைகளாகப் பகுத்து அருளியுள்ளார் யதிராஜஸப்ததியில்.

**ஆகர்ஷணாநி நிகமாந்த ஸரஸ்வதீநாம்**-ராமாநுஜனாகிய (பலராமன் தம்பியான) கண்ணன் தன் குழலின் ஓசையினால் நந்தகோகுலத்தில் உள்ள பெண்கள் அனைவரையும் ஆகர்ஷித்தாப்போல், அவர்களை இழுத்துத் தன் வயமாக்கினாப் போல், ஸ்வாமி ஸ்ரீ ராமாநுஜரும் குழலினும் இனிய (குழலின் மலியச் சொன்ன) தன் திருவாக்குகளால் அதாவது வேதார்த்த ஸங்க்ரஹம் என்னும் க்ரந்தத்தினால் நிகமாந்த ஸரஸ்வதிகளை (ஸகல வேத வாக்யங்களையும்) இழுத்து எம்பெருமான் விஷயத்தில் ஸமந் வயப்படுத்தினார்- எம்பெருமானையே கூறுகின்றனவாகச் செய் தார். ஆக **யதிராஜ முநேர்வசாம்ஸி நிகமாந்தஸரஸ்வதீநாம் ஆகர்ஷ -ணாநி** -வேதார்த்த ஸங்க்ரஹத்தில் சில வாக்யங்களுக்கு நிர்வாஹம் செய்து காட்டிய வகையில் வேத வாக்யங்கள் அனைத்துமே இந்த நிர்வாஹத்தில் அகப்பட்டன.

**யதிராஜமுநேர் வசாம்ஸி உச்சாடநாநி பஹிரந்தருபப்லவாநாம்.**

மேலும் வைதிகர்களான நம்மவர்களாலும் நாஸ்திகர்களான பிறர்களாலும் நேர்ந்துள்ள உபத்ரவங்களைப் போக்கும் உச்சாடன மந்த்ரமாகவும் விளங்குகின்றன ஸ்ரீயதிராஜருடைய ஸ்ரீ ஸூக்திகள்.

வேதங்களைப் ப்ரமாணமாகக் கொள்வதால் வைதிகர் எனப் படும் மாயாவாதிகளால் நேரும் **(अन्तःउपप्लवं)** உள் கலஹத் தையும் வேதத்தை ப்ரமாணமாக இசையாத ஸாங்க்யன் முதலான பிற மதத்தினரால் நேரும் வெளிப்புறக் கலஹங்களையும் விலக்க வல்ல மந்த்ரங்கள் போன்றுள்ளன ஸ்ரீபகவத் ராமாநுஜருடைய ஸ்ரீஸூக்திகள் சில. அவை ஸ்ரீபாஷ்யம், ஸாரம், தீபம் முதலியன ஆகும்.

**யதிராஜமுநேர்வசாம்ஸி பத்த்யாநி கோர பவ ஸஞ்ஜ்வர பீடிதாநாம்.**

மிகவும் கோரமான ஸம்ஸாரத்தின் தாபத்தினால் பீடிக்கப் பட்டு வருந்துபவர்களுக்கு பரமஹிதத்தைக் காட்டுவதால் **(पथ्य)** பத்யங்களாய் அமைந்துள்ளன மூன்று கத்யங்களும். இவற்றில், சரணாகதி கத்யம், ஸ்ரீரங்க கத்யம் இரண்டிலுமாக, பரமஹித மான சரணாகதி என்ற உபாயத்தைத் தன்னுடைய அனுஷ்டானத் தின் மூலம் காட்டியருளினார் ஸ்வாமி எம்பெருமானார். மூன்றாவதான ஸ்ரீ வைகுண்டகத்யத்தில் உபதேசம் செய்வதன் மூலமாகப் பரம புருஷார்த்தமான மோக்ஷ ஸ்வரூபத்தை விளக்கியருளுகிறார். ஆகவே மூன்று கத்யங்களும் ஸம்ஸார தாபத்தினால் வருந்தியவர்களுக்கு மிகுந்த ஹிதத்தைத் தருவதால் பத்தியங்களாகின்றன.

**யதிராஜமுநேர்வசாம்ஸி ஹ்ருத்யாநி பாந்தி**

பரமஹிதமான சரணாகதி என்ற உபாயத்தையும் மோக்ஷ மாகிற பரம புருஷார்த்தத்தையும் மூன்று கத்யங்களும் நன்கு விளக்கிக் காட்டியதால் உள்ளம் தேறியிருக்கும் ஆஸ்திகர்களுக்கு ஸ்ரீ கீதாபாஷ்யமும் நித்யம் என்ற க்ரந்தமும் மிகவும் மனத்துக்கு உகப்பாக ஆகின்றன. ஸ்ரீ கீதாபாஷ்யத்தில் ஸ்ரீ கீதைக்கு வ்யாக்





யானம் பண்ணும் வ்யாஜத்தில் ஒவ்வொரு ஶ்லோகத்திலும் பகவான் ஸ்ரீபார்த்தஸாரதியின் குணங்களை மிக விரிவாக அருளிச் செய்துள்ளார் ஸ்வாமி எம்பெருமானார். ஸ்ரீ கீதாபாஷ்யத்தில் உள்ள ஒவ்வொரு ஸ்ரீஸூக்தியும் பரமானந்தத்தை தருகின்றது. இப்படி எம்பெருமானுடைய கல்யாண குணங்களைக் கண்டு அவனிடம் பக்தி பூண்ட பரமைகாந்திகளுக்கு-பகவானுடைய திருவாராதன முறையை நன்கு விளக்கிக் காட்ட 'நித்யம்' என்றதொருக்ரந்தத்தை அருளிச் செய்துள்ளார் ஸ்வாமி எம்பெரு மானார். ஆகவே இவ்விரண்டும் ஹ்ருத்யங்களாகின்றன. ஆஸ்தி கர்கள் அனைவருடைய ஹ்ருதயங்களுக்கும் உகந்தவையா கின்றன ஸ்ரீ கீதாபாஷ்யமும் நித்யமும்.

இப்படி ஸ்வாமி எம்பெருமானாருடைய ஒன்பது ஸ்ரீஸூக்தி களையும் வரிசைப்படுத்தி ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் அருளிய விதத்தை இங்கே தரும் இந்த ஶ்லோகத்திலே காணலாம்.

**आकर्षणानि निगमान्त सरस्वतीनाम्**
**उच्चाटनानि बहिरन्तरुपप्लवानाम् ।**
**पथ्यानि घोरभवसंज्वरपीडितानां**
**हृद्यानि भान्ति यतिराजमुनेर्वचांसि ॥**

ஆகர்ஷணாநி நிகமாந்த ஸரஸ்வதீநாம்
உச்சாடநாநி பஹிரந்தருபப்லவாநாம் ।
பத்த்யாநி கோரபவஸஞ்ஜ்வரபீடிதாநாம்
ஹ்ருத்யாநி பாந்தி யதிராஜமுநேர்வசாம்ஸி ॥

பவஸஞ்ஜ்வரபீடிதர்களாய் அதாவது ஸம்ஸார தாபங்கள் பல வற்றால் நன்கு பீடிக்கப்பட்டுள்ள நமக்கு மிகவும் பத்த்யங்களாய் உள்ள மூன்று கத்யங்களில் ப்ரதாநமான ஸ்ரீசரணாகதிகத்யத்தைக் கொண்டு எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்கள் சில

வற்றை அனுபவிப்போம். நம்முடைய தெய்வம் உயர்வற உயர் நலம் உடையது; மிகச் சிறந்த திருக்கல்யாண குணங்களை யுடையது. நிர்குணமானது அன்று.

சரணாகதி கத்யம் என்பது த்வயம் என்ற சரணாகதி மந்த்ரத்திற்கு விவரணமாய் அதற்கு வ்யாக்யானமாய் அமைந்துள்ளது என்பதே நம் பூர்வாசார்யர்களின் திருவுள்ளம்.

த்வயமந்த்ரத்தில் முதலில் 'ஸ்ரீமத்' என்ற பதம் உள்ளது. அதற்கு வ்யாக்யானமாக அமைந்தது கத்யத்தின் ஆரம்பத்தில் உள்ள 'பகவந்நாராயணாபிமத' என்று தொடங்கும் பெரிய சூர்ணிகை (வாக்யம்). பிறகு 'அகிலஹேய ப்ரத்யநீக' என்ற வாக்யங்களால் நாராயண சப்தத்தின் அர்த்தங்களை விளக்கி யருளுகிறார் ஸ்வாமி எம்பெருமானார். முதலில் எம்பெருமா னுடைய திவ்யாத்மஸ்வரூபம், பிறகு திவ்ய திருமேனி, பிறகு திவ்யாத்மஸ்வரூபத்தில் உள்ள திருக்கல்யாண குணங்கள் அதன் பிறகு திருவாபரணம், திவ்யாயுதங்கள், திவ்ய மஹிஷிகள், இப்படிப் பலவற்றை அருளிச் செய்தார். இவற்றையெல்லாம் பிறகு தனித்தனியே விரிவாக அனுபவிக்கலாம்.

தற்போது நம்முடைய பரப்ரஹ்மம் கல்யாண குணங்கள் பலவற்றை உடையது என்று முன்பு எழுதியுள்ளதற்கேற்ப இங்கு இப்பொழுது கல்யாண குணங்களை மட்டும் அனுபவிப்போம்.

எம்பெருமானுடைய திருக்கல்யாணகுணங்களை விவரிக் கும் கத்யவாக்யம்-

**स्वाभाविक अनवधिकातिशय ज्ञान-बल-ऐश्वर्य - वीर्य-शक्ति-तेजस् - सौशील्य-वात्सल्य-मार्दव-आर्जव - सौहार्द-साम्य-कारुण्य-माधुर्य - गाम्भीर्य-औदार्य-चार्तुय-स्थैर्य - धैर्य-शौर्य-पराक्रम-सत्यकाम- सत्यसङ्कल्प-कृतित्व - कृतज्ञताद्यसङ्ख्येयकल्याण गुणगणौघ महार्णव!**

என்பதாகும்.





**ஸ்வாபாவிக அநவதிகாதிஶய ஜ்ஞாந-பல-ஐஶ்வர்ய- வீர்ய-ஶக்தி - தேஜ: - ஸௌஶீல்ய-வாத்ஸல்ய-மார்தவ- ஆர்ஜவ- ஸௌஹார்த -ஸாம்ய-காருண்ய- மாதுர்ய- காம் பீர்ய- ஔதார்ய- சாதுர்ய-ஸ்த்தைர்ய-தைர்ய- ஶௌர்ய- பராக்ரம- ஸத்யகாம- ஸத்யஸங்கல்ப- க்ருதித்வ- க்ருதஜ்ஞ தாத்யஸங்க்யேய கல்யாண குணகணௌக மஹார்ணவ!"**

இப்படி எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களை ஒருங்கே திரள அநுபவிப்பது கத்யம் தவிர வேறு எங்கும் கிடைக் காததாகும்.

இந்த குணங்களில் ஜ்ஞாநம்-பலம்-ஐஶ்வர்யம், வீர்யம், சக்தி, தேஜஸ் என்ற ஆறு குணங்கள் பகவானுடைய பரத்வத்தை, பெருமையைக் காட்டுகின்றன. இங்கு ஜ்ஞானம் என்பது ஸர்வ வஸ்துக்களையும் ஸாக்ஷாத்கரிப்பதாகும். எம்பெருமானுடைய ஜ்ஞானம் முதலான குணங்கள் யாவுமே ஸ்வாபாவிகங்கள் (இயற்கையாகவே ஏற்பட்டவை) ஆகும். அதாவது அவித்யை யினால் ஏற்பட்டவை அல்ல. மற்றொருவருடைய ஸங்கல்பத்தி னால் ஏற்பட்டவையல்ல. (நித்யஸூரிகளுக்கு உள்ள குணங்கள் யாவும் பகவத் ஸங்கல்பத்தினால் ஏற்பட்டவையாகும்). இந்த குணங்களைக் காட்டிலும் உயர்ந்த குணங்கள் வேறெங்கும் கிடையா என்றபடி.

ஜ்ஞானம் - ஸர்வ ஸாக்ஷாத்காரம், எல்லாவற்றையும் நேரில் கண்டறிதல்.

பலம் - அநாயாஸமாக யாவற்றையும் தாங்கி நிற்கும் ஆற்றல்.

ஐஶ்வர்யம் - தன் விருப்பப்படி தடையின்றி ப்ரஹ்மா- ருத்ரன் முதலாக யாவரையும் நியமித்தல்.

வீர்யம் - உலகுக்கெல்லாம் மூல காரணமாயிருப்பதாலும் யாவற்றையும் தாங்குவதாலும், யாவரையும் நியமிப்பதாலும் உண்டாகக்கூடிய விகாரம் - மாறுபாடு - ஒன்றும் இல்லாதிருத்தல்.

ஶக்தி - தன்னைத் தவிர்த்த மற்றைய யாவற்றையும் நிர்வ ஹிக்கும்-நடத்தும்- ஆற்றல். அதாவது ஸர்வ வஸ்துக்களுக்கும் உபாதாந (மூல) காரணமாயிருக்கை.

தேஜ:-ஒரு கார்யம் செய்யும்போது தனக்கு வசமல்லாத எந்த ஒரு வஸ்துவையும் ஸஹகாரியாக (துணையாக)க் கொள்ளாமல் இருக்கை.

குயவன் சட்டி பானைகளை மண்ணைக் கொண்டு செய்கி றான். அப்போது அவனுக்கு தண்டம் (கோல்) சக்ரம் முதலான வஸ்துக்கள் துணையாக-ஸஹகாரியாக வேண்டியிருக்கின்றன. ஆனால் எம்பெருமான் ஜகத் ஸ்ருஷ்டி முதலானவற்றைச் செய்யும் போது எதையும் துணையாகக் கொள்வதில்லை.

ப்ரக்ருதி என்ற வஸ்துவையும், காலம் முதலியவற்றையும் கொண்டுதானே ஜகத்தை ஸ்ருஷ்டிக்கிறான் பகவான். ஆகவே பகவானுக்கும் ஸஹகாரி வஸ்து வேண்டியிருக்கிறதே என்று கேட்க வேண்டாம். ஆம்! அவனுக்கும் ஸஹகாரியாக ஒரு பொருள் வேண்டியிருக்கிறது. ஆனால் அவை யனைத்தும் அவ னுக்கு அதீனங்கள். உலகில் அப்படி யில்லை. மற்றையவர்கள் கொள்ளும் ஸஹகாரியான வஸ்துக்கள் அவர்களுக்கு அதீனங்கள் அல்ல.

ஆகவே ஸ்வாமி ஸ்ரீதேசிகன் இங்கு 'தேஜ:' என்ற சொல் லுக்கு வ்யாக்யானம் செய்யும் போது 'அஸ்வாதீந ஸஹ கார்யநபேக்ஷத்வம்' என்று அருளியுள்ளார்.

சாஸ்த்ரங்களும் இவ்வாறு தான் 'தேஜஸ்' என்பதற்கு இலக் கணம் வகுக்கின்றன - **तेजस्त्वन्यानधीनता** *(தேஜஸ்து அந்யாநதீநதா)* பிறர்க்கு வசப்படாதிருக்கை தேஜஸ் என்று.

**'सहकार्यनपेक्षा मे सर्वकार्यविधौ हि या ।**
**तेजः षष्ठगुणं प्राहुः तमिमं तत्त्ववेदिनः ॥**





ஸஹகார்யநபேக்ஷா மே ஸர்வகார்யவிதௌ ஹி யா ।
தேஜ: ஷஷ்டகுணம் ப்ராஹு: தமிமம் தத்த்வவேதிந: ॥

நான் எந்த ஒரு கார்யத்தைச் செய்யும் போதும் துணையாக மற்றொன்றைக் கொள்ளாமலிருக்கிறேன் அன்றோ! இதைத் தான் தேஜஸ் என்ற ஆறாவது குணம் என்று உண்மையறிந்த பெரியோர் கள் உரைக்கின்றனர் என்று எம்பெருமானே தன்னுடையதான தேஜஸ்ஸுக்கு இலக்கணத்தை தத்த்வஜ்ஞானிகள் கூறுவதாக எடுத்துக் காட்டியுள்ளான்.

ஆக தேஜஸ் என்பது எந்தக் கார்யம் செய்யும் போதும் தனக்கு வசமல்லாத மற்றொன்றை துணையாகக் கொள்ளாமலிருத்தலே யாம்.

மற்றொரு விதமாகவும் இந்த தேஜஸ்ஸை இலக்கணம் கூறி விளக்கினர் சிலர்.

ஒரு வகையில் அர்த்தம் புரிந்து கொண்டால் போதுமே. எதற்காகப் பல அர்த்தங்களைக் காட்டவேண்டும் என்று சிலர் நினைக்கலாம். இது தவறு. இது எம்பெருமானுடைய குணமாத லால் பற்பல வகைகளில் அவனுடைய பெருமையை அறியப் பற்பல அர்த்தங்களை விளக்குவது பயன்படும்.

தேஜஸ் = பராபிபவந ஸாமர்த்யம் - அதாவது மற்றையோரை ஒடுக்கும் திறன் தேஜஸ்.

எம்பெருமான், தன்னுடைய ஒளியாலே-காந்தியாலே மற்றைய ஒளிப்பொருள்கள் அனைத்தையும் ஒளியிழக்கும்படிச் செய்கிறான். எம்பெருமானுடைய எதிரில் ஸூர்யனோ, சந்திர னோ நக்ஷத்ரங்களோ இந்த மின்னல்களோ எதுவும் ப்ரகாசிப்ப தில்லை. இவற்றின் பாடே இப்படி என்றால் அக்னியின் நிலை மை பற்றிச் சொல்லவே வேண்டாம் அடியோடு ஒளியிழந்து நிற்கும் அது அவன் ஸந்நிதியில்.

**न तत्र सूर्यो भाति न चन्द्रतारकं नेमा विद्युतो भान्ति कुतोऽयमग्निः**

ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ர தாரகம் நேமா வித்யுதோ பாந்தி குதோऽயம் அக்னி:

என்று உபநிஷத் கூறுகிறது. துர்யோதனனுடைய ஸபை யில் அரசர்கள் பலர் வீற்றிருக்கின்றனர். அவர்கள் அனைவரும் மிக்க பொலிவுடன்-காந்தியுடன் இருந்தனர். அந்தப் பெருஞ்சபைக்குக் கண்ணன் எழுந்தருளினான். அவ்வளவிலேயே அவர்கள் அனைவரும் பொலிவிழந்தனர். தம் தம் காந்தியை இழந்தனர். காரணம்? ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவின் ஸந்நிதியில் இவனைத் தவிர வேறு எவர் தான் ப்ரகாசிக்க முடியும்? முன்பு உபநிஷத் கூறிய அர்த்தத்தை நன்கு நிரூபித்துக் காட்டிவிட்டான் கண்ணன். தன்னுடைய தேஜஸ்ஸினால் அங்குள்ளோருடைய தேஜஸ்களையெல்லாம் மறைத்துவிட்டான்.

இதை மஹாபாரத ச்லோகம் ஒன்று கூறுகிறது.

**पाणौ गृहीत्वा विदुरं सात्यकिं च महाबलम् ।**
**सभायां प्राविशत् कृष्णः राज्ञां मध्ये महाद्युतिः ॥**
**ज्योतींष्यादित्यवद्राजन् कुरून् प्रच्छादयन् श्रिया ॥**

(பாணௌ க்ருஹீத்வா விதுரம் ஸாத்யகிஞ்ச மஹாபலம் ।
ஸபாயாம் ப்ராவிசத் க்ருஷ்ண: ராஜ்ஞாம் மத்யே மஹாத்யுதி: ॥
ஜ்யோதீம்ஷி ஆதித்யவத் ராஜந் குரூந் ப்ரச்சாதயந் ச்ரியா ॥)

ஒரு திருக்கையினால் ஸ்ரீவிதுரனையும் மற்றொரு திருக்கையினால் ஸாத்யகியையும் பற்றிக் கொண்டு மிக்க பெருஞ்சோதியோடு அந்த ஸபையில் அரசர் பலர் நடுவே எழுந்தருளினான் கண்ணன். ஸூர்யன் தன் ஒளியின் ப்ரபாவத்தினால் சந்த்ரன் நக்ஷத்ரங்கள் முதலானவற்றின் ஒளியை மறைத்துக்கொண்டு கிளம்புவது போல் அந்த துரியோதன ஸபையில் கூடியிருந்த அரசர் அனைவருடைய காந்திகளையும் அழித்துக்கொண்டு நுழைந்தான் கண்ணன். இவ்வாறு மற்றையாருடைய மஹிமையைச் சடக்கென அடக்கும் ஆற்றல் தான் தேஜஸ் என்பதாயிற்று.





இவ்வளவாகக் கூறிய இந்த ஆறு குணங்களும் எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களுள் ப்ரதானங்கள்- முக்யங்கள் ஆனவை. ஆகவே தான் எம்பெருமானை ஷட்குணன் என்றும் த்ரியுகன் (மூன்று இரண்டு குணங்களை உடையவன்) என்றும் சாஸ்த்ரங்கள் கூறுகின்றன.

இந்த ஆறு குணங்களை எம்பெருமானார் இந்த கத்யத்தில் கூறும் போது கொண்டுள்ள க்ரமத்தில் ஒரு விசேஷம் இருக்கிறது. இதை ஸ்வாமி ஸ்ரீதேசிகன் இதன் வ்யாக்யானமாகத் தாம் அருளிய ரஹஸ்ய ரக்ஷையில் அருளிச் செய்கிறார். மிகவும் சுவையுடையது. எளிதில் அறியக் கூடியதும் ஆகும். ஆகவே நாமும் இங்கே அந்த க்ரமத்தின் சுவையை அறியலாமே.

ஜ்ஞானம்-பலம்-ஐச்வர்யம்-வீர்யம்-சக்தி - தேஜஸ் என்ற இந்த குணங்கள் ஜீவர்களுக்கும் உண்டு. எம்பெருமானுடைய இந்த குணங்களுக்கு நம் குணங்களைக் காட்டிலும் ஏற்றம் இருக்கிறது. இதைத்தான் நாம் கவனிக்க வேண்டும்.

உலகில் நிறைய சொத்துக்களை உடையவன், தான் தூங்கும் போது தனக்கு எவ்வளவு சொத்துக்கள் இருக்கின்றன என்பதை ஒரு போதும் அறிய மாட்டான். ஆம்! தூங்கும் ஸமயத்தில் பணக்காரனும் ஏழையும் பண்டிதனும்-பாமரனும் உயர்குலத்தவனும்-தாழ்ந்த குலத்தவனும் ஒரே விதமான மனநிலை

உடையவராகத்தானிருப்பர். தான் பணக்காரன் தான் ஏழை தான் பண்டிதன் தான் பலவான் என்றவாறான உணர்ச்சிகள் ஏதும் இரா. விழித்து எழுந்த பின் தான் ஏற்றத்தாழ்வுகளைப் பற்றிய உணர்ச்சிகள்.

இந்த நியதியின் படி நிறைய சொத்துக்களை உடையவன் தூங்கும்போதும் தன் சொத்துக்களைப் பற்றி அறியான்; ஒரு புண்ணிய விசேஷத்தினால் தூங்கும் போதும் தன் சொத்துக்களைப் பற்றி அறிபவன் ஒருவன் இருந்தாலும் அந்த நிலையில் அவன் அவற்றைத் தாங்கமாட்டான். பணப்பெட்டியைத் தன் கையில் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கும் நிலையில் தூங்கி விட்டால் அந்தப்பிடி தளர்ந்துவிடும். உயர்ந்த புண்யத்தினால் தூங்கும்போதும் தன் சொத்துக்களை அறிந்தும் தாங்கிக் கொண்டும் இருந்தாலும் அவற்றை நியமிக்க முடியாதவன் ஆவான். அப்படி அந்த நிலையிலும் ஆடு மாடுகளாகிய தன் சொத்துக்களை-விபூதிகளைத்-தாங்கி நியமிப்பானாயினும் வாடிவிடுவான். தூக்கம் சற்று கலைந்தாலே வாடி விடுவது உலகில் கண்கூடு. அப்படி தன் விபூதிகளை (ஆடு மாடுகளை)த் தூங்கும் போதும் நியமித்து வாடாமல் ஒருவன் இருப்பானாயினும் அவற்றின் ஸத்தைக்கு (வாழ்வுக்கு) அவன் காரணமாக மாட்டான். அப்படிக் காரணம் ஆகுபவன் ஒருவன் இருந்தாலும் அவன் தனக்கு அதீனமல்லாத - பராதீனமான - துணைக்காரணங்களைக் கொண்டுதான் காரணம் ஆவான்; ஆனால் எம்பெருமான் இப்படியல்லன்.

அதாவது எம்பெருமானுக்கு உறக்கமே கிடையாது. அப்படி ஏற்பட்டாலும் அந்த நிலையிலும் தன் விபூதிகளை அறியவும், தாங்கவும், நியமிக்கவும் அதனால் எவ்வித வாட்டமின்றியும், தன் ஸொத்துக்களின் ஸத்தைக்கு- ஆயுளுக்குக் காரணபூதனாகவும், அப்பொழுதும் பிறர்க்கு அதீனமான துணைக்காரணங்களைக்





கொள்ளாதவனாகவும் இருப்பான் எம்பெருமான் என்று அவன் பெருமையை உணர்த்தவே இந்த ஆறு குணங்களையும் வரிசைப் படுத்திக் காட்டியுள்ளார் ஸ்வாமி ஸ்ரீ எம்பெருமானார், என்று வ்யாக்யானம் தந்தருளினார் ஸ்வாமி ஸ்ரீதேசிகன். ஆகவே இந்த ஆறு குணங்களையும் ஸ்வாமி எம்பெருமானார் அருளி யுள்ள க்ரமத்திலேயே நாமும் அநுஸந்திக்க வேண்டும்.

நாமிப்போது அதை உங்களுக்கு உணர்த்தி மகிழ்கிறோம். ஆக எம்பெருமான் எல்லாக் காலத்திலும் தன் விபூதிகளை- சொத்துக்களை-அறிவான், தரிப்பான், நியமிப்பான். அதனால் எவ்வித வாட்டத்தையும் அடையமாட்டான். அவற்றின் ஸத்தைக்கு ஹேதுவாகவும் ஆவான். ஸ்வாதீனமானதுணைக்காரணங்களைக் கொண்டே ஹேது (காரணம்) ஆவான். மற்றைய குணங்களை மேலே அனுபவிப்போம்.

---

## 2. பக்த ரக்ஷணத்துக்குப் பயன்படும் பன்னிரண்டு குணங்கள்

**गुणान् भगवतः सत्यान् भाष्यकारेण दर्शितान् ।**
**विवृतान् गुरुभिः तैस्तैः पश्यामो विविधानिह ॥**

(குணாந் பகவத: ஸத்யாந் பாஷ்யகாரேண தர்ஶிதாந் ।
விவ்ருதாந்குருபி: தைஸ்தை: பஶ்யாமோ விவிதாநிஹ ॥

பரதத்வமான எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களை ஸ்வாமி எம்பெருமானார் தாம் இயற்றிய ஶரணாகதி கத்யத்தில் அருளியுள்ளபடியே அனுபவிப்போம் என்று தொடங்கி இதுவரை ஜ்ஞானம், பலம், ஐஶ்வர்யம், வீர்யம், சக்தி, தேஜஸ் என்ற ஆறு குணங்களை விவரித்தோம். மற்றும் உள்ள குண விசேஷங்களை மேலே தொடர்ந்து அனுபவிப்போம்.

எம்பெருமானுடைய எண்ணற்ற குணங்களுள் கீழ்ச் சொன்ன ஜ்ஞானம் முதலான ஆறுகுணங்களும் மிகவும் முக்யங்களாவன. மேலே சொல்லப்போகும் குணங்கள் பலவற்றுக்கும் மூலமாக - வேராக இருப்பவை ஜ்ஞானம் முதலிய இந்த ஆறுகுணங்கள். இவற்றின் விரிவே அவை.

ஶரணாகதி கத்யத்தில் முன் எடுத்துள்ள வாக்யத்தில் மொத்தம் இருபத்து ஐந்து குணங்கள் சொல்லப்பட்டுள்ளன.

இவை பயன்படும் வகைகளை இதன் வ்யாக்யானகாரர்களான ஸ்ரீஶ்ருதப்ரகாஶிகாசார்யர், பெரியவாச்சான்பிள்ளை, ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஆகியோர் பலவகைகளாகப் பகுத்துக் காட்டியுள்ளனர். இவற்றைப் புரிந்து கொள்வதால் எம்பெருமானுடைய ப்ரபாவம் நன்கு வெளியாகும். அவனை ஆஶ்ரயிப்பதில் உள்ள அச்சம் அகலும். ஆகவே சுருக்கமாக இங்கு அந்த





வகைகளை எழுதுகிறோம். 'ஜ்ஞானம்-பலம்-ஐஶ்வர்யம்-வீர்யம்-ஶக்தி-தேஜஸ்' என்று இந்த ஆறுகுணங்கள் ஆஶ்ரயித்தவர்கள் விஷயத்தில் மட்டுமின்றி ஆஶ்ரயிக்காதவர்கள் விஷயத்திலும் செய்யும் செயல்களுக்கெல்லாம் பொதுவாக இருக்கும். அதாவது ஆஶ்ரயித்தவன்- ஆஶ்ரயிக்காதவன் என்ற இருவகையினர் விஷயத்திலும் எம்பெருமான் செய்யும் செயல்கள் அனைத்துக்கும் இந்த ஆறு குணங்களும் பயன்படும்.

தன்னை ஆஶ்ரயித்தவர்கள் விரும்பும் பயன் எது? அவ்வாறு அல்லாதவர்கள் விரும்பும் பயன் எது? என்று அறிந்து அவரவர்கள் வேண்டுவதை அவரவர்களுக்குத் தரப் பயன்படுகிறது இந்த ஜ்ஞானம் அதாவது ஸர்வஜ்ஞத்வம். அவரவர்கள் விரும்புவதை அறியாவிடில் மோக்ஷம் வேண்டுபவனுக்கு ஸ்வர்கத்தையும் அதைத் தவிர்த்து ஸ்வர்கம் முதலியவற்றை வேண்டுபவர்க்கு மோக்ஷத்தையும் கொடுக்கும்படி நேரும்.

ஸ்வாமி நம்மாழ்வார் திருவாறன்விளை என்ற திவ்ய தேசத்தையே ப்ராப்யமாக அதாவது சென்று சேரக்கூடிய ஸ்தலமாக நினைத்திருக்கிறார். அவரைப் பார்த்து வேறொருவர் கேட்கிறார்:-

'ஓய் ஆழ்வீர்! நீர் திருவாறன்விளை என்ற தேசத்தையே பெற விரும்புகிறீர். ஆனால் ஸர்வேஶ்வரனான எம்பெருமான் ஸர்வ ஸ்வதந்த்ரனானபடியால் நீர்விரும்பாத மோக்ஷத்தைத் தந்தால் என்ன செய்வீர்?' என்று கேட்டார். அதற்கு ஸ்வாமி நம்மாழ்வார்: ஓய்! அவன் ஸ்வதந்த்ரனானாலும் ஸர்வஜ்ஞனாய் இருப்பதால் நான் விரும்புவதை அவன் அறிவான். ஆகவே அவனுடைய ஸர்வஜ்ஞனாயிருக்கும் இந்த குணம்- அதாவது ஸர்வஜ்ஞத்வம் - நான் விரும்பும் திருவாறன் விளையையே தரப் பண்ணும் என்று பதில் சொல்லிச் சிந்தையின்றி இருக்கிறார்.

'சிந்தை மற்றொன்றின் திறத்ததல்லாத் தன்மை தேவபிரான் அறியும்' -திருவாய்மொழி(7-10-10)

என்ற பாசுர வ்யாக்யானத்தில் இவ்விஷயம் கூறப்பட்டுள்ளது. அங்குள்ள ஈட்டு ஸ்ரீ ஸூக்திகள் பின்வருமாறு:-

'நீர் திருவாறன்விளையே ப்ராப்யம் என்றிருக்கிறீர். ஈஶ்வரன் ஸ்வதந்த்ரன் அன்றோ! அவன் பரமபதத்தைத் தரிலோ?' என்ன, ''அவன் ஸர்வஜ்ஞன் அன்றோ? என் உள்ளத்தை அறியானோ! புருஷார்த்த ப்ரதன் அன்றோ? புருஷன் அர்த்தித்ததையன்றோ கொடுப்பது'' என்கிறார் என்று திருக்குருகைப்பிரான் பிள்ளான் நிர்வாஹம் ஈட்டிலே அருளிச் செய்யப்பட்டுள்ளது.

அவன் ஸ்வதந்த்ரனாகையாலே நாம் நினைப்பதைத் தவிர வேறொன்றைக் கொடுத்தால் என் செய்வது? என்று கேள்வியின் பொருள். அவன் ஸ்வதந்த்ரனானாலும் ஆஶ்ரிதர்கள் விரும்புவதைக் கொடுக்கும் அவன் அதாவது புருஷார்த்த ப்ரதன் ஆகையால் அவரவர்கள் விரும்புவதைக் கொடுப்பான். ஆகையால் நாம் விரும்பியதை எம்பெருமான் தரமாட்டோனோ என்ற சிந்தை ஒருவருக்கும் வராது என்று கூறப்பட்டதாகிறது.

ஆக எம்பெருமானுடைய ஸர்வஜ்ஞத்வம் - எல்லாவற்றையும் அறிகை - ஆஶ்ரிதர்கள் சிந்தையின்றி இருப்பதற்குக் காரணமாகிறது.

இந்த அர்த்தத்தையே ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸாரத்தில் த்வயாதிகாரத்தில்:-

''ஸர்வஜ்ஞத்வமாவது:- யோவேத்தி யுகபத் ஸர்வம் ப்ரத்யக்ஷேண ஸதா ஸ்வத:'' என்கிறபடியே ஸர்வத்தையும் ஸாக்ஷாத்கரிக்கை.

இது 'ஆஶ்ரிதர்க்குக் கொடுக்கவேண்டும் நன்மைகளிலும்





கழிக்க வேண்டும் விரோதிகளிலும் இவன் அறியாதது ஒன்றுமில்லை' என்னும் அநுஸந்தானத்துக்கு உறுப்பாம் - என்று அருளிச்செய்துள்ளார்.

அதாவது நாம் பகவானை ஆஶ்ரயிக்கிறோம். இப்படி ஆஶ்ரிதரான நமக்குக் கொடுக்கவேண்டிய நன்மைகளை அவன் அறிவானா? நாம் வேண்டிய நன்மைகளைப் பெற ஒட்டாமல் பல பாபங்கள் தடுக்கின்றன. விரோதிகளான அந்தப் பாபங்களை அறிந்து, அவற்றைப் போக்கும் வழிகளையும் அறிந்திருந்தால் தானே அவனால் நம்மை ரக்ஷிக்க முடியும்? அவன் இவற்றை அறியாதிருந்தால் அவனால் நம்மை ரக்ஷிக்க முடியாதே என்று வீணான சிந்தை ஆஶ்ரிதர்களின் மனத்தைக் கலக்கும். எம்பெருமானுடைய ஜ்ஞானத்தின் பெருமையை அறிந்தால் இவ்வித மான கலக்கம் ஒன்றும் வராது. அவன் ஸர்வஜ்ஞனாகையால் நமக்குக் கொடுக்க வேண்டியவற்றையும் அவற்றுக்கு ப்ரதிபந்தகங்களான பாபங்களையும் அவற்றைப் போக்கும் வழிகளையும் அறிந்திருப்பானாகையால் நாம் வேண்டுவனவற்றை அவனால் தரமுடியும் என்று அநுஸந்தானம் செய்வதற்கும் அதனால் சிந்தையின்றியிருப்பதற்கும் காரணம் ஆகிறது இந்த ஜ்ஞானம் என்ற குணம்.

இவ்வாறே எம்பெருமானை ஆஶ்ரயிக்காதவர்களுக்குத் தர வேண்டியவற்றையும் அறிவான் இவன்.

ஆகையால் இந்த ஜ்ஞானம் என்ற குணம் ஆஶ்ரிதர்கள் மட்டுமின்றி அனைவர் விஷயத்திலும் பயன்படும். இவ்வாறே பலம் முதலான மற்றைய ஐந்து குணங்களும் கூடப் பொதுவில் அனைவருக்குமே பயன்படக் கூடியனவேயாகும்.

இந்தக் குணங்கள் ஆறும் முன்னமே விவரிக்கப் பட்டுள்ளன.

இதற்கு மேல் பக்த ரக்ஷணத்திற்கு மட்டும் பயன்படும்

பன்னிரண்டு குணங்கள் சொல்லப்படுகின்றன. அவையாவன:

(1) ஸௌஶீல்யம், (2) வாத்ஸல்யம், (3) மார்தவம், (4) ஆர்ஜவம், (5) ஸௌஹார்தம், (6) ஸாம்யம், (7) காருண்யம், (8) மாதுர்யம், (9) காம்பீர்யம், (10) ஔதார்யம், (11) சாதுர்யம், (12) ஸ்த்தைர்யம் **(स्थैर्यम्)** என்ற குணங்களே.

ஜ்ஞாநம், பலம் முதலிய ஆறு குணங்கள் அநுக்ரஹம் செய்வதற்கும் நிக்ரஹம் (தண்டனை) செய்வதற்கும் பொதுவா யிருக்கும். ஆனால் இந்தப் பன்னிரண்டு குணங்கள் பக்தர்களை ரக்ஷிப்பதற்கு மட்டுமே காரணமாயிருக்கும்.

இவற்றில் சில ஆஶ்ரிதர்களைச் சேர்த்துக் கொள்ளப் பயன் படும். மற்றும் சில சேர்த்துக்கொண்ட ஆஶ்ரிதர்களை ரக்ஷிக்கப் பயன்படும். இதன் விளக்கம் பிறகு.

**ஸௌஶீல்யம்** - இதில் (ஶோபநம்) ஶீலம் என்று இரண்டு பதங்கள் உள்ளன. இவற்றுக்கு பஹுவ்ரீஹிஸமாஸம் (அன் மொழித் தொகை) வந்துள்ளது, ஸு(ஶோபநம்) ஶீலம் யஸ்ய பாவ: - ஸௌஶீல்யம் அழகிய ஶீலம் என்று விசேஷணம் இட்டுள்ளார் ஶீலத்திற்கு. ஆகவே ஶீலம் என்பதன் பொருளை யும் அழகிய ஶீலம் என்பதன் பொருளையும் உணரவேண்டும்.

முதலில் ஶீலத்தைப் புரிந்து கொண்டால் பிறகு அதன் ஶோப நத்வத்தை (அழகை)ப் புரிந்து கொள்வது எளிது. ஶ்ருதப்ரகாஶி காசார்யர் இவ்வாறு படிப்படியாக வ்யாக்யானம் செய்து காட்டு கிறார். ‘‘**शीलं हि नाम-महतो मन्दैस्सह नीरन्ध्रेण संश्लेषस्वभाववत्त्वं** (ஶீலம் ஹி நாம 'மஹதோ மந்தைஸ் ஸஹ நீரந்த்ரேண ஸம்ஶ்லேஷ ஸ்வபாவவத்வம்) மிகப் பெரியவன் மிகத் தாழ்ந்தவர்களுடன் நெருங்கிக் கலந்து பழகும் தன்மை ஶீலம் எனப்படும்.

பெரியவன் தாழ்ந்தவர்களுடன் நெருங்கிக் கலப்பது ஶீலம்.





இதுவே வேறு எந்தப் பயனுக்கும் காரணமாகாமையால் ஸௌஶீல்யம் எனப்படுகிறது.

உரையாசிரியரே மேலும் வேறு ஒரு விதமாக இதற்கு இலக்கணம் வகுக்கிறார்.

ஜீவாத்மாக்கள் பரமாத்மாவை ஆஶ்ரயிக்காமல் போவதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. ஒன்று அவர்கள் எம்பெருமா னுடைய பெருமைகளைக் கண்டு தம்முடைய தாழ்வினால் ஸர்வேஶ்வரனான எம்பெருமானை ஆஶ்ரயிக்க நமக்குத் தகுதி இல்லை என்று எண்ணி அஞ்சுவது. இரண்டாவது இவர்கள் ஒருவாறு தெளிந்து எம்பெருமானை ஆஶ்ரயிக்க வரும் போது எம்பெருமான், நாம் ஸர்வேஶ்வரனாக இருக்கிறோமே இவர்க ளோடே கலந்து பழகலாமா? என்ற எம்பெருமானுடைய எண்ணம். இப்படி இரண்டுமில்லாமல் இருக்கை ஸௌஶீல்யம்.

ஆஶ்ரிதர்களுடைய அச்சத்தைப் போக்கியும், தன்னை ஈஶ்வரன் என்று எண்ணுதிருக்கையுமே ஸௌஶீல்யம்.

'அந்த மஹத்த்வம் தம் திருவுள்ளத்திலும் இன்றிக்கே ஒழிகை ஸௌஶீல்யம்' என்று பெரியவாச்சான் பிள்ளை இந்த அர்த்தத்தை விளக்கியுள்ளார்.

எம்பெருமான் தாழ்ந்தவர்களுடன் நெருங்கிப் பழகும் போது யாராவது எம்பெருமானிடம் வந்து அவனுடைய பெருமையை அவனுக்கு உணர்த்தினாலும் அதை அவன் நெஞ்சில் கொள்ள மாட்டான். ராவணவதத்திற்குப் பின் ஸீதை அக்னிப்ரவேசம் செய்த போது ப்ரஹ்மாதி தேவதைகள் ஸ்ரீராமனிடம் வந்து **भवान् नारायणो देवः**' (பவாந் நாராயணோ தேவ:) நீர் நாராயணன் ஆயிற்றே என்று அவனுடைய பரத்வத்தை அதாவது பெருமை யை நினைவுபடுத்த, அத்தை அவன் நெஞ்சில் கொள்ளாமல் **आत्मानं मानुषं मन्ये** (ஆத்மாநம் மாநுஷம் மந்யே) நான் மனிதத்

தன்மையை பெரிதாகக் கொண்டாடுகிறேன் என்று பதில் சொன்னான் அன்றோ. இதுதான் ஸௌஶீல்யம். தன்னை நாராயணன் என்று நினைத்தால் சேதந அசேதனர்களைக் காட்டிலும் விலக்ஷணனான நாம் எப்படி அவர்களுடன் கலந்து பழகுவது? என்று அஹங்காரம் வந்துவிடும். அப்பொழுது தாழ்ந்தவர்களான நம்மால் அவனை ஆஶ்ரயிக்க முடியாமற் போய்விடும்.

நாம் பகவானை ஆஶ்ரயிப்பதற்கு முன் அநுஸந்தானம் செய்ய வேண்டிய குணங்களில் இதுவே முக்யமாகும்.

ஸ்வாமி ஸ்ரீதேசிகன் இந்த குணத்தின் லக்ஷணத்தையும் இதன் பயனையும் இங்கே பாஷ்யத்திலும், ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸாரத்தில் த்வயாதிகாரத்திலும் வெகு அழகாக ஸாதித்துள்ளார்.

ஸௌஶீல்யமாவது - தான் ஸர்வாதிகனாய் வைத்துத் தண்ணியரான நிஷாத-வாநர-கோபாலாதிகளோடே நீரந்த்ர ஸம்ஶ்லேஷம் பண்ணுகை. இது ''அம்மான் ஆழிப்பிரான் அவன் எவ்விடத்தான் யான் ஆர்?'' என்று அகலாதே ஸாரத்ய- தூத்யாதி பர்யந்தமாக அபேக்ஷிக்கும்படி விஶ்வஸநீயதைக்கு உறுப்பாம், என்று.

---



## 3. ஸௌஶீல்யம், வாத்ஸல்யம்

**सौशील्यं चापि वात्सल्यं श्रेष्ठौ भगवतो गुणौ ।**
**आश्रितानां संग्रहाय कल्पेते इति निश्चितम् ॥**
**अनयोश्चिन्तनेनैवं निर्भीका आस्तिका जनाः ।**
**आश्रयेरन् हरिं नूनमिति तौ वर्णिताविह ॥**

ஸௌஶீல்யம் சாபி வாத்ஸல்யம் ஶ்ரேஷ்டௌ பகவதோ குணௌ ।
ஆஶ்ரிதாநாம் ஸங்க்ரஹாய கல்பேதே இதி நிஶ்சிதம் ॥
அநயோஶ்சிந்தநேநைவம் நிர்பீகா: ஆஸ்திகா: ஜநா:।
ஆஶ்ரயேரந் ஹரிம் நூநமிதி தௌ வர்ணிதாவிஹ ॥

எம்பெருமானுடைய கல்யாண குணங்களில் மிக முக்யமான ஸௌஶீல்யம் என்ற குணத்தை அனுபவித்தோம். அதைப் பற்றிய விளக்கமே மேலும் தொடருகிறது.

ஸ்வாமி ஸ்ரீதேசிகன் த்வயாதிகாரத்தில் பகவானுடைய இந்த ஸௌஶீல்யம் என்ற குணம் ஆஶ்ரயிக்க விரும்புபவர்களுக்கு பகவானிடத்தில் விஶ்வாஸத்தை உண்டு பண்ணி அவர்களை அஞ்சாமல் ஆஶ்ரயிக்கும்படி பண்ணுகிறது என்று விவரித்துள்ளார்.

எம்பெருமான் எல்லோரையும் விட மிகப் பெரியவன். அப்படிப்பட்டவன் ராமக்ருஷ்ணாதிகளாக அவதரித்தபோது தன் பெருமையைப் பாராட்டாமல் மிகவும் நீசர்களான வேடர்களோடும் வானரங்களோடும், இடையர்ளோடும் நெருங்கிப் பழகினான். வேடனான ஸ்ரீ குஹனோடும், வானரங்களோடும்

பழகியது ஸ்ரீராமாவதாரத்தில்; கோபாலர்களோடு பழகியது ஸ்ரீ க்ருஷ்ணாவதாரத்தில். ஸ்ரீ குஹனோடு கலந்து பழகி அவனுக்கு அருள் செய்ததை நினைந்து உருகிய திருமங்கை ஆழ்வார் எனக்கு அம்மாதிரி அருள் செய்யவேண்டும் என்று எம்பெருமானை வேண்டுகிறார்.

இந்த மாதிரியான அவனுடைய ஸௌசீல்ய குணத்தை நாம் அநுஸந்தானம் செய்தால் அவன் பெருமை கண்டு நாம் அஞ்சி அகல வேண்டாம், இவ்வளவு மட்டும் அன்று. நாம் அவனை ஆஶ்ரயித்து அபேக்ஷித்தால் அர்ஜுனனுக்குப் போலே நமக்கும் தேரோட்டுதல், தூது செல்லுதல் போன்ற எல்லாக் கார்யங்களையும் செய்வான் எம்பெருமான். இவ்வளவு ஸுசீலன் அவன் என்று நம்மை எம்பெருமானிடம் நம்பிக்கை வைக்கச் செய்து நாம் அவனை ஆஶ்ரயிக்கும்படிச் செய்கிறது இந்த மஹாகுணம்.

ஜாதி, தொழில், அறிவு, யாவற்றாலும் நீசன் குஹன். அவனுடைய பக்தி மாத்ரத்தைக் கொண்டு ஸ்ரீராமன் அவனைக் கட்டி அணைத்து அருள் செய்தானே என்று வியக்கிறார் திருமங்கையாழ்வார்:-

**ஏழை ஏதலன் கீழ்மகன் என்னாது**
**இரங்கி மற்றவற்கு இன்னருள் சுரந்து**
**மாழை மான் மடநோக்கி உன் தோழி**
**உம்பி எம்பி என்றொழிந்தலை உகந்து**
**தோழன் நீ எனக்கு இங்கொழி என்ற**
**சொற்கள் வந்து அடியேன் மனத்திருந்திட**
**ஆழிவண்ணா! நின்னடியிணையடைந்தேன்**
**அணிபொழில் திருவரங்கத்தம்மானே**

**-பெரிய திருமொழி 5-8-1**

என்று.

இந்த ஸௌசீல்யம் என்ற திருக்கல்யாண குணத்தின் பெரு





மையை நன்கு உணர்ந்தால் அவன் பெருமை கண்டு அஞ்சி அவனை விட்டு ஒருவரும் அகலவேண்டி வராது.

ஸ்வாமி நம்மாழ்வார், தம்மை நீசராக எண்ணி, என் விஷயத்தில் எம்பெருமான் க்ருபை பண்ணினான் என்றால் யாருக்குத்தான் க்ருபை செய்ய மாட்டான். யான் ஆர்! நான் மிகவும் நீசன். நித்ய ஸம்ஸாரிகளுக்குள்ளும் மிகவும் கடையன். இப்படிப்பட்ட என்னிடம் அன்பு செய்தவன் அம்மான், ஆழிப்பிரான் - ஸர்வேஶ்வரன். தன்கையில் திருவாழி (சக்ரம்) கொண்டு இந்த அழகை நித்ய ஸூரிகளுக்குக் காட்டிக் கொண்டிருப்பவன். இப்படி மிகப் பெரியவனான ஸர்வேஸ்வரன் இப்படி மிக நீசனான என் மீது க்ருபை செய்தான். இப்படி இவன் என் மீது க்ருபை செய்வதைப் பார்த்தால் 'எம்மாபாவியர்க்கும் விதி வாய்க்கின்று வாய்க்கும் கண்டீர்'. எப்படிப்பட்ட மஹாபாபியாயிருந்தும் அவனும் பகவானுடைய க்ருபையிலிருந்து விலகி இருக்க முடியாது. மிக தாழ்ந்தவர்களிடத்திலும் தானே வந்து பழகுமவன். இப்படிப்பட்ட இவனுடைய ஸௌசீல்யத்தைப் பாருங்கோள்,

அம்மான் ஆழிப்பிரான் அவன் எவ்விடத்தான்? யான் ஆர்? நித்ய ஸூரிகளுடன் பழகி அவர்களுக்குத் தன் அழகைக் காட்டிக் கொண்டிருக்கும் ஸர்வேஶ்வரன் எங்கே? அதி நீசர்களான நாம் எங்கே என்று ஒருவரும் அஞ்ச வேண்டாம் - என்று 'எம்மாபாவியர்க்கும் விதி வாய்க்கின்று வாய்க்கும் கண்டீர்'' என்று ஸ்வாமி நம்மாழ்வார் அருளிச் செய்கிறார்.

ஸ்ரீ குஹனுடன் தோழமை கொண்டதால் ஸ்ரீ ராம சந்த்ரனுடைய ஸௌசீல்யம் வெளிப்படை.

ஸ்ரீ குஹனுடன் ஸ்ரீராமசந்த்ரன் கொண்ட அன்பின் சிறப்பை வால்மீகி பகவான் அத்புதமாக வெளியிடுகிறார் 'குஹேந ஸஹிதோ ராம: ஸீதயா லக்ஷ்மணேந ச' என்று. இப்பொழுது வந்து சேர்ந்தவன் குஹன். அவனுடன் சேர்ந்துள்ளான் ஸ்ரீராமன்

என்றிவ்வளவுதான் இங்குச் சொல்லவேண்டும். ஆனால் வால்மீகியோ ஸீதையுடனும் ஸ்ரீ லக்ஷ்மணனுடனும் சேர்ந்தான்' என்று எழுதியுள்ளார். இவர்கள் இருவருடனும் முன்னமே அதாவது குஹனுடன் சேர்வதற்கு முன்னமே சேர்ந்துள்ளான். இப்பொழுது எதற்காக இவர்களுடைய சேர்த்தியைச் சொல்லவேண்டும் என்ற கேள்விக்கு நம் பூர்வாசார்யர்கள் சுவை மிகுந்த ஸமாதானம் சொல்லியுள்ளார்கள். அதாவது மிகவும் வேண்டியவனான குஹனுடன் சேர்வதற்கு முன் ஸீதை லக்ஷ்மணன் இவ்விருவர்களுடை சேர்த்தி (சேர்க்கை) இவன் நெஞ்சில் படவே இல்லையாம். உலகிலும் மிக வேண்டிவர்கள் அருகில் இல்லாதபோது அருகில் இருக்கும் மற்றையவர்களை அருகில் இருப்பதாகவே பலர் நினையாதிருப்பதைப் பார்த்துத்தானே வருகிறோம். பகவானுடைய விஷயத்திலும் இவ்வாறே தான்.

மிகவும் ப்ரியனான குஹனோடு சேராதபோது ஸீதையோடும் தம்பி லக்ஷ்மணனோடும் சேர்ந்திருப்பது ஸ்ரீராமனுடைய நெஞ்சில் படவே இல்லையாம். அது மட்டு மன்று. அவர்கள் அருகில் இல்லாதவர்களாகவே ஆனார்களாம். ஸ்ரீ குஹனோடு சேர்ந்த பிறகு தான் இவர்களுடன் சேர்ந்தது நெஞ்சிற்பட்டது. ஆகவே தான் வால்மீகி ஸ்ரீராமனுடைய திருவுள்ளத்தை நன்கு அறிந்தவராகையாலே 'குஹேந ஸஹிதோ ராம:' என்ற இவ்வளவோடு நிற்காமல் 'லக்ஷ்மணேந ச ஸீதயா' என்று சொன்னார் என்கின்றனர் பூர்வாசார்யர்கள். இதனால் ஸ்ரீ ராமனுடைய ஸௌஶீல்யத்தின் சிறப்பு நன்கு வெளியாகிறது.

ஸ்ரீ க்ருஷ்ணாவதாரத்தில் இடையர்களோடு உறவு பாராட்டிக் கொண்டு நிற்கிறான் ஸ்ரீ க்ருஷ்ணன். சிறுவயதில் கொஞ்சமும் பயமின்றி வாட்டமின்றி கோவர்த்தனம் என்ற மலையைத் தாங்கி நின்ற கண்ணனை தேவனோ! கந்தர்வனோ! ராக்ஷஸனோ! என்று பலவாறாக ஸந்தேஹித்து நீ யார் என்று கேட்டு ஒதுங்கி நின்ற





இடையர்களை நோக்கிக் கண்ணன் நீங்கள் நினைத்தபடியெல்லாம் நான் வேறு எவனும் அல்லேன். நான் உங்களுள் ஒருவன் என்று சொல்லி அவர்களோடு நெருங்கிப் பழகினானே. அங்கு பகவானுடைய ஸௌஶீல்யம் வெளிப்படையாகிறது. இப்படிப்பட்டவன் நமக்கு ஸ்வாமியாயும், சரண்யனாயும் இருக்கும்போது அவன் பெருமை கண்டு நாம் ஏன் அஞ்ச வேண்டும்? என்பதற்காகவே இந்த ஸௌஶீல்ய குணத்தை நன்கு விவரித்துள்ளனர் நம் பூர்வாசார்யர்கள். இந்த ஸௌஶீல்யத்தை நன்கு உணர்ந்தவர்கள் எம்பெருமானைத் தனக்கு வேலைக்காரனாகக் கொள்ளவும் நினைப்பார்கள். இவ்வாறு நினைத்தால் அவனும் அப்படியே தன்னை ஆஶ்ரயித்தவர்கள் விரும்பும் வேலைகளைக் கட்டாயம் செய்வான் என்று நம்பும்படியாய் நிற்கிறான் எம்பெருமான். அர்ஜுனன் தேரோட்டியாகவும் தூதனாகவும் ஸ்ரீ க்ருஷ்ணனைக் கொள்ளவில்லையா? அவனும் அப்படியே அர்ஜுனன் விரும்பியவற்றைச் செய்யவில்லையா? ஆக எம்பெருமானிடத்தில் நமக்கு மஹாவிஶ்வாஸத்தை உண்டு பண்ணி அவனை ஆஶ்ரயிக்கும்படி நம்மைச் செய்கிறது இந்த ஸௌஶீல்யம் என்ற குணம்.

**வாத்ஸல்யம்:** சரணாகதர்களைச் சேமிக்கும் அதாவது ஸம்பாதிக்கும் (ஸங்க்ரஹிக்கும்) குணங்களில் இதுவும் ப்ரதானம். தான் ரக்ஷிக்க விரும்பும் ப்ராணிகளிடத்தில் உள்ள தோஷத்தை மறைக்கும் அன்பு தான் வாத்ஸல்யம் எனப்படுகிறது.

தன்னை ஆஶ்ரயித்த ஒருவனை எம்பெருமான் ரக்ஷிக்க விரும்புகிறான். ஆனால், ஆஶ்ரயித்த அவனிடத்தில் நிறைய தோஷங்கள் உள்ளன. அந்த தோஷங்களைக் கண்டு எம்பெருமான் அவனை ஒதுக்கித் தள்ளி விடுவானோ என்று எண்ண வேண்டாம். ஆஶ்ரிதனான அந்த ஜீவனிடத்தில் உள்ள தோஷத்தைக் காண முடியாமல் மறைத்துவிடுகிறது அந்த ஜீவனிடம் எம்பெருமான் கொண்டுள்ள அன்பு.

இந்த அன்பினால் ஆஶ்ரயித்தவர்களிடம் உள்ள தோஷங்களை இவன் அறிவதில்லை. ஆகவே அவர்களை இவன் ஒரு போதும் தண்டிக்க மாட்டான்.

இந்த அர்த்தத்தை ஸ்ரீ ஸஹஸ்ரநாமத்தில் 'அவிஜ்ஞாதா' என்ற திருநாமத்திற்கு வ்யாக்யாநம் செய்யும் போது ஸ்ரீ பட்டர் தம்முடைய பாஷ்யத்தில் அருளிச் செய்துள்ளார். ஆஶ்ரயித்தவர்களிடம் நிறைய தோஷங்களைக் கண்ட போதும் அவர்களைத் தண்டிப்பதில்லை. பொறுத்துக் கொள்ளவும் செய்கிறான். இவ்வளவு மட்டுமன்று அந்த தோஷங்களை அவன் அறியாதவனாகவும் நிற்கிறான். ஆகையால் அவன் 'அவிஜ்ஞாதா'.

ஆயினும் இவன் ஸர்வஜ்ஞன் தான் என்பதை உணர்த்த அடுத்ததான 'ஸஹஸ்ராம்ஶு' என்ற திருநாமம். ஆஶ்ரித தோஷங்களை அறியாதவன் என்கிறது அவிஜ்ஞாதா என்ற திருநாமம். அவன் ஸர்வஜ்ஞன் என்கிறது அடுத்ததான ஸஹஸ்ராம்ஶு: என்ற திருநாமம். இரண்டு அர்த்தங்களும் ஒன்றுக்கு ஒன்று முரண்பட்டதாயிற்றே! அறியாதவனானால் ஸர்வஜ்ஞனாயிருக்க முடியாது. ஸர்வஜ்ஞனாயிருந்தால் அவன் அஜ்ஞனாய் அதாவது அறியாதவனாய் இருக்க முடியாதே! எப்படி இந்த இரண்டும் - அவிஜ்ஞாதா,ஸஹஸ்ராம்ஶு என்ற இரண்டு திருநாமங்களும் எப்படிப் பொருந்தும் என்ற கேள்விக்கு ஸ்ரீ பட்டர் பதில் அளிக்கிறார். தன்னை ஆஶ்ரயித்தவர்களிடம் உள்ள தோஷங்களை அறியாதவன் என்பதற்கு அப்படியே அர்த்தம் கொள்ளக்கூடாது. ஆஶ்ரிதர்களுடைய தோஷங்களில் கருத்து நோக்கு (தாத்பர்யம்) இல்லாதவன். அதாவது ஆஶ்ரயித்தவர்களிடம் உள்ள தோஷங்களைக் கண்டும் அதை உபேக்ஷிப்பான் என்று பொருள் கொள்ள வேண்டும்.

ஸுக்ரீவன் முதலானோர் சரணாகதி செய்ய வந்த விபீஷணனிடம் பற்பல தோஷங்களைக் கூறினார்கள். அவர்கள் சொன்னவற்றையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த ஸ்ரீ ராமன் அந்த





தோஷங்கள் கிடக்கட்டும் **दोषो यद्यपि तस्य स्यात्** (தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத்) என்று உபேக்ஷித்து (புறக்கணித்து) விட்டு அவனை நாம் ஒரு காலும் கைவிட மாட்டோம் என்றது ப்ரஸித்தமன்றோ! என்றெல்லாம் ஸ்ரீ பட்டர் அருளிச் செய்துள்ளார்.

நம்மிடம் உள்ள மிகுந்த தோஷங்களைக் கண்டு எம்பெருமான் நம்மை உபேக்ஷித்து-வெறுத்துக் கைவிட்டு விட்டால் நாம் எப்படி அவனை ஆஶ்ரயிப்பது என்ற அச்சம் நமக்கு வேண்டாம் என்று சொல்லி பகவானை ஆஶ்ரயிக்கும்படிச் செய்கிறது நம்மை இந்த வாத்ஸல்யம் என்ற குணம்.

இந்த மஹாகுணம் **विदितस्स हि धर्मज्ञः शरणागतवत्सलः** (விதிதஸ் ஸ ஹி தர்மஜ்ஞ: சரணாகதவத்ஸல:) என்று ராவணனுக்கு ஸீதை உபதேசிக்கும் வாக்யத்தாலே வெளிப்படை. ஹே ராவண! ஸ்ரீ ராமனிடம் நீ ஶரணாகதி செய்து ஜீவிக்கப் பார். ''அவன் பத்னியான இவளை அபஹரித்து வந்து விட்டோமே! இவ்வளவு பெரிய தோஷம் உள்ள என்னை அந்த தோஷம் காரணமாக வெறுத்தால் என்ன செய்வது?'' என்று அவன் கருதக் கூடும் என்று நினைத்து அதற்கும் ஸீதையே பதில் சொல்லுகிறாள். 'சரணாகதவத்ஸல: விதித: ஸ:', சரணாகதராய்வருபவரிடம் உள்ள தோஷத்தை அவன் காணமாட்டான். அதாவது தோஷத்தைக் கண்டு அவனை உபேக்ஷிக்க (வெறுக்க) மாட்டான் என்று. ஸீதையின் இந்த உபதேசம் நமக்குப் பயன்படும்.

ஸுப்ரஸித்தர்களான ஸ்ரீ ஶ்ருதப்ரகாஶிகாசார்யர், ஸ்ரீ பெரிய வாச்சான் பிள்ளை இவர்கள் **'दोषेषु गुणत्व बुद्धिः वात्सल्यम्'** (தோஷேஷு குணத்வபுத்தி: வாத்ஸல்யம்) என்று எம்பெருமானுடைய இந்த வாத்ஸல்ய குணத்தைச் சிறப்பித்துக் காட்டியுள்ளார்கள். அதாவது ஆஶ்ரிதர்களிடம் உள்ள தோஷங்களையும் குணமாகக் காண்பது வாத்ஸல்யம் என்று விவரித்துள்ளார்கள். இதனால் ஆஶ்ரிதர்கள் விஷயத்தில் எம்பெருமானுடைய அபிப்ராயம் நன்கு விளக்கப் பட்டதாகிறது.

பொறுமை (क्षमा) என்ற மஹாகுணத்தினுடைய முதிர்ந்த நிலை இந்த வாத்ஸல்யம். ஆகவே க்ஷமா என்ற பொறுமையின் முதிர்ந்த நிலையைக் கூறியபடியால் க்ஷமா என்ற குணத்தைத் தனியாக எடுத்துக் காட்டவில்லை ஸ்வாமி எம்பெருமானார்.

**अपि चेत् सुदुराचारः भजते माम् अनन्य भाक् ।**
**साधुरेव स मन्तव्यः सम्यग्व्यवसितो हि सः ॥ (९-३०)**

(அபி சேத் ஸுதுராசார: பஜதே மாம் அநந்யபாக் ।
ஸாதுரேவ ஸ மந்தவ்ய; ஸம்யக்வ்யவஸிதோ ஹி ஸ: ॥)
-பகவத்கீதை ( 9-30)

என்ற ஸ்ரீ கீதா ஶ்லோகத்திலும் பார்த்தஸாரதி தன் பக்தனிடம் உள்ள தோஷத்தை அதாவது ஆசாரக் குறைவையோ அநாசாரத்தின் மிகுதியையோ கொண்டு அவனை அநாதரிக்கக்கூடாது. வேறு பயன் கருதாமல் என்னையே அவன் உபாஸிக்கிறான். ஆகையால் அவன் வைஷ்ணவாக்ரேஸரனே (என் அடியார்களில் முதன்மையாளன்) ஆவான் என்று பகவான் தன் வாத்ஸல்யத்தைத் தானே வெளியிடுகிறான்.

துராசாரனாயிருப்பது பெரிய தோஷமே. ஆனால் பகவானைப் பஜிப்பது என்ற சிறந்த குணம் அவனிடமிருப்பதால் துராசாரனாயிருக்கை மிகச் சிறிய குறையேயாகும். இதற்காக அவனை அநாதரிக்கக்கூடாது. மஹாத்மாக்களுக்கு ஸமமாகவே இவனை நினைக்க வேண்டும் என்கிறான் ஸ்ரீ க்ருஷ்ணன்.

---



## 4. மார்தவம், ஆர்ஜவம், ஸௌஹார்தம்

**मार्दवं चाप्यार्जवं च तथा सौहार्दमित्यपि ।**
**इमे गुणा भगवति प्रपित्सूनां भयापहाः ॥**

**अतस्ते बहुधाह्यत्र वर्णिताः चित्तरक्तये ।**
**नानाव्याख्यास्समालोच्य शास्त्रदर्शितवर्त्मना ॥**

மார்தவம் சாப்யார்ஜவம் ச ததா ஸௌஹார்தமித்யபி ।
இமே குணா பகவதி ப்ரபித்ஸூநாம் பயாபஹா: ॥

அதஸ்தே பஹுதாஹ்யத்ர வர்ணிதா: சித்தரக்தயே ।
நாநா வ்யாக்யாஸ்ஸமாலோச்ய ஶாஸ்த்ர தர்ஶித வர்த்மநா ॥

எம்பெருமானுடைய திருக்கல்யாணகுணங்களின் விளக்கமே தான் தொடர்கிறது.

**मार्दवम्** (மார்தவம்)-ஆஶ்ரிதர்களைச் சேர்ப்பதற்குப் பயன்படும் குணமிது. ஆஶ்ரிதர்களின் பிரிவைப் பொறுக்க முடியாதிருக்கை. ஆஶ்ரிதவிஶ்லேஷம் (பிரிவு) பொறுக்கமாட்டாத திருவுள்ளத்தின் மென்மை என்று அருளுகிறார் ஸ்ரீ பெரியவாச்சான்பிள்ளை.

தன்னை ஆஶ்ரயித்தவர்களை விட்டுப் பிரிந்தால் அதை ஸஹிக்க மாட்டாமல் வாடி விடுவான் எம்பெருமான் என்றபடி.

ஆஶ்ரிதர்கள் விஷயத்தில் அவர்களுக்கு என்ன நேர்ந்து விடுமோ? என்று காரணமன்றியே ஸந்தேஹித்தல் மார்தவம் என்றும் விளக்கம் தருகிறார் ஶ்ருதப்ரகாஶிகாசார்யர்.

ஆஶ்ரிதர்கள் எவ்விதத்துன்பமுமில்லாமல் இருக்கும் போதே அவர்கள் மீது கொண்டுள்ள அன்பினால் தகாத முறையில் அவர்களுக்கு என்ன ஆபத்து நேர்ந்துவிடுமோ என்று ஸந்தேஹித்தல் மார்தவம் - மென்மை ஆகும் என்றும் கூறலாம்.

ஸ்வாமி ஸ்ரீதேசிகன் தம்முடைய வ்யாக்யானத்தில் இந்த குணத்தின் பயனையும் காட்டிக் கொண்டு இதனை விளக்குகிறார்-

**आश्रितविरहाक्षमतया सुप्रवेशत्वम्** (ஆஶ்ரித விரஹ அக்ஷமதயா ஸுப்ரவேஶத்வம்) என்று. அதாவது ஆஶ்ரிதர்களுடைய பிரிவைப் பொறுக்க மாட்டாதவன் எம்பெருமான் என்று அறிவதால் 'நாம் அவனை ஆஶ்ரயித்தால் நம்மை ஒரு போதும் விடமாட்டான். நம்மை விட்டுப்பிரிந்தால் வாடுபவனாயிற்றே இவன்' என்று எண்ணி எல்லோரும் இவனை ஆஶ்ரயிப்பார்கள்.

இப்படிப்பட்ட மார்தவம் **(मार्दवम्)** என்ற குணம் எம்பெருமானுக்கு உண்டு என்பதை அவன் திருவாக்கிலிருந்தே உணரலாம் என்கிறார் ஸ்வாமி ஸ்ரீ தேசிகன். அவன் திருவாக்காவது.

**न मे स्नानं बहुमतं वस्त्राण्याभरणानि च ।**
**तं विना केकयीपुत्रं भरतं धर्मचारिणम् ॥**

(ந மே ஸ்நாநம் பஹுமதம் வஸ்த்ராண்யாபரணாநி ச |
தம் விநா கேகயீபுத்ரம் பரதம் தர்மசாரிணம் ||) என்றபடி.

ராவணவதம் ஆய்விட்டது. லங்கை விபீஷணனுக்கு வசமாகிவிட்டது. ஸீதையை விட்டுப் பிரிந்த பிறகு ஸ்ரீராமன் பட்ட கஷ்டங்கள் மிகவும் அதிகம். பதினான்கு வருஷங்களாக ஜடை தரித்துக் கொண்டிருக்கிறான்; ஸ்ரீராமன் உண்ணுமல் உறங்காமல் இருந்தான்; இப்படிப்பட்டவனைப் பார்த்து ஸ்ரீ விபீஷணாழ்வான், ப்ரபோ! ஸ்ரீராமசந்த்ர ! இங்கு லங்கையில் ஜடைகளையெல்லாம் களைந்து விட்டு நல்ல வாஸனைப் பொருள்களால் மணக்கும் நன்னீரால் மங்களஸ்நானம் செய்து கொள்ளலாம். மரவுரி-மான்தோல் இவற்றையெல்லாம் களைந்துவிட்டு நல்ல பட்டாடைகளை உடுத்திக் கொண்டு ஆபரணங்களையும் பூண்டு கொண்டு இளைப்பாறிவிட்டு அயோத்தி செல்லலாமே! என்று ப்ரார்த்தித்தான். அப்பொழுது ஸ்ரீராமசந்த்ரன் தன் பக்தனான தம்பி பரதனை விட்டுப் பிரிந்திருந்த துன்பத்தை வெளிப்படுத்தி அவனோடு உடனே சேர வேண்டும் என்று தம் திருவுள்ளத்தை வெளிப்படுத்துகிறான் முன் காட்டிய ஶ்லோகத்தினால். ஓய்! விபீஷணாழ்வானே நமக்கு இப்பொழுது ஸ்நானமோ வஸ்த்ரங்களோ ஆபரணங்களோ எதுவும் வேண்டுவதில்லை. என்னை விட்டுப் பிரிந்து துன்பத்தை அனுபவித்துக்கொண்டு பல தர்மங்களை அனுஷ்டித்து வருகிறான் கைகேயீ புத்ரனான பரதன். இப்படிப்பட்ட இவனை விட்டுப் பிரிந்து நான் இங்கு ஸுகத்தை அனுபவித்துக் கொண்டிருக்கலாமா? ஆகவே இவை எனக்கு வேண்டாம். உடனே ஸ்ரீ பரதனுடன் சேர வேண்டும் என்றான் ஸ்ரீராமன். இதனால் பக்தனை விட்டுப் பிரிந்திருந்தபோது எம்பெருமான் திருவுள்ளத்தில் எவ்வளவு வாட்டம் இருந்திருக்கிறது என்பதை யாவருமே எளிதில் அறியலாமே! இதுதான் மார்தவம்.''





இங்கு பரதனைத் தம்பியாக மட்டும் பார்க்கக்கூடாது. அவனைச் சிறந்த பக்தனாகவே பார்க்க வேண்டும். ஆகப் பக்தர்களை விட்டுப் பிரிந்தால் வாடக்கூடியவனான எம்பெருமான் பக்தர்கள் கிடைத்தால் அவர்களை விட்டுப் பிரியாமல் தன் பக்கலிலேயே வைத்துக் கொண்டு ரக்ஷிப்பான் என்பது கிடைக்கிறது. இதனால் அனைவரும் அவனைக்கிட்டி அவனை ஆஶ்ரயிக்கலாம் என்பதும் தெளிவாகக் காட்டப்பட்டதாகிறது.

மேலும் மார்தவம் **(मार्दवम्)** என்ற குணத்தை மற்றொரு விதமாகவும் கொண்டு ரஸிக்கலாம். அதாவது அபராதம் செய்தவர்

களைத் தண்டிக்க முற்படும் போதும் கொடுஞ் சொற்களைக் கூறாமல் ம்ருதுவான சொற்களையே கூறுகை.

**सापराधेषु शासनोन्मुखस्यापि सामप्रधानत्वं वा** (ஸாபராதேஷு ஶாஸநோந்முகஸ்யாபி ஸாமப்ரதாநத்வம் வா) என்று இதை விளக்குகிறார் ஸ்வாமி தேசிகன்.

இதையும் எம்பெருமான் ஸ்ரீராமன் அருளிய வாக்யத்தினாலேயே ஸ்வாமி விளக்குகிறார்.

ஸ்ரீராமன் திருவாக்கிலிருந்து வெளிவந்த ஶ்லோகம் இதுவே:

**सामोपहितया वाचा रूक्षाणि परिवर्जयन् ।**
**वक्तुमर्हसि सुग्रीवम् व्यतीतं कालपर्यये ॥**

ஸாமோபஹிதயா வாசா ரூக்ஷாணி பரிவர்ஜயந் ।
வக்துர்மஹஸி ஸுக்ரீவம் வ்யதீதம் கால பர்யயே ॥

ஸீதையைத் தேடித் தருகிறேன் என்று ப்ரதிஜ்ஞை செய்து ஸ்ரீ ராமனிடம் நட்புக் கொண்டு வாலியை வதம் செய்வித்து கிஷ் கிந்தா ராஜ்யத்தைப் பெற்றான் ஸுக்ரீவன்; ஆனால் ப்ரதிஜ்ஞை செய்தபடி ஸீதையைத் தேட முயற்சி கொள்ளவில்லை. இப் படிப்பட்ட அபராதம் செய்தவனை தண்டித்து வருமாறு லக்ஷ்ம ணனை அனுப்புகிறான் ஸ்ரீராமன். குற்றம் புரிந்தவனைத் தண் டிக்க வேண்டிய ஸமயம் இது. இந்த ஸமயத்தில் லக்ஷ்மணனுக்கு ஸ்ரீராமன் அறிவுரை கூறுகிறான். 'லக்ஷ்மணா! ஸுக்ரீவ மஹா ராஜனிடம் நீ பேசும்போது அவன் செய்த குற்றத்தை உணர்த்த கொடிய சொற்களைப் பேசாதே. அவற்றை விட்டு இனிய, ம்ருது வான சொற்களையே கூறவேண்டும். அவன் காலம் கடத்தி விட்டான். ஆயினும் கடுஞ்சொற்களை அவனிடம் சொல்லாதே' என்று சொல்லி லக்ஷ்மணனை அனுப்புகிறான் ஸ்ரீராமன். இதனால் குற்றம் செய்தவர்களிடத்திலும் கொடிய சொற்களைக்





கூறலாகாது. இனிய, மென்மை வாய்ந்த சொற்களையே கூறவேண்டும் என்ற ஸ்வபாவம் ஸ்ரீராமனுக்கு உள்ளது என்பது வெளிப்படையாகிறதன்றோ! இதுவும் மார்தவம் (**मार्दवम्**) என்ற குணத்திற்கு இலக்கணம் ஆகிறது.

ஆக ஆஶ்ரிதர்களுடைய பிரிவைப் பொறுக்காமை மார்தவம். காரணம் ஏதுமின்றியே ஆஶ்ரிதர்களுக்கு என்ன நேர்ந்துவிடுமோ என்ற அச்சம் மார்தவம். அபராதம் செய்தவர்களைத் தண்டிக்க முற்படும் போதும் கடிய கொடிய சொற்களைக் கூறாமல் ம்ருதுவான சொற்களைக் கூறுவதையே முக்யமாகக் கொள்ளுதல் மார்தவம் என்று இந்த குணத்திற்குப் பூர்வர்கள் பலவிதமாக விளக்கம் தருகின்றனர். ஒவ்வொன்றுமே எம்பெருமானிடத்தில் நமக்கு மிகுந்த ஈடுபாட்டைத் தருவதாக இருப்பதால் அனைத் தையும் இங்கு ஒருங்கே திரட்டித் தந்துள்ளோம்.

இப்படிப்பட்ட சிறந்த எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்கள் எல்லாம் பரமார்த்தங்கள் அல்ல, அவித்யையினால் கற்பிக்கப்பட்டனவே என்று பிறர் சொல்லுகிறார்களே! இதற்கு நாம் வருந்த வேண்டும்;

(**आर्जवम्**) ஆர்ஜவம். இதுவும் ப்ரதானமான ஒரு குணம் . ஆர்ஜவம்-மநோவாக்காய ஐகரூப்யம் (**मनोवाक्कायैकरूप्यम्**) - மனம் - மொழி - மெய் (சரீரம்) இவை மூன்றும் ஒரு நிலைப்பட்டி ருக்கை ஆர்ஜவம் எனப்படுகிறது. மனத்தினால் நினைப்பதும், வாக்கினால் சொல்வதும், சரீரத்தினால் செயல்படுவதும் ஒத்திருக்க வேண்டும்.

ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளை ஆஶ்ரித ஸம்ஶ்லேஷ விஷ யத்தில் தன்னுடைய மநோ-வாக்-காயங்கள் ஏக ரூபமாய் இருக்கை. அதாவது அவர்களுக்குத் தன்னை நியமித்துக் கொடுக்கை ஆர்ஜவம் என்று விவரித்துள்ளார்.

ஸ்வாமி ஸ்ரீதேசிகனும் மனோ வாக்-காயங்களின் செயல்கள் ஒன்றோடு ஒன்று ஒத்திருக்கை ஆர்ஜவம் (மநோவாக்காயாநாம் மிதஸ்ஸம்வாதித்வம் **(मनोवाक् कायानां मिथस्संवादित्वम् आर्जवम्)** என்று அருளியுள்ளார்.

ஸ்ரீராமன் பஞ்சவடியில் தங்கியிருந்தபோது தற்செயலாய் அங்கு வந்த சூர்ப்பணகை ஸ்ரீராமனை நோக்கி "நீ யார்? ருஷி வேஷம் பூண்டு தலையில் ஜடை தரித்துக் கொண்டிருக்கிறாய், ஆனால் மனைவியுடன் கூட இருக்கிறாய். ருஷி வேஷத்திற்கு விருத்தமாகக் கையில் அம்பு, வில் இவற்றை ஏந்தி நிற்கிறாய். ராக்ஷஸர்கள் இருக்குமிடத்திற்கு நீ எவ்வாறு வந்தாய்? எதற்காக வந்தாய்? இவற்றுக்கு உண்மையான பதில் சொல்" என்று கேட்டதும் ஸ்ரீராமன் அயோத்தியில் நடந்தது முதல் இங்கு வந்து சேர்ந்தது வரையிலான உண்மைகளைச் சொல்லலானான்.

எங்கிருந்தோ வந்த ஒரு ராக்ஷஸியினிடம் இவ்வளவு உண்மை களைச் சொல்லவேண்டுமா? என்று வியந்த ஆதிகவி வால்மீகி தன் கூற்றாக (தன் பேச்சாக) ஸ்ரீராமனுடைய ஆர்ஜவ குணத்தை வெளிப்படுத்துகிறார்-அதாவது

**एवमुक्तस्तु राक्षस्या शूर्पणख्या परन्तपः ।**
**ऋजुबुद्धितया सर्वमाख्यातुमुपचक्रमे ॥**

தற்செயலாய் வந்த சூர்ப்பணகை கேட்ட கேள்விகளுக்கு ஸ்ரீராமன் தன்னுடைய ஆர்ஜவ குணத்தினால் முழுவதையும் சொல்ல ஆரம்பித்தான் என்கிறார் ஸ்ரீவால்மீகி. மனத்தில் ஒன்றை வைத்துக் கொண்டு வாக்கினால் மற்றொன்றைச் சொல்லத் தெரி யாதவன் ஸ்ரீராமன். இதை இங்கு ஸ்ரீ ஶ்ருதப்ரகாஶிகாசார்யரும் ஸ்வாமி ஸ்ரீ தேசிகனும் ப்ரமாணமாகக் காட்டுகிறார்கள்.

இதனால் எம்பெருமானுக்குள்ள ஆர்ஜவகுணம் வெளியாகிறது.





இந்தக் குணத்தினால் நமக்கு ஏற்படும் பயனை ஸ்வாமி விளக்கிக் காட்டுகிறார். **'तेन संश्रितेषु विप्रलिप्सानुदयः** (தேந ஸம் ஶ்ரிதேஷு விப்ரலிப்ஸாநுதய:) என்று.

அதாவது எம்பெருமான் தன் மநோவாக் காயங்கள் எப்பொழு தும் ஒன்றுபட இருப்பவனாதலால் அவனை யாஶ்ரயித்தவர்கள் விஷயத்தில் 'ஏமாற்ற வேண்டும்' என்ற எண்ணமே அவனுக்கு உண்டாகாது.

**अभयं सर्वभूतेभ्यो ददाम्येतद् व्रतं मम ॥**

**அபயம் ஸர்வபூதேப்யோ ததாம்யேதத் வ்ரதம் மம ॥**

என்னைச் சரணமடைந்த அனைவருக்கும் அபயம் கொடுப் பேன்; இது என்னுடைய வ்ரதம் என்று அவன் அருளிய வார்த்தை மனம் உவந்து மனம் ஒப்பிச் சொன்னதாகும். அது மட்டுமின்றி அதன்படியே ஶரணாகதர்களுக்கு அபயம் அளிப்பான். இது திண்ணம். இது ஏமாற்றுதலுக்காகச் சொன்ன வார்த்தையன்று என்று யாவரும் நிஶ்சயித்து அவனை ஆஶ்ரயிக்க உதவுகிறது இந்த ஆர்ஜவகுணம் என்றபடி.

**सौहार्दम्**- ஸௌஹார்தம் - **आश्रितानाम् अभिमतश्रेयोऽभिध्यायित्वम् ।** என்கிறார் ஸ்ரீ ஶ்ருதப்ரகாஶிகாசார்யர். இதற்கு விளக்கம் தரு கிறார் பெரியவாச்சான்பிள்ளை - ஆஶ்ரயித்தவர்களுக்கு ஸர்வ விதமான அபீஷ்டங்களையும் அளிக்க நினைக்கை. தன்னையும் கருதாமல் ஆஶ்ரிதர்களை ரக்ஷிப்பதிலேயே நோக்காக இருக்கை ஸௌஹார்தம் என்றும் கூறலாம் என்கிறார் ஶ்ருதப்ரகாஶிகா சார்யர். பொதுவில் ஸௌஹார்தம் என்பதை நட்பு மனப்பான் மை என்றும் கூறலாம்.

ஹிதைஷித்வம் **(हितैषित्वम्)** ஸௌஹார்தம் என்று ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் தரும் விளக்கமும் முன் சொன்ன அர்த்தத்தையே

காட்டுவதாகும். தன்னை ஆஶ்ரயித்தவர்கள் தன்னை ஆஶ்ர யிக்காதவர்கள் என்ற பாகுபாடின்றிப் பொதுவில் அனை வருக்கும் நன்மையைத் தரவிரும்புகையும் ஸௌஹார்தம். ஸுஶோபநம் ஹ்ருதயம் யஸ்ய ஸ: ஸுஹ்ருத்-நல்ல எண்ணம் கொண்ட ஹ்ருதயம் பெற்றவன் ஸுஹ்ருத் எனப்படுவான். அவனுடைய தன்மை - ஸ்வபாவம் - **ஸௌஹார்தம்** எனப்படுகிறது.

பொதுவாகவே ஸர்வ பூதங்களுக்கும் அதாவது ஸர்வ ப்ராணி களுக்குமே நன்மை தர விரும்புபவன் எம்பெருமான்; ஆகவே அவனை 'ஸர்வ பூத ஸுஹ்ருத்' என்பார்கள்.

ஸர்வருக்கும் இவனே ஶரணம் (உபாயம்). ஸர்வருக்கும் இவனே ஸுஹ்ருத். 'ஸர்வஸ்ய ஶரணம் ஸுஹ்ருத்' என்று ஶ்வேதாஶ்வதர உபநிஷத்தே கூறுகிறது.

இதைக் கண்ணனும் ஸ்ரீகீதையில் தன்னைப் பற்றியே கூறிக் கொள்கிறான்.

**भोक्तारं यज्ञतपसां सर्वलोकमहेश्वरम् ।**
**सुहृदं सर्वभूतानां ज्ञात्वा मां शान्तिमृच्छति ॥ (५-२९)**

(போக்தாரம் யஜ்ஞ தபஸாம் ஸர்வலோக மஹேஶ்வரம் ।
ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம் ஜ்ஞாத்வா மாம் ஶாந்திம்ருச்சதி ॥ *(5-29)*

பகவானுக்கு ஆராதனமாகக் கர்மயோகத்தைப் பண்ணுவது மிகவும் அரிதாயிற்றே. இனியதாக இராதே! முடியாதே! என்று எண்ணிய அர்ஜுனனைப் பார்த்துக் கண்ணன் கூறுகிறான். அர்ஜுன! நீ கர்மயோகம் பண்ணுவதை மட்டும் பார்க்கும்போது அது உனக்குத் துன்பமயமாகக் கஷ்டமாகத் தான் தோன்றும். ஆனால் அதை யாருக்கு ஆராதனமாகச் செய்கிறோம் என்று கர்மயோகத்தினால் ஆராதிக்கப்படுபவனைப் பார்த்தால்





அவ்வாறு தோன்றாது. அப்பொழுது கர்மயோகம் செய்வது ஸுகமாகவே தோற்றும். வாரி வழங்கும் வள்ளல், அவன் ஸார்வ பௌமனும் அதாவது ஸர்வலோகாதிபதியும் கூட. அது மட்டுமின்றி அவன் ப்ரிய நண்பனும் கூட. இப்படிப்பட்டவனை ஆராதிப்பதில் -மகிழ்விப்பதில் - வருத்தம் ஏதும் இராது. அவ் வாறே தான் நான் அவரவர்கள் செய்யும் யாகம் தபஸ் முதலான வற்றுக்குரிய பலன்களைத் தருபவன். மற்றொருவனிடமிருந்து கேட்டு வாங்கித் தரவேண்டிய அவசியமில்லை. நானே ஸர்வ லோக மஹேஶ்வரன். இவ்வளவு மட்டுமன்று. நானே ஸர்வ பூதங்களுக்கும் ஸுஹ்ருத் - நன்மையை விரும்புபவன். இப்படிப் பட்டவனாக என்னை அறிந்தால் கர்மயோகத்தினால் என்னை ஆராதிப்பது உனக்கு எளிதாய், இனிதாய்த் தோன்றும். ஆகவே அதை அனுஷ்டிப்பதற்கு நீ விரும்புவாய் - என்று கூறுகிறான்.

தன்னைக் கண்ணன் ஸுஹ்ருத் என்று சொல்லிக் கொண்ட தால், உண்மையிலேயே அவன் ஸுஹ்ருத்தாய் இருப்பதால் அவனைக் கர்மயோகாதிகளால் ஆராதிக்க யாவருமே முன்வரு வார்கள். '**सुहृदः आराधनाय हि सर्वे प्रयतन्ते** (ஸுஹ்ருத: ஆராதநாய ஹி ஸர்வே ப்ரயதந்தே) நண்பனை அதாவது பிறர் நன்மையை விரும்புபவனை யாவருமே ஆராதிக்க முற்படுவது ப்ரஸித்தம் தானே என்று இங்கு ஸ்வாமி எம்பெருமானார் அருளுகிறார்.

ஶாஸ்த்ரஜ்ஞானம் பெற்றவர்கள் மட்டுமன்றிப் பாமரர்களும் நாய் முதலிய திர்யக்குகளும் கூட நண்பர்களை மகிழ்விக்க முற் படுவார்கள் என்கிறார் ஸ்வாமி ஸ்ரீதேசிகன்.

எம்பெருமான் இவ்வாறு பொதுவில் எல்லோருக்கும் நன் மையை விரும்புவது மட்டுமின்றித் தன்னிடத்தில் மிகுந்த பக்தி கொண்டவர்கள் விஷயத்தில் குறிப்பாக விசேஷித்துப் பல ஹிதங்களை விரும்பிச் செய்கிறான்.

இவ்விஷயத்தைப் பாண்டவர்கள் திறத்தில் ஸ்ரீக்ருஷ்ணன் செய்த செயல்களைக் கொண்டு நன்கு அறியலாம் என்று இங்கு எடுத்துக் காட்டியருளுகிறார் ஸ்வாமி ஸ்ரீ தேசிகன்.

மஹாபாரத யுத்தம் நடந்து கொண்டிருக்கிறது. மிக மும்முர மான யுத்தம். பகதத்தன் என்பவன் அர்ஜுனனை நோக்கி ஒரு அஸ்த்ரத்தை ப்ரயோகித்தான். அது எல்லோரையும் கொன்று விடக்கூடியது. அதன் பெருமையை அர்ஜுனன் அறியவில்லை. மற்றைய அஸ்த்ரத்தினால் அதைத் தடுக்க நினைத்தான். கண்ணன் இதைக் கண்டான். தேர்த்தட்டில் உட்கார்ந்து குதிரைகளை ஓட்டிக் கொண்டிருந்த கண்ணன் திடீரென எழுந்திருந்து அர்ஜுனனை மறைத்து நின்றான். அர்ஜுனனை நோக்கி வேகமாக வந்து கொண்டிருந்த அந்த அஸ்த்ரத்தைத் தன் மார்பில் ஏற்றுக் கொண்டான். அஸ்த்ரம் கண்ணனை ஒன்றும் செய்ய வில்லை. வைஜயந்தீ மாலை போல் ஒரு மாலையாக கண்ணன் மார்பில் காட்சியளித்தது அந்த அஸ்த்ரம். இப்படி தன் மார்பினால் மறைத்து அர்ஜுனனை காப்பாற்றினான் கண்ணன்.

**विसृष्टं भगदत्तेन तदस्त्रं सर्वघाति वै ।**

**उरसा प्रतिजग्राह पार्थं संच्छाद्य माधवः ॥**

(விஸ்ருஷ்டம் பகதத்தேந ததஸ்த்ரம் ஸர்வகாதி வை ।

உரஸா ப்ரதிஜக்ராஹ பார்த்தம் ஸம்ச்சாத்ய மாதவ: ॥)

என்று இங்கு இந்த ஶ்லோகத்தைக் காட்டி எம்பெருமான் தன்னை ஆஶ்ரயித்தவர்கள் விஷயத்தில் விசேஷித்துச் செய்யும் நன்மைகளை விளக்கியருளியுள்ளார் ஸ்வாமி ஸ்ரீ தேசிகன்.

பகவத்விஷய வ்யாக்யானங்களில் பூர்வாசார்யர்கள் சுவை மிகுந்த சொற்களைக் கொண்டு எம்பெருமானுடைய இந்த ஸௌஹார்த குணத்தை நன்கு விளக்கியுள்ளார்கள்:-





திருவாய்மொழி 6ம் பத்து முதல் திருவாய்மொழி முதற் பாட்டு 'வைகல் பூங்கழிவாய்' என்ற பாசுரத்தின் அவதாரிகை.

'பாண்டவர்கள் கார்யத்துக்காகத் தன்னைப் போக்கி அவர்கள் கழுத்தைக் கட்டிக் கொண்டு கூடத்திரியச் செய்தேயும் அவர்கள் பட்ட வ்யஸநமெல்லாம் படுகிறார் காணுமிவரும்'. அதாவது பாண்டவர்களின் கார்யத்திற்காகத் தன்னைப் பலவிதங்களிலும் மாற்றிக் கொண்டு அவர்களுடைய கழுத்தைக் கட்டிக் கொண்டு அவர்கள் செல்லுமிடங்களுக்கெல்லாம் ஸ்ரீக்ருஷ்ணனும் செல்லு கிறான். இப்படிச் செய்ததோடு த்ருப்தி பெறாமல் அவர்கள் பட்ட துன்பங்களையெல்லாம் இவனும்படுகிறானே, பாருங்கோள். என்று நஞ்ஜீயர் 'வைகல் பூங்கழிவாய்' என்ற பாசுரம் கால க்ஷேபம் சொல்லும்போதெல்லாம் இக்கதையை அருளிச் செய்வாராம்.

இப்படி எல்லோரையும் ஆகர்ஷிக்கக் கூடியது இந்த ஸௌஹார்தம் என்ற மஹாகுணம். ஆஶ்ரயிப்பவர்கள் அநு ஸந்திக்க வேண்டிய குணங்களில் சிறந்தது. ஆகவேதான் இது பற்றி இவ்வளவு விரிவு.

ஸ்ரீக்ருஷ்ணன் பாண்டவர்கள் விஷயத்தில் கொண்டுள்ள ஸௌஹார்தம் பற்றி மேலும் பூர்வாசார்யர்கள் விவரித்திருப் பதையும் நாம் அவஶ்யம் இங்கு அநுஸந்திக்கவேண்டும்.

'பாண்டவர்களுடைய வநவாஸத்திலே தனிமையிலே முகம் காட்டியும், திரௌபதியை மீட்டுக் கொண்டு போகிறபோது அவர்கள் தங்கின பணிக் கொட்டிலிலே சென்று முகம் காட்டிக் கூடக் கிடந்து கதறியும், துணையாயும், பகதத்தன் விட்ட சக்தியை அர்ஜுனனைத் தள்ளித் தன் மார்பிலே ஏற்றும், புகலாயும் போந்தபடி' என்று. அதாவது-

பாண்டவர்கள் வனவாஸம் செய்த காலத்தில் அவர்கள் தனியாக இருந்து தவித்த காலங்களில் அங்குச் சென்று

அவர்களுக்குத் தன் முகத்தைக் காட்டி அவ்வப்பொழுது அவர்களுக்குத் ஆறுதல் அளித்து வந்தான் கண்ணன். அதுமட்டுமன்று, பாஞ்சால தேசத்தில் த்ரௌபதி ஸ்வயம்வரத் தின் போது அர்ஜுனன் அந்தச் சுழல் யந்த்ரத்தை அடித்து வீழ்த்தி அதற்குப் பரிசாகக் கிடைத்த த்ரௌபதியை அழைத்துச் சென்றபோது ஸ்ரீ க்ருஷ்ணனும் அவன் அறியாமல் அவன் பின்சென்று பக்கத்து ஊரில் தங்கியிருந்த சட்டி பானைகள் பண்ணும் ஒரு குயவனுடைய ஒரு கொட்டகையில் சென்று அங்கு அத்தையான குந்தியைக் கண்டு அவளுக்கும் பிள்ளைகளுக்கும் ஏற்பட்ட துன்பங்களைப் பார்த்துத் துன்பம் தாங்காமல் அவர்களுடன் கூடிக் கதறி அழுதான். துணையாக இருந்தான். பகதத்தன் விட்ட அம்பு அர்ஜுனன் மீது பாயாதபடி அவனை மறைத்து அந்த அம்பைத் தன் மார்பிலே ஏற்றுக் கொண்டான். இவ்வளவும் பாண்டவர்கள் மீது கொண்டுள்ள ஸௌஹார்தம் என்ற குணத்தினால் தான். எப்போதும் அவர்கள் நன்மையையே விரும்புகிறவன் கண்ணன். நாமும் அவர்களைப் போல் ஸ்ரீ க்ருஷ்ணனிடம் அன்பு செலுத்தினால் நம் விஷயத்திலும் அவ்வளவும் செய்வான் என்றபடி. ஸமர்த்தனாயும், ஸர்வஜ்ஞனாயும் ஸஹஜஸுஹ்ருத்தாயுமிருக்கும் எம்பெருமானிடத்தில் தான் நாம் பரந்யாஸம் செய்ய வேண்டும் என்பதை நம் பூர்வாசார்யர்கள் எடுத்துக் கூறியுள்ளனர்.

---



## 5. ஸாம்யம், காருண்யம்

**शरण्यस्यापक्षपातः प्रपित्सूनां प्ररोचकः ।**
**अतो भगवतस्साम्यं विस्तरेणोपपाद्यते ॥**

**एवं कारुण्यमप्यस्य नियतं जीवरक्षणे ।**
**अतः पूर्वानुसारेण बहुधात्र निदर्श्यते ॥**

(ஶரண்யஸ்யாபக்ஷபாத: ப்ரபித்ஸூநாம் ப்ரரோசக: ।
அதோ பகவதஸ்ஸாம்யம் விஸ்தரேணோபபாத்யதே ॥
ஏவம் காருண்யம் அப்யஸ்ய நியதம் ஜீவரக்ஷணே ।
அத: பூர்வாநுஸாரேண பஹுதாத்ர நிதர்ஶ்யதே ॥

**साम्यम् :- जन्म-वृत्त-गुण वैषम्यम् अनपेक्ष्य सर्वेषां समाश्रयणीयत्वे, स्वीकृतानां तेषां सम्भावनाविशेषेषु मनसा तद्विषयादरे च समत्वम्-तारतम्यधीरहितत्वम् ।**

இது ஸாம்யம் என்பதற்கு ஶ்ருதப்ரகாஶிகாசார்யர் இயற்றிய வ்யாக்யானம்.

உலகில் உயர்ந்தவர்களாகக் கருதப்படுபவர் சிலர் தம்மை ஆஶ்ரயிக்க வருபவர்களில் உயர்குடிப் பிறப்புடையவன் இவன், தாழ்குடிப் பிறப்புடையவன் இவன், நல்லொழுக்கம் உடையவன் இவன், தீய ஒழுக்கம் உடையவன் இவன், நற்குணங்களை உடையவன் இவன், தீய குணங்களை உடையவன் இவன் என்றெல்லாம் பகுத்து அறிந்து உயர்ந்தவர்களை மட்டும் கொள்ளுதல், தாழ்ந்தவர்களைக் கைவிட்டு விடுதல் என்றபடி செய்து வருகிறார்கள். இவர்கள் ஸமத்வகுணம் இல்லாதவர்களேயாவர்.

ஆனால் எம்பெருமான் தன்னை ஆஶ்ரயிக்க வந்தவர்களின் பிறப்பு, ஒழுக்கம், குணம் இவற்றை ஆராயாமல் உயர்ந்த வர்களும் தாழ்ந்தவர்களும் தன்னை ஆஶ்ரயிக்கும்படி நிற்பவன் ஆவான்.

ஆஶ்ரயித்த பிறகு அவர்களுக்குப் பலன் கொடுத்து ஸம்மா னிக்கும் போது பக்ஷபாதம் காட்டுவானோ என்று நினைக்க வேண்டாம். எல்லோருக்கும் ஸமமாகவே பலன் தந்து அவர் களைக் கௌரவிப்பான். உயர்ந்தவர்களையும் தாழ்ந்தவர் களையும் மனத்தினால் ஆதரிக்கும் போதும் ஸமனாகவே இருப் பான் இவன் என்கிறார் ஸ்ரீ ஶ்ருதப்ரகாஶிகாசார்யர். மனத்தினால் அவர்களை ஆதரிப்பதில் ஸமன் என்பதால் சரீராதிகளால் ஆதரிப்பதில் பக்ஷபாதம் இருக்கும் என்றபடி.

ஸ்ரீக்ருஷ்ணன், மிகுந்த ஜ்ஞானிகளான வ்யாஸர், ஸ்ரீபீஷ்மர், த்ரோணர் முதலானோரை உயர்ந்த ஜாதியர் என்று அவர்களை அடிபணிந்து விழுந்து நமஸ்கரிப்பான். ஸ்ரீவிதுரரும் மஹாஜ்ஞானி தான்; ஆயினும் தாழ்குலத்திலே பிறந்தவர். ஆகவே அவரை ஸ்ரீ க்ருஷ்ணன் விழுந்து நமஸ்கரிக்க மாட்டான்; ஆனாலும் வ்யாஸர், ஸ்ரீபீஷ்மர் முதலானோர்களிடம் மனத்தினால் எவ்வளவு கௌர வம் செய்வானோ அவ்வளவு கௌரவத்தையும் ஸ்ரீவிதுரர் விஷ யத்திலும் செய்து வந்தான் ஸ்ரீ க்ருஷ்ணன். இவர்கள் அனை வருமே ஸ்ரீ க்ருஷ்ணனை ஆஶ்ரயித்தவர்கள் தான். இவர்கள் அனைவரையும் மனஸ்ஸினால் ஆதரித்தான் கண்ணன். ஆயினும் விழுந்து வணங்குவது மட்டும் எல்லோர் விஷயத்திலும் கிடையாது.

இதன் ஸாராம்ஶத்தை ஸ்ரீஶ்ருதப்ரகாஶிகாசார்யரே நன்கு விளக்குகிறார். **तारतम्यधीरहितत्वम्** (தாரதம்யதீரஹிதத்வம்) ஆஶ்ரி தர்கள் விஷயத்தில் இவன் உயர்ந்தவன் இவன் தாழ்ந்தவன் என்ற எண்ணமில்லாமை தான் ஸமத்வம் என்று.





ஸ்ரீபெரியவாச்சான் பிள்ளையும் கீழ்க் கூறியதையே

'ஜாதி - குண - வ்ருத்தாதிகளைப் பாராதே அவர்களுக்கு ஆஶ்ரயணீயத்வத்தில் ஸமனாயிருக்கை ஸமத்வம்' என்று. ஸ்ரீ ராமன் குஹப்பெருமாளிடம் (ஸ்ரீ குஹனிடம்) மிகவும் நெருங்கிச் சேர்ந்து பழகினான். மிகப் பெரியவர்கள் ஆஶ்ரயிக்கும் ஸ்ரீராமன் அவனுக்கும் ஆஶ்ரயிக்கும்படி ஸமனாக இருந்தான் அன்றோ?

**शबर्यापूजित स्सम्यक् रामो दशरथात्मजः** *(ஶபர்யா பூஜித: ஸம்யக் ராமோ தஶரதாத்மஜ:)*

வேடுவஜாதியில் பிறந்த ஶபரீ என்பவளால் தசரதன் புதல்வனான ஸ்ரீராமன் நன்கு பூஜிக்கப்பட்டான் என்று வால்மீகி வியந்து கூறுகிறார். பூஜித்தவள் வேடுவஸ்த்ரீ. பூஜிக்கப்பட்டவன் மஹர்ஷிகள் கண்டு மகிழும் மட்டிலா அழகுடையவன். தசரத சக்ரவர்த்தி அரும்பாடுபட்டுப் பெற்ற புதல்வன். இப்படிச் சிறந்தவன் அப்படித் தாழ்ந்த குலத்தைச் சார்ந்தவளான ஶபரி யினால் பூஜிக்கப்பட்டான். மஹர்ஷிகளும் பூஜிக்கும் பெருமை பெற்றவன், ஶபரியும் பூஜிக்கும்படி உள்ளான் என்பதால் இவன் பூஜிக்கப்படுவதில் யாவர்க்கும் ஸமன் - பொதுவானவன் என்பது ஏற்படுகிறது.

மஹர்ஷிகள் செய்யும் பூஜையைவிட, வேடுவர் குலத்தில் பிறந்த ஒரு ஸ்த்ரீ ஶபரீ செய்த பூஜையே 'ஸம்யக் பூஜை' நன்றாக அமைந்த பூஜை என்று வால்மீகி ஶபரீ செய்த பூஜையைச் சிறப் பித்துக் கொண்டாடுகிறார்.

பரத்வாஜர் ஸ்ரீராமனைப் பூஜிக்கும் போது பார்த்தால், ஸ்ரீராமனை பரத்வாஜர் போன்ற ஆசார சீலர்கள் தான் பூஜிக்கத் தக்கவர்கள் ஆவார்கள். அப்படிப்பட்டவர்கள் க்ருஹங்களில் தான் அவன் புஜிப்பான் (உண்பான்) என்று நினைக்கத் தோன்றும். அடுத்து சபரியின் கையினால் கொடுத்த பழங்களை

மிக்க ப்ரீதியுடன் ஸ்ரீராமன் உண்டதை நினைத்தால் எளியவர் களும் பக்தி இருந்தால் பூஜிக்கலாம் என்று தோன்றுகிறது.

ஸ்வாமி ஸ்ரீ தேசிகனும் முன்உரைகளைத் தழுவியே சில உதாஹரணங்களுடன் இந்த ஸமத்வ குணத்தை விளக்கி யருளுகிறார்.

**साम्यम्ः-जाति - गुण-वृत्तादि निम्नोतत्वानादरेण सर्वैः आश्रयणीयत्वम् - समत्वम्** (ஜாதி-குண-வ்ருத்தாதி நிம்நோதத்வ அநாதரேண ஸர்வை: ஆஶ்ரயணீயத்வம் ஸமத்வம்) ஜாதி - குணம் - ஒழுக்கம் இவற்றால் உண்டான ஏற்றத் தாழ்வுகளைப் பார்க்காமல் எல்லோ ரும் தன்னை ஆஶ்ரயிக்கும்படியிருக்கை ஸமத்வம் என்று விளக்கியுள்ளார்.

ஸ்ரீராமாவதாரத்தில் ஶபரி பூஜித்தாள். ஸ்ரீ க்ருஷ்ணாவதாரத் தில் மாலாகாரன் என்கிற பண்டாரம் ஒருவன் மிக்க பரிவுடன் பகவானை ஆராதித்தான்.

கம்ஸவதத்திற்காகப் பெருமாள் கண்ணன் ஸ்ரீமதுரைக்கு எழுந்தருளினான். அங்கு எழுந்தருளியதும் நல்ல வஸ்த்ரங் களையும் நறுமணம் மிகுந்த சந்தனத்தையும் பெற்ற ஸ்ரீக்ருஷ்ணன், தான் அணிந்து கொள்வதற்காக மாலையை நாடி ஸ்ரீ மாலாகாரன் க்ருஹத்திற்கு எழுந்தருளினான். ஸ்ரீ பலராமனும் கூட எழுந்தருளுகிறார். இவர்களைப் பார்த்தான் பண்டாரம். அதாவது மாலாகாரன். பார்த்த மாத்ரத்தினாலேயே பரவசன் ஆனான். மாலையை விற்றுக் கிடைக்கும் பணம் கொண்டு நடத்தவேண்டிய பெருங்குடும்பம் கொண்டவன் அவன். ஸ்ரீக்ருஷ்ணனை ஸேவித்த உடனேயே தன் நிலைமையை மறந்து தன் குடும்பத்தையும் மறந்து கையில் உள்ள புஷ்பங்கள் யாவற் றாலும் ஸ்ரீக்ருஷ்ணனை அர்ச்சித்தான். அப்பொழுது அவன் எண் ணத்தை வெளியிடும் ஸ்ரீ விஷ்ணு புராணஶ்லோகம் ஒன்றை





அவஶ்யம் அநுஸந்திக்க வேண்டும் என்று இங்கு அந்த ஶ்லோகத் தை எடுத்துக்காட்டியுள்ளார் ஸ்வாமி ஸ்ரீதேசிகன் தம் உரையில்.

அந்த ஶ்லோகம் இதுவே:-

**प्रसादपरमौ नाथौ मम गेहम् उपागतौ ।**
**धन्योऽहमर्चयिष्यामीत्याह माल्योपजीवनः ।।**

ப்ரஸாதபரமௌ நாதௌ மம கேஹம் உபாகதௌ ।
தந்யோऽஹமர்ச்சயிஷ்யாமீத்யாஹ மால்யோபஜீவந: ।।

கம்ஸவதத்திற்காக வந்தவர்கள் கோபம் கொண்டவர்களாகத் தானே இருக்க வேண்டும். ஸ்ரீமாலாகாரன் க்ருஹத்திற்குச் செல் லும் போது அநுக்ரஹமே மேலிட்டவர்களாகச் சென்றனராம் ஸ்ரீ க்ருஷ்ணனும் பலராமனும். இதை மாலாகாரனே அறிந்து நமக்குக் காட்டுகிறான். இப்படிப்பட்டவர்கள் நாம் இருக்கும் உலகம் இன்றி, நாம் இருக்கும் ராஜதானியும் அன்றி நாமிருக்கும் வீட்டின் முன்புறம் அன்றி நாம் இருக்கும் பகுதிக்கே வந்துவிட்ட னரே. நான் மிகவும் தன்யன் அதாவது புண்யசாலியாகிவிட்டேன். நான் கையில் உள்ள புஷ்பங்களைக் கொண்டு இவர்களை அர்ச்சிக்கப் போகிறேன்' என்று வாய் விட்டுக் கூறுகிறான் அந்தப் பண்டாரம்.

ஸ்ரீபராஶரர் இவன் சொன்ன வார்த்தையை நினைத்து வியந்து பாராட்டுகிறார். இப்படிச் சொன்னவன் யார் தெரியுமா? விஶ்வாமித்ரனோ, வஸிஷ்டனோ, பராஶரனோ மற்றும் எவரும் அல்லர், மாலை கட்டி விற்பதினாலேயே பிழைப்பை நடத்த வேண்டிய ஒரு பண்டாரம் கூறினானே என்று வியக்கிறார்.

இதை நம் பூர்வர்கள் இங்கு எடுத்துக் காட்டி எம்பெருமா னுடைய 'ஸாம்யம்' என்ற குணத்தை விளக்குகின்றனர். பக்தி இருந்தால் போதும், எல்லாரும் இவனை அர்ச்சிக்கலாம், பூஜிக்க லாம். உயர்ந்தவர்கள் தான் பூஜிக்கலாம் தாழ்ந்தவர்கள் பூஜிக்க

லாகாது என்ற பாகுபாடின்றி பக்தி உள்ள அனைவரும் பூஜிக்க லாம்படி அனைவருக்கும் ஸமமாக நிற்கிறான் எம்பெருமான். இப்படி இருக்கைதான் ஸாம்யம் எனப்படுகிறது. இப்படிக் கூறுவதைக் கொண்டு ஆலயத்திற்குள் அனைவரும் புகுந்து அர்ச்சிக்கலாமே என்று நினைக்கக் கூடாது. இப்பொழுது இங்குக் கூறியது விபவாவதார விஷயம். இதற்கு நியமம் கிடையாது. ஆலயார்ச்சை வேறு. அதற்கு நியமம் உண்டு. இன்னார்தான் பூஜிக்கலாம். இன்னார் பூஜிக்கலாகாது என்ற வரம்பு உண்டு. அதை ஒரு போதும் மீறலாகாது.

இப்படிப்பட்ட ஸாம்யம் (ஸமனாயிருக்கை) என்ற தன்னு டைய குணத்தைக் கண்ணன் தான் அருளிய ஸ்ரீகீதையில் தானே வெளியிடுகிறான்-

**'समोऽहं सर्वभूतेषु** (ஸமோऽஹம் ஸர்வபூதேஷு) *(9.29)* என்று.

ஜாதி-உருவம், ஸ்வபாவம், ஜ்ஞானம் முதலியவற்றால் உயர்ந்தவர்கள் - தாழ்ந்தவர்கள் என்ற பாகுபாடின்றி அனைவரும் என்னை ஆஶ்ரயிப்பதில் நான் அவர்கள் அனைவருக்குமே ஸமமாக இருப்பவன் என்கிறான் கண்ணன். இந்த குணத்தைத் தான் 'ஸாம்யம்' என்று கூறியுள்ளனர் பூர்வர்கள்.

ஸ்ரீஸஹஸ்ரநாமத்தில் 'ஸமாத்மா' என்ற 105 வது திருநாமமும் இந்த அர்த்தத்தைத் தான் விளக்குகின்றது. ஸமமான- பக்ஷபாத மில்லாத ஆத்மாவை-அதாவது மனஸ்ஸை உடையவன் எம் பெருமான். தம்மை ஆஶ்ரயிக்க விரும்பும் அனைவரிடத்திலும் உயர்வு தாழ்வு பாராட்டாமல் இருக்கும் மனம் உடையவன் என்று அர்த்தம்.

எம்பெருமான் யாவர்க்கும் ஸமமாக இருக்கிறான் என்ற இந்த ஸாம்ய குணத்தை ஸ்வாமி நம்மாழ்வார் பல வகைகளில் விளக்கிக் காட்டியருளுகிறார் திருவாய்மொழியில்.





**''சரணம் ஆகும் தனதாளடைந்தார்க்கெல்லாம்'' (9-10-5)**

**''தனதாள் அடைந்தார்க்கு எல்லாம் சரணம் ஆகும்''** என்று அந்வயம்.

'ஜந்ம-வ்ருத்த-ஜ்ஞானங்களால் குறைய நின்றாரேயாகிலும் தன் திருவடிகளையே உபாயமாகப் பற்றினார்க்கெல்லாம் ரக்ஷ கனாம். 'ஸமோऽஹம் ஸர்வ பூதேஷு' என்னக்கடவதிறே.' என்கிறது ஈடு வ்யாக்யானம்.

பிறப்பினாலும் ஒழுக்கத்தாலும் ஜ்ஞானத்தினாலும் சிறந்த வர்களுக்கு - உயர்ந்தவர்களுக்கு - எம்பெருமானுடைய திரு வருள் கிடைக்கும். அவ்வாறின்றி பிறப்பினாலும் ஒழுக்கத்தி னாலும் ஜ்ஞானத்தினாலும் தாழ்ந்தவர்கள் எம்பெருமானை ஆஶ்ரயித்தால் அவர்களை எம்பெருமான் ரக்ஷிப்பனா? என்ற ஸந்தேஹம் வரும்.

அதைப் போக்குவதற்காகத் தான் ஸ்வாமி நம்மாழ்வார் எம் பெருமானுடைய ஸாம்யகுணத்தை- பக்ஷபாதமில்லாத தன் மையைத் தெள்ளென விளக்குகிறார் மேலே காட்டிய பாசுரப் பகுதியினால்.

ஸ்ரீகீதையில் 'ஸமோऽஹம் ஸர்வபூதேஷு' என்று கண்ணனே வெளியிட்ட அவனுடைய ஸாம்யகுணத்தை இதற்குச் சான்றாக ஈடு என்கிற வ்யாக்யானம் 'ஸமோऽஹம் ஸர்வ பூதேஷு' என்ற அவன் வாக்யத்தையே இங்கு எடுத்துக் காட்டி விளக்கம் காட்டு கிறது.

அடுத்த பாசுரத்திலும், தன்னை அடைந்தவர்கள் எவராயினும் அவர்கள் அனைவரிடத்திலும் அன்பு கொள்ளுமவன். இதிலும் இவனுக்குப் பக்ஷபாதம் கிடையாது என்பதை -

**''அன்பனாகும் தனதாள் அடைந்தார்க்கெல்லாம்'' (9.10.6)**

என்ற பகுதியினால் வெளியிடுகிறார் ஸ்வாமி நம்மாழ்வார். மேலும் தன்னையே விரும்புபவர்கள் அனைவருக்கும் மிகவும் ஸுலபனாய் அதாவது எளியனாய் இருப்பான் எம்பெருமான். தன்னையே பெற வேண்டும் என்று இருப்பவர்களுக்குள் உயர்வு, தாழ்வு பாராட்டாமல் அவர்கள் எவராயிருந்தாலும் தன்னை விரும்புகின்றவர்கள் என்ற காரணத்தினால் அவர்கள் அனைவரும் தன்னை நெருங்கி வந்து ஆஶ்ரயிக்கும்படி இருப்பான் எம்பெருமான் என்பதை அதற்கு அடுத்தபாட்டில்.

**'மெய்யனாகும் விரும்பித் தொழுவார்க்கெல்லாம்' (9-10-7)**

என்ற பகுதியினால் அருளிச் செய்கிறார் ஸ்வாமி நம்மாழ்வார்.

இப்படி ஸுலபனான இவனை ஆஶ்ரயித்தால் பிறகு ஆஶ்ரயித்தவர்கள் அனைவருக்குமே மிகவும் ஸமீபத்தில் இருப்பவன் ஆவான் எம்பெருமான் என்பதை

**'அணியனாகும் தனதாள் அடைந்தார்க்கு எல்லாம்' (9-10-8)**

என்று அடுத்த பாசுரத்தின் பகுதியினால் எம்பெருமானுடைய ஸமத்வ குணத்தை அதாவது பக்ஷபாதமில்லாமையை விவரித்தருளுகிறார் ஸ்வாமி நம்மாழ்வார்.

இப்படிப் பல வகைகளில் ஸ்வாமி நம்மாழ்வார் காட்டிய எம்பெருமானுடைய ஸாம்ய குணத்தை ஒருங்கே சேர்த்து அனுபவிப்போமே.

**1) 'சரணம் ஆகும் தன தாள் அடைந்தார்க்கு எல்லாம்'**

தன் திருவடிகளையே உபாயமாகப் பற்றினால் எல்லோருக்கும் எம்பெருமான் ரக்ஷகனாகிறான்.

தன் திருவடிகளை ஆஶ்ரயித்தவர்கள் விஷயத்தில் ரக்ஷகனாகும் போது எம்பெருமான் ஸமனாகவே- பக்ஷபாதமின்றியே இருப்பான்.





**2) 'அன்பனாகும் தனதாள் அடைந்தார்க்கெல்லாம்'.**

தன்னை ஆஶ்ரயித்த பிறகு ஆஶ்ரயித்தவர்களிடத்தில் அன்பு செலுத்தும் போதும் ஸமனே-பக்ஷபாதம் இல்லாதவனே எம்பெருமான்.

**3) 'மெய்யனாகும் விரும்பித் தொழுவார்க்கு எல்லாம்'**

மற்றோர் பயனை விரும்பாமல் எம்பெருமானையே பெற வேண்டும் என்று விரும்புபவர் (அநந்யப்ரயோஜநர்) எவராயிருந்தாலும் அவர்கள் விஷயத்தில் ஏற்றத்தாழ்வு பாராட்டாமல் அவர்கள் அனைவர்க்குமே அவர்கள் விரும்பும் புருஷார்த்தத்தை அதாவது தன்னைக் கொடுப்பான்.

பாரத யுத்தத்தில் தங்களுக்குத் துணை வேண்டித் துர்யோதனனும் அர்ஜுனனும் ஒரே ஸமயத்தில் ஸ்ரீக்ருஷ்ணன் இருக்குமிடம் சென்றனர். துர்யோதனனுக்கு நாராயண கோபாலர்கள் என்ற படைவீரர்களைக் கொடுத்தான். அவனும் இவர்களே போதும் என்று திரும்பிவிட்டான்.

அர்ஜுனன் ஸ்ரீக்ருஷ்ணனைத் தவிர மற்றொன்றையும் விரும்பாதவன். ஆகவே அவனுக்குத் தன்னையே தந்தான்.

ஆகவே அர்ஜுனனைப் போல் எம்பெருமானையே பெற விரும்புபவர் எவராயிருந்தாலும் அவர்கள் அனைவர்க்குமே தன்னையே தந்து அவர்களுக்கு மெய்யனாகவே இருப்பான். இப்படி மெய்யனாவதிலும் இவன் ஸமனே, பக்ஷபாதமில்லாதவனே என்றபடி.

**4) அணியனாகும் தனதாள் அடைந்தார்க்கெல்லாம்**

தன்னை ஆஶ்ரயித்தவர்கள் எவராயிருந்தாலும் அவர்கள் அனைவருக்கும் எம்பெருமான் அணியன் ஆவான். அருகில்

உள்ளவன் ஆவான். அதாவது அவர்களை விட்டுப் பிரியாமல் அருகிலேயே இருப்பான் என்றபடி.

ஸ்ரீராமாவதாரத்தில் நடந்த நிகழ்ச்சி ஒன்றைக் கொண்டு இதை அறியலாம். ஸ்ரீராமன் அவதரித்து நீண்ட நாட்கள் கழித்து ஸுக்ரீவன் ஸ்ரீராமனைச் சரணம் அடைந்தான். இப்படிப் பட்டவன் ஸ்ரீராமன் லங்கையைச் சென்று அடைந்ததும் இந்த ஸுக்ரீவன் ராவணன் தலைகளில் கிரீடங்கள் பளிச்சிடுவதைக் காண ஸஹியாதவனாய் ஒருவரும் அறியா வண்ணம் ஸ்ரீராமகோஷ்டியிலிருந்து புறப்பட்டு ராவணனுடன் போரிட்டு, அவனுடைய தலை மகுடங்களைப் பங்கப்படுத்தி விட்டு க்ஷண நேரத்திற்குள் மீண்டும் ஸ்ரீராம கோஷ்டிக்கு வந்து விட்டான். அந்த க்ஷண காலத்தில் ஸுக்ரீவனைக் காணுமல் தவித்த காகுத்தன் 'நீர் இம்மாதிரி ஸாஹஸமான கார்யங்களைச் செய்யக் கூடாது. உமக்கு ஏதாவது ஆபத்து வந்து உம்மை நான் இழக்க நேர்ந்தால் பிறகு நான் ஸீதையைப் பெற்று என்ன பயனைப் பெறப் போகிறேன். 'கிம் கார்யம் ஸீதயா மம' என்கிறான் ஸ்ரீராமன். இதனால் தனதாள் அடைந்தார்க்கு எல்லாம் அணியனாகும் - தன்னை ஆஶ்ரயித்தவர்கள் அனைவர்க்கும் அருகிலேயே இருப்பவன் எம்பெருமான். நாம் அவனை ஆஶ்ரயித்தாலும் நமக்கும் அவன் அணியனாகவே (அருகில் இருப்பவனாகவே) ஆவான். ஆக ஆஶ்ரயித்தவர்கள் விஷயத்தில் ரக்ஷகனாகும் போதும் அவர்களிடத்தில் அன்பு செலுத்தும் போதும், அவர்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்வித்து மெய்யனாம் போதும் அவர்கள் விஷயத்தில் அணியனாகும் (நெருங்கியவனாகும்) போதும் எம் பெருமான் ஸமன் - பக்ஷபாதமில்லாதவன் என்று ஸ்வாமி நம் மாழ்வார் இந்த ஸாம்யத்தைப் பல வழிகளிலும் விளக்கி யருளுகிறார்.

இப்படிப்பட்ட சிறந்த இந்த ஸாம்ய (ஸமத்வ) குணத்தை





நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். இதனால் எம்பெருமான் இயற்கையிலேயே பக்ஷபாதம் (விருப்பு வெறுப்பு) இல்லாத வன், ஆஶ்ரயித்தவர்கள் விஷயத்தில் அவரவர்களுக்குத் தக்கபடி ஆதரவு செய்வதிலும், கௌரவிக்கும் விஷயத்திலும் முறைகேடு உண்டாகும்படியான வைஷம்யம் (அபிப்ராயபேதம்) இல்லாத வன் என்பது தெளிவாகிறது. ஆகவே மிகத் தாழ்ந்தவர்களும் 'நாமும் எம்பெருமானை ஆஶ்ரயித்தால் அவன் நம்மையும் ரக்ஷிப்பது திண்ணம்' என்ற மஹாவிஶ்வாஸம் உண்டாகி அவனை ஆஶ்ரயிப்பார்கள். இங்கு ஒரு விஷயம் முக்யமாக கவனிக்க வேண்டுவது உண்டு. அதாவது: எம்பெருமானுக்குத் தன்னை ஆஶ்ரயித்தவர்களுக்குள் பக்ஷபாதம் கிடையாது. ஆனால் ஆஶ்ரயித்தவர்கள் விஷயத்தில் பக்ஷபாதம் உண்டு.

தன்னை ஆஶ்ரயித்தவர்கள் உயர்ந்தவராயினும் தாழ்ந்தவ ராயினும் அவர்கள் விஷயத்தில் ஸமமாகவே இருப்பான். ஆனால் தன்னை ஆஶ்ரயித்தவர்கள், தன்னை ஆஶ்ரயிக் காதவர்கள் மேலும் ஆஶ்ரயித்தவர்களை துன்புறுத்துபவர்கள் என்று ப்ரஸித்தமான இரண்டு வர்கங்களுள் தன்னை ஆஶ்ர யித்தவர்கள் விஷயத்தில் பக்ஷபாதம் கொண்டவன் எம்பெரு மான். இவர்களுக்கே நன்மைகளைத் தருவான். தன்னை ஆஶ்ரயி த்தவர்களைத் துன்புறுத்துபவர்களுக்குத் தீமையே செய்வான். (முடிவில் அதுவும் அவர்களுக்கு நன்மையையே தரும்.)

ஆக ஆஶ்ரயித்தவர்கள் விஷயத்தில் பக்ஷபாதமும் அதாவது விருப்பமும், அவர்கள் விரோதிகள் விஷயத்தில் கோபமும் கொண்டிருப்பதால் எம்பெருமானுக்கு ஸாம்யம் இல்லை என்று சொல்லக்கூடாது.

தன்னை ஆஶ்ரயித்த பாண்டவர்களிடம் பக்ஷபாதம் உண்டு ஸ்ரீக்ருஷ்ணனுக்கு. இந்த க்ருஷ்ணனுக்கே துர்யோதனாதிகளிடம் வெறுப்பு உண்டு. ஆயினும் தன்னை அவனே 'ஸமோऽஹம்

ஸர்வ பூதேஷு" நான் அனைவரிடத்திலும் ஸமனாகவே இருக்கி றேன்' என்கிறான்.

அந்த துர்யோதனாதிகளும் இவனை ஆஶ்ரயித்தால் பாண்ட வர்களைப் போலே அவர்களையும் பகவான் ஆதரித்திருப்பான்.

பாண்டவர்களிடம் கொண்டுள்ள அன்பு-தன்னை அவர்கள் ஆஶ்ரயித்துள்ளார்கள் என்ற காரணம் பற்றி வந்தது. அவ்வாறே துர்யோதனாதிகளிடத்தில் கொண்டுள்ள வெறுப்பு அவர்கள் தன்னை ஆஶ்ரயிக்கவில்லை; மேலும் தன்னை ஆஶ்ரயித்த பாண்டவர்களைத் துன்புறுத்தினார்கள் என்ற காரணத்தினால் ஏற்பட்டது. இயற்கையில் எம்பெருமான் யாவர்க்கும் அவர வர்கள் செய்துள்ள கர்மாக்களுக்கு ஏற்றவாறு பலன் தருபவனே.

ஒரு உதாஹரணத்தின் மூலம் இதை விளக்குகிறோம். ஒரு காலேஜ் இருக்கிறது. அதன் அதிகாரிகள் பக்ஷபாதமின்றி இதில் சேர விரும்புபவர்களுக்கு அட்மிஷன் தரப்படும் என்று அறிவித்துள்ளார்கள். அதன்படியே பல மாணவர்களுக்கு அட் மிஷன் தந்தும் வருகிறார்கள். இந்த நிலையில் மற்றும் சிலருக்கு அட்மிஷன் தர மறுக்கிறார்கள். ஏன் இந்த வைஷம்யம்? யாவ ருக்கும் அட்மிஷன் தருவதாக அறிவித்து விட்டுச் சிலருக்கு மட்டும் அட்மிஷன் தருகிறார்கள்-மற்றும் சிலருக்குத் தருவ தில்லையே என்ற கேள்வி பிறக்கிறது. இதற்கு அதிகாரிகளின் பதில், 'இந்தக் காலேஜில் சேருவதற்குரிய தகுதி பெற்றவர்களுள் ஏற்றத்தாழ்வு பாராட்டாமல் அனைவருக்கும் அட்மிஷன் உண்டு. ஆனால் தகுதியில்லாதவர்களுக்கு ஒரு போதும் அட்மிஷன் கிடையாது' என்பது தான்.

ஆகவே தகுதி பெற்றவர்கள் தகுதி பெறாதவர்கள் என்ற பாகுபாடு உண்டு. ஆனால் தகுதி பெற்றவர்களுக்குள் எந்தப் பாகுபாடும் இன்றி அனைவருக்குமே அட்மிஷன் தரப்படும்.





இதுதான் பக்ஷபாதமின்றி அட்மிஷன் தரப்படும் என்ற அறிவிப் புக்குப் பொருள் என்றுதான் பதில் கூறுவார்கள் அன்றோ! இவ் வாறே தான் பகவான் அனைவர்க்கும் ஸமன் என்றாலும் தன்னை ஆஶ்ரயித்தவர்கள் விஷயத்தில் அவரவர்கள் கர்மாக்களுக்குத் தக்கபடி பலன் தருபவனேயாவான்.

**காருண்யம்.** கத்யத்தில் ஸாம்யத்திற்கு அடுத்ததாகக் கூறப்பட்டுள்ள குணம் காருண்யம் என்பதாகும். காருண்யம், கருணை, தயை ஆகியவை ஒரே பொருளைத் தரும் சொற்கள் ஆகும்.

இந்தக் காருண்ய குணத்திற்கு விளக்கம் தருவதில் பூர்வாசார்யர்களிடையே கருத்து வேறுபாடுகள் நிறைய உள்ளன. அவற்றை உள்ளபடியே இங்கே அனுபவிப்போம். மற்றைய விசாரங்கள் இங்கு வேண்டாம்.

ஸ்ரீ ஶ்ருத ப்ரகாஶிகா என்ற உரையின் ஆசிரியரான ஸ்ரீ ஸுதர்சனபட்டர் என்பவர்:-

**कारुण्यम्-स्वार्थानपेक्षा परदुःखासहिष्णुता** (காருண்யம்- ஸ்வார்த்த அநபேக்ஷா பரது:க அஹிஷ்ணுதா) அதாவது தன் பயன் கருதாமல் பிறர்படும் துக்கத்தைப் பொறுக்காமை காருண்யம் என்கிறார்.

பிறர் துக்கத்தை அனுபவிப்பதைக் கண்டு ஸஹிக்காமல் இருத்தல் காருண்யம் எனப்படுகிறது. இப்படி இருந்தால் தன்னைப் பிறர் புகழ்வர் என்பதாலோ இப்படி இருப்பவரை பரிசு கொடுத்து உலகத்தவர் ஸம்மானிப்பார்கள் என்ற ஸ்வய நலம் காரணமாகவோ பிறர்படும் துக்கத்தைக் கண்டு 'ஸஹியாமல்' இருக்கை காருண்யம் ஆகாது. இதை உணர்த்தத் தான் ஸ்வார்த்தாநபேக்ஷா (தன் நலத்தில் விருப்பமின்றி) என்ற அடைமொழி தரப்பட்டுள்ளது.

ஆக ஸ்வயநலம் கருதாமல் பிறர்துக்கத்தைக்கண்டு ஸஹிக்கா திருக்கை காருண்யம் ஆகும் எனப்படுகிறது. பெரியவாச்சான் பிள்ளையும் தம்முடைய உரையில் இதையே தான் காருண்யத் திற்கு விளக்கமாகத் தந்துள்ளார்.

பிறர்களுடைய துக்கத்தைக் கண்டு தானும் துக்கித்தல் அதாவது பிறர்களுடைய துன்பத்தைக் கண்டு தானும் துன்பப் படுதல் காருண்யம் என்றும் விளக்கம் தந்துள்ளனர் மற்றும் சிலர்.

ஸ்வாமி ஸ்ரீதேசிகன் இங்குத் தம்முடைய பாஷ்யத்தில்,

**कारुण्यम् अनुद्दिष्टस्वप्रयोजनान्तरा परदुःखनिराकरणेच्छा-** காருண்யம் (அநுத்திஷ்டஸ்வப்ரயோஜநாந்தரா பரது:க நிராகரணேச்சா) அதாவது தனக்கே வேறு ஒருபயன் கருதாமல் பிறருடைய துக்கத்தைப் போக்க விரும்புதல் காருண்யம் எனப்படும் என்று அருளியுள்ளார்.

பிறர் துக்கத்தை அனுபவிக்கும்போது அதைக் காணும் உத்தமன் அதைப் பொறுக்காமல் தவிக்கிறான். பிறகு பிறருடைய துக்கத்தினால் தானும் துக்கிக்கிறான். பிறகு அதைப்போக்க விரும்புகிறான் என்ற முறைகளில் இந்த விளக்கங்கள் தோன்றின என்றும் சிலர் கூறுவர்.

எம்பெருமானுடைய கல்யாண குணங்களில் காருண்யம் என்ற இந்தக் குணமே எம்பெருமானைச் சரணமாக- உபாயமாகப் பற்றுவதற்குப் பெரிதும் உதவும்.

எம்பெருமானுடைய ஜ்ஞானம்-சக்தி என்ற குணங்கள் இரண்டும் ஜீவாத்மாக்களை அநுக்ரஹிப்பதற்கும் பயன்படும்-தண்டிப்பதற்கும் பயன்படும். ஆனால் காருண்யம் என்பது அநுக்ரஹிப்பதற்கு மட்டுமே பயன்படும் என்று இதன் சிறப்பை நம் பூர்வர்கள் பல இடங்களிலும் விளக்கியுள்ளனர்.





ஸம்ஸாரபந்தத்தினால் நாம் படும் துக்கத்தைக் கண்டு எம்பெருமான் ஸஹிக்கமாட்டான். அதனால் வருந்துகிறான், உடனே நம்முடைய இந்த துக்கத்தைப் போக்க விரும்புகிறான். இதன் பயனாய் நம்மை நமக்கு ஏற்றதான ஒரு உபாயத்திலே அதாவது சரணாகதியிலே ஈடுபடுத்தி அதாவது ஶரணாகதியைச் செய்வித்துத் தான் விரும்பியபடியே நம்முடைய துக்கங்கள் அனைத்தையும் போக்குகிறான் என்பதை காருண்யத்திற்கு நம் பூர்வர்கள் காட்டிய பலவகைப்பட்ட விளக்கங்களால் அறிவது தக்கதாகும்.

மற்றைய குணங்களைப் பற்றிய விளக்கம் அடுத்த இதழ்களில்.

---

## 6. மாதுர்யம்

श्रियः पत्यौ तु माधुर्यं स्मर्यमाणं रसावहम् ।
श्रुतिस्मृतिशतैस्सिद्धम् अन्यत्रादृश्यमुत्तमम् ॥
व्याख्यान्ति बहवः पूर्वे गुरव : प्राज्ञसम्मताः ।
अत्यन्तरसभूयिष्ठरीत्या तल्लिख्यतेऽधुना ॥

ஶ்ரிய: பத்யௌ து மாதுர்யம் ஸ்மர்யமாணம் ரஸாவஹம் ।
ஶ்ருதி ஸ்ம்ருதி ஶதைஸ்ஸித்தம் அந்யத்ராத்ருஶ்யம் உத்தமம் ॥
வ்யாக்யாந்தி பஹவ: பூர்வே குரவ: ப்ராஜ்ஞஸம்மதா: ।
அத்யந்தரஸபூயிஷ்டரீத்யா தல்லிக்யதேऽதுநா ॥

மாதுர்யம் என்றதொரு குண விசேஷம் காருண்யத்திற்கு அடுத்தாற்போல் படிக்கப்பட்டுள்ளது ஶரணாகதிகத்யத்தில். மாதுர்யம்-மதுரனாயிருக்கை-அதாவது இனியனாயிருக்கை என்பது பொருள். இன்னாருக்கு இனியனாய் மதுரனாய் இருப்பான் என்று இங்குக் குறிப்பிடப்படவில்லை. ஆகையால் பக்தர்கள் பகைவர்கள் என்ற பாகுபாடின்றி அனைவருக்குமே எம்பெருமான் இனியனாயிருப்பான் என்று பூர்வாசார்யர்கள் பல ப்ரமாணங்களைக் காட்டி விவரிக்கின்றனர். இவற்றைக் கொண்டு மாதுர்யம் என்ற குணத்தை அனுபவித்தால் பரமானந்தம் ஏற்படுவது திண்ணம்.

ஶ்ருதப்ரகாஶிகாசார்யரும் பெரியவாச்சான் பிள்ளையும் ஒரே விதமாகவே விவரித்தருள்கிறார்கள்.

**माधुर्यम् हन्तुं प्रवृत्तावपि रसावहत्वम्**

(மாதுர்யம் - ஹந்தும் ப்ரவ்ருத்தாவபி ரஸாவஹத்வம்)





என்கிறார் ஶ்ருதப்ரகாசிகாசார்யர். இதையே தான் பெரியவாச்சான் பிள்ளையும் 'ஹந்தும் ப்ரவ்ருத்தத்வேऽபி ரஸாவஹத்வம்' என்று அருளிச் செய்கிறார். அதாவது எம்பெருமான் ஒருவனை வதம் செய்ய முற்பட்ட போதும் அவனுக்கு எம்பெருமான் இனியனாகவே இருப்பான். இந்தத் தன்மைதான் மாதுர்யம் எனப்படுகிறது என்கிறார்கள். இதற்குத் தக்க ப்ரமாணம் காட்டி இந்த குணத்தைச் சிறப்பிக்கிறார்கள் பூர்வர்கள்.

பாரத யுத்தம் மிகத் தீவ்ரமாக நடந்து கொண்டிருக்கிறது. ஸ்ரீ பீஷ்மருக்கும் அர்ஜுனனுக்கும் நேரிடையுத்தம். ஸ்ரீ பீஷ்மர் கிழவராயிருந்தாலும் அர்ஜுன பக்ஷபாதியாயிருந்தாலும் க்ஷத்ரிய தர்மத்தை முன்னிட்டு அர்ஜுனனை பாணங்களால் அடிக்கிறார். அர்ஜுனனும் கூடிய வரை எதிர்த்துப் போராடிக் கடைசியில் முடியாமற்போய் தேர்த் தட்டில் சாய்ந்து விட்டான். இந்த நிலையில் அர்ஜுனனைக் காப்பாற்ற எண்ணிய கண்ணன் 'நான் ஆயுதம் எடுக்க மாட்டேன்' என்று முன்பு தான் செய்திருந்த ப்ரதிஜ்ஞையையும் மறந்தான். கையில் சக்ராயுதத்தை எடுத்தான். தேர்த்தட்டிலிருந்து கீழே குதித்து பீஷ்மரை வதம் செய்ய ஓடுகிறான்.

தன்னை வதம் செய்யக் கண்ணன் ஓடி வருவதைக் கண்டார் ஸ்ரீ பீஷ்மர். கண்ணனை ஆயுதம் எடுக்கும்படிச் செய்கிறேன் என்ற தன் ப்ரதிஜ்ஞையைக் கண்ணன் மெய்ப்பித்து விட்டதை நினைக்கிறார். கையில் ஆயுதம் தாங்கித் தன்னை நோக்கி ஓடிவரும் போதைய அழகைக் காண்கிறார். அதில் உள்ள மாதுர்யத்தை -இனிமையை ரஸிக்கிறார். தன் கையில் உள்ள வில்லையும் அம்புகளையும் கீழே போட்டுவிடுகிறார். இருகைகளையும் கூப்பிக்கொண்டு வணங்குகிறார் அவனை.

அப்பொழுதே மலர்ந்த தாமரை மலர் போன்ற திருக்கண்களின் அழகை ரஸிக்கிறார். ஓடி வாடா கண்ணா! ஓடி வாடா

கண்ணா! என்று அழைக்கிறார். தாமரைக் கண்ணா! உன்னை நமஸ்கரிக்கிறேன். தேவஶ்ரேஷ்டனே! அளத்தற்கரியாய்! லோகநாத! ஸர்வப்ராணிகளுக்கும் ஶரண்யனாயிருப்பவனே! இந்தத் தேர்த்தட்டிலிருந்து என்னை வலுவில் வீழ்த்துவாயாக என்கிறார். இந்தப் பொருளைத் தரும் ஶ்லோகம் ஒன்று ஸ்ரீபீஷ்மர் வாக்கிலிருந்து வெளிவந்துள்ளது. அதாவது-

**एह्येहि फुल्लाम्बुजपत्रनेत्र !**
**नमोऽस्तु ते देववराप्रमेय ! ।**
**प्रसह्य मां पातय लोकनाथ !**
**रथोत्तमात् सर्वशरण्य! सङ्ख्ये ॥**

(ஏஹ்யேஹி புல்லாம்புஜ பத்ரநேத்ர
நமோऽஸ்து தே தேவவராப்ரமேய ।
ப்ரஸஹ்ய மாம் பாதய லோகநாத
ரதோத்தமாத் ஸர்வ சரண்ய! ஸங்க்யே ॥

ஹே கண்ணா! நீ உன் அழகைக் காட்டி என்னை வெல்லலாமேயன்றி அம்பு காட்டி வெல்லமுடியாது என்கிறார் ஸ்ரீ பீஷ்மர். உலகில் எவராவது தன்னைக் கொல்ல வருபவனை வணங்கி வரவேற்று வர்ணிப்பது உண்டோ?

### मधुराधिपतेः अखिलं मधुरम्

(மதுராதிபதே: அகிலம் மதுரம்) மதுராதிபதி எல்லா வகைகளிலும் இனியவன் என்கிறது மதுராஷ்டகம்.

இது எம்பெருமான் கண்ணனுடைய மாதுர்யத்திற்கு - இனிமைக்கு சிறந்த எடுத்துக்காட்டாகும்.

சிறந்த ஜ்ஞாநியாகையாலும் க்ருஷ்ண பக்தராகையாலும் பீஷ்மருக்குக் கண்ணன் இனியவனாகத் தோற்றினான். பாமரர்





களாயிருப்பவர்களுக்கும் பகைவர்களுக்கும் அவன் இனியவனாய் மதுரனாய் இருப்பானோ என்ற ஸந்தேஹத்தைப் போக்கப் பெரியவாச்சான் பிள்ளை மற்றோர் உதாஹரணத்தையும் தருகிறார்.

பாரத ராஜதானியான ஹஸ்தினாபுரத்திற்குக் கண்ணன் எழுந்தருளுகிறான். ஸூர்யனே இல்லாமல் இருளில் மூழ்கியிருக்கும் இடத்தில் உள்ளவர் ஸூர்யனைக் கண்டதும் மகிழ்வார்கள். காற்றில்லாத இடத்தில் மூச்சு விடவும் முடியாதபடி கஷ்டப்படும் ஜனங்கள் நல்ல காற்று வீசத் தொடங்கியதும் மிகுந்த ஸந்தோஷம் கொள்வார்கள். அவ்வாறே கண்ணன் எழுந்தருளியதால் பாரத ராஜதானி முழுவதும் மகிழ்ந்தது என்கிறார் வ்யாஸர், இந்த மஹாபாரத ஶ்லோகத்தில் -

**असूर्यमिव सूर्येण निवातमिव वायुना ।**
**कृष्णेन समुपेतेन जहृषे भारतं पुरम् ॥**

அஸூர்யமிவ ஸூர்யேண நிவாதமிவ வாயுநா ।
க்ருஷ்ணேந ஸமுபேதேந ஜஹ்ருஷே பாரதம் புரம் ॥

க்ருஷ்ணத்வேஷிகள் பலர் உள்ள நகரம் அது. இருந்தாலும் பண்டிதர்கள் பாமரர்கள் என்ற பாகுபாடின்றி பக்தர்கள் பகைவர்கள் என்ற பாகுபாடின்றி அனைவருக்குமே ஸ்ரீ க்ருஷ்ணனுடைய வரவு போக்யமாயிருந்தது என்கிறது இந்த இதிஹாஸ ஶ்லோகம் .

உபநிஷத்தும் 'ஸர்வரஸ:' என்று ரஸங்கள் யாவும் நிறைந்தவன் எம்பெருமான் என்கிறது.

ஸ்வாமி ஸ்ரீதேசிகன் முன்னோர்கள் கூறிய பொருளையும் காட்டி மேலும் பல விஷயங்களையும் விளக்கி மாதுர்யத்திற்கு மாதுர்யம் (இனிமைக்கு இனிமை) ஊட்டுகிறார்.அதாவது

**माधुर्यं - क्षीरवदुपायभावेऽपि स्वादुत्वम् ।**

**(மாதுர்யம் - க்ஷீரவத் உபாயபாவேऽபி ஸ்வாதுத்வம்) என்று.**

பால் சுவை மிக்கது, இனியது, மதுரமானது, யாவருமே பாலைப் பருக விரும்புவார்கள். ஒருவனுக்கு ஏதோ ஒரு வ்யாதி வந்துவிட்டது. வைத்யரிடம் கொண்டு காட்டுகிறான்.அவர் சொல்லுகிறார் 'இதற்கு வேறு எந்த மருந்தும் வேண்டாம் தினமும் ஒரு சேர் நல்ல குழம்புப் பாலைப் பருகு! நாளடைவில் வ்யாதி தீர்ந்து விடும் என்று. சுவை மிகுந்த பால் வ்யாதி தீர்வதற்கு உபாயமாக வைத்யரால் விதிக்கப்பட்டது. ஏதாவது கசப்பு மிகுந்த கஷாயத்தைச் சாப்பிடும்படி டாக்டர் சொல்லிவிடப் போகிறாரே என்று பயந்து கொண்டிருந்தான் இவன். இப்படிப்பட்டவனுக்கு சுவை மிகுந்த பாலே மருந்தாகக் கூறப்பட்டுள்ளது. ஆக வ்யாதி தீருவதற்கு உபாயமாக விதிக்கப்பட்ட போதும் அந்த நிலையிலும் பால் சுவை மிக்கதாக இருப்பது போல் எம்பெருமானை அடைவதற்கு அவனேயோ அல்லது அவனுடைய உபாஸநாதிகளோ உபாயமாக விதிக்கப்பட்டிருப்பதால் அந்த உபாய நிலையிலேயே பரமாத்மா எம்பெருமான் பரமபோக்யனாய், மதுரனாய் இருப்பான் என்றபடி. பொதுவாக உலகில் உபாயமாக உள்ளவை யாவும் வெறுக்கும்படியாகத் தானிருக்கும். பலனில் உள்ள ஆசையால் கஷ்டத்தைப் பொறுத்துக் கொண்டு அந்த உபாயத்தை அனுஷ்டித்து வருகிறார்கள்.

யாகம் பண்ணினால் ஸ்வர்கம், ஸ்வர்கத்திற்கு உபாயம் யாகம், இதைச் செய்வது இன்னாதது-கஷ்டமானதாகும். ஆனாலும் ஸ்வர்காநுபவத்தில் உள்ள ஆசையினால் கஷ்டங்களைப் பொறுத்துக் கொண்டு யாகத்தைச் செய்கிறார்கள். இவ்வாறேதான் மற்றைய எல்லா இடங்களிலும்.

ஆனால் பகவத் விஷயத்தில் மட்டும் அவனே உபாயம்,





அவனே பலம் (பயன்). அவனை வசீகரிப்பதற்காக ஏற்பட்ட வ்யாஜங்கள் (உபாயங்கள்) பக்தி ப்ரபத்திகள்; பக்தி அவனை இடைவிடாமல் நினைப்பது தானே. அவன் பரம போக்யமாய், இனியனாய் இருப்பதால் அவனுடைய நினைவும் பரமபோக்யமாய் இனியதாய் இருக்கும். ப்ரபத்தியிலும் ஸித்தோபாயனான ஶரண்யனான எம்பெருமான் இனியனாகவே இருப்பான்.

உலகில் அனுபவிக்கப்படும் விஷயம் மதுரமாய் (இனியதாய்) அதற்கு உபாயமானது அப்படி இல்லாமலும் இருக்கும். இங்கு அப்படியன்றிக்கே எம்பெருமான் உபாயமாயிருக்கும் தசையிலும் மதுரனாய் இனியனாய் இருப்பான் என்பதைப் பாலை உதாஹரணமாகக் காட்டி விளக்கியருளுகிறார் ஸ்வாமி ஸ்ரீதேசிகன்.

த்வேஷியான - பகைவனான ஒருவனை பகவான் வதம் செய்ய விரும்புகிறான். இன்னும் வதம் செய்வதற்கு இறங்கவில்லை.

அந்த நிலையிலும் அந்த த்வேஷிக்கும் எம்பெருமான் இனியனாய் இருப்பான். அவனுடைய கண்ணையும் மனத்தையும் கொள்ளை கொண்டு ஆனந்தத்தைத் தருபவனாகவே இருப்பான்.

ஒருவனை வதம் செய்ய முற்பட்டு, தான் அவனை வதம் செய்ய வருவதை அவனுக்குக் காட்டிய போதும் அவனுக்கும் எம்பெருமான் இனியனாய் மதுரனாய் இருப்பான் என்று இந்த மாதுர்யத்தை இரண்டு வகைகளாகப் பகுத்து ஸாதிக்கிறார் ஸ்வாமி ஸ்ரீதேசிகன்.

**द्वेषवतां जिघांसितानामपि दृष्टिचित्तापहारित्वेन रसावहत्वं वा**

(த்வேஷவதாம் ஜிகாம்ஸிதாநாமபி த்ருஷ்டிசித்தாபஹாரித்வேந ரஸாவஹத்வம் வா) என்றும்

**वधोद्योगप्रदर्शनेऽपि हि सौम्यत्वं माधुर्यं 'एह्येहि फुल्लाम्बुज पत्रनेत्र' इत्यादिषु प्रसिद्धम्**

(வதோத்யோக ப்ரதர்ஶநேऽபி ஹி ஸௌம்யத்வம் மாதுர்யம், 'ஏஹ்யேஹி புல்லாம்புஜபத்ரநேத்ர' இத்யாதிஷு ப்ரஸித்தம்) என்றும் இரண்டு வகைகளாகக் காட்டுகிறார்.

வதம் செய்ய விரும்பிய போதும் (ஜிகாம்ஸிதாநாமபி) என்றால் மாதுர்யத்திற்குச் சிறப்பு ஏற்படாது.

ஒருவனை வதம் செய்வதில் எம்பெருமானுக்கு உள்ள விருப்பத்தை அவன் அறியாமல் இருக்கிறான். அதனால் அவன் ஈடுபடுகிறான். எம்பெருமானுக்குள்ள விருப்பத்தை அவன் அறிந்தால் ஈடுபடமாட்டான் என்று மாதுர்யம் இல்லை என்று சொல்லி விடலாம். அதற்காக இரண்டாவது வகை அதாவது ஒருவனை வதம் செய்யத் தனக்குள்ள விருப்பத்தை அந்த ஒருவன் நன்கு அறியும்படி அவனை வதம் செய்ய முற்பட்ட போதும் அந்த ஒருவன் தன்னை வதம் செய்ய வரும் எம்பெருமானை ரஸிக்கிறான் என்றால் தான் மாதுர்யத்தின் சிறப்பு நன்கு புலனாகும்.

முந்தைய வகைக்கு உதாஹரணம் சிசுபாலன், இரண்டாவது வகைக்கு ஸ்ரீ பீஷ்மர்.

ஜிகாம்ஸிதாநாம் என்று முன்பும், வதோத்யோக ப்ரதர்ஶநேऽபி என்று பின்பும் சொற்கள் அமைந்திருப்பதைக் கொண்டு இந்த இரண்டு வகைகள் உரைக்கப்படுகின்றன.

சிசுபாலன் எம்பெருமான் கண்ணனுடைய மாதுர்யத்தை அனுபவித்த விதத்தை ஸ்வாமி ஸ்ரீதேசிகன் தம் உரையில் அழகாக விவரித்தருளுகிறார்.

**द्वेषवतां जिघांसितानां दृष्टिचित्तापहारित्वेन रसावहत्वं वा माधुर्यम् ।**





**येन शिशुपालस्य तादृशी चरमावस्था ।**

எம்பெருமானால் வதம் செய்ய விரும்பப்பட்டவர் பகைவராயினும் அவர்களுடைய கண்களையும் மனத்தையும் வசீகரிக்க வல்ல இந்த இனிமையினால் - மாதுர்யத்தினால் சிசுபாலனுக்குச் சரம தசை (மரணதசை)யில் கண்ணனிடம் ஈடுபாடு உண்டாயிற்று.

சிசுபாலன் 'சேட் பால் பழம் பகைவன்', பல நெடுங்காலமாகவே எம்பெருமானிடம் பகை பாராட்டிப் பழக்கப்பட்டவன்; இவனை வதம் செய்ய விரும்பிக் கையிலே சக்ராயுதத்தை ஏந்தி நின்றான் கண்ணன். அழகான மதுரமான அந்த நிலையைக் கண்டான் சிசு பாலன்; அதிலே ஈடுபட்டான். கண்ணன் சக்ராயுதத்தை ப்ரயோகித்தான். பரமபவித்ரனான சக்ராயுதத்தின் ஸம்பந்தத்தினால் பாபம் முழுதும் தொலையப் பெற்றான் சிசுபாலன். மதுரமான அந்திமஸ்ம்ருதி உண்டாயிற்று. யோகிகளுக்கும் கிடைக்காத ஸ்தானத்தைப் பெற்றான், என்ற கதை ப்ரஸித்தமானது.

இப்படிப் பகைவனையும் வசீகரிக்க வல்லது எம்பெருமானுடைய மாதுர்யம்.

ஸ்வாமி நம்மாழ்வாரும் சிசுபாலனை ஆட்கொண்ட இந்த மாதுர்யத்தை வியந்து பாசுரம் இடுகிறார்.

அந்தப் பாசுரம் இதுவே-

**'கேட்பார்கள் கேசவன் கீர்த்தியல்லால் மற்றும் கேட்பரோ!**
**கேட்பார் செவி சுடு கீழ்மை வசவுகளே வையும்**
**சேட்பால் பழம் பகைவன் சிசுபாலன் - திருவடி**
**தாட்பால் அடைந்த தன்மை அறிவாரை அறிந்துமே'**

**-திருவாய்மொழி (7-5-3)**

சிசுபாலனுடைய கொடுமையை ஸ்வாமி நம்மாழ்வார் இந்தப் பாட்டில் மிக அழகாக வர்ணிக்கிறார்.

'கேட்பார் செவி சுடும் கீழ்மை வசவுகளே வையும்' சிசுபாலன் என்று.

வசவுகளே வையும் - தப்பித் தவறி நல்ல வார்த்தை ஒன்று கூடச் சொல்லமாட்டான் அவன் என்கிறார்.

பகவானிடத்தில் பக்தியோ அல்லது ப்ரபத்தியோ பண்ணி அவனுக்கு அநுகூலமான கார்யங்களையே செய்து வருபவர்கள் கூட ப்ரக்ருதி (சரீர) ஸம்பந்தத்தினால் தப்பித்தவறி ஏதேனும் ஒரு பாபகார்யத்தை அறியாமல் செய்து விடுவார்கள். அம்மாதிரி இவன் தன்னையறியாமல் தவறி ஒரு நல்வார்த்தையாவது சொல்லுவானோ என்று நினைக்கவேண்டாம். தவறிப்போய் பகவத் விஷயத்தில் அறியாமலாவது ஒரு நல்ல வார்த்தை கூடச் சொல்லமாட்டான் சிசுபாலன் என்று ஈட்டில் ஸ்வாமி நம்பிள்ளை வ்யாக்யானம் செய்கிறார்.

இவன் வையும் வசவு வார்த்தைகள் கேட்பவர்களுடைய செவிகளைச் சுடுமாம். கேட்பவர் பக்தர்களாயிருந்து அவர்களுடைய செவிகள் சுடும்படியான வசவுகள் என்றால் அவன் வசை மொழிகள் அவ்வளவு க்ரூரங்கள்-கொடியவை என்று சொல்ல முடியாது. பிறர் சிறிதளவு வைதாலும் பக்தர்களுடைய செவிகள் சுட்டுவிடும். ஆகவே சிசுபாலனுடைய வசவுகளின் கொடுமையை நம்பிள்ளை இவ்விடத்தில் ஈட்டு வ்யாக்யானத்தில் அழகாக விளக்குகிறார். அதாவது சிசுபாலன் கூறும் வசவு மொழிகள் பக்தர்களின் காதுகளைச் சுடக் கூடியன என்ற பொருளைக் கொள்ளக் கூடாது. பின்? க்ருஷ்ணத்வேஷிகளாய், இவனை நன்கு வைது கேட்கவேண்டும் என்று விரும்புபவர்கள் பலர் சிசுபாலனுடைய நண்பர்கள் உளர். அவர்களுக்கு அவ்வளவு ஸாமர்த்யம் போதவில்லை. அவர்கள் அனைவரும் நிதி





திரட்டி வைத்து சிசுபாலனைக் காக்க ஏற்பாடு செய்து அவனைக் கொண்டு க்ருஷ்ணனை வாயார வையச்செய்து கேட்க விரும்பினார்கள். அப்படியே அவனைத் தூண்டி விட்டார்கள். அந்தக் காலத்திலும் பகவானைப் பழிப்பதற்கு எளிதில் நிதி திரண்டது. சிசுபாலனும் முன் பிறவிகளில் (ஹிரண்யாக்ஷனாகவும் ராவணனாகவும் இருந்த பிறவிகளில்) எம்பெருமானை வைது, அப்யாஸம் (பயிற்சி) பெற்றவன். ஆகவே இவர்கள் தூண்டுதலாலும் பகவான் க்ருஷ்ணனை வையத் தொடங்கினான். அப்பொழுது அவன் வாயிலிருந்து வெளிப்பட்ட வசவு வார்த்தைகள் மிகக் கொடியனவாயிருந்தன. பகவானை வைது (பழித்து) கேட்க வேண்டும் என்று தூண்டியவர்களுடைய காதுகளையே சுட்டனவாம் அந்த வசவு மொழிகள். அப்படியானால் அவை எப்படி இருக்க வேண்டும்? இதை விளக்கும் ஈட்டு ஸ்ரீஸூக்திகள் இவை:-

'பகவந் நிந்தைக்கு ஜீவநம் (நிதி, ஃபண்டு) வைத்துக் கேட்கும் தண்ணியவர்களும் (நீசர்களும்) கூடப் பொறுக்க மாட்டாமையால் செவி புதைத்து இத்தனை அதிரச் சொன்னாய்; இப்படிச் சொல்லப் பெறாய் காண்'' என்று சொல்லும்படியான வசவுகளே வைகை.

இப்படிப்பட்டவன் திருவடி தாட்பால் அடைந்தான் அதாவது விச்சேதமின்றிக்கே (இடைவெளியின்றிக்கே அதாவது எப்பொழுதும் என்றபடி) கிட்ட நின்று நித்ய கைங்கர்யம் பண்ணப் பெறுகை. இது தான் மோக்ஷமாகும்.

இப்படிப்பட்ட மஹாபாவிக்கு மோக்ஷம் வரக்காரணம் என்ன? என்றால் நம்பிள்ளை அருளிச் செய்கிறார்:- 'திருநாமங்களைச் சொல்லி 'த்வம்' கரிக்கையும், கையும் திருவாழியுமான அழகை அந்திம தசையிலே ஸ்மரிக்கவும் கூடுமிறே' என்று. அர்ச்சனை செய்பவர்கள் எம்பெருமான் திருநாமங்களை ஒவ்

வொன்றாகச் சொல்லி முன்னும் பின்னும் ப்ரணவம்-நமஸ் என்ற சொற்கள் இவற்றைச் சேர்த்துச் சொல்லுவது போல் சிசுபாலனும் 'க்ருஷ்ணு நீ அயோக்கியன், நந்தன் மகனே நீ திருடன், யசோதை மைந்தனே! நீ ஜாரன்' என்று வையும் போதெல்லாம் வாய்க்கு வாய் ஸ்ரீக்ருஷ்ணனுடைய திருநாமங்களையே சொல்லிப் பழித்ததும், கையில் திருவாழியுடன் (சக்ராயுதத்துடன்) ஸ்ரீக்ருஷ் ணனை எப்பொழுதும் பார்த்துக் கொண்டிருந்தவனாதலில் அந்த அழகை - மாதுர்யத்தைப் - பற்றிக் கடைசி ஸமயத்தில் நினைத்த மையும் தான் காரணம் என்கிறார் நம்பிள்ளை. இங்கு மோக்ஷம் என்பது எது என்ற விசாரம் இப்பொழுது வேண்டாம். இதைத் தான் ஸ்வாமி ஸ்ரீதேசிகனும் 'யேந சிசுபாலஸ்ய தாத்ருஶீ சரமாவஸ்தா; இந்த மாதுர்ய குணத்தினால் சிசுபாலனுக்கு சரம தசையில் க்ருஷ்ணனைப் பற்றிய நினைவு வந்திருக்கக் கூடு மன்றோ' என்று அருளியுள்ளார்.

இவ்வளவும் பகைவர் விஷயத்தில் மாதுர்யம் படுத்திய பாடுகள் விவரிக்கப்பட்டன.

இனி எம்பெருமானைத் தவிர மற்றைய எந்த விஷயத்திலும் மநஸ்ஸைச் செலுத்தாதவர்கள் விஷயத்தில் மாதுர்யம் செய்யும் செயலைக் குறிப்பிடுகிறார் ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் .

பக்தர்களாயிருப்பவர்கள் அவனுடைய மாதுர்யத்தினால் வசீகரிக்கப்பட்டவர்களாய் அவனிடமே தங்கள் மனஸ்ஸைச் செலுத்தி அவனை விட்டு நொடிப் பொழுதாயினும் பிரிய நேர்ந் தால் வாழ முடியாதவர்களாய், எம்பெருமானுடைய கல்யாண குணங்களில் தாம் தாம் அனுபவித்தவற்றைப் பிறர்க்குத் தெரிவித் தும் அபூர்வங்களானவற்றை எடுத்துச் சொல்லியும் தாங்களும் மகிழ்ந்து, கேட்பவர்களையும் மகிழ்விக்கின்றவர்களாயிருப் பார்கள். இப்படியெல்லாம் இந்த மாதுர்யம் (இனிமை) பக்தர்களைப்படுத்தும். இதை





**मच्चित्ताः मद्गतप्राणाः बोधयन्तः परस्परम् ।**
**कथयन्तश्च मां नित्यं तुष्यन्ति च रमन्ति च ॥**

மச்சித்தா: மத்கதப்ராணா: போதயந்த: பரஸ்பரம் ।
கதயந்த: ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச ॥

என்று ஸ்ரீ க்ருஷ்ணனே ஸ்ரீகீதையில் அருளிச் செய்துள்ளான் (10-91). இதை ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் மாதுர்ய குணத்திற்கு வ்யாக்யாநம் செய்யுமிடத்தில்

**अनन्य मनसां मच्चित्ता मद्गतप्राणाः इत्याद्युक्तावस्था च ॥**

(அநந்யமநஸாம் மச்சித்தா: மத்கதப்ராணா: இத்யாத்யுக்தாவஸ் - த்தா ச) என்று அருளினார்.

1. த்வேஷிகளாயிருந்து எம்பெருமானால் வதம் செய்யப்பட விருப்பவர்கள் விஷயத்திலும்

2. எம்பெருமான் வதம் செய்ய முற்பட்ட போதும்,

3. எம்பெருமானைத் தவிர மற்றொன்றை அறியாத ஜ்ஞாநிகள் விஷயத்திலும்,

எம்பெருமானுடைய மாதுர்யம் இருக்கும் விதத்தை மூன்று வகைகளாகப் பகுத்துக் காட்டியுள்ளார் ஸ்வாமி ஸ்ரீதேசிகன்.

ஸ்ரீ ஆளவந்தார் அருளிய ஸ்தோத்ரத்தில் **वशी वदान्यः** வஶீ வதாந்ய: என்று தொடங்கும் ஶ்லோகத்தில் உள்ள 'மதுர:' என்றபதத்திற்கு உரையிடும் போது ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் இந்த மாதுர்யத்தை திருமேனியினால் ஏற்பட்ட மாதுர்யம், வாக்கினால் (பேச்சினால்) ஏற்பட்ட மாதுர்யம் என்று இருவகைகளாகப் பிரித்துத் தக்க ப்ரமாணங்களைக் கொண்டு காட்டியுள்ளார். ஸ்ரீராமனுடைய பேச்சும் மதுரம், அவன் திருமேனியும் மதுரம்

என்று ஆழ்வார்களுடைய அருளிச் செயல்களைக் கொண்டு இதை விவரித்தால் மேலும் விரிவாகும் என்று இத்துடன் நிற்கிறோம்.

அர்ச்சையிலும் இந்த மாதுர்யத்தை அனுபவிக்கலாம். எங்கே என்றால் ஆசார்யஹ்ருதயம் பதிலளிக்கிறது: ''களைகண் அற்றாரை உருக்கும் மாதுர்யம் குடமுக்கிலே ப்ரவஹிக்கும்'' என்று.

குடமுக்கு - கும்பகோணம் - அங்கு ஆராவமுதாழ்வானுடைய ஆராவமுதமான இந்த மாதுர்யம் வெள்ளம் இட்டு ஓடும் என்கிறது ஆசார்யஹ்ருதயம். இது திருமேனி அழகினால் ஏற்பட்ட மாதுர்யம்.

இதுவரை குறைந்தது ஒரு பகுதியில் இரண்டு குணங்களை யாவது விவரித்து வெளிவந்தது அருள்மொழி.

இந்த இதழில் அருள்மொழியை மாதுர்யம் என்ற ஒரு குணமே ஆக்ரமித்துக் கொண்டது. இதுவும் மாதுர்யத்திற்கு எடுத்துக்காட்டே. இப்படி இந்த ஒரு குணத்தை மட்டும் விவரித்து வரும் இந்த அருள்மொழியும் அனைவருக்கும் மதுரமாயிருக்கும் என்று நம்புகிறோம். இதற்கு வாசகப் பெருமக்களே பெருஞ்சான்று. இந்தப் பெருங்குணத்தைப் பொய்யென்று சொல்வதை நினைத்து வியக்க வேண்டும் நாம்.

**माधुर्येण गुणेनैव लेखोऽयं पर्यपूर्यत ।**
**अथापि सुहृदामेषः भवेन्माधुर्यवान् ध्रुवम् ॥**

மாதுர்யேண குணேநைவ லேகோऽயம் பர்யபூர்யத ।
அதாபி ஸுஹ்ருதாமேஷ: பவேந்மாதுர்யவாந் த்ருவம் ॥

---



## 7. காம்பீர்யம், ஔதார்யம்

**गम्भीरं च तथोदारं भगवन्तं समाश्रिताः ।**
**वयमित्येव हृष्येम नास्माकं विद्यते क्षतिः ॥**

கம்பீரம் ச ததோதாரம் பகவந்தம் ஸமாஶ்ரிதா: ।
வயமித்யேவ ஹ்ருஷ்யேம நாஸ்மாகம் வித்யதே க்ஷதி: ॥

**गाम्भीर्यस्यातिगम्भीरं व्याख्यानं पूर्वदर्शितम् ।**
**प्रदर्श्यात्र प्रहृष्टास्स्मः प्रहृष्येयुश्च सज्जनाः ॥**
**औदार्यस्यापि चाख्यानम् अत्युदारं प्रदर्शितम् ।**
**पश्चादप्यनुवर्तेत तथाभूताह्युदारता ॥**

காம்பீர்யஸ்யாதிகம்பீரம் வ்யாக்யாநம் பூர்வதர்ஶிதம் ।
ப்ரதர்ஶ்யாத்ர ப்ரஹ்ருஷ்டா: ஸ்ம: ப்ரஹ்ருஷ்யேயுஶ்ச ஸஜ்ஜநா: ॥
ஔதார்யஸ்யாபி சாக்யாநம் அத்யுதாரம் ப்ரதர்ஶிதம் ।
பஶ்சாதப்யநுவர்த்தேத ததா பூதாஹ்யுதாரதா ॥

காம்பீர்யம் என்றதொரு மஹாகுணம் அடுத்து இடம் பெறுகிறது. இதை விவரிக்கும் நம் பூர்வாசார்யர்களுடைய ஜ்ஞாநத்தின் காம்பீர்யமும் அதாவது ஆழமும் இங்கு வெளிப்படுகிறது.

ஸௌஶீல்யம் முதலாக ஸ்த்தைர்யம் என்ற குணம் முடிவாக உள்ள பகவானுடைய பன்னிரண்டு குணங்களும் ஆஶ்ரயித்தவர்களைக் காப்பதற்கே உரியனவாகும் என்று ஶ்ருதப்ரகாஶிகாசார்யர் அவதாரிகையில் (தோற்றுவாயில்) கூறியுள்ளார்.

**गाम्भीर्यम्-आश्रितविषये ''एवम् अनेन चिकीर्षितम् ।। इति परिच्छेत्तुम् अशक्यत्वम् । दीयमानगौरव-सम्प्रदान लाघवा-नपेक्षत्वं वा ।**

'காம்பீர்யம்-ஆஶ்ரிதவிஷயே 'ஏவம் அநேந சிகீர்ஷிதம்' இதி பரிச்சேத்தும் அஶக்யத்வம் । தீயமாந கௌரவ - ஸம்ப்ரதாநலாகவாநபேக்ஷத்வம் வா

என்று ஸ்ரீ ஶ்ருதப்ரகாஶிகாசார்யர் வ்யாக்யாநம் செய்துள்ளார்.

இதையே பெரியவாச்சான் பிள்ளை தமிழில் 'காம்பீர்யம் - ஆஶ்ரிதர்க்குச் செய்ய நினைத்திருக்கும் அவை ஒருவராலும் பரிச்சேதிக்க அரிதாயிருக்கை. (அல்லது) தன் கொடையின் சீர்மையும், கொள்ளுகிறவன் சிறுமையும் பாராதிருக்கையுமாம் என்று இதற்கு விவரணம் பண்ணிக் காட்டியுள்ளார்.

இவை ஸம்ஸ்க்ருதத்தில் இருப்பதால் இவற்றையும் இங்கு நாம் விவரித்து விளக்குகிறோம்.

தன்னை ஆஶ்ரயித்தவர்கள் விஷயத்தில் எம்பெருமான் 'இவ்வளவு நன்மைகளைத் தான் செய்வான்' என்று ஒருவராலும் வரையறுத்து - அளவிட்டுக் கூறமுடியாதிருக்கை, என்றும் அல்லது 'தான் கொடுக்கும் பொருளின் பெருமையையும், வாங்கிக் கொள்பவனுடைய தாழ்வையும் எதிர்பாராதிருக்கை' என்றும் காம்பீர்யத்திற்கு விளக்கம் தரலாம் என்கிறபடி இருவருடைய திருவுள்ளமும் ஶப்தப்ரயோகமும் ஒரே மாதிரியில் தான் அமைந்துள்ளன:

உலகில் அன்புடன் ஒருவன் தன்னையே ஆஶ்ரயித்து அண்டினால், ஆஶ்ரயித்த அவனுக்கு ஆஶ்ரயமாய் இருப்பவன் நன்மைகள் செய்வதைக் கண்டு வருகிறோம். ஆனால் ஆஶ்ரயமாய் -





ஶரணமாய் இருப்பவன் - ஶரணம் அடைந்தவனுக்குச் செய்யும் நன்மைகள் ஒரு அளவுக்கு உட்பட்டுத் தான் இருக்கும். இவ்வளவு நன்மைகள் தான் இவனால் செய்ய முடியும் என்று இவனுடைய ஸாமர்த்யத்தை வரையறுத்துப் பிறர்களால் சொல்லி விட முடியும்.

ஒரு ஏழை - வறியவன் - ஒரு பணக்காரனிடம் உதவி நாடிச் செல்கிறான். அந்தப் பணக்காரன் ஏழைக்குச் செய்யும் உதவி அளவிட்டுக் கூறமுடியும்படித்தானிருக்கும். அதாவது ஒரு வேலை போட்டுத் தரலாம்; நல்லவனாக இருந்தால் அவனைப் பணக்காரனாகவும் செய்து விடலாம்; இப்படி அவன் செய்யும் உதவிகள் அனைத்தும் அளவுக்கு உட்பட்டனவாகவே இருக்கும். எம்பெருமான் ஆஶ்ரிதர்களுக்குச் செய்யும் உதவிகளோ அளவிட முடியாதவை. ஆகவே ஆஶ்ரிதர்கள் விஷயத்தில் எம்பெருமான் என்ன உதவி செய்யப் போகிறான் என்று அவன் மனத்தின் ஆழத்தை ஒருவராலும் அளந்து அறியமுடியாது. இந்த மன நிலைக்குத் தான் காம்பீர்யம் என்றும் பெயர்.

ஸ்வாமி நம்மாழ்வாரும் பெரிய திருவந்தாதியில் எம்பெருமானை நோக்கி 'உன் அடியார்க்கு என் செய்வன் என்றே இருத்தி'- என்னை ஆஶ்ரயித்தவர்களுக்கு என்ன நன்மைகளைச் செய்யலாம் என்று எப்பொழுதுமே சிந்தித்துக் கொண்டிருப்பவனாயிற்றே நீ என்கிறார். மற்றையார் அதாவது அவனை ஆஶ்ரயிக்காதவர் விஷயத்தில் இம்மாதிரி எம்பெருமான் இருக்க மாட்டான். ஏன் என்றால் அவர்கள் வேறு பலனை விரும்புபவர்கள். அதற்காக எம்பெருமானை அவர்கள் வேண்டும்போது அந்தப் பலன்களை அவர்களுக்குக் கொடுத்து விட்டுச் சிந்தையின்றி இருப்பான் எம்பெருமான். ஆகவே தன்னையே விரும்பி தன்னை ஆஶ்ரயித்தவர்கள் விஷயத்தில் தான் இம்மாதிரியான சிந்தை எம்பெருமானுக்கு எப்பொழுதும் உண்டு. ஏன்? இவர்கள்

எம்பெருமானைத் தவிர வேறு எந்தப் பலனையும் விரும்பாத வர்கள்- நிரபேக்ஷர்களாயிற்றே. ஆகவே தான் இவர்கள் விஷயத் தில் இப்படிப்பட்ட சிந்தை எம்பெருமானுக்கு. இந்த நிலை ஒரு போதும் எம்பெருமானை விட்டு நீங்காது.

முன் காட்டிய பாசுரத்தின் வ்யாக்யானத்தில் பெரியவாச்சான் பிள்ளை-'நிரபேக்ஷர்க்கு என் செய்வன்' என்றிருக்கிற தர்மந்தான் எப்போதும் ஒருபடிப்பட்டிருக்கும் என்று பாசுரத்தில் உள்ள 'அடியார்க்கு' என்ற பதத்திற்கு 'நிரபேக்ஷர்க்கு' என்று வ்யாக் யானம் அருளி விவரணம் தந்துள்ளார். அதாவது மற்றைய விஷ யங்களில் அபேக்ஷை - ஆசை இல்லாதவர்கள் தானே எம்பெரு மானுக்கு அடியவர்கள் ஆவார்கள். ஆக அடியார்கள் நிரபேக்ஷர் கள்-மற்றவற்றில் பற்றற்றவர்கள். அவர்கள் விஷயத்தில் 'இவர்க ளுக்கு என்ன செய்யலாம்' என்று சிந்தனை செய்து கொண்டிருப் பானாம் எப்பொழுதும். த்ரௌபதீ பண்ணின ஶரணாகதிக்காகப் பாண்டவர்களை முடிசூடும்படிச் செய்தாயிற்று. இவ்வளவு செய்த பிறகும் இவர்களுக்குச் செய்தது போதாதே என்று வாங்கிய கடன் வட்டியுடன் வளர்ந்து வருத்துவது போல் எம்பெரு மானுடைய திருவுள்ளத்தில் குறை வருத்துகின்றதாம்.

த்ரௌபதி தனக்கு ஆபத்து நேர்ந்தபோது அருகிலேயே இருக் கும் தன் பர்த்தாக்களை ரக்ஷகர்கள் என நினைத்து அவர்களைச் சரணம் அடையாமல் வெகுதூரத்தில் உள்ள என்னுடைய திருநாமத்தைப் (பெயரைச்) சொல்லி அழைத்தாளே! இதற்கு எவ்வளவு நன்மைகள் செய்தாலும் போதா என்று சிந்தைப்பட்டுக் கொண்டே கிடக்கிறான் எம்பெருமான். இவ்வாறே நம் விஷயத் திலும் இருப்பான் என்ற இந்த விஷயத்தை:-

''பாண்டவர்கள் முடி சூடின அன்றும், திரௌபதி குழல் முடித்த பின்பும் பர்த்தாக்கள் ஸந்நிஹிதராயிருக்க அவர்களை 'ரக்ஷகர்' என்று நினையாதே தன் பேர் சொன்னவளுக்குத்





திருவுள்ளத்திலே தளிசு பட்டிருக்குமாப் போலே அந்த ஆநுகூல்யம் உடையார்க்கு என்றும் 'என் செய்வன்?' என்றே இருத்தி நீ'' என்ற ஸ்ரீ ஸூக்திகளால் விளக்குகிறார் பெரிய வாச்சான் பிள்ளை.

த்ரௌபதீ முதலானவர்கள் ஜ்ஞாநிகளைப் போலே எம்பெரு மானையே பலனாகக் கருதி மற்றையவற்றை விட்டவர்கள் அல்லர். ஆயினும் 'ரக்ஷகன்' என்று கருதி பேர் சொல்லி அழைத்த தற்கே இவ்வளவு பாடுபடுகிறான் எம்பெருமான் என்றால் நம் போன்ற அடியவர்கள் விஷயத்தில் இவனுடைய மனநிலையை விளக்க வேண்டுவதில்லை.

ஸ்ரீ சக்ரவர்த்தித் திருமகனும் தன்னையே விரும்பிய ஹநுமனுக்கு ஸீதையைக் கண்டு வந்து செய்தி சொன்னதற்காக என்ன தரலாம் என்று பல நெடுங்காலம் யோசித்துக் கடைசியில் மிகச் சிறந்ததான தன்னுடைய திருமேனியைத் தழுவச் செய்தான்.

**मया कालम् इमं प्राप्य दत्तस्तस्य महात्मनः ।**

மயா காலம் இமம் ப்ராப்ய தத்தஸ்தஸ்ய மஹாத்மந: ।

என்று இவ்விஷயத்தைத் தானே அருளிச் செய்கிறான் ஸ்ரீராமன். இங்கு ஹநுமானை 'மஹாத்மா' என்று குறிப்பிடுகிறான் ஸ்ரீராமன்.

**महति-आत्मा यस्य सः** (மஹதி ஆத்மா யஸ்ய ஸ:) என்ற விரி வினால் மஹானான எம்பெருமானிடத்தில் மனத்தைச் செலுத்தி யவன்- எம்பெருமானைத் தவிர மற்றொன்றை விரும்பாதவன். காமாத்மாவாக (வேறு பலனை விரும்புபவனாக) இருந்தால் அவனைப் பற்றி எம்பெருமான் இவ்வளவு யோசிக்க வேண் டாம். ஏதாவது ஒரு அல்ப பலனைத் தந்தாலும் அதை அவன் பெற்று த்ருப்தி அடைந்து விடுவான். அப்படிப்பட்டவன்

அல்லனே ஹநுமான். ஆகவே தான் எம்பெருமானுக்கு இவ்வளவு சிந்தை. சிந்தித்துக் கடைசியில் மற்றொருவருக்கும் கிடைக்காத தன்னுடைய திருமேனியைத் தழுவும்படியான பரமபுருஷார்த்தத்தைத் தந்தான்.

இதைத்தான் ஸ்வாமி நம்மாழ்வாரும்' உன் அடியார்க்கு என் செய்வன் என்றே இருத்தி நீ' என்று அருளியுள்ளார்.

பொதுவில் பகவானுடைய எண்ணத்தை அளந்து அறிய முடியாதிருக்கை 'காம்பீர்யம்' என்று கூறிவிடலாம்.

ஸ்ரீஸஹஸ்ரநாமத்திலும் 'கபீர:' என்றும் 'கபீராத்மா' என்றும் 'ஒருவராலும் அளந்து அறியமுடியாதவன், அளவிட்டு அறிய முடியாத மனம் உடையவன்' என்று பொதுவிலே இவனுடைய கருத்து ஆழம் எவராலும் அறியமுடியாது என்றே கூறப்பட்டுள்ளது.

ஆழ்வார்களும் 'தன் தன்மை தனக்கும் அறிவரியபிரான்' தன்னாலும் அறிய முடியாததான ஸ்வபாவத்தை உடையவன் எம்பெருமான் என்று அருளியுள்ளார்கள்.

இப்படிப் பொதுவில் ஒருவராலும் அவனுடைய திருவுள்ளத்தின் ஆழத்தை அறியமுடியாதபடியிருக்கை காம்பீர்யம் என்று விவரித்தால் எம்பெருமானை ஒருவரும் ஆஶ்ரயிக்கமாட்டார்கள். ஆகவே தான் பூர்வர்கள் 'ஆஶ்ரிதர்கள் விஷயத்தில் நன்மை செய்யக் கொண்டுள்ள திருவுள்ளத்தின் ஆழத்தை அளந்து அறிய முடியாதிருக்கை காம்பீர்யம்' என்று இப்படிச் சிறப்பித்து வ்யாக்யானம் செய்துள்ளனர். இந்த மஹாகுணம் ஆஶ்ரிதர்களுடைய ரக்ஷணத்திற்குப் பயன்படும்.

ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் இந்த அர்த்தத்தையே மேலும் விவரித்துச் சுவை மிக வ்யாக்யானம் செய்தருளுகிறார்:-





**''भक्तानुग्रह-वदान्यत्वादेः आमूलतो दुरवगाहत्वम् । आश्रितापराधेषु-प्रतिग्रहीतृ निकर्षादिषु च सतोऽपि स्वज्ञानस्य गोपनेन दुर्ज्ञानत्वं वा । तदभिप्रायेण हि सर्वज्ञस्याप्यविज्ञातृत्वोक्तिः ।''**

பக்தாநுக்ரஹ-வதாந்யத்வாதே: ஆமூலதோ துரவகாஹத்வம். ஆஶ்ரிதாபராதேஷு ப்ரதிக்ருஹீத்ரு நிகர்ஷாதிஷு ச ஸதோऽபி ஸ்வஜ்ஞாநஸ்ய கோபநேந துர்ஜ்ஞாநத்வம் வா । ததபிப்ராயேண ஹி ஸர்வஜ்ஞஸ்யாப்யவிஜ்ஞாத்ருத் வோக்தி: । என்று. அதாவது பக்தர்களுக்கு அநுக்ரஹம் செய்வதிலும், அவர்களுக்குக் கொடுப்பதிலும் அவன் திருவுள்ளத்தை அடியுடன் அறிய முடியாதிருக்கை.

ஆஶ்ரிதர்களை எம்பெருமான் எப்படியெல்லாம் அநுக்ரஹிப்பான், அவர்களுக்கு எவ்வளவெல்லாம் தருவான் என்பதை ஒருவராலும் அறியமுடியாதிருக்கை காம்பீர்யம் ஆகும்.

பொதுவில் தன் கருத்தைப் பிறர் அறியமுடியாதபடி மறைத்து வைக்கை காம்பீர்யம் எனப்படுகிறது. இதை நான்கு வகைகளாகப் பகுத்துக் காட்டுகிறார் ஸ்வாமி ஸ்ரீதேசிகன்.

பக்தர்களுக்கு அநுக்ரஹம் செய்யும்போதும், அவர்கள் விரும்பிய பொருள்களைத் தரும்போதும் அவன் கருத்தை அறியமுடியாதிருக்கை என்று இரண்டு வகைகளைக் கண்டோமிப்போது. இனி மேலும் இரண்டு வகைகளைக் காண்போம்.

எம்பெருமான் பக்தர்களிடத்திலும் சில அபராதங்கள் புகுந்து விடுகின்றன. அவற்றை எம்பெருமான் அறிவதே இல்லை என்று சொன்னால் இருப்பதை அறியாதவன் எப்படி ஸர்வஜ்ஞனாயிருக்க முடியும்? என்ற கேள்வி எழும். இதற்குப் பதிலாக அவன் தன் பக்தர்களின் அபராதங்களை நன்கு அறிவான் என்று சொன்னால் அவனுடைய ஸர்வஜ்ஞத்வம் நிலைத்து விடும். ஆனால்

பக்தன் தன் தோஷங்களை அறிந்து வைத்துள்ள எம்பெருமானிடம் செல்ல அஞ்சுவான்.

உலகிலும் தான் செய்துள்ள குற்றங்களை அறிந்து வைத்துள்ள ஒருவனிடம் செல்ல அஞ்சுவது கண் கூடானதே.

ஆக தன்னை ஆஶ்ரயித்தவர்களுடைய குற்றங்களை எம்பெருமான் அறிவானா? அறியானா? என்ற கேள்விக்கு முரண்பாடு இல்லாத வகையில் நம் பூர்வாசார்யர்கள் பதில் அருளியுள்ளார்கள். அதாவது-

ஆஶ்ரயித்தவர்களுடைய தோஷங்களை- அபராதங்களை எம்பெருமான் ஸர்வஜ்ஞனானபடியால் அறிந்தே வைத்துள்ளான். ஆனால் ஆஶ்ரிதர்களுடைய அபராதங்கள் தனக்குத் தெரியும் என்பதை எம்பெருமான் ஒருவருக்கும் காட்டிக் கொள்ள மாட்டான். அபராதம் செய்த ஆஶ்ரிதர்கள் கூடத் தம்மிடம் உள்ள அபராதங்களை எம்பெருமான் அறிந்திருக்கிறான் என்று அறியமாட்டார்கள். அப்படி அவர்களுக்கும் கூட எம்பெருமான் அவர்களுடைய அபராதங்களைத் தான் அறிந்துள்ளமையை அவர்கள் அறியாதபடி மறைத்து வைப்பான். இதுவும் காம்பீர்யத்தின் ஒரு வகை.

அவ்வாறே எம்பெருமான் தன்னிடம் புருஷார்த்தங்களை (பயன்களை)ப் பெறத் தன்னை ஆஶ்ரயிக்கப் பலர் வரும்போது அவர்களில் மிகத் தாழ்ந்தவர்கள் சிலர் இருந்தாலும் அவர்களுடைய தாழ்வை தான் அறிந்து வைத்தபோதும் அதை ஒருவரும் அறியாதபடி மறைத்து வைத்துக் கொள்வான். பக்தர்கள் உயர்வு - தாழ்வுகளை அவன் நன்கு அறிவான். ஆனால், தான் அவர்களின் தாழ்வை அறிந்துள்ளமையை நன்கு மறைத்து வைத்துக் கொள்வான்.

ஸ்ரீராமன் பக்தனான ஸ்ரீ குஹனிடம் உள்ள பேரன்பு





காரணமாக அவனைக் கட்டித் தழுவினானே! அப்பொழுது குஹனிடம் உள்ள தாழ்வை ஸ்ரீ ராமன் அறியவில்லையா என்ன? அவன் யார் எப்படிப்பட்டவன் என்பதையெல்லாம் ஸ்ரீராமன் அறிவான். ஆனால் அவன் குஹனிடம் உள்ள தாழ்வை அறிந்திருப்பது ஒருவர்க்கும் புலனாகாது-தெரியாது. இதுவும் காம்பீர்யத்தின் ஒரு வகை.

1. ஆக எம்பெருமான் பக்தர்களுக்கு அநுக்ரஹம் செய்யும் போது அவன் கருத்தின் ஆழத்தை முழுவதும் அறியமுடியாதிருக்கையும் காம்பீர்யம் (ஆழம்) ஆகும்.

2. எம்பெருமான் தன் பக்தர்களுக்குப் பலன் கொடுக்கும் போதும் அந்த வள்ளன்மையை-கொடைத் தன்மையை-பிறரால் முழுவதும் அறியமுடியாதிருக்கையும் காம்பீர்யம் (ஆழம்) ஆகும்.

3. தன்னை ஆஶ்ரயித்தவர்களிடத்தில் உள்ள தோஷங்களை எம்பெருமான் நன்கு அறிந்து வைத்திருந்தும், தான் அவ்வாறு அறிந்திருப்பதைப் பிறர் எவரும் அறியாதபடி மறைத்து வைத்திருக்கையும் காம்பீர்யம் (ஆழம்) ஆகும்.

4. அவ்வாறே தன்னிடம் பலன் பெற வரும் பக்தர்களிடம் உள்ள தாழ்வை எம்பெருமான் நன்கு அறிந்து வைத்திருந்தும், தான் அவ்வாறு அறிந்திருப்பதைப் பிறர் எவரும் அறியாதபடி மறைத்து வைத்திருக்கையும் காம்பீர்யம் (ஆழம்) ஆகும்.

இப்படி நால்வகைகளில் பகுத்துக் கூறப்பட்ட காம்பீர்யத்தின் ஆழத்தை மிக ஸூக்ஷ்மமாக நாம் அறிய வேண்டும்.

★★★★★

**ஔதார்யம்** என்ற குணம் காம்பீர்யத்திற்கு அடுத்துக் கூறப்பட்டுள்ளது ஸ்ரீ ஶரணாகதிகத்யத்தில். ஔதார்யம் வள்ளன்மை - வாரி வழங்கும் தன்மை எனப்படும். இந்த ஔதார்ய குணத்தை நம் பூர்வர்கள் விளக்கும் முறை மிக அத்புதமானது.

ஶ்ருதப்ரகாஶிகாசார்யர் தரும் விளக்கம் பின்வருமாறு:-

**औदार्यम्-''अन्यस्मै ददामि'' इत्यभिमानविरहेण 'पुत्रवत् प्राप्तं भुङ्क्ते'' इतिबुद्धया दातृत्वम् । ''इदम् इयद्दत्तं मया'' इत्यस्मरण शीलत्वं वा । यद्वा सर्वं दत्वापि 'ऋणं प्रवृद्धमिव मे' इत्यतृप्तत्वम् औदार्यम् ॥**

(ஔதார்யம்: 'அந்யஸ்மை ததாமி' இத்யபிமாந விரஹேண 'புத்ரவத் ப்ராப்தம் புங்க்தே' இதிபுத்த்யா தாத்ருத்வம். இதம் இயத் தத்தம் மயா இத்யஸ்மரண ஶீலத்வம் வா । யத் வா ஸர்வம் தத்த் வாபி 'ருணம் ப்ரவ்ருத்தமிவமே' இதி அத்ருப்தத்வம் ஔதார்யம்)

எம்பெருமான் தன்னை ஆஶ்ரயிப்பவர்களுக்கு அவர்கள் வேண்டியவற்றை எல்லாம் தருகிறான். மிகச் சிறந்த புருஷார்த்த மான மோக்ஷத்தையும் தந்து தன்னையும் தந்து விடுகிறான். இப்படிக் கொடுக்கும் போது அவனுடைய மனநிலையைக் கண்டு அதையும் இந்த ஔதார்யத்தின் விளக்கத்தில் சேர்க்கி றார்கள் உரையாசிரியர்கள். உலகில் கொடை வள்ளலாயிருப் பார்களில் பெரும்பாலானவர்கள் எல்லாம் கொடுத்து விட்டு, எவனோ ஒருவன் வந்து வாங்கிக் கொண்டு போய் விட்டான் நாமும் சில நிர்பந்தங்களால் கொடுத்து விட்டோம், என்று நினைப்பார்கள். ஆனால் எம்பெருமான் எப்படி நினைக்கிறான் தெரியுமா! தன்னை ஆஶ்ரயித்துப் பலன் பெறுபவர்களை எவனோ ஒருவன் என நினைப்பதில்லை. தன்னைத் தகப்ப னாகவும் அவர்களைப் புத்ரர்களாகவும் நினைத்துத் தகப்பன் ஸம்பாதித்து வைத்த சொத்துக்கள் முழுவதையும் புத்ரன் தானே அனுபவிக்க வேண்டும். ஆகவே தன்னை ஆஶ்ரயித்தவர்களைப் புத்ரர்களாக நினைத்து தன்னையும் தன்னுடைய ஸ்தானமான பரமபதத்தையும் அவர்கள் தானே அனுபவிக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் எல்லாவற்றையும் வாரி வழங்குகிறான். கொடுப் பது அரிதன்று. இந்த எண்ணத்துடன் கொடுப்பதுதான் அரிது.





இம்மாதிரி கொடுப்பது தான் ஔதார்யம் ஆகும். இது எம்பெரு மானுக்கு உரிய சிறந்த குணமாகும். ஸ்வாமி நம்மாழ்வார் எம்பெருமானுடைய இந்த குணத்தை அனுபவித்து அருளிச் செய்கிறார்.

**கொள்ளும் பயனில்லை, குப்பை கிளர்ந்தன்ன செல்வத்தை**
**வள்ளல் புகழ்ந்து நும் வாய்மை இழக்கும் புலவீர்காள்!**
**கொள்ளக்குறைவிலன் வேண்டிற்றெல்லாம் தரும் கோதில் என்**
**வள்ளல் மணிவண்ணன் தன்னைக் கவி சொல்ல வம்மினோ**

***(திருவாய்மொழி-3-9-5)***

நீசர்களைக் கவிபாடி அத்யல்பமான பொருள்களைப் பெறும் புலவர்களைப் பார்த்து ஸ்வாமி நம்மாழ்வார் எதற்காக நீங்கள் ஸாதாரண மக்களைக் கவிபாடுகிறீர்கள்? அவர்கள் கொடுக்கும் செல்வம் குப்பையைக் கிளறினாப்போல் இருக்கும். நீங்கள் உங்கள் வாக்கின் வாய்மையை அதாவது தூய்மையை - சிறந்த வாக்கு படைத்தவர்கள் என்ற ப்ரஸித்தியை - இழக்கிறீர்கள்; இதுதான் நீசர்களைப் பாடுவதால் நீங்கள் பெறும் பலன்.

ஆனால் யாரைக் கவிபாடுவது என்று கேட்கிறீர்களா? கவி பாடும் விஷயத்தைச் சொல்லுகிறேன். புலவீர்காள்! கொள்ளக் குறைவிலன். வேண்டியவற்றையெல்லாம் தருபவன். குற்றமற்ற வள்ளன்மையை உடையவன். நான்கண்டறிந்த வள்ளன்மை யிது. அப்படிப்பட்ட மணிவண்ணனைக் கவி பாடவாருங்கோள் என்கிறார் ஸ்வாமி நம்மாழ்வார்.

எம்பெருமான் கொள்ளக்குறைவிலன். பலருக்குக் கொடுப்ப தால் கொடுப்பவனுடைய செல்வம் குறைந்து விடும். இது உலகில் கண்டறிந்த உண்மை. எம்பெருமானுடைய செல்வம் எல்லாரும் கொள்ளக் கொள்ள குறைவு படாது என்று ஸாமான்ய மாகப் பொருள்படும். பூர்வாசார்யர்கள் காட்டும் அர்த்தம் அதன்று. பின் கொள்ளக் குறைவிலன். அதாவது உலகில் குணம்

கெட்டவனைப் பொருள் ஆசையினால் புலவர்கள் பலவாறு இல்லாத குணங்களையெல்லாம் இவனிடம் இருப்பதாகப் பாடு வார்கள். அவனும் மகிழ்ந்து நிறைய பொருள் கொடுப்பான் இவர்களுக்கு. இவர்கள் பாடின புகழ்கள் முழுவதும் தனக்கு உண்டு என்றிருப்பான் அவன். ஆனால் உலகில் யாவரும், புலவர் கள் பாடும் குணம் ஒன்றும் இவனிடம் கிடையாது. அவ்வளவு குறைபாடு உடையவன் ஆயிற்றே. எப்படி இவன் அந்தக் குணங்களைத் தன்னுடையவைதான் என்று ஏற்கிறான் என்று புலவர்கள் பாடின குணங்களை ஏற்கும்போது குறை காண்பார். எம்பெருமான் விஷயத்தில் அப்படியன்று. யார் எவ்வளவு புகழ் பாடினாலும் அந்தக் குணங்களை ஏற்று மகிழும்போதும் எந்தக் குறையும் இல்லாதவன் எம்பெருமான்.புகழ்கள் யாவும் இவ னுக்குத்தகும். அவன் தான் ஸமஸ்த கல்யாண குண நிதியாயிற்றே என்றே இருப்பார்கள் நாட்டார்கள் 'நீங்கள் யாவை-யாவை 'எந்த எந்த' சில ஏற்றங்களை இட்டுக் கவி பாடினீர்கோள்? அவற்றை ஸ்வீகரிக்கும் இடத்தில் ஒரு குறையுடையன் அல்லன்' என்ற ஈட்டு ஸ்ரீஸூக்தியினால் இந்த சுவை மிகுந்த பொருளை அறியமுடிகிறது. 'வேண்டிற்றெல்லாம் தரும். எம்பெருமானிட மிருந்து நாம் கொள்ளும் பயனும் பெரிது. நீங்கள் கவி பாடினால் போக-மோக்ஷங்கள் முதலாக வேண்டியவற்றையெல்லாம் தருவான் எம்பெருமான். இந்த எம்பெருமானைத் தவிர மற்றைய எந்த தேவதையும் வேண்டியவற்றைத் தராது.

மற்றைய தேவதை ஒருவனுக்கு ஒரு பயனைத் தருகிறது. அதைப் பெற்ற இவன் மற்றொரு பலனைப் விரும்பி அந்தத் தேவதையிடமே மற்றும் வேறொரு பலனைக் கேட்கிறான். அந்தத் தேவதை அந்த மற்றொரு பலனை அவனுக்குத் தராது. அதற்கு அவ்வளவு சக்தி இல்லை.

ஒரு க்ருஹத்திற்கு அதிதியாகச் சென்ற ஒருவனுக்கு அந்த





க்ருஹத்திற்கு உரியவள் காய்கறிகளும் பாயஸத்தையும் பண்ணி அன்னமிட்டாள். அந்தப் பாயஸத்தைச் சாப்பிட்ட அவன் இவ்வா றே வடையையும் பண்ணி ஸாதிக்குமாறு கேட்டான். ஆனால் அவளுக்கு பாயஸத்தைத் தவிர வேறு எதுவும் செய்யத் தெரியாது. அப்படிப்பட்டவளிடம் வடை முதலியவற்றை அபேக்ஷித்தால் கிடைக்குமா? அன்றைக்கு மட்டுமல்ல மறுநாள் இருந்தாலும் கிடைக்காது. எத்தனை நாட்கள் மாதங்கள் வருஷங்கள் காத்திருந் தாலும் கிடைக்காது. ஏன். அவளுக்கு அவற்றைச் செய்யவே தெரியாதே. இம்மாதிரி தான் மற்றைய தேவதைகளும் தாங்கள் கொடுக்கக் கற்ற அந்த ஒரு பயனை மட்டும் தான் தரும்.

எம்பெருமான் எல்லாவற்றையும் தருவான். தரவல்லவன், அப்படியானால் த்ரௌபதி முதலானோர்க்கு ஏன் எம்பெருமான் மோக்ஷம் தரவில்லை? என்றால் அவர்கள் கேட்காததால் தர வில்லை. இவனால் முடியாது. இவன் தரமாட்டான் என்ற காரணத்தினால் அன்று'' என்கின்றனர் பூர்வர்கள்.

இங்கு ஈட்டு ஸ்ரீஸூக்தி ''அபேக்ஷித்தார் தாழ்வாலே இழக் கில் இழக்குமித்தனை. அவன் தரமாட்டாமையாலே இழக்க வேண்டா.'' ஆகவே தான் வேண்டிற்றெல்லாம் தருபவனிவன் என்றார் ஸ்வாமி நம்மாழ்வார்.

மோக்ஷம் தரும் எம்பெருமான் மற்றைய பலன்களையும் தருவான்; மற்றைய தேவதைகள் அல்ப பலன்களையே தரவல்ல வர்கள். எவ்வளவு நாள் விளம்பித்துப் பொறுத்துக் கிடந்தாலும் அவர்களிடமிருந்து மோக்ஷம் கிடைக்காது.

'தேவதாந்தரங்கள் பக்கல் விஷ மது துல்யங்களான (விஷம் கலந்த தேன் போலான) க்ஷுத்ர (அல்ப) பலன்கள் கடுக ஸித்திக் கும். அவை தாமும் பகவததீனம். அவர்கள் பக்கல் மோக்ஷம் விளம்பித்தும் கிடையாது என்று பல ப்ரமாணங்களைக் காட்டி ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸாரத்தில் பரதேவதா பாரமார்த்யாதிகாரத்தில் அருளிச் செய்துள்ளார்.

எம்பெருமான் வேண்டியவற்றையெல்லாம் தருபவன் என்பதை விளக்கும் ப்ராசீன ப்ரமாண ஶ்லோகம் ஒன்று உள்ளது.

**भौमं मनोरथं, स्वर्ग्यं स्वर्गिवन्द्यं च यत् पदम् ।**
**ददाति ध्यायिनां नित्यम् अपवर्ग प्रदो हरिः ॥**

(பௌமம் மநோரதம் ஸ்வர்க்யம் ஸ்வர்கிவந்த்யஞ்ச யத் பதம் ।
ததாதி த்யாயிநாம் நித்யம் அபவர்கப்ரதோ ஹரி:॥)

நில உலகில் விரும்பப்படும் போகங்கள், ஸ்வர்கலோக ஸுகம், ஸ்வர்கத்திலுள்ளவர்கள் விரும்பி வணங்கும் மோக்ஷஸ்தாநம் இவையனைத்தையும் தன்னை த்யானம் செய்பவர்களுக்கு மோக்ஷம் தரும் எம்பெருமான் அருளுகிறான் என்பது இதன் பொருள். ஆகையால் மோக்ஷம் அளிக்கவல்ல எம்பெருமான் மற்றைய பலன்களையும் தருவான் என்பது ஸ்பஷ்டம்.

**கோதில் வள்ளல்**

ஒருவனுக்கு ஒன்று கொடுக்கும் போது கோது (தோஷம்) அற்றிருப்பவன் எம்பெருமான். உலகில் ஒருவனுக்கு ஒன்றைக் கொடுக்கும்போது சில தோஷங்களைப் பார்த்து வருகிறோம் அவையாவன:- கொடுப்பவன் சில தேசங்களில் தான் கொடுப்பான், சில காலங்களில் தான் பாத்திரமறிந்து சிலருக்குத்தான் கொடுப்பான். சிலவற்றைத் தான் கொடுப்பான்; கொடுத்த பிறகும் கொடுத்தவன் இவனுக்கு இவ்வளவு கொடுத்து விட்டோமே. என்னைத் தவிர வேறு யார் இவ்வளவு கொடுப்பார்கள் என்ற அஹங்காரம் தொடர்ந்து வந்து கொண்டே இருக்கும். மேலும் கொடுப்பவன் ப்ரத்யுபகாரத்தை எதிர்பார்த்தே கொடுப்பானாகையால் அவனிடமிருந்து பெறுபவர்கள் இவனுக்கு நாம் என்ன கைம்மாறு (ப்ரத்யுபகாரம்) செய்வது என்ற குறையுடனிருக்கும்படி இருக்கும்.





அம்மாதிரியான தோஷங்கள் எம்பெருமானிடம் ஏதும் கிடையாது. எல்லாக் காலங்களிலும் எல்லாத் தேசங்களிலும் யாவர்க்கும் யாவற்றையும் தருவான் எம்பெருமான். அவனுக்கு இவ்வளவு கொடுத்துவிட்டோமே! என்ற பஶ்சாத்தாபமும் (அநுதாபமும்) இல்லாதவன். எம்பெருமான் பரிபூர்ணனாகையாலே இவன் எவரிடமிருந்தும் எதையும் எதிர்பாராதவன். ஆகையால் இவனிடமிருந்து பலனைப் பெறுபவர்கள், இவனுக்கு (எம்பெருமானுக்கு) என்ன ப்ரத்யுபகாரம் செய்வது என்ற சிந்தையும் வேண்டாதபடிக் கொடுப்பவன் எம்பெருமான்.

என்வள்ளல்-'எனக்கு எல்லாம் தருபவன்' என்றதால் இப்படிப்பட்ட எம்பெருமானுடைய கோதற்ற-குற்றமற்ற கொடையை நன்கு அனுபவித்துச் சொல்லுகிறேன் என்கிறார்.

மணிவண்ணன்- நீலரத்னம் போன்ற திருமேனியின் அழகு படைத்தவன். எம்பெருமானை ஆஶ்ரயிப்பதனால் வேறு எந்தப் பலனும் வேண்டாம். திருமேனி அழகு ஒன்றே அதையே எப்பொழுதும் அனுபவித்துக் கொண்டிருக்கலாமே என்கிறார். இப்படி எம்பெருமானுடைய ஔதார்யத்தை நம் பூர்வர்கள் சுவைபட விளக்கியுள்ளனர். ஶ்ருதப்ரகாஶிகாசார்யர் முதலானோர் காட்டிய பொருள்கள் கீழேகாட்டிய ஈட்டு வ்யாக்யானங்களிலும் காணலாம்.

இந்த ஔதார்யம் பற்றி மேலும் எழுத வேண்டுவன சில உள. அவை தொடரும்.

---

## 8. ஔதார்யம், சாதுர்யம்

**पूर्वस्यां सञ्चिकायान्तु प्रस्तुतापि वदान्यता ।**
**बहुप्रमाणैरथ्यापि गाम्भीर्याद्विवृता पुनः ॥**
**चातुर्यमथ सम्प्रोक्तं हरेर्ज्ञेयं मनीषिभिः ।**
**प्रकाश्यतेऽद्य पूर्वेषां मते स्थित्वा मयाधुना ॥**

பூர்வஸ்யாம் ஸஞ்சிகாயாம் து ப்ரஸ்துதாபி வதாந்யதா ।
பஹுப்ரமாணைரத்யாபி காம்பீர்யாத் விவ்ருதா புந: ॥
சாதுர்யம் அத ஸம்ப்ரோக்தம் ஹரேர்ஜ்ஞேயம் மநீஷிபி: ।
ப்ரகாஶ்யதேऽத்ய பூர்வேஷாம் மதே ஸ்தித்வா மயாதுநா ॥

சென்ற இதழில் வெளியான ஔதார்யமே இந்த இதழிலும் தொடர்கிறது. இதிலிருந்தே இதன் சிறப்பை நன்கு உணரலாம்.

பெரும் வள்ளலான எம்பெருமானுடைய திருவுள்ளச் சிறப்பை மற்றும் பலவகைகளில் விளக்கி எம்பெருமானுடைய ஔதார்யத்தைச் சிறப்பித்துக் காட்டுகிறார் ஸ்ரீ ஶ்ருதப்ரகா ஶிகாசார்யர்.

உலகில் கொடையாளியாயிருப்பார் சிலர்-தானம் வாங்க வந்தவர்களுக்கு நிறைய கொடுப்பார்கள். ஆனால் தாம் என்ன கொடுத்தோம். எவ்வளவு கொடுத்தோம் என்பதையும் நினைவில் வைத்துக் கொள்வார்கள். 'ஸமயம் வந்த போது உனக்கு அதைத் தந்தேனே. இதைத் தந்தேனே அவ்வளவு தந்தேனே' என்று மனப்பாடம் செய்தாற் போல் சொல்லிக் காட்டுவார்கள்.

சிறந்த கொடையாளியாயிருந்தால் தான் கொடுத்த பொருள் இன்னது என்பதையும், எவ்வளவு என்பதையும் ஒரு போதும்





நினைவில் கொள்ளமாட்டான். இந்தத் தன்மையை எம்பெருமானிடம் தான் காணலாம்.

மோக்ஷம் முடிவாகப் புருஷார்த்தங்கள் யாவற்றையும் தந்த பிறகும் தான் கொடுத்த பொருளையும் அதன் அளவையும் ஒரு போதும் நினைக்க மாட்டான் எம்பெருமான். இதுவே இவனது இயல்பு. இதுவும் ஔதார்யத்தின் வகையையே சாரும். இதைத் தான் ஶ்ருதப்ரகாஶிகாசார்யர் **'इदम् इयत् दत्तम् मया' इत्यस्मरणशीलत्वम्** (இதம் இயத் தத்தம் மயா இதி அஸ்மரண ஶீலத்வம்) என்று. ஆக எம்பெருமான் கொடுத்த பொருளையும் அதன் அளவையும் நினையாதிருக்கும் ஸ்வபாவம் கொண்டவன். இதுவும் ஔதார்யமே என்கிறார்.

இதற்கு மேலும் எம்பெருமானுடைய ஔதார்யத்தை அவன் ஸ்வபாவம் காட்டி விளக்குகிறார் ஶ்ருதப்ரகாஶிகாசார்யர். அதாவது-

தன்னை ஆஶ்ரயித்தவன் எவனோ ஒருவன். அவன் யார்? எப்படிப்பட்டவன் என்ற விசாரம் ஏதும் செய்யாமல் அவனுக்கு மோக்ஷம் இறுதியாக யாவற்றையும் தந்துவிட்டான். அவற்றைப் பற்றி நினைக்காமல் இருப்பது மட்டுமன்று இவனுக்கு நாம் என்ன செய்து விட்டோம்? ஒன்றுமே செய்யவில்லையே. நாம் கொடுத்தது போதாதே என்று ஏங்கியிருப்பானாம் எம்பெருமான். கடன் வாங்கினவன்-தான் கடனாக வாங்கிய பணத்தைத் தர முடியாத போது அதற்கு அதிகமாக வட்டி வளர்ந்து விட அதைக் கண்டு எப்படி அவன் கலங்குவானோ? அம்மாதிரி ஆஶ்ரயித்தவர்களுக்கு எல்லாவற்றையும் தந்து விட்டு சரியான முறையில் நாம் ஒன்றும் செய்யவில்லையே என வருந்துவானாம் எம்பெருமான். இதுதான் இவனுடைய சிறந்த ஔதார்யம் - வள்ளன்மை.

த்ரௌபதிக்கு துர்யோதனாதிகளால் பெருஞ்சபை நடுவே

மானபங்கம் ஏற்படும் நிலை உண்டாகி விட்டது. அப்பொழுது அவள் உரத்த குரலில் கண்ணனைக் கூப்பிட்டுக் கதறி அழுதாள். எம்பெருமானும் உடனே பற்பல வண்ணப்புடவை களை ஆயிரக்கணக்கில் அருள் செய்து அவளுடைய மானத்திற்குப் பங்கம் ஏற்படாமல் காத்து ரக்ஷித்தான். ஆனாலும் கண்ணன் 'அவள் வெகு தூரத்தில் இருக்கும் என்னைக் கதறிக் கூப்பிட்ட பிறகு தானே நான் அவளை ரக்ஷித்தேன். ஆபத்து வந்த பிறகு ரக்ஷிப்பது சிறக்குமா! த்ரௌபதிக்கு ஆபத்து வருவதற்கு முன்பேயே நான் அவளைக் காத்திருக்கவேண்டுமே! அவ்வாறு செய்யத் தவறிவிட்டேனே! கடன்பட்டவன் அசலுக்குமேல் வட்டி வளர்ந்து விட்டதைக் கண்டு எப்படி வருந்துவானோ அப்படி நான் வருந்துகிறேன்.

**गोविन्देति यदाक्रन्दत् कृष्णा मां दूरवासिनम् ।**
**ऋणं प्रवृद्धमिव मे हृदयान्नापसर्पति ॥**

கோவிந்தேதியதாக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூரவாஸிநம் ।
ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாந்நாபஸர்ப்பதி ॥

என்று எம்பெருமானே வாய்விட்டுக் கூறியுள்ளான். இதுவும் ஔதார்யத்தின் வகையேயாம். 'உன்னடியார்க்கு என் செய்வன் என்றே இருத்தி நீ' என்ற பாசுரம் கொண்டு முன்பு விளக்கப் பட்டது.

இவ்வாறெல்லாம் விளக்கம் தந்து எம்பெருமானுடைய ஔதார்யத்தைச் சிறப்பித்துள்ளார் ஶ்ருதப்ரகாஶிகாசார்யர். அவர் காட்டிய பொருள்களைத் திரட்டி ஒருங்கே அனுபவிப்போ மிப்போது:-

1. அயலாருக்குக் கொடுக்கிறோம் என்ற எண்ணமின்றித் தகப்பன் சொத்தைப் புத்ரன் அனுபவிப்பது போல் பக்தன் நான்





தருவதை அனுபவிக்கிறான் என்ற எண்ணத்துடன் தருவது-ஔதார்யம்.

2 இன்னாருக்கு இந்த இவ்வளவு கொடுத்தேன் என்று நினையாதிருக்கும் இயல்பு-ஔதார்யம்

3 எல்லாவற்றையும் தந்தும் கூட, வளர்ந்த வட்டியைக் கண்டு வருந்துவது போல் வருந்தி, கொடுத்தது போதாது என்ற எண்ணம் கொண்டு, த்ருப்தி இல்லாமல் இருக்கை-ஔதார்யம்.

இனி இந்த ஔதார்யத்திற்கு ஶ்ரீபெரியவாச்சான் பிள்ளை தரும் விளக்கத்தைக் காண்போம். அந்த விளக்கம் பின்வருமாறு-

'ஆஶ்ரிதருடைய அபேக்ஷிதங்களைத் தானே இரந்து கொடுக்கை' என்பதேயாம். எம்பெருமானை ஆஶ்ரயித்தவன் ஒருவன் ஒரு பொருளை விரும்புகிறான். ஆனால் அதை எம்பெரு மானிடம் வாய்விட்டுக் கேளாமல் இருந்து விடுகிறான். ஆனால் எம்பெருமான் அவன் கருத்தை அறிந்து அவன் கேளாமலிருக்கும் பொழுதும் அவன் விரும்பியதை அவனுக்குத் தர முற்படுவான். அப்பொழுது அவன் அதை வேண்டாம் என்று தடுத்தபோதும் 'நான் தருவதை அவஶ்யம் மறுக்காமல் நீ பெற்றுக் கொள்வா யாக' என்று எம்பெருமான் அவனை இரந்து யாசித்து அதை அவனுக்குக் கொடுப்பானாம்.

உலகில் ஒருவன் தன்னிடம் ஒரு வஸ்துவை வேண்டாத போது அதை அவனுக்குத் தரமாட்டான். கேளாததைத் தருவா னேன்? என்று வெறுமனே இருந்துவிடுவான். ஆனால் எம்பெரு மான் ஸ்வபாவம் அத்தகையது அன்று. தன்னை ஆஶ்ரயித்த காரணம் ஒன்றைக் கொண்டே அவனுக்கு அவன் விரும்பியதைத் தானே முற்பட்டு அவனை அதை வாங்கிக் கொள்ளும்படி நிர்பந்தித்து வேண்டித் தருவானாம். இதுவும் ஔதார்யத்தின் வகையேயாகும். இதற்குப் ப்ரமாணமாக ஶ்ரீமத்ராமாயண

ஶ்லோகம் ஒன்றையும் காட்டுகிறார் ஸ்ரீ பெரியவாச்சான்பிள்ளை. அந்த ஶ்லோகம் இதுவே.

**'अथ मध्यमकक्ष्यायां समागच्छत् सुहृज्जनैः ।**
**स सर्वानर्थिनो दृष्ट्वा समेत्य प्रतिनन्द्य च ॥**

அத மத்யமகக்ஷ்யாயாம் ஸமாகச்சத் ஸுஹ்ருஜ்ஜநை: ।
ஸ ஸர்வாந் அர்த்திநோ த்ருஷ்ட்வா ஸமேத்ய ப்ரதிநந்த்ய ச ॥

யாசகர்கள் பலர் ஸ்ரீ ராமனுடைய திருமாளிகைக்கு வந்துள்ளனர். அவனிடம் எதை எப்படிக் கேட்பது? என்று அவர்கள் திகைத்து வாய் திறவாமல் நிற்கின்றனர். அவ்வாறு நிற்கும் அவர்களை ஸ்ரீ ராமனே எதிர் கொண்டு அழைத்துக் கொண்டாடுகிறான். 'நீங்கள் தயங்க வேண்டாம். நீங்கள் வேண்டுவதை நான் அறிவேன். நான் கொடுப்பதை நீங்கள் மறுக்காமல் வாங்கிக் கொள்ள வேண்டும்' என்றெல்லாம் கூறி அவர்களை வரவேற்கிறானாம். அதன் பிறகு தான் தன் நண்பர்களுடன் சேர்வானாம்.

யாசிக்க வந்தவர்கள் வாய் திறந்து கேட்கக் கூசி நின்றால் ஸ்ரீராமனே சென்று நான் தருவனவற்றை நீங்கள் மறுக்காமல் வாங்கிக் கொண்டேயாகவேண்டும் என்று தானே வேண்டிக் கொடுப்பானாம். அவர்களுக்கு - அர்த்திகளுக்கு - அதாவது யாசகர்களுக்கு - ஒன்றும் கொடுக்காத போது எம்பெருமானுக்குத் தாங்க முடியாத வேதனை உண்டாகும். கொடுத்தால் தான் அந்த வேதனை நீங்கும் என்பதால் எம்பெருமானுடைய ஔதார்யத்தின் சிறப்பு நன்கு விளக்கப்பட்டதாகிறது.

தன்னுடைய இந்தச் சிறப்பியல்பை ஸ்ரீ கண்ணனே ஸ்ரீ கீதையில் தன் திருவாக்கினாலேயே வெளிப்படுத்துகிறான், அதாவது:-





தன்னிடமிருந்து ஐஶ்வர்யம், கைவல்யம் (ஜீவாத்மாநுபவம்), மோக்ஷம் முதலான புருஷார்த்தங்களை வாங்கிக் கொண்டு செல்லுபவர்களை 'இவர்கள் அனைவரும் வள்ளல்கள்' என்கிறான். கொடுப்பவனைத் தான் வள்ளல் என்று உலகில் கூறுவார்கள். அதற்கு மாறாக வாங்கிக் கொண்டு செல்லும் இரப்பாளர்களை (யாசகர்களை) உதாரர்கள் என்று கூறியுள்ளான்.

வாங்கிக்கொள்பவர்கள் எப்படி வள்ளல்கள் ஆவார்? என்ற கேள்விக்கு ஸ்ரீ பாஷ்யகாரரும் ஸ்வாமி ஸ்ரீ தேசிகனும் விளக்கம் அருளுகிறார்கள் ஸ்ரீகீதாபாஷ்யத்திலும் அதன் உரையிலும் . அதாவது-

என்னிடமிருந்து ஏதேனும் ஒன்றை வாங்கிக் கொள்பவர்கள் எனக்கு ஸர்வ சொத்தையும் தந்தவர்கள் ஆகிறார்கள் என்று கண்ணன் கருத்தாக ஸ்வாமி எம்பெருமானார் அருளிச் செய்துள்ளார். இதற்கு ஸ்ரீதேசிகன் தாத்பர்ய சந்த்ரிகையில் தரும்விவரணம் பின்வருமாறு.

வேண்டுவார் வேண்டுவனவற்றை எல்லாம் தருகை தான் எனக்கே அதாவது (ஸ்ரீக்ருஷ்ணனுக்கே) உள்ள சொத்தாகும். இப்படிப்பட்ட வள்ளன்மை-ஔதார்யம் என் சொத்து. என்னிடமிருந்து பெறுபவர்கள் (ப்ரதிக்ரஹீதாக்கள்) சிலர் இருப்பதால் தானே இந்த என் சொத்து நிலைத்துள்ளது. எவரும் என்னிடமிருந்து எதையும் பெறாவிட்டால் நான் உதாரன்- வேண்டியவற்றையெல்லாம் அளிப்பவன் என்ற என்னுடைய வள்ளன்மை எப்படி நிலைக்கும்? ஆகவே என்னிடமிருந்து சிலவற்றைப் பெறும் யாசகர்களால் தான் என்னுடைய வள்ளல் தன்மை நிலைத்திருப்பதால் இதைத் தருபவர்களை, என் வள்ளன்மையை உளதாக ஆக்குபவர்களை, உதாரர் என்பதில் தவறு என்ன? என்கிறான் கண்ணன் - இது ஸ்வாமி ஸ்ரீ தேசிகனின் விளக்கம்.

இவ்வளவால் தன்னிடம் யாசிக்க வருபவர்களையும் உதாரர் என்று கொண்டாடும்படியாக மிகச் சிறந்தது அவனுடைய ஔதார்யம் என்று கூறப்பட்டதாகிறது.

ஸ்வாமி ஸ்ரீதேசிகன் வ்யாக்யான வாக்யம் இதோ.

**'पात्रलाधवं, देयगौरवं च अनादृत्य दायविभागन्यायेन प्रत्युपकार निरपेक्षं वितरणरसिकत्वं, प्रभूतं दत्त्वाप्यतृप्तत्वम् च । अत एव हि अर्थिनः सर्वान् स्वयं उदारानाह ।**

(பாத்ரலாகவம், தேயகௌரவஞ்சாநாத்ருத்ய தாயவிபாக ந்யாயேந ப்ரத்யுபகாரநிரபேக்ஷம் விதரண ரஸிகத்வம், ப்ரபூதம் தத்வாப்யத்ருப்தத்வம் ச । அத ஏவ ஹ்யர்த்திநஸ்ஸர்வாந் ஸ்வயம் உதாராந் ஆஹ)

தம்மிடமிருந்து புருஷார்த்தங்களைப் பெறுபவனுடைய தாழ்வு, தான் கொடுக்கும் பொருளின் பெருமை இவை யொன்றையும் பொருட்படுத்தாமல் குலக்ரமமாக வரும் சொத்தைத் தான் தன் ஸந்ததியினருக்குக் கொடுப்பது போல், ப்ரத்யுபகாரம் ஒன்றையும் எதிர்பாராமல் கொடுத்து மகிழ்கை ஔதார்யம். தன்னிடம் யாசிக்க வந்தவர்களுக்கு நிறையக் கொடுத்தும் கொடுத்தது போதும் என்ற எண்ணமில்லாமலிருக்கையும் ஔதார்யம். ஆகையால் தான், தன்னிடம் யாசிப்பவர்களையும் உதாரர் என்று சொன்னான் எம்பெருமான் பார்த்தஸாரதி. இது முழுவதும் முன்னமே விளக்கப்பட்டதாகும்.

★★★★★

ஶரணாகதிகத்யத்தில் இதற்கு அடுத்து இடம் பெற்றுள்ள குணம் **சாதுர்யம்** என்பதாகும்.

இங்கு மூன்று உரையாசிரியர்களுடைய கருத்தும் சொற்களும் அநேகமாக ஒத்திருக்கின்றன.





***ஸ்ரீ ஶ்ருதப்ரகாஶிகாசார்யர்:-***

**चातुर्यम्-आश्रितार्थेषु अजडक्रियत्वम्; यथा सानुबन्धरावणधेन विभीषणाभिषेकः। यद्वा आश्रितदोष गोपनं वा चातुर्यम् यथा पित्रादेरिव ॥**

சாதுர்யம் - ஆஶ்ரிதார்த்தேஷு அஜடக்ரியத்வம் - யதா ஸாநுபந்த ராவணவதேந விபீஷணாபிஷேக:. யத்வா - ஆஶ்ரித தோஷகோபநம் வா சாதுர்யம் யதா பித்ராதேரிவ.

***ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளை:-***

சாதுர்யம்- ஆஶ்ரித தோஷங்களைப் பிராட்டியும் அறியாதபடி மறைத்துக் கொண்டிருக்கை, ஆஶ்ரிதருடைய அதிசங்கையைப் போக்கிரக்ஷிக்கை, என்னவுமாம், 'பாதாங்குஷ்டேந சிக்ஷேப ஸம்பூர்ணம் தஶயோஜநம்'.

**ஸ்வாமி தேசிகன்:**

**'रक्षणीयेषु 'जनयन् प्रत्ययं तदा' इत्यादि प्रसिद्धम् अतिशङ्काशमन-दोषगोपनादिरूपम् अजडक्रियत्वम् । येन विभीषण-सुमुखादिषु विरुद्धानप्यनुकूलयति; शुभाश्रय स्वाकार प्रदर्शनाद्ययत्नोपायैः विषय वैराग्यादिकं च जनयति'।**

(ரக்ஷணீயேஷு 'ஜநயந் ப்ரத்யயம் ததா' இத்யாதி ப்ரஸித்தம் அதிஶங்காஶமந-தோஷகோபநாதிரூபம் அஜடக்ரியத்வம் । யேந விபீஷண-ஸுமுகாதிஷு விருத்தாநப்யநுகூலயதி । ஶுபாஶ்ரயஸ்வாகாரப்ரதர்ஶநாத்யயத்நோபாயை: விஷயவைராக்யாதிகம் ச ஜநயதி)

இதில் உதாஹரணம் கொண்டு விளக்கியிருப்பது அதிகமான அம்ஶம்.

ஆஶ்ரிதர்கள் விஷயத்தில் உதவி செய்யும் போது மிகவும் சுறுசுறுப்புடன் செயல்படுகை சாதுர்யமாகும். தன்னை சரணம் அடைந்தான் ஸ்ரீ விபீஷ்ணுழ்வான். பல எதிர்ப்புக்களிடையே அவையனைத்தையும் சரி செய்து கடைசியாக ஸ்ரீ விபீஷ்ணுழ்வானை ஏற்றுக்கொண்டான் சக்ரவர்த்தித் திருமகன் ஸ்ரீராமன். அவன் எதிர்பாராவிட்டாலும் மிக்க சுறுசுறுப்புடன் அவனுக்கு பல நன்மைகள் செய்ய முற்பட்டான். ராவணனை உற்றார் உறவினர் அனைவருடனும் வதம் செய்தான். பிறகு ஸ்ரீ விபீஷ்ணுழ்வானுக்கு ஸ்ரீ லங்கையிலேயே பட்டாபிஷேகம் செய்து வைத்தான்.

தன்னை ஆஶ்ரயித்தவர்களுடைய தோஷங்களை ஒருவரும் அதாவது பிராட்டியும் கூட அறியாதபடி மறைக்கையும் சாதுர்யமாகும் என்று ஸ்ரீ.ஶ்ருதப்ரகாஶிகாசார்யர் விளக்குகிறார். பெரிய வாச்சான் பிள்ளையும் இந்த விளக்கத்தைத் தந்து மேலும் அதிகப்படியான விளக்கம் ஒன்றையும் தருகிறார்.

தன்னை சரணம் அடைந்தவர்களை ரக்ஷிப்பதாக எம்பெருமான் முதலில் ப்ரதிஜ்ஞை செய்கிறான். 'அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாஶுச:'(நீ விரும்பும் பலனுக்குத் தடையான எல்லாப் பாபங்களையும் போக்கி நான் உன்னை ரக்ஷிக்கிறேன்) என்று.

நம்முடைய பாபம் நிறைய இருப்பதைக் கண்டு 'எம்பெருமானால் இவ்வளவு பாபங்களையும் போக்க முடியுமா? என்று நாமே ஸந்தேஹம் கொள்கிறோம்.

இந்த நம்முடைய ஸந்தேஹங்களைக் கண்டு எம்பெருமான் எவ்விதத்திலாவது தன்னுடைய மஹிமையைக் காட்டி ஆஶ்ரிதர்களுடைய ஸந்தேஹங்களைப் போக்கி அவர்களுக்குத் தன்னிடத்தில் நம்பிக்கையை உண்டு பண்ணுவான். இந்தத் தன்மையும் சாதுர்யந்தான். உதாஹரணம் ஒன்று பாருங்கள்.





வாலியை வதம் செய்து அவன் அபஹரித்துக் கொண்ட தன் மனைவியையும் ஸாம்ராஜ்யத்தையும் தனக்குத் தரவேண்டும் என்று ஸ்ரீராமனை சரணம் அடைந்தான் ஸுக்ரீவன். ஸ்ரீராமனும் அப்படியே வாலியை வதம் செய்து அவன் விரும்பியதை ஸாதித்துத் தருவதாகச் சொன்னான். பின்பு ஸுக்ரீவன் ராமனிடம் அதிஶங்கை அதாவது ஸந்தேஹம் கொண்டான். அதாவது வாலி மிகவும் பலிஷ்டனாயிற்றே. அவனுடைய பலத்தை நானே நேரில் பல தடவைகள் கண்டுள்ளேன். அப்படிப்பட்ட அவனை வதம் செய்வதற்கு வேண்டிய சக்தி ஸ்ரீராமனுக்கு உண்டா? என்று. இதை ஸ்ரீராமனிடமே கூறினான். ஸ்ரீராமன் இதற்காக ஸுக்ரீவனைக் கைவிட்டு விடவில்லை. தன்னுடைய பராக்ரமத்தை அவனுக்குக் காட்டி அவனுக்குத் தன்னிடத்தில் நம்பிக்கை வரும்படிச் செய்தான். அதற்காக அவன் தந்த பரீக்ஷைகளுக்கு உட்பட்டுத் தன் பராக்ரமத்தைக் காட்டினான் ஸ்ரீராமன்.

அவனைப் பற்றி இவ்வாறு ஸந்தேஹம் கொண்ட ஸுக்ரீவன் மீது கோபம் கொள்ளாத ஸ்ரீராமன் அவனைப் பார்த்து மஹாராஜரே!வாலியை வதம் செய்வதில் என் மீது உமக்கு நம்பிக்கையில்லையாகில் நாம் உமக்கும் நம் மீது நம்பிக்கை வரும்படிச் செய்கிறோம் என்று புன்சிரிப்புடன் கூறி அவன் சொன்னபடி துந்துபி என்ற ராக்ஷஸனுடைய எலும்புக்கூட்டைத் தன் திருவடி நுனியால் தூக்கி எறிந்தும், ஏழு மரங்களை ஒரே பாணத்தினால் துளைத்து வீழ்த்தியும் தன் மீது நம்பிக்கையை ஸுக்ரீவனுக்கு உண்டு பண்ணினான்.

तस्य तद्वचनं श्रुत्वा सुग्रीवस्य महात्मनः ।
स्मितपूर्वमथो रामः प्रत्युवाच हरिं प्रभुः ॥
यदि न प्रत्ययोऽस्मासु विक्रमे तव वानर !
प्रत्ययं समरे श्लाघ्यम् अहम् उत्पादयामि ते ॥

राघवो दुन्दुभेः कायं पादाङ्गुष्ठेन लीलया।
तोलयित्वा महाबाहुः चिक्षेप दशयोजनम् ॥

தஸ்ய தத்வசநம் ச்ருத்வா, ஸுக்ரீவஸ்ய மஹாத்மந: ।
ஸ்மிதபூர்வம் அதோ ராம: ப்ரத்யுவாச ஹரிம் ப்ரபு: ॥
யதி ந ப்ரத்யயோऽஸ்மாஸு விக்ரமே தவ வாநர ।
ப்ரத்யயம் ஸமரே ஶ்லாக்யம் அஹம் உத்பாதயாமி தே ॥
ராகவோ துந்துபே: காயம் பாதாங்குஷ்டேந லீலயா ।
தோலயித்வா மஹாபாஹு: சிக்ஷேப தஶயோஜநம் ॥

என்ற இந்த ஸ்ரீராமாயண ஶ்லோகங்கள் மேலே கூறிய விஷயங்களை விளக்குகின்றன.

தன்னைப் பற்றி வானர ஜாதியைச் சார்ந்த ஸுக்ரீவன் ஸந்தேஹம் கொண்ட போது ஸ்ரீராமன் அவன் மீது கோபம் கொள்ளவில்லை. சிரித்துக் கொண்டே துந்துபியின் எலும்புக் கூட்டை விளையாட்டாகப் பத்து யோஜனைகள் தூரம் எறிந்து அவனுக்கு நம்பிக்கையை உண்டு பண்ணினான் அன்றோ. இதுவும் சாதுர்யத்தையே சாரும். எப்படியும் தன்னை ஆஶ்ரயித்தவர்களைக் கைவிடக்கூடாது. ஸந்தேஹம் கொள்ளும் ஶரணாகதர்களை இந்தச் சாதுர்ய குணத்தினால் ரக்ஷிக்கிறான் என்றபடி.

ஸ்வாமி ஸ்ரீதேசிகன் தரும் சாதுர்யத்தின் விளக்கம் மேலும் சற்று விரிவானது.

கீழே காட்டிய வகையில் நம்பிக்கையை உண்டு பண்ணி ஆஶ்ரிதர்களுக்குத் தன் பக்கல் உண்டான அதிஶங்கையை- அவநம்பிக்கையைப் - போக்குதலும், ஆஶ்ரிதர்களிடத்தில் தோஷங்களைக் கண்ட போதும் அவற்றைப் பிறர் எவரும் அறியாதபடி மறைக்கையும் சாதுர்யம் என்று முன் கூறியபடி விளக்கம்





தந்துள்ளார் ஸ்வாமி ஸ்ரீ தேசிகன். இதற்குமேல் இந்த சாதுர்யம் என்ற மஹாகுணத்தினால் ஏற்படும் விளைவை உதாஹரணங்கள் காட்டி விவரித்து இந்தச் சாதுர்ய குணத்தைச் சிறப்பித்தருளுகிறார்.

இந்த சாதுர்யம் என்ற சிறந்த குணத்தைக் கொண்டு எம்பெருமான் எவ்வளவு கார்யம் செய்துள்ளான் தெரியுமா! விபீஷணன் ஸ்ரீராமனை சரணம் அடைய வருகிறான். ஸ்ரீராமனும் இவனை உடனே சேர்த்துக் கொள்ள விரும்புகிறான். ஆனால் இடையே எவ்வளவு தடைகள்? ஸ்ரீராமனுக்கு மிகவும் வேண்டியவனான ஸுக்ரீவ மஹாராஜன் 'விபீஷணன் ராக்ஷஸன், துஷ்டன், அவனால் நமக்குத் தீங்கு நேரும். ஒருக்காலும் அவனைச் சேர்த்துக் கொள்ளக்கூடாது' என்று இளைய பெருமாளையும் கூட்டிக் கொண்டு பல தடவைகள் தடுக்கிறான் ஸ்ரீராமனை. ஸ்ரீராமனும் பல யுக்திகளைக் கொண்டு அவனை அவஶ்யம் சேர்த்துக் கொள்ளத் தான் வேண்டும் என்று கூறியபோதும் கலங்கி நின்ற ஸுக்ரீவனுக்குத் தன் மேன்மையை (பரத்வத்தை)க் காட்டி அவனைத் தெளியும்படிச் செய்து தான் கொண்டுள்ள ஶரணாகத ரக்ஷண வ்ரதத்தையும் கூறி முடிவில் அவன் வாயாலேயே ஸ்ரீவிபீஷணாழ்வானைச் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று கூறும்படிச் செய்து இருவருக்குமிடையே இருந்த விரோத மனப்பான்மையைப் போக்கி இருவரையும் பொருந்தச் செய்தானே. இது எதனால்? இந்தச் சாதுர்யம் என்ற மஹா குணத்தினால் தான்.

இவ்வாறே தன்னுடைய சாதுர்ய குணத்தினால் ஸுமுகன் என்ற ஸர்ப்பஶ்ரேஷ்டனை ஸர்ப்பங்களுக்குப் பகைவனான கருடனுடன் சேர்த்து வைத்துத் தோழமை கொள்ளச் செய்தான். அந்த வரலாறு பின்வருமாறு:-

இந்திரனுடைய தேரோட்டி மாதலி என்பவன். அவனுக்கு

மிக அழகு வாய்ந்த பெண் ஒருத்தி இருந்தாள். அவளுக்கு ஏற்ற வரனைத் தேடினான் மாதலி. தன் பெண்ணுக்கு ஏற்றவரன் தேவலோகத்திலும் கிடைக்கவில்லை அவனுக்கு. கடைசியில் நாகலோகத்திற்குச் சென்று வரன் தேடினான் இவன். அங்கு அவர்களும் தேவரூபம் கொண்டு அழகியவர்களாகவே இருப் பார்கள். அங்கே 'ஸுமுகன்' என்ற ஸர்ப்பஶ்ரேஷ்டன் (உயர்ந்த ஸர்ப்ப வடிவம் கொண்டவன்) கிடைத்தான். எல்லாவற்றாலும் தன் பெண்ணுக்கு ஏற்றவனாயிருந்தான் அவன். அவனிடம் சென்று தன் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ளும்படிக் கேட்டான். அவன் சொன்னான்-'என் தகப்பனார் கொஞ்ச காலத்திற்கு முன்தான் கருடனால் கொல்லப்பட்டு அவனுக்கு உணவாகி இறந்தார். தற்போது நான் என் தாத்தாவின் அரவணைப்பில் தான் இருக்கிறேன். ஆகையால் கல்யாண விஷயம் பற்றி அவரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்'' என்று. இதைக் கேட்ட மாதலியும் அப்படியே ஸுமுகனுடைய தாத்தாவை அணுகி பேரனுக்குத் தன் பெண்ணைக் கொடுக்கும் எண்ணத்தைத் தெரிவித்தான். அந்தக் கிழவரும் இதைக் கேட்டு மகிழ்ந்தார். கூடவே வருத்தும் செய்தி ஒன்றையும் மாதலிக்குக் கூறினார். ''உம்முடைய பெண்ணை என் பேரன் ஸுமுகனுக்குத் தருவதில் மிகவும் ஸந்தோஷமே! ஆனால் அவனுடைய ஆயுஸ் அடுத்த ஒரு மாதம் வரை தான் உண்டு. கருடன் அடுத்த மாதம் தனக்கு ஆஹாரமாக நாள் குறித்துச் சொல்லிச் சென்றுள்ளான். அவனுடைய குறிப்பு ஒரு நாளும் பொய்யாவதில்லை. கட்டாயம் அடுத்த மாதம் கருடன் வந்து இவனைக் கொத்தித் தின்று விடப் போகிறான். இப்படி அல்பாயுஸ்ஸாயிருக்கும் இவனுக்கு எப்படி உம்முடைய பெண்ணை மணம் முடித்து வைப்பது? ஆகவே இது நடக்காது'' என்று.

இதைக் கேட்ட மாதலி கொஞ்சமும் வருந்தவில்லை. தான் தேவேந்த்ரனுக்கு ஸாரதியாயிருப்பதால் அவனைக் கேட்டுக் கொஞ்சம் அம்ருதம் வாங்கி இவனுக்கு (ஸுமுகனுக்கு)க் கொடுத்து விட்டால் போகிறது. இவன் சிரஞ்ஜீவி ஆகிவிடுவான் என்ற தைர்யம் இவனுக்கு உண்டு. இந்தத் தைர்யத்தினால் மாதலி ஸுமுகன் தாத்தாவிடம் 'நீங்கள் பையனுடைய ஆயுஸ்ஸைப் பற்றிக் கவலைப்படவேண்டாம்' நான் எப்படியாவது அவனைச் சிரஞ்ஜீவியாக ஆக்கிவிடுகிறேன். என் பெண்ணை நீங்கள் சிந்தையின்றி உங்கள் பேரனுக்காக ஏற்றுக் கொள்ளுங்கள்' என்றான்.

இதைக் கேட்ட அவர் உயர்ந்த இடத்துப் பெண்ணும் கிடைக் கிறது. நீண்ட ஆயுஸ்ஸும் கிடைக்கிறதே! என்ற ஸந்தோஷத்தில் இந்த விவாஹத்திற்கு அங்கீகாரம் அளித்து விட்டார்.

உடனே மாதலி இந்த்ரனிடம் வந்து 'நான் என் பெண்ணுக்கு ஏற்ப நல்ல வரன் ஒன்று ஏற்பாடு செய்து வைத்திருக்கிறேன். ஆனால் அவனுடைய ஆயுஸ் மிக அல்பமாயிருக்கிறது. அவனை எப்படியாவது சிரஞ்ஜீவியாகச் செய்யவேண்டும். தங்கள் வஶம் உள்ள அம்ருதத்தில் சிறிது அளவு தந்து அவனைச் சாப்பிடச் செய்தால் அந்த வரன் தீர்காயுஷ்மானாக சிரஞ்ஜீவியாக ஆகிவிடு வான். இவ்விஷயத்தில் தாங்கள் தான் தயை செய்யவேண்டும் என்று வேண்டிக் கொண்டான். இந்த்ரன், ஹே! மாதலியே நீ பார்த்திருக்கும் மாப்பிள்ளை சிரஞ்ஜீவியாக இருக்க வேண்டும். இவ்வளவு தானே? அப்படியே எப்படியாவது செய்துவிடலாம். இதற்காக அம்ருதம் கேட்கவேண்டாம். இது தேவர்களுக்கு மட்டுமே உரியது. ஸர்வேஶ்வரனான எம்பெருமான் எனக்குத் தம்பியாக அதாவது வாமனனாக அவதரித்து உபேந்த்ரனாக உள்ளான். அவனிடம் போய் ப்ரார்த்திப்பாயாக. அவன் அந்த வரனைச் சிரஞ்ஜீவியாக இருக்குமாறு அநுக்ரஹிப்பான். அவ்வளவே போதும் என்றான்.

மாதலியும் அவ்வாறே சென்று உபேந்த்ரனைப் ப்ரார்த்தித்

தான். எம்பெருமானான அவனும் அப்படியே அருள் செய்தான். அதனால் அந்த ஸுமுகன் என்பவனும் சிரஜ்ஜீவியானான்.

ஒரு மாதம் கழிந்த பிறகு கருடன் தனக்கு உணவாக ஏற்பாடு செய்திருந்த ஸுமுகன் என்ற ஸர்ப்பஸ்ரேஷ்டனை உணவாகக் கொள்ள நாகலோகத்திற்குச் சென்று அங்குள்ள ஸுமுகனைக் கூப்பிட்டனுப்ப அவன் வந்ததும் அவனை அப்படியே விழுங்க முற்பட்டான். அப்பொழுது ஸுமுகன் தான் உபேந்த்ரனுடைய திருவருளால் சிரஞ்ஜீவியாகி விட்டதையும் இனி ஒருவராலும் தன்னைக் கொல்ல முடியாது என்றும் கர்வம் மிகுந்து சொன்னான்.

பசியுடன் வந்த கருடன் உணவு கிடைக்காது போனதால் மிகுந்த கோபம் கொண்டு 'உணவு கிடைக்காதபடி செய்தது எம்பெருமான் தான்' என்பதையும் அறிந்து எம்பெருமானிடம் சென்று என் ஆஹாரத்தைக் கெடுத்தீரே, இது உமக்குத் தகுமா? உம்மையும் உம்முடைய தேவியாரையும் முதுகில் சுமந்து நீர் விரும்பும் இடங்களுக்கெல்லாம் கொண்டு செல்கிறனே! இப்படி அடியனான எனக்குத் த்ரோஹம் செய்யலாமா! என்றெல்லாம் கர்வத்துடன் எதிர்த்துக் கேட்டான்.

இதைக் கேட்ட எம்பெருமான் அவன் கர்வத்தை அடக்கி 'என்னால் சிரஞ்ஜீவியாகச் செய்யப்பட்ட ஸுமுகனை உன்னிடமே அடைக்கலமாக ஒப்படைக்கிறேன். நீயே பகை பாராட்டாமல் அவனைக் காப்பாற்றுவாயாக' என்று ஸுமுகனை கருடனுக்கு அன்புடை அடியவனாகச் செய்து காப்பாற்றினான்.

எம்பெருமான் தன்னுடைய சாதுர்யம் என்ற இந்த மஹா குணத்தைக் கொண்டு பரஸ்பரம் முரண்பட்ட ஸ்வபாவம் கொண்ட இருவரையும் ஒன்றுபடுத்தி வைத்தான். இது சாதுர்யத்தின் பயன். இந்த ஸுமுகனுடைய வரலாறு மஹாபாரதத்தில்





உள்ளது. திருமங்கை ஆழ்வாரும் பெரிய திருமொழியில் அருளுகிறார்.

**நஞ்சு சோர்வதோர் வெஞ்சின அரவம்**
**வெருவி வந்து நின்சரண் எனச் சரணாய்**
**நெஞ்சிற் கொண்டு நின் அஞ்சிறைப்பறவைக்கு**
**அடைக்கலம் கொடுத்து அருள்செய்தது அறிந்து**
**வெஞ்சொலாளர்கள் நமன் தமர் கடியார்**
**கொடிய செய்வன உள அதற்கு அடியேன்**
**அஞ்சி வந்து நின்னடியிணை அடைந்தேன்**
**அணிபொழில் திருவரங்கத்தம்மானே!**

**(பெரிய திருமொழி 5-8-4)**

நஞ்சு சோர்வதோர் வெஞ்சின அரவம் - ஸுமுகன் என்ற ஸர்ப்பராஜன். அஞ்சிறைப் பறவை-கருடன்.

ஸுமுகனுக்கு கருடனால் வந்த பயத்தைப் போக்கி ரக்ஷித்தாற் போல் எனக்கு யமபடர்களால் வரும் ஆபத்தைப் போக்கியருள வேண்டும் என்று திருமங்கையாழ்வார் ப்ரார்த்திக்கிறார் இதில்.

இதில் எம்பெருமானுடைய சாதுர்யத்தை - ஸாமர்த்யத்தை - பெரியவாச்சான்பிள்ளை மிகச் சாதுர்யமாகக் காட்டுகிறார்.

கருடன் தன்னைக் கொன்று உண்ண வந்தபோது இந்த ஸுமுகன் அவனுடன் எதிர்த்து சண்டை போடவில்லை, இவனுக்கு அஞ்சி 'எம்பெருமானை' விட்டு வேறு எவரையும் சரணாகப் பற்றவில்லை. தன்னிடமே தேடி வந்தானே! என்று எம்பெருமான் திருவுள்ளம் உருகிற்றாம். இதை நினைத்து இந்த ஸுமுகனைக் காப்பாற்றும்படிச் சொன்னானாம் எம்பெரு மான். இதுதான் மிக்க சாதுர்யத்தை விளக்குவதாகும்.

ஸுமுகன் கருடனிடமிருந்து தன்னைக் காப்பாற்ற வேண்டும் என்று எம்பெருமானைத் தானே சரணம் அடைந்தான். ஆகை

யால் எம்பெருமான் தானே ரக்ஷிக்க வேண்டும். பின் ஏன் கருடனிடம் தந்து இவனை ரக்ஷிக்கும்படிச் சொல்ல வேண்டும்? எம்பெருமான் ஸுமுகனை ரக்ஷிக்க அஶக்தனா? என்ற கேள்வி ஒன்று இங்கு எழும். இதற்குப்பதில் சொல்லும் முறையில் தான் பெரியவாச்சான் பிள்ளை அத்யத்புதமாக விளக்கம் தந்தருளு கிறார். அது பின்வருமாறு:

எம்பெருமானால் ஸுமுகனை ரக்ஷிக்கமுடியும். ஆனால் எம்பெருமானே தன்னைச் சரணம் அடைந்த ஸுமுகனை ரக்ஷித்தால் கருடனுக்கு ஸுமுகனிடம் உள்ள த்வேஷம் மேலும் அதிகமாகும், எம்பெருமான் மீதும் கோபம் உண்டாகும். தனக்கு உணவாக ஸ்ருஷ்டிக்கப்பட்ட ஸுமுகன் என்ற ஸர்ப்பம் தன்னை ஏமாற்றிவிட்டு பகவானைச் சரணம் அடைந்து விட்டானே! ஆகட்டும், பார்க்கலாம். 'எப்பொழுதாவது எங்காவது தனியே இந்த ஸுமுகன் வெளியே வரமாட்டானா? அப்பொழுது பார்த்துக் கொள்ளலாம்' என்று கறுவியிருப்பான். எனக்கு உணவாக அமைந்த இந்த ஸர்ப்பனான ஸுமுகனை எப்படி எம்பெருமான் காப்பாற்றலாம்? இது எனக்குச் செய்யும் த்ரோஹம் தானே என்று எம்பெருமானிடத்திலும் கருடனுக்குக் கோபம் வர வழியுண்டு. இவற்றையெல்லாம் ஆலோசித்த எம்பெருமான் இந்த ஸுமுகனைத் தன்னிடமே வைத்துக் கொள்ளாமல் கருடனிடமே தந்து நீ இவனை ரக்ஷிக்க வேண்டும் என்று ஸுமுகனை ரக்ஷிக்க வேண்டிய பொறுப்பையும் அவனிடம் தந்துவிட்டான் .

இப்பொழுது கருடனும் "ஸர்வ ஶக்தனான எம்பெருமான் இந்த ஸுமுகனையும் ரக்ஷிக்க சக்தி வாய்ந்தவனாயிற்றே! அப்படி யிருக்க என்னையும் மதித்து இவனை ரக்ஷிக்கும் பொறுப்பை என்னிடம் தந்தானே. அவனுடைய ஆத்ம குணம் எப்படிப் பட்டது?'' என்றெல்லாம் மனம் உருகி எம்பெருமானைப் புகழ்வான். தனக்கு அடைக்கலமாகத் தந்த இந்த ஸுமுகனிடம்





கொண்டுள்ள பழைய பகைமையை (த்வேஷத்தை) விட்டு அன்பும் கொண்டு பொறுப்புடன் அவனை ரக்ஷிப்பானன்றோ? இப்படிச் செய்தது எம்பெருமான் தன்னுடைய சாதுர்யம் என்ற மஹாகுணத்தினால் தான். இந்த குணத்தை அனுபவித்ததும் கருடனுக்கு இருந்த பசியும் தொலைந்ததாம்.

மேலே காட்டிய பாசுரத்தில் பெரியவாச்சான்பிள்ளை அருளிய வாக்யங்கள் பின்வருமாறு:-

''தன்னை ப (ब) க்ஷிக்க வந்த திருவடியை (கருடனை) எதிரிடுவதும் செய்யாதே, வேறோர் இடத்தில் போவதும் செய் யாதே, தன்னை (பகவானை) ச் சரணம் புக்கான் ஸுமுகன். நம்மைச் சரணம் புகுந்த இவன் நம் (பகவான்) கீழே கிடக்கிறான்'' என்றிருக்கையன்றிக்கே பெரிய திருவடி (கருடன்) கையிலே காட்டிக் கொடுத்து அவனை இட்டிறே ரக்ஷித்தது. தான் (எம்பெருமான்) ஏறிட்டுக் கொண்டு ரக்ஷித்தாலும் அவன் (கருடன்) துணுக்குத் துணுக்கென்கை போகாதிறே.

'தானே (பகவானே) ரக்ஷிக்க வல்லனாயிருக்க நம் (கருடன்) கையிலே காட்டித் தருவதே!' என்று இவனை (ஸுமுகனை)க் கொண்ட போதே அவன் (கருடன்) பசியும் தீர்ந்தது. இனி இரு வர்க்கும் ரஷ்ய-ரக்ஷக பாவமிறே உள்ளது. பாத்ய பாதக ஸம்பந்தம் போய்த்தே.

மிக்க பொருள் ஆழம் கொண்டவை இந்த ஸ்ரீ ஸூக்திகள்.

இப்படித் தன்னைச் சரணம் அடைந்த ஸுமுகனை எம்பெருமான் கருடனிடம் தந்து ரக்ஷிக்கும்படிச் சொன்னதால் ஏற்கெனவே கருடனுக்கும் ஸுமுகனுக்கும் இருந்த விரோத மனப்பான்மை-பாத்ய பாதக ஸம்பந்தம் ஒழிந்தது. இனி

அந்யோந்யம் ரக்ஷ்ய ரக்ஷகத் தன்மை அதாவது ஸுமுகன் ரக்ஷிக்கப்படவேண்டியவன் தான் இவனுக்கு ரக்ஷகன் என்ற ஸம்பந்தம் (உறவு) உண்டாயிற்று.

லோகாநுபவத்திற்கு ஒட்டிய ஸ்ரீஸூக்திகள் இவை. உலகிலும் க்ருஹஸ்தர்களில் சிலர் தளிகைக்கு (சமையலுக்கு) வேண்டிய உப்பு, பருப்பு முதலான ஸாமான்களை நிறைய வாங்கி அத்தனையையும் மனைவியின் கையில் கொடாமல் தாங்களே பூட்டி வைத்துக் கொள்வர். மனைவி நிறைய செலவழித்து விடுவாள் என்ற அவநம்பிக்கையே தான் இதற்குக் காரணம். அன்றாடம் தளிகைக்கு வேண்டிய பருப்பு கடுகு, மிளகாய் முதலியவற்றை எண்ணித் தருவார்கள். இப்படியிருக்கும் பர்த்தாவினிடம் அவனுடைய பத்னி எப்படி இருப்பாள்? அவரே இவற்றை ரக்ஷிக்கிறாரே! என்னிடம் தந்தால் அதிகம் செலவழிந்து விடும் என்ற எண்ணம் தானே இதற்குக் காரணம் என்று அவரிடம் கோபம் கொள்வாள். செட்டாகக் கொடுத்த சாமான்களை வீண் அடித்துவிட்டு மேலும் சாமான்களை அவனிடமிருந்து கேட்டு வாங்கி நிறைய செலவுகளும் செய்வாள். பர்த்தாவினிடம் கோபமும் சாமான்களின் வீணன செலவும் தான் ஏற்படும். புத்திசாலியான பர்த்தாக்கள் சாமான்களை வாங்கி வந்ததும் மனைவியைக் கூப்பிட்டு இவற்றை நீ வாங்கி வைத்துக் கொள். நன்றாகக் காப்பாற்றி வைத்துக் கொண்டு தளிகைக்கு வேண்டிய அளவு செலவழித்துக் கொள் என்று அவள் பொறுப்பிலேயே விட்டு விடுவார்கள். இப்படிச் செய்தால் மனைவிக்கு அந்தச் சாமான்களைக் காப்பதில் பொறுப்புணர்ச்சி ஏற்படும். அதனால் அவளே சாமான்களைச் சிக்கனமாகச் செலவு செய்வாள், தன் பர்த்தாவினிடம் பெருமதிப்பும் கொள்ளுவாள். இப்படிச் செய்யும் புருஷர்கள் சதுரர்கள் ஆவார்.





இப்படி இந்த ஸுமுகன் வரலாற்றையும் உணர்த்தி ஸ்வாமி ஸ்ரீதேசிகன் எம்பெருமானுடைய சாதுர்யத்தை நன்கு விவரித்துள்ளார்.

**चातुर्यं गुरवः पूर्वे चातुर्येण वदन्ति हि ।**
**प्रकाश्य वयमप्येतत् अभूम चतुराः खलु ॥**

சாதுர்யம் குரவ: பூர்வே சாதுர்யேண வதந்தி ஹி ।
ப்ரகாஶ்ய வயமப்யேதத் அபூம சதுரா: கலு ॥

---

# 9. ஸ்தைர்யம், தைர்யம்

**शरण्यस्य गुणावेतौ स्थैर्यं धीरत्वमेव च ।**
**प्रत्ययाय प्रपित्सूनां कल्पेते इति दर्शितौ ॥**
**विस्तरेणात्र पुर्वैस्तु प्रमाणैर्बहुभिस्सह ।**
**वयमेतदभिज्ञाय निर्भरा आस्महे सदा ॥**

ஶரண்யஸ்ய குணாவேதௌ ஸ்தைர்யம் தீரத்வமேவ ச ।
ப்ரத்யயாய ப்ரபித்ஸூநாம் கல்பேதே இதி தர்ஶிதௌ ॥
விஸ்தரேணாத்ர பூர்வைஸ்து ப்ரமாணைர் பஹுபிஸ்ஸஹ ।
வயமேததபிஜ்ஞாய நிர்பரா: ஆஸ்மஹே ஸதா ॥

சரணாகதிகத்யத்தில் சாதுர்யம் என்ற மஹாகுணத்திற்குப் பின் இடம் பெறுவன ஸ்தைர்யம், தைர்யம் என்ற குணங்கள். இவற்றுள் 'ஸ்தைர்யம்' என்ற குணத்தை இங்கு இப்பொழுது அனுபவிப்போம்.

1. ஸ்ரீ ஶ்ருதப்ரகாஶிகாசார்யர் **स्थैर्यम्-'न त्यजेयं कथंचन' इत्यभि - सन्धिमत्त्वम् ।** ('ந த்யஜேயம் கதஞ்சந' இத்யபிஸந்தி மத்த்வம்)
2. பெரியவாச்சான் பிள்ளை: **स्थैर्यम्-प्रत्यूहशतैरपि आश्रित रक्षणप्रतिज्ञाभङ्गं न करोति । 'न त्यजेयं कथंचन' इति ।** (ப்ரத்யூஹ ஶதைரபி ஆஶ்ரிதரக்ஷண ப்ரதிஜ்ஞா பங்கம் ந கரோதி 'நத்யஜேயம் கதஞ்ச ந' இதி.
3. ஸ்வாமி ஸ்ரீதேசிகன் -**स्थैर्यम् - शरणागतसङ्ग्रहे दोषप्रदर्शकैः अन्तरङ्गैरप्यकम्पनीयत्वम् । तथा चाह ''मित्रभावेन सम्प्राप्तं न त्यजेयं कथंचन'' इत्यादि ।** (ஸ்தைர்யம்-ஶரணாகதஸங்க்ரஹே தோஷப்ரதர்ஶகை: அந்தரங்கைரப்யகம்பநீயத்வம். ததா சாஹ-'மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந' இத்யாதி''





இந்த உரை மூன்றிலும் ஒரே விஷயமே விளக்கப்பட்டிருப்பினும் ஒவ்வொரு விளக்கத்திலும் விசேஷம் உள்ளது. அதை இங்கே முறையே அனுபவிப்போம்.

ஸ்ரீமத்ராமாயணத்தில் ஸ்ரீவிபீஷணஶரணாகதிஸமயத்தில் ஸ்ரீசக்ரவர்த்தித் திருமகன் அருளிச் செய்த ஶ்லோகம் ஒன்று மிகவும் ப்ரஸித்தமானது உள்ளது.

**'मित्रभावेन सम्प्राप्तं न त्यजेयं कथञ्चन ।**
**दोषो यद्यपि तस्य स्यात् सतामेतदगर्हितम् ॥'**

மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந ।
தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாம் ஏததகர்ஹிதம் ॥

இதுவே அந்த ஶ்லோகம்.

இதனால் ஆஶ்ரிதர்களை ரக்ஷிப்பதில் எம்பெருமானுக்கு உள்ள ஸ்தைர்யத்தை - ஸ்திரமாயிருக்கும் தன்மையை நாம் நன்கு அறியமுடிகிறது. தோஷங்கள் உள்ளவனாயினும் நட்பு பூண்டு ஒருவன் என்னிடம் வந்தானாகில் அவனை ஒரு போதும் நான் கைவிடமாட்டேன். இப்படி தோஷம் உள்ளவனை அங்கீகரிப்பது பற்றி மஹான்கள் புகழ்வார்களேயன்றி இகழமாட்டார்கள் என்று, விபீஷணனை அங்கீகரிக்கக்கூடாது என்று தடுக்கும் ஸுக்ரீவனை நோக்கி, ஸ்ரீராமன் தன் ஸங்கல்பத்தை வெளியிடுகிறான்.

இந்த ஶ்லோகத்தின் பூர்வார்தத்தை (முன்பாதியை) மூன்று உரையாசிரியர்களுமே கையாளுகின்றனர். ஆயினும் விவரிக்கும் வகையில் ஒவ்வொன்றிலும் விசேஷம் உள்ளது.

'ஆஶ்ரிதர்களை ஒருக்காலும் கைவிடமாட்டேன்' என்று எம்பெருமான் கொண்டுள்ள உறுதி வாய்ந்த உள்ளக் கருத்

துக்குத்தான் 'ஸ்தைர்யம்' என்று பெயர் என்பது ஶ்ருதப்ரகாஶிகா-சார்யர் தரும் விளக்கம் ஆகும். 'ந த்யஜேயம்' என்ற ஶ்லோகப் பகுதியைக் காட்டித் தான் இதை விளக்குகிறார்.

'நூற்றுக்கணக்கான இடையூறுகள் ஏற்பட்டபோதும் ஆஶ்ரிதர்களை ரக்ஷிப்பதாகச் செய்த ப்ரதிஜ்ஞையை பங்கப்படுத்தாதிருத்தல் அதாவது கைவிடாதிருத்தலே ஸ்தைர்யமாகும்'. இந்த குணத்தை 'ந த்யஜேயம்' என்று கூறிய எம்பெருமானிடத்தில் காணலாம் என்கிறார் பெரியவாச்சான் பிள்ளை.

'ஆஶ்ரிதர்களை ஒருக்காலும் கை விடேன்' என்ற உள்ளத்தின் உறுதிப்பாடே ஸ்தைர்யம் என்றார் ஶ்ருதப்ரகாஶிகாசார்யர்.

நூற்றுக்கணக்கான இடையூறுகள் ஏற்பட்டாலும் ஆஶ்ரிதர்களைக் காப்பதாகக் கொண்ட ப்ரதிஜ்ஞையைக் கை விடாதிருத்தல் ஸ்தைர்யம் ஆகும் என்கிறார் பெரியவாச்சான் பிள்ளை.

'ஆஶ்ரிதர்களைக் கைவிடேன்' என்ற உறுதி யாவரிடத்திலும் இருக்கும். ஆனால் இதில் ஏதாவது சிறிதேனும் இடையூறு ஏற்பட்டால் தன்னுடைய உறுதியை-அபிஸந்தியைக் - கைவிட்டு விடுவார்கள் பலர். அந்த நிலையிலும் ஆஶ்ரிதர்களைக் காப்பதாகக் கொண்ட ப்ரதிஜ்ஞையைக் கை விடாதிருத்தலே ஸ்தைர்யமாகும். இதை எம்பெருமானிடத்தில் தான் காணலாம் என்ற திருவுள்ளத்தினால் பெரியவாச்சான்பிள்ளை ப்ரத்யூஹ ஶதைரபி - நூற்றுக்கணக்கான இடையூறுகள் ஏற்பட்டாலும் என்று சிறப்பித்துக் கூறியருளினார்.

இந்த இடையூறுகள் பிறர்களால் ஏற்பட்டால் அவர்களை லக்ஷ்யம் செய்யாமல் (பொருட்படுத்தாமல்) அந்த இடையூறுகளிடையே ஆஶ்ரிதரக்ஷணத்தைச் செய்து விடலாம். ஆனால் மிகவும் அந்தரங்கமாய் இருப்பவர்களால் அதாவது மிகவும் வேண்டியவர்களால் இடையூறுகள் நேர்ந்தால் வேண்டியவர்





களை விடமுடியாமல் கடைசியாகத் தான் ஆஶ்ரிதர்களை ரக்ஷிப்பதாகக் கொண்ட ப்ரதிஜ்ஞையைக் கைவிட்டு விடுவார்கள் பலர். இப்படியிருக்கக் கூடாது. நூற்றுக்கணக்கான இடையூறுகள் ஏற்பட்டாலும் அதிலும் அந்தரங்கர்களாயிருப்பவர், ஶரணாகதனை ரக்ஷிப்பதில் உள்ள தோஷங்களைக் கண்டு எடுத்துச் சொல்லி, சரணாகதனை ரக்ஷிக்கக்கூடாது என்று தடுத்தாலும் தன் உறுதியிலிருந்து- தன் நிலைமையிலிருந்து குலையாதிருக்கையே ஸ்தைர்யம் ஆகும் என்று ஸ்வாமி ஸ்ரீதேசிகன் வ்யாக்யானம் செய்து காட்டுகிறார்.

ஸ்ரீவிபீஷணாழ்வான் ஸ்ரீ ராகவனை ஶரணம் அடைய வருகிறான். அப்பொழுது ஸுக்ரீவன் முதலானோர் அவனைச் சேர்த்துக் கொண்டால் பற்பல தீங்குகள் ஏற்படும்: ஆகவே அவனைச் சேர்த்துக் கொள்ளவே கூடாது என்று தோஷங்களை எடுத்துரைத்துத் தடுத்தனர். ஸுக்ரீவன் ஸ்ரீராமனுக்கு மிகவும் அந்தரங்கன்-வேண்டியவன். ஸீதையைக் காட்டிலும் அவனைத் தான் ஸ்ரீராமன் அதிகமாக நேசித்தான். அங்கதன் முதலானோரும் ஸ்ரீ ராமனுக்கு அந்தரங்கர்களே. இப்படிப்பட்டவர்கள் ஸ்ரீவிபீஷணாழ்வானை அங்கீகரிக்கக்கூடாது என்று தடுத்தார்கள். என்ன ஆயிற்று? அவனைச் சேர்த்துக் கொள்ளத்தான் வேண்டும் என்ற நிலையிலிருந்து ஸ்ரீராமன் சற்றும் பின் வாங்கவேயில்லை. நிலை குலையாமலே நின்றான். ''மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந'' நண்பனாக வந்த அவனை ஒருக்காலும் கைவிட மாட்டேன் உங்களை விட்டாலும் விடுவேன். அவனை ஒரு போதும் விடமாட்டேன்'' என்று தன்நிலையிலேயே தன்னுடைய உறுதியிலேயே நின்றான் ஸ்ரீராமன். இது தான் ஸ்தைர்யம் எனப்படுகிறது என்கிறார் ஸ்வாமி ஸ்ரீ தேசிகன்.

எம்பெருமானுடைய இந்த ஸ்திரத்தன்மையைப் பெரியவாச்சான் பிள்ளை பெரிய திருமொழி (௫-8-5) 'கல்லார் மதிள் சூழ்'

என்ற பாசுரத்தில் 'செல்வவீடணற்கு வேறாய நல்லானை' என்ற வாக்யத்திற்கு வ்யாக்யானம் செய்யும் பொழுது 'மஹாராஜர் உள்ளிட்டார் விபீஷணனை நிரோதிக்கப் பெருமாளும் அவனைக் கைக்கொள்வதைத் தவிரோம் என்ன, ஆகில் கிஷ்கிந்தையில் பரிகரங்கள் விடை கொள்கிறதென்ன; வேணுமாகில் அது செய்கிறது, இது தவிரோம்' என்று விபீஷணனிடம் விஶேஷித்து ஸங்கத்தைப் பண்ணினவன்' என்று அருளிச் செய்துள்ளார்.

விபீஷணனைச் சேர்த்துக் கொள்ளக்கூடாது என்றார்கள் மஹாராஜர் (ஸுக்ரீவன்) முதலானோர். ஸ்ரீசக்ரவர்த்தித் திருமகனும் 'விபீஷணாழ்வானைக் கைக் கொள்வதை (அங்கீகரிப்பதை) ஒரு போதும் கைவிட மாட்டேன். அவனை அங்கீகரிக்கத் தான் செய்வேன்' என்றான். இதைக் கேட்ட ஸுக்ரீவன் மிகவும் கோபம் கொண்டு அப்படியானால், அதாவது எங்கள் வார்த்தையைக் கேளாமல் எங்களை அலக்ஷ்யம் செய்து, நாங்கள் கூடாது என்று தடுக்கும் விபீஷணனைச் சேர்த்துக் கொள்வதானால் நாங்கள் எதற்காக இங்கு இருக்க வேண்டும்? எல்லாக் குரங்குகளையும் அழைத்துக் கொண்டு கிஷ்கிந்தைக்குச் சென்று விடுகிறேன் என்றான். இதைக் கேட்ட ஸ்ரீசக்ரவர்த்தித் திருமகன் தன் உறுதியிலிருந்து கொஞ்சமும் அசையவில்லை. ஸுக்ரீவ மஹாராஜரே! அப்படி நீங்கள் அனைவரும் கிஷ்கிந்தைக்குச் செல்வதானால் சென்று விடுங்கள். நான் விபீஷணனை வைத்துக் கொண்டே எல்லாக் கார்யங்களையும் செய்து கொள்கிறேன்' என்று ஸுக்ரீவன் கிஷ்கிந்தை செல்வதை இசைந்து விட்டான் ஸ்ரீராமன். இப்படி எம்பெருமான் ஸ்ரீராமன் ஶரணாகதனான விபீஷணாழ்வானைக் கைக்கொள்வதில் ஸ்திரனாக இருப்பதை அறிந்த ஸுக்ரீவன் உடனே தன் பிடிவாதத்தை விட்டு 'விபீஷணன் மிக நல்லவன். பல விதங்களில் அவனைச் சோதித்து அவன் நல்லவன் என்றே அறிந்துள்ளேன். எங்களோடு ஒப்பாக, எங்களுக்கும் மேலாக அவன் எங்கள் கோஷ்டியில் சேரட்டும்' என்று இசைந்





தான். இதுதான் ஸ்தைர்யத்திற்கு ஸ்வாமி ஸ்ரீதேசிகன் தரும் விளக்கம்.

ஸ்ரீ ஸஹஸ்ரநாமத்தில் **'स्थिरः'** (ஸ்திர:) என்றதொரு திருநாமம் உள்ளது. ஸ்தைர்யம் என்ற குணம் உடையவன் எம்பெருமான். ஆதலால் ஸ்திரன் எனப்படுகிறான் என்கிறது ஸ்ரீஸஹஸ்ரநாமம். **'अमृत्युः सर्वदृक् सिंहः'** (அம்ருத்யு: ஸர்வத்ருக் ஸிம்ஹ:) என்று ஆரம்பித்து **सुरारिहा** (ஸுராரிஹா) என்றவரை ஸ்ரீந்ருஸிம்ஹாவதாரத்தைக் குறிக்கும் திருநாமங்கள் என்று ஸ்ரீபட்டர் அருளியுள்ளார். இவற்றின் நடுவில் உள்ள 'ஸ்திர:' என்ற திருநாமமும் ஸ்ரீ ந்ருஸிம்ஹனைத் தான் குறிக்கிறது. இதற்குப் பட்டர் தரும் விளக்கமும் மிக அழகியதாகும். அதாவது:-

**तत्सन्धाने तदपचारदुर्विचाल्यत्वात् स्थिरः** (தத்ஸந்தாநே ததபசார துர்விசால்யத்வாத் ஸ்திர:) என்பதாகும். இதன் பொருளாவது: எம்பெருமானுடன் ஸந்தாநம் - உடன்படிக்கை - அதாவது ஶரணாகதி செய்துவிட்டால் - பிறகு அவனிடத்தில் அபசாரப் பட்டாலும் ஶரணாகதனை ஒரு போதும் கைவிட மாட்டேன் என்ற தன் கொள்கையிலிருந்து நழுவாதவன் என்பதேயாகும்.

ஸ்வாமி நம்மாழ்வார் திருவாட்டாற்று எம்பெருமான் விஷயத்தில் இந்த ஸ்தைர்யத்தை அநுபவிக்கிறார். திரு வாட்டாறு எம்பெருமான் ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிம்ஹன் அடியனான என் நெஞ்சில் வந்து புகுந்து பின் 'நிலைபேரான் என் நெஞ்சத்து எப்பொழுதும்' என்கிறார் (10-6-6) .

ஆக ஶரணாகதனை ஏற்றுக் கொள்ளக் கூடாது என்று மிகவும் வேண்டியவர்கள் தடுத்தாலும் தன் நிலையிலிருந்து அசையாமலிருக்கை-ஸ்தைர்யம், என்று ஸ்தைர்யத்திற்கு ஸ்வாமி ஸ்ரீதேசிகன் அருளிய விளக்கம். இதற்கு ப்ரமாணம்.

'மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந' என்ற ஸ்ரீராமாயண ஶ்லோகம்.

இதுவரையில் கூறப்பட்டுள்ள எம்பெருமானுடைய குணங்களில் ஸௌஶீல்யம், வாத்ஸல்யம், மார்தவம், ஆர்ஜவம், ஸௌஹார்தம், ஸாம்யம், காருண்யம், மாதுர்யம், காம்பீர்யம், ஔதார்யம், சாதுர்யம், ஸ்தைர்யம் ஆகிய பன்னிரண்டு குணங்கள் பக்தர்களை ரக்ஷிப்பதில் பயன்படக் கூடியனவாகும் என்கிறார் ஶ்ருதப்ரகாஶிகாசார்யர்.

இனி அடுத்துள்ள தைர்யம் **(धैर्यम्)** என்ற குணத்தை அனுபவிப்போம். தைர்யம்-ஶௌர்யம் **(शौर्यम्)** பராக்ரமம் என்ற மூன்று குணங்கள் பக்தர்களை ரக்ஷிப்பதின் வகையான விரோதிகளை ஒழிப்பதில் பயன்படக்கூடியனவாகும்.

விரும்பியதைக் கொடுப்பதும்,விரோதிகளை ஒழிப்பதும் ஆகிய இரண்டு அம்ஶங்களும் சேர்ந்தால் தான் ரக்ஷணம் (ரக்ஷித்தல்) முழுமை பெற்றதாகும். கீழே கூறிய பன்னிரண்டு குணங்கள் பக்தர்கள் விரும்பியதைக் கொடுப்பதில் பயன்படும். தைர்யம் முதலான மூன்று குணங்கள் விரோதிகளை ஒழிப்பதில் பயன் படும் என்ற பாகுபாட்டை உணரவேண்டும்.

தைர்யத்திற்கு ஶ்ருதப்ரகாஶிகாசார்யர் தரும் விளக்கமாவது:-

**धैर्यम्-स्वस्मिन् प्रतिपक्षागमे सति अविकृतत्वम् ।**

**यथा-''जटाचूडग्रन्थिं दृढयति'' इति ।**

அதாவது தன்னை நோக்கி எதிரிகள் வந்தபோதும் 'பயம்' முதலான மாறுபாடில்லாதிருக்கை தைர்யம். இவ்விஷயத்தில் ப்ரமாண ஶ்லோகம் இதிஹாஸ-புராணங்களில் ஒன்றிலும் கிடைக்கவில்லை. ஆகவே நாடகத்திலிருந்து ஒரு ஶ்லோகத்தை ப்ரமாணமாகக் காட்டியுள்ளார் இங்கு.





அந்த ஶ்லோகம் பின்வருமாறு:

**कपोले जानक्याः करिकलभदन्तद्युतिमुषि**
**स्मरस्मेरं गण्डोड्डमर पुलकं वक्त्रकमलम् ।**
**मुहुः पश्यन् शृण्वन् रजनिचरसेनाकलकलम्**
**जटाचूडग्रन्थिं दृढयति (रचयति) रघूणां परिबृढः ॥**

கபோலே ஜாநக்யா: கரிகலபதந்தத்யுதிமுஷி
ஸ்மரஸ்மேரம் கண்டோடுமரபுலகம் வக்த்ரகமலம் ।

முஹு: பஶ்யந் ஶ்ருண்வந் ரஜநிசர ஸேநாகலகலம்
ஜடாசூடக்ரந்திம் த்ருடயதி (ரசயதி) ரகூணாம் பரிப்ருட:॥

என்ற இந்த ஶ்லோகம் ஹநுமந் நாடகத்தில் உள்ளது.

இதன் அர்த்தம் -

சூர்ப்பணகையின் காது மூக்குகளை அறுத்தான் ஸ்ரீராமன். இதன் விளைவாக கரன் தூஷணன் முதலாகப் பதினான்காயிரம் ராக்ஷஸர்களும் திரண்டு ஸ்ரீராமனுடன் போர் செய்ய வந்து கூச்சலிடுகின்றனர். இப்படி இவர்கள் சண்டை செய்ய வருவார்கள் என்பதை ஸ்ரீராமன் சற்றும் எதிர்பார்க்கவில்லை. ஆயினும் இவர்களைக் கண்டு ஸ்ரீராமன் கலங்கவுமில்லை. எப்பொழுதும் போலவே இருந்தான். உடனே இவர்களுடன் போருக்கு ஸித்தனாகிறான். சடையில் உள்ள முடிகளை யெல்லாம் சரி செய்து தூக்கிக் கட்டிக் கொள்கிறான். இவ்வாறு அலங்காரம் செய்து கொள்வதற்குப் பெரிய கண்ணாடி ஒன்று இருந்தால் ஸௌகர்யமாயிருக்கும். மயிர்களை ஒன்று விடாமல் தூக்கிக் கட்டிக்கொள்வது எளிதாயிருக்கும். காட்டில் கண்ணாடி ஏது? ஆயினும் கண்ணாடி ஒன்று கிடைத்து விடுகிறது. அது தான் ஸீதையின் கன்னம் (கபோலம்).

ஸ்ரீராமன் கூடவே இருப்பதால் அவள் புஷ்டியுடன் இருக்கிறாள். ஆகையால் கன்னங்கள் இரண்டும் சுருங்காமல் சதைப் பற்றுடன் பளிச்சென்று விளங்குகின்றன. யானையின் தந்தத்தைப் பிளந்து எடுத்தாற் போல் ப்ரகாசிக்கின்றது இவளுடைய தாடை. இதில் ஸ்ரீ ராமன் தன்னுடைய முகத்தைப் பார்க்கிறான். புன்முறுவலும் புளகமும் கொண்டு தாமரை போல் விளங்குகின்றது இவனுடைய முகம். இதை ஸீதையின் தாடைப் புறத்திலே அடிக்கடி பார்க்கிறான். காதுகளாலே ராக்ஷஸர்களின் கூச்சலையும் கேட்கிறான். இவ்வாறு செய்து கொண்டு தன் ஜடையின் மயிர்களின் முடியை இறுக்கிக் கட்டிக் கொள்கிறான் ரகுகுல திலகனான ஸ்ரீராமன்.

கீழே தைர்யத்திற்குத் தந்த விளக்கத்தை இந்த ஶ்லோகத்தில் நன்கு காணலாம்.

எதிரிகள் தன்னுடன் போரிடவந்தபோதும் மாறுபடாமலிருக்கை-தைர்யம். இது தான் இந்த தைர்யத்திற்கு விளக்கம் !

சில இடங்களில், மேற்கோளாகக் காட்டும் ஶ்லோகத்தை முழுமையாகக் காட்டுவார்கள் உரையாசிரியர்கள். இல்லையேல் முதலில் உள்ள ஓரிருபதங்களைக் காட்டி விடுவார்கள். இங்கு முழுவதுமாகவோ, முதலில் உள்ள பதங்களையோ எடுத்துக் காட்டாமல் ஶ்ருதப்ரகாஶிகா சார்யர் ஶ்லோகத்தின் கடைசியில் உள்ள அதாவது நான்கா வது பாதத்தில் உள்ள சில பதங்களைக் காட்டி இந்த ஶ்லோகத்தைக் குறிப்பிடுகிறார்.

ஸ்வாமி ஸ்ரீதேசிகன் இவர் வழியிலேயே சென்று மேலும் சில சேர்த்து தைர்யத்தை விளக்கி-இதற்கு ப்ரமாணமாக இந்த ஶ்லோகத்தையே காட்டுகிறார். அப்பொழுது 'கபோலே ஜாநக்யா:' என்ற முதல் பாதத்தில் உள்ள இரண்டு பதங்களை மட்டும் எடுத்து இந்த ஶ்லோகத்தைக் குறிப்பிடுகிறார். ஶ்ருதப்ரகாஶிகாசார்யர் ஸ்வாமி ஸ்ரீதேசிகன் இருவருமே இந்த ஶ்லோகத்தை ப்ரமாண





மாகக் காட்டுகிறார்கள். ஶ்ருதப்ரகா ஶிகாசார்யர்- கடைசிப் பதங்களையும் ஸ்வாமி ஸ்ரீதேசிகன் முதலில் உள்ள பதங்களையும் கொண்டு எடுத்துக் காட்டுகிறார்கள் இந்த ஶ்லோகத்தை.

பெரியவாச்சான்பிள்ளை பெரும்பாலும் ஶ்ருதப்ரகா ஶிகாசார்யர் காட்டும் விளக்கத்தை அப்படியே பல இடங்களில் பின்பற்றுபவராயிருந்தும் இந்த இடத்தில் அதாவது தைர்யத்திற்கு விளக்கம் தருமிடத்தில் முற்றிலும் வேறாகவே சென்று விடுகிறார். முன்பு சொன்ன 'ஸ்தைர்யம்' என்ற குணத்திற்குக் காரணமாக இந்த தைர்யத்தை விளக்குகிறார். அதாவது 'அதுக்கு அடியான நெஞ்சின் திண்மை' என்பதாகும். அதுக்கு- ஸ்தைர்யத்திற்கு- ஆஶ்ரிதர்களை ரக்ஷிப்பதாகக் கொண்ட ப்ரதிஜ்ஞையைக் கைவிடாமலிருக்கைக்குக் - காரணமான மனஉறுதி தான் தைர்யம் என்கிறார் இவர்.

தான் கொண்ட ப்ரதிஜ்ஞையைக் கைவிடாமல் நிறைவேற்றும் போது பல இடையூறுகள் நேரிடும். அவற்றைக் கண்டு அஞ்சாமலும் நிலைகுலையாமலும் இருக்க வேண்டும். அதற்கு இன்றியமையாதது மனஉறுதியே யாம். ஆகவே ஸ்தைர்யத்தை நிலைப்படுத்த உதவுவது இந்த தைர்யம்.

ஸௌஶீல்யம் முதல் இது வரையிலான பதின்மூன்று குணங்கள் பக்தரக்ஷணத்திற்குப் பயன்படும். ஶௌர்யம் **(शौर्यम्)** பராக்ரமம் என்ற அடுத்த இரண்டு குணங்கள் பக்தர்களின் விரோதிகளை அழிக்க உதவும் என்ற பாகுபாடு பெரியவாச்சான் பிள்ளை காட்டியதாகும்.

ஸ்வாமி ஸ்ரீதேசிகன் இந்த மஹாகுணத்தை பல வகைகளில் விளக்கிக் காட்டுகிறார்.

**धैर्यम्= 'अप्यहं जीवितं जह्यां त्वां वा सीते सलक्ष्मणाम्' । इत्यादिषु- अत्यन्त-अभिमत वियोग प्रसङ्गेऽप्यभिन्नप्रतिज्ञत्वम् ।**

भीष्माद्याश्रितप्रतिज्ञारक्षणाय स्वप्रतिज्ञाभङ्गेऽपि एतादृश प्रतिज्ञासिद्धिः। अत एव-

'द्यौः पतेत् पृथिवी शीर्येत् हिमवान् शकलीभवेत्।

शुष्येत् तोयनिधिः कृष्णे! न मे मोघं वचो भवेत्॥'

इत्यादिभिरविरोधः।

व्यत्ययेन वा स्थैर्यधैर्ये व्यातन्ये।

अतर्कितोपनतेऽपि बलवति प्रतिपक्षे सावज्ञ-दृढचित्तत्वं वा धैर्यम्। यथाहुः 'कपोले जानक्याः' इत्यादि।

जीवत्यपि महाबले रावणे सागरेऽप्यलङ्घिते विभीषणमभिषिञ्चता दर्शितोऽयं गुणः।

மிக வேண்டியவர்களைப் பிரிய நேர்ந்தாலும் தான்மேற் கொண்ட ப்ரதிஜ்ஞையைக் கைவிடாமலிருக்கை தைர்யம். ஸ்ரீ ராமாவதாரத்தில் எம்பெருமானே 'அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம்' என்ற ஶ்லோகத்தினால் என் ப்ராணனையே விட நேர்ந்தாலும், ப்ராணனைவிடச் சிறந்தவளான சீதையை விட நேர்ந்தாலும், இவளை விட வேண்டியவனான தம்பி லக்ஷ்மணனையே விட நேர்ந்தாலும் நான் மேற் கொண்டதான 'ஆஶ்ரயித்தவர்களைக் காப்பாற்றுவேன்' என்ற ப்ரதிஜ்ஞையை ஒரு நாளும் கைவிட மாட்டேன். அதிலும் ப்ராஹ்மணர்களுக்காகச் சொன்ன ப்ரதிஜ் ஞையை ஒரு போதும் விட மாட்டேன்' என்று இந்த தைர்யத்தை வெளியிட்டான். மிகமிக வேண்டியவர்களை விட நேர்ந்தாலும் மேற்கொண்ட ப்ரதிஜ்ஞையை விடாமலிருக்கை என்ற தைர்யம் இதனால் எம்பெருமானிடம் வெளிப்படை.

இதில் ஒரு கேள்வி:-

பாரத யுத்தத்தில் கண்ணன் 'தான் ஆயுதம் எடுப்பதில்லை





என்று ப்ரதிஜ்ஞை செய்தானே! முடிவில் அது என்ன ஆயிற்று? கையில் சக்ராயுதம் எடுத்துக் கொண்டு ஸ்ரீபீஷ்மரை வதம் செய்ய முற்பட்டானே. இதனால் ஆயுதம் எடுக்கமாட்டேன் என்ற எம்பெருமானுடைய ப்ரதிஜ்ஞைக்கு பங்கம் ஏற்பட்டு விட்ட தன்றோ! இது மிகவும் ப்ரஸித்தமாயிற்றே. இப்படி யிருக்க பங்கப்படாத ப்ரதிஜ்ஞையை உடையவன் என்பது எப்படி நிலைக்கும்? என்பதே அந்தக் கேள்வி.

இதற்குப் பதில்:

இந்தக் கேள்வியை ஸ்வாமி ஸ்ரீதேசிகனே எடுத்துக் காட்டி இதற்கு உரிய ஸமாதானத்தையும் காட்டியருளுகிறார். சுயநலத் திற்காக, அதாவது தன்னுடைய லாபத்திற்காக, தான் கொண்ட ப்ரதிஜ்ஞையை விட்டால் தான் தோஷம். இங்கு 'ஆயுதம் எடுக்க மாட்டேன்' என்ற ஸ்ரீகிருஷ்ணன் இதற்கு மாறாகத் தான் கையில் ஆயுதம் எடுத்தது தன் பக்தரான ஸ்ரீ பீஷ்மாசார்யருடைய ப்ரதிஜ் ஞையை ஸத்யமாக்குவதற்காகத் தான். அதாவது 'ஆயுதம் எடுக்க மாட்டேன் என்ற ஸ்ரீக்ருஷ்ணனை நான் ஆயுதம் எடுக்கும்படிப் பண்ணுகிறேன்' என்று ஸ்ரீபீஷ்மர் ப்ரதிஜ்ஞை செய்திருந்தார். இதை நிறைவேற்றுவதற்காகத் தான் ஸ்ரீக்ருஷ்ணன் தன் திருக்கையினால் ஆயுதம் எடுத்தது.

தன் ப்ரதிஜ்ஞையைக் குலைக்காமல்-கைவிடாமல் பக்தர் களை ரக்ஷிப்பது ஒரு விதம். இது ஸ்ரீராமாவதாரத்தில் நடந்தது.

தன்னுடைய ப்ரதிஜ்ஞையைக் கைவிட்டு பக்தர்கள் செய்த ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றி அவர்களை ரக்ஷிப்பது மற்றொரு வகை. இது ஸ்ரீக்ருஷ்ணவதாரத்தில்.

இந்த ஸ்ரீ க்ருஷ்ணனே த்ரௌபதியிடம் கூறுகிறான் -

'அம்மா! த்ரௌபதியே! ஆஶ்ரயித்தவர்களை நான் ஒரு போதும் கைவிடமாட்டேன், இது ஸத்யம்' என்றான். 'நீ ஏலாப் பொய்கள் உரைப்பவனாயிற்றே, உன் வார்த்தையை நம்பலாமா'

என்று த்ரௌபதி கேட்க, ஸ்ரீ க்ருஷ்ணனும் 'த்ரௌபதியே! என் வார்த்தையை நம்பு. என் வார்த்தை- ப்ரதிஜ்ஞை ஒருக்காலும் பொய்யாகாது. அந்தரிக்ஷ லோகமே கீழே விழுந்தாலும் விழும், பூமியானது வெடித்தாலும் வெடிக்கும்; இமயமலை தூள்தூளாகச் சிதறினாலும் சிறதலாம்; ஸமுத்ரம் வற்றினாலும் வற்றலாம். ஆனால் என் வார்த்தை ஒரு நாளும் பொய்யாகாது - வீணாகாது' என்றான்.

ஸ்வய நலத்திற்காகத் தன் ப்ரதிஜ்ஞையை ஒரு போதும் கை விடமாட்டான் எம்பெருமான். ஆனால் அதே ஸமயத்தில் பக்தனை ரக்ஷிக்கவேண்டித் தன் ப்ரதிஜ்ஞையைக் கை விட்டாலும் விடுவான் என்று கொண்டால் முரண்பாடு ஏதும் கிடையாது. ஆகையால் ஸ்ரீக்ருஷ்ணன் ஒரு ஸமயம் தன் ப்ரதிஜ்ஞையைக் கை விட்டமைக்கும் 'தன் ப்ரதிஜ்ஞை ஒரு போதும் பொய்யாகாது' என்று கூறும் வார்த்தைக்கும் பரஸ்பர விரோதம் கிடையாது.

இப்படி ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் தைர்யத்தைச் சிறப்பாக விளக்கிக் காட்டி விட்டு ஶ்ருதப்ரகாஶிகாசார்யர் காட்டிய வழியில் மேலும் சுவைபட இந்த தைர்யத்தை விளக்கிக் காட்டியருளுகிறார்.

பலம் வாய்ந்த எதிரி எதிர்பாராமல் வந்து நிற்கும் போதும் அலக்ஷ்யபாவத்துடன் கலங்காத, த்ருடமான அதாவது உறுதி கொண்ட மனம் படைத்திருக்கை - தைர்யம். கரன் தூஷணன் முதலாகப் பதினான்கு ஆயிரம் ராக்ஷஸர்கள் எதிரிகளாக வந்த போதும், அலக்ஷ்ய பாவத்துடன் சிறிதும் கலங்காமல் உறுதியான மனப்பான்மையுடன் பளபளவென்று விளங்கும் ஸீதையின் தாடைப் புறத்தில் தன் முகத்தைப் பார்த்துக் கொண்டு ஜடையை முடி போட்டுக் கொண்டிருந்தானே ஸ்ரீராமன், இது தான் இந்த தைர்யத்திற்கு விளக்கம்.





ராவணன் உயிருடன் இருக்கிறான். மிகுந்த பலம் வாய்ந்தவன் அவன். ஸமுத்ரத்தை இன்னும் தாண்டவும் இல்லை. இப்படிப் பல சிக்கல்கள் நிறைந்திருக்கும் போதும் ஸமுத்ரத்தின் வடக்குக் கரையில் தன்னை ஶரணம் அடைந்த ஸ்ரீவிபீஷணனை லங்காதிபதியாக முடி சூட்டுவித்தானே ஸ்ரீராமன். இதுவும் தைர்யத்திற்குச் சிறந்த எடுத்துக்காட்டு.

**अब्धिं न तेरिथ, न जिग्यथ राक्षसेन्द्रम्**
**नैवास्य जज्ञिथ यदा च बलाबलं त्वम् ।**
**निस्संशयः सपदि तस्य पदेऽभ्यषिञ्चः**
**तस्यानुजं कथमिदं हि विभीषणं च? ॥**

அப்திம் ந தேரித ந ஜிக்யத ராக்ஷஸேந்த்ரம்
நைவாஸ்ய ஜஜ்ஞித யதா ச பலாபலம் த்வம் ।
நிஸ்ஸம்ஶய: ஸபதி தஸ்ய பதேऽப்யஷிஞ்ச:
தஸ்யாநுஜம் கதமிதம் ஹி விபீஷணஞ்ச? ॥

எம்பெருமானே! நீ மனுஷ்ய வேஷம் பூண்டு ஸ்ரீராமனாக அவதரித்துள்ளாய், ஆனால் நீ செய்யும் செயல் ஒவ்வொன்றும் மனுஷ்ய சக்திக்கு மீறியதாயிருக்கிறதே. உன்னை ஶரணம் அடைந்தான் விபீஷணன். ஸமுத்ரத்தைத் தாண்ட வேண்டும்; ராவணனுக்குள்ள பலத்தை அல்லது பலமில்லாமையை அறிய வேண்டும், ராவணனை வெல்ல வேண்டும். இவ்வளவும் செய்த பிறகுதானே அவனுடைய ஸ்தாநத்தில் அவன் தம்பிக்கு முடிசூட்ட வேண்டும்; கீழே கூறியவற்றுள் ஒன்றையுமே செய்யவில்லை. இப்படியிருக்கும்போது கொஞ்சமும் ஸந்தேஹமின்றி அதாவது விபீஷணனுக்குச் சூட்டும் முடி நிலைத்திருக்குமா? இராதா? என்ற ஸந்தேஹம் சிறிதுமின்றி ராவணன் தம்பியான விபீஷணனை தன்னை சரணம் அடைந்த உடனேயே லங்கைக்கு

அரசனாக முடி சூட்டினாயே! இது எப்படி? என்று எம்பெருமானுடைய தைர்யகுணத்தை வியந்து பாராட்டுகிறார் ஸ்வாமி கூரத்தாழ்வான் தாமியற்றிய அதிமானுஷஸ்தவத்தில்.

இது வரை ஸ்தைர்யத்திற்கும் தைர்யத்திற்கும் தனித்தனியே லக்ஷணம் வகுத்துக் காட்டி விவரித்துள்ளனர் முன்னோர்கள்.

இவையிரண்டு லக்ஷணங்களையும் மாற்றியும் இரண்டுக்கும் கூறலாம். அதாவது ஸ்தைர்யத்திற்குத் தந்த லக்ஷணம், விளக்கம் இவற்றை தைர்யத்திற்கும், தைர்யத்திற்குத் தந்த லக்ஷணம், விளக்கம் இரண்டையும் ஸ்தைர்யத்திற்குமாக மாற்றியும் தரலாம் என்கிறார் ஸ்வாமி ஸ்ரீதேசிகன். இரண்டுக்கும் இரண்டும் பொருந்தும். ஆகையால்.

திருவாய்மொழி 2-7-11வதான 'பற்பநாபன் உயர்வற உயரும் பெருந்திறலோன்' என்ற பாசுரத்தின் வ்யாக்யானமான அடையவளைந்தான் அரும்பத உரையில் தைர்யத்திற்கு விளக்கம் தரும் முன் காட்டிய 'கபோலே ஜாநக்யா' என்ற ஹநுமந் நாடக ஶ்லோகம், ஶௌர்யாதிகளுக்கு லக்ஷணமாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளது காணத் தக்கதாகும்.

ஆகையால் தோஷம் இல்லாத இடங்களில் ஒன்றுக்குச் சொன்ன லக்ஷணத்தை மற்றொன்றுக்காக மாற்றிச் சொல்லலாம் என்பது இதனால் ஏற்படுகிறது.

ஆக ஶரண்யனான எம்பெருமானிடத்தில் உள்ள இந்த ஸ்தைர்யம், தைர்யம் என்ற இரண்டு குணங்களைக் கண்டு ஶரணாகதரான நாம் சிந்தையின்றி இருக்கலாம் என்பதற்காக இவற்றுக்கு இவ்வளவு விளக்கங்கள்.

---



## 10. ஶௌர்யம், பராக்ரமம்

**अथ शौर्यं भगवतः विक्रमश्च गुणावुभौ ।**
**भक्तप्रत्यर्थिनाशाय कल्पेते इति मानितौ ॥**
**अतस्तौ विस्तरेणात्र प्रोक्तौ सरलया गिरा ।**
**बुध्वा जनाः प्रपद्येरन् शरण्यं भक्तवत्सलम् ॥**

அத ஶௌர்யம் பகவத: விக்ரம: ச குணவுபௌ ।
பக்த ப்ரத்யர்த்திநாஶாய கல்பேதே இதி மாநிதௌ ॥
அதஸ்தௌ விஸ்தரேணாத்ர ப்ரோக்தௌ ஸரளயா கிரா ।
புத்வா ஜநா: ப்ரபத்யேரந் ஶரண்யம் பக்தவத்ஸலம் ॥

ஶரணாகதிகத்யத்தில் ஸ்தைர்யம்-தைர்யம் என்ற குணங்களுக்குப் பின் இடம் பெறுவன **शौर्यम्** (ஶௌர்யம்), பராக்ரமம் என்கிற இரண்டு குணங்கள்.

*ஶ்ருதப்ரகாஶிகாசார்யர்:-*

**स्वगृह इव परबले प्रवेशसामर्थ्यं शौर्यम् ।** (ஸ்வக்ருஹே இவ பரபலே ப்ரவேஶஸாமர்த்யம் ஶௌர்யம்) ''தன் வீட்டில் தயக்கமின்றித் தடையின்றி நுழைவது போல் பகைவரின் படைகளிலும் தயக்கமும் - தடையுமின்றி நுழையும் ஆற்றல் ஶௌர்யம்'' என்கிறார்.

**प्रवेशे सति तन्निरसनकौशलम्-पराक्रमः** (ப்ரவேஶே ஸதி தந்நிரஸந கௌஶலம்-பராக்ரம:) அதாவது தயக்கமும்- தடையும் இன்றிப் பகைவர் ஸைந்யத்தில் புகுவது மட்டும் போதாது. அவ்வாறு நுழைந்து பகைவர்களை அழிப்பதற்கு உரிய ஆற்றலும் வேண்டும். இதுதான் பராக்ரமம். ஸ்ரீராமன் ராக்ஷஸர்களுடைய

ஸைந்யத்தில் தயக்கம்-தடை ஏதுமின்றி புகுந்தது மட்டு மல்லாமல் அவர்களை அழித்தான் அன்றோ?

**छिन्नं भिन्नं शरैर्दग्धं प्रभग्नं शस्त्रपीडितम् ।**
**बलं रामेण ददृशुः न रामं शीघ्रकारिणम् ॥**

**சிந்நம் பிந்நம் ஶரைர் தக்தம் ப்ரபக்நம் ஶஸ்த்ரபீடிதம் ।**
**பலம் ராமேண தத்ருஶு: ந ராமம் ஶீக்ரகாரிணம் ॥**

ராக்ஷஸர்களுடைய ஸைந்யத்தில் புகுந்த ஸ்ரீராமன் அந்த ஸேனையை அம்புகளால் வெட்டினான்; பிளந்தான்; கொளுத்தி னான்; நன்கு உடைத்தான். அங்குள்ளவர்கள் இப்படி நிலை குலைந்திருக்கும் ராக்ஷஸஸேனையைத்தான் கண்டனர். இவ்வள வையும் ஒரு நொடியில் மிக்க விரைவுடன் செய்த ஸ்ரீராமனைக் காணவேயில்லை என்று ஸ்ரீராமனுடைய பராக்ரமத்தை ஸ்ரீராமா யணம் யுத்தகாண்ட ஶ்லோகம் (94-24) விளக்குகின்றது. இவ் வாறு ஶௌர்யம் பராக்ரமம் என்ற இந்த இரண்டு குணங்க ளுக்கும் சேர்த்து இலக்கணம் காட்டியுள்ளார்.

**பெரியவாச்சான் பிள்ளை:-**

**ஶௌர்யம்.** ஆஶ்ரித விரோதிகளை அழியச்செய்ய வல்லவனா யிருக்கை. அதாவது தன்னை ஆஶ்ரயித்தவர்களுக்கு விரோதம் செய்பவர்களை அழிப்பதில் வல்லவனாயிருக்கை ஶௌர்யம். **பராக்ரமம்:-** அளவற முடுகினாலும் வினை செய்ய வல்லவனா யிருக்கை. அதாவது அளவில்லாதபடி யுத்தம் செய்ய நேரிட் டாலும் யுத்தம் செய்ய வல்லவனாயிருக்கை.

ஆஶ்ரித விரோதிகளை அழிக்க வல்லவனாயிருந்தாலும் யுத்தம் நேர்ந்தால் அஞ்சி ஓடுபவனாயிருந்தால் அப்படிப் பட்டவ னுக்கு ஶௌர்யம் இல்லை. இவ்வாறின்றி அளவில்லாதபடி போர்செய்ய நேர்ந்த போதும் போர் செய்ய வல்லவனாயிருக்கை





பராக்ரமம் என்று ஶௌர்யம்-பராக்ரமம் இரண்டுக்கும் விளக் கம் தந்துள்ளார்.

மீண்டும் பெரியவாச்சான் பிள்ளையே-தைர்யம்- ஶௌர்யம், பராக்ரமம் என்ற இந்த மூன்று குணங்களுமே எதிரிகளை அழிப்பதற்குப் பயன்படுபவை என்று இம்மூன்றையும் ஒன்று சேர்த்து மற்றோர் வகையில் விளக்குகிறார்.

**தைர்யம்:-** மூலபலே ஸந்நிஹிதேऽபி பூர்வக்ஷணத் ந விசேஷ: ராவணனுடைய மூலபலமே ஸ்ரீராமனுடன் போரிட நெருங்கி விட்ட போதும் இது நெருங்காத போது பூர்வக்ஷணத்தில் எவ் வாறு அச்சம் சிறிதுமின்றி இருந்தானோ அப்படியே இப்பொழு தும் இருந்தான். இது **தைர்யத்**தினால் தான் ஏற்பட்டது.

**ஶௌர்யம்:-** அவ்வளவன்றிக்கே-அநுகூலே இவ தத் பல ப்ரவேஶநம். அதாவது மூல பலம் நெருங்கியபோதும் முன் போல் சிறிதும் அச்சம் இல்லாமல் இருந்தான் என்பது மட்டு மல்லாமல் தனக்கு வேண்டியவர்களின் குழுவில் நுழைவது போல் அந்த மூல பலத்திலும் நுழையும் ஸாமர்த்யம் உடையவ னாயுமிருந்தான். அந்த ஸாமர்த்யம் தான் ஶௌர்யம் ஆகும்.

**பராக்ரமம்:-** 'प्रहर्ता च, छिन्नं भिन्नं शरैर्दग्धम् । (ப்ரஹர்த்தா ச, சிந்நம் பிந்நம் ஶரைர்தக்தம்) அதாவது பகைவர்களின் ஸேனைக் குள் புகுகின்றவனாய், பகைவர்களை நன்கு அடிக்கின்றவனாய் என்றபடி இருக்கை- பராக்ரமம். ராக்ஷஸ ஸைந்யத்தில் புகுந்து முன் காட்டியபடி பகைவர்களை வெட்டியும் பிளந்தும் கொளுத் தியும், உடைத்தும் அழித்தான் அன்றோ! அந்த ஆற்றல் பராக்ரமம் எனப்படும் என்று தைர்யம்-ஶௌர்யம்-பராக்ரமம் என்ற மூன்று குணங்களுக்கும் கொஞ்சம் வேற்றுமை தந்து விளக்கம் செய்கிறார் பெரியவாச்சான் பிள்ளை.

**தைர்யம்.** பெரும்படை போரிட நெருங்கியபோதும் அஞ்சா திருக்கை.

**ஶௌர்யம்.** அந்தப் பெரும் படையின் நடுவே நண்பர்களின் திரளில் நுழைவது போல் நுழையும் ஆற்றல்.

**பராக்ரமம்.** நுழைந்த பின் பகைவர்களை உருக்குலையும்படி அழிக்கும் ஆற்றல்.

என்ற முறை அறியவேண்டும் இங்கு.

**''பற்பநாபன் உயர்வற உயரும் பெருந்திறலோன்''**
**(திருவாய்மொழி 2-7-11)**

என்ற பாசுரத்தின் வ்யாக்யானத்தில் அடைய வளைந்தான் அரும்பத உரையில் 'ஶௌர்யம்-வீர்யம்- பராக்ரமம்' என்ற மூன்று குணங்கள் பெரியவாச்சான் பிள்ளை காட்டிய முறையில் சற்று மாறுபாட்டுடன் விளக்கப்பட்டுள்ளன.

1) பூர்வக்ஷணே ஸ்ம்ருதிரஹிதம் ஶத்ரு ஸேநாயாம் அத்யாஸந்நாயாமபி அபீருத்வம் ஶௌர்யம்.

அதாவது இப்படி ஒரு பகைவரின் பெரும் படை நெருங்கும் என்று முன் க்ஷணத்தில்கூட நினைக்கவில்லை. அப்படியிருக்க மிகப் பெரிய பகைவரின் படை ஒன்று மிகவும் நெருங்கி வந்த போதும் அஞ்சாதிருக்கை ஶௌர்யம்.

2) ஶத்ருஸேநாயாம் ஸ்வஸேநாயாமிவ ப்ரவேஷ்ட்ருத்வம்- வீர்யம். அதாவது தன்னுடைய ஸேனையில் புகுவது போல் பகைவர்களுடைய ஸேனையிலும் தயக்கமின்றிப் புகுந்து செல்லும் ஆற்றல் வீர்யம்.

3) ஸ்வயம் அக்ஷதத்வேந பரஸம்ஹர்த்ருத்வம்- பராக்ரம:. அதாவது தான் அடிபடாமலிருந்து கொண்டு பிறரை அழிக்கும் ஆற்றல் பராக்ரமம் ஆகும்.





1) முந்தைய க்ஷணத்தில் கூட இவ்வாறு நினைக்க முடியாத படி, பகைவர்களின் பெரும்படை மிக நெருங்கி வந்தபோதும் அச்சமின்றியிருக்கை **ஶௌர்யம்.**

2) பகைவர்களின் ஸேனையில், தன்னுடைய ஸேனையில் புகுவது போல் தயக்கமின்றிப் புகுந்து செல்லும் ஆற்றல் **வீர்யம்.**

3) தான் கொஞ்சமும் அடிபடாமலிருந்து கொண்டு பகைவர் களை அழிக்கும் ஆற்றல் **பராக்ரமம் .**

என்ற முறையில் இங்கு இந்த ஶௌர்யம், வீர்யம், பராக்ரமம் என்ற மூன்று குணங்களை அறிய வேண்டும்.

இம்மூன்றுள் ஒவ்வொன்று மட்டும் தனித்து வந்தால் அப்பொழுது அதன் விளக்கம் சற்று மாறுபடும்.

**'शौर्यं तेजो धृतिः,** (ஶௌர்யம் தேஜோ த்ருதி:) என்ற ஸ்ரீ கீதா (18-43) ஶ்லோகத்தில், ஶௌர்யம் என்ற குணம் வீர்யம்- பராக்ரமம் என்ற இரண்டு குணங்களுடன் சேராமல் தனித்து வந்துள்ளது. அங்கு ஸ்வாமி எம்பெருமானார் **शौर्यम् युद्धेनिर्भय प्रवेश सामर्थ्यं** (ஶௌர்யம்-யுத்தே நிர்பயப்ரவேஶ ஸாமர்த்யம்) அதாவது யுத்தத்தில் அச்சம் சிறிதுமின்றிப் புகுந்து செல்லும் ஆற்றல் - ஶௌர்யம் என்று பொதுவாக விளக்கம் தந்துள்ளார்.

இப்படிப் பலவகைகளில் தந்துள்ள விளக்கங்கள் சில வகை களில் வேறுபட்டும் பல வகைகளில் ஒன்றுபட்டும் இருப்பதைக் கண்டு ரஸிக்கவேண்டும்.

எம்பெருமானுடைய இந்த ஶௌர்யம்-வீர்யம்- பராக்ரமம் ஆகிய இந்த மூன்று குணங்களும் ஆஶ்ரிதர் களுடைய விரோதி களைப் போக்கவல்லன என்றார்கள் பூர்வர்கள். இதை அநுஸந் தாநம் செய்யும் போது ஆஶ்ரிதர்கள் நம்முடைய விரோதிகள் தொலைவது திண்ணம் என்று நிச்சயித்துச் சிறிதும் பயமின்றி இருப்பார்கள்.

ஆசார்ய ஹ்ருதயம் 174வது சூர்ணிகை (வாக்யம்) இந்த விஷயத்தை விளக்கிக் காட்டுகிறது. அதாவது:-

''மஹாமதிகள் அச்சங்கெட்டு அமரும் ஶௌர்யாதிகள் சிற்றாற்றிலே கொழிக்கும்.''

மஹாமதிகள்-சிறந்த புத்தி உள்ளவர்கள். அவர்கள் யார் தெரியுமா, எம்பெருமானுடைய ஸௌகுமார்யம் (மென்மை) ஸௌந்தர்யம் (அழகு) முதலான குணங்களைக் கண்டு எம்பெருமானுக்கு எந்தத் தீங்கு வந்து விடுமோ என்று, அவனுடைய ஸர்வ வல்லமை, ஸர்வ ரக்ஷகத் தன்மை முதலியவற்றை மறந்து கலங்குகின்ற பகவத் ஶ்ரேஷ்டர்கள் தான் இங்கு மஹாமதிகள் என்று கூறப்படுகிறார்கள்.

எம்பெருமான் ஸர்வரக்ஷகன், ஸர்வ ஶக்தன் என்று தெளிவு நல்லறிவு-தத்த்வஜ்ஞானம் உடையவர்கள் இங்கு மஹாமதிகள் அல்லர். பின்? தத்த்வத்தை-உண்மைநிலையை மறந்து, நம்மைப் போல் அவனை (எம்பெருமானை) அறியாதவனாகவும் அஶக்தனாகவும் ப்ரமித்து அவனுக்கு என்ன தீங்கு நேரிடுமோ? என்று அறிவு கலங்கி நிற்பவர்கள் தான் இங்கு மஹாமதிகள் என்னப்படுகிறார்கள்.

ஸ்ரீக்ருஷ்ணனை எம்பெருமான் என்றும் அவன் ஸர்வஜ்ஞன், ஸர்வஶக்தன் என்றும் நன்றாக அறிந்துள்ள விதுரன், துர்யோதனன் தன் ஸபையில் பொய்யானதொரு ஆஸநம் தந்து அதில் கண்ணனை அமரச் செய்து குழியில் வீழ்த்தியதை நேரில் கண்ட பிறகு தன் வீட்டிற்கு வந்து அங்குள்ள தன் ஆஸனத்தில் ஸ்ரீக்ருஷ்ணன் அமர வந்தபோது அந்த ஆஸநத்தைக் தட்டிப் பார்த்து ஒடியாமல் இருக்குமா! என்பதை ஆராய்ந்து அறிந்த பிறகே அதில் அவனை (ஸ்ரீக்ருஷ்ணனை) அமரச்செய்தான்.

**'ஸம்ஸ்ப்ருஶ்ய ஆஸநம் ஶௌரே: விதுரஸ்ஸ மஹாமதி:'**





ஆஸநத்தைத் தொட்டுப் பார்த்த மஹாமதியான விதுரன் என்று கூறுகிறது மஹாபாரதம். கலங்கியிருக்கும் இந்த நிலையில் ஸ்ரீவிதுரனை மஹாமதி:-சிறந்த அறிவுடையவன் என்று வ்யாஸர் சிறப்பித்துக் கூறுவதிலிருந்து இந்த அர்த்தத்தை அறியலாம். பூர்வர்கள் வ்யாக்யானம் செய்யும் போது மஹாமதிகள் என்பதற்கு அறிவுகேடர் என்றே பொருள் கூறியுள்ளனர். ஸ்ரீ விதுரனுக்கு வந்துள்ள கலக்கம் அஜ்ஞானத்தினால் ஏற்பட்டதன்று. எம்பெருமானுடைய மென்மை முதலான குணங்களை நேரில் அனுபவித்தறிந்தமையால் தான் இந்த கலக்கம். இந்த மாதிரி கலக்கம் உடைய மஹாமதிகளுக்கு உண்டாகும் பயம் அதாவது 'எம்பெருமானுக்கு என்ன நேரிடுமோ?' என்ற அச்சம், எம்பெருமானுடைய ஶௌர்யம் முதலான குணங்களை அநுஸந்திக்க, அகலும்.

இந்த ஶௌர்யம், வீர்யம், பராக்ரமம் என்ற குணங்கள் திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு என்கிற திருப்பதியிலே அர்ச்சாரூபியாய் ஸேவை தரும் எம்பெருமானிடத்தில் ப்ரகாசிக்கின்றன. ஆற்றுக்குள் இருக்கும் மணி-முத்து முதலியன வெள்ளத்தினால் கரையிலே வந்து கொழித்துத் தோன்றுவது போல் இந்த ஊரில் எழுந்தருளியுள்ள எம்பெருமானுடைய இந்தக் திருக்குணங்கள் தயாப்ரவாஹத்தினால் இந்த ஊரிலே கொழிக்கும் என்று கூறுகிறது ஆசார்யஹ்ருதயம்.

இந்தத் திருத்தலத்தைப் பற்றிய திருவாய்மொழி ஐந்தாவது பத்து நான்காவது திருவாய்மொழி. இதில் முதற்பாட்டு-

**வார்கடாவருவியானைமாமலையின்**
**மருப்பிணைக் குவடிறுத்துருட்டி**
**ஊர்கொள் திண்பாகனுயிர் செகுத்து அரங்கின்**
**மல்லரைக் கொன்று சூழ் பரண் மேல்**

**போர்கடாவரசர் புறக்கிட மாட**
**மீமிசைக் கஞ்சனைத் தகர்த்த**
**சீர்கொள் சிற்றாயன் திருச்செங்குன்றூரில்**
**திருச்சிற்றாறு எங்கள் செல்சார்வே .**

**(திருவாய்மொழி 8-4-1)**

இந்த ஊரில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் எவ்வளவு விரோதிகளை ஒழித்திருக்கிறான் தெரியுமா?

ஸ்ரீக்ருஷ்ணாவதாரத்தில் விரோதிகளை அழித்தமையை மட்டும் கேட்டாலேயே போதும். நம்முடைய அச்சம் அனைத்தையும் ஒழித்து விடுமே.

அருவிகள் பெருக்கெடுத்து ஓடும் ஒரு பெரிய மலை போன்ற யானை ஒன்று, அதாவது குவலயாபீடம், மதஜலம் பெருக் கெடுத்து ஓட ஸ்ரீக்ருஷ்ணனைக் கொல்ல கம்ஸனால் ஏவப்பட்டு எதிர்த்து வந்தது. அந்த யானையினுடைய தந்தங்கள் இரண்டு மலைச்சிகரங்கள் பிணைந்திருப்பது போல் பிணைந்திருந்தன. ஸ்ரீக்ருஷ்ணன் இளமைப் பருவத்திலே அவற்றை அநாயாஸமாக ஒடித்து எடுத்து அவற்றாலேயே அதைக் கொன்றான். அது மட்டு மின்றி அந்த யானையை நடத்திச் செல்லும் கொடியனான பாகனையும் கொன்றான்.

உடனேயே கம்ஸனால் ஏவப்பட்டு தன்னை (கண்ணனை)க் கொல்ல வந்த முஷ்டிகன் சாணூரன் என்ற இருமல்லர்களையும் அழித்தான். இதைக் கண்டதும் பெரும் படையுடைய அரசர்கள் அனைவரும் ஸ்ரீக்ருஷ்ணனை எதிர்க்க வந்திருந்தும் இவனுடைய வீரச்செயல்களைக் கண்டதுமே புறமுதுகிட்டு ஓடிவிட்டனர். ஸ்ரீக்ருஷ்ணனாலே தனக்கு ஏற்பட்ட பயத்தை அறிந்து கம்ஸன் அதற்கேற்ப மிக உன்னதமான மாடத்திலே அமர்ந்து இத்தனை யையும் கண்டு கொண்டிருந்தான். அவன் மீது பாய்ந்து அவனைக்





கீழே தள்ளி அவன் அணிந்திருந்த கிரீடத்தை எடுத்து விட்டு அவனை அழித்தான் சிற்றாயன்-கண்ணன்.

'ராஜத்ரோஹியைக் கொல்லும்போது அவன் அணிந்துள்ள கிரீடத்தை அப்புறப்படுத்திக் கொல்வது வழக்கம்; அதறிந்த கண்ணனும் கம்ஸனுடைய கிரீடத்தை அப்புறப்படுத்திக் கொன்றான்.

இப்படித் தனக்கு வந்த விரோதிகளைப் போக்கித் தன்னை நமக்குத் தந்த எம்பெருமானே கட்டாயம் நம்முடைய விரோதி களையும் போக்கித் தருவான். கொஞ்சமும் ஸந்தேஹம் வேண் டாம் என்ற நிம்மதியான நிலை நமக்கு ஏற்படும்.

ஆக நம்முடைய விரோதியான நாம் செய்த பாப வர்கங் களைக் கண்டு நாம் அஞ்சவேண்டாம். அவனுடைய ஶௌர்ய, வீர்ய, பராக்ரமங்கள் என்ற குணங்கள் இருக்கும் போது நமக்கு ஏன் அச்சம்? என்று எடுத்துக் கூறுகிறது முன் காட்டிய ஆசார்ய ஹ்ருதய ஸூத்ரம். இப்படி பயம் கெட்டவர்கள் சென்று அடைய வேண்டிய திவ்யதேசம் திருச்செங்குன்றூர்த் திருச்சிற்றாறு என்கிறார் மேலே இந்தத் திருவாய்மொழியிலேயே பத்தாவது பாட்டிலே:-

**.....திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரையானை**
**....முக்கண் அம்மானை நான்முகனை அமர்ந்தேனே (4-10-10)**

என்று. இத்தனைப் பாசுரார்த்தங்களையும் உள்ளடக்கிப் பிறந்தது தான் முன் காட்டிய ஆசார்ய ஹ்ருதய ஸூத்ரம்.

'மஹாமதிகள் அச்சம் கெட்டு அமரும்' (அடையப்படும்) என்று. இதில் 'ஶௌர்யாதிகள்' என்று ஶௌர்யம் முதலான குணங்கள் என்று கூறப்பட்டுள்ளது. இந்த ஆதி (முதலான) என்ற சப்தத்தினால் கொள்ளப்படவேண்டிய குணங்கள் வீர்யம் பராக்ரமம் என்ற இரண்டு குணங்களாம். ஶரணாகதிகத்யத்தில்

'வீர்யம்' என்ற குணம் ஆரம்பத்திலேயே தனியாகக் கூறப்பட்டு விட்டதால் இங்கு ஶௌர்யம் - பராக்ரமம், என்ற இரண்டு குணங்கள் மட்டுமே கூறப்பட்டன.

**வீர்யம்:** ''உலகுக்கு மூல (உபாதாந) காரணமாயிருந்தாலும், யாவற்றையும் தாங்கி நின்றாலும், யாவரையும் நியமிக்கும் போதும் சிறிதும் மாறுபடாதிருத்தல் ஆகும்'' என்று ஸ்வாமி ஸ்ரீ தேசிகனும்.

''யாவற்றையும் தாங்கியும் நியமித்தும் நிற்கும் போதும் புருவத்தில் கூட வியர்வை தோன்றாதபடி இருத்தலாகிற அநாயாஸம் வீர்யம்'' என்று பெரியவாச்சான் பிள்ளையும் விளக்கம் தந்துள்ளனர். அது முன்பு விளக்கப்பட்டது.

இனி ஸ்வாமி தேசிகன் ஶௌர்ய-பராக்ரமங்களுக்கு அருளிய விளக்கத்தை அனுபவிப்போம். முன்பு காட்டிய விளக்கங்களைப் பெரும்பாலும் அடியொற்றியே இதுவும் அமைந்துள்ளது, அதாவது:

**शौर्यम्-असहायस्यापि भीमे परबले स्वबले इव निर्भय प्रवेश सामर्थ्यम् यथा-जनस्थानयुद्ध-मूल बलनिबर्हणादिषु ॥**

(ஶௌர்யம்-அஸஹாயஸ்யாபி பீமே பரபலே ஸ்வபலே இவ நிர்பயப்ரவேஶ ஸாமர்த்யம்; யதா-ஜநஸ்தாநயுத்த, மூலபலநிபர்ஹணாதிஷு)

இதன் அர்த்தம் பின்வருமாறு:-

துணையின்றியே மிகவும் பயங்கரமான பகைவர்களின் ஸைந்யத்தில் தன்னுடைய ஸைந்யத்தில் போலே பயமின்றிப் புகுவதற்கு உரிய ஸாமர்த்யம் தான் ஶௌர்யம் எனப்படுகிறது.





பலரைத் துணைக்கொண்டு பகைவர்களின் படை நடுவே புகுவது ஶௌர்யம் ஆகாது என்பதைக்காட்ட 'அஸஹாயஸ்யாபி' (துணையின்றியே) என்ற விஶேஷணம் தரப்பட்டது.

பகைவர்களின் படைபலம் இன்றி யார் வேண்டுமானாலும் எப்பொழுது வேண்டுமானாலும் புகும்படி இருக்குமாகில் அதில் துணையின்றி நுழைந்தால் அது ஶௌர்யம் ஆகாது என்பதைக் காட்ட படைக்கு 'பீமே' (**भीमे**) அதாவது 'பயங்கரமான' என்ற விஶேஷணம் தரப்பட்டது.

பயங்கரமான தன் படையில் நுழைவது ஶௌர்யம் ஆகாது. ஆகவே 'பரபலே-பகைவர்களின் படையில்' என்று கூறப்பட்டது. பயங்கரமான பகைவர்களின் படை நடுவே தனியாகத் துணையின்றி நுழையும் போது அச்சம் அதாவது பயம் ஏற்பட்டால் அதுவும் ஶௌர்யம் ஆகாது. ஆகவே 'நிர்பய' (அச்சமின்றி) என்று கூறப்பட்டது, இம்மாதிரி துணையின்றியே அச்சமின்றிப் புகும் இடம் தன்னுடைய ஸேனையேயாதலால் அதை உதாஹரணமாகக் காட்டியருளுகிறார் ஸ்வாமி ஸ்ரீதேசிகன் 'ஸ்வபலே இவ' (தன்னுடைய படையிற் போலே) என்று. இது ஜநஸ்தாநத்தில் எதிர்த்து வந்த கரதூஷணாதிகளின் படையிலும் ராவணனுடைய மூலபலத்திலும் ஸ்ரீராமன் நுழைந்து வென்றமையால் வெளிப்படை. ஆக பயங்கரமான பகைவர்களின் படை நடுவே துணையின்றி அச்சம் இல்லாமலே தன் படையிற் போல் ப்ரவேசிக்கும் ஆற்றல் ஶௌர்யம் ஆகும் என்றபடி.

பராக்ரமத்திற்கு ஸ்வாமி ஸ்ரீதேசிகன் தந்தருளிய விளக்கம்.

**पराक्रमः - प्रविष्टस्य परसैन्ये 'छिन्नं-भिन्नं शरैर्दग्धम्' इत्याद्युक्तो व्यापारः । 'अभियाता प्रहर्ता च' इत्याद्युक्तौ इमौ द्वौ गुणौ आश्रितविरोधिभङ्गार्थौ । धैर्यादयस्त्रयोवा ।**

பராக்ரம: - ப்ரவிஷ்டஸ்ய பரஸைந்யே 'சிந்நம் பிந்நம் ஶரைர்தக்தம்' இத்யாத்யுக்தோ வ்யாபார:| 'அபியாதா- ப்ரஹர்த்தா' ச, இத்யாத் யுக்தௌ இமௌ த்வௌ குணௌ ஆஶ்ரிதவிரோதி பங்கார்த்தௌ; தைர்யாதய: த்ரயோ வா|

பகைவருடைய பயங்கரமான பெரும் படையில் சிறிதும் அச்சமின்றி நுழையும் ஆற்றல் ஶௌர்யம் என்று ஶௌர்யத்தை விளக்கிய ஸ்வாமி ஸ்ரீதேசிகன், பகைவர்களின் பெரும் படையில் நுழைந்த பின் செய்யும் வீரச் செயல்களையே பராக்ரமம் என்கிறார். ஸ்ரீ ராமன் ராக்ஷஸ ஸைந்யத்தில் நுழைந்து அந்த ஸைந்யத்தை அம்புகளால் வெட்டி உடைத்து எறிந்தான் என்பது **'छिन्नं, भिन्नं शरैर्दग्धम्'** (சிந்நம் பிந்நம் ஶரைர் தக்தம்) என்று முன்பு காட்டிய ஸ்ரீ ராமாயண ச்லோகத்தினால் அறியலாகிறது. இம்மாதிரியாகப் பகைவர்களின் படையை அழிப்பதே பராக்ரமம் என்கிறார் ஸ்வாமிஸ்ரீ தேசிகன்.

**'अभियाता प्रहर्ता च'** (அபியாதா ப்ரஹர்த்தா ச') என்று ஸ்ரீராமனுடைய இந்த ஶௌர்யபராக்ரமங்களைக் காட்டுகிறார் வால்மீகி மஹர்ஷி. இதில் 'அபியாதா' என்பதால் பகைவர் படையில் புகுவதாகிற ஶௌர்யமும், 'ப்ரஹர்த்தா ச' என்பதால் புகுந்த பின் செய்யும் வீரச் செயல்களாகிற பராக்ரமமும் கூறப்பட்டதாகிறது.

இந்த ஶௌர்யம், பராக்ரமம் ஆகிய இரண்டு குணங்களும் ஆஶ்ரயித்தவர்களுடைய விரோதிகளை அழிப்பதற்காகப் பயன் படுபவையாகும். அல்லது தைர்யம் என்று முன்பு சொன்னதையும் கூட்டிக்கொண்டு தைர்யம் - ஶௌர்யம் - பராக்ரமம் ஆகிய இந்த மூன்று குணங்களும் கூட ஆஶ்ரயித்தவர்களின் விரோதிகளைப் போக்க வல்லனவாகும் என்றும் கூறலாம் என்றும் ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸாதித்தருளுகிறார்.

---



## 11. ஸத்யகாமத்வம், ஸத்ய ஸங்கல்பத்வம்

ஸ்வாமி எம்பெருமானார் அருளிச் செய்த ஶரணாகதி கத்யத்தில் எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களைச் சுருக்கிச் சொல்லும் அழகிய வாக்யத்தின்படி இதுவரை அவற்றைப் பல வகைகளில் உரையாசிரியர்கள் காட்டிய வகையில் விளக்கி வந்தோம். அந்த வரிசையில் கடைசியில் 'ஸத்யகாமம், ஸத்ய ஸங்கல்பம், க்ருதித்வம், க்ருதஜ்ஞதா ஆகிய நான்கு குணங்கள் உள்ளன. அவற்றை இப்பொழுது இங்கே விளக்குவோமாக.

வீர்யம், ஶௌ (**शौ**)ர்யம், பராக்ரமம் என்ற இந்த குணங்களுக்குப் பிறகு 'ஸத்யகாம-ஸத்யஸங்கல்ப' என்று படிக்கப் பட்டுள்ளது. ஆகவே இதுவும் குணமாகத் தான் இருக்க வேண்டும்.

இங்கு முதலில் ஸ்ரீ ஶ்ருதப்ரகாஶிகாசார்யர் காட்டும் விளக்கத்தை விளக்குவோம்.

**अथ भोग्यगुणयुगम् सत्यकामेति नित्यविभूतिमत्त्वम् । 'काम्यः स्पृहा, स्मरः कामः' इत्यनेकार्थः । सत्यसङ्कल्पेति लीला विभूतिमत्त्वम् । स्वसङ्कल्पानुवर्त्युभय विभूतिमत्त्वं वा''.**

(அத போக்ய குணயுகம் ஸத்யகாமேதி நித்ய விபூதிமத்த்வம்- 'காம்ய: ஸ்ப்ருஹா, ஸ்மர: காம:' இத்யநேகார்த்த: | ஸத்ய ஸங்கல்பேதி லீலா விபூதிமத்த்வம் ஸ்வஸங்கல்பாநுவர்த்தி உபய விபூதிமத்த்வம் வா)

இந்த வாக்யங்களின் கருத்து பின் வருமாறு:-

கீழ்க் கூறிய குணங்களுக்குப் பிறகு அனுபவிப்பதற்குரிய அதாவது பெற்று அநுபவிக்கக்கூடிய இரண்டு குணங்கள்

கூறப்படுகின்றன. அவை ஸத்யகாமமும் ஸத்ய ஸங்கல்பமும் ஆகும்.

இங்குள்ள காம சப்தம் காமத்திற்கு அதாவது விருப்பத்திற்கு விஷயமான வஸ்துவையும் குறிக்கும். அவ்வாறே காமத்தையும், அதாவது விருப்பத்தையும் அவ்வாறே மன்மதனையும் குறிக்கும். ஆகவே காம சப்தம் பல பொருளைக் கொண்டதாகும்.

இங்கு காமத்திற்கு விஷயமான வஸ்துவைக் குறிக்கிறது. அப்பொழுது **காம்யந்தே இதி காமா:** (காம்யந்தே இதிகாமா:) என்ற விக்ரஹம் (விரிவு) கொள்ளவேண்டும்.

இங்கு விரும்பப்படும் வஸ்து அப்ராக்ருதமான ஸ்ரீவைகுண்ட லோகம். அது ஸத்யமாக அதாவது ஒரு நாளும் மாறுபடாததாக ஒரே தன்மையையுடையதாக இருக்கும். அப்படிப்பட்ட ஸத்ய மான நித்ய விபூதியை உடைத்தாயிருக்கை என்கிற குணம்-தன்மை இதனால் சொல்லப்பட்டதாகிறது.

அடுத்து உள்ள 'ஸத்ய ஸங்கல்ப' என்ற பதத்திற்கு லீலா விபூதியைப் பெற்றிருக்கை என்று பொருள் கூறியுள்ளார் ஸ்ரீ ஶ்ருதப்ரகாஶிகாசார்யர். 'ஸங்கல்பம்' என்ற சொல் ஸங்கல் பிக்கப்படும் பொருளைக் குறிப்பதாகக் கொண்டால் தான் இந்த அர்த்தம் கிடைக்கும். ஆகவே **ஸங்கல்ப்யந்தே இதி ஸங்கல்பா:** (ஸங்கல் ப்யந்தே இதி ஸங்கல்பா:) என்று விக்ரஹம் கொள்ள வேண்டும். இப்பொழுது ஸத்ய என்ற சொல் ஸங்கல்பத்தில் அந்வயிப்ப தாகக் கொள்ளவேண்டும். ஸத்யம் என்றால் மாறுபடாத-தவறாத என்று அர்த்தம். அதாவது எம்பெருமானுடைய தவறாத ஸங்கல் பத்திற்கு விஷயமான வஸ்துவைப் பெற்றிருக்கும் என்ற பொருள் கிடைக்கிறது. அந்த வஸ்துவானது லீலா விபூதியாகும். எம்பெரு மானுடைய சொத்தை (விபூதியை) இருவகையாகப் பிரிக்கி றார்கள் நம் பூர்வர்கள். ஒன்று நித்ய விபூதி, மற்றொன்று லீலா விபூதி.





நித்ய விபூதி என்பது ஒரு போதும் மாறுபடாமல் ஒரே விதமான போகத்தைக் கொடுத்துக் கொண்டிருக்கும் லோக மாகிற ஸ்ரீ வைகுண்டம் ஆகும். இதற்கு ஸ்ருஷ்டி- ப்ரளயம் ஏதும் கிடையாது. எப்பொழுதும் ஒரே மாதிரியாக இருக்கும். ஆகவே இது 'ஸத்யம்' என்று வழங்கப்படுகிறது. ஆக ஸத்யமான நித்ய விபூதி இங்குக் குறிப்பிடப்படுகிறது. இதுவும் எம்பெருமா னுடைய குணங்கள் போல் அவனுக்கே உரியதாகையால் கல் யாண குணங்களுடன் சேர்ந்து இதையும் குணம் என்றே கூறியுள்ளார். தன்னுடையதான இந்த நித்ய விபூதியை எம்பெரு மான் எப்பொழுதும் அநுபவிப்பது போல் முக்தர்களும் நித்யம் இதை அநுபவிக்கலாம். ஆகையால் போக்யங்களுடன் இது சேர்த்துக் கூறப்பட்டது. ஸத்ய காம: என்ற சொல்லை ஸத்ய: காம: யஸ்ய-ஸ: என்று பஹுவ்ரீஹி ஸமாஸமாக அதாவது அன்மொழித் தொகையாகக் கொண்டால் - ஸத்யமான - காமத் தை அதாவது நித்ய விபூதியை உடையவன் என்று பொருள் பெறும். அப்பொழுது குணங்களைக் கூறிவரும் இந்த ப்ரகரணத் திற்கு ஒட்டாது. பஹுவ்ரீஹியாகக் கொண்டால் பகவானுக்கு விசேஷணமாகி அவனைக் குறிப்பதாகிவிடும். குணம்வேறு, குணங்களை உடையவன் வேறு. ஆகையால் இங்கு ஸத்ய காம சப்தத்தை 'ஸத்ய: சாஸௌ காம: ச' என்ற கர்மதாரய ஸமாஸத்தை அதாவது எழுவாய்த் தொகையாகத் தான் கொள்ள வேண்டும்.

ஆனாலும் பஹுவ்ரீஹிஸமாஸமாகக் கொண்டு தான் இந்தச் சொல்லை விளக்குகிறார் ஸ்ரீ ஶ்ருதப்ரகாஶிகாசார்யர். இது ஸத்ய காமேதி நித்ய விபூதிமத்த்வம் என்பதிலிருந்து தெரியவருகிறது.

ஸத்ய காமசப்தத்தை பஹுவ்ரீஹியாகக் கொண்டால் அது நித்ய விபூதியைச் சொல்லாமல் நித்ய விபூதியை உடைய எம் பெருமானைத்தான் குறிக்கும். அப்பொழுது குணங்களைக்

கூறும் ப்ரகரணத்திற்குப் பொருந்தாதே என்ற கேள்வி வரும். அதற்குப் பதில் கத்யத்தில் உள்ள 'ஸத்யகாம' என்ற சொல்லை 'ஸத்ய காமத்வ' என்ற சொல்லாக மாற்றிக் கொண்டு ஸத்யமான காமத்தை-நித்ய விபூதியைப் பெற்றிருக்கை. அதாவது நித்ய விபூதி என்ற குணத்தைப் பெற்றிருக்கை இதை **'भाव'** (பாவ) ப்ரதாந நிர்தேஶமாகக் கொள்ள வேண்டும்.

இவ்விஷயம் ஸ்வாமி ஸ்ரீதேசிகன் அருளிய வ்யாக்யாநத்தில் உள்ளது. அதை அவ்விடத்தில் விளக்குவோம்.

இம்மாதிரி சாஸ்த்ரீய விஷயங்கள் வாசகர்களுக்குக் குழப்பத்தைத் தரும். ஆனாலும் எழுத வேண்டியவற்றை எழுதத்தான் வேண்டும். இம்மாதிரி விஷயங்களைப் புரிந்து கொள்வதற்கு உங்களை நீங்களே ஸித்தப்படுத்திக் கொள்ள வேண்டும். தகுதியுள்ளவர்களாக்கிக் கொள்ள வேண்டும்.

இங்கு எம்பெருமானுடைய கல்யாணகுணங்கள் அனைத்தையும் தொகுத்துக் கூறும் வாக்யம் நீண்டு த்வந்த்வ ஸமாஸம் கொண்டு அமைந்துள்ளது. 'ஜ்ஞாந - பல-ஐஶ்வர்ய' என்று ஒரு சொல்லில் கூட எண் லிங்கம் முதலியவற்றைக் காட்டும் ப்ரத்யயம்-(உறுப்பு) கிடையாது. நாமே தான் ஜ்ஞாநம்-பலம் என்றவாறு பிரித்துப் பொருள் கொள்ளவேண்டும். அவ்வாறே இங்கும் 'ஸத்யகாம:, ஸத்ய ஸங்கல்ப:' என்ற சொற்களையும் கொள்ள வேண்டும்.

உபநிஷத்துக்களில் பல இடங்களில் 'ஸத்ய காம:, ஸத்ய ஸங்கல்ப:' என்ற சொற்கள் வந்துள்ளன. அங்கெல்லாம் இந்தச் சொற்கள் எம்பெருமானைக் குறிக்கின்றன. ஸத்யமான - காமங்களையும், ஸத்யமான ஸங்கல்பத்தையும் உடையவன் என்று பொருளைத் தருகிறது. ஆனால் இங்கு ஸத்யகாம: நித்யமான விபூதி (ஸ்ரீவைகுண்டலோகம்) ஸத்ய ஸங்கல்பம் அவனுடைய





ஸங்கல்பத்திற்கு அதீனமான லீலாவிபூதி என்றிவ்வளவிலேயே நிற்கும் இந்த இரண்டு சொற்களும். இதுவரை ஸத்யகாம என்று எம்பெருமானுடைய நித்யவிபூதி சொல்லப்பட்டது.

இனி ஸத்ய ஸங்கல்ப: என்ற சொல்லின் பொருளைப் பார்ப்போம். இங்கு ஸ்ரீ ஶ்ருதப்ரகாஶிகாசார்யர், ஸத்ய ஸங்கல்பேதி லீலாவிபூதிமத்த்வம் என்று கூறுகிறார். அதாவது ஸத்யஸங்கல்ப என்ற பதத்தினால் லீலா விபூதியைப் பெற்றிருக்கை என்று லீலாவிபூதி சொல்லப்படுகிறது.

நித்ய விபூதி-லீலா விபூதி என்ற எம்பெருமானுடைய இரண்டு விபூதிகளுள் ஒன்றான நித்யவிபூதி ஸத்யகாம பதத்தால் கூறப்பட்டது. மற்றொன்றான லீலாவிபூதி ஸத்ய ஸங்கல்ப பதத்தினால் கூறப்படுகிறது.

இனி இந்தப் பொருள் இந்தப் பதத்தினால் எப்படிக் கிடைக்கிறது என்பதை அறியவேண்டாமா? முன்பதத்திலே யே இதைக் கூறியிருக்க வேண்டும். கர்த்தா-கர்மா-க்ரியை என்றவற்றைக் குறிக்கும் விகுதிகள் பல உண்டு. இவற்றுள் கர்மாவை-அதாவது செயப்படுப்பொருளைக் குறிக்கும் விகுதி அதாவது ப்ரத்யயம் இங்கு வந்துள்ளதாகக் கொள்ள வேண்டும்.

காம: என்பது பொதுவில் ஆசை என்ற பொருளில் வந்தாலும் காம்யந்தே இதி காமா: (விரும்பப்படுகின்றவை) என்று (கர்மணி க(घ) ஞ்) கர்மாவைக் குறிக்கும் ஒரு ப்ரத்யயம் காம் என்ற வினைச் சொல்லின் மேல் வந்துள்ளதாகக் கொண்டு விரித்துரைத்தால் இந்தப் பொருள் கிடைக்கிறது. பெரியவாச்சான் பிள்ளை இதை விவரித்துக் காட்டியுள்ளார் 'காம்யந்தே இதி காமா: என்றது காமிக்க (விரும்ப)ப்படும் விஷயங்களை' என்று. இவ்வாறே இங்கும் ஸங்கல்ப்யந்தே - இதி ஸங்கல்பா:-ஸங்கல்பிக்கப்படும் இந்த லீலா விபூதியை ஸங்கல்பம் என்ற பதம் குறிக்கிறது.

நித்ய விபூதி கூட ஸங்கல்பிக்கப்படுவது தான். ஆனாலும் இங்கு ஸத்யகாம என்றும், ஸத்ய ஸங்கல்ப என்றும் இரண்டு பதங்கள் இருப்பதால் இரண்டுக்கும் அர்த்தத்தை பங்கிட்டு இவ்விதம் அர்த்தம் கூறப்பட்டது.

மேலும் ஸத்ய ஸங்கல்பத்திற்கு மற்றொரு விதமாகவும் பொருள் கூறுகிறார் ஶ்ருதப்ரகாஶிகாசார்யர்.

ஸங்கல்பம் என்ற சொல் ஸங்கல்பிக்கப்படுவது என்ற பொருளில் நித்யவிபூதி, லீலாவிபூதி இரண்டையுமே குறிக்கும். ஆகவே ஒன்றையும் விடாமல் இரண்டு விபூதிகளையுமே பொருளாகக் கொள்ளலாம். ஆகையால் இங்கு ஸங்கல்பம் என்றது ஸங்கல்பிக்கப்படும் என்ற பொருளோடு நில்லாமல், தன் ஸங்கல்பப்படி நடக்குமவற்றைக் குறிக்கிறது. நித்யவிபூதி மாறுபடாதது, லீலா விபூதி மாறுபடக்கூடியது என்று இரண்டுக்கும் வேறுபாடு இருந்தாலும் இரண்டுமே எம்பெருமானுடைய ஸங்கல்பத்தின் படி நடக்கின்றவையே. ஆகையால் எம்பெருமானுடைய ஸத்யமான ஸங்கல்பத்தை அநுவர்த்திக்கின்றவை- பின்பற்றுபவை-என்று இரண்டு விபூதியையும் கொண்டு தன் (எம்பெருமான்) ஸங்கல்பத்தை பின்பற்றுகின்ற நித்யவிபூதி-லீலாவிபூதி என்ற இரண்டு விபூதிகளையும் பெற்றிருக்கை என்ற குணத்தைச் சொல்லுகிறது என்றும் பொருள் கூறியுள்ளார் அவர்.

ஶ்ருத ப்ரகாஶிகாசார்யர் கூறியதன் ஸாரம்:-

ஸத்ய காம: நித்யமாகிய விபூதியைப் பெற்றிருக்கை.

ஸத்ய ஸங்கல்ப: ஸத்யமான ஸங்கல்பத்திற்கு விஷயமான லீலா விபூதியைப் பெற்றிருக்கை

அல்லது ஸத்ய-ஸங்கல்ப: ஸத்யமான தன்னுடைய ஸங்கல்பத்தைப் பின்பற்றும், இரண்டு விபூதிகளையும் பெற்றிருக்கை.





இந்த வ்யாக்யானப்படி ஸத்ய காமத்தினால் நித்யவிபூதி ஒரு நாளும் மாறாதது என்றும், ஸத்யஸங்கல்ப பதத்தினால் இரண்டு விபூதிகளுமே எம்பெருமானுடைய ஸங்கல்பத்தைப் பின்பற்றுபவையேயாகும் என்றும் பொருள் கிடைக்கிறது' என்று கூறப்பட்டதாகிறது.

பெரியவாச்சான் பிள்ளை:-

''ஸத்ய காம:-காம்யந்தே இதிகாமா:-காம்யம் என்றது காமிக்கப்படும் விஷயத்தை; ஸத்யா: காமா: யஸ்ய ஸ: ஸத்ய காம:-கல்யாண குணங்களையும்-விபூதிகளையும் சொல்லுகிறது. ஆஶ்ரிதர்களுக்கு அநுபாவ்யமான குண விபூதிகள் என்கை.

ஸத்ய ஸங்கல்ப-அமோகமான-அபூர்வயோகங்களை ஸ்ருஷ்டிக்க வல்லனாகை.

'ஆஶ்ரித ஸம்ரக்ஷணவிஷயோ மநோரத: காம: । ஸ: அப்ரதிஹதோ பவதீதி ஸத்ய காம: ।

தத்ரக்ஷணுய தேவமநுஷ்யாத்யவதார ஸங்கல்போ மநோரத:। ஸ: அப்ரதிஹதோ பவதீதி ஸத்ய ஸங்கல்ப:।

இக்குணங்களிரண்டும் ஜகத் ஸ்ருஷ்டிக்கு உறுப்பாகையாலே மத்யஸ்த ஜகத்ரக்ஷணார்த்தமாகவுமாம்'' என்பதேயாம். இதன்படி கிடைக்கும் அர்த்தம்:-

'காம சப்தம் முன் காட்டியபடி காம்யந்தே (விரும்பப்படுகின்றன) என்று விரிந்து யாவராலும் விரும்பப்படுகிற எம்பெருமானுடைய கல்யாண குணங்களையும் விபூதிகளையும் சொல்லுகிறது. ஆக ஸத்யங்களான-மாறுதலில்லாத திருக்கல்யாண குணங்களும், விபூதிகளும் ஸத்ய காம பதத்தினால் குறிக்கப்படுகின்றன. அதாவது எம்பெருமானை ஆஶ்ரயிப்பவர்கள் அனுபவிப்பதற்குரிய கல்யாண குணங்கள்-விபூதிகள் எம்பெருமானுக்கு உள்ளன.

ஸத்ய ஸங்கல்பமாவது:- அபூர்வங்களான- அநுபவிப்பதற்கு உரியவையான-போக்ய வஸ்துக்களை ஸ்ருஷ்டிக்கும்போது அவன் செய்யும் ஸங்கல்பம் ஒரு நாளும் வீணாகாது. தடைபடாது என்றபடி.

மற்றோர் விதமாகவும் பொருள் கூறப்படுகிறது.

எம்பெருமானுடைய காமம்-ஸங்கல்பம் என்ற இரண்டும் நித்யங்கள் என்று ஸத்யகாம-ஸத்ய ஸங்கல்ப பதங்கள் கூறு கின்றன.

காமம்- என்பது தன்னை ஆஶ்ரயித்தவர்களை 'இப்படி இப்படி' ரக்ஷிக்கவேண்டும் என்று எம்பெருமான் கொள்ளும் ஆசையாகும். அது ஸத்யம். அதாவது ஒரு நாளும் வீணுவ தில்லை. மற்றையோருடைய ஆசைகள் எல்லாம் நிறைவேறும் என்று கூறுமுடியாது. அதனால் அவை ஸத்யங்கள் அல்ல. ஆக எம்பெருமானுடைய காமம் தான் ஸத்யம் ஆகிறது.

ஸங்கல்பமாவது:-ஆஶ்ரிதர்களை ரக்ஷிப்பதற்காக அவதரித்து எம்பெருமான் தேவனாகவும் மநுஷ்யனாகவும் ம்ருகமாகவும் அவதரித்து ரக்ஷிக்கவேண்டியிருக்கிறது. அதற்காக இவன் ஸங்கல் பமும் ஸத்யமே-அதாவது வீணாகாததே. தடையற்றதேயாம். அதாவது ஸங்கல்பித்தபடியே யாவும் நடக்கும் என்றபடி.

ஆக ஆஶ்ரிதர்களைக் காப்பதற்காக எம்பெருமான் கொள்ளும் காமம் ஸத்யம்; ஆக ஸத்ய காம:

அதற்காக அவதரிக்க வேண்டி இவன் கொள்ளும் ஸங்கல்பமும் ஸத்யமே; ஆக ஸத்ய ஸங்கல்ப:

இந்த வ்யாக்யானத்தில் ஜகத்தை ரக்ஷிப்பதற்காக எம்பெரு மான் கொள்ளும் காமமும் (விருப்பமும்) இதன் பொருட்டு அவதரிப்பதற்காகக் கொள்ளும் ஸங்கல்பமும் ஸத்யங்கள் என்ற ரக்ஷண விஷயமாக காமமும், ஸங்கல்பமும் கூறப்பட்டது.





இந்த உரையின்படி கிடைக்கும் அர்த்தங்களின் சுருக்கம்; ஸத்ய காம:-நித்யங்களான யாவராலும் விரும்பப்படுகிற குணங்களும் - விபூதிகளும்.

ஸத்ய ஸங்கல்ப:- அபூர்வங்களான போக்ய வஸ்துக்களை ஸ்ருஷ்டிப்பதற்காக இவன் கொள்ளும் ஸங்கல்பம் ஸத்யம்-வீணாகாதது.

அல்லது:-ஆஶ்ரிதர்களை ரக்ஷிக்கும் விஷயத்தில் எம்பெருமானின் காமம்-மநோரதம்-விருப்பம் ஸத்யம் - வீணாகாதது. ஆக ஸத்ய காம:.

இதற்காக தேவ மநுஷ்யாதி ரூபமாக அவதரிக்க வேண்டும் என்று இவன் கொள்ளும் ஸங்கல்பமும் ஸத்யம் அதாவது அமோகம்-வீணாகாதது, ஆக ஸத்ய ஸங்கல்பம் என்றபடி.

இனி ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் அருளும் உரை:

**अथेष्ट प्रापणार्थौ गुणावाह-सत्यकाम-सत्यसङ्कल्पेति । इह एतौ शब्दौ भावप्रधानौ कर्मधारय वृत्तौ वा ।**

**काम्यन्ते इति कामाः -स्वेन स्वाश्रितैश्च भोग्याः विभूतयः । ते च सत्याः नित्या इत्यर्थः ।**

**अमिथ्याभूतकामत्वम्-अप्रतिहतेच्छत्वं च नैरर्थ्यक्य-पुनरुक्तिभ्यां नात्र विवक्षितम् ।**

**सत्य सङ्कल्पत्वं स्वावताराद्यपूर्वं भोग्यान्तर सृष्टौ जगद्व्यापारमोक्षप्रदानादिषु च अमोघत्वम् सङ्कल्पत्वम् ।**

**तेन तत्सङ्कल्पादभिमतलाभे निस्संशयत्वम् ।**

(அதேஷ்ட ப்ராபணார்த்தௌ-குணாவாஹ-ஸத்யகாம ஸத்ய ஸங்கல்பேதி । இஹ ஏதௌ ஶப்தௌ பாவப்ரதாநௌ கர்ம தாரய வ்ருத்தௌ வா.

காம்யந்தே இதி காமா: - ஸ்வேந ஸ்வாஶ்ரிதை: ச போக்யா: விபூதய: தே ச ஸத்யா: - நித்யா இத்யர்த்த:

அமித்யாபூத காமத்வம்; அப்ரதிஹதேச்சத்வம் ச நைரர்த்தக்ய-புநருக்திப்யாம் நாத்ரவிவக்ஷிதம்-ஸத்ய ஸங்கல்பத்வம் ஸ்வாவதா ராத்யபூர்வ போக்யாந்தர ஸ்ருஷ்டௌ ஜகத் வ்யாபார மோக்ஷ ப்ரதாநாதிஷு ச அமோக ஸங்கல்பத்வம். தேந தத்ஸங்கல்பாத் அபிமதலாபே நிஸ்ஸம்ஶயத்வம்.

இங்கு தன்னை அண்டியவர்களுக்கு விரும்பியதைக் கொடுப் பதற்குரிய இரண்டு குணங்கள் கூறப்படுகின்றன.

அவை ஸத்ய காமமும்-ஸத்ய ஸங்கல்பமும் ஆகும். பஹுவ்ரீஹிஸமாஸமாக (அன்மொழித் தொகையாக) இருந்தால் ஸத்யமான காமத்தை உடையவன்- ஸத்யமான ஸங்கல்பத்தை உடையவன் என்று பொருள் தந்து எம்பெருமானைக் குறிக்கும் சொற்களாக இருக்கும். குணங்களைக் கூறும் இந்த ஸந்தர்ப்பத்தில் பகவானைக் கூறுவது பொருந்தாது. ஆகவே பாவ ப்ரதானங்களாக இந்த இரண்டு சப்தங்களையும் கொள்ள வேண்டும். அதாவது ஸத்ய காமத்வம்- ஸத்ய ஸங்கல்பத்வம் என்று கூறப்பட்டதாகக் கொள்ள வேண்டும். அப்பொழுது குணங்களையே கூறியதாக முடியும். இப்படியன்றி: ஸத்ய: சாஸௌ காம: ச ஸத்யகாம:. ஸத்ய: சா - ஸௌ ஸங்கல்ப: சேதி ஸத்ய ஸங்கல்ப: என்று கர்ம தாரய ஸமாஸம் அதாவது எழுவாய்த் தொகையாகக் கொண்டால் காமம்-ஸங்கல்பம் என்ற இரண்டு குணங்களையே கூறியதாகும். எப்படியோ எம்பெருமா னுடைய காமம் ஸங்கல்பம் இரண்டும் ஸத்யங்கள் என்றபடி.





முன் கூறியது போல் காம சப்தம் விருப்பத்தை மட்டும் கூறாமல் காம்யந்தே இதிகாமா: என்று விவரிக்கப்பட்டு, விரும்பப்படும் பொருள்களைக் கூறுகிறது. யாவராலும் விரும்பப்படுவன கல்யாண குணங்களும், விபூதிகளுமாகையால் இரண்டுமே காம பதத்திற்குப் பொருளாகின்றன. அவை நித்யங்களாகையால் ஸத்யங்கள் என்றும் கூறப்படுகின்றன.

ஆகையால் ஸத்யகாம என்ற பதம் எம்பெருமானுடைய ஸத்யங்களான கல்யாண குணங்களையும் விபூதிகளையும் குறிக் கின்றது. இவற்றை எம்பெருமானும், அவனையாஶ்ரயித்த வர்களும் விரும்புகின்றனர்.

ஸத்ய ஸங்கல்ப - ஜகத்ரக்ஷணத்திற்காக எம்பெருமான் அவதரிக்க வேண்டியிருக்கிறது. இதற்காக ஸங்கல்பித்துக் கொள்ளவும் வேண்டியிருக்கிறது. உலகிலும் ஒருவன் ஒரு கார்யத்தைச் செய்ய முற்படும்போது 'இதை நான் செய்யப் போகிறேன்' என்று எண்ணுகிறான் அன்றோ! அந்த எண்ணம் தான் ஸங்கல்பம் எனப்படுகிறது. உலகில் நாம் செய்யும் ஸங்கல்பம் யாவும் அப்படியே நிறைவேறும் என்பதில்லை. எம்பெருமானுடைய ஸங்கல்பம் யாவும் கட்டாயம் நிறைவேறியே தீரும்.

இவ்வாறே ஜகத் ஸ்ருஷ்டி முதலியன செய்யும் போதும் எம்பெருமான் ஸங்கல்பம் செய்து தான் ஸ்ருஷ்டிக்கிறான். 'ததைக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயேய' என்றும், ஸ 'ஈக்ஷத லோகாந்நு ஸ்ருஜா இதி' என்றும் உபநிஷத்துக்கள் பலவற்றிலும் எம்பெருமான் ஸங்கல்பம் செய்து தான் ஜகத்தை ஸ்ருஷ்டிக் கிறான் என்று கூறப்பட்டுள்ளது.

பக்தியையோ ப்ரபத்தியையோ மோக்ஷத்தை விரும்பி அனுஷ்டிப்பவர்களுக்கு 'நான் மோக்ஷம் தருகிறேன்-அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி' என்று எம்பெருமான்

செய்யும் ஸங்கல்பமும் ஸத்யஸங்கல்பம் எனப்படுகிறது. இந்த இரண்டு குணங்களையும் அதிலும் ஸத்ய ஸங்கல்பமாகிற குணத்தையாவது அநுஸந்திப்பவர்களுக்கு எம்பெருமான் நமக்கு மோக்ஷம் தருவதாக ஸங்கல்பித்துள்ளானே. அது உண்மையில் நிறைவேறுமா? எவராவது அவனுடைய ஸங்கல்பத்தை நிறை வேற ஒட்டாமல் தடுத்து விடுவார்களோ' என்ற ஸந்தேஹமே வராது. அதனால் தடையோ தயக்கமோ சிறிதுமின்றி பக்தி யையோ, ஶரணாகதியையோ தங்கள் தங்கள் யோக்யதைக்குத் தக்கவாறு செய்ய முற்படுவார்கள் என்று இந்த இரண்டு குணங் களின் விளக்கத்துக்கு பலத்தையும் அருளிச் செய்கிறார் ஸ்வாமி ஸ்ரீதேசிகன். முன் காட்டிய வ்யாக்யானக் கருத்துக்களில் சில வற்றை ஸ்வாமி அங்கீகரித்துள்ளார். ஸத்ய காம பதத்திற்கு இவ்வாறே ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் மூலமந்த்ராதிகாரத்தில் எட்டுமாமூர்த்தி என்ற பாசுரத்தில் 'எண்குணத் தோன்' என்ற பதத்திற்கு வ்யாக்யானம் செய்யும் போது உபநிஷத் ப்ரஸித்தமான அபஹதபாப்மத்வம் முதலான குணங்களை விவரிக்குமிடத்தில், 'ஸத்ய காம ஸத்ய ஸங்கல்ப பதங்களுக்கு நித்யங்களான போக் யங்களை உடையனாகையும் நினைத்து முடிக்க வல்லனா கையும்'' என்று இதே அர்த்தத்தை அருளிச் செய்துள்ளார்.

ஸ்ரீ ஶ்ருதப்ரகாஶிகாசார்யர் ஸத்யகாம சப்தத்திற்குக் காட்டிய பொருள் தான் இங்குக் கூறப்பட்டுள்ளது.

ஸ்ரீபாஷ்யத்தில் தஹராதிகரண பாஷ்ய வ்யாக்யாநத்தில் ஶ்ருத ப்ரகாஶிகையில் 'அதோ போக்ய போகோபகரண-போகஸ்தாந ரூபா: நித்யா: அஸ்ய ஸந்தீத்யுச்யதே'. தத் 'அக்ஷரே-பரமே வ்யோமந்' இத்யுக்த நித்ய விபூதி விசிஷ்டத்வம் ஸத்யகாம ஶப்தார்த்த: (எம்பெருமானுடைய போக்யங்கள்- போகோப கரணங்கள் போக ஸ்தாநங்கள் ஆகிய நித்யங்களான காம்யங்கள்- விரும்பப்படுபவை இந்த எம்பெருமானுக்கு உண்டு என்று கூறப்





பட்டதாகிறது. ஆகையால் ஸத்யகாம பதத்தினால் நித்ய விபூதி யைப் பெற்றிருக்கை கூறப்படுகிறது) என்று விவரிக்கப் பட்டுள்ளது.

மற்றைய முறையில் அர்த்தம் கூறுவது சரியன்று என்று ஶ்ருதப்ரகாஶிகாசார்யரே கூறியுள்ளார்.

ஆக இவ்வளவில் ஸத்ய காமம்-ஸத்ய ஸங்கல்பம் என்ற இரண்டு குணங்களும் எம்பெருமானை ஆஶ்ரயிப்பவர்களுக்கு நிஶ்சயத்தைத்தந்து ஸந்தேஹமில்லாதபடிச் செய்து உபாயத்தை அனுஷ்டிக்கச் செய்து பலத்தைத் தரவல்லன என்பதை நாம் அறியவேண்டும். அதற்காகவே இவ்வளவு விரிவு.

---

# 12. க்ருதித்வம்

कृतित्वं च कृतज्ञत्वं मुख्यौ भगवतो गुणौ ।
आश्रितानां रक्षणाय कल्पेते बहुभिर्मुखैः ॥
तयोरेकं कृतित्वं हि बहुधात्र प्रपञ्च्यते ।
पूर्व्यैः प्रदर्शितैरद्य मार्गैर्मान्यतमैर्मुदा ॥

(க்ருதித்வம் ச க்ருதஜ்ஞத்வம் முக்யௌ பகவதோ குணௌ ।
ஆஶ்ரிதாநாம் ரக்ஷணாய கல்பேதே பஹுபிர்முகை: ॥
தயோரேகம் கிருதித்வம் ஹி பஹுதாத்ர ப்ரபஞ்ச்யதே ।
பூர்வ்யை: ப்ரதர்ஶிதைரத்ய மார்கைர்மாந்யதமைர் முதா ॥)

இனி 'க்ருதித்வம்-க்ருதஜ்ஞதா' என்ற இரண்டு குணங்களை அனுபவிப்போம். எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களை எம்பெருமானார் அடுக்காக எடுத்துக் காட்டியுள்ள வாக்யத்தின் முடிவில் உள்ளவை க்ருதித்வம், க்ருதஜ்ஞத்வம் ஆகிய இரண்டு குணங்கள். அவற்றை இங்கே பூர்வர்கள் காட்டிய வகையில் அனுபவிப்போம்.

பக்த ரக்ஷணத்தில் பயன்படும் குணங்கள் 'ஸௌஶீல்யம் முதலாக 'ஸ்தைர்யம்' முடிவாக உள்ள பன்னிரண்டு என்று முன்னமே பகுத்துக் கூறப்பட்டுள்ளன. இவற்றைக் காட்டிலும் வேறுபட்டு மிகவும் பயன்படக்கூடியவை இந்த இரண்டு குணங்களும் என்கிறார் ஸ்ரீ ஶ்ருதப்ரகாஶிகாசார்யர்.

அவர் தரும் விளக்கம்:

आश्रितकार्यपूरणेन कृतार्थत्वं-कृतित्वम् । यद्वा-कृतं-क्रिया तद्वत्त्वम् . आश्रितकर्तव्यस्य स्वयं कर्तृत्वम् । यथा-'अहं स्मरामि' इति ॥





(ஆஶ்ரிதகார்யபூரணேந க்ருதார்த்தத்வம்-க்ருதித்வம் । யத்வா-க்ருதம் க்ரியா தத்வத்த்வம் । ஆஶ்ரித கர்த்தவ்யஸ்ய ஸ்வயம் கர்த்ருத்வம் । யதா-'அஹம் ஸ்மராமி' இதி)

தன்னை ஆஶ்ரயித்வர்களுக்குச் செய்ய வேண்டிய நன்மைகளைச் செய்வதால் தான் க்ருதார்த்தனாகை-அதாவது பலன் பெற்றதாகை.

இந்த அர்த்தத்தை ஸ்ரீபெரியவாச்சான்பிள்ளை:- 'ஆஶ்ரிதர் அபேக்ஷிதம் பெற்றால் அந்த லாபம் தன்னதாயிருக்கை' என்று அருளிச் செய்துள்ளார்.

ஆஶ்ரிதர்களுடைய கார்யங்களை நிறைவேற்றி வைப்பதாலேயே தனக்கு ஒரு லாபம்-புருஷார்த்தம் கிடைத்தாக இருக்கைதான் க்ருதித்வம்.

இதற்குப் பெரியவாச்சான் பிள்ளை காட்டும் உதாஹரணம் இது.

अभिषिच्य च लङ्कायां राक्षसेन्द्रं विभीषणम् ।
कृतकृत्यस्तदा रामः विज्वरः प्रमुमोद ह ॥

(அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம்
க்ருதக்ருத்யஸ்ததா ராம: விஜ்வர: ப்ரமுமோத ஹ ॥)

ராவணவதத்திற்குப் பின் ஸ்ரீவிபீஷணாழ்வானை ராக்ஷஸர்களுக்கு அரசனாக ஸ்ரீராமன் முடிசூட்டுவித்தார். இதற்குமுன் ராவணன் உயிருடன் இருக்கும்போதே ஸமுத்ரக்கரையில் வாநரவீரர்களின் நடுவில் இந்த விபீஷணனுக்கு ராக்ஷஸராஜனாக முடி சூட்டுவித்தான். இப்போது ராவணவதம் ஆன பிறகு லங்கையில் முடிசூட்டுவித்தான். 'லங்காயாம் ச' லங்கையிலும் என்று சொல்லியிருப்பதால் இது கிடைக்கிறது.

உத்தரார்தத்தில் உள்ள **तदा** (ததா) என்ற சொல்லை ஒவ்வொரு பதத்தோடும் சேர்க்க வேண்டும். அப்பொழுது ததா க்ருத க்ருத்ய: ததா ராம:, ததா விஜ்வர: ததா ப்ரமுமோத ஹ, என்று ஆகிறது. ததா-க்ருதக்ருத்ய: விபீஷணனுக்கு முடிசூட்டிய பிறகு தான் ராமன்-க்ருதக்ருத்யனானான். அதற்கு முன்பு அக்ருதக்ருத்யன்: செய்ய வேண்டியதைச் செய்யாதவனாக இருந்தான்.

**ததா-ராம:** விபீஷணனுக்கு முடிசூட்டிய பிறகுதான் இவன் ராமன் அழகன் ஆனான், அதற்குமுன் அராமனாக-அழகு இல்லாதவனாக இருந்தான்.

**ததா விஜ்வர:**-விபீஷணனுக்கு முடி சூட்டியபிறகு தான் ஜ்வரம்: சிந்தை அதாவது கவலை அற்றவனாக ஆனான். அதற்கு முன் ஸஜ்வரனாக சிந்தையுடன் கூடியவனாக அதாவது கவலை உடையவனாக இருந்தான்.

**ததா-ப்ரமுமோத ஹ** விபீஷணனுக்கு முடிசூட்டிய பிறகுதான் ராமன் மகிழ்ந்தான். அதற்கு முன் ஸந்தோஷப்படவில்லை என்றபடி.

இங்கு **ததா-க்ருதக்ருத்ய:** என்பது மட்டும் தான் வேண்டுவதாகும். ஸ்ரீ விபீஷணாழ்வானுக்குப் பட்டாபிஷேகம் செய்து வைத்ததனாலேயே- தனக்காகச் செய்ய வேண்டிய கார்யங்கள் அனைத்தும் செய்யப்பட்டு விட்டனவாகவே ஸ்ரீராமன் நினைத்தானாம். ஸ்ரீ விபீஷணனுக்கு ஏற்பட்ட நன்மை தன்னுடையதேயாகும். தனக்கென்று வேறு நன்மை கிடையாது- வேண்டியதுமில்லை என்று ஸ்ரீராமன் நினைத்திருப்பான் என்றபடி. மேலும் ஒரு அர்த்தம் காட்டுகிறார் ஸ்ரீ ஶ்ருதப்ரகாஶிகாசார்யர்; அதாவது தன்னை ஆஶ்ரயித்தவர்கள் செய்ய வேண்டிய கார்யங்களைச் செய்ய வேண்டியவன் தான் தான் என்று நினைத்திருப்பான் எம்பெருமான். ஆக பக்தர்கள் செய்ய வேண்டிய செயல்களுக்குத் தான் செய்யக்கடவனாயிருக்கை-கர்த்தாவாயிருக்கை என்றபடி.





முன் சொன்னது ஆஶ்ரிதர்களுடைய கார்யங்களை நிறைவேற்றி வைப்பதாலேயே தனக்கு லாபம் பெற்றவனாயிருக்கை க்ருதித்வம் என்பதாகும். இப்பொழுது கூறுவது ஆஶ்ரிதர்கள் செய்ய வேண்டியதைத் தானே செய்கை க்ருதித்வம் என்பதாகும். அதாவது தன் பக்தர்கள் செய்ய வேண்டிய கார்யங்கள் அனைத்தையுமே தானே செய்து தருவதாக ஏற்றுக் கொள்ளுதல் க்ருதித்வமாகும் என்றபடி. பெரியவாச்சான் பிள்ளை இந்த இரண்டாவது அர்த்தத்தையும் அப்படியே தமிழில் காட்டுகிறார்-'இவர்கள் கர்த்தவ்யங்களையடையத் தானே ஏறிட்டுக் கொண்டிருக்கை என்னவுமாம்' என்று. இந்தப் பொருளில் க்ருதம் என்ற சொல்லின் மேல் உடைமைப் பொருளைத் தரும் ப்ரத்யயம் ஒன்று வந்து க்ருதீ என்ற சொல் உருவாயிருப்பதாகக் கொள்ள வேண்டும்.

க்ருதம்-அஸ்ய-அஸ்தீதி- க்ருதீ, தஸ்ய பாவ:-க்ருதித்வம். என்று விக்ரஹம். க்ருதம் என்ற சொல் 'க்ரியை-செயல்' என்ற பொருளைத் தருவதாகும். தன்னை ஆஶ்ரயித்தவர்கள் செய்ய வேண்டியவற்றைத் தானே செய்வதாகக் கொள்ளல்- என்பதற்கு ஏற்ற உதாஹரணம் ஒன்றையும் காட்டுகிறார் ஸ்ரீ ஶ்ருதப்ரகாஶிகாசார்யர்-அதாவது ஸ்ரீவராஹமூர்த்தியான எம்பெருமான் பூமிப்பிராட்டியிடம் கூறுகிறான். ஒருவன் தன் சரீரம் நன்றாக இருக்கும் ஸமயத்தில் எப்பொழுதாவது ஒரு தடவை என்னைச் சரணமாகப் பற்றி விட்டால் கடைசிக்காலத்தில் அவன் என்னை நினைக்க முடியாமல் கல்லைப் போலவும், கட்டையைப் போலவும் நினைவற்றிருக்கும் நிலையிலும் நான் அவனை நினைப்பேன். நானே பரமபதத்திற்கு அவனை அழைத்துச் செல்வேன்- என்று அருளிச் செய்துள்ளான்.

**स्थिते मनसि सुस्वस्थे शरीरे सति यो नरः ।**

**धातु साम्ये स्थिते स्मर्ता विश्वरूपं च माम् अजम् ।**

**ततस्तं म्रियमाणं तु काष्ठपाषाणसन्निभम् ।**
**अहं स्मरामि मद्भक्तं नयामि परमां गतिम् ॥**

(ஸ்திதே மநஸி ஸுஸ்வஸ்த்தே ஶரீரே ஸதி யோ நர: ।
தாது ஸாம்யே ஸ்திதே ஸ்மர்த்தா விஶ்வரூபம் ச மாம் அஜம் ॥
ததஸ்தம் ம்ரியமாணம் து காஷ்ட பாஷாண ஸந்நிபம் ।
அஹம் ஸ்மராமி மத் பக்தம் நயாமி பரமாம் கதிம் ॥)

என்று அருளிச்செய்துள்ளான். கடைசி காலத்தில் ஜீவாத்மாக்கள் எம்பெருமானை நினைக்கவேண்டியிருக்க, ஶரஜ்ஞதன் என்ற காரணத்தினால் தன்னை நினையாதிருக்கும் அவர்களை இவன் நினைக்கிறான் அன்றோ! தன்னிடத்தில் பரந்யாஸம் செய்தவர்களுடைய கார்யங்களையெல்லாம் இவன் தானே செய்து வருகிறான்.

இனி ஸ்வாமி ஶ்ரீதேசிகன் அருளும் அர்த்த விசேஷங்களை அனுபவிப்போம். இங்குச் சொல்ல இருக்கும் இந்த க்ருதித்வம், க்ருதஜ்ஞதா என்ற இரண்டு குணங்களும் முன் கூறிய குணங்கள் யாவற்றையும் விட பக்தர்களுக்கு மிகவும் உதவுகின்றன என்று அவதாரிகை வைத்து விளக்குகிறார் ஸ்வாமி தேசிகன்.

**उक्तगुणवर्गादधिकोपकारकं गुणद्वयमाह-कृतित्व-कृतज्ञतेति । कृतमिह-उपकारः कृतज्ञादि शब्दे तथादृष्टेः । तद्वत्त्वं-कृतित्वम् उपकर्तृत्व मित्यर्थः ।**

உலகில் ஒருவனை க்ருதஜ்ஞன் (நன்றியறிந்தவன்) என்று கூறுகிறோம். இதில் உள்ள க்ருத என்ற சொல் உபகாரம் என்ற அர்த்தத்தைக் குறிக்கிறது. இதை உடையவன் க்ருதீ ஆவான். இவனுடைய தன்மை க்ருதித்வம்-அதாவது உபகரிக்கும் (உதவும்) தன்மை க்ருதித்வம் என்று கூறியதாகிறது. எம்பெருமான் யாவர்க்கும் எல்லா உபகாரங்களையும் செய்பவன் என்பது ப்ரஸித்தம்.





எம்பெருமான் நமக்குச் செய்துள்ள உபகாரங்கள் ஒன்றா இரண்டா கணக்கிட்டுச் சொல்லுவதற்கு? அவன் செய்துள்ள உபகாரங்கள் பலப்பல வாகையாலே நம்மால் அறியமுடியாது என்பதை ஸ்வாமி நம்மாழ்வார் தம் திருவாய்மொழியில் கூறுகிறார்.

**ஒத்தாரை மிக்காரை இலையாய மாமாயா!**
**ஒத்தாய் எம்பொருட்கும் உயிராய் என்னைப் பெற்ற**
**அத்தாயாய்த் தந்தையாய் அறியாதன அறிவித்து**
**அத்தா நீ செய்தன அடியேன் அறியேனே!**
**-திருவாய்மொழி (2-3-2)**

எம்பெருமானே, உன்னோடு ஒத்தவரோ உன்னிலும் மிக்கவரோ எவரும் கிடையாது. இது உன்னுடைய ஆஶ்சர்யமான ஸ்வபாவம். நீயே உலகில் எல்லாப் பொருள்களோடும் ஒப்புச் சொல்லும்படி வந்து அவதரித்தருளினாய். ஒருவன் தான் தனக்குப் பண்ணிக் கொள்ளும் நன்மைகளையும் நீயே செய்தருளுகிறாய். இவ்வாறே பெற்ற தாய் செய்யும் நன்மைகளையும், தகப்பன் செய்யும் நன்மைகளையும் ஆசார்யன் செய்யும் நன்மைகளையும் நீயே செய்தருளுகிறாய். உபகாரம் செய்யும் நீ ஸ்வாமீ, உபகாரத்தைப் பெறும் நான் உமக்கு அடியேன்.

நீ உடையவனாகையாலே உபகாரம் செய்யும் உரிமை பெற்றுள்ளாய். நான் அடியவனாகையாலே அவற்றைப் பெற உரிமை பெற்றுள்ளேன். நீ செய்த உபகாரங்கள் அனைத்தையும் அடியேன் அளவிட்டுக் கூறமுடியாதவனாயிருக்கிறேன். உபகாரம் செய்த ஸர்வஜ்ஞனான நீயே அறிந்து சொன்னால் தான் அடியேனால் அறியமுடியும் என்கிறார்.

**மாமாயா**-அத்யாஶ்சர்யமான ஸ்வபாவம் உடைய எம்பெருமானே நீ **உயிராய்ச்** செய்தன அடியேன் அறியேனே.

மாமாயா! **நீ என்னைப் பெற்ற அத்தாயாய்** செய்தன அடியேன் அறியேனே.

மாமாயா! நீ தந்தையாய் செய்தன அடியேன் அறியேனே மாமாயா! அத்தா! நீ அறியாதன அறிவித்துச் செய்தன அடியேன் அறியேனே!

எம்பெருமான் உயிராய்ச் செய்த நன்மைகள் -ஒருவன் தனக்குத் தான் செய்து கொள்ளும் நன்மைகள் அனைத்தையும் எம்பெருமான் நமக்கு ஆத்மாவாய் இருந்து கொண்டு செய்கிறான்.

**'நாம்'** என்று ஒருவன் இருந்தால்தானே எம்பெருமான் உபகாரம் செய்ய முடியும்? ஆகவே நம்மைப் பெற்ற தாயே சிறந்தவளாகிறாள். அந்தத் தாய் தன் குழந்தைக்குச் செய்யும் நன்மைகள் அனைவற்றையும் செய்கிறான் எம்பெருமான்.

அந்தத்தாயை ஒரு பையாகக் கொண்டுதானே கர்ப்பத்தில் குழந்தை உருப்பெறுகிறது. அந்தப் பையில் கர்பாதாநம் செய்கி றான் தகப்பன், இவன் மனைவியை ஒருபையாகக் கொண்டு அவளிடத்தில் கர்பத்தை வைக்கிறான். ஆகவே தாயைவிடத் தமப்பன் சிறந்தவன் என்று கொண்டு தமப்பன் செய்யும் உபகா ரத்தையும் நமக்குச் செய்கிறான் எம்பெருமான்.

மாதாவும் பிதாவுமாகச் சேர்ந்து குழந்தைக்குச் சரீரத்தைத்தான் தருகிறார்கள். இவர்களைவிட, சிறந்த அறிவைக் கொடுத்து அந்தக் குழந்தையை உருவாக்குபவன் ஆசார்யன்; ஆக மாதா பிதாக்களைக் காட்டிலும் ஆசார்யன் உயர்ந்தவனாயிற்றே என்று நினைத்து, அந்த ஆசார்யர்களாகவும் எம்பெருமானே இருந்து நாம் அறிய முடியாத அறியாத விஷயங்களையெல்லாம் தம் உபதேசங்களினாலே நமக்கு உணர்த்துகிறான். ஆக ஆத்மாவாய், மாதாவாய், பிதாவாய் ஆசார்யனாய், இருந்து கொண்டு உதவி செய்கிறான் எம்பெருமான் என்று அவன் செய்த உபகாரங்களை நினைத்து அவனைக் கொண்டாடுகிறார்.





ஆக இங்கு 'க்ருதித்வம்' என்பதால் எம்பெருமான் நமக்குப் பல விதங்களிலும் உதவுகின்றவன் ஆவான் என்றபடி.

ஸ்வாமி ஸ்ரீதேசிகனும் உபகாரஸங்க்ரஹம் என்னும் ரஹஸ்ய க்ரந்தத்தில் 'அழியாத அருளாளப் பெருமாள் செய்யும் அந்தமிலா உதவியெலாம் அளிப்பார் ஆரே!,' என்று அருளிச் செய்துள்ளார்.

ஒரு நாளும் அழியாத அருளுடையவன் எம்பெருமான். அருளாளப் பெருமாள் என்ற திருநாமத்தினாலேயே இது கிடைக் கின்றது. இவன் செய்த உபகாரங்கள் அனைத்தையும் கணக் கிட்டு இவ்வளவுதான் அவன் செய்யும் உபகாரங்கள் என்று ஒரு வராலும் கூற முடியாது என்கிறார் ஸ்வாமி ஸ்ரீதேசிகன். வேறு விதமாகவும் அர்த்தம் அருளுகிறார் ஸ்வாமி ஸ்ரீதேசிகன்.

**यद्वा 'अभिषिच्य च लङ्कायाम्' इत्याद्युक्तम्-आश्रित कार्य पूरणेन कृतकृत्यत्वम्। कर्तव्यशेषरहितेषु कृतिशब्द प्रयोगात् ॥**

முன்பு ஸ்ரீ ஶ்ருதப்ரகாஶிகாசார்யர் காட்டின அர்த்தமே தான் இது. பெரும்பாலும் சப்தம்கூட அதேதான், உதாஹரணமும் அதுவேதான்.

ஆஶ்ரிதர்களுடைய கார்யங்களை நிறைவேற்றி வைத்து அதனாலேயே தன்னுடைய கார்யங்களும் நிறைவேறியனவாக இருக்கை க்ருதித்வம் எனப்படும்.

ஸ்ரீ விபீஷணாழ்வானுக்கு லங்கையில் பட்டாபிஷேகம் செய்வித்ததனாலேயே தன் கார்யங்கள் யாவையும் நிறைவேற்றி விட்டவனாக அதாவது க்ருதக்ருத்யனாகவே இருந்தான் அன்றோ? இதுதான் க்ருதித்வம் எனப்படும். செய்ய வேண்டிய கார்யங்கள் அனைத்தையும் செய்து முடித்து இனிச் செய்ய வேண்டியது ஏதுமில்லாமல் இருப்பர்கள் விஷயத்தில் 'க்ருதீ' என்ற சொல் வழங்கப்படுகிறது உலகில் கண்கூடு. தங்கள் கார்யங்கள் அனைத்தையுமே தாங்களே முயன்று இனி மிச்சம்

ஏதும் இராதபடி நிறைவேற்றி இருப்பவர்களை உலகில் 'க்ருதிந:' என்பர்.

ஆனால் எம்பெருமான் தன்னை ஆஶ்ரயித்தவர்களுடைய கார்யங்களை நிறைவேற்றி வைப்பதாலேயே தன் கார்யங்கள் அனைத்தும் நிறைவேறிவிட்டதாக நினைப்பவன்.

ஆஶ்ரிதர்களுடைய கார்யங்களை நிறைவேற்றி வைப்பதையே தன்னுடைய கார்யம் நிறைவேறுதாகக் கொண்டவன் எம்பெருமான் என்பதால் அவனை நாம் ஆஶ்ரயித்தால் நாம் விரும்பும் கார்யங்களை அவன் கட்டாயம் நிறைவேற்றி வைப்பான் என்ற நம்பிக்கை ஏற்பட்டு அனைவரும் அவனை ஆஶ்ரயிப்பார்கள் என்று இந்தக் குணம் விவரிக்கப்படுகிறது. மேலும் 'க்ருதீ' என்ற இந்தப் பதத்திற்கு இரண்டு அர்த்தங்களை அருளுகிறார் ஸ்வாமி ஸ்ரீதேசிகன்.

**'न मे पार्थास्ति कर्तव्यम्' इत्युक्तं विहितानुष्ठान नैरपेक्ष्यम् धर्म प्रवर्तनार्थानुष्ठानत्वं वा विवक्षितम्।**

க்ருதித்வம்= செய்ய வேண்டியது ஒன்றுமில்லாதவனாயிருக்கை அதாவது எம்பெருமான் எல்லாம் பெற்றவனாய் இருப்பதால் ஒரு கார்யத்தைச் செய்து புதிதாக ஒன்றையும் பெற வேண்டியவன் அல்லன்.

ப்ராஹ்மண-க்ஷத்ரியாதி குலங்களில் அவதரித்திருந்தும் அந்தந்த குலத்திற்கு ஏற்ற தர்மங்களைச் செய்யவேண்டிய நிர்பந்தம் (கட்டாயம்) இல்லாதவன்.இப்படியிருக்கை தான் க்ருதித்வம். இதை எம்பெருமானான ஸ்ரீபார்த்தஸாரதியே ஸ்ரீ கீதையில் அர்ஜுனனை நோக்கி அருளுகிறான்.

**न मे पार्थास्ति कर्तव्यं त्रिषु लोकेषु किंचन।**
**नानवाप्तमवाप्तव्यं वर्त एव च कर्मणि ॥३.२२॥**





ந மே பார்த்தாஸ்தி கர்த்தவ்யம் த்ரிஷுலோகேஷு கிஞ்சந।
நாநவாப்தம் அவாப்தவ்யம் வர்த்த ஏவ ச கர்மணி ॥3.22॥

அர்ஜுந! நான் ஸர்வேஶ்வரன், எல்லா நன்மைகளையும் ஏற்கெனவே பெற்றவன்: வேண்டும் போது நன்மைகள் அனைத்தையும் தடையின்றிப் பெறக்கூடியவனும் கூட. அப்படிப்பட்ட நான் தான் ஜகத் ரக்ஷணத்திற்காக தேவனாயும், மனுஷ்யனாயும் அவதரிக்கிறேன். ஆனால் அந்தந்த ஜாதிக்கு ஏற்ற வர்ணாஶ்ரம தர்மங்களை நான் அனுஷ்டிக்க வேண்டியதில்லை. மற்றையவர்கள் விரும்பும் நன்மைகள் அவர்களுக்கு நினைத்த மாத்ரத்திலேயே கிடைப்பதில்லை.அதற்காக அவர்கள் முயன்று சில கார்யங்களைச் செய்து அவற்றைப் பெற வேண்டியுள்ளது. ஆகவே அவர்கள் கர்மாக்களைச் செய்கின்றனர்.

அவர்களுக்கு உள்ளது போல் எனக்கு (பகவானுக்கு) பயம் கிடையாது. மற்றையவர்கள் தங்கள் பாபத்தைப் போக்கிக் கொள்ள கர்மாக்களைச் செய்வது போலவும் நான் செய்ய வேண்டியதில்லை என்றபடி. ஆயினும் உலகத்தவர்களை நல்வழிப் படுத்துவதற்காக நான் அவதரிக்கும் குலங்களுக்கு ஏற்ப கர்மாக்களைச் செய்து வருகிறேன் என்கிறான் முன் கூறிய ஶ்லோகத்தில்.

இதில் கூறப்பட்டுள்ள விஹித கர்மாக்களைச் செய்ய வேண்டிய நிலை இல்லாதபடி இருக்கை தான் 'க்ருதித்வம்' என்கிறார் ஸ்வாமி இங்கு.

மேலும் கண்ணன் கூறுகிறான் வேத விஹிதங்களான கர்மாக்களை அநுஷ்டிப்பதில் எனக்கு அபேக்ஷை கிடையாது தான். நான் அவதரிக்கும் குலங்களுக்கு ஏற்ற கர்மாக்களை அனுஷ்டித்து வருகிறேன். இதற்குரிய காரணத்தையும் கூறுகிறேன் கேள்.

ஆசாரம் உடைய பெரியோர்களில் முன்னணியில் இருப்பவர்

வஸுதேவர். அவருக்குப் புத்ரனாக பிறந்து சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மாக்களை நான் செய்யாவிடில் மற்றை யோர்கள் என்னைப் பார்த்து இப்படி (கர்மாக்களைச் செய்யாமல்) இருப்பது தான் தர்மமே எனத் தவறாக எண்ணி கர்மாக்களைச் செய்யாமல் விட்டு விடுவார்கள். பிறகு அவர்களுக்கு அதனால் நரகமே உண்டாகும். இம் மாதிரியான ஒரு துர்தசை வரக்கூடாது என்று எண்ணி அவர்களை ரக்ஷிப்பதற்காகத் தான் கர்மாக்களைச் செய்து வருகிறேன் என்கிறான் கண்ணன். ஆக இதையும் க்ருதி த்வத்திற்கு லக்ஷ்யமாகக் காட்டுகிறார் ஸ்வாமி ஸ்ரீதேசிகன்.

**धर्म प्रवर्तनार्थानुष्ठानत्वं वा विवक्षितम्** என்று உலகில் தர்மத்தை நிலைநாட்டத் தான் தர்மத்தை அநுஷ்டித்தல் க்ருதித்வம் என்ற படி.

முன்பு-க்ருதித்வம் செய்யவேண்டியது ஒன்றுமில்லாமல் இருக்கை என்ற பொருளில் தனக்குக் கர்மாநுஷ்டாநம் வேண்டுவ தில்லை என்று கண்ணன் ஸ்ரீகீதையில் கூறியதைக் காட்டி அப்படி அர்த்தம் சொல்லப்பட்டது.

தற்போது, க்ருதம்-க்ரியா-செயல், அதை உடையவனாயிருத் தல் என்ற பொருளில் முன் கூறியபடி உலகமக்களுக்குக் கர்மா நுஷ்டாநத்தில் ஶ்ரத்தை வந்து அவர்களும் அவற்றை அனுஷ் டித்து க்ஷேமத்தைப் பெறவேண்டும் என்ற நோக்கத்தோடு கர்மாக் களை அநுஷ்டித்தலும் க்ருதித்வம் என்பதற்கு விளக்கமாக அமை யும் என்று திருவுள்ளத்தால் இப்படியும் அருளிச் செய்தபடி.

உண்மையில், தான் கர்மாக்களை அனுஷ்டிக்கவேண்டாத வனாயிருந்து அவற்றை அனுஷ்டிப்பது உலக க்ஷேமத்திற்காக வாதலால் இதனால் எம்பெருமான் பரோபகாரம் செய்தவனா கவே ஆகிறான்.

இப்படிப் பல விதங்களில் விரிந்து கிடக்கும் இந்த க்ருதித்வம்





என்ற குணம் எம்பெருமானை ஆஶ்ரயித்தவர்களுக்கு மிகவும் பயன்படும். இந்தக் கட்டுரையின் வாயிலாக இதன் பெருமை களை அறிந்தவர் உடனே அவனைச் சரணம் அடைவார்கள் என்பது திண்ணம்.

**एवं विज्ञाय विवृतं कृतित्वं कृतिनो ध्रुवम् ।**
**समाश्रयेरन् मालोलं इति विश्वसिमो वयम् ॥**

ஏவம் விஜ்ஞாய விவ்ருதம் க்ருதித்வம் க்ருதிநோ த்ருவம் ।
ஸமாஶ்ரயேரந் மாலோலம் இதிவிஶ்வ ஸிமோ வயம் ॥)

---

## 13. க்ருதஜ்ஞதா

**कृतज्ञत्वं भगवतः ज्ञात्वा निर्भरतां वयम् ।**
**प्राप्नुमः फलसिद्धौ हि निष्किञ्चनजना अपि ॥**

(க்ருதஜ்ஞத்வம் பகவத: ஜ்ஞாத்வா நிர்பரதாம் வயம் ।

ப்ராப்நும: பலஸித்தெள ஹி நிஷ்கிஞ்சநஜநா அபி ॥)

ஸ்வாமி எம்பெருமானார் அருளிய ஶரணாகதிகத்யத்தில் எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களை அடுக்கிக் காட்டும் வாக்யத்தில் கடைசியாகக் கூறப்பட்டுள்ள குணம் இந்த க்ருதஜ்ஞதை என்பது.

**க்ருதஜ்ஞ:**-க்ருதம் ஜாநாதி என்று விரிகின்றது. செய்ததை அறிபவன் என்பது இதன் பொருள். செய்ததை மட்டுமே அறிபவன் என்பது க்ருதம் ஏவ ஜாநாதி என்று ஏவகாரத்தைக் கூட்டிக் கொண்டால் கிடைக்கும் பொருள் ஆகும்.

அதாவது எம்பெருமான் தன் விஷயத்தில் ஒருவன் ஏற்கெனவே செய்த நன்மையை மட்டுமே அறிவான். பிறகு அவன் செய்யப் போவதை அறியமாட்டான் என்றபடி.

உலகில் ஒரு ப்ரபு இருக்கிறான். இவன் விரும்பினால் எல்லோருக்கும் எல்லாவித நன்மைகளையும் செய்வான். அப்படிப்பட்டவனிடமிருந்து உதவி பெற நினைத்த ஒருவன் அவனுக்குச் சில நன்மைகளை அவன் விரும்பும் வகையில் செய்கிறான். இவ்வளவிலேயே அந்த ப்ரபு தனக்கு நன்மை செய்தவனுக்கு உதவமாட்டான். 'இன்று எனக்கு நன்மை செய்த இவன் நாளைக்கு அதாவது வருங்காலத்தில் என்ன செய்வானோ! இவ்வாறே மேலும் நன்மைகளையே செய்வானோ? அல்லது தீங்கு





களைத் தான் செய்வானோ என்று இவன் வருங்காலத்தில் செய்வதை அறிந்த பிறகே பலன் தரலாம் என்று ஒரு உதவியும் செய்யாமல் இருந்து விடுவான். உலகில் இது கண்கூடு.

எம்பெருமான் அப்படிப்பட்டவன் அல்லன்; நாளை அவன் எது வேண்டுமானாலும் செய்துவிட்டுப் போகட்டும்; இன்று வரை அவன் செய்துள்ளது என்ன? நன்மையைத் தானே செய்துள்ளான் என்று செய்ததை மட்டும் கொண்டு அவனை அநுக்ரஹிப்பான் எம்பெருமான். பிறகு அவன் என்ன செய்யப் போகிறான், அதைப் பார்த்துக் கொண்டு பிறகு அவனை அநுக்ரஹிக்கலாம் என்றிருக்கமாட்டான் எம்பெருமான் என்று அவனுடைய பெருந் தன்மையை வெளிப்படுத்துகிறது இந்த மஹா குணம். இது க்ருதமேவ ஜாநாதி (செய்ததை மட்டுமே அறிபவன்) என்று விக்ரஹம் காட்டுவதால் கிடைப்பதாகும். இந்த ஏவகாரத்தினால் செய்யப்போவதை அறியமாட்டான் என்பதும் கிடைக் கிறது.

இந்த விஷயத்தைக் காட்டும் ஸ்ரீ ஶ்ருதப்ரகாஶிகாசார்யருடைய வாக்யம் **कृतमेव जानाति; न तु करिष्यमाणांशं अकृतम् इति कृतज्ञः ।** (க்ருதமேவ ஜாநாதி ந து கரிஷ்யமாணம்ஶம் அக்ருதம் இதி க்ருதஜ்ஞ:) என்பதாகும்.

இங்கு வாசக மஹாஶயர்களுக்கு ஒரு விஷயம்:- எழுதுவதோ பேசுவதோ யாவும் சாஸ்த்ரார்த்தங்களை எளியவரும் உணர வேண்டும் என்பதற்காகத்தான்.

பத்ரிகையைப் படிப்பவர்கள் இருவகைப்படுவர்; ஒரு சிலர் ஸம்ஸ்க்ருத ஜ்ஞாநம் உள்ளவர்களாய் ப்ரமாணங்களுடன் தத்த்வங்களை அறியவேண்டும் என்று விரும்புபவர்; மற்றும் சிலர் ப்ரமாணங்கள் இன்றி விஷயங்களை மட்டும் அறிந்தால் போதும் என்றிருப்பார். இவர்கள் பலர், முந்தையவர்கள் சிலர். யாவரையும் த்ருப்திப்படுத்த வேண்டுவது எம்போல்வரின் கடமை

யாகும். ப்ரமாணங்களை அறியமுடியாமல் விஷயங்களை மட்டும் அறிய விரும்புபவர் ஆங்காங்கு நாம் எடுத்துக் காட்டும் ப்ரமாணங்களை விட்டு விட்டு விஷயங்களை மட்டும் அறியலாம். அதற்கேற்பத்தான் நாம் விஷயங்களை முதலில் விளக்கி விட்டுப் பிறகு ப்ரமாணங்களைக் காட்டுகிறோம். இந்த ப்ரமாணங்களை விட்டால் கூட தத்த்வங்களை முழுவதாக அறிய முடியும்.

நம் ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியா வாசகர்களின் ஆதரவு பெருக வேண்டும் என்பதில் நாமும் முழுநோக்கு உடையோம். நீங்கள் இம்மாதிரி விஷயங்களை வெறுக்காமல் தொடர்ந்து படித்துக் கொண்டே வந்தால் நாளடைவில் உங்களுக்கே ஸம்ஸ்க்ருதப் புலமை வந்து விடும். பிறகு இப்படி எழுதுவதை நீங்களும் விரும்புவீர்கள்.

மேலும் ஒரு அபூர்வமான அர்த்தம் கிடைக்கிறது. க்ருதஜ்ஞ: என்ற சொல்லால், செய்த நன்றியை அறிபவன் (க்ருதம் ஜாநாதி) தன்னை அடைந்தவர்கள் ஒரு சிறு நன்றி செய்தால் கூட அதை மட்டுமே அறிவான் எம்பெருமான். அதை மட்டும் தான் அறிவான் என்றால் மற்றொன்றை அறியமாட்டான் என்று ஏற்படுகிறது. அந்த மற்றொன்று எது? அதாவது தன்னை ஆஶ்ரயித்தவர்கள் தன்னை ஆஶ்ரயித்த பிறகு செய்யும் தோஷத்தை அறிய மாட்டான். தன்னை ஆஶ்ரயித்த செயல் ஒன்றையே அதாவது தன்னிடம் பரந்யாஸம் செய்தது ஒன்றையேதான் அறிவான். பிறகு அவர்கள் செய்யும் தோஷத்தை அறியவேமாட்டான்.

அவ்வாறே ஆஶ்ரயித்தவர்களுக்குத் தான் (எம்பெருமான்) செய்த நன்மையையும் அறிய மாட்டான். உலகில் அல்பர்கள் தான் ஏதாவது ஒரு உதவி செய்தால் அதையே அடிக்கடி சொல்லி மார்தட்டிக் கொள்வார்கள். எம்பெருமான் அப்படிப்பட்டவன் அல்லன். அதாவது தன்னை ஆஶ்ரயித்தவர்கள் செய்த குற்றத்





தையும் தான் அவர்களுக்குச் செய்த நன்மையையும் அறிய மாட்டான் எம்பெருமான். அவர்கள் செய்த ஶரணாகதி முதலான சில ஸ்வல்பங்களான நன்மைகளை மட்டும் அறிபவன் இவன் என்றபடி.

இதைக் காட்டும் ஶ்ருதப்ரகாஶிகாசார்யருடைய அடுத்த வாக்யம் **यद्वा स्वल्पमप्याश्रितैः यत् साधु कृतं तदेव जानाति, आश्रित कृतं दोषं, स्वकृतं श्रेयश्च न स्मरतीति कृतज्ञः ॥)** யத்வா ஸ்வல்பமப்யாஶ்ரிதை: யத் ஸாது க்ருதம் ததேவ ஜாநாதி: ஆஶ்ரித க்ருதம் தோஷம், ஸ்வக்ருதம் ஶ்ரேய: ச ந ஸ்மரதீதி க்ருதஜ்ஞ:)

உலகில் காணப்படும் பெரியவர்கள் பலர் தன்னை அண்டினவனாயினும் அவன் ஒரு குற்றம் செய்து விட்டாலும் அல்லது தான் அவனுக்கு ஒரு உதவி செய்து விட்டாலும் இவ்விரண்டையுமே பலகாலும் கூறிப் பெருமைப்பட்டுக் கொள்வதையே கண்டு வருகிறோம். எம்பெருமான் தன்மை இதற்கு நேர் மாறானது.

இங்கு ஒரு ஸ்வாரஸ்யம் - சுவை உணர வேண்டும். விளக்கம் தரப்படவேண்டிய சொல் க்ருதஜ்ஞ: என்பதாகும். இதற்கு அமையவேண்டிய விளக்கம் 'க்ருதம்ஜாநாதி' செய்ததை அறிபவன் என்றே இருக்க வேண்டும். ஆனால் உரையாசிரியர் ஆஶ்ரித க்ருதம் தோஷம், ஸ்வக்ருதம் ஶ்ரேய: ச நஸ்மரதீதி க்ருதஜ்ஞ: (ஆஶ்ரிதர்கள் செய்த குற்றத்தையும் தான் செய்த நன்மையையும் நினைக்காதவன் க்ருதஜ்ஞன்) என்று விளக்கம் தந்துள்ளமையை உற்று நோக்க வேண்டும். இதனால் சொல்லினால் நேரிடையாகக் கிடைக்கும் பொருளை விட வ்யங்க்யமாக (மறைமுகமாக)க் கிடைக்கும் பொருளே சிறந்ததாகும் என்பதே.

ஆஶ்ரிதர்கள் செய்த நன்மையை மட்டுமே அறிபவன் எம்பெருமான் என்பது சொல்லினால் நேரிடையாகக் கிடைப்பதாகும்.

ஆஶ்ரிதர்கள் செய்த குற்றத்தையும், தான் அவர்களுக்குச் செய்த நன்மையையும் நினைக்காதவன் க்ருதஜ்ஞன் என்பது ஏவகாரத்தினால் உட்பொருளாய் கிடைப்பதாகும். முந்தையதை விட இந்தப் பொருளே சாலச் சிறந்ததாகும்.

ஆக 1) ஒருவன் செய்த நன்மையை மட்டுமே நினைப்பவன், அவன் செய்யப்போவதைப் பற்றிக் கொஞ்சமும் நினையாதவன் க்ருதஜ்ஞன்.

2) தன்னை ஆஶ்ரயித்தவர்கள் செய்த ஒரு சிறு நன்மையை மட்டுமே அறிபவன். அவர்கள் தனக்குச் செய்த தீங்கையோ தான் அவர்களுக்குச் செய்த நன்மையையோ பற்றிச் சிறிதும் நினையாதவன், ஆகையால் க்ருதஜ்ஞன் ; என்றவாறெல்லாம் இங்கு இந்த க்ருதஜ்ஞதை என்ற குணத்தினால் வெளிப்பட்ட எம்பெருமானுடைய பெருமை உணரத் தக்கது.

இந்த அர்த்த விசேஷங்களைப் பெரியவாச்சான்பிள்ளை தம்முடைய ஸ்ரீஸூக்தியினால் (வாக்யத்தினால்) விளக்குவதையும் அறிவோம்.

''க்ருதஜ்ஞதா''-ஒரு கால் 'ஶரணம்' என்னும் உக்திமாத்ரத்தாலேயே, பின்பு செய்யும் குற்றங்களைப் பாராதே அத்தையே நினைத்திருக்கை.

க்ருதம் ஜாநாதி, க்ருதம் ஏவ ஜாநாதி. க்ருதம் என்பது ஏகவசநத்தை (ஒருமையைக் காட்டும் விகுதியைக்) கொண்ட சொல். எம்பெருமான் பக்கலில் ஒருவன் ஒரு நன்மையைச் செய்து விட்டால் பிறகு அவன் செய்யும் குற்றங்களைப் பார்க்க மாட்டான் என்று ஸ்ரீ பெரியவாச்சான்பிள்ளை விளக்கம். இங்குக் குற்றங்களை என்று பன்மை விகுதியை (பஹுவசநத்தை)க் கொண்டுள்ள சொல் வழங்கப்பட்டுள்ளது.





ஜீவன் செய்யும் ஒரு நன்மையாவது, 'ஶரணம்' என்று ஒரு தடவை சொல்வதேயாகும். பிறகு இவன் செய்யும் தீங்குகளோ பலப்பல ஆகும். ஆக ஜீவன் செய்த நன்மையை மட்டும் மனத்தில் கொண்டு, பிறகு அவன் செய்யும் தீங்குகள் பலவற்றையும் நினைக்காதவன் எம்பெருமான் என்றபடி. இது முன் கூறியதேயாகும்.

மற்றும் ஓர் புதிய அர்த்தம். க்ருதஜ்ஞ: க்ருதம் ஜாநாதி க்ருதமேவ ஜாநாதி. செய்ததை மட்டுமே நினைப்பவன்; யார் செய்ததை என்பது 'க்ருதஜ்ஞன்' என்ற பெயரில் இல்லை. அவன் அதாவது ஆஶ்ரிதன் செய்ததை மட்டுமே நினைப்பவன்; தான் அவர்களுக்குச் செய்துள்ள நன்மைகள் பலவற்றையும் பற்றி நினைக்காதவன் எம்பெருமான் என்றபடி.

ஆஶ்ரிதர்க்கு(த்தான்) எல்லாம் செய்தாலும் அவற்றை மறந்து அவர்கள் செய்த ஸுக்ருதத்தையே நினைத்திருக்கை என்னவுமாம்- 'ஹ்ருதயாந்நாபஸர்ப்பதி' என்று. உலகில் ஒருவன் மற்றொருவனிடமிருந்து நிறைந்த நன்மைகளைப் பெறுவான், அதற்கு ப்ரதிப்ரயோஜநமாக இவன் அந்த மற்றொருவனுக்கு ஒரு ஸமயம் ஏதாவது ஒரு சிறு நன்மையைச் செய்திருப்பான். இதனால் இவன் தான் அந்த மற்றொருவனுக்குச் செய்த அந்த ஒரு சிறு நன்மையையே பெரிதாகக் கூறிக் கொள்வான். அந்த மற்றொருவன் செய்த நன்மைகள் பலவற்றையும் கொஞ்சமும் நெஞ்சில் கொள்ள மாட்டான்.

எம்பெருமான் அப்படிப்பட்டவன் அல்லன். பிறர்கள் தன் பக்கலில் செய்த உதவி சிறிதாயினும் அதையே தான் நெஞ்சிற் கொள்வான். இதற்குப் பதிலாக அந்தப் பிறர்க்கு நன்மைகள் பலவற்றையும் அவர்கள் விரும்பும் வகையில் செய்து முடித்திருந்தும் தான் அவர்களுக்குச் செய்துள்ள நன்மைகளைக் கொஞ்சமும்

நினையாமல் அந்தப் பிறர்கள் செய்த ஒரு சிறு நன்மையையே நினைத்திருப்பான்.

துர்யோதனனுடைய பெருஞ்சபையிலே த்ரௌபதிக்கு ஆபத்து நேர்ந்தது. உடனே அவளும் 'கோவிந்தா' என்று எம்பெரு மானைக் கூவி அழைத்துச் சரணம் புகுந்தாள். எம்பெருமானும் நிறைய வஸ்த்ரங்களைத் தந்து ரக்ஷித்தான். த்ரௌபதி செய்தது 'கோவிந்தா' என்று கதறினாளே அவ்வளவு மட்டும் தான். எம்பெருமான் செய்தது என்ன! கோடிக்கணக்கில் மிக அழகிய வஸ்த்ரங்களைத் தந்து துச்சாஸனன் கைகள் சோர்ந்து போகும் படிச் செய்தான். ஸ்ரீ க்ருஷ்ணன் இவ்வளவு செய்திருந்தும் தான் செய்த நன்மைகளைக் கொஞ்சமும் நினையாமல் 'ஐயோ த்ரௌ பதீ 'கோவிந்தா' என்று என்னைக், கதறி அழைத்தாளே. இதற்கு நான் என்ன செய்தேன், என்ன தந்தேன், என்று அவள் அழைத் ததை மட்டுமே தான் நினைத்தானே தவிர தான் அவளுக்குச் செய்த நன்மைகளைச் சிறிதும் நினைக்கவே இல்லையே. இப்படிப்பட்டவன் அல்லனோ 'க்ருதஜ்ஞன்' ஆவான். இப்படி யிருக்கை தானே 'க்ருதஜ்ஞதை' என்று விவரித்தருள்கிறார் ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளை.

இதற்கு மேலும் ஒரு அபூர்வமான அர்த்தத்தைக் காட்டுகிறார் இந்த மஹான்.

இது வரை ஆஸ்ரிதர்கள் செய்ததை நினைப்பவன் எம்பெரு மான் என்ற பொருளில் விவரணம் தரப்பட்டது. இப்பொழுது தான் செய்ததை அறிபவன் என்ற பொருளில் விவரணம் தரப் படுகின்றது. விக்ரஹம் 'க்ருதம் ஜாநாதி' என்பதே. யார் செய்ததை அறிபவன்? என்ற கேள்விக்குப் பதிலில் தான் ஒரு சிறு மாற்றம். ஸ்வேந க்ருதம் ஜாநாதி என்று தான் விக்ரஹம் கொள்ள வேண் டும். க்ருதம் என்பது விசேஷணம் அடைமொழி, இதற்கு விசேஷ் யம் அபகாரம் (**अपकारम्**) தீங்கு என்று கொள்ள வேண்டும்;





ஆஸ்ரிதர்கள் விஷயத்தில் நன்மைகளையே செய்யும் எம் பெருமான் ஒரு ஸமயம் அவர்களுக்கு ஒரு தீங்கு (அபசாரம்) செய்ய நேர்ந்தால் இதையே நினைத்திருப்பானாம். முன்பு தான் அவர்களுக்குச் செய்த நன்மைகளைச் சிறிதும் நினைக்க மாட்டானாம்.

ஒரு க்ரஹஸ்தன் தன் மனைவியிடம் மாளாத காதல் கொண்ட வன். அவள் விரும்புவதையெல்லாம் தந்து வந்தான். ஒரு நாள் அவன் தன் அன்பு மனைவியை ஏதோ ஒரு காரணத்திற்காகக் கன்னத்தில் ஓங்கி அறைந்து விட்டான். அவள் இதை ஏற்றுக் கொண்டு சாந்தையாகவே இருந்து விட்டாள். ஆனால் இவன் தன் அன்பு மனைவியை அடித்து விட்டோமே என்று இதையே எப்பொழுதும் நினைத்திருப்பான். ஏற்கெனவே இவளுக்கு அதா வது தன் மனைவிக்கு இவன் பற்பல நன்மைகளைச் செய்தி ருந்தபோதும் அவற்றில் ஒன்றைக்கூட நினைத்துப் பார்க்காமல் அவளை அடித்து விட்டதை மட்டுமே நினைத்து வருந்துவான்.

இவ்வாறு தான் எம்பெருமான் தன்னை ஆஸ்ரயித்த ஜீவாத் மாக்களுக்குப் பல நன்மைகள் செய்திருந்தபோதும் அவர்கள் கர்மாநுஸாரமாக தான் அவர்களுக்கு ஏதேனும் ஒரு அபகாரம் செய்து விட்டால் அதையே நினைந்து வருந்தியிருப்பான் என்ற படி.

இதற்கு ஏற்ற உதாஹரணம் ஒன்றைக் காட்டுகிறார் ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளை.

ராவணவதம் ஆகிவிட்டது. லங்கை ஸ்ரீ விபீஷணன் கைக்கு வந்து விட்டது. ராமன் உடனே பரதனைக்காண அயோத்யை செல்ல விரும்புகிறான். ஸ்ரீவிபீஷணன் ஸ்ரீராமனை நோக்கி "யுத்தத்தில் ஏற்பட்ட களைப்பெல்லாம் தீர ஜடையை நீக்கி மங்களஸ்நாநம் செய்து பட்டு வஸ்த்ரங்களை உடுத்திக் கொண்டு

ஆபரணங்கள் பலவற்றையும் அணிந்து சில நாட்கள் தங்கி விட்டுப் போகலாமே'' என்கிறான்.

அப்பொழுது ஸ்ரீராமன் கூறுகிறான். என் உடன் பிறந்தவனான பரதனை உடனே காணத் துடிக்கிறது என் மனம்.அவன் மனம் வருந்தும்படி நான் அவனுக்குத் தீங்கு இழைத்து விட்டேன். என்னைக் காட்டிலிருந்து திரும்ப மீட்டுச் செல்லவேண்டும் என்ற விருப்பத்தினால் சித்ரகூடத்திற்கு வந்து அவ்வாறே திரும்பி வரவேண்டும் என்று ப்ரார்த்தித்தான்.தலையால் வணங்கி வேண்டினான். ஆனால் நான் அவன் ப்ரார்த்தனையை ஏற்றுக் கொள்ளவில்லை. மறுத்து விட்டேன். இது என்மனத்தை வாட்டுகிறது.

तं तु मे भ्रातरं द्रष्टुं भरतं त्वरते मनः ।
मां निवर्तयितुं योऽसौ चित्रकूटमुपागतः ॥
शिरसा याचतस्तस्य वचनं न कृतं मया ॥

(தம் து மே ப்ராதரம் த்ரஷ்டும் பரதம் த்வரதே மந: ।
மாம்நிவர்த்தயிதும்யோऽஸௌ சித்ரகூடம் உபாகத:॥
ஶிரஸா யாசதஸ் தஸ்ய வசநம் ந க்ருதம் மயா ॥)

என்று, தான் பரதனுக்குச் செய்ய அபகாரத்தை (இது உண்மையில் அபகாரம் அன்று. ஆனாலும் தன் பெருந்தன்மையால் இதை அபகாரமாக எண்ணி வருந்துகிறான்) நினைத்து நினைத்து வருந்துகிறான். தான் பரதன் விஷயத்தில் செய்துள்ள பலப்பல நன்மைகளையெல்லாம் சிறிதும் நினைத்துப் பார்க்கவில்லை.

உலகில், 'அவனுக்கு எவ்வளவோ நன்மைகள் செய்துள்ளேன். இந்த ஒரு அபகாரத்தைச் செய்தால் என்ன?' என்று நினைப்பவர்களே நிறைந்துள்ளனர். ஸ்ரீராமன் அவ்வாறு நினைக்காமல் இருக்கிறானே. ஆக, தான் செய்த அபகாரத்தை நினைக்கையே க்ருதஜ்ஞதையாகும் என்றபடி.





இதைக் காட்டும் வ்யாக்யாந வாக்யம் பின்வருமாறு.

'ஆஶ்ரிதர் விஷயத்தில் தான் செய்த அபகாரத்தையே நினைத்திருக்கை என்னவும்: ''சிரஶாயாசதஸ்தஸ்ய வசநம் ந க்ருதம் மயா'' என்று.

ஸ்வாமி ஸ்ரீ தேசிகனும் முன் காட்டிய அர்த்தங்களையே அழகிய முறையில் விளக்கியருளுகிறார்.

பிறர் எவராவது தன் (எம்பெருமான்) விஷயத்தில் ஏதாவது ஒரு சிறு நன்மையைச் செய்தான் என்றால் அதை ஒரு நாளும் மறக்கமாட்டான். அதையே நினைத்திருப்பவன் ஆகவே க்ருதஜ்ஞன் எம்பெருமான். அவனே பிறகு நிறைய அபராதங்களைச் செய்து விட்டால் அவன் முன் செய்த சிறு நன்மையை மறந்து விடக்கூடும். அவன் செய்த சிறு நன்மைக்கு ப்ரதியாகத் தான் நிறைய உபகாரங்களைச் செய்து விட்டாலும் அவன் செய்த அந்தச் சிறு நன்மையை மறக்கக்கூடும். எம்பெருமான் அப்படிப்பட்டவன் அல்லன். தன் விஷயத்தில் ஒருவன் செய்த நன்மையை நினைத்திருப்பான்; பிறகு அவனே நிறைய அபராதங்களைக் (குற்றங்களை)ச் செய்தாலும் முன் செய்த அந்தச் சிறு நன்மையை மறக்கமாட்டான். அவன் செய்த சிறு நன்மைக்கு எம்பெருமான் நிறைய ப்ரத்யுபகாரங்களைச் செய்துவிட்ட போதும் ஒரு ப்ரத்யுபகாரமும் செய்யாதவனைப் போலவே அவன் செய்த அந்த ஒரு சிறு நன்மையை மட்டுமே நினைத்திருப்பான். அதற்காக அவனை மட்டுமின்றி அவனைச் சார்ந்தவர்களையும் ரக்ஷிக்க விரும்புவான் எம்பெருமான் என்றபடி. இதை ஸ்ரீராமாயணம் கொண்டு அறியலாம்.

न स्मरत्यपकाराणां शतमप्यात्मवत्तया ।
कथंचिदुपकारेण कृतेनैकेन तुष्यति ॥

ந ஸ்மரத்யபகாராணும் ஶதமப்யாத்மவத்தயா।
கதஞ்சிதுபகாரேண க்ருதேநைகேந துஷ்யதி ।।

பிறர் தனக்கு நூற்றுக்கணக்கில் அபகாரங்களைச் செய்த போதும் ஸ்ரீராமன் அவற்றை நினைக்கவே மாட்டான். பிறர்கள் தெரிந்தோ தெரியாமலோ ஏதாவது ஒரு உபகாரம் செய்தால் அதனாலேயே இவன் மிகவும் மகிழ்ந்திருப்பான். இதற்குக் காரணம் இவனுடைய பெருந்தன்மையேயாகும் என்கிறார் வால்மீகி. ஆகப் பிறர் செய்த நூற்றுக்கணக்கிலான குற்றங்களை நினைக்காமல், எவ்வாறாயினும் அவர்கள் செய்யும் ஒரு சிறு உபகாரத்தையே அறிபவன் எம்பெருமான். ஆகவே அவன் க்ருதஜ்ஞன். இப்படி இருக்கை தான் க்ருதஜ்ஞதா. முன்பு கூறிய த்ரௌபதி ஶரணாகதியினாலும் இது ஸ்பஷ்டம்.

ஒருவன் நிறைய பாபம் பண்ணியிருந்தாலும் அவன் செய்யும் அஞ்ஜலி (ஶரணாகதி) ஒன்றினாலேயே அவன் பாபங்கள் அனைத்தையும் போக்கிவிடுகிறான் எம்பெருமான்.

இவ்விஷயத்தை ஸ்ரீ ஆளவந்தார் தம்முடைய ஸ்தோத்ர ரத்னத்தில் அழகான ஶ்லோகம் ஒன்றால் வெளியிடுகிறார். அந்த ஶ்லோகம் இதுவே.

त्वदंघ्रिमुद्दिश्य कदापि केनचिद्
यथातथावापि सकृत् कृतोऽञ्जलिः ।
तदैव मुष्णात्यशुभान्यशेषतः
शुभानि पुष्णाति न जातु हीयते ।।

த்வதங்க்ரிம் உத்திஶ்ய கதாபி கேநசித்
யதா ததாவாபி ஸக்ருத்க்ருதோऽஞ்ஜலி: ।
ததைவ முஷ்ணாத்யஶுபாந்யஶேஷத:
ஶுபாநி புஷ்ணாதி ந ஜாது ஹீயதே ।।





எம்பெருமானே உன்னுடைய திருவடியை நோக்கி எவனோ ஒருவன் எப்பொழுதாவது எப்படியாவது ஒரு அஞ்ஜலி (கை கூப்புதல்) செய்து விட்டால் அது ஒன்றே இவன் செய்த பாபங்கள் அனைத்தையும் ஒழித்து நன்மைகளையெல்லாம் தந்து மேலும் தான் அழியாமல் இருக்கும் என்பது பொருள்.

ஜீவாத்மாக்கள் செய்த பாபங்களோ அதாவது அபராதங்களோ மிகப் பலப்பல. ஆனால் இவர்கள் ஒரு ஸமயம் செய்ததோ ஒரே ஒரு அஞ்ஜலி (கைகூப்புதல்). இந்த ஒரு சிறு உபகாரத்தினால் அவர்கள் பலப்பல ஜன்மங்களிலும் செய்து சேமித்துள்ள பாபங்களையெல்லாம் ஒழித்து விடுகிறான் எம்பெருமான். எம்பெருமான் திருவடியை நோக்கி ஒரு அஞ்ஜலி செய்து விட்டால் அதொன்றையே எம்பெருமான் மனத்தில் கொண்டு அவர்கள் முன்பு செய்த பாபங்களையெல்லாம் கருதவே மாட்டான். அது மட்டுமின்றி அவற்றையெல்லாம் உடனே போக்கி க்ஷேமங்களையும் தருவான். இது இந்த க்ருதஜ்ஞதை என்ற குணத்தின் செயலேயாகும்.

இதனால் ஏற்படும் விளைவையும் உற்று நோக்க வேண்டும். ஒருவன் அஞ்ஜலி அதாவது ஶரணாகதி செய்து விட்டான். பிறகு அவனே நிறைய பாபங்களையும் செய்து வருகிறான். முன் செய்த ஶரணாகதி ஒன்றை மட்டும் தான் நினைப்பான் என்றால் அவன் செய்த பாபங்கள் பயனின்றிப் போகுமா என்று ஸந்தேஹிக்க வேண்டாம். செய்த பாபங்களைப் பார்த்தால் அவனைக் கைவிட வேண்டிவரும். ஆனால் ஶரணம் என்று கூறியுள்ளமையால் அவனை விடவும் முடியவில்லை. என்ன செய்வான் எம்பெருமான்! ஶரணம் அடைந்தமையால் அவனை விடவே மாட்டான். பிறகு பாபங்கள் செய்துள்ளமையால் அதற்காக சிக்ஷை (தண்டனை) செய்து அவனை ரக்ஷித்து விடுவான்.

ஶரணாகதனை ரக்ஷிக்க வேண்டிய நியமம் உண்டு எம்பெரு

மானுக்கு. ஆயினும் தான் மேற்கொண்டுள்ள வேறு சில நியமங்களை அநுஸரித்து ஶரணாகதனுடைய தத்காலத்திய ப்ரார்த்தனையை ஏற்றுக் கொள்ள முடியாமற் போய் அதை நிராகரிக்க வேண்டிவரும். இந்த நிலையில் எம்பெருமான் தான் செய்த நிராகரணத்தை பெரிய தவறாக - செய்யக் கூடாததைச் செய்து விட்டதாக நினைப்பவன். ஆகவே எம்பெருமான் க்ருதஜ்ஞன்.

பரதனுடைய ப்ரார்த்தனையை மறுத்ததை எண்ணி ராமன் வருந்தியதைத் தான் இதற்கும் உதாஹரணமாகக் கொள்ள வேண்டும்.

ஶரணாகதனான பரதனை ரக்ஷிப்பது எம்பெருமானுக்கு உள்ள ப்ரதானமான நியமம் ஆகும்.

தற்போது ராமன் பித்ருவாக்யத்தைப் பரிபாலனம் செய்வதற்காகக் காட்டுக்குச் செல்ல வேண்டிய வேறொரு நியமம் மேற்கொண்டுள்ளான்.

அயோத்யைக்குத் திரும்பி வந்தால்தான் பரதனுடைய ப்ரார்த்தனை பூர்த்தி பெறும். ஶரணாகத ரக்ஷண வ்ரதமும் நிலை பெறும்; இதை நிறைவேற்றினால் காட்டுக்குச் செல்வதாக மேற்கொண்ட நியமம் முரண்படும். ஆகவே இந்த நியமத்தைக் காக்க ஸ்ரீபரதாழ்வானுடைய ப்ரார்த்தனையை ஏற்றுக் கொள்ளாமல் போக நேரிட்டது. தற்போது இவன் ப்ரார்த்தனையை ஏற்றுக் கொள்ளாமற்போனது பிறகு அவனுடைய ப்ரார்த்தனையை முழுவதுமாக ஏற்றுக் கொள்வதற்காக. ஆக ஸ்ரீபரதாழ்வானுடைய ப்ரார்த்தனையைத்தான் ஏற்றுக் கொள்ளாமல் மறுத்ததைப் பெரிய தவறு செய்து விட்டதாக நினைக்கிறான் ஸ்ரீராமன். இது க்ருதஜ்ஞன் என்பதற்கு ஏற்ற லக்ஷ்யம் ஆகும்.

ஒரு தாய் இருக்கிறாள். அவளுக்குக் குழந்தைகள் பல உள்ளன. இவற்றுள் இருமல் வ்யாதி உள்ளதும் ஒன்று. பிள்ளை





களை ரக்ஷிப்பது (அநிஷ்டத்தைப் போக்கி இஷ்டத்தைத் தருவது) அவளுடைய கடமையாகும்.

வ்யாதி உள்ள குழந்தையை ரக்ஷிப்பதும் ஒரு கடமை தாய்க்கு உண்டு. முந்தைய கடமையை அநுஸரித்து நோய்வாய்ப்பட்ட இந்தக் குழந்தைக்கும் அது விரும்பிய இனிப்புப் பண்டங்களைக் கொடுத்தால் அதனுடைய வ்யாதி மேலும் அதிகமாகும். நோய்வாய்ப்பட்ட குழந்தையை ரக்ஷிப்பதும் ஒரு கடமைதானே. அதாவது இதற்குத் தீமையை விளைவிக்கும் பண்டங்களைத் தராமல் இதற்கு ஏற்ற வகையில் அந்தக் குழந்தைக்குப் பிடிக்காததாயினும் கஷாயம் முதலியவற்றையே தந்து அந்த வ்யாதியைப் போக்க வேண்டும். தாயின் இந்த இரண்டு கடமைகளில் முந்தைய கடமை ஸர்வஸாதாரணமானது; இரண்டாவதான கடமை நோய்வாய்ப்பட்ட குழந்தைகள் விஷயத்தில் கடைப்பிடிக்க வேண்டியதால் இதுவே முக்கியமாகும். இதன்படி மற்றைய குழந்தை விஷயத்தில் அவை விரும்புகின்ற தின்பண்டங்களை வாங்கிக் கொடுக்கும் தாய், நோய்வாய்ப்பட்ட இந்தக் குழந்தை விஷயத்தில் மட்டும் இது விரும்புவதை வாங்கித் தருவதில்லை. இது உலகில் பார்த்துப் பழகிய விஷயம் தானே. இந்த நோய்வாய்ப்பட்ட குழந்தையின் மீது வெறுப்புணர்ச்சியினால் இது விரும்பியதை வாங்கித் தருவதில்லை தாய் என்று சொல்லக்கூடாது.

இந்தக் குழந்தைக்கு இப்படி அது விரும்பியதை வாங்கித் தராமல் இருப்பது வ்யாதி தீர்ந்து இந்தக் குழந்தை நலம் பெற்ற உடனே ஒன்றுக்கிரண்டாக அது விரும்பியதையெல்லாம் வாங்கித் தந்து அதன் ஆசையைப் பூர்த்தி பண்ணி வைப்பதற்காகத் தானே.

இம்மாதிரிதான் தற்காலத்தில் பரதனுடைய ப்ரார்த்தனையை ஸ்ரீராமன் ஏற்றுக் கொள்ளாமல் மறுத்தது பிறகு அவனுடைய (பரதனுடைய) ப்ரார்த்தனையைப் பூர்த்தி செய்வதற்காகத் தான்

என்பதை அறியவேண்டும் என்கிறார் ஸ்வாமி ஸ்ரீதேசிகன்.

'க்ருதஜ்ஞதா-பரை: க்ருதஸ்ய ஆநுகூல்ய லவஸ்ய பஶ்சாத் தை: அநந்தாபகார கரணேऽபி ஸ்வயஞ்ச அநந்தப்ரத்யுபகார கரணேऽபி அக்ருதப்ரத்யுபகாரவத் ததநுபந்திபர்யந்த ஸம்ரக்ஷணாய தஸ்யைவ அநுதர்ஶநம். யதோக்தம் - "ந ஸ்மரத்யப காரணும் ஶதமப்யாத்மவத்தயா | கதஞ்சிதுபகாரேண க்ருதேநைகேந துஷ்யதி||" 'கோவிந்தேதி யதா க்ரந்தத் க்ருஷ்ணு மாம் தூரவாஸிநம்.'

"த்வதங்க்ரிம் உத்திஶ்ய" இத்யாதி ச |

ஏதேந ஸம்ஶ்ரிதாநாம் பஶ்சாத் தோஷ ஸம்பவேऽபி

ஹிதைஷிண: சிக்ஷணமாத்ர ப்ரவ்ருத்தத்வம் ஸித்யதி |

அதவா -அர்த்திஷு நியமாந்தராநுஸாரேண ஸ்வக்ருதம் தாதாத்விக ப்ரத்யாக்யாநம் அக்ருத்யவஜ்ஜாநாதி இதி க்ருதஜ்ஞ: | யதூசே "ஶிரஸா யாசதஸ்தஸ்ய வசநம் ந க்ருதம் மயா |" இதி. இதஞ்ச ப்ராப்தாவஸரே பரதஸ்யைவ அபேக்ஷா பூரணாய ஸ்யாத்.

குழந்தை நோய் தீரப் பெற்றுத் தன் தாயிடமிருந்தே வேண்டியதைப் பெற்று உண்டு களித்திருந்த போதும், தாய் 'முன்பு இந்தக் குழந்தைக்கு வேண்டியதை வாங்கித் தராமல் போய் விட்டோமே' என்று வருந்தியே இருப்பாள்.

இம்மாதிரியே எம்பெருமான் நம்முடைய அபேக்ஷிதங்களை தத்காலத்தில் தராமற் போனாலும் நாம் செய்துள்ள ஶரணாகதியின் பயனால் தக்க காலத்தில் வேண்டியவற்றை யெல்லாம் தந்து ரக்ஷிப்பான். நாம் முன்பு செய்துள்ள ஶரணாகதியை ஒரு போதும் மறக்க மாட்டாதவன் - க்ருதஜ்ஞன் ஆயிற்றே; என்று நாம் சிந்தையின்றி இருக்கப் பயன்படும் இந்த க்ருதஜ்ஞதை என்ற மஹா குணம்.

---



## 14. "அர்த்தி கல்பகன்"

**अर्थी च कल्पकश्चासावर्थिनां कल्पकोऽप्यसौ ।**
**अस्यार्थिनः कल्पकाश्च, कल्पयत्यर्थिनोऽप्यसौ ॥**
**एवं बहुविधानर्थान् दर्शयत्यर्थिकल्पकः ।**
**इत्ययं विवृतश्शब्दः मुदे प्रेक्षावतामिह ॥**

அர்த்தீ ச கல்பக: சாஸாவர்த்திநாம் கல்பகோऽப்யஸௌ |
அஸ்யார்த்திந: கல்பகா: ச கல்பயத்யர்த்திநோऽப்யஸௌ ||
ஏவம் பஹுவிதாந் அர்த்தாந் தர்ஶயத்யர்த்திகல்பக:|
இத்யயம் விவ்ருத: ஶப்த: முதே ப்ரேக்ஷாவதாமிஹ ||

இது வரை ஸ்வாமி எம்பெருமானார் ஶரணாகதி கத்யத்தில் அருளிச் செய்த குணங்களைப் பற்றி விளக்கினோம்.

இனி எம்பெருமானை அழைக்கும் சொற்கள் (விளிச் சொற்கள் அதாவது ஸம்போதநம் செய்யும் சொற்கள்) இவற்றின் மூலமாகவும் எம்பெருமானுடைய அத்புதங்களான பல குணங்கள் வெளிப்படுகின்றன. அவற்றுள் ஒன்றை இங்கு அனுபவிப்போம்.

**अर्थिकल्पक!** என்ற ஒரு விளிச் சொல்லால்-ஸம்போத நச் சொல்லால் - அதாவது எம்பெருமானை முன்னிலைப் படுத்திக் கூறும் சொல்லால் கிடைக்கும் குணவிசேஷத்தை மட்டும் இங்கு இப்பொழுது விளக்குகிறோம்.

**अर्थि** (அர்த்தி) என்ற சொல் யாசிப்பவர்களைக் குறிக்கும். கல்பகம் என்ற சொல் கற்பக வ்ருக்ஷத்தைக் குறிக்கும். கற்பக வ்ருக்ஷம் தன்னிடம் வந்து யாசிப்பவர்களுக்கு வேண்டிய

தெல்லாம் தரும். அவ்வாறே எம்பெருமானும் தன்னிடம் வந்து யாசிப்பவர்களுக்குக் கற்பகவ்ருக்ஷமாக இருக்கிறான். அதாவது அவர்கள் வேண்டுவனவற்றை எல்லாம் தருகிறான் என்று தான் பொதுவில் எல்லாரும் அர்த்தம் கொள்வார்கள். இந்த அர்த்தமும் சரியானதே! இதுவும் நம் பூர்வாசார்யர்கள் காட்டியுள்ள அர்த்தமே யாகும். இந்தப் பக்ஷத்தில் **अर्थिनाम्** யாசிப்பவர்களுக்கு **कल्पक:** வேண்டியவற்றை எல்லாம் தரும் கற்பக வ்ருக்ஷமானவனே! என்று ஆறாம் வேற்றுமைத் தொகை - ஷஷ்டீதத்புருஷ ஸமாஸம் கொள்ள வேண்டும்.

இதைவிட மிக உயர்ந்த அர்த்தம் ஒன்றை நம் பூர்வாசார்யர்கள் காட்டுகிறார்கள். அதாவது **अर्थी चासौ कल्पकश्च** (அர்த்தீசாஸௌ கல்பகஶ் ச என்று கர்மதாரய ஸமாஸம் (இருபெயரொட்டுப் பண்புத் தொகை) கொள்ள வேண்டும், மிக உயர்ந்த சுவை யுடைய அர்த்த விசேஷத்தை ஸமாஸம் கொண்டே விளக்குகிறார் ஶ்ருதப்ரகாஶிகாசார்யர். இதிலிருந்து கிடைக்கும் அந்தப் பொரு ளை மேலே விவரிக் கிறோம்.

யாசிக்கின்றதும் கொடுப்பதுமான கல்பக வ்ருக்ஷம் எம்பெரு மான். உலகில் ப்ரஸித்தமான கற்பக வ்ருக்ஷம் தன்னிடத்தில் வந்து யாராவது ஏதாவது வேண்டினால் அதைத்தரவல்லது. இதுவே ஒருவனிடம் சென்று நீங்கள் வேண்டுவனவற்றை யெல்லாம் நாம் தருகிறோம். நீங்கள் பெற்றுக் கொள்ளுங்கோள் என்று ஒருவரையும் வேண்டிக் கொள்ளாது. நீங்கள் வேண்டி யதை எல்லாம் தான் தருகிறேனே நீங்கள் என்னை ஏதாவது கேட்கக் கூடாதா? என்று ஒருவனையும் வேண்டிக் கொள்ளாது அந்தக் கற்பக வ்ருக்ஷம். வேண்டிக்கொடுக்காது அது. இந்த எம்பெருமான் அர்த்திகளுக்கு வேண்டியவற்றைக் கொடுப்பது மட்டுமின்றி தானே அர்த்தியாய் - யாசிப்பவனாய் - அதாவது நீங்கள் வேண்டும் அத்தனையையும் நான் தருகிறேனே! என்னிட





மிருந்து எதையாவது ஒன்றைக் கேட்டுப் பெற்றுக் கொள்ளுங் களேன் என்று வேண்டி வேண்டிக் கொடுக்கும் கல்பக வ்ருக்ஷ மாக இருக்கிறானாம். ஸ்ரீ ஶ்ருதப்ரகாஶிகாசார்யர் என்ற உரையா சிரியர் ஸம்ஸ்க்ருதத்தில் காட்டிய இதைப் பெரியவாச்சான் பிள்ளை தமிழிலே விவரித்தருளுகிறார். அது பின்வருமாறு:

'அர்த்தி கல்பக! தன் தலையாலே இரந்து கொடுக்கும் அவ னுக்கு இரந்தார்க்குக் கொடா தொழிக்கப் போருமோ!

அர்த்திப்பார்க்கும் கடக்க நின்று தன்னை யொழிந்த சில வற்றைக் கொடுத்து விடும் பூண்டு போலேயோ! அர்த்திகளையும் உண்டாக்கித் தானே இருந்து ஸகல பலப்ரதனான உன்னையும் தருகிற நீ 'என்னையாக்கி எனக்கே தன்னைத் தந்த கற்பகம்' என்னக் கடவதிறே. அதுபோலே நாரும்- நரம்புமாயிருக்கை யன்றிக்கே 'அபார ஸௌந்தர்ய மஹோததே **(अपारसौन्दर्य महोदधे)** என்னும்படியாயிறே இருப்பது.

இரந்து கொடுக்கும் அத்தனையொழிய இரந்தார்க்குக் கொடுக்கலாகாது என்று உண்டோ?' என்று ஸ்வாமி எம்பெரு மானார் (ஸ்ரீபாஷ்யகாரர்) ஸ்ரீ ரங்கநாதனைப் பலவகைகளிலே அவனுடைய குணங்களை எடுத்துச் சொல்லிக் கூப்பிடுகிறார். அவனுடைய திருவடிகளிலே எல்லாவிதங்களான கைங்கர்யங் களையும் செய்ய விரும்பி அவ்வாறே தரும்படி ப்ரார்த்திக்கிறார். இப்படி எம்பெருமானைக் கூப்பிடும் சொற்களில் 'அர்த்திகல்பக!' என்பதும் ஒன்று. இப்படி அழைப்பதின் கருத்தைத் தான் முன் கூறியபடி நம் பூர்வாசார்யர்கள் விவரித்துக் காட்டுகின்றனர்.

ஸ்வாமி ஸ்ரீ பாஷ்யகாரர் இப்படியெல்லாம் எம்பெரு மானை ஏன் ப்ரார்த்திக்கவேண்டும்? ஏன் கூப்பிடவேண்டும் என்றால், ஜீவாத்மாக்கள் இவனைக் கூப்பிட்டு இது வேண்டும், அது வேண்டும் என்று கேட்காமல் இருக்கும் போதே இவனே அவர்க

ளிடம் சென்று நான் இதைத் தருகிறேன், அதைத் தருகிறேன் என்று வேண்டிக் கொடுப்பவனாயிற்றே. அப்படியிருக்க நாம் ப்ரார்த்தித்தால் நாம் வேண்டுவதை அவன் கட்டாயம் கொடுப் பான். ஒருபோதும் கொடுக்காமல் இருக்க மாட்டான் என்ற கருத் தில் தான் இப்படியெல்லாம் எம்பெருமானைக் கூப்பிடுகிறார்.

ஹே! ரங்கநாத! நீ அர்த்திகல்பகன் ஆயிற்றே. குறையுள்ள ஜீவர்களிடம் சென்று இதை வாங்கிக்கொள் அதை வாங்கிக்கொள் என்று அவர்களிடம் வேண்டி அவர்களுக்கு வேண்டியவற்றைக் கொடுப்பவனாயிற்றே; அவ்வாறு நீ என்னிடம் வந்து வேண்டுவ தற்கு முன்னதாகவே நானே உன்னிடம் வந்து யாசிக்கிறேனே- வேண்டுகிறனே, நான் வேண்டுவதைக் கொடுக்காமல் போய் விடுவாயோ! அப்படி நான் வேண்டியும் நீ கொடுக்காவிட்டால் 'அர்த்திகல்பகன்' 'இவனே வேண்டித் தரும் கற்பக வ்ருக்ஷ மாவான்' என்ற உன்னுடைய புகழை உலகத்தவர்கள் பரிஹஸிப் பார்களே!

அந்தக் கற்பக வ்ருக்ஷம் வேண்டியவர்களுக்கு வேண்டிய வற்றைக் கொடுக்கும் என்று புகழ் பெற்றுள்ளது. அது கூட உன் பெருமைக்கு ஈடாகாது. அது எப்படிக் கொடுக்கும்? எதைக் கொடுக்கும் என்பதை இங்குச் சிறிது காட்டுவோம் அந்தக் கற்பகவ்ருக்ஷம் தன்னிடம் வந்து யாசித்தால் தான், யாசித்தவர்க்கு யாசித்த சிலவற்றைக் கொடுக்கும். தன்னைத் தராது. தன்னைத் தவிர மற்றைய சிலவற்றைத் தான் கொடுக்கும்.

அந்தக் கற்பக வ்ருக்ஷம் தன்னையே கொடுத்தால் கூட ஒருவரும் அதை வாங்கிக்கொள்ளமாட்டார்கள். அது வெறும் நாரும் நரம்புமாக (பட்டையும் கிளையுமாக) இருப்பதால் அதைக் கட்டி அணைத்து ஆனந்தம் பெறமுடியாது? நீ அப்படி அல்லன் ஆயிற்றே. உன்னைப் பிறர்கள் யாசிக்காமல் போனாலும் நீ அவர்களிடம் சென்று அர்த்தித்து-யாசித்து அவர்களுக்கு





வேண்டியவற்றைத் தருவாய். முடிவில் உன்னையே கூடத் தந்துவிடுவாய்! நீ அபார ஸௌந்தர்ய மஹோததி (கரையற்ற அழகுக் கடல் நீ) எல்லாப் பயன்களையும் தரவல்லவன் நீ (ஸகலபலப்ரதன்) அந்தக் கற்பக வ்ருக்ஷம் தரும் வஸ்துக்கள் போக்யங்களாய் அநுபவிக்கத் தக்கனவாய் இருக்கும். ஆனால் அந்த மரம் அநுபவிக்கத்தக்கதன்று. நீ அப்படிப்பட்டவன் அல்லன். நீ தரும் வஸ்துக்களும் பரமபோக்யங்கள். (மிகவும் அநுபவிக்கத் தக்கவை.) அவற்றைத் தரும் நீயும் பரம போக்யன்; இப்படிப்பட்ட நீ இருக்க எனக்கு என்ன குறை! நான் உன்னை யாசிக்க வேண்டுமா?

ஸ்வாமி நம்மாழ்வாரும், இப்படித் தானே எம்பெருமானை அநுபவித்துப் பேசியுள்ளார்.

**பற்பநாபன் உயர்வற உயரும் பெருந்திறலோன்**
**எற்பரன் என்னையாக்கிக் கொண்டு எனக்கே தன்னைத் தந்த**
**கற்பகம், என்னமுதம் கார்முகில் போலும் வேங்கடநல்**
**வெற்பன் விசும்போர் பிரான் எந்தை தாமோதரனே!**
**-திருவாய்மொழி (2-7-11)**

உலகுக்குக் காரணமான திருநாபீகமலத்தை உடையவன் எம்பெருமான். இவன் நாபியிலிருந்து (தொப்புளிலிருந்து) தோன் றிய சதுர்முக ப்ரஹ்மா தானே உலகத்தை ஸ்ருஷ்டிக்கிறான். அப்படிப்பட்டவன் இந்தத் திருநாபீ கமலத்தில் தானே தோன்றி னான். உலகத்தைப் படைக்கும் சதுர்முகனைப் படைத்ததால் இந்தத் திரு நாபீகமலத்தையே ஜகத்துக்குக் காரணம் என்கிறார் ஆழ்வார். அளவிடமுடியாத கல்யாண குணங்கள் அனைத்தையும் உடையவன் இந்த எம்பெருமான். இப்படிப்பட்டவன் என்னையே விரும்புகின்றவனாய் இருக்கிறான். அதுமட்டு மன்றிக் கற்பக வ்ருக்ஷம் போல் வேண்டியவற்றைத் தருபவனாயு மிருக்கிறான். ஆனால் அந்தக் கற்பக வ்ருக்ஷத்தைக் காட்டிலும்

வேறுபட்டுச் சிறந்து விளங்குகிறான் எம்பெருமான். அந்தக் கற்பக வ்ருக்ஷத்திற்கு இல்லாத சிறப்புகள் பல இந்த எம்பெருமானாகிய கற்பக வ்ருக்ஷத்திற்கு உள்ளன.

''என்னை ஆக்கிக் கொண்டு எனக்கே தன்னைத் தந்த கற்பகம் இது'' என்று எம்பெருமானாகிய கற்பக வ்ருக்ஷத்தின் பெருமையை உலகத்துக்கு உணர்த்துகிறார் ஸ்வாமி நம்மாழ்வார். ஆக எம்பெருமானாகிற ஒரு கற்பக வ்ருக்ஷம் உண்டு. உலகில் வழக்கில் உள்ள ஒரு கற்பக வ்ருக்ஷமும் உண்டு. இரண்டுக்கும் உள்ள வேற்றுமைகளை ஈட்டில் நம்பிள்ளை மிக அழகாகக் காட்டியுள்ளார். அது பின்வருமாறு.

*1) அர்த்திகளை உண்டாக்கிக் கொடுக்குமதில்லையிறே அதுக்கு .*

*2) ஒருவனுக்கே குறைவறக்கொடுக்கும் அதில்லையிறே அதுக்கு.*

*3) சில ப்ரயோஜனங்களைக் கொடுக்குமதல்லது தன்னைக் கொடுக்குமதில்லையிறே அதுக்கு.*

*4) தான் போக்யமாயிருக்குமதில்லையிறே அதுக்கு.*

இந்தப் பாசுரத்தில் கற்பகவ்ருக்ஷமாகக் கூறப்படும் எம்பெருமானுக்கு ஸ்வாமி நம்மாழ்வார் சில விசேஷணங்களை அதாவது அடைமொழிகளைத் தந்துள்ளார். இவற்றை நன்கு கவனித்தால் உலகவழக்கில் உள்ள கற்பக வ்ருக்ஷத்திற்கு முன் காட்டியபடி உள்ள குறைகள் நன்கு தெரியவரும்.

என்னை ஆக்கி என்பதால் அர்த்திகளை - யாசகர்களை - வரம் கேட்பவர்களை உண்டாக்கி அவர்களுக்கு வரம் கொடுப்பவன் எம்பெருமான் என்பது சொல்லப்பட்டதாகிறது.

ப்ரஸித்தமான கற்பக வ்ருக்ஷம் யாசகர்களை உண்டு பண்ணுது.





(என்னைக்) கொண்டு என்றதால் இப்படிப்பட்ட யாசகர்களைத் தான் ஸ்வீகரிப்பான்-அங்கீகரிப்பான் எம்பெருமான் என்பது சொல்லப்பட்டது. அந்தக் கற்பக வ்ருக்ஷம் அப்படிச் செய்யாது.

**எனக்கே:** கொடுக்கும் பொருள் என் ஒருவனுக்கே உரியதாயிருக்கும்படித் தருவான் எம்பெருமான். அந்தக் கற்பக வ்ருக்ஷம் கொடுக்கும் பொருள் ஒருவனுக்கே உரியதாயிராது, பலருக்குப் பொதுவாயிருக்கும்.

**தன்னைத் தந்த கற்பகம்:** வேண்டுபவர்கள் வேண்டிய மற்றைய பலன்களையும் தந்து முடிவில் தன்னையே அவர்களுக்குத் தந்து விடுவான் கற்பகமாகக் கூறப்பட்ட எம்பெருமான். ப்ரஸித்தமான கற்பக வ்ருக்ஷம் வேறு சில பலன்களைத் தருமேயல்லது தன்னை ஒருக்காலும் தராது.

**என் அமுதம்:** தன்னைத் தரும் கற்பக வ்ருக்ஷம் ஆகிய எம்பெருமான் அமுதம் போல பரம போக்யமாக இருப்பான். ஆகவே அவனையே எப்பொழுதும் அனுபவித்துக் கொண்டிருக்கலாம். ஆனால் ப்ரஸித்தமான கற்பக வ்ருக்ஷமோ தன்னை ஒரு போதும் தராது, தந்தாலும் நாரும் நரம்புமாய் இருக்கும் அது வெறுக்கத் தக்கதாகவே இருக்கும். போக்யமாக இருக்காது ஒருக்காலும். என்றிவ்வாறு ஸ்வாமி நம்மாழ்வார் எம்பெருமானாகிற கற்பக வ்ருக்ஷத்தைச் சிறப்பித்து அருளுகிறார்.

ஆக உலகப் ப்ரஸித்தமான கற்பக வ்ருக்ஷம் (1) யாசகர்களை உண்டாக்கிக் கொடுக்காது; (2) ஒருவனுக்கே குறையில்லாமல் பலன்களை அளவின்றிக் கொடுக்காது. (3) வேறு சில பயன்களை மட்டுமே தரும், தன்னை ஒரு போதும் ஒருவர்க்கும் கொடுக்காது. (4) அது போக்யமாயும் இராது என்று அதற்கு இல்லாத குணங்களைச் சொன்னார்கள்.

எம்பெருமானாகிய கற்பக வ்ருக்ஷம் (1) அர்த்திகளை-யாசகர்களை உண்டாக்கும். (2) அவர்களைத் தானே ஏற்றுக் கொள்ளும். (3) அவர்கள் கேட்டவற்றைக் கொடுப்பதோடு நிற்காமல் தன்னையே கொடுக்கும். (4) தான் மிகவும் போக்யமாய் அனுபவிக்கத்தக்கதாயுமிருக்கும் என்று இந்த எம்பெருமானாகிற கற்பக வ்ருக்ஷத்திற்கு உள்ள சிறப்புக்களையும் இவ்வாறு திரட்டிக் காட்டியுள்ளனர் பூர்வாசார்யர்கள்.

இப்பொழுது ஸ்வாமி எம்பெருமானார் 'அர்த்தியாகவும் கல்பகமாயுமிருக்கிறான் **(अर्थिकल्पकः)** எம்பெருமான். இவனே சென்று உலகத்தவர்களிடம் யாசித்து அதாவது என்னிட மிருந்து ஏதாவது பெற்றுக் கொள்ளுங்களேன் என்று வேண்டிப் பலன்கள் பலவற்றையும் தருகிறான்' என்று எம்பெருமானுடைய பெருமையை விளக்கியருளுகிறார்.

அர்த்தி கல்பக! என்ற சொல்லுக்கு இவ்வாறான அர்த்தத்தை ஸ்வாமி ஸ்ரீ தேசிகனும் அங்கீகரித்துக் காட்டியுள்ளார்.

மற்றும் பல வகைகளில் இந்த 'அர்த்தி கல்பக' என்ற வாக்யத்திற்கு வ்யாக்யானம் செய்துள்ளனர் நம் பூர்வர்கள்.

**अर्थिनां-कल्पकः** (அர்த்திநாம் கல்பக:) யாசகர்களுக்கு வேண்டியவற்றையெல்லாம் தரும் கற்பக வ்ருக்ஷம் போன்றவன் எம்பெருமான் என்றபடி, இது ப்ரஸித்தமான அர்த்தமே. யாசகர்கள் நிறைய வந்தால் மகிழ்பவன் எம்பெருமான். அவர்கள் வேண்டுபவையனைத்தையும் தர வல்லவனாகையாலே இவனுக்கு ஸந்தோஷமே உண்டாகும். கொடுக்க முடியாதவன் அன்றோ யாசகர்களைக் கண்டால் வருந்துவான் -வெறுப்பான். எவ்வளவு கொடுத்தாலும் குறையாத செல்வத்தை உடையவன் எம்பெருமான். ஆகவே யாசகர்களுக்குக் கற்பகவ்ருக்ஷமாக இருக்கிறான் எம்பெருமான் என்பதில் எந்தத் தவறும் கிடையாது. **स सर्वानर्थिनो**





**दृष्ट्वा समेत्य प्रतिनन्य च** (ஸ ஸர்வாநர்த்திநோ த்ருஷ்ட்வா ஸமேத்ய ப்ரதிநந்த்ய ச ।)

''தம் அரண்மனைக்கு வந்துள்ள யாசகர்களிடம் நெருங்கி அவர்களைக்கண்டு கொண்டாடினான் ஸ்ரீராமன்'' என்பதால் இந்த அர்த்தம் சொல்லப்பட்டதாகிறது.

சுவை மிகுந்த மற்றோர் அர்த்தத்தையும் ஸ்வாமி காட்டியருளுகிறார். அதாவது **अर्थिनः कल्पकाः यस्य सः अर्थिकल्पकः** (அர்த்திந: கல்பகா: யஸ்ய ஸ:) என்று பஹுவ்ரீஹி ஸமாஸத்தினால் அதாவது அன்மொழித் தொகையினால் இந்த அர்த்தத்தை வெளியிடுகிறார் ஸ்வாமி.

அரும்பெரும் அர்த்தங்களைச் சுருக்கமாகத் தெரிவிப்பதற்கு விக்ரஹம் (விரிவு) காட்டினாற்போதும்.

யஸ்ய அர்த்திந:-கல்பகா: என்று அந்வயம் கொள்ள வேண்டும். எம்பெருமானுடைய யாசகர்கள்-தாங்களே மற்றைய யாசகர்க்ள் அனைவருக்கும் வேண்டியவற்றை வழங்குவதில் கற்பக வ்ருக்ஷம் போல் இருப்பார்கள்; அதாவது எம்பெருமான் தன்னிடம் யாசிப்பவர்களுக்கு அவர்கள் வேண்டுவதைக் காட்டிலும் பன்மடங்கு அதிகமாகவே கொடுப்பான். அவர்கள் தங்களுக்குப்போதுமானதை வைத்துக் கொண்டு மிச்சம் உள்ளதைக் கொண்டு பின்னால் வரும் யாசகர்களுக்கு இவர்களே நிறைய கொடுத்து விடுவார்கள் என்றபடி.

இதுவரை எம்பெருமானைக் கற்பக வ்ருக்ஷமாக கொண்டு விளக்கம் தரப்பட்டது. இப்பொழுது எம்பெருமானிடமிருந்து வேண்டியவற்றைப் பெற்றுச் செல்லும் யாசகர்களைக் கற்பக வ்ருக்ஷமாகக் கொண்டு விளக்கம் தரப்படுகிறது. இந்த விஷயத்தை ஸ்ரீகண்ணனே ஸ்ரீ கீதையில் கூறியுள்ளான். **'उदाराः सर्व एवैते'**

(உதாராஸ் ஸர்வ ஏவைதே) என்னிடமிருந்து வேண்டியவற்றைப் பெற்றுக் கொள்ளும் இந்த நான்கு வகைப்பட்ட பக்தர்கள் உதா ரர்கள்-வள்ளல்கள் என்று தன்னிடம் யாசிப்பவர்களைப்பற்றிச் சிறப்பித்துக் கூறுகிறான் கண்ணன் **उदारास्सर्व एवैते** (உதாராஸ் ஸர்வ ஏவைதே) என்று. என்னிடமிருந்து ஐஶ்வர்யம் முதலனாவற்றை இவர்கள் பெற்றபோதும், 'நான் நிறையக் கொடுப்பவன் என்று எனக்குப்பெரும் புகழை இவர்கள் அல்லவா தருகின்றனர். நான் கொடுக்கும் பொருள்களைவிட இவர்கள் எனக்குத் தரும் புகழே மிகப்பெரியதாகும். ஆகவே இவர்கள் தான் உதாரர்கள் வள்ளல் கள் என்று கண்ணன் அருளுவதாக அங்கு வ்யாக்யானம் செய்யப் பட்டுள்ளது. ஆனால் இங்கு இவர்கள் என்னிடமிருந்து பெற்ற வற்றைப் பிறர்க்கும் கொடுப்பதால் இவர்களே (வள்ளல்கள்) என்ற கருத்தில் அருளியதாக வ்யாக்யானத்தில் இது மேற்கோளாக எடுக்கப்பட்டுள்ளது.

தமிழில் ஆற்றுப்படை என்ற ஒருவகை நூல் (க்ரந்தம்) உள்ளது. சிறு பாணாற்றுப்படை, பெரும் பாணாற்றுப்படை என்றிவ்வாறு. இவற்றில் யாசகன் பாணன் ஒருவன் வள்ளல் ஒருவனிடம் சென்று தன் புலமையைக் காட்டி நிறைய பரிசுகள் பெற்று வருகிறான். நடுவழியில் மற்றும் புலவர்கள் சிலரை இவன் சந்திக்கிறான். அவர்கள் எங்கள் குறையைத் தீர்க்கும் வள்ளல்கள் யாராவது இருக்கிறார்களா என்று தேடித் திரிகி றார்கள். அவர்களைக் கண்டு வருந்திய இவன் அவர்களை நோக்கி, நீங்கள் வேறு எங்கும் புரவலர்களை (வேண்டியதைத் தந்து ரக்ஷிப்பவர்கள்) வள்ளல்களைத் தேடிப் போக வேண்டாம். நான் ஒரு வள்ளலைச் சொல்லுகிறேன். அவனைத் தேடிப் போங்கள். நான் அவனிடமிருந்து இப்பொழுதுதான் வேண்டிய வற்றைப் பெற்றுத் திரும்பி வந்து கொண்டிருக்கிறேன். நீங்களும் அவனிடம் செல்லுங்கள். அவன் உங்களுக்கு வேண்டியவற்றை





எல்லாம் தருவான் என்று அவர்களை ஆற்றுப்படுத்துகிறான். தான் சென்று வந்த வழியில் செல்லச் செய்கிறான். இதுதான் ஆற்றுப்படுத்துதல் - ஆற்றுப்படை என்னப்படுகிறது.

இதில் ஒரு விஷயம் கவனிக்க வேண்டும். முதல் பரிசு பெற்று வந்தவன்-பிறகு வரும் யாசகர்களைத் தனக்குக் கொடுத்தவ னிடத்திற்கு வழி சொல்லியனுப்புகிறானே தவிர, தான் யாசித்துப் பெற்று வந்த பொருள்களில் சிறிது கூட அவர்களுக்குத் தர வில்லை; ஏன்! அந்த வள்ளல் தந்தது இவனுக்கே போதாததா யிருக்கிறது, பிறர்க்குக் கொடுத்தால் இது குறைந்து போய்விடும். மீண்டும்தான் பழையபடியே கஷ்டப்பட நேரும் என்பதே காரணம்.

ஸ்வாமி நம்மாழ்வார்

**என்னாவது? எத்தனை நாளைக்குப்போதும் புலவீர்காள்**
**மன்னா மனிசரைப் பாடிப்படைக்கும் பெரும் பொருள்?**
**- திருவாய்மொழி (3-9-4)**

என்று நிலையற்ற மனிதனைப்பாடி நீங்கள் பெறும் பணம் முதலிய பொருள்கள் எத்தனை நாளைக்குப் போதும் என்று இகழ்ந்து எம்பெருமானையே ஆஶ்ரயித்துப் பாடுமாறு உபதேசிக்கிறார்.

இந்த வகையில் ஒரு வள்ளலைப் புகழ்ந்து இவன் பெற்ற பொருள் மிகவும் குறைந்ததாகையால் அதைப் பிறர்க்குக் கொடுக்க முடியாமல் மற்றையோர்களையும் அந்த வள்ளலிடத் திற்கே அனுப்புகிறான் என்பதுதான் உண்மைநிலை.

ஆனால் எம்பெருமானிடமிருந்து ஐஶ்வர்யம் முதலிய வற்றைப் பெறுபவர்களுக்கு எம்பெருமான் கொடுக்கக் கொடுக்க மாளாததான ஐஶ்வர்யம் முதலானவற்றைக் கொடுப்பதால் அவற்றைப் பெற்ற இந்த முதல் யாசகன் பிறகு வரும் யாசகர்களை

எம்பெருமானிடம் அனுப்பாமல் தானே அவர்கள் பலருக்கும் அவர்கள் வேண்டியவற்றை எல்லாம் நிறையக் கொடுத்து அவர்களைத் திருப்பி விடுகிறானாம். இதனால் எம்பெரு மானிடம் அர்த்தித்து-யாசித்துப் பெற்றவர்களே கற்பக வ்ருக்ஷம் போல் வாரிவழங்கும் தன்மையைப் பெறுகிறார்கள் என்று இவர்கள் பெருமை கூறும் வகை எம்பெருமானுடைய பெருமை யே என்பது அறியத் தக்கதாகும்.

ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீயாதவாப்யுதய மஹா காவ்யத்தில் ஸ்ரீக்ருஷ்ணன் அவதரித்த வம்சத்தைச் சார்ந்த யது சக்ரவர்த்தியைப் புகழ்ந்து ஸ்லோகங்கள் செய்யும் போது அவனுடைய வள்ளன் மையை அதாவது வாரி வழங்கும் தன்மையை ஒரு ஸ்லோகத்தின் பாதியினால் மிக அழகாக வெளிப்படுத்துகிறார். யது சக்ரவர்த்தி யினிடம் முதலில் சிலர் வந்து சில பொருள்களை யாசிக்கி றார்கள். அவர்கள் வேண்டியபடியே அவர்களுக்கு அவற்றை அவன் மிக நிறையவே கொடுக்கிறான். நிறைய என்பதை எப்படி அறிகிறது? என்றால் அதையும் விளக்குகிறார் ஸ்வாமி ஸ்ரீ தேசி கன். அதாவது முதலில் வந்த யாசகர்கள் யதுவிடமிருந்து பெற்றுச் செல்லுகிறார்களே. இவர்கள் மீண்டு செல்லும்போது இவ்வாறே யாசித்துப் பொருள் பெறவேண்டும் என்ற எண்ணத்துடன் யது சக்ரவர்த்தி இருக்கும் இடம் நாடி மற்றும் யாசகர்கள் பலர் வருகி றார்கள். முதலில் யது சக்ரவர்த்தியிடமிருந்து பொருள் பெற்ற யாசகர்களே பின்னர் வரும் யாசகர்களுக்கு அவர்கள் வேண்டிய வற்றைக் கொடுத்து அனுப்பிவிடுகிறார்களாம். இப்படி மேலும் எத்தனை பேர்கள் வந்தாலும் அவர்கள் அனைவரையுமே முதல் யாசகர்கள் தாங்களே அவரவர்கள் வேண்டியவற்றை நிறையத் தந்து அனுப்பிவிடுவார்களாம். இப்படிப் பிறகு வரும் யாசகர் களுக்கு இவர்கள் நிறையப் பொருள் தரவேண்டுமானால் இவர்களுக்கு யதுசக்ரவர்த்தி எவ்வளவு தந்திருக்கவேண்டும்? அளவற்ற ஐஸ்வர்யத்தை அவன் தந்திருந்தால் தான் இப்படி





இவர்கள் பின்னர் வந்த யாசகர்களை த்ருப்திப்படுத்தி அனுப்ப முடியும். இதை வெளியிடும் ஸ்லோகத்தின் பாதியும் மிக அழகியது:-

**अर्थिनः प्रथमे यस्य चरमान् पर्यपूरयन् ।**

**அர்த்திந: ப்ரதமே யஸ்ய சரமாந் பர்யபூரயந் ।**

யது சக்ரவர்த்தியினிடம் முதலில் வந்து பொருள் பெற்ற யாசகர்கள் பின்னர் வரும் யாசகர்களின் ஆசையைப் பூர்த்தி செய்து விடுவார்கள். அதாவது அவர்கள் வேண்டும் அவற்றையெல்லாம் குறையறத் தந்து யதுவினிடம் செல்லாதவாறு திருப்தி செய்து திருப்பி அனுப்பிவிடுவார்கள் என்றபடி.

ஒரு செல்வனிடம் பொருள் பெற்றுச் செல்லும் யாசகன், பின்னர் பொருள் தரும் செல்வனை நாடி வரும் வேறு யாசக னுக்கு, தான் பொருள் பெற்ற செல்வன் இருக்கும் ஊருக்கு வழி சொல்லி, அந்த வழியில் அவனைச் செல்லச் செய்வான்- ஆற்றுப் படுத்துவான் என்பது தமிழர் கூறும் வகை. (ஆறு - வழி)

முதலில் ஒரு செல்வனிடம் பொருள் பெற்று வரும் யாசகர் கள் பின்னர் வரும் யாசகர்களை வழி சொல்லி அவனிடம் அனுப்பமாட்டான் - ஆற்றுப்படுத்தமாட்டான். இவனே அவர்கள் வேண்டுவனவற்றைத் தந்து விடுவான்:- இது வடமொழி வல்லுநர் கூறும் வகை.

'யது' என்ற ஒரு ஸாதாரண சக்ரவர்த்தியினுடைய ஔதார்ய மே (வள்ளன்மையே) இப்படிப்பட்டதென்றால் ஸர்வலோகேஶ் வரனாகிய எம்பெருமானுடைய வைபவத்தைச் சொல்ல வேண்டுமா? ஆக எம்பெருமானுடைய அர்த்திகளே (யாசகர் களே) கற்பக வ்ருக்ஷம் என்கிறார் ஸ்வாமி தேசிகன்.

அர்த்தி கல்பக என்பதற்கு மற்றும் ஓர் அர்த்தம் காட்டுகிறார்

ஸ்வாமி ஸ்ரீதேசிகன். அதாவது:-

**अर्थिनः कल्पयतीति अर्थिकल्पकः ।**

அர்த்திந: கல்பயதீதி அர்த்திகல்பக:.

அர்த்திகளை உண்டாக்குகிறவன் எம்பெருமான் என்பது இதன் கருத்து பின்வருமாறு.

பொருள் விளங்கினாலும் கருத்து விளங்குவது அரிது.

எம்பெருமான் ஸ்வயநலம் கருதாமல் வேண்டியவர்களுக்கு வேண்டியவற்றையெல்லாம் தருகிறான். எம்பெருமான் தரும் ஐஶ்வர்யம் முதலான புருஷார்த்தங்கள் மிகச் சிறந்தவையாகும். உயர்ந்தனவாகும்.

மற்றைய தேவதைகளிடமிருந்து பெறும் ஐஶ்வர்யம் முதலியன அற்பங்களாயும் அளவுடையனவாயுமிருக்கும். மேன் மேலும் ஆசைகளை விளைவித்து ஸம்ஸாரத்திலேயே ஆழ்த்தும். அதே ஐஶ்வர்யத்தை எம்பெருமானிடமிருந்து பெற்றால் நாள டைவில் வைராக்யத்தை உண்டு பண்ணி இவர்களை மோக்ஷத் தில் ஆசையுடையவர்களாகச் செய்து விடும்.

இவ்வாறான சிறப்புக்களை உணராமல் விரைவில் கிடைக் கிறது என்ற காரணத்தினால் பெரும்பாலான மக்கள் வேறு தேவ தைகளையே நாடிச் செல்கின்றனர். அவர்களிடமிருந்து அல்பங்க ளான ஐஶ்வர்யம் முதலானவற்றைப் பெற்று வைராக்யமின்றியே இந்த ஸம்ஸாரத்திலேயே விழுந்து உழல்கின்றனர்.

மக்களுடைய இந்த துர்தசையைப் போக்க விரும்புகிறான் எம்பெருமான், மக்கள் வேறு தேவதைகளிடம் சென்று அல்ப பலன்களைப் பெற்று அநர்த்தப்படுவதை (அல்லல் படுவதை)த் தடுத்து அனைவரும் தன்னிடமிருந்தே யாவற்றையும் பெறும் படிச் செய்ய வேண்டும். அவர்களுடைய காமத்தை அவர்கள்





விரும்பும் பலன்களைத் தந்தே போக்க வேண்டும். மோக்ஷத் திலே அவர்களுக்கு ஆசையை உண்டாக்கி அவர்களே தன்னிடம் மோக்ஷத்தை யாசிக்கும்படிச் செய்ய வேண்டும். இதற்காக என்ன செய்வது? என்று யோசித்துக் கடைசியில் சாஸ்த்ரங்களை வெளியிட்டு அதன் மூலமாக அவர்களைத் திருத்தி அவர்கள் தன்னை வந்து யாசிக்கும்படிச் செய்து பிறகு தான் விரும்பிய வகையில் நல்ல புருஷார்த்தங்களை அவர்களுக்குத் தர வேண் டும் என்று எண்ணி ஆசார்யர்கள் மூலமாக அவர்களைத் திருத்தி தன்னிடத்தில் வந்து யாசிக்கும்படிச் செய்கிறான். இப்படி ஆசார்யர்கள் மூலமாக சாஸ்த்ரார்த்தத்தை அறிந்து எம்பெருமா னிடமிருந்தே விரும்பியவற்றைப் பெற வேண்டும் என்று இவர்கள் (ஜீவாத்மாக்கள்) திருந்துகிறார்கள். முடிவில் எம்பெரு மானிடம் வந்து யாசிக்கிறார்கள். எம்பெருமானும் தான் செய்த முயற்சி பலித்தது என்று மிகவும் மகிழ்ந்து விரும்பிய வகையில் சிறந்த புருஷார்த்தங்களைத் தந்து மகிழ்கிறான்.

இந்த வகையில் அர்த்திகளை-யாசகர்களை உண்டு பண்ணு கிறான் எம்பெருமான் என்பதே 'அர்த்திந: கல்பயதி' என்பதன் கருத்து.

1) தானே யாசித்துத் தரும் கற்பக வ்ருக்ஷம் போன்றவன் எம்பெருமான்.

2) தன்னை வந்து அடைந்து யாசிப்பவர்களுக்கு வேண்டிய வற்றைத் தந்து தன்னையும் தரும் கற்பக வ்ருக்ஷம் எம்பெருமான்.

3) எம்பெருமானிடமிருந்து புருஷார்த்தங்களை யாசித்துப் பெறுபவரே மற்றையோருக்கு வேண்டியவற்றைத் தருவதில் கற்பகவ்ருக்ஷம் போன்றிருப்பர்.

4) தன்னிடமிருந்தே உயர்ந்த புருஷார்த்தங்களைப் பெற வேண்டும் என்ற விருப்பத்தை சாஸ்த்ர மூலம் ஜீவர்களுக்கு

உண்டு பண்ணி அவர்களைத் தன்னிடம் யாசிப்பவர்களாகச் செய்து அவர்கள் விரும்பியவற்றைக் கொடுப்பதுடன் அவர்களைத் திருத்தி மோக்ஷத்திற்கு ப்ரயத்நம் செய்யும்படி செய்கிறான். இப்படிப் பலவகைகளில் எம்பெருமானுடைய ஔதார்யம். வள்ளன்மை-கொடைத்தன்மை இந்த 'அர்த்தி கல்பக' என்ற ஸம்போதநத்தினால் விளக்கப்பட்டதாகிறது.

முன்பு பொதுவில் ஔதார்யம் விளக்கப்பட்டது. அதுவே தற்போது சிறப்பித்துக் கூறப்பட்டது என்பதால் புநருக்தி (கூறியது கூறல்) என்ற குற்றம் கிடையாது.

---



## 15. "ஆபத்ஸகன்"

**आपत्सखेति संबुद्ध्या रक्षकत्वं हरेर्हि यत्**
**आपत्सु प्रथितं शत्रोः पृथुगये विशेषतः ॥**
**तदद्य व्याकृतं संयक् महाविश्वाससिद्धये ।**
**वृत्तान्तैः बहुभिः पूर्वैः सोपपत्तिकमञ्जसा ॥**

ஆபத்ஸகேதி ஸம்புத்த்யா ரக்ஷகத்வம் ஹரேர் ஹி யத் ।
ஆபத்ஸு ப்ரதிதம் ஶத்ரோ: ப்ருது கத்யே விஶேஷத: ॥
ததத்ய வ்யாக்ருதம் ஸம்யக் மஹாவிஶ்வாஸ ஸித்தயே ।
வ்ருத்தாந்தை: பஹுபி: பூர்வை: ஸோபபத்திகம் அஞ்ஜஸா ॥

மேலும் ஸ்வாமி எம்பெருமானார் சரணாகதிகத்யத்தில் எம் பெருமானை **आपत्सख!** *(ஆபத்ஸக!)* என்று விளிக்கிறார் (அழைக் கிறார்.) இதனாலும் எம்பெருமானுடைய அத்புதமான குணம் ஒன்று வெளியாகிறது. அதை இந்தக் கட்டுரையில் விளக்கு கிறோம். 'ஆபத்ஸக:' பிறர்க்கு ஆபத்துக்கள் நேர்ந்த போது அந்த நிலையில் அவர்களுக்கு நண்பனாய் இருந்து உதவுகிறான். ரக்ஷிக்கிறான் என்றபடி. ஆபத் காலத்தில் உதவி செய்வது நண்பனுக்கு இலக்கணம். அவ்வாறே எம்பெருமானும் ஆபத் காலத்தில் உற்ற நண்பனாய் இருக்கிறான் என்றபடி.

ஸ்ரீகஜேந்திரன், ஸ்ரீப்ரஹ்லாதன், த்ரௌபதீ இவர்களுக்குப் பிறரால் ஆபத்து ஏற்பட்டபோது எம்பெருமான் தோழன் போலிருந்து உதவி செய்தான். ஆகவே இவன் ஆபத்ஸகன் ஆகிறான்.

இந்த முறையில் நமக்கு ஆபத்துக்கள் நேரும் போதும்

எம்பெருமான் ரக்ஷிப்பான் என்று நினைத்துச் சிந்தையில்லாம லிருக்க உதவும் இந்த மஹா குணம்.

இவர்கள் மூவருக்கும் பிறரால் அதாவது ஸ்ரீகஜேந்த்ரனுக்கு முதலையினால், ஸ்ரீ ப்ரஹ்லாதனுக்கு ஹிரண்யகசிபுவினால், த்ரௌபதிக்கு துஃஶாஸநனால் ஆபத்து ஏற்பட்டது. அந்த ஸமயத்தில் அவர்கள் எம்பெருமானை ஶரணம் பற்ற அவன் ரக்ஷித்தான்.

'சத்ருக்கள் விஷயத்தில், தானே ஆபத்தை உண்டு பண்ணி அந்த ஸமயத்தில் அவர்களைக் கை விடாமல் தானே நண்பனாய் இருந்து ரக்ஷிக்கிறான் எம்பெருமான். ஆகவே இவன் ஆபத்ஸக னாகிறான்' என்றும் விளக்கம் தருகின்றனர் பூர்வர்கள்.

காகாஸுரன் ஸீதாபிராட்டியினிடத்தில் அபசாரப் பட்டான். இதனால் இவனை சிக்ஷிக்க நினைத்த எம்பெருமான் அவனை நோக்கி ப்ரஹ்மாஸ்த்ரத்தை ப்ரயோகம் செய்தான். அது அவ னைத் தொடர்ந்து துரத்திற்று. அவனும் தன்னைப் பெற்ற மாதா பிதாக்களிடமும், மற்றுமுள்ள உறவினர்களிடமும் சென்று தன்னை ராமபாணத்திலிருந்து காக்குமாறு வேண்டினான். அவர் கள் ராமபாணத்திலிருந்து இவனைக் காக்கத் தங்களுக்கு சக்தி இல்லை என்பதைத் தெரிந்து கொண்டு கதவையடைத்து இவ னை விரட்டி விட்டார்கள். இவனும் போக்கிடம் இல்லாமல் கடைசியில் எம்பெருமான் ஸ்ரீ ராமன் திருவடிகளிலேயே வந்து விழுந்தான் . இப்படிப்பட்ட இந்த ஆபத்தான காலத்தில் இவ னுக்கு ஆபத்தை உண்டு பண்ணின எம்பெருமானே உயிர் தந்து அவனுக்குத் தோழன் போல் இவனைக் காத்தருளினான். இது ஸ்ரீ ராமாயணத்தில் ப்ரஸித்தமானது.

காகாஸுரன் வேறு போக்கிடமில்லாமல் தன் திருப்பாதங் களில் விழுந்ததையே ஸ்ரீராமன் அவன் தன்னை வணங்கியதாக - ஶரணம் அடைந்ததாகக் கொண்டு காத்தருளினான் என்று பூர்வா





சார்யர்கள் இந்த ஆபத்ஸகத்வம் (ஆபத் காலத்தில் நண்பனா யிருக்கும் தன்மை) என்ற மஹா குணத்தைக் கொண்டாடு கிறார்கள்.

இங்குக் காகாஸுரனுக்கு ஆபத்தை விளைவித்தவனும் அதாவது உண்டு பண்ணினவனும் எம்பெருமானே. கடைசியில் அவனைக் காப்பாற்றியவனும் அவனே. ஆகவே இவன் ஆபத் ஸகனாகிறான். இந்த அர்த்தத்தைப் பெரியவாச்சான் பிள்ளைதம் உரையில்:- ஆபத்ஸக! ஆபத்து வந்தவாறே தோழனாய் இருக்கை. அதாவது துணையா யிருக்கை. மாதா பிதாக்களும், பந்துக்களும் தள்ளிக் கதவடைக்கும் தசையிலும் 'ப்ரணத: இதி தயாளு:' என்றும் 'தமேவ ஶரணம் கத:' என்றும் தேவரே துணையா யிருக்கை - என்று விவரிக்கிறார்.

காகாஸுரன் தான் செய்த அபராதத்தை உணர்ந்து எம்பெருமான் திருவடிகளில் விழவில்லை. எல்லாத் திக்கு களிலும் ஓடிச்சென்று வேறு போக்கிடம் கிடைக்காமல் இளைத்து ஸ்ரீராமன் திருவடி ஸமீபத்தில் விழுந்தான். இதையே காரணமாகக் கொண்டு அவனைப் பரமதயையுடன் காத்தருளினான் கருணைகாகுத்தன். **'वायसस्य प्रणत इति दयालुः'** (வாயஸஸ்ய ப்ரணத இதி தயாளு:) தலை சாய்த்து விழுந்ததையே ப்ரணமம் செய்ததாகக் கொண்டு ரக்ஷித்தருளினாயே ராகவ! என்கிறார் ஸ்ரீஆளவந்தார். இப்படிக் காகாஸுரனுக்கு ஏற்பட்ட ஆபத்தையே காரணமாகக் கொண்டு ரக்ஷித்தான் ராகவன். இந்த ஆபத்தை விளைவித்தவனும் இந்த ராகவனே ஆவான். ஆக, தானே ஆபத்தை உண்டாக்கி அந்த ஸமயத்தில் நண்பனைப் போல் காத்தருள்பவன் எம் பெருமான்.

**आपत्सखः** = (ஆபத்ஸக:) என்பதற்கு **आपदि सखिवत् रक्षकः** (ஆபதி ஸகிவத் ரக்ஷக:) என்று விக்ரஹம் அதாவது விரிவு

காட்டுகிறார் ஸ்வாமி ஸ்ரீ தேசிகன். ஆபத் காலத்தில் தோழனைப் போல் ரக்ஷிப்பவன் என்ற பொருளையும் காட்டுகிறார்.

ஸர்வஜ்ஞனாய் ஸர்வ ஶக்தனான எம்பெருமானை இங்கு ஸகியாக - தோழனாகச் - சொன்னது அவனை (எம்பெருமானை) நம்பலாம். நம்மைக் கைவிடாமல் காப்பான் என்ற மஹா விஶ்வாஸத்தை உண்டாக்குவதற்காகத் தான். பெற்ற தாயும் தந்தையும் உடன் பிறந்தவனும் கூடச் சில ஸமயங்களில் கை விட்டு விடுவதை உலகில் கண்டும் புராணங்களில் கேட்டும் வருகிறோம். ஆனால் தோழன் ஒருக்காலும் கைவிட்டதாக எங்கும் எவரும் கண்டதுமில்லை. கேட்டதுமில்லை. ஆகவே எம்பெருமானை வேறு உறவு சொல்லிக் குறிப்பிடாமல் 'ஸகா' 'தோழன்' என்று கூறுகிறார்.

இம்மாதிரி ஸ்வாமி எம்பெருமானார் இப்பொழுது ஸ்ரீரங்க நாதனை 'ஆபத் ஸக' என்று கூறுவதன் கருத்து யாது? என்பதை ஆராயும் போது த்ரௌபதி ஸ்ரீ கஜேந்த்ரன் முதலானவர்களை ஆபத் காலத்தில் காத்தருளியது போல் ஸம்ஸாரபந்தமாகிற பேராபத்தில் சிக்கிய நம்மையும் காத்தருளவேண்டும் என்பதற்காகத் தான்.

தானே ஆபத்தை உண்டு பண்ணிக்காகாஸுரனை ரக்ஷித்தமையை இதற்கு உதாஹரணமாக எடுத்துக் காட்டியருளினார் பெரியவாச்சான் பிள்ளை.

ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ராவணன் விஷயத்தில் ஸ்ரீராகவன் அருளிச் செய்ததை உதாஹரணமாகக் காட்டி ஆபத்ஸகனாயிருக்கும் தன்மையை விளக்கியருளுகிறார்.

ராமனுக்கும் ராவணனுக்கும் யுத்தம் நடக்கிறது. முதல் நாள் யுத்தம், தன் பத்னியை அபஹரித்துச் சென்ற காரணத்தினால் மிகுந்த கோபம் கொண்டு கொடிய பாணங்களால் ராவணனை அடிக்கிறான் ராமன். அவனும் எவ்வளவோ எதிர்த்துப்





போராடியும் கடைசியில் ராமபாணங்களின் அடி பொறுக்க மாட்டாமல் களைத்து நிற்கிறான். அந்த நிலையில் அவனைச் சடக்கெனக் கொல்வது மிக எளிது. ஆனால் சக்ரவர்த்தித் திருமகன் அவ்வாறு செய்யவில்லை. அவன் நிலை கண்டு கருணை கொள்கிறான். அவனுக்கு உதவவேண்டும் என்றும் நினைக்கிறான். அப்பொழுது அவன் மீது பாசம் கொள்கிறான் எம்பெருமான். உடனே நண்பனாகிறான். அவனுக்கு உதவ நினைக்கிறான். அடுத்து அவனுடைய திருவாக்கிலிருந்து அன்பின் வடிவமான ஶ்லோகங்கள் பிறக்கின்றன.
அவையாவன:-

**कृतं त्वया कर्म महत् सुभीमं हतप्रवीरश्च कृतस्त्वयाहम् ।**
**तस्मात् परिश्रान्त इति व्यवस्य न त्वां शरैर्मृत्युवशं नयामि ।।**
**गच्छानुजानामि रणार्दितस्त्वं प्रविश्य रात्रिञ्चर राज! लङ्काम् ।**
**आश्वास्य निर्याहि रथी च धन्वी तदा बलं द्रक्ष्यसि मे रथस्थः ।।**

க்ருதம் த்வயா கர்ம மஹத் ஸுபீமம் ஹதப்ரவீரஶ்ச
க்ருதஸ்த்வயாஹம் ।
தஸ்மாத் பரிஶ்ராந்த இதி வ்யவஸ்ய ந த்வாம்
ஶரைர்ம்ருத்யு வஶம் நயாமி ।।
கச்சாநுஜாநாமி ரணார்திதஸ்த்வம் ப்ரவிஶ்ய
ராத்ரிஞ்சரராஜ லங்காம் ।
ஆஶ்வாஸ்ய நிர்யாஹி ரதீ ச தந்வீ ததா பலம் த்ரக்ஷ்யஸி
மே ரதஸ்த: ।।

'ராவண! இதுவரை நீ பெரிய கார்யம் செய்துள்ளாய். பெரியது மட்டுமன்று; மிகவும் பயங்கரமானதும் கூட. என்னுடைய ஸேநா வீரர்கள் பலரைக் கொன்றாய்; ஆகையால் இப்பொழுது நீ மிகவும் களைத்திருக்கிறாய். இந்த ஸமயத்தில் பாணங்களால்

அடித்து உன்னை யமலோகத்திற்கு அனுப்பக் கூடாது என்று நினைக்கிறேன். ஆகவே அநுமதி தருகிறேன். ஹே ராக்ஷஸேஸ்வரனே! யுத்த களத்திலிருந்து செல்; லங்கைக்குச் சென்று ஓய்வு எடுத்துக் கொள். உன் சரீரத்தைத் தேற்றிக் கொள். பிறகு புதிய தேர், புதிய வில் இவற்றுடன் தேர் மீதேறி வா. அப்பொழுது என் பலத்தைக் காண்பாய்' என்கிறான்.

எவ்வளவு கருணை உள்ளம் எம்பெருமானுக்கு? தன் சத்ருவை நோக்கித் தோழன் போல் இவ்வாறு கூறுகிறானே! இவன் தான் ஆபத்ஸகன். கையில் அகப்பட்ட சத்ருவை உடனே கொல்லாமல் விட்டு இன்று போய் நாளை வா என்றானே? இந்த குணம் எப்படிப்பட்டது? எந்த வகையைச் சார்ந்தது? எப்படி இதைப் புகழ்வது? என்றெல்லாம் வியக்கிறார் ஸ்ரீ கூரத்தாழ்வான்.

ஸ்வாமி ஸ்ரீதேசிகனும் ராவண வதத்தை விட இப்படிக் கூறி ராவணனை விட்டுக் கொடுத்து உதவியதால் எம்பெருமானுக்குப் பெருமை மிகப் பெரியதாகிறது என்கிறார்.

இப்படித் தன் ஶத்ருவான ராவணனுக்கு ஆபத்தைத் தானே உண்டாக்கி அந்த நிலையில் தோழன் போல் (ஸகா போல்) உதவினான் அன்றோ!

இப்படிப்பட்டவன் வேறு கதியற்ற நம்மை ஆபத் காலத்தில் காப்பாற்றமாட்டானா! கட்டாயம் காப்பாற்றுவான். ஆனால் ராவணன் எதிர்த்து வந்தமையால் மாண்டான். ஸ்ரீராம ப்ரபாவத்தை உணர்ந்து இனி தப்பமுடியாது என்று எண்ணித் தன்னை ஶரணம் அடைவானோ ராவணன்? அப்பொழுது அவனைக் கொல்லாமல் ரக்ஷிக்கலாமே? என்ற எண்ணத்தால் இன்று போய் நாளை வா என்றான். நாம் அப்படியல்லோமே. ஆகவே ஆபத் காலத்தில் நம்மை அவன் கட்டாயம் காப்பாற்றுவான்.





இப்படிப்பட்ட எம்பெருமான் ஆபத்ஸகனாயிருக்கும் நிலையை பரிமேலழகர் ஒரு திருக்குறளின் உரையில் எடுத்துக் காட்டு கிறார்.

**பேராண்மை என்ப தறுகண் ஒன்றுற்றக்கால்**
**ஊராண்மை மற்றதன் எஃகு**

படைச்செருக்கு என்ற அதிகாரத்தில் உள்ள ஒரு குறள் இது. இந்தக் குறளுக்குப் பரிமேலழகர் என்பவர் தந்துள்ள உரை பின்வருமாறு:-

பகைவர் மேல் கண்ணோடாது செய்யும் மறத்தை நூலோர் மிக்க ஆண் தன்மை என்பர். அவர்க்கு ஒரு தாழ்வு வந்ததாயின் கண்ணோடி அது தீர்த்துக்கோடற் பொருட்டு ஊராண்மை செய்தலை அதற்குக் கூர்மை என்று சொல்லுவர் நூலோர் . ஊராண்மை= உபகாரியாந் தன்மை என்று. உதவி செய்யும் தன்மை என்றபடி. இது தமிழில் இருந்த போதும் இதைப் புரிந்து கொள்வது மிக அரிது. ஆகவே இதை விவரிக்கிறோம்.

பகைவன் மேல் சிறிதும் தயை பாராட்டாமல் அவனை அடித்து நொறுக்கும் தன்மையை சாஸ்த்ரம் அறிந்தவர் பேராண்மை-மிகுந்த ஆண் தன்மை-வீரம் என்று சொல்லுவார்கள். ஆனால் அதே ஸமயம் அந்தப் பகைவனுக்கு ஒரு ஆபத்து வந்தால் அவன் மீது கருணை கொண்டு அந்த ஆபத்தைத் தீர்ப்பதற்காகச் செய்யும் ஊராண்மையை -உதவி செய்யும் தன்மையை அந்தப் பேராண்மைக்கு-வீரத்திற்குப் பெருமை தரும் கூர்மை என்று சொல்லுவார்கள்.

கோழைகள் தான் எதிரி தன் கையில் சிக்கிய உடனேயே அவனை அடித்துக் கொன்று தீர்ப்பார்கள். ஆனால் வீரர்களாயிருப்பவர்கள் முதலிலேயே அவனைக்கொன்று விடாமல் அவனை அடித்து வாட்டுவார்கள். அந்த நிலையில் களைத்துப் போயிருக்கும் அவனுக்கு மீண்டும் ஒரு ஸந்தர்ப்பம் தந்து இன்று

போ! ஒய்வு எடுத்துக் கொண்டு நாளை வா என்று விட்டு உதவி செய்வார்கள். இது அவனுடைய வீரத்திற்குப் பெருமை தரும் கூர்மை-மெருகு ஆகும் என்று கருத்து.

இதற்கு ஏற்ற உதாஹரணத்தையும் தந்து கூறிய குறளின் பொருளை விளக்குகிறார் பரிமேலழகர்.

"அஃதாவது இலங்கையர்வேந்தன் போரிடைத் தன் தானை முழுதும் படத் தமியனாய் அகப்பட்டானது நிலையை நோக்கி அயோத்தியர் இறை மேற் செல்லாது இன்று போய் நாளை நின் தானையோடு வா' என விட்டால் போல்வன" என்று.

இதன் கருத்து இதுவே:-ராமனுக்கும் ராவணனுக்கும் நடந்த போரில் தன் ஸேனை முழுவதும் அழிந்து விடத் தான் மட்டும் எஞ்சி நின்று அகப்பட்டுக் கொண்டான் இலங்கை வேந்தனான ராவணன் அயோத்யாதிபதியான ஸ்ரீராமனிடம். அவனுடைய இந்த அவல நிலையைக் கண்ட ராமனுக்கு அவன் மீது கருணையே உண்டாயிற்று. இந்த நிலையில் அவன் மீது போர் தொடுத்துக் கொண்டு மேல் செல்லவில்லை போர் முகத்தில். உடனே ராவணனைப் பார்த்து இன்று உன்னை விட்டுவிட்டேன். போ. இலங்கைக்குச் சென்று ஒய்வு எடுத்துக் கொண்டு நாளை மீண்டும் நீ உன் ஸேனையுடன் போருக்கு வா' என்று சொல்லி அவனை அனுப்பி வைத்தானே ஸ்ரீராமன்.

இது தான் ஆண்மைக்குப் பெருமை தரும் 'கூர்மை' எனப் பட்ட பண்பு. இதுவே ஆபத்ஸகனாயிருக்கைக்கு ஏற்ற உதாஹரணம்.

ராவணனுக்கு ஆபத்தை உண்டு பண்ணினவனும் ஸ்ரீராமனே. அந்த நிலையில் அவனை ரக்ஷித்தவனும் ஸ்ரீராமனே. இந்த ஆபத்ஸகத்வம் என்ற மஹாகுணத்தை நாம் அநுஸந்தாநம் செய்தால் எம்பெருமானிடம் நமக்கும் மஹாவிஶ்வாஸம் ஏற்படும். ஆகவே இது இவ்வாறு பல ப்ரமாணங்களைக் கொண்டு விளக்கப்பட்டுள்ளது.

---



## 16. கோபம் என்னும் பெருங்குணம்

**कोपनामा गुणो नैव गद्ये यद्यपि कीर्तितः ।**
**तथापि तस्य मुख्यत्वं लेखेऽस्मिन् लिख्यतेऽधुना ॥**

(கோப நாமா குணோ நைவ கத்யே யத்யபி கீர்த்தித: ।
ததாபி தஸ்ய முக்யத்வம் லேகேऽஸ்மிந் லிக்யதேऽதுநா ॥

ஒரு விஷயமே ஒரு வகையில் தோஷமாகவும் மற்றொரு வகையில் குணமாகவும் ஆகிறது. உதாஹரணமாக-'காமம்' என்பதை எடுத்துக் கொள்வோம். அல்பங்களான-நம் ஸ்வரூபத்திற்கும், நம் ஸ்வபாவத்திற்கும் தகாதவைகளான விஷயங்களில் இந்தக் காமம் செல்லும் போது அதாவது பெண்டாட்டி, பிள்ளை; பணம் மற்றும் மதுபானம் இவற்றில் உண்டாகும் காமம் தோஷமாகிறது. அதாவது பகவானுடைய அநுபவத்திற்கு விரோதியாகிறது. அந்தக் காமமே பகவான் விஷயத்தில் சென்றால் அதாவது பகவத் விஷயமாக இருக்கும் போது அது குணமாகிறது.

'கண்ணனுக்கே ஆம் அது காமம்' என்று பகவானைப் பற்றி உண்டாகும் காமம் வேண்டப்படுகிறது மஹான்களால்.

ஸ்ரீ ஆண்டாளும் 'மற்றை நம் காமங்கள் மாற்று' என்று இதர விஷயத்தில் செல்லும் என் காமத்தை மாற்றியருளவேண்டும் என்கிறாள். இதனால் இதர விஷயமான காமம் தோஷமாகிறது என்பது ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டதாகிறது. மற்றைய விஷயங்களில் உண்டாகும் காமம் ரஜோகுணத்தினால் ஏற்பட்டதாகும். பகவத் விஷயத்தில் உண்டாகும் காமம் மிகுந்த ஸத்த்வகுணத்தினால் ஏற்படுகிறது.

இவ்வாறே தான் கோபம் என்றதுவும். இது ஸம்ஸ்க்ருதத்தில் **क्रोधः** (க்ரோதம்) என்றும் கூறப்படுகிறது.

ஶாஸ்த்ர விஷயமான விஷயங்களில் உண்டாகும் க்ரோதம் (கோபம்) தோஷமாகும். சாஸ்த்ர விருத்தமான விஷயங்களில் உண்டாகும் கோபம் குணமாகும்.

காலையில் ஸ்நாநம் செய்ய வேண்டும். ஸந்த்யாவந்தனம் செய்ய வேண்டும். பகவந் நமஸ்காரம் செய்யவேண்டும் என்றிவை முதலான சாஸ்த்ர விஹிதங்களான கர்மாக்களைக் கண்டால் ஒருவனுக்குப் பிடிக்கவில்லை. ஆகவே 'இவற்றைச் செய்' என்று பெரியவர் சொன்னால் உடனே அவர் மீது கோபம்-க்ரோதம் வந்துவிடுகிறது அவனுக்கு. இந்த வகையில் உண்டாகும் கோபம் தோஷமாகும். இம்மாதிரியான விஷயங்களுக்கு விபரீதங்களான வற்றில் அதாவது கள் குடித்தல், எப்பொழுதும் சினிமா பார்த்தல், பொய் பேசுதல், திருடுதல் முதலான சாஸ்த்ர நிஷித்தமான (செய்யக்கூடாது என்று சாஸ்த்ரங்களால் தடுக்கப்பட்டுள்ள) விஷயங்களைப் பிடிக்காத ஒருவன் இவற்றைச் செய்பவன் மீதும், இவற்றை 'நீயும் செய்யேன்' என்று தன்னைப் பார்த்துச் சொல்பவன் மீதும் கொள்ளும் கோபம் (க்ரோதம்) குணமாகும். இது ஸத்த்வ குணத்தினால் உண்டாவதாகும். முன் வகையில் காட்டிய கோபம் ரஜோகுணத்தினால் உண்டாவதாகும்.

கோபம் என்பது அசேதனத்தின் மீது எவருக்கும் உண்டாகாது. எவனாவது ஒரு சேதனனைக் குறித்துத் தான் மற்றொருவனுக்குக் கோபம் வரும். தான் விரும்பிய வஸ்து கிடைக்காவிடில் அருகில் இருந்தவர்களைக் கண்டு 'இவர்கள் தான் நான் விரும்பிய வஸ்து எனக்குக் கிடைக்காமல் செய்து விட்டார்கள்' என்று அவர்கள் மீது உண்டாகும் ஒரு வித வெறுப்பு உணர்ச்சிக்குத் தான் கோபம் என்று பெயர். அருகில் இருப்பவர்கள் ஒன்றும் செய்யாதவர் கள் ஆயினும் இவன் அந்த வஸ்துவில் கொண்டுள்ள காமம் ஒன்றும் செய்யாத அருகில் இருப்பவர்கள் மீதும் இந்தக் கோபத்தை உண்டாக்கும். இதன் காரணமாக அவர்களைக் கொல்லவும் முற்படுவான் அவன்.





எம்பெருமானுக்குக் கூட ஒரு ஸமயத்தில் ஸீதையின் பிரிவினால் உண்டான இந்தக் கோபம் த்ரோஹம் செய்யாதவர் களையும் அழிக்கும்படியான ஒரு வேகத்தை உண்டு பண்ணிற்று. ராவணன் ஒருவன் ஸீதையை அபஹரித்து விட்டான். அந்த ஸீதையின் மீது கொண்டுள்ள காமம், கோபத்தை உண்டாக்கி அவளுடைய பிரிவுக்குக் காரணம் அல்லாதவர்களையும் அழித்து விடத் தூண்டி விடுகிறது.

அந்த ஸமயத்தில் ஸ்ரீராமனே என்ன கூறியுள்ளான் பாருங்கள்.

**'सदेवगन्धर्वमनुष्यपन्नगं जगत् सशैलं परिवर्तयाम्यहम्'**

பழையபடியே அழகிய முகத்துடன் ஸீதையை இப்பொழுதே என்னிடம் யாராவது கொண்டு கொடுக்காவிடில் தேவர்கள், கந்தர்வர்கள், மனுஷ்யர்கள், நாகர்கள் அடங்கிய உலகம் முழு வதையும் மலைகளுடன் சேர்த்துத் தலைகீழாகப் புரட்டுவேன் என்றான். பிறகு 'எவனோ ஒருவன் தவறு செய்ய அதற்காக உலகம் அனைத்தையும் அழிப்பது தர்மம் அன்று' என்று இளைய பெருமாள் சொல்ல ஸ்ரீராமனுடைய அந்தக் கோபம் தணிந்தது. நடிப்புக்காகக் கோபம் கொண்ட தசையிலேயே இம்மாதிரியான வேகம் என்றால் மனிதர்களுக்கு இயற்கையில் வரும் கோபத்தின் வேகம் எப்படிப்பட்டது என்பதைச் சொல்லவேண்டுமா?

ஆக இவ்வாறான தோஷமான கோபத்தைத் தான் விட்டு ஒழிக்க வேண்டும்.

மனுஷ்யர்களிலேயே மஹான்கள் பலர் தர்மாநுஷ்டாநத்திற்கு த்ரோஹம் செய்யும் பாபிகள் மீது கோபம் கொள்கிறார்கள். அதனால் அவர்களைச் சாபமிட்டு அழித்தும் விடுகிறார்கள்.

ஆசார்யர்கள், சிஷ்யர்கள் தவறு செய்யும் போது கோபம் கொண்டு அவர்களைத் தண்டிக்கிறார்கள்.

புருஷர்கள் தம் பத்னீ முதலானோர் தவறு செய்யும் போது கோபம் கொண்டு அவர்களைப் பல வகைகளில் தண்டிக்கிறார்கள்.

அரசன் ப்ரஜைகள் தவறு செய்யும்போது அவர்கள் மீது கோபம் கொண்டு அவர்களைப் பல வகைகளில் தண்டிக்கிறான்.

இம்மாதிரி வரும் கோபங்கள் யாவும் குணங்களேயாகும். இந்தக் கோபங்களால் சிஷ்யர்கள், பத்னிகள், ப்ரஜைகள் இப்படி யாவரும் திருந்தி நல்வழி செல்கிறார்கள். அவர்கள் இவர்களை சிக்ஷிக்காவிடில் இவர்கள் மேன்மேலும் தவறுகளையே செய்து கொண்டிருப்பார்கள்.

இவ்வகையில் எம்பெருமான் தன் அடியவர்களுக்கு விரோதிகளாய் துன்பம் செய்யும் பாபிகள் மீது கோபம் கொண்டு அவர்களை அழித்தும் விடுகிறானே! அந்தக் கோபமும் ஒரு சிறந்த குணமாகும். பகவானுடைய இந்தக் கோபம் ஆஶ்ரிதர்களை ரக்ஷிப்பதில் முதலிடம் பெறுகிறது.

ஸ்வாமி எம்பெருமானார்,தாம் அருளிய சரணாகதி கத்யத்தில் எம்பெருமானுடைய கல்யாண குணங்கள் பலவற்றையும் அடுக்கி அருளும்போது அந்த வரிசையில் இந்தக் கோபம் என்ற க்ரோதம் இடம் பெறவில்லை. ஆயினும் ஆஶ்ரிதர்களுடைய விரோதிகளை அழிப்பதில் மிக ப்ரதாநமாயிருப்பது இந்த (கோபமே) க்ரோதமேயாகும். இந்தக் கோபம் என்ற குணம் இல்லாவிடில் ஆஶ்ரிதர்களுடைய விரோதிகளை அழிக்கவேமுடியாது. ஆகவே இதன் முக்யத்வம் கொண்டு இதை இந்த கட்டுரையில் விவரிக்கிறோம்.

தேவதைகளுக்கு மிகவும் துன்பங்களைத் தந்து வந்த ராவணனைச் சக்ரவர்த்தித் திருமகனார் வதம் செய்து தொலைத்தார் என்பது ப்ரஸித்தம். இதற்குப் பயன்பட்டது எந்த குணம்? ஸ்வாமி எம்பெருமானார் அடுக்கிய, இவ்வளவு நாட்கள் நாம்





விளக்கிய இந்த எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களில் எந்தக் குணம் பயன்பட்டது? என்பதை நாம் சிந்திக்க வேண்டும். வாத்ஸல்யம், ஔதார்யம், ஐஶ்வர்யம் என்றவாறான ஒரு குணமும் உபயோகப்படவில்லை. இந்த க்ரோதம் என்கிற கோபந்தான் பயன்பட்டது.

**'न क्रुद्ध्यत्यभिशप्तोऽपि'** (ந க்ருத்யத்யபிசப்தோऽபி) நன்கு பழிக்கப் பட்ட போதும் ஸ்ரீராமன் கோபம் கொள்வதில்லை என்று ஸ்ரீராமனைப் பற்றிய ப்ரஸித்தி-புகழ் - உலகில் உண்டு. அப்படிப்பட்ட ஸ்ரீராமனுக்குக் கோபம் வந்தது. அப்பொழுது தான் ராவணன் அழிந்தான். ராமனுக்கும் ராவணனுக்கும் யுத்தம் நடக்கிறது. திருவடியின் மீது அதாவது ஹநுமானுடைய தோளின் மீது அமர்ந்து பாணங்களைப் பொழிகிறான் ஸ்ரீராமசந்த்ரன். ராவணன் ராமனை அடிப்பதற்குப் பதிலாக ஹநுமானை அடிக்கிறான். ராவணனுடைய பாணம்பட்டு ஹநுமானுடைய சரீரத்தில் கொஞ்சம் புண் உண்டாயிற்று. அதைக் கண்டான் ஸ்ரீராமன். மிகுந்த கோபம் கொண்டான். ஒரு போதும் கோபத்திற்கு வசமாகாத அவன் அன்று கோபத்திற்கு வசமாகி விட்டான்.

**ततो रामो महातेजाः रावणेन कृतव्रणम् ।**
**दृष्ट्वा प्लवगशार्दूलं कोपस्य वशमेयिवान् ॥**

(ததோ ராமோ மஹாதேஜா: ராவணேந க்ருதவ்ரணம் ।
த்ருஷ்ட்வா ப்லவகஶார்தூலம் கோபஸ்ய வஶம் ஏயிவாந் ॥

மரத்திற்கு மரம் தத்தித் தாவும் ஜாதியில் பிறந்த ஹநுமானுடைய சரீரத்தில் ஏற்கெனவே இளமைப் பருவத்தில் ஜாதி ஸ்வ பாவத்தினால் நிறைய புண்கள் உண்டு. அவற்றைப் பார்க்கும் போதெல்லாம் ஸ்ரீராமனுக்கு கோபம் உண்டாவதில்லை. இந்தப் பயல் ராவணன் அடித்து உண்டாக்கிய புண்ணைப் பார்த்ததும்,

அது சிறியதாயிருந்தாலும் ஹநுமான் அதை கொஞ்சமும் பொருட்படுத்தாமல் மகிழ்ந்து கிளர்ந்து எழுந்தபோதும் ஸ்ரீராமன் மிகுந்த கோபம் கொண்டான்.

க்ருஹஸ்தர்களாயிருப்பார் தங்கள் குழந்தைகள் தாங்களாகவே நடக்கும் போது விழுந்து புண்கள் பலவற்றை உண்டாக்கிக் கொண்டிருந்தாலும், பக்கத்து வீட்டுக்காரர் அன்பினால் தாடையைத் தட்ட உடனே தாடை சிவந்து விட அதைப் பார்த்த மாத்ரத்திலேயே பொறாதவர்களாய் அவர்கள் மீது பாய்ந்து சண்டையிடுவதைப் பார்த்துத் தானே வருகிறோம்.

இந்த நிலையில் தான் எம்பெருமான் ஸ்ரீராமசந்த்ரனுக்கு ஹநுமான் உடலில் ராவணன் அடித்து உண்டாக்கிய புண்ணைக் கண்டதும் மிகுந்த கோபம் உண்டாயிற்று.

ராவணேந க்ருதவ்ரணம் த்ருஷ்ட்வா - தான் பருவம் நிரம்பாத காலத்திலே பண்ணிக்கொண்டதன்றிக்கே தரமல்லாத-(எதிராக மாட்டாத) ராவணன் கையிலே (ராவண னிடத்தில்) புண்பட்டவாறே என்றபடி என்று திருப்பாவை வ்யாக்யாநத்தில் அழகிய மணவாளப்பெருமாள் அருளியபடி.

இப்பொழுது யோசித்துப் பார்ப்போம். எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களில் எந்தக் குணம் ராவண ஸம்ஹாரத்திற்கு பயன்பட்டது என்று. இப்பொழுது நன்கு புரிகிறது கோபம் என்ற மஹாகுணம் தான் ராவணவதமாகிற மிகப் பெரிய நல்ல கார்யத்திற்குப் பயன்பட்டது என்று.

சூடிக்கொடுத்த நாய்ச்சியாராகிய ஸ்ரீஆண்டாள் இந்த விஷயத்தை 'சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்றமனத்துக்கினியான்' என்று அருளியுள்ளாள் திருப்பாவையில். சினம்-கோபம்.

பெரும்பூதூர் மாமுனி இந்தச் சினம் என்ற கோபத்தை-





க்ரோதத்தை கத்யத்தில் அருளாவிடிலும், பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் அருளிச் செய்துள்ளாள். இதுவே போதும் இதன் முக்யத்வத்திற்கு.

இவ்வாறே முன்பு ஜநஸ்தாநத்தில் கரன், தூஷணன் முதலான ராக்ஷஸர்கள் அனைவரையும் ஸ்ரீராமன் வதம் செய்ய விரும்பிய போது ப்ரஸித்தங்களான தம் திருக்கல்யாண குணங்களுள் ஒன்றும் உதவாமற் போகவே கோபத்தை வலுவில் வரவழைத்துக் கொண்டான். அந்தக் கோபத்தினால் ப்ரளய காலத்திய அக்னி போல் காணமுடியாதவனாயிருந்தான் அவன் என்பதை வால்மீகி பகவான் ஆரண்ய காண்டத்தில்

**क्रोधमाहारयत् तीव्रं वधार्थं सर्वरक्षसाम् ।**
**दुष्प्रेक्षस्सोऽभवत् क्रुद्धः युगान्ताग्निरिव ज्वलन् ॥**

**(க்ரோதமாஹாரயத் தீவ்ரம் வதார்த்தம் ஸர்வரக்ஷஸாம் ।**
**துஷ்ப்ரேக்ஷஸ் ஸோऽபவத் க்ருத்த: யுகாந்தாக்நிரிவ ஜ்வலந் ॥)**

என்ற ஶ்லோகத்தினால் விளக்கியுள்ளார். கோபம் வந்ததும் ராக்ஷஸர் அழிந்தனர்.

ஆகவே ஆஶ்ரித விரோதிகளை அழிப்பதில் முதலிடம் பெறுவது இந்தக் கோபம் என்கிற மஹாகுணமேயாகும்.

மேலும் பக்தர்கள் எம்பெருமானைச் சரணம் அடைவதும் இந்தக் கோபம் என்ற மஹாகுணம் அவனுக்கு உண்டு என்ற காரணத்தினால் தான். காருண்யம் முதலான குணங்கள் அவனுக்கு உண்டு என்ற காரணத்தினால் அன்று. இவ்விஷயத்தை ஸர்வஜ்ஞன் பக்கலிலிருந்தே ஸர்வார்த்த க்ரஹணம் பண்ணின அதாவது எம்பெருமானிடமிருந்தே ஸர்வசாஸ்த்ரார்த்தங்களையும் கற்றறிந்த திருமங்கையாழ்வார் ஒரு பாசுரத்தின் மூலம்

அருளியுள்ளார். அந்தப் பாசுரம் பின்வருமாறு:-

**கடிகொள் பூம் பொழில் காமரு பொய்கை**
**வைகு தாமரை வாங்கிய வேழம்**
**முடியும் வண்ணம் ஓர் முழுவலி முதலை**
**பற்ற, மற்றது நின் சரண் நினைப்ப**
**கொடியவாய் விலங்கின்னுயிர் மலங்கக்**
**கொண்ட சீற்றம் ஒன்றுண்டுளதறிந்து உன்**
**அடியனேனும் வந்து அடியிணை அடைந்தேன்**
**அணிபொழில் திருவரங்கத்தம்மானே**
**-பெரிய திருமொழி (5-8-3)**

இதில் ஸ்ரீகஜேந்த்ர ஸம்ரக்ஷணம் செய்ததை எம்பெருமானுக்கு உணர்த்தி நானும் உன் திருவடிகளை அடைகிறேன் என்கிறார் திருமங்கையாழ்வார்.

நறுமணம் மிகுந்த மலர்கள் மண்டியுள்ள காடு ஒன்று. அதன் நடுவே மிக அழகிய தாமரைப்பூக்கள் பூத்துக் குலுங்கும் குளம். எம்பெருமானை அர்ச்சிப்பதற்கு விரும்பிய யானை ஒன்று அந்தக் குளத்தில் இறங்கித் தாமரைப்பூ ஒன்றைத் தன் கையால் பறித்து எடுத்தது. அந்த ஸமயத்தில் முதலை ஒன்று அதன் காலைப் பிடித்து விழுங்க அது இறக்கும் தருணத்தில் எம்பெருமானைச் சரணம் பற்றிற்று. இதன் காரணமாக எம்பெருமான் தன் பக்தனான ஸ்ரீகஜேந்த்ரனை அழிக்க வந்த முதலை மீது மிகுந்த கோபம் கொண்டு வெகுதூரத்திலிருந்து ஓடி வந்து முதலையைக் கொன்று தன் பக்தனான ஸ்ரீகஜேந்த்ரனை ரக்ஷித்தான் என்பது வ்ருத்தாந்தம். இதை எடுத்துக் கூறி 'எம்பெருமானே! அந்த ஸமயத்தில் அந்தக் கொடிய ப்ராணியான பலம் மிகுந்த முதலை மீது நீ மிகுந்த கோபம் கொண்டாய் அன்றோ? அப்படிப்பட்ட கோபம் என்ற மஹாகுணம் உனக்கு உண்டு என்பதை இதனால்





அறிந்து நானும் உன் திருவடிகளைச் சரணம் அடைகிறேன். அந்தக் கோபத்தினாலேயே என்னுடைய விரோதிகளையும் நீ போக்கியருள்வாயாக' என்கிறார் திருமங்கையாழ்வார்.

சீற்றம் ஒன்று உண்டு உளது அறிந்து:

தரித்ரனானவன் தனிகனை (பணக்காரனை) அடையுமாப் போலே சீற்றம் உண்டு என்றாய்த்து இவர் (திருமங்கையாழ்வார்) பற்றுகிறது.

'ஆஶ்ரயிப்பார்க்கு உறுப்பான குணங்களிறே ஸௌஶீல்யாதிகள்; விரோதி நிரஸநத்திற்குப் பரிகரமிறே சீற்றம்' என்று உரையிட்டருளுகிறார் பெரியவாச்சான் பிள்ளை.

எம்பெருமானை ஆஶ்ரயிப்பதற்கு - சரண் அடைவதற்குப் பயன்படுகின்றன ஸௌஶீல்யம் முதலான குணங்கள்.

ஆஶ்ரயித்த பின் ஆஶ்ரயித்தவர்களின் விரோதிகளைப் போக்குவதற்குப் பயன்படுவது இந்தச் சீற்றமே- கோபமே-க்ரோதமேயாகும் என்றபடி. அங்கு ஆஶ்ரித விரோதி ஒரு முதலை.

இங்கு ஆஶ்ரிதராயிருக்கும் நமக்கிருக்கும் விரோதிகள் ஐவர், அதாவது ஐந்து விஷயங்களும் இந்த்ரியங்களுமாகவுமாம். அங்கு முதலையினால் நோவுபட்டது தேவவர்ஷங்கள் ஆயிரம். இங்கு நாம் நோவுபடுவது அநாதிகாலமாகும்.

அங்கு அந்த யானை விழுந்தது ஒரு சிறிய குட்டையிலே.

இங்கு நாம் விழுந்துள்ளது அபாரமான ஸம்ஸார ஸமுத்ரத்திலேயாகும். ஆக ஸ்ரீ கஜேந்த்ரனைக் காட்டிலும் நம்முடைய விரோதிகளே அதிகம். இவர்களை ஒழிக்க இத்தனை கோபமும் வேண்டும்.

பொய்கை ஆழ்வார், ஸ்ரீ ந்ருஸிம்ஹன் ஹிரண்யன் மீது கொண்ட சீற்றத்தைப் புகழ்ந்து அதுவே நமக்குத் தஞ்சமான தனம்; ரக்ஷகமான பணம் என்கிறார்.

**வயிறழல வாளுருவி வந்தானை அஞ்ச**
**எயிறிலக வாய் மடுத்து என்? நீ-பொறியுகிரால்**
**பூவடிவை ஈடழித்த பொன்னாழிக்கையா, நின்**
**சேவடிமேல் ஈடழியச் செற்று. (முதல் திருவந்தாதி-93)**

இதற்கு முந்தையபாட்டினால் பொய்கையாழ்வார் எம்பெருமானுக்கு ஆஶ்ரிதர்கள் பக்கலிலே உள்ள வாத்ஸல்யம் (அன்பு ) என்ற மஹாகுணத்தை வெளியிட்டருளினார். இந்தப் பாட்டினால் ஆஶ்ரிதர்களுடைய விரோதிகள் பக்கலிலே எம்பெருமானுக்கு உள்ள சீற்றத்தை வெளியிடுகிறார்.

அன்பு பாராட்டும் விஷயத்தில் தான்-அதற்குத் தீங்கு நேரும் போது அதற்குக் காரணமானவர்களிடத்தில் கோபம் உண்டாகிறது.

ஒரு விஷயத்தை ஒருவன் விரும்புகிறான் அதை அழிக்க மற்றொருவன் முற்படும் போது அவன் மீது அந்த ஒருவனுக்குக் கோபம் வருகிறது. அன்பே கோபமாக மாறுகிறது.

ஆக எம்பெருமானுக்குத் தன்னை ஆஶ்ரயித்தவர்கள் மீது நிறைய அன்பு-வாத்ஸல்யம் இருக்கிறது. இதன் பயனாய்த் தான் இவர்களுடைய விரோதிகள் பக்கலில் எம்பெருமானுக்குச் சீற்றம்-கோபம் உண்டாகிறது.

ஸ்ரீ ந்ருஸிம்ஹனிடத்திலே மிகுந்த பக்தி கொண்டவர் பொய்கையாழ்வார். தன்னுடைய பக்திக்கு விஷயமான ஸ்ரீ ந்ருஸிம்ஹனைக் கொல்ல அவன் மீது பாய்ந்தான் மஹாபாபியான ஹிரண்யகசிபு. அதை நினைக்கும் போதே தனக்கு வயிறு அழல்கிறது,எரிகிறது என்கிறார் ஆழ்வார். என்றோ ஒரு நாள்





நடந்ததை இப்போது நினைத்தாலும் ஸ்ரீ ந்ருஸிம்ஹ பக்தர்களுக்கு வயிறு எரியத் தான் செய்யும். அப்படிப்பட்ட ஹிரண்யனும் அஞ்சும்படி அவனைத் திருவடிகளில் கிடத்தி அழகிய திருக்கை நகங்களால் கொன்றான் ஸ்ரீ ந்ருஸிம்ஹன்.

ஸ்ரீ ந்ருஸிம்ஹனைப் பார்த்தே ஆழ்வார் கேட்கிறார். 'அன்று ஹிரண்யன் மீது அவ்வளவு கோபம் கொண்டது ஏன்? எதற்காக?' என்று. ஆக ஆஶ்ரிதர்களுடைய விரோதிகளை அழிப்பது எம்பெருமானுடைய கோபமேயாகும் என்பது இதனால் தெளிவு.

'ஶரணாகதர்க்குத் தஞ்சமான (ரக்ஷகமான) தனமாவது ஆஶ்ரிதார்த்தமாக ஹிரண்யனைப் பற்றப் பண்ணும் சீற்றம்' என்று இங்குப் பெரியவாச்சான் பிள்ளை அருளிய ஸ்ரீ ஸூக்தியை ரஸித்து அனுபவிக்க வேண்டும். எம்பெருமான் கட்டாயம் சரணாகதர்களை அவர்களுடைய விரோதிகள் நலியாதபடி அவர்களிடமிருந்து காப்பாற்றுவான் என்ற மஹாவிஶ்வாஸம் (பெரு நம்பிக்கை) உண்டாவது எம்பெருமானுடைய இந்தக் கோபம் என்ற மஹாகுணத்தினால் தான். ஆக சரணாகதர்களுக்கு உதவுவது இந்தக் கோபமே என்றபடி.

இப்படிப்பட்ட சீற்றத்தோடேயே அருள் பெற்றவன் ஸ்ரீ ப்ரஹ்லாதாழ்வான். இத்தகைய ப்ரஹ்லாதவரதனையே அநவரதமும் ஆராதித்து வரும் நமக்கும் அந்தச் சீற்றமே அவனருளைத் தரும். நமக்கு விரோதிகள் பாபம். இவனது சீற்றம் அவையனைத்தையும் அழித்து ரக்ஷிக்கும் என்றபடி.

எம்பெருமானுக்கு உண்டாகும் கோபம் இரண்டு வகைப்படும். தனக்குத் தீங்கிழைத்தவன் மீது உண்டாகும் கோபம் ஒன்று. தன்னடியார்க்குத் தீங்கிழைத்தவர்கள் மீது உண்டாகும் கோபம் மற்றொன்று.

முந்தைய கோபம் சட்டெனத் தணிந்துவிடும். உதாஹரணமாக ராவணன் தன் பத்னியான ஸீதையை அபஹரித்துச் சென்று

விட்டான். இது ராவணன் தன் விஷயத்தில் செய்த தீங்கு. இதனால் ஸ்ரீராமன் உலகம் அனைத்தையும் அழித்துவிடுவதாகக் கோபம் கொண்டான். 'இது தகாது' என்று இளையபெருமான் சொல்ல அந்தக் கோபம் உடனே தணிந்து விட்டது. இது தனக்காகக் கொண்ட கோபம். ஆகவே தணிந்து விட்டது.

தன்னடியார்க்குத் தீங்கிழைத்தவர்கள் மீது கொள்ளும் கோபம் ஒரு நாளும் தணியாது. உதாஹரணமாக தன்னுடைய தாஸனான ஹநுமானை அடித்த ராவணன் மீது கொண்ட கோபம் ஒரு போதும் தணியவில்லை. இது ஆஶ்ரிதர்களுக்காகக் கொண்ட கோபம். அதுதான் நமக்குத் தஞ்சமான-ரக்ஷகமான-காப்பான தனம் என்கிறார் பெரியவாச்சான் பிள்ளை.

உலகில் ஒருவன் கோபத்துடனிருக்கும் போது ஒருவரும் அவனைப் பார்க்கவும் விரும்பமாட்டார்கள். பிறகு வந்து பார்த்துக் கொள்கிறேன், என்று சொல்லித் திரும்பிவிடுவார்கள்.

ஆனால் பக்தர்கள் இந்த மஹாகோபத்துடன் இருக்கும் நிலையிலும் எம்பெருமானைக் கிட்டி ஸேவிக்க விரும்புவார்கள்.

மாரிமலை முழைஞ்சில் என்று தொடங்கும் பாசுரத்தில் மாரிக்காலத்தில் தன் பெடையோடே அணைத்துக் கொண்டு தூங்கிய சிங்கம் பிறகு துயிலெழுந்து தீவட்டி போன்ற கண்களால் விழித்துப் பார்த்து சடக்கென நான்கு புறத்திலும் உடலைக் கிளப்பி நிமிர்ந்து கர்ஜனை செய்து கிளம்புவது போல் அந்தப் புரத்திலிருந்து கண்ணனைக் கிளம்பி வருமாறு ப்ரார்த்திக்கிறாள் ஸ்ரீ ஆண்டாள்.

சிங்கம் போல் கண்ணனும் அறிவுற்றுக் கோபத்தினால் தீவிழி விழிக்க வேண்டும். நாங்கள் அந்த நிலையில் அவனை ஸேவிக்க வேண்டும் என்று விரும்புகிறாள் இவள்.

கோபத்துடனிருக்கும் ஒருவனை யாரும் பார்க்க விரும்ப





மாட்டார்களே! அப்படியிருக்க உலக இயல்புக்கு மாறாக ஏன் இந்த ஆண்டாள் இந்த நிலையில் கண்ணனை ஸேவிக்க விரும்புகிறாள்? என்ற ஒரு கேள்வியை எழுப்பிக் கொண்டு அதற்குரிய அழகிய பதிலையும் பூர்வர்கள் இங்கு வெளியிட்டுள்ளனர். அதாவது-

'இவனைக்கொண்டு வேறொரு ப்ரயோஜநம் கொள்ளும் அவர்களன்றிக்கே இவனிருந்தபடியே உத்தேஶ்யம் என்றிருக்கையாலும், 'கொண்ட சீற்றம்' என்று ஆஶ்ரிதார்த்தமான சீற்றத்தை 'நிதி உண்டு' என்று நினைத்திருக்கும் அவர்களாகையாலும், ஏதேனுமாக இவன் செய்கை இவர்களை நைவிக்கையாலும் சீரிய சிங்கம் என்றத்தோடு, 'அறிவுற்று' என்றத்தோடு தீ விழித்து என்றத்தோடு வாசியற இவையெல்லாம் போக்யமாயிருக்கிறபடி. இவையா-இவையா-என்று தனித்தனியே ஆகர்ஷகமிறே' என்று.

இது பெரியவாச்சான் பிள்ளை அருளிய ஸ்ரீஸூக்திகள்; சுவை மிகுந்த பொருள்கள் பொதிந்தவை. அவஶ்யம் அறியப்பட வேண்டியவையும் கூட. கேள்வியை நினைவில் கொள்ள வேண்டும். அதாவது ஒருவன் கோபத்துடன் இருக்கும் போது மற்றையோர் அவனைக் காண விரும்பமாட்டார்களே. இதற்கு மாறாக ஸ்ரீ ஆண்டாள் கோபங்கொண்ட நிலையில் எம்பெருமானைக் காண விரும்புகிறாளே? இது எவ்வாறு பொருந்தும்? என்பதே கேள்வி.

இதற்குப் பதிலையும் உன்னிப்பாகக் குறிக் கொள்ள வேண்டும்:-

கோபம் கொண்ட அந்த ஒருவன் எவனோ ஒருவன். அவனைக் காண விரும்பும் மற்றையோர் அவனிடமிருந்து ஏதாவது பயன் பெற விரும்புபவர்களாயிருப்பார்கள். அவனிடமிருந்து பயனை மட்டுமே விரும்புகிறவர்கள். அந்த மற்றையோர்

அவனை விரும்புகிறவர்களல்லர். ஆகையால் அந்த ஒருவன் கோபத்தோடு இருக்கும் நிலையில் சென்று அவனை நெருங்கி னால் அவனிடமிருந்து தாம் பெற விரும்பும் பலன் கிடைக்காது போய்விடும். கோபத்தினால் அவன் இவர்களை விரட்டி விடு வான். கார்யம் கெட்டுவிடும்; விரும்பிய பயன் கிடைக்காமல் போய்விடும். ஆகவே தான் உலகில் கோபமாயிருக்கும் ஒரு தனிகனை அந்த நிலையில் அவனிடமிருந்து உதவி பெறும் மற்றையோர் சென்று காண விரும்புவதில்லை.

ஆனால் ஸ்ரீ ஆண்டாள் எப்படிப்பட்டவள்? கண்ணனை ஸேவிப்பதைத் தவிர வேறு எந்தப் பயனையும் அவனிடமிருந் தும் விரும்பாதவள். கண்ணன் கோபத்துடனிருக்கும் நிலையில் சென்றாலும் ஸேவை கிடைக்குமே? அது போதுமே இவளுக்கு. வேறு பலனை விரும்பினால் தானே கார்யம் கெட்டுவிடும்- பலிக்காமற் போகும் என்றெல்லாம் நினைக்கத் தோன்றும். ஆகக் கண்ணன் கோபத்துடனிருக்கும் நிலையிலும் ஆண்டாள் அவனை ஸேவிக்க விரும்புவதில் எந்த முரண்பாடும் இல்லை. அவன் எப்படி இருக்கிறானோ அப்படியே அவனை ஸேவிப்பது தான் ஸ்ரீ ஆண்டாள் விரும்பும் பயன். பெண்கள் தாம் மணக்க விரும்பும் ஒரு புருஷனிடத்தில் அழகை விரும்புவது போலவும், தரித்ரன் தனக்கு உதவவல்ல ஒருவனிடத்தில் பணம் உள்ளதா என்று நினைப்பது போலும், நோயாளிகள் தான் நாடும் வைத்யனுக்குத் தன் நோயைத் தீர்க்க வல்லமை இருக்கிறதா என்று எதிர்பார்ப்பது போலவும், எம்பெருமானை ஆச்ரயிக்க விரும்புபவர்கள், எம்பெருமானிடத்தில் தன் விரோதிகளை அழிக்க வல்ல திறமை - அதாவது கோபம் உண்டா? என்று ஆராய் வார்கள். அவனிடத்தில் கோபம் உண்டு என்பதை அறிந்தால் அவனைச் சடக்கெனச் சரணம் அடைவார்கள். அம்மாதிரியில் தான் ஸ்ரீ ஆண்டாளும் எம்பெருமானுக்குக் கோபம் உண்டென் றால் தரித்ரன் நிதி உண்டு,என்றதும் அந்த இடத்திற்கு விரைந்து





செல்வது போல்) விரைந்து அவனை ஆச்ரயிப்பாள். ஆக விரோதிகளை அழிப்பதற்கு வேண்டிய கோபம் உள்ள நிலையில் அவனைக் காண்பதே பரம புருஷார்த்தம் என்றிருப்பவள் ஸ்ரீ ஆண்டாள். ஆகையால் இந்த நிலையிலும் கண்ணனை ஸேவிக்க விரும்புகிறாள். இதில் என்ன குறை-தவறு உள்ளது? மேலும் உலகில் ஒருவனை ஒருவனுக்குப் பிடித்து விட்டால், அவன் எது செய்தாலும் மற்றவனுக்கு போக்யனாகவே அதாவது அனுப விக்கத்தக்கவனாகவே இருப்பான்.

உலகிலும் ஒரு க்ருஹஸ்தனை எடுத்துக் கொள்வோம். அவன் தன் மனைவி மீது மிகுந்த அன்பு கொண்டுள்ளான்; இந்த அன்பு காரணமாக அவள் எது செய்தாலும் அவன் அவளை விரும்பியே இருப்பான். ஒரு நாளும் வெறுக்க மாட்டான்; பாடினாலும், புகழ்ந்தாலும், இகழ்ந்தாலும், மகிழ்ந்தாலும் முனிந்தாலும் அதாவது கோபித்துக் கொண்டாலும் அவளுடைய செய்கைகள் அனைத்தும் அவளுடைய கணவனுக்கு இனியனவாகவே இருக்கும். வைத்த கண் வாங்காமல் அவளையே பார்த்துக் கொண்டிருப்பான்.

அம்மாதிரிதான் பகவானுடைய நிலைமைகள், செய்கைகள் யாவற்றையும் பக்தன் விரும்பி இருப்பான். ஸ்வாமி நம்மாழ்வார் இந்த விஷயத்தை மிக அழகாக. 'அது-இது-உது என்னலாவன வல்ல என்னை உன் செய்கை நைவிக்கும்' (திருவாய்மொழி:5-10-2) என்று இந்த ஒரு அடியினால் அருளியுள்ளார். அதாவது எம்பெருமானே! உன்னுடைய செய்கை எதுவாயினும் ஆயிடுக. அது இப்படித்தானிருக்கவேண்டும் என்ற நிர்பந்தமில்லை. அந்தச் செய்கைகள் உன்னுடையனவாக இருக்க வேண்டும். அவற்றைக் காண்பவன் நானாக இருக்க வேண்டும். இப்படி இருந்து விட்டால் உன் செய்கைகள் என்னை உருக்கும். இதில் ஸந்தேஹமேயில்லை என்று இதன் பொருள்.

அதையடியொற்றியே 'மாரிமலை முழைஞ்சில்' என்ற

பாட்டில் எம்பெருமான் சீரிய சிங்கமாயிருக்கும் நிலையிலும் அறிவுற்றிருக்கும் நிலையிலும் தீவிழிவிழிக்கும் நிலையிலும் வ்யத்யாஸம் ஏதுமின்றி ஸ்ரீ ஆண்டாளுக்குப் பரமபோக்யனாய், மிக இனியனாய் இருக்கிறான் என்பது ஏற்படுகிறது என்கிறார்கள் உரையாசிரியர்கள். எம்பெருமானுடைய ஒவ்வொரு நிலையும் மிக இனியதே! ஒவ்வொரு நிலையும் பக்தர்களை வசீகரிக்கும். ஆக எம்பெருமான் கோபத்துடன் இருக்கும் நிலையும் மிக இனியதே.

ஸ்ரீ ந்ருஸிம்ஹன் கொண்ட கோபத்தில் திருமழிசையாழ் வாருக்குள்ள ஈடுபாட்டை அவர் பாசுரம் கொண்டே அறியலாம்.

**இவையா பிலவாய் திறந்து எரிகான்ற**
**இவையா எரிவட்டக்கண்கள்-இவையா**
**எரிபொங்கிக்காட்டும் இமையோர் பெருமான்**
**அரி பொங்கிக்காட்டும் அழகு!**

எம்பெருமான் பரிபூர்ணன்; ஒருவரை வதம் செய்து பெற வேண்டியது ஒன்றுமில்லை. ஆனாலும் தன்னையாஶ்ரயித்த வர்களைத் துன்புறுத்துபவர்களை வதம் செய்யவே அவ்வளவு கோபம் கொள்கிறான் அவன். அதைக்கண்டு ரஸிக்கிறார் திருமழிசைப்பிரான்.

அந்தக் காலத்தில் அதாவது ஹிரண்யவதம் நடந்த காலத்தில் காண்பது போல் இப்போதும் கண்டு அநுபவிக்கிறார்.

அப்பொழுது ஸ்ரீ ந்ருஸிம்ஹன் பிலம் (குஹை) போன்ற தன் வாயைத் திறந்து நெருப்பை உமிழ்கிறான். அந்த நிலையிலும் ஆ! இது மிக்க ஆச்சர்யமாக இருக்கிறதே என்கிறார். பிறகு ஹிரண்யன் மீது கொண்ட கோபத்தினால் தன்னுடைய வட்டமாய் தீவட்டி போலே இருக்கிற கண்களைத் திறந்து நெருப்பை வெளியிடு கிறான். அந்த நிலையிலும் ஆ! இவை மிக ஆச்சர்யங்களாக





இருக்கின்றனவே என்கிறார்.

பரிபூர்ணனான-அமரர்கள் தலைவனான எம்பெருமான் ஸ்ரீந்ருஸிம்ஹமாக அவதரித்து ஆஶ்ரிதர்களுக்காக மிகுந்த கோபம் கொண்டு இவ்வளவு அழகைக் காட்டுகிறானே! இவை ஆ. இது மிகுந்த ஆச்சர்யமானது என்று சீற்றம் கொண்ட சிங்கப்பிரான் விஷயத்திலேயே ஒவ்வொரு நிலையிலும் ஈடுபட்டு பாசுரமும் அருளுகிறார் திருமழிசைப்பிரான்.

ஆக எம்பெருமான் கோபம் கொண்ட நிலையிலும் அவனடியார்க்கு இனியனாகவே இருப்பான். அவனுடைய கோபம் குணங்களுள் மிகச் சிறந்தது; ஆஶ்ரிதர்களுடைய விரோதிகளை அழிக்கப்பயன்படுவது. நமக்கு வேண்டுவதும் கூட.

கோபம் நீண்டு விட்டது. அதாவது கோபத்தைப் பற்றிய கட்டுரை நீண்டு விட்டது. அதற்காக எம் மீது கோபிக்காதீர்கள். கோபித்துக் கொள்ள வேண்டுமானால் எம்பெருமானுடைய கோபத்தைக் கோபித்துக் கொள்ளுங்கள். அதுதான் இவ்வாறு எம்மை எழுத வைத்தது.

**लेखो हि कोपेन गुणोत्तमेन सुदीर्घतां प्रापदयं; महान्तः ।**
**मा कुप्यतास्मिन्न ममास्ति दोषः, कोपस्य शौरेः किल दोष एषः ॥**

லேகோ ஹி கோபேந குணோத்தமேந
ஸுதீர்கதாம் ப்ராபதயம், மஹாந்த: |
மாகுப்யதாஸ்மிந் ந மமாஸ்தி தோஷ:
கோபஸ்ய ஶௌரே: கில தோஷ ஏஷ: ||

இத்துடன் குணங்களின் விளக்கம் பூர்த்தியடைகிறது. மேலே எம்பெருமான் திருமேனி வைபவம் பற்றி விளக்குவோம்.

**சுபம்**

"காரார் புரவியேழ் பூண்ட தனியாழி
தேரார் நிறை கதிரோன் மண்டலத்தைக் கீண்டுபுக்கு
ஆராவமுத மங்கெய்தி-அதினின்றும்
வாரா தொழிவதொன்றுண்டே?-அது நிற்க,
ஏரார் முயல் விட்டுக் காக்கைப்பின் போவதே?"

-சிறிய திருமடல்



திருமங்கையாழ்வார் - குமுதவல்லி நாச்சியார்
திருநகரி

# ஏரார் குணமும் எழிலுருவும்

## பாகம் 2

## புலன் கொள் வடிவு

### பொருளடக்கம் பக்கம்

## 1. எம்பெருமான் திருமேனி - ஶுபாஶ்ரயம்

**गुणजातं हरेर्दिव्यम् अन्वभावि यथामति ।**
**अथानुकथयामोऽस्य दिव्यं वर्ष्म शुभाश्रयम् ॥**

(குணஜாதம் ஹரேர்திவ்யம் அந்வபாவி யதாமதி ।
அதாநுகதயாமோऽஸ்ய திவ்யம் வர்ஷ்ம ஶுபாஶ்ரயம் ॥

இதுவரை ஸ்வாமி எம்பெருமானார் ஶரணாகதி கத்யத்தில் அருளிச் செய்த எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங் களை விரிவாக நம் புத்தி சக்திக்கு ஏற்றவாறு அநுபவித்தோம். அந்த எம்பெருமானுடைய திவ்ய திருமேனியைப் பற்றிச் சில சொல்லுகிறோம் இப்போது.

உலகில் காணப்படும் ஜீவர்கள் விஷயத்தில் சரீரம், ஆத்மா என்று இரண்டு பொருள்கள் இருப்பது போல் எம்பெருமான் விஷயத்திலும் திவ்யாத்ம ஸ்வரூபம், திவ்யமங்கள விக்ரஹம் என்று இரண்டு பொருள்கள் உள்ளன. திவ்யாத்ம ஸ்வரூபம் எங்கும் பரந்து வ்யாபித்து நிற்பதாகும். அதை நாம் கண்ணால் காணவோ, கையால் தொடவோ, நாவினால் சுவைக்கவோ முடியாது. ஶுபாஶ்ரயம் எனப்படும் அவனுடைய திவ்யமங்கள விக்ரஹத்தை (திருமேனியை) அவனுடைய அவதார தசையில் கண்ணால் காணவும் தொட்டுப் பிடித்து அணைத்துக் கொள்ளவும் சுவைக்கவும் முடியும்.

பரமாத்ம ஸ்வரூபம் மற்றைய யாவற்றையும் விட உயர்ந்த தாய், உபாதேயதமமாய் அதாவது நாம் கொள்ளுமவற்றில் மிகச் சிறந்ததாய் இருந்தபோதும் அவனுடைய திவ்ய மங்கள விக்ரஹம் இதைக் காட்டிலும் மிக மிக உயர்ந்ததாய், உபாதேயதம மாய் அதாவது நாம் கொள்ளுமவற்றில் மிகமிகச் சிறந்ததாய் விளங்குகிறது என்பதை ஒரு சிறு ஶ்லோகத்தினால் அருளிச் செய் கிறார் ஸ்வாமி ஸ்ரீதேசிகன். அதாவது-

**परावरसुखग्राह्यं प्रेमबोधप्रसावकम् ।**
**स्वरूपात् स्वामिनो रूपम् उपादेयतमं विदुः ॥**

(பராவரஸுக க்ராஹ்யம் ப்ரேமபோதப்ரஸாவகம் ।
ஸ்வரூபாத் ஸ்வாமிநோ ரூபம் உபாதேயதமம் விது: ॥)

***(ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரம் த்வயாதிகாரம்)***

என்பதே அந்த ஶ்லோகம். அறிவிற் சிறந்தவர்களான யோகிகள், அறிவிலிகளான நம்மைப் போன்ற ஸம்ஸாரிகள் ஆகிய இரு தரப்பினர்களாலும் எளிதில் அறியத் தக்கது எம்பெருமானுடைய திருமேனி. பக்தி, ஜ்ஞானம் இவற்றைத் தரவல்லது எம்பெருமானுடைய திருமேனி.

இது பகவானுடைய திவ்யாத்ம ஸ்வரூபத்தை விட மிகவும் சிறந்ததாகிறது. பரமாத்ம ஸ்வரூபம் பக்தி பூர்த்தி பெற்றவர் களால் தான் அறியத்தக்கது. நம் போன்ற பாமரர்களால் அடி யோடு அறியப்படாததாகும். பக்தி பிறந்த பிறகே - தத்த்வ ஜ்ஞாநம் பிறந்த பிறகே அறியத் தக்கது அந்த ஆத்ம ஸ்வரூபம் என்று இந்த இரண்டுக்கும் உள்ள மிகுந்த வேறுபாட்டை நன்கு விளக்குகிறது இந்த ஶ்லோகம்.

விபவாவதாரத்திலும், அர்ச்சாவதாரத்திலும் எம்பெருமான் கொண்டுள்ள திருமேனியும் அப்ராக்ருதமும் ஶுபாஶ்ரயமும் ஆகும். அதாவது ப்ரக்ருதியினால் உண்டானதன்று. த்யானிப்பவர் களுடைய பாபத்தைப் போக்குவதும், யோகத்தின் ஆரம்ப தசையில் இருப்பவர்களுக்கும் எளிதில் அறியத்தக்கதுமாகும் என்றபடி. இப்படி ஶுபமாயும் ஆஶ்ரயமாயும் இருக்கும் தன்மை - ஏற்றம் பகவானுடைய திவ்யாத்ம ஸ்வரூபத்திற்கு கிடையாது.

ஶுபாஶ்ரயம் என்ற தொடரில் (1) ஶுபம் (2) ஆஶ்ரயம் என்று இரண்டு பதங்கள் அடங்கி உள்ளன. இவ்விரண்டு





பதங்களுக்கும் ஶுபாநாம் ஆஶ்ரய: என்று ஷஷ்டீ தத்புருஷ ஸமாஸம் (ஆறாம் வேற்றுமைத் தொகை) கொள்ளக்கூடாது. ஆனால் **शुभंच असौ आश्रयश्च** *(ஶுபஞ்ச அஸௌ ஆஶ்ரய:ச)* என்ற கர்மதாரய ஸமாஸமே (இரு பெயர் ஒட்டுப் பண்புத் தொகையே) தான் கொள்ள வேண்டும். முந்தைய ஸமாஸத்தில் சுபங்களுக்கு இருப்பிடம் என்ற அர்த்தம் ஏற்படும். இது இங்குப் பொருந்தா தாகையால் அது வேண்டுவதன்று. பிந்தைய ஸமாஸத்தில் ஶுபமாயும், ஆஶ்ரயமாயும் இருக்கும் என்ற அர்த்தம் கிடைக்கும். இதுவேதான் இங்குக் கொள்ளப்படவேண்டிய தாகும். இது பகவானுடைய திருமேனிக்கு விஶேஷணம். எம்பெருமானுடைய திருமேனி ஶுபமாயும், ஆஶ்ரயமாயும் இருக்கும் என்றபடி. ஆஶ்ரயம் = விஷயம் என்றபடி. ஶுபமா யிருக்கை என்றால் தன்னைத் தியானிப்பவர்களுடைய பாபத்தை - ஸம்ஸார பந்தத்தைப் போக்கவல்லதாயிருக்கை. இது எம்பெருமா னுடைய திருமேனிக்கு உண்டு. ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் பராஶர மஹர்ஷி

**पापं हरति यत् पुंसां स्मृतं सङ्कल्पनामयम् ।**
**तत् पुण्डरीकनयनं विष्णोर्द्रक्ष्याम्यहं मुखम् ॥**

(பாபம் ஹரதி யத் பும்ஸாம் ஸ்ம்ருதம் ஸங்கல்பநாமயம் ।
தத் புண்டரீகநயநம் விஷ்ணோர் த்ரக்ஷ்யாம்யஹம் முகம் ॥)

***-விஷ்ணு புராணம் (அம்ஶம் 5-அத்யாயம் 17-ஶ்லாகம் 4)***

- எம்பெருமான் தன் ஸங்கல்பப்படிக் கொள்வதும், தாமரைக் கண்களையுடையதும் த்யானிப்பவர்களுடைய பாபத்தைப் போக்குவதுமான விஷ்ணுவினுடைய திருமுகத்தைப் பார்க்கப் போகிறேன் என்று மதுரையிலிருந்து கண்ணனை அழைத்து வரச்செல்லும் அக்ரூரர் மனோரதிக்கிறார் (விரும்புகிறார்) என்று கூறுகிறார். **स्मृतं पापं हरति** (ஸ்ம்ருதம்-பாபம்-ஹரதி) தியானிக்கப்

பட்டு பாபத்தைப் போக்குவதான பலனைத் தருவது எம்பெருமான் திருமுகம் என்பதால் இப்படிப்பட்ட திருமுகம் கொண்ட திருமேனிக்கு ஶுபத்வம்- த்யானிப்பவர்களுடைய பாபத்தைப் போக்கும் தன்மை இருப்பதாகத் தெரிகிறதன்றோ! இந்தத் தன்மை தான் ஶுபத்வம் எனப்படுகிறது.

மற்றும் ஶாண்டில்ய ஸ்ம்ருதியில் உள்ள, -

**आपीठान्मौलिपर्यन्तं पश्यतः पुरुषोत्तमम् ।**
**पातकान्याशु नश्यन्ति किं पुनस्तूपपातकम् ॥**

ஆபீடாந்மௌலி பர்யந்தம் பஶ்யத: புருஷோத்தமம் ।
பாதகாந்யாஶு நஶ்யந்தி கிம் புநஸ்து உபபாதகம் ॥

என்ற வசனம் அர்ச்சாரூபம் கொண்ட புருஷோத்தமனை திருவடிப் பீடம் முதல் திருமுடி வரை ஸேவிப்பவனுக்கு பஞ்ச மஹா பாதகங்களும் உடனே அழிந்துபோம். இவற்றைக் காட்டிலும் துர்பலங்களான உபபாதகங்கள் தொலைந்து விடும் என்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமா? ஆக எல்லாப் பாபங்களையும் போக்க வல்லது எம்பெருமானுடைய திருமேனி ஸேவை என்று திருமேனிக்கு உள்ள ஶுபத்வத்தை ஸ்பஷ்டமாக விளக்குகின்றது. உபபாதகம்: பஞ்ச மஹாபாதகங்களைச் சார்ந்து வரும் பாபங்கள் உபபாதகம் என்னப்படும்.

இனி ஆஶ்ரயத்வத்தை - எளிதில் மனம் கண் இவற்றுக்கு விஷயமாய் இருக்கும் தன்மையைக் காட்டும் ப்ரமாணங்களைக் காண்போம்.

ஸ்ரீ ராமாயணத்தில் ஸ்ரீராமனுடைய திருமேனி எளிதில் யாவருடைய மனதிற்கும் கண்ணுக்கும் விஷயமாவது பற்றி வால்மீகி பகவான் சக்ரவர்த்தி தசரதன் நிலைமையைக் கூறும் வகையில் விளக்குகிறார்.





**रूपौदार्यगुणैः पुंसां दृष्टिचित्तापहारिणम् ।**
**न ततर्प समायान्तं पश्यमानो नराधिपः ॥**

ரூபௌதார்ய குணை: பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம் ।
ந ததர்ப்ப ஸமாயாந்தம் பஶ்யமாநோ நராதிப: ॥

ஸ்ரீராமன் தன்னுடைய அழகு, கம்பீரத் தன்மை, கொடை மற்றும் பல குணங்களாலும் ஆண்களுடைய கண்களையும் மனத்தையும் கூட கவருகின்றவனாய் இருக்கிறான். இப்படி வருகின்ற ஸ்ரீராமனை எவ்வளவு நேரம் பார்த்தாலும் த்ருப்தி பெறாத தசரத சக்ரவர்த்தி வைத்த கண்ணை வாங்காமல் அவனை மீண்டும் மீண்டும் பார்த்த வண்ணமே இருந்தான்.

இங்கே சக்ரவர்த்தியின் கண்ணுக்கும் கருத்துக்கும் புலனாவது ராமனாக அவதரித்த எம்பெருமானுடைய திவ்ய திருமேனியே யாகும். ஆத்ம ஸ்வரூபம் அன்று. ஆக எளிதில் கண்ணுக்கும் கருத்துக்கும் விஷயமாவது (இலக்காவது) எம்பெருமானுடைய திவ்ய திருமேனியேயாகும்.

ஸ்ரீ வைகுண்டத்தில் ஆதிஶேஷஶயநத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானுடைய திருமேனியே தான் ராம க்ருஷ்ணாதிகளுடைய திருமேனியாக உருமாறுவதால் இவையிரண்டும் ஒன்றே தான்.

அர்ச்சாவதாரத்தில் எம்பெருமான் திவ்யாத்ம ஸ்வரூபத்தை விட பக்தர்கள் மிக மிக விரும்ப வேண்டியது எம்பெருமானுடைய திவ்ய திருமேனியேயாகும்.

ஸ்ரீ ஆளவந்தார் தாம் அருளிய சது:ஶ்லோகியில் எம்பெருமானும் விரும்புவது தம் திருமேனியையே என்பதை

**मूर्तं ब्रह्म ततोऽपि तत्प्रियतरं रूपं यदत्यद्भुतम्**

(மூர்த்தம் ப்ரஹ்ம ததோऽபி தத் ப்ரியதரம் ரூபம் யத் அத்யத்புதம்) என்று அருளியுள்ளார். அதாவது உருவம் கொண்ட

ப்ரஹ்மம்; உருவமில்லாதது பரமாத்ம ஸ்வரூபம்; திருமேனி உருவம் கொண்ட, ப்ரஹ்மம் மிகப்பெரியது. தன்னை த்யானிப் பவர்களுக்கும் ஜ்ஞான மலர்ச்சியைக் கொடுத்து அவர்களை மேன்மையாளராக்க வல்லது. அத்புதமானது. எம்பெருமானுக்கு அவனது ஆத்ம ஸ்வரூபத்தை விட மிகவும் விரும்பத்தக்கது, ப்ரியதரமானது என்றெல்லாம் விவரித்துள்ளார்.

ஆக இவ்வளவால் எம்பெருமானுக்கு திவ்ய சரீரம் உண்டு. அது அத்யத்புதமானது. அது தன்னை த்யானிப்பவர்களுடைய பாபங்களைப் போக்க வல்லது; தர்சிப்பவர்க்கு தத்த்வ ஜ்ஞாநத்தைத் தரவல்லது. யாவராலும் எளிதில் அறியத்தக்கது. இத்யாதிகாரணங்களால் நமக்கு மிகவும் வேண்டியதாகும் இந்தத் திருமேனி என்று கூறப்பட்டதாகிறது.

இனி இதன் பெருமையை நம் பூர்வர்கள் காட்டியுள்ள வழியிலே அனுபவிப்போம்.

---



## 2. ஸ்வரூபத்தைக் காட்டில் திருமேனியின் ஏற்றம்

**हरेःस्वरूपाद्वर्ष्मैव प्रधानं सर्वदेहिनाम् ।**
**परकालादिसूरीणां सूक्तिभिश्चेति निश्चितम् ॥**

ஹரே: ஸ்வரூபாத் வர்ஷ்மைவ ப்ரதாநம் ஸர்வதேஹிநாம் ।
பரகாலாதி ஸூரீணும் ஸூக்திபி: சேதி நிஸ்சிதம் ॥

சென்ற பகுதியில் எம்பெருமான் திருமேனியின் சிறப்பு பற்றி ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் அருளிய ஸ்லோகம் கொண்டு முகவுரை யாகச் சில எழுதியிருந்தோம்.

அந்த விஷயத்தையே அதாவது திருமேனி முக்யத்வம் பற்றியே திருமங்கையாழ்வார் முதலான மஹான்களுடைய ஸ்ரீ ஸூக்திகளைக் கொண்டும், பல விஷயங்களுடன் இப் பகுதியில் விளக்க விரும்புகிறோம்.

ஸ்வாமி தேசிகன் ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தில் த்வயாதி காரத்தில் திருமங்கை ஆழ்வாருக்கு எம்பெருமானுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தில் உள்ள ஈடுபாட்டை

'திவ்யாத்ம ஸ்வரூபத்தில் தெளிவுடையராய் இருக்கச் செய்தேயும் **'मूर्तं ब्रह्म ततोऽपि तत्प्रियतरं रूपं यदत्यद्भुतम्'** (மூர்த்தம் ப்ரஹ்ம ததோऽபி தத்ப்ரியதரம் ரூபம் யதத்யத்புதம்) என்னும்படி ஈஸ்வரன் தனக்கும் போக்யதமமான நித்ய விக்ரஹாநுபவத்தில் ஊற்றத்தாலே திருமங்கையாழ்வார் தம்மை ஈஸ்வர விஷயத்தில் தேஹாத்மவாதியாக அருளிச் செய்வர்.'

என்ற ஸ்ரீ ஸூக்தியினால் (வாக்யத்தினால்) விளக்கியருளி யுள்ளார்.

தேஹாத்மவாதிகள் என்று சிலர் உண்டு. அவர்கள் சார்வாக மதத்தினர் ஆவர். அவர்கள் மதத்தில் கண்ணுக்குப் புலப்படும் தேஹத்தை விட வேறாக ஆத்மா என்பது ஒன்று கிடையாது. இந்த தேஹமே -சரீரமே தான் ஆத்மா என்பதே தத்த்வம். மற்றைய சாஸ்த்ரகாரர்கள் எவரும் இந்தக் கொள்கையை ஏற்கவில்லை; கண்டித்தும் உள்ளனர்.

பகவத் விஷயத்தில் ஈடுபடும் போது கண்ணுக்குப் புலனாகாத பகவத் ஸ்வரூபத்தை விடக் கண்ணுக்குப் புலனாகிற பரமானந்தத்தைத் தரும் திருமேனியே தான் ப்ரதானம். இதுவேதான் பரமாத்ம ஸ்வரூபம், இதை விடப் பரமாத்ம ஸ்வரூபம் என்று வேறான ஒன்று கிடையாது என்ற கொள்கையை அதாவது சார்வாக மதக் கொள்கையைத் தான் திருமங்கை யாழ்வார் மேற்கொள்வாராம்.

இங்கொரு கேள்வி.

உலகில் சரீரத்தையே ஆத்மா என்று கூறுபவர் பலர் உளர். அவர்கள் அனைவரும் ஆத்ம ஸ்வரூபத்தைப் பற்றி ஒன்றும் அறியாதவர்களேயாவர். ஆனால் திருமங்கையாழ்வார் அப்படிப் பட்டவர் அல்லர். அதாவது பரமாத்ம ஸ்வரூபத்தை பற்றி ஒன்றும் அறியாமல் திருமேனியையே பரமாத்ம ஸ்வரூபமாக ப்ரமித்துக் கூறுகிறார் என்று நினைக்கவேண்டாம். இவர் 'ஸர்வஜ்ஞனான எம்பெருமானிடமிருந்தே, திருமந்த்ரார்த்தங் கள் அனைத்தையும் கற்றவர்'. திருவஷ்டாக்ஷரத்தின் பொருளை நன்கு அறிந்தவர். இவ்விஷயத்தை ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் அருளிய ஸ்ரீ ஸூக்தியில் 'திவ்யாத்ம ஸ்வரூபத்தில் தெளிவுடையராய் இருக்கச் செய்தேயும்' என்று திருமங்கையாழ்வாருடைய மேன் மையை அதாவது பரமாத்ம ஸ்வரூபத்தைப் பற்றிய தெளிந்த ஜ்ஞாநத்தைப் பாராட்டியுள்ளார்.

இப்படிப்பட்டவர் திவ்யாத்ம ஸ்வரூபத்தைக் காட்டிலும்





பல வகைகளாலும் வேறுபட்டிருக்கிற இந்தத் திருமேனியை - திவ்யமங்கள விக்ரஹத்தையே-பரமாத்ம ஸ்வரூபம் என்று நினைப்பது எப்படிப் பொருந்தும்? பரமாத்மஸ்வரூபம் சேதனம் அதாவது அறிவுடையது; திவ்ய மங்கள விக்ரஹம் அசேதனம் அதாவது அறிவில்லாதது. பரமாத்ம ஸ்வரூபம் நிரவயவம் - அதாவது கைகால்கள் முதலிய அவயவங்கள் இல்லாதது. இது கை கால்கள் முதலிய அவயவங்களை உடையது. இப்படி ஸ்பஷ்டமான வகைகளாலே பரமாத்ம ஸ்வரூபத்தைக் காட்டி லும் வேறுபட்டிருக்கும் திவ்யமங்கள விக்ரஹத்தைப் பரமாத்மா தான் என்று எவ்வாறு நினைக்கக்கூடும்?

உலகில் தேஹத்தையே ஆத்மா என்று நினைப்பவர் சிறிதும் ஆத்ம தத்த்வ ஜ்ஞாநம் இல்லாதவர்களாகத்தானே காணப்படு கிறார்கள். இப்படி இருக்க உலக இயல்புக்கு மாறாகப் பரமாத்ம ஸ்வரூபத்தை நன்கு தெளிவாக அறிந்திருக்கும் திருமங்கையாழ் வார் இந்த திவ்யமங்கள விக்ரஹத்தையே பரமாத்மா என்று நினைப்பதும்; ஈஸ்வர விஷயத்தில் தம்மை தேஹாத்மாவாதி யாகக் கூறிக்கொள்வதும் எப்படி பொருந்தும்?

இதற்குரிய பதில்:-உலகத்தவர்கள் போல் அறியாமையால் உண்டான கொள்கையன்று திருமங்கையாழ்வாருடைய கொள்கை.

திவ்யாத்ம ஸ்வரூபம் மிக்க ஆனந்த ஸ்வரூபமானது என்பது இவருக்கு நன்கு தெரியும். விபவாவதாரம், அர்ச்சாவதாரம் இவற்றில் ஈடுபடும்போது அவனுடைய திருமேனியே பரமாத்ம ஸ்வரூபத்தை விடச் சிறந்த ஆனந்த ஸ்வரூபமாக இருப்பதால் இது பரமாத்ம ஸ்வரூபமே தான் என்ற எண்ணம் ஆழ்வாருக்கு மட்டுமன்றி இவ்வாறான அநுபவம் உள்ள அனைவருக்குமே கூட உண்டாகும். ஆக இரண்டுக்கும் வேற்றுமைகள் பல இருந்தும் ஆனந்த ஸ்வரூபமாயிருக்கிறது என்ற ஒரு ஒற்றுமை

யைக் கொண்டு திவ்யமங்கள விக்ரஹம் பரமாத்ம ஸ்வரூபமே தான் என்ற எண்ணம் உண்டாகிறது.

மேலும் இந்தத் திருமேனி பண்ணுகிற உபகாரம் ஆத்ம ஸ்வரூபத்தினால் கிடைப்பதில்லை. த்யானத்தின் ஆரம்ப தசையில் இந்த ஆத்ம ஸ்வரூபம் தன்னை நமக்குக் காட்டுவதில்லை. இந்தத் திருமேனியோ தன்னையும் நமக்குக் காட்டித் தந்து உள்ளிருக்கும் திவ்யாத்ம ஸ்வரூபத்தையும் காட்டித் தருகிறது.

மாணிக்கத்தினால் செய்த குப்பி தன்னுள் இருக்கும் பொருளைத் தெளிவாகக் காட்டுவது போல் பரமாத்மாவின் திருமேனி தன்னுள் இருக்கும் பரமாத்ம ஸ்வரூபத்தைத் தெளிவாகக் காட்டுகிறது.

ப்ராக்ருதமான நம்முடைய சரீரம் தன்னுள் இருக்கும் நம் ஆத்ம ஸ்வரூபத்தை மறைக்கிறது. ஆனால் பகவானுடைய திவ்ய மங்கள விக்ரஹம் திவ்யாத்ம ஸ்வரூபத்தை மறைக்காமல் தெளிவாகக் காட்டுகிறது.

திருமேனியைக் கண்களால் கண்டும், கைகளால் ஆரத் தழுவியும் நாம் பரமானந்தத்தைப் பெறுகிறோம். இவ்வாறு பரமாத்ம ஸ்வரூபத்தினால் பயன் பெறமுடியாது.

ஆகவே தான் இது பரமாத்ம ஸ்வரூபமே என்று கொள்கிறார்கள் ஆழ்வாரும் மற்றையோரும்.

ஆகப் பரமாத்ம ஸ்வரூபத்தைப் பற்றி நன்கு அறிந்தால் தான் இவ்வாறான தேஹாத்ம வாதம் உண்டாகும்.

தேஹமே (சரீரம்) ஆத்மா என்பது சார்வாகர் (நாஸ்திகர்)களின் மதம். தேஹமே தான் ஆத்மா என்பதால் தேஹத்தைக் காட்டிலும் வேறான ஆத்மா என்று ஒன்று கிடையாது என்பது இந்த மதத்தில் கிடைக்கும் தத்த்வம்.





தேஹம் - ஆத்மாவே தான் என்பது திருமங்கையாழ்வாருடைய மதம், நம்முடைய தேஹம் ஜடமாய் தானே தன்னைக் காட்டாததாய் இருப்பது போல் பரமாத்மாவின் தேஹம் (திவ்ய மங்கள விக்ரஹம்) ஜடமாய் இல்லாமல் ஸ்வயம் ப்ரகாசமாய் - பரமாத்ம ஸ்வரூபம் போல் ஏன் அதை விடவும் சிறந்த ஆனந்த ஸ்வரூபமாய்- பரமானந்தத்தைத் தருவதால் இது (திருமேனி) ஆத்மா தான் என்ற தேஹாத்ம வாதம் திருமங்கையாழ்வாருடையது.

தேஹமே ஆத்மா என்பது சார்வாகர்களின் மதக் கொள்கையாகும்.

எம்பெருமானின் தேஹம் ஆத்மாவேதான் என்பது ஆஸ்திகாக்ரேஸரரான திருமங்கையாழ்வார் கொள்கை. இவ்விரண்டிற்கும் உள்ள பேதத்தை நன்கு எடுத்துக் காட்டியுள்ளோம். யாவருக்கும் இது எளிதில் புரியும் என்றே நினைக்கிறோம்.

ஏகாயநசாகை என்கிற உபநிஷத்திலும், எம்பெருமான் திருமேனி எத்தகையது என்று கேட்டுக் கொண்டு எம்பெருமானுடைய ஆத்ம ஸ்வரூபம் எப்படிப்பட்டதோ அப்படிப்பட்டதே அவனுடைய திருமேனியும் (கிமாத்மிகா பகவதோ வ்யக்தி:? யதாத்மகோ பகவாந்-ததாத்மிகா பகவதோ வ்யக்தி:) என்று பதில் சொல்லியுள்ளது. அதாவது பகவான் எப்படிப்பட்டவனோ அப்படிப்பட்டதே அவனுடைய திருமேனி என்றபடி.

ஜ்ஞாநிகளுக்கே வரும் ஸந்தேஹம் இது.

உலகில் ஸந்தேஹம் என்பது தத்த்வம் (உண்மை) புரியாதவர்களுக்குத் தான் வரும். இது கண்கூடு.

ஆனால் உண்மையை நன்கு உணர்ந்தவர்களுக்கே வரும் ஸந்தேஹமும் உண்டு. அது 'பகவானுடைய திருமேனி பகவத் ஸ்வரூபமேதானா? அல்லது பகவத் ஸ்வரூபத்தினுடையதா? என்ற ஸந்தேஹமேயாகும்.

'பகவானுடைய திருமேனி பகவானே அதாவது பகவத் ஸ்வரூபமே தான்; வேறானது அன்று' என்று கொண்டால் பகவானுடைய திருமேனி பகவானுடைய ஆத்ம ஸ்வரூபத்தைவிட வேறானது அன்று என்ற பொருள் கிடைக்கும். இதுதான் ஆஸ்திகர்கள் கொண்டுள்ள தேஹாத்மவாதம்: தேஹம் ஆத்மாவேதான் என்ற வாதம். இது ஸந்தேஹத்தின் ஒரு புறம் - ஒரு அம்சம், ஒரு கோடி.

ஸந்தேஹத்தின் மற்றொரு புறம்-மற்றொரு அம்சம், மற்றொரு கோடி வருமாறு:

'பகவானுடைய திருமேனி பகவான் அன்று அதாவது பகவத் ஸ்வரூபம் அன்று. ஆனால் பகவானுடையது. அதாவது பகவத் ஸ்வரூபத்தினுடையது என்பதாகும். இதில் பகவானுடைய திருமேனி வேறு அதை உடைய பகவான் அதாவது பகவத் ஸ்வரூபம் வேறு என்பது கிடைக்கும்.

இந்த ஸந்தேஹம் யாருக்கு வரும்? பரமாத்மதத்த்வத்தை உள்ளபடி அறிந்து அதை உபாஸிப்பவர்களுக்குத் தான் வரும்.

ஏன்? என்றால் அவர்கள் உண்மையை உணர்ந்தவர்களாதலால். என்ன உண்மை? பரமாத்ம ஸ்வரூபமும் ஒப்புயர்வற்ற ஸுகமாயிருக்கும் தன்மை கொண்டது, பரமாத்மாவினுடைய திருமேனியும் ஒப்புயர்வற்ற ஸுகமாயிருக்கும் தன்மை கொண்டது என்ற உண்மை. இவ்வாறேதான் ப்ரமாணங்கள் கூறுகின்றன.

இந்த ஸந்தேஹம் ஒழியவே ஒழியாது. இதை ஒழிக்கவும் வேண்டாம்; வேண்டப்படும் ஸந்தேஹமிது.

இவ்விஷயத்தை வரதராஜ பஞ்சாஶத்தில் ஸ்வாமி ஸ்ரீ தேசிகன்

**'विश्वातिशायिसुखरूप यदात्मकस्त्वं**
**व्यक्तिं करीश! कथयन्ति तदात्मिकां ते ।**





**येनाधिरोहति मतिस्त्वदुपासकानां**
**सा किं त्वमेव, तव वेति वितर्कडोलाम् ।।**

**விஶ்வாதிஶாயிஸுக ரூபயதாத்மகஸ்த்வம்**
**வ்யக்திம் கரீஶ! கதயந்தி ததாத்மிகாம் தே ।**
**யேநாதிரோஹதி மதிஸ்த்வதுபாஸகாநாம்**
**ஸா கிம் த்வமேவ தவ வேதி விதர்க்கடோலாம் ।।**

என்ற ஶ்லோகத்தினால் அருளியுள்ளார்.

ஹே! ஹஸ்திகிரி நாத! நீ ஒப்புயர்வற்ற ஸுக ஸ்வரூபனாய் இருப்பது போல் உன்னுடைய திருமேனியும் அவ்வாறே ஒப்புயர்வற்ற ஸுக ஸ்வரூபமாய் இருக்கிறது என்கின்றன உபநிஷத்துக்கள். இந்த உன் ஸ்வரூபத்திற்கும் உன் திருமேனிக்கும் எவ்வளவோ வேற்றுமைகள் இருந்த போதும் இந்த ஒரு வகையினால் உபாஸகர்களுடைய புத்தி "நீயே திருமேனியா! அல்லது அந்தத் திருமேனி உன்னுடையதா?" என்ற ஸந்தேஹமாகிற ஊஞ்சலில் தடுமாறுகிறது என்பது இதன் பொருள்.

திருமங்கையாழ்வார் சிறிய திருமடல் என்னும் ப்ரபந்தத்தில் எம்பெருமானுடைய திவ்ய திருமேனியின் பெருமையை வெளியிட்டுள்ளார்.

**"....ஆராவமுதம் அங்கெய்தி அதனின்றும்**
**வாராதொழிவதொன்றுண்டே அது நிற்க**
**ஏரார் முயல் விட்டுக் காக்கைப் பின் போவதே?**

என்ற ஸ்ரீஸூக்திகள் அதில் உள்ளன; ஆராத அமுதம்- எவ்வளவு அனுபவித்தாலும் போதும் என்ற த்ருப்தியைத் தராததான அமுதம். அமுதம் போன்ற எம்பெருமான் இங்கே திருநறையூர் (நாச்சியார் கோயில்) என்ற திருத்தலத்திலே (பூலோகத்திலேயே) எழுந்தருளியிருக்க, இத்தை விட்டு ஸ்ரீ

வைகுண்டம் என்றதொரு தேசத்திற்குச் சென்று அங்கு ஆராவமுதத்தை அநுபவித்துக் கொண்டு திரும்பி வருவதில்லை என்பதொரு சாஸ்த்ரார்த்தம் இருக்கட்டும்.

வேட்டையாடுபவர்கள் பூமியிலே ஸஞ்சரிக்கும் முயலை விட்டு ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் காக்கையைப் பின் தொடர்ந்து செல்லுவார்களோ! மாம்ஸம் உண்ணுபவர்களுக்கு முயலே சிறந்ததாயிருக்கும். காக்கை கிடைக்காது. கிடைத்தாலும் உபயோகப்படாது. இது உதாஹரணம் தான். இவ்வாறே இந்த நில உலகிலேயே அத்யத்புத திருமேனியோடு கூடிய அர்ச்சாவ தாரத்தில் எம்பெருமான் அநுபவம் கிடைக்கும் போது இதைப் புறக்கணித்து விட்டுப் பரமபதம் சென்று பரரூபத்துடன் இருக் கும் பரமபதநாதனை ஸேவிப்பதில் என்ன சுவை உண்டு என்று அர்ச்சாவதாரத்தின் பெருமையை-சுவையை முன் கூறிய ஸ்ரீ ஸூக்திகளால் விவரித்துள்ளார் திருமங்கை மன்னன்.

அர்ச்சாவதாரத்தில் நாம் இங்கு அநுபவிப்பது எதை? எம்பெருமானுடைய திவ்ய திருமேனியைத்தானே. அதுதானே இங்கு நமக்குப் பரமபோக்யமாகக் கிடைக்கிறது. இவ்வளவு சுவை திவ்யாத்ம ஸ்வரூபத்தின் அநுபவத்திலும் உண்டாகாது. ஆகத் திருமங்கையாழ்வார் பரமபதநாதனுயை அநுபவத்தையும் தாழ்த்திப் பேசுவது இந்த அர்ச்சாவதாரத் திருமேனியின் அநுபவத்தில் உள்ள ஊற்றத்தினால் தான் என்று நன்கு புலனாகிறது.

ஸ்ரீ கீதையில் ஸ்ரீ பார்த்தஸாரதியினுடைய திருவாக்கினாலும் எம்பெருமானுடைய திருமேனிக்கு உள்ள முக்யத்வம், பாவ நத்வம் நன்கு புலனாகிறது.

ஸ்ரீ பகவத்கீதையில் 2-வது அத்யாயத்தில் கடைசியில் ஜ்ஞாந யோகம் மிகச் சிறந்தது. அதில் நிஷ்டை-நிலை - வேண்டும். இதற்காக முதலில் இந்த்ரியங்களை ஜயிக்க வேண்டும். அதாவது





இந்திரியங்களை ஶப்தம், ஸ்பர்சம், ரூபம் முதலான விஷயங்களில் போக ஒட்டாமல் தடுக்க வேண்டும். அப்பொழுது விஷயங்கள் இவனை விட்டு விலகும். விஷயங்கள் விலகினா லும் விஷயங்களில் உள்ள பற்று-ராகம் - மட்டும் போகாது. அது இருக்கத்தானிருக்கும். மிகுந்த ஸுக ஸ்வரூபமாயிருக்கும் ஆத்ம ஸ்வரூபத்தைக் காணும் அளவும் இந்த விஷயப்பற்று இருக்கும். ஆத்ம ஸ்வரூபம் இந்த விஷயங்களை விட மிக இனிது. அதைக் கண்டதும் இந்த விஷயப்பற்று (விஷயராகம்) ஒழியும்.

விஷயங்களில் உள்ள பற்றை நீக்காமல் இந்த்ரியங்களை மட்டும் அடக்கினால் அந்தப் பற்று நன்கு ஆத்ம தத்த்வத்தை அறிந்த வனுடைய இந்த்ரியங்களைத் தூண்டி விட்டு அவனுடைய மனத்தையும் தன் விஷயங்களில் இழுத்துச் சென்றுவிடும். அப்பொழுது ஜ்ஞாந நிஷ்டை-ஆத்மதத்த்வ ஜ்ஞாநத்தில் நிஷ்டை (நிலை பெறும் தன்மை) கிடைக்காது. இங்கெல்லாம் ஆத்மா என்பது ஜீவாத்மாவைக் குறிக்கின்றது.

இவ்வளவால் ஆத்ம தர்ஶநம்-ஸாக்ஷாத்காரம் வந்தால் தான் இந்த்ரிய ஜயம் உண்டாகும். இந்த்ரிய ஜயம் உண்டானால்தான் ஆத்ம தர்ஶநம் உண்டாகும் என்றதாயிற்று. இந்த நிலைக்கு அந்யோந்யாஶ்ரயதோஷம் என்று பெயர். ஒன்றையொன்று அண்டியிருக்கும் நிலை. இது உதாஹரணம். கல்யாணம் ஆனால் தான் பித்தம் போகும். பித்தம் போனால் தான் கல்யாணம் ஆகும் என்பதேயாகும். கல்யாணம் ஆவதற்கு பித்தம் போவது அவஶ்யமாகும். அதாவது கல்யாணம் ஆவதற்குப் பித்தம் போவது காரணம் ஆகிறது. பித்தம் தெளிவதற்கோ கல்யாணம் ஆவஶ்யகமாகிறது. அதாவது பித்தம் போவதற்குக் கல்யாணம் ஆவது காரணம் ஆகிறது என்றபடி. இந்த நிலையில் கல்யாண மும் ஆகப்போவதில்லை. பித்தமும் போகப் போகிறதில்லை.

இவ்வாறுதான் இங்கு ஆத்ம தர்ஶனம் வருவதற்கு இந்த்ரியஜயம் ஆவஶ்யகமாகிறது. ஆத்மதர்ஶனம் இந்த்ரிய ஜயத்துக்குக் காரணம் ஆகிறது. அதாவது ஆத்மதர்ஶனம் வந்தால் தான் இந்த்ரியஜயம் உண்டாகும் என்றபடி. இந்த நிலையில் இந்த்ரிய ஜயமும் வரப்போவதில்லை; ஆத்ம தர்ஶனமும் வரப் போவதில்லை. என்ன செய்வதென்று குழப்பத்தை உண்டு பண்ணின ஸ்ரீ பார்த்தஸாரதியே இதற்குப் பரிஹாரமும் காட்டு கிறார். இதில் தான் எம்பெருமானுடைய திருமேனி மஹிமை தெளிவாகிறது. அதற்காகத் தான் இவ்வளவு விரிவு,

கண்ணன் கூறுகிறான் ''அர்ஜுன! இப்படி ஒரு சிக்கலை நான் உண்டு பண்ணிவிட்டேனே என்று நீ மதி மயங்க வேண்டாம். நான் கூறுவதைக் கேள்.

இந்த்ரிய ஜயம் வந்தால் தான் ஆத்மதர்ஶனம் வரும் என்பதில் ஸந்தேஹமே இல்ல. ஆனால் ஆத்ம தர்ஶனத்தினால் தான் இந்த்ரிய ஜயம் வரும் என்பதில்லை. வேறு ஒரு வழியாலும் இந்த்ரிய ஜயம் வந்து விடும். அப்பொழுது ஆத்ம தர்ஶனத்தைப் பெறலாம்.

இந்த்ரிய ஜயம் தரக்கூடிய அந்த வேறு வழி என்ன என்றால், இந்த்ரியங்களை அவ்வவற்றின் விஷயங்களில் போக ஒட்டாமல் தடுத்து அவையனைத்தையும் உன் மனத்திற்கு எட்டக்கூடிய விஷயமாகிற என்னுடைய திருமேனியிலேயே ஈடுபடச் செய். **'तानि सर्वाणि संयम्य युक्त आसीत मत्परः'** (கீதை 2 அத் 61 வது ஶ்லோகம்) அர்ஜுன! இந்த்ரியங்களை ஜயிப்பது எப்படி என்று கலங்க வேண்டாம். முதலில் நீ உன் இந்த்ரியங்களை அதனதன் விஷயங்களில் போக ஒட்டாமல் தடுத்து த்யானிப்பதற்கு எளிதான ஶுபாஶ்ரயம் எனப்படும் என்னுடைய திருமேனியிலே மனஸ்ஸை ஈடுபடுமாறு செய். என் திருமேனி உன்னுடைய இந்த்ரியங்கள் அனைத்துக்கும் ஆனந்தம் அளிப்பதா கும்.





அழகினால் உன் கண்ணுக்கும் அழகிய நறுமணத்தினால் உன் மூக்குக்கும் ம்ருதுவான ஸ்பர்சத்தினால் உன்னுடைய ஸ்பர்ஶ நேந்த்ரியத்துக்கும் அதாவது 'த்வக்' எனப்படும் இந்த்ரியத்துக்கும் திருமேனி அம்ருதமயமாய் சுவையுடையதாயிருப்பதால் ஜிஹ்வா என்கிற நாவுக்கும் அழகிய கண்டத்வனியினால் உன் காதுகளுக்கும் ஆனந்தத்தைத் தரவல்லது என்னுடைய இந்தத் திரு மேனி. இப்படியே மற்றும் உள்ள இந்த்ரியங்களுக்கும் ஆனந்தத் தைத் தரவல்லது என்னுடைய திருமேனி. இவ்வாறே மனஸ் என்ற இந்த்ரியத்தையும் என்னுடைய திருமேனியை த்யானிப்ப தில் ஈடுபடச்செய். மனஸ் இந்தத் திருமேனியில் ஈடுபட்டால் அதில் உள்ள பாபங்கள் யாவும் தொலைந்து விடும். அப்பொழுது நிர்மலமான அந்த மனஸ் மற்றைய் இந்த்ரியங்களை தனக்கு அதீனமாக்கிக் கட்டுப்படுத்திவிடும். இந்த்ரியங்கள் மநஸ்ஸுக்கு வசங்களான உடன் வேறு விஷயங்களில் மனஸ்ஸை இழுக்கா. இந்த நிலையில் மனஸ்ஸானது ஆத்மதர்ஶனத்திற்குத் தகுதி வாய்ந்ததாகிவிடும்'' என்கிறான் பார்த்தஸாரதி. முன்பு கூறிய அந்யோந்யாஶ்ரய தோஷமும் இப்பொழுது வராது. ஆத்ம தர்ஶநத்தினால் இந்த்ரியஜயம், இந்த்ரிய ஜயத்தினால் ஆத்ம தர்ஶனம் என்றதால் தானே முன் கூறிய தோஷத்திற்கு இடம் ஏற்படுகிறது.

இப்பொழுது பாருங்கள்; எம்பெருமானுடைய திருமேனி த்யானத்தினால் இந்த்ரியஜயம், இந்த்ரிய ஜயத்தினால் ஆத்ம தர்ஶனம் என்றால் எந்த தோஷமும் இல்லையன்றோ. முதலில் இந்த்ரியங்களை அததன் விஷயங்களுக்குப் போக ஒட்டாமல் தடுக்க வேண்டும். பிறகு மனஸ்ஸை எம்பெருமானுடைய திருமேனியிலே ஈடுபடச் செய்ய வேண்டும், இந்தத் திருமேனி த்யானம் பாபங்களைப் போக்கி மனஸ்ஸைப் பரிசுத்தமாக்கி விடுகிறது. இப்படிப் பரிசுத்தமான மனஸ்ஸுக்கு இந்த்ரியங்கள் அனைத்தும் அதீனங்களாய் அடங்கிவிடும். அதாவது பரிபூரண

மான இந்த்ரிய ஜயம் ஏற்பட்டு விடுகிறது. பிறகு ஆத்மதர்ஶனம். அதாவது ஜீவாத்மதர்ஶனம். பிறகு பகவத்பக்தி. அதன் பிறகு பகவத் ப்ராப்தி என்ற முறை இங்கு அறியத்தக்கது.

ஜீவாத்மதர்ஶனத்திற்குத் தடையான பாபங்களைப் போக்கு கிறது திருமேனித்யானம். ஜீவாத்மதர்ஶனம் பகவத் பக்திக்குக் காரணமாக அமைகிறது. பட்டுத்துணியில் முடித்து வைக்கப் பட்டிருந்த ரத்னம் தொலைந்து விடுகிறது. அதை ஒருவன் தேடு கிறான். அவன் கண்ணில் அந்த ரத்னம் முடித்து வைத்திருந்த பட்டுத் துணிதான் முதலில் தென்படும். அதன்பிறகு அதன் உள்ளிருக்கும் ரத்னம் அவன் கண்ணுக்குப் புலனாகிறது.

அந்த வகையில் பகவான் ரத்னம் மாதிரி இருக்கிறான். அவனுக்குச் சரீரமாய் அமைந்துள்ள ஜீவாத்மா ரத்னம் முடித்து வைத்திருக்கும் பட்டுத்துணிபோல் உள்ளான். முதலில் பட்டுத் துணிமுடிப்பைக் கண்டால், பின்னர் உள்ளிருக்கும் ரத்னத்தைக் காண அதுவே காரணமாக அமைகிறது. அதுபோல் ஜீவாத்ம ஸாக்ஷாத்காரம், பிறகு ஏற்படும் பரமாத்ம ஸாக்ஷாத்காரத்துக்குக் காரணமாகிறது. இந்த ஜீவாத்மஸாக்ஷாத்காரத்துக்கும் காரணமா கிறது எம்பெருமானுடைய திருமேனி த்யாநம்.

இப்பொழுது எம்பெருமானுடைய திருமேனியின் முக்யத்வம் நன்கு விளங்கும் என நினைக்கிறோம்.

இப்படி நமக்கும் எம்பெருமானுக்கும் இடையே பாலமாக இருந்து பயன் தருவது இந்த எம்பெருமானுடைய திவ்ய திருமேனியாகும்.

மற்றைய சாஸ்த்ரகாரர்களில் சிலர் எம்பெருமானுக்குச் சரீரமே கிடையாது என்று கூறியுள்ளனர். அத்வைத ஸித்தாந்தத் தில் பகவானுடைய அத்புதப் பேரழகு வாய்ந்த இந்தத் திருமேனி பாரமார்த்திகம் (உண்மையானது) அன்று. அவித்யையினால்





கல்பிக்கப்பட்டது. அதனால் மித்யை-பொய்யானது என்கிறார் கள். அப்படிப்பட்டதன்று நம் ஸித்தாந்தம்.

**தொட்டுக்காட்டின திருமேனி**

ஆத்ம தர்ஶனத்திற்குப் பயன்படுவது திருமேனி என்று கண்ணன் கூறியதை இப்போது அநுபவித்தோம்.

அவ்வாறே, ஶரணாகதி செய்யும்படி அர்ஜுனனுக்கு உபதே சிக்கும் போதும் **'மாம் ஏகம் ஶரணம் வ்ரஜ । அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி ॥'** என்று மாம்-அஹம் என்ற இரண்டு சப்தங்களாலும் தன் திருமேனியைத் தொட்டுக் காட்டுகிறான் கண்ணன்.

'மாம்' என்ற சொல்-பரமாத்மஸ்வரூபத்தை மட்டும் குறிப்பதாகக் கொள்ள முடியாது. அதை சுட்டிக் காட்ட முடி யாமையால். வெறும் திருமேனியை மட்டும் சுட்டிக் காட்டுவதாகவும் கொள்ளக்கூடாது. ஆகையால் 'மாம்' என்ற சொல் பரமாத்மஸ்வரூபத்தோடு கூடியிருக்கும் திருமேனியைச் சுட்டிக் காட்டுவதாகவே கொள்ள வேண்டும். ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் த்வயாதிகாரத்தில் ஶரணாகதிவிதாயக அதாவது ஶரணா கதியைச் செய்யுமாறு விதிக்கிற வாக்யத்திலும் மாம் ஏகம் ஶரணம் வ்ரஜ என்று விக்ரஹத்தோடு கூடியவன் இலக்காய்த் தோற்றினான் என்று அருளிச் செய்கிறார்.

இவ்வாறே சரமஶ்லோகாதிகாரத்தில் 'மாம், அஹம்' என்ற பதங்களுக்கு வ்யாக்யாநம் செய்யும் போது ஸ்வாமி ஸ்ரீ தேசிகன்:

''அஹம் மாம் என்ற பதங்களால்...ஸர்வஜ்ஞத்வ...

வாத்ஸல்யாதி குணங்களும் ஶுபாஶ்ரயமாய் பரத்வ-ஸௌலப்யவ்யஞ்ஜகமான பார்த்தஸாரதியினுடைய திவ்ய மங்கள விக்ரஹ விசேஷமும் காட்டப்படுகின்றன'' என்று அருளி யுள்ளார்.

பார்த்தஸாரதியான கண்ணன் ''மாம் ஶரணம் வ்ரஜ' என்று தன் திருக்கையால் தன்னுடைய திருமேனியைத் தானே சுட்டிக் காட்டுகிறான். 'அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ் யாமி' என்ற இடத்திலும் இப்படித்தான் தன் திருமேனியைத் தொட்டுக் காட்டுகிறான்.

சுமார் 30 வருஷங்களுக்கு முன் திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்த ஸாரதியைத் திருவடி தொழ (ஸேவிக்க) அங்குச் சென்றிருந் தோம். அப்பொழுது ஸ்ரீ பார்த்தஸாரதி திருமஞ்ஜனம் கண் டருளிக் கொண்டிருந்தான். (அதாவது ஸ்ரீ பார்த்த ஸாரதிக்குத் திருமஞ்ஜனம் நடந்து கொண்டிருந்தது). கடைசி வரை இருந்து ஸேவித்தோம்; அப்பொழுது மிக அழகிய முறையில் கட்டியம் சொல்லிக் கொண்டிருந்த ஸ்வாமி நடுவில் 'மாமேகம் ஶரணம் வ்ரஜ. அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி. என்று தொட்டுக் காட்டின திருமேனியும்' என்ற வாக்யத்தை உச்சரித் தார். அப்படியே மதியெல்லாம் உள் கலங்கி நிலைகுலைந்தோம். இதுவரை வேறு எங்கும் கேட்டறியாத வாக்யம் ஸ்ரீ பார்த்த ஸாரதிக்கே ஏற்றதான வாக்யம்-அத்புதம். தன் நிலைக்கு வரக் கொஞ்ச நேரம் ஆயிற்று. அந்த ஆனந்தம் இன்றும் எம்முடைய மனத்தை விட்டு அகலாது. அகற்றவும் முடியாது.

அவன் தன் திருக்கைகளால் ஸ்வரூபத்தைக் காட்டவும் முடியாது. காட்டினாலும் நம்மால் காணமுடியாது. இப்படிக் கண்ணனே ஸ்ரீ பார்த்தஸாரதியே தொட்டுக் காட்டின பெருமை எம்பெருமான் திருமேனிக்குத் தான் உண்டு.

இங்கு முமுக்ஷுப்படி ஸ்ரீ ஸூக்தியையும் ரஸிக்கவேண்டும்.

முமுக்ஷுப்படி த்வயாதிகாரத்தில்:-

*141)* 'இவையெல்லாம் (வாத்ஸல்யம், ஸ்வாமித்வம் முதலான குணங்கள் எல்லாம்) நமக்கு நம்பெருமாள் பக்கலிலே காணலாம்.'





*142)* 'திருக்கையிலே பிடித்த திவ்யாயுதங்களும், வைத்து அஞ்சல் என்ற கையும், கவித்தமுடியும், முகமும், முறுவலும், ஆஸந பத்மத்திலே அழுந்தின திருவடிகளுமாய் நிற்கிற நிலையே நமக்குத் தஞ்சம்' என்று.

இதை விவரிக்க வேண்டாம்; படிக்கும் போதே அர்த்தம் புரியும்.. இந்த ஸூத்ரத்தை அப்படியே நெட்டுருச் செய்து சொல்லி வந்தால் அதுவே பரமபோக்யமாய் இருக்கும்.

நம் பெருமாளாகிய ஸ்ரீ ரங்கநாதனை நாம் ஸேவிக்கும் போது நம் கண்களுக்கு என்ன தெரிகிறது? அவன் தன் திருக்கைகளிலே ஏந்தியிருக்கும் சங்கம், சக்ரம் முதலான திவ்யாயுதங்களும், அபயம் அருளும் திருக்கையும், உலகனைத்துக்கும் ஸ்வாமி இவ னே என்று பறைசாற்றும் நீண்ட கிரீடமும், திருமுகமண்டலமும், அதில் மலர்ந்துள்ள புன்முறுவலும், ஆஸநமாய் இருக்கும் தாமரை மலரில் அழுந்தியிருக்கும் திருவடிகளும் தானே நம் கண்களுக்குத் தெரிகின்றன. வேறு கதியற்று நிற்கும் நமக்கு இந்த நிலை ஒன்றே ரக்ஷகமாகும் என்கிறார் ஸ்ரீ பிள்ளைலோகாசார்யர். பெருமாள் திருமேனியை விடப் பரமபோக்யமாய் இருக்கிறது இந்த ஸ்ரீ ஸூக்தி. இப்படியெல்லாம் பரமாத்ம ஸ்வரூபத்தை வர்ணிக்க முடியுமா நம்மால்? காணத்தான் முடியுமா?

இவரே மேலும் சரமஶ்லோக ப்ரகரணத்தில் 'மாம்' என்ற பதத்திற்கு வ்யாக்யானம் செய்யும் போது,

*218)* "'கையில் உழவு கோலும் பிடித்த சிறுவாய்க் கயிறும் ஸேநாதூளீதூஸரிதமான திருக்குழலும், தேருக்குக் கீழே நாற்றின திருவடிகளுமாய் நிற்கிற ஸாரத்ய வேஷத்தை 'மாம்' என்று காட்டுகிறான்'' என்று அருளியுள்ளார். (உழவுகோல் - குதிரை களைச் செலுத்துவதற்காகக் கொண்ட கோல், சிறுவாய்க் கயிறு - கடிவாளம்) ஒரு கையிலே கோல்; மற்றொரு திருக்கையில் கடிவாளம்; ஸேனைகள் கிளப்பிய புழுதிகள் படிந்த திருக்குழல்

(திருமயிர்க்கற்றை); திருவடிகள் இரண்டையும் தேர்த்தட்டிற்குக் கீழே தொங்கவிட்டுக் கொண்டிருக்கிறான். இதுதான் பார்த்த ஸாரதியின் உருவத்தோற்றம்.

'அஹம், மாம்' என்ற பதங்களினால்...பார்த்தஸாரதியின் திவ்ய மங்கள விக்ரஹம் காட்டப்படுகின்றது- என்று ரத்னச் சுருக்கமாக ஸ்வாமி ஸ்ரீதேசிகன் அருளிச் செய்த ஸ்ரீ ஸூக்திக்கு இவை வ்யாக்யானங்களாக அமைந்துள்ள அழகை ரஸிக்க வேண்டும்.

ஆக எம்பெருமானால் தொட்டுக்காட்டப்பட்ட பெருமை திருமேனிக்கே உண்டு. இதுவே நமக்கு ரக்ஷகம். பூர்வாசார்யர் களின் ஸ்ரீ ஸூக்திகளைக் கொண்டு திருமேனியின் பெருமை மேலும் விவரிக்கப்படும்.

---



## 3. எம்பெருமான் திருமேனி – ப்ரமாணங்கள்

**विष्णोः स्वरूपतो रूपं प्रकृष्टं सूरिसम्मतम् ।**
**तदत्र बहुभिर्मानैः लिख्यते तत्त्वदित्सया ॥**

விஷ்ணோ: ஸ்வரூபதோ ரூபம் ப்ரக்ருஷ்டம் ஸூரிஸம்மதம் ।
ததத்ர பஹுபிர்மாநை: லிக்யதே தத்த்வதித்ஸயா ॥

நம் ஸ்ரீராமாநுஜ ஸித்தாந்தம் முழுவதும் எவ்வித தோஷமும் இல்லாததாகும். இந்த உண்மையை அறியாதார் பலர் ப்ரமாணங் களின் கருத்துக்களை ஸரியாகப் புரிந்து கொள்ளாமல்-புரிந்து கொள்ள முடியாமல்-விபரீதமாகப் புரிந்து கொண்டு தவறான அர்த்தங்களையே தங்கள் ஸித்தாந்தமாகக் கொண்டு பிறர்க்கும் அவற்றையே போதித்து வருகிறார்கள்.

உதாஹரணமாக எம்பெருமான் திருமேனி விஷயத்தையே எடுத்துக் கொள்வோம்.

இவர்கள் எம்பெருமானை ஒப்புக் கொண்டபோதிலும் அவ னுக்கு திவ்ய திருமேனி உண்டு என்பதில் மாறுபடுகிறார்கள். காரணம் எம்பெருமானுக்குத் திருமேனி இல்லை என்று சொல் லும் ப்ரமாணங்களின் கருத்துக்களைச் சரியாகப் புரிந்து கொள்ள வில்லை என்பதேயாம்.

'ந தஸ்ய கார்யம் கரணஞ்ச வித்யதே' எம்பெருமானுக்கு (கார் யம்) சரீரமும் கிடையாது. (கரணம்) இந்த்ரியமும் கிடையாது என்றும், 'அபாணி-பாத:' கை-கால் கிடையாது என்றும் பல ஶ்ருதிகள் கூறியுள்ளன.

இவ்வாறே 'அரூபீ ஹி ஜநார்தந:' ஜநார்தனன் ரூபம்-சரீரம் இல்லாதவன் என்று ஒரு ஸ்ம்ருதியும் (ந தே ரூபம், ந சாகார:

நாயுதாநி)உனக்கு உருவம் கிடையாது. ஆயுதங்களும் கிடையாது என்று ஜிதந்தே ஸ்தோத்ரமும் கூறுகின்றன. இவற்றின் அர்த் தத்தை மேலெழுந்தவாரியாகப் புரிந்து கொண்டு இம்மாதிரி ஆக்ஷேபிக்கிறார்கள்.

இது பற்றி சது: ஶ்லோகீவ்யாக்யாநத்தில் பெரியவாச்சான் பிள்ளை அருளியுள்ளதைக் கவனிக்க வேண்டும், அதாவது-

''அரூபீ ஹி ஜநார்த்தந:'' என்றும் ''ந தே ரூபம், ந சாகார:'' என்றும் இப்படி ஈஶ்வரனுக்கு விக்ரஹம் (சரீரம்) இல்லை என்று கொண்டு ப்ரமாணங்கள் உண்டாயிருக்க திவ்யம் ஸ்வரூபம் என்றும் திவ்யமங்கள விக்ரஹம் என்றும் எங்ஙனே? இப்படிச் சொல்லுவார் வேதாந்த கோஷ்டியில் பஹிஷ்க்ருதரானபேரிறே! ஆவதென்? சோத்யம் பண்ணினால் பரிஹரிக்கும் இத்தனை யொழியப் பரிவாதியா நின்றீர். இப்படி ப்ரமாணம் உண்டோ? என்றால் உண்டு.

சில ஶ்ருதி ஸ்ம்ருதி வாக்யங்களின் அர்த்தங்களைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல் எம்பெருமானுக்கு சரீரம் இல்லை என்று ஆக்ஷேபித்தவர்களைப் பார்த்து இவர்கள் வேதாந்தத்தில் நிஷ்டை உடையவர்களின் கோஷ்டிக்குப் புறம்பானவர்கள் என்று நாம் அவர்களைப் பழித்து நின்றோம்.

உடனே அவர்கள் நம்மைக் கேட்கிறார்கள். நாங்கள் சில கேள்விகள் கேட்டால் அவற்றுக்குப் பதில் சொல்வது தானே முறை. இதை விட்டு நீர் எங்களைப் பழிக்கின்றீரே. இது ந்யாயமா, முறையா? நாங்கள் எம்பெருமானுக்கு சரீரம் இல்லை என்று தானே ப்ரமாணங்கள் கூறுகின்றன என்று கேட்டால் அதற்கு நீங்கள் இவ்விஷயத்தில் ப்ரமாணங்கள் உண்டு என்று தானே காட்ட வேண்டும்? இருந்தால் ப்ரமாணங்களைக் காட்டுங்கள் என்கிறார்கள்.





அதற்கு நம் பூர்வர்கள் பதில் கூறுகிறார்கள்:- நாங்கள் ப்ரமாண பலத்தைக் கொண்டு தான் உங்களைப் பழிக்கிறோம். தூஷணம் மட்டும் செய்யும் அல்பர்கள் அல்லோம் நாம்; ப்ரமா ணங்களின் கருத்துக்களைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல் இப்படிக் கேட்கிறீர்களே என்ற வருத்தத்தினால் தான் இவ்வாறு பழித்தோம்.

இனி எம்பெருமானுக்கு திவ்ய திருமேனி உண்டு என்பதற்கு முக்யமான ப்ரமாணங்கள் பல உள. அவற்றைக் காட்டுகிறோம்.

'ய ஏஷோऽந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருஶ்யதே. ஹிரண்ய ஶ்மஶ்ரு: ஹிரண்ய கேஶ:'' (ஆதித்ய மண்டலத்தில் அழகிய கேசம் மீசை முதலியவற்றை உடைய புருஷன் ஒருவன் உள்ளான்) என்று சாந்தோக்ய உபநிஷத் வாக்யம் ஒன்று எம்பெரு மானுக்கு திவ்ய திருமேனி உண்டு என்பதை ஸ்பஷ்டமாகக் கூறு கிறது. இதில் கூறப்பட்டுள்ள மீசை, கேசம் யாவும் திரு மேனிக்குத் தானே தவிர ஆத்ம ஸ்வரூபத்திற்குக் கிடையாது. மேலும் ''ஆப்ரணகாத் ஸர்வ ஏவ ஸுவர்ண:'' திருவடி நகத்தி லிருந்து முழுவதும் ஸுவர்ணமயமானது திருமேனி என்றும் ஸ்பஷ்டமாகக் கூறப்படுகிறது.

'ஸர்வே நிமேஷா: ஜஜ்ஞிரே வித்யுத: புருஷாததி' நிமிஷம் முதலான சிறிய (கண்ட) காலங்கள் அனைத்தும், மின்னல் போன்ற உருவம் கொண்ட எம்பெருமானிடமிருந்து உண்டா கின்றன' என்றும்,

'ஆதித்ய வர்ணம் தமஸ: பரஸ்தாத்' ஸூர்யன் போல் விளங் கும் திருமேனி கொண்ட எம்பெருமான் ப்ரக்ருதி மண்டலத்திற்கு மேலான ஸ்ரீ வைகுண்டத்தில் எழுந்தருளியிருக்கிறான் என்றும் இம்மாதிரி பல உபநிஷத்வாக்யங்கள் எம்பெருமானுக்குத் திரு மேனி உண்டு என்றும் கூறுகின்றன. மின்னல் போன்ற ரூபம்

ஸூர்யன் போன்ற வர்ணம் இவையெல்லாம் திருமேனிக்குத் தான் உண்டு. திவ்யாத்மஸ்வரூபத்திற்குக் கிடையாது என்பதால் இங்கெல்லாம் திருமேனிதான் குறிக்கப்படுகிறது என்று பூர்வர்கள் உரை செய்துள்ளார்கள்.

ஸ்ம்ருதிகளும் இவ்விஷயத்தில் ஸ்பஷ்டப்ரமாணமாக உள்ளன. அவை.

**த்யேயஸ்ஸதா ஸவித்ருமண்டலமத்யவர்த்தீ**
**நாராயணஸ்ஸரஸிஜாஸந ஸந்நிவிஷ்ட: ।**
**கேயூரவாந் மகரகுண்டலவாந் கிரீடீ**
**ஹாரீ ஹிரண்மயவபு: த்ருதஶங்கசக்ர: ॥**

என்ற ஶ்லோகம் ஸூர்ய மண்டலத்தின் நடுவில் நாராயணன் தாமரைப்பூவை ஆஸநமாகக் கொண்டு கேயூரம் (தோள்வளை) மகர குண்டலம், கிரீடம், ஹாரம் இவற்றை அணிந்தவனாய் ஸ்வர்ணமயமான திருமேனியுடன் ஶங்க-சக்ரங்களைத் தரித்துக் கொண்டு எழுந்தருளியிருக்கிறான். அப்படிப்பட்ட நாராயணன் எப்பொழுதும் த்யானிக்கத்தக்கவன் என்று திருமேனி, திவ்யாபரணம், திவ்யாயுதங்கள் முதலியன எம்பெருமானுக்கு உண்டு என்று ஸ்பஷ்டமாகக் கூறுகின்றன.

எல்லாவற்றுக்கும் மேலாக நம் ஆழ்வார்களுடைய அநுபவமும், அதன் காரணமாகப் பாசுரங்களுமே இவ்விஷயத்தில் சிறந்த ப்ரமாணமாகக் கிடைக்கின்றன.

திருவாய்மொழி எட்டாவது பத்து-எட்டாவது திருவாய்மொழி முதற்பாட்டில் எம்பெருமான் தன்னைத் திருமேனியோடு காட்டிக் கொடுத்து ஆழ்வாருடைய ஸ்வரூபத்தையும் காட்டிக் கொடுக்கிறார். முதலில், பாசுரத்தையும் பிறகு அர்த்தத்தையும் அநுபவிப்போம்.





**கண்கள் சிவந்து பெரியவாய், வாயும் சிவந்து கனிந்து உள்ளே**
**வெண்பல் இலகு சுடரிலகு விலகு மகர குண்டலத்தன்**
**கொண்டல் வண்ணன் சுடர் முடியன் நான்கு தோளன் குனிசார்ங்கன்**
**ஒண் சங்கதைவாள் ஆழியான் ஒருவன் அடியேன் உள்ளானே.** (8-8-1

ஸ்வாமி நம்மாழ்வார் எம்பெருமானுடைய திருமேனி அழகிலேயே ஈடுபட்டுள்ளார் என்பது இந்தப் பாசுரத்திலே தெளிவு.

இந்தப் பாசுரத்தின் அவதாரிகையில் (தோற்றுவாயில்) நம்பிள்ளை நம் ஆழ்வார்களுடைய ஸித்தாந்தத்தை ரத்னச் சுருக்கமாய் அருளிச் செய்கிறார்.

'நம் ஆழ்வார்கள் வடிவழகுக்கு அவ்வருகு ஸ்வரூப, குணங்களில் இழிய மாட்டார்கள்'.

'திவ்ய விக்ரஹத்தை ஶுபாஶ்ரயமாகப் பற்றினபின்னை அவ்வருகு போவான் என்று சாஸ்த்ரங்கள் சொல்லுகிறது-இத்தை விட்டுப் போகச் சொல்லுகிறதல்ல, ஸ்வரூப குணங்களும் உபாஸ்யம் என்கைக்காகச் சொல்லுகிறது.'

'அவன் தன்னோடு பிராட்டிமாரோடு ஶேஷபூதரோடு வாசியில்லை - எல்லோருக்கும் அபிமதமாயிருக்குமாயிற்றுத் திருமேனி' என்பனவே நம்பிள்ளை அருளிச் செய்த ஶ்ரீ ஸூக்திகள் (வாக்யங்கள்). திருமங்கையாழ்வாருடைய ஸித்தாந்தத்தை இதற்கு முன் பகுதியிலேயே விவரித்துள்ளோம்.

இதில் ஸ்வாமி நம்மாழ்வாருடைய அநுபவமும் அப்படியே தான். திருமேனிதான் பரமபோக்யமானது என்றதே. மற்றைய ஆழ்வார்கள் அனைவருடைய ஸித்தாந்தமும் இவ்வாறேதான் என்பதைத்தான் நம்பிள்ளை, நம் ஆழ்வார்கள் 'வடிவழகுக்கு அவ்வருகு (அப்பால் உள்ள) எம்பெருமானுடைய ஸ்வரூபத்திலும், அதில் உள்ள குணங்களிலும் இழிய (இறங்க) மாட்டார்கள்' என்றார்.

இதற்குமேல் ஒரு கேள்வி பிறக்க அதற்கும் அழகாக நம்பிள்ளை பதில் அருளுகிறார்.

கேள்வி: ஸ்ரீ கீதையில் 2-61 வது ஶ்லோகத்தின்படி ஜீவாத்ம ஸாக்ஷாத்காரம் பிறப்பதற்கும் அதன்பிறகு பகவத் ப்ராப்தி ஏற்படு வதற்கும் பகவானுடைய திருமேனி த்யானம் காரணமாய் அமைகிறது. ஆகையால் திருமேனி த்யானம் வேறு பயனுக்குக் காரணம் என்பதால், இதுவே புருஷார்த்தம், இதுவே போதும் இதற்குமேல் செல்ல வேண்டியது ஒன்றுமில்லை என்று கூறுவது எப்படிப் பொருந்தும்? காரணமாய் அமைவது பயனாக இருக்க முடியாதே; காரணத்தினால் பெறக்கூடியது தானே பயன் - புருஷார்த்தம்? இதுதான் கேள்வி.

பதில்: ஸ்ரீகீதையில் கூறியிருப்பதன் கருத்தை அப்படியே கொள்ளக்கூடாது. திவ்ய மங்கள விக்ரஹத்தைப் பற்றித் த்யானம் செய்யச் சொல்லியிருப்பது உண்மை தான். ஆனால் இதை விட்டு விட்டு பகவத் ஸ்வரூபத்திலோ குணத்திலோ ஈடுபடவேண்டும் என்பதற்காக அவ்வாறு சொல்லவில்லை. பின்? பகவானுடைய ஸ்வரூபமும் குணங்களும் கூட உபாஸிக்கத் தக்கவை. திருமேனி மட்டுமே உபாஸிக்கத் தக்கது என்று கொள்ள வேண்டாம். மற்றும் சில அதாவது பகவானுடைய ஸ்வரூபமும், குணங்களும் கூட உபாஸ்யங்கள் என்பதற்காகவே இவ்வாறு ஸ்ரீ கீதையில் கூறப்பட்டுள்ளது என்று அறியவேண்டும்.

ஆக ஆழ்வார்கள் முதல் நிலையான திருமேனியிலேயே ஈடுபட்டு நிற்கிறார்கள். ஆகையால் முரண்பாடு இல்லை என்பது பதில். இந்த அர்த்தத்தைத் தான் நம்பிள்ளை அந்த அவதாரிகை யில்:- 'ஸ்வரூப குணங்களும் உபாஸ்யம் என்கைக்காகச் சொல்லு கிறது' என்று அருளியுள்ளார்.

எம்பெருமானுடைய இந்தத் திருமேனி எம்பெருமானுக்கு ப்ரியமாய் அதாவது அபிமதமாய் இருக்கும்.





பிராட்டிமாருக்கும் இது (திவ்ய திருமேனி) ப்ரியமா யிருக்கும். ஶேஷ பூதரான (அடியவர்களான) ஜீவர்களுக்கும் ப்ரியமாய் - அபிமதமாயிருக்கும்.

இச்சாக்ருஹீத-அபிமத-உருதேஹ:' என்று எம்பெருமா னுடைய திருமேனி அவனுடைய ஸங்கல்பத்தினால் கொள்ளப் பட்டது, அவனுக்கு மிகவும் பிடித்தமானது; அவன் திருமேனி அவனுக்கும் போக்யமானது என்றெல்லாம் சாஸ்த்ரங்கள் கூறு கின்றன. பிராட்டிக்கும் பிடித்தமானது இவனுடைய திருமேனி. அதாவது:-

க்ஷீரஸமுத்ரத்திலிருந்து பிராட்டி- மஹாலக்ஷ்மி - ஆவிர்பவித் தாள். உடனே ஸ்நாநம் செய்து ஸர்வாபரணங்களும் பூண்டு கையில் ஒரு மாலை கொண்டு அங்கு ஸமுத்ரக் கரையில் குழுமியிருந்த ருஷிகள்-ஸித்தர்கள்-தேவர்கள்-தேவதேவனான எம்பெருமான் இவர்களுள் தனக்கு ஏற்ற, குற்றம் ஒன்றுமில்லாத வரனைத் தானே தேடி நாடிச் செல்கிறாள். ஒருவரையும் அவள் விரும்பவில்லை. கடைசியில் எழுந்தருளியிருந்த எம்பெரு மானைக் கண்டதும் இவன் தான் தனக்கு ஏற்றவன் என்று அவன் கழுத்தில் மாலையிட்டு அவன் திருமார்பில் ஏறி அமர்ந்தாள். இவ்விஷயத்தை

**'पश्यतां सर्वदेवानां ययौ वक्षःस्थलं हरेः ।**

**(பஶ்யதாம் ஸர்வதேவாநாம் யயௌ வக்ஷ: ஸ்தலம் ஹரே:)**

என்ற விஷ்ணு புராண ஶ்லோகம் கூறுகிறது.

இவ்வாறு மஹாலக்ஷ்மி எம்பெருமானை விரும்பியதற்குக் காரணம் அவன் கொண்டுள்ள திருமேனி மிகவும் ப்ரியமாக இருந்தமையால் தான்.

இவ்விஷயத்தைத் திருமங்கையாழ்வார் திருவுள்ளூர்

எம்பெருமான் ஸ்ரீ வீரராகவன் விஷயத்தில் அருளிச் செய்த திருமொழியில்

**'பந்திருக்கும் மெல்விரலாள் பாவை பனிமலராள்**
**வந்திருக்கும் மார்வன் நீலமேனி மணி வண்ணன்**
**அந்தரத்தில் வாழும் வானோர் நாயகனாய் அமைந்த**
**இந்திரற்கும் தம் பெருமான் எவ்வுள் கிடந்தானே!**
**-பெரிய திருமொழி (2-2-9)**

**பனிமலராள்-பாவை:** குளிர்ந்த தாமரைமலர் மேலிருக்கும் திருமகள் அதை விட்டு விட்டு தானே வந்து தங்கும்படிக்கு மிக அழகியதான திருமார்வை உடையவன் திருஎவ்வுள் கிடந்த ஸ்ரீவீரராகவனே ஆவான் என்று திருமங்கையாழ்வார் ஸித்தாந்தம் செய்தருளுகிறார்.

'மாலே மணிவண்ணா! என்ற திருப்பாவைப் பாசுரத்தின் திரு ஆறாயிரப்படி வ்யாக்யானத்தில்,

'மணிவண்ணா'-பெண்கள் பிச்சுக்கு நிதாநம் இருக்கிறபடி, பெண்கள் எம்பெருமானை விரும்புவதற்குக் காரணம் கூறுகி றார்கள் மணிவண்ணா என்று. எம்பெருமானுடைய திருமேனி அழகு தான் பெண்கள் அவனை விரும்பக் காரணம் என்றபடி. இடைப்பெண்கள் எம்பெருமானுடைய திவ்யாத்ம ஸ்வரூபத் தையோ அவனுடைய ஆத்ம குணங்களையோ கொண்டு அவ னை விரும்பவில்லை. அவனுடைய திருமேனி அழகை மட்டு மே கண்டு அவனை விரும்புகிறார்கள்.

இந்த இடைப்பெண்கள் மேலும் கூறுவதாக உரையாசிரியர் அருளுகிறார். 'கண்ணா நாங்கள் மட்டும் உன்வடிவழகில் ஈடு படவில்லை; எங்களை விடச் சிறந்த எங்கள் இனத்தைச் சேர்ந்த மஹாலக்ஷ்மியும் கூட உன்னுடைய வடிவழகைக் கண்டு தான் தனக்கு வாஸஸ்தானமான அழகிய குளிர்ந்த தாமரை மலரை விட்டு உன் திருமார்பில் வந்து அமர்ந்தாள்.





பனிமலராள் வந்திருக்கும்மார்வன் நீலமேனி மணிவண் ணன், என்று, ஆம் இவ்வடிவழகு நம் ஸ்ரீ வீரராகவனுக்கே உள்ளது. அன்றுமட்டுமன்று. இன்றும் இந்த உன்னதமான திரு மார்பின் நேர்த்தியும் நீலமேனியும், மணிவண்ணமும் ஸ்ரீ வீர ராகவுன் பக்கலிலே ஸேவிக்கக் கிடைக்கிறது.

எம்பெருமானிடத்தில் வ்யாமோஹம் (ஈடுபாடு) அன்பு கொண்டார்களுக்கு மட்டுந்தான் இந்தத் திருமேனி போக்யமாய் இருக்கும் என்பதில்லை. அவனிடத்தில் பகை கொண்டு அவனை அழித்து விட வேண்டும் என்றிருப்பவர்களுக்கும் அவன் வடிவழகு பரமபோக்யமாய், அழகியதாய் இருக்கும்.

'வ்யாமோஹம் இன்றிக்கே' காதுகன் (**घातुक** ன்) ஆனாலும் விடவொண்ணாத வடிவழகு என்று திருப்பாவை ஆறாயிரப்படி கூறுகிறது.

துர்யோதனனுடைய ஸபைக்குக் கண்ணன் எழுந்தருளு கிறான். அந்த ஸபையில் ஸ்ரீ பீஷ்மர், துரோணர், கிருபர் முதலாகச் சிலரைத் தவிர அனைவரும் கா (**घा**)துகர்கள் தான். அதாவது கண்ணனை எப்படியாவது வதம் செய்ய வேண்டும் என்று எண்ணம் உடையவர்களேயாவார். அதனால் தானே ஸபையில் பெரும் பள்ளம் ஒன்றை வெட்டி வைத்து அதைமூடி அதன் மீது கண்ணன் எழுந்தருளியிருக்க ஆஸநம் ஒன்றையும் இட்டு வைத்தார்கள். அப்படிப்பட்டவர்களுடைய ஸபைக்குக் கண்ணன் ஒரு திருக்கையால் ஸ்ரீ விதுரரையும் மற்றொரு திருக்கை யினால் ஸாத்யகியையும் பற்றிக் கொண்டு எழுந்தருளினான். அவன் வந்தால் எழுந்திருக்கவும் கூடாது என்று கட்டுப்பாடு (ஸங்கேதம்) கொண்டிருந்தவர்கள் அனைவரும் தன்வயமிழந்து எழுந்து நின்று தம் தமக்கு ஏற்ப அவனை உபசரித்தார்கள் என்கி றது மஹாபாரதம். ஏன்? கண்ணனுடைய வடிவழகு படுத்தின

பாடு இது. கண்ணன் எழுந்தருளும்போது அவனுடைய அஸாதா ரணமான - அவனுக்கே உரிய-திருமேனி அழகைக் கண்டதுமே தன் வயமிழந்தார்கள்.

இத்தனைக்கும் அவர்கள் கண்ணனுடைய திருமேனியின் முழு அழகையும் காணவில்லை. திருமுடி அழகைமட்டும் தான் ஸேவித்தார்கள். அதுவே அவர்களை அவ்வளவு பாடுபடுத்தி விட்டது. இதை यथार्हं केशवे वृत्तिम् अवशाः प्रतिपेदिरे (யதார்ஹம் கேசவே வ்ருத்திம் அவஶா: ப்ரதிபேதிரே) இந்த ஶ்லோகத்தில் உள்ள 'கேஶவே' என்ற பதத்தினால் அறியலாம் என்பர் பெரியோர்.

ஸ்ரீராமனுடைய வடிவழகும் இவ்வாறே ப்ரஸித்தமானது. நாட்டைத் துறந்த ஸ்ரீராமன் குஹனுடைய ராஜ்யமான ச்ருங்கி பேரபுரத்தில் ஒரு புங்க மரத்தின் கீழ் இரவு தங்குகின்றான். ஸ்ரீ குஹன் தன் கையினாலே படுக்கை ஏற்படுத்தினான்; அதில் ஸ்ரீ ராமனும் ஸ்ரீ ஸீதையும் கண்துயில்கிறார்கள். இளைய பெருமாள் காட்டு ம்ருகங்களினால் ஸ்ரீராமன் ஸீதை இவர்களுக்குத் தீங்கு ஏதும் நேராவண்ணம் பாணங்கள் நிறைந்த அம்பறாத்தூணிகள் இரண்டை முதுகிலே இட்டுக் கொண்டு பெரிய வில்லொன்றைக் கையில் ஏந்தி இரவு முழுவதும் ஸ்ரீராமன் ஸீதை இருவரையும் காத்து வருகிறான்.

குஹனுக்கு இளைய பெருமாள் மீது ஸந்தேஹம். அதாவது இவனும் ஒரு தம்பி தானே. பரதன் ராஜ்யத்தைப் பறித்துக் கொண்டது போல் இவனும் ஏதாவது ஸ்ரீராமனுக்குத் தீங்கு செய் வானோ? என்று. ஆகவே தீங்கு செய்ய முனைந்தால் லக்ஷ்மண னை உடனே முடித்துவிடவேண்டும் என்று உத்தமமான வில்லைக் கையிலேந்தி லக்ஷ்மணனையே லக்ஷ்யமாகக் கொண்டு அவனையே சுற்றி வந்தான். இவன் பேரிலும் இளைய பெருமாள் பேரிலும் ஸந்தேஹம் கொண்டார்கள் குஹனுடைய வேலைக்





காரர்கள். நம் தலைவன் (குஹன்) காதுகன் (घातुकன்). ம்ருகங் களைத் துடிக்கத் துடிக்கக் கொன்று வேட்டையாடுபவன். மற் றொருவனோ தம்பி. இந்த முறையில் ஸ்ரீராமன் விஷயத்தில் இவர்கள் இருவரும் தீங்கு செய்ய முனைந்தால் தம் தலைவன் என்றும் தம்பி என்றும் பாராமல் இருவரையும் ஒழித்து விட வேண்டும் என்று வில்லில் அம்பைத் தொடுத்தபடியே வைத்துக் கொண்டு இளையபெருமாள், ஸ்ரீகுஹன் இருவரையுமே சுற்றி வந்தார்கள் குஹனுடைய வேலைக்காரர்கள்.

இவ்விஷயத்தை ஸ்ரீவசன பூஷணத்தில் பிள்ளைலோகா சார்யர் அழகாக அருளுகிறார்.

**'இளையபெருமாளை ஸ்ரீ குஹப்பெருமாள் அதிசங்கை பண்ண , இருவரையும் அதிசங்கை பண்ணி ஸ்ரீ குஹப்பெருமாள் பரிகரம் பெருமாளை நோக்கிற்றிறே.' (247)**

அதிஶங்கை-ஸந்தேஹம், பரிகரம்-பரிஜனம் (வேலைக் காரர்கள்). இவ்வாறு இவர்களுக்கு ஒருவர் மீது அதிசங்கை (ஸந்தேஹம்) வருவதற்குரிய காரணத்தையும் அவரே அடுத்த ஸூத்ரத்தில் காட்டுகிறார்.

**'ஒரு நாள் முகத்திலே விழித்தவர்களை வடிவழகுபடுத்தும் பாடாயிற்று இது' (248)**

இவ்விடத்தில் ஸ்ரீ மணவாளமாமுனிகள் அருளியுள்ள வ்யாக் யாந ஸ்ரீ ஸூக்திகளையும் அவஶ்யம் தெரிந்து கொள்ள வேண்டும். அதாவது, 'நெடுநாள் வாஸனை பண்ணுகை யன்றிக்கே ஒருநாள் முகதர்ஶநம் பண்ணினவர்களையும் அவன் விக்ரஹவைலக்ஷண்யம் படுத்தும்படியாய்த்திது என்கை.'

''ஸதா பஶ்யந்தி பண்ணினாரோபாதி ஸக்ருத் தர்ஶனம் பண்ணினாரையும் ப்ரேமாந்தராய் அஸ்த்தாநே பய ஶங்கை யாலே அநுகூலரையும் அதிஶங்கை பண்ணிப் பரிந்து நோக்கும்

படிப் பண்ணவற்றாயிறே பகவத் விக்ரஹ ஸௌந்தர்யம் இருப்பது''. என்பனவே அந்த வ்யாக்யான ஸ்ரீ ஸூக்திகள்.

பெருமாள் மீது பரிவு கொள்வதற்கு நெடுநாள் பழக வேண்டாம் ஒருநாள் அவனுடைய திருமுகத்தை தர்ஶனம் செய்து விட்டால் போதும். அவர்களுக்கும் எம்பெருமான் மீது அளவில்லாத பரிவு (அன்பு) உண்டாகிவிடும்.

ஸதாபஶ்யந்தி பண்ணுகிறவர்கள் நித்யஸூரிகள். இவர்கள் ஸ்ரீ வைகுண்டத்தில் ஆதிசேஷ சயனத்தில் எம்பெருமானை எப்பொழுதும் தர்ஶனம் செய்து வருகிறார்கள். 'ஸதாபஶ்யந்தி ஸூரய:' என்கிறது வேத வாக்யம். அவர்கள் எப்பொழுதும் எம்பெருமானுடைய திவ்ய திருமேனியை தர்ஶனம் செய்து கொண்டு அளவிலா அன்பு பூண்டு அதனால் ஒருவரை ஒருவர் ஸந்தேஹிப்பர். அவர்களால் என்ன தீங்கு நேருமோ என்று.

இது ஸ்ரீ வைகுண்டத்தில் எப்பொழுதும் எம்பெருமானுடைய திருமேனி அழகை ஸேவித்துக் கொண்டிருக்கும் நித்யஸூரிகளிடத்திலும் நிகழும் நிகழ்ச்சி.

அதாவது த்ரிவிக்ரமாவதாரம் செய்த போது பக்தர்கள் அனைவரும் திசைகள் அளவும் சென்று ஒலிக்கும்படி பல்லாண்டு பாடினார்கள். மங்களாஶாஸநம் செய்தார்கள். இந்த ஓசையைக் கேட்டதும் ஆதிசேஷன் மங்களாஶாஸனம் பண்ணுகிறவர்கள் இவர்கள் என்பதையும் பாராமல் தன் முகங்களால் கோபம் கொண்டு நெருப்பைக் கக்கினான் என்கிறார் திருமழிசைப்பிரான் தாம் அருளிய நான்முகன் திருவந்தாதியில்.

**'ஆங்கு ஆரவாரம் கேட்டு அனலுமிழும் பூங்கார் அரவு...' என்று. (நான்முகன்-*10*)**

அந்த நிலை ஒரு நாள் எம்பெருமானை-அவனுடைய வடிவழகைக் கண்டவர்களுக்கும் உண்டாகிறது.





இந்த ஸந்தேஹம் எம்பெருமான் மீது கொண்ட பரிவினாலே உண்டாவதால் அழகியதாகவே இருக்கும்.

ஶேஷபூதர்களான நமக்கும் அவன் திருமேனியே பரம போக்யமாய் இருக்கிறது. இதை விவரிக்க வேண்டாம். சரீரம் இல்லை என்றும் சொல்லும் ப்ரமாணங்கள் கர்மாதீனமான ப்ராக்ருதமான சரீரம் இல்லை என்று கூறுகின்றன.

குணம் உண்டு, குணம் இல்லை என்பதற்கு என்ன அர்த்தம்? குணம் உண்டு என்றால் கல்யாண குணங்கள் உண்டு என்று பொருள்; குணம் இல்லை என்றால் கெட்ட குணங்கள் இல்லை என்று அர்த்தம். அவ்வாறே சரீரம் உண்டு என்றால் அப்ராக்ருதமான சரீரம் உண்டு என்று அர்த்தம்; சரீரம் இல்லை என்றால் ப்ராக்ருத சரீரம் இல்லை என்று அர்த்தம். ஆக விரோத மில்லை.

ஆக இவ்வளவால் 'கண்கள் சிவந்து' என்ற திருவாய்மொழி (*8-8-1*வது) பாசுரத்தின் வ்யாக்யான அவதாரிகையில் ஸ்வாமி நம்பிள்ளை 'அவன் தன்னோடு பிராட்டிமாரோடு; ஶேஷ பூதரோடு வாசியில்லை.வ்யத்யாஸம், (பேதம்) இல்லை எல்லார்க்கும் அபிமதமாய் (ப்ரியமாய்) இருக்குமாயிற்றுத் திருமேனி' என்று அருளிச் செய்துள்ள வாக்யங்கள் விளக்கப்பட்டன.

இனிப் பாசுரத்தின் சுருங்கிய பொருள்:-

எம்பெருமானுடைய கண்கள் ஆழ்வாராகிற சிறந்த பக்தர் கிடைத்த ஸந்தோஷத்தினால் சிவந்து பெரியனவாய்த் திகழ்கின்றன. இவ்வாறே வாயும் திரு அதரமும் (உதடுகளும்) கோவைப் பழம் போல் சிவந்து விளங்குகின்றன. இதை விட்டு உள்ளே புகுந்தால் தேஜஸ் சுழியிட்டுத் தேங்கி நிற்பது போல் பற்கள் வெண்மை நிறம் உடையனவாய் சிவப்பு நிறம் மிகத் தோன்றும் படி இருக்கின்றன. கருத்துச் சுருண்ட திருமுடியின் அழகு மிகைத்து (அதிகரித்து)த் தோன்றும்படி அசைந்தாடுகிற

மகர குண்டலங்கள் விளங்குகின்றன. வர்ஷுகவலாஹகம் (மழை பொழியும் நிலையில் உள்ள மேகம்) போல் கருத்த திருமேனி. எல்லா அழகுகளையும் விஞ்சி நிற்கும் அழகுடைய தாய் விளங்கும் கிரீடம். ஆழ்வார் அணைந்த பிறகு பணைத்த-பருத்து தோன்றிய தோள்கள். நன்கு வளைந்த சார்ங்கம் என்ற வில்லும் உண்டு அவன் திருமேனியில்.

மற்றொருவர்க்கும் கிடையாத பெருமை பெற்று விளங்கும் சங்கமும் அவன் திருக்கையில். இவ்வாறே கதை, வாள், திருச் சக்ரமும் உண்டு. இவ்வளவையும் கொண்ட ஒருவன் அதாவது புண்டரீகாக்ஷனாய், காளமேக நிபஶ்யாமளனாய், சதுர்புஜனாய், சங்கசக்ராதி திவ்யாயுதோபேதனாகையாலே அத்விதீயன் அடியேனுடைய உள்ளத்தில் உள்ளானே. (காளமேக நிபஶ்யாமன்: காளமேகத்துக் கொப்பான கருமை நிறம் கொண்டவன்: திவ்யாயுதோபேதன்: திவ்யாயுதங்களோடு கூடியவன்.)

சிறந்த வைரம் வைத்திருக்கும் பெட்டியைத் திறந்து காட்டினால் வைரங்களே தானே காணக் கிடைக்கும். அவ்வாறே ஆழ்வாருடைய மனம் என்கிற பெட்டியைத் திறந்து பார்த்தால் எம்பெருமானின் அவயவஶோபையும் ஆயுதஶோபையும் ஆபரணஶோபையும் மிளிரா நிற்கும் என்றபடி.

இப்படிப்பட்ட திருமேனி அழகையே அனுபவிப்பதை விட்டு அவனுடைய ஆத்ம ஸ்வரூபம் குணங்கள் இவற்றை அநுபவிக்கப் போக வேண்டுமோ? அவற்றில் இவ்வளவு அழகுகள் உண்டா? ஆகவே ஆழ்வார்கள் அனைவரும் திருமேனி அழகிலேயே நின்று விடுகிறார்கள்.

---



## 4. பஞ்ச ப்ரகாரங்களில் திருமேனி

**पञ्चस्वपि प्रकारेषु विष्णोर्देहोऽनुवर्तते ।**
**अर्चायां विभवे चैव मोदोऽस्माकं विशिष्यते ।**

**अतस्तयोः प्रपञ्चस्तु प्रमाणैः क्रियतेऽधुना ।**
**पठितॄणां मनःप्रीत्यै नारायणयतीश्वरैः ॥**

பஞ்சஸ்வபி ப்ரகாரேஷு விஷ்ணோர் தேஹோऽநுவர்த்ததே ।
அர்ச்சாயாம் விபவே சைவ மோதோऽஸ்மாகம் விஶிஷ்யதே ॥
அதஸ்தயோ: ப்ரபஞ்சஸ்து ப்ரமாணை: க்ரியதேऽதுநா ।
படித்ரூணாம் மந: ப்ரீத்யை நாராயண யதீஶ்வரை: ॥

பரம், வ்யூஹம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை என்ற ஐவகை நிலைகளிலும் எம்பெருமானுக்குத் திருமேனி தொடர்ந்து வருவதாகும். இவற்றில் அர்ச்சாவதாரம், விபவாவதாரம் என்ற இரண்டு நிலைகளும் நமக்கு ஆனந்தம் அதிகம் தருவதால் அவையிரண்டும் இங்கு ப்ரமாணங்களுடன் விவரிக்கப்படுகின்றன.

கீழே கூறியபடி பெருமை வாய்ந்த திருமேனி பரம், வ்யூஹம், விபவம், அர்ச்சை, ஹார்தம் என்ற எம்பெருமானுடைய ஐந்து நிலைகளிலும் உள்ளதாகும்.

ஸ்ரீ வைகுண்டத்தில் திருமாமணி மண்டபத்தில் ஆதிசேஷனாகிற ஶயனத்தில் எழுந்தருளியிருக்கும் பரன் எனப்படும் எம்பெருமானுக்கும் இம்மாதிரி அழகு வாய்ந்த திருமேனி உண்டு. ஆனால் அது அங்குள்ள நித்யஸூரிகள், முக்தர்கள் இவர்களால் மட்டுமே அனுபவிக்கப்படும். நம் போன்ற ஸம்ஸாரிகளுக்கு அந்தத் திருமேனி அனுபவிக்க இயலாது, ஸம்ஸாரி சென்று காண ஒண்ணாத பரமபதத்திலிருப்பதால்.

இந்தப் பரரூபத்தைப் பற்றி ஸ்வாமி ஸ்ரீதேசிகன்- தத்த்வ மாத்ருகை என்ற ரஹஸ்யக்ரந்தத்தில்-

''பரரூபமாவது-நித்யமாய், ஏகரூபமாய், நித்யருக்கும் முக்த ருக்கும் போக்யமாய், 'குழுமித் தேவர் குழாங்கள் கை தொழச் சோதி வெள்ளத்தினுள்ளே எழுவதோர் உரு' என்றும் 'ஆதியம் சோதி உரு' என்றும் சொல்லுகிறபடியே ''வானுயர் இன்பம் மன்னி வீற்றிருந்த ரூபம்'' என்று ரத்னச் சுருக்கமாய் அருளி யுள்ளார்.

பரம் என்ற நிலையில் உள்ள எம்பெருமான் திருமேனி, நித்யம் - எப்பொழுதும் ஒரே மாதிரியாய் மாறுபடாததாய் நித்ய முக்தர்களால் மட்டும் அநுபவிக்கக்கூடியதாய் இருக்கும்.

ஸ்வாமி நம்மாழ்வார் ஐந்தாம் பத்து, ஐந்தாம் திருவாய்மொழி பத்தாம் பாட்டில் 'குழுமித் தேவர் குழாங்கள் கை தொழச் சோதி வெள்ளத்தினுள்ளே எழுவதோர் உரு'- அயர்வறும் அமரர்க ளுடைய (நித்யஸூரிகளுடைய) ஸமூஹங்கள் திரண்டு அநுப விக்க, அழகு வெள்ளத்தின் நடுவே உஜ்ஜ்வலமாய் (மிக்க ப்ரகாசத்துடன் கூடியதாய்) தோற்றுகிற விலக்ஷணமான திரு வடிவு என்று இந்தப் பரரூபத்தைக் குறிப்பிட்டருளுகிறார்.

அம்மாதிரியே திருவாய்மொழி 3-5-5 வது பாசுரத்தில் 'ஆதி அம் சோதி உரு,' என்று நித்யமாய், அப்ராக்ருத தேஜோமயமான இந்தப் பரரூபத்தைக் குறிப்பிட்டருளியுள்ளார். பரரூபம் என்ற இந்தத் திருமேனியின் அழகு நமக்குப் பயன்படாது.

இந்தப் பரரூபம் நம் போல்வார் கண்டு களிக்க முடியாத தொன்று என்பதை ஸ்ரீ வசனபூஷணம் 'ஆவரண ஜலம் போலே பரத்வம்' என்று தக்க உதாஹரணம் காட்டி விளக்குகின்றது.

தண்ணீர் தாஹம் கொண்டவனுக்கு விரஜா நதியைப்பற்றி விவரித்து அந்த நதியில் சென்று தண்ணீர் பருகி தாஹத்தைத்





தீர்த்துக் கொள் என்றால் அதன்படி இவனால் அங்குச் சென்று தண்ணீர் பருக முடியுமா? அவ்வாறு தான் திருமேனி அழகைக் கண்டு ஸேவிக்க விரும்புபவர்க்கு எளிதில் கிடைக்காததா யிருக்கும் இந்தப் பரரூபம்.

வ்யூஹரூபமானது ஸ்ரீ வைகுண்டம் சென்று காணவேண்டாத படி இந்தப் பூலோகத்திலேயே திருப்பாற்கடலிலே எழுந்தருளி யிருக்கும் எம்பெருமான், மற்றும் ஸங்கர்ஷணாதிகளும் கேசவாதி களுமான எம்பெருமான்கள் இவர்களுடைய திருமேனி. இது அங்குள்ள ஶ்வேதத்வீபவாஸிகள், ஸநகாதிகள் முதலான மஹா யோகிகளால் மட்டும் அநுபவிக்கத்தக்கதாய் நம் போல்வர்க்குக் கிட்டிச் சென்று ஸேவிக்க முடியாததாய் இருக்கும். ஆக நம்முடைய ஆசையைத் தீர்த்து வைக்காது வ்யூஹரூபம். தாஹம் கொண்டவனுக்கு இந்த ப்ரக்ருதி மண்டலத்திலேயே உள்ள திருப்பாற்கடலைச் சொல்லி அங்குச் சென்று பாலைப் பருகி தாஹத்தைத் தீர்த்துக் கொள்ளுமாறு சொன்னால் அவனுக்கு அது கிட்ட ஒண்ணாதபடி அன்றோ உள்ளது. அது போல் தான் வ்யூஹ ரூபம் என்பதை ஸ்ரீ வசனபூஷணம் 'பாற்கடல் போலே வ்யூஹம்' என்று எடுத்துக் காட்டுகிறது.

மற்றும் அந்தர்யாமி ரூபம் ஒன்று உண்டு. இது பற்றி ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் 'கண்கள் சிவந்து' இத்யாதிகளிற்படியே உள்ளே யோகிகளுக்குக் காணலாவதொரு ஸூக்ஷ்ம ரூப விசேஷம் என்று அருளியுள்ளார். இந்த ரூபம் மிக அழகியதாய் நம் ஹ்ருதயத்துக்கு உள்ளே இருக்கச் செய்தேயும் நம்மால் கண்டு அனுபவிக்க முடியாதபடி இருக்கும். அஷ்டாங்க யோகம் செய்பவர்களுக்கே அனுபவிக்கத் தக்கதாயிருக்குமிது. இதையும் ஸ்ரீ வசனபூஷணம் பூகத ஜலம் போலே அந்தர்யாமித்வம் என்று விளக்குகிறது. பூகதஜலம் - பூமிக்கு அடியில் உள்ள ஜலம்.

இங்கு மாமுனிகள் வ்யாக்யானம். த்ருஷ்ணார்த்தனுக்கு தேசாந்தரத்திற்குப் போக வேண்டாதபடி நிற்கிற இடந்தன்னிலே உண்டாயிருக்கச் செய்தேயும் 'கட்கிலீ' என்கிறபடியே கண்ணுக்கு விஷயம் அன்றிக்கே அஷ்டாங்க யோகரூப ஸ்வயத்நத்தாலே காணவேண்டும்படியான அந்தர்யாமித்வம்' என்று. தாஹம் கொண்டவனுக்கு 'பூமியின் அடியில் உள்ள தீர்த்தத்தைச் கொண்டு தாஹத்தைத் தணித்துக் கொள்ள முடியுமா! இவன் வேறோர் இடம் தேடி நாடிச் செல்ல வேண்டாம். இவன் இருக்குமிடத்திலேயே பூமிக்கு அடியில் உள்ளது ஜலம். அந்த ஜலம் எளிதில் கிடைக்குமா' கடப்பாறை முதலானவை கொண்டு தோண்டினால் தான் இந்த ஜலம் கிடைக்கும். இப்படிச் செய்ய முடியாதவனுக்கு தாஹம் போக்கிக் கொள்ள இந்த ஜலம் பயன்படாது. அவ்வாறு தான் இவன் ஹ்ருதயத்துக்கு உள்ளே இருக்கும் அந்தர்யாமி ரூபம்.

எம்பெருமானுடைய ஐந்து நிலைகளில் கீழ்க் கூறியபடி பரரூபமும், வ்யூஹரூபமும், அந்தர்யாமி ரூபமும் ஆகிய மூன்று ரூபங்களும் நமக்குப் பயன்படா. மற்றும் உள்ள விபவரூபமும், அர்ச்சாரூபமும் ஆகிய இரண்டு ரூபங்கள் (திருமேனிகள்) தான் நமக்கு அநுபவிக்கத் தக்கவாய் உள்ளன. இவ்விரண்டினுள் விபவரூபத்தைப் பற்றி, 'விபவங்களாவன—'மீனாய், ஆமையு மாய், நரசிங்கமுமாய்க், குறளாய் கானார் ஏனமுமாய்க் கற்கியாம் இன்னம்கார் வண்ணனே!' இத்யாதிகளிற்படியே விபூதிகளோடு ஸஜாதீயங்களாய்த் தோன்றும் ரூபங்கள் என்று ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் தத்த்வமாத்ருகையில் அருளிச் செய்துள்ளார். அதாவது

ஸர்வ விலக்ஷணனான எம்பெருமான் தன் ஆட்சிக்கு உட் பட்ட லோகத்தில் உள்ள மீன், ஆமை, வராஹம் போன்ற இனங் களுக்கு ஸஜாதீயமான-ஒத்ததான, திருமேனி கொண்டு செய்யும் அவதாரங்கள் விபவாவதாரங்கள் எனப்படுகின்றன. இந்த அவதாரங்களில் கொண்டுள்ள திருமேனி தான் விபவரூபம் என்னப்படுகிறது.





இந்த ரூபங்கள் பேரழகு கொண்டவை. இவற்றில் ஈடுபட்ட மஹர்ஷிகள் இவற்றின் பெருமைகளை இதிஹாஸபுராணங் களில் வர்ணித்துள்ளார்கள்.

இந்த ரூபங்கள் பரரூபத்தைப் போல் ஸ்ரீவைகுண்டம் சென்று தான் அனுபவிக்க வேண்டும் என்பதில்லை. திருப்பாற்கடல் போல் இங்கேயே வெகுதூரம் சென்று தான் இவற்றை அனுபவிக்க வேண்டும் என்பதுமில்லை. பூமிக்கு அடியில் கடப் பாறை முதலியன கொண்டு வெட்டி எடுத்துப் பருகவேண்டிய ஜலத்தைப் போல் அஷ்டாங்க யோகம் செய்துதான் அனுபவிக்க வேண்டிய அந்தர்யாமிரூபம் போல் ஶ்ரமப்பட்டுத் தான் அனுபவிக்க வேண்டும் என்பதுமில்லை.

நாம் இருக்கும் இடத்திற்கே வந்து அத்யத்புதமான அழ கோடே பண்டிதர்கள் பாமரர்கள் என்ற பாகுபாடில்லாமல் யாவரும் கட்டித் தழுவி அனுபவிக்கலாம்படி இருக்கும் இந்த விபவரூபங்கள் (திருமேனிகள்).

இப்பொழுது பூர்வர்கள் தரும் விளக்கங்களைக் கொண்டு நாம் மகிழ்வதும், பிறரை மகிழச் செய்வதும் இந்த ராம க்ருஷ்ணாதிகளான விபவாவதாரங்களின் திருமேனியின் பெருமைகளை எடுத்துக் கூறியே செய்து வருகிறோம்.

ஆனாலும் இதிலும் ஒரு அருமைப்பாடு உண்டு. அதாவது இந்த ராமக்ருஷ்ணாதிகளுடைய திருமேனியின் அனுபவம் அந்தக் காலத்தில் அந்த தேசத்தில் இருப்பவர்களுக்கு மட்டுமே கிடைக்கக் கூடியதாகும்.

ராமக்ருஷ்ணாத்யவதாரங்கள் நாம் வஸிக்கும் பூலோகத்தி லேயே நிகழ்ந்தவையாயினும் அந்த ஸமயத்தில் அந்த இடத்தில் இருந்தவர்களுக்குத் தான் அந்தத் திருமேனிகளின் அனுபவம் கிடைத்தது. வேறுஸமயத்தில் வேறு இடத்தில் பிறந்தவர்களுக்கு

அந்த அனுபவம் கிடைக்கவில்லை. ஸ்ரீ க்ருஷ்ணாவதாரம் முடிந்த பிறகு ஏழு நாட்கள் கழித்து அவதரித்த ஸ்வாமி நம்மாழ்வாருக்கு ஸ்ரீ க்ருஷ்ணாவதாரஸேவை கிடைக்கவில்லை. அந்தக் காலத்தி லேயே வேறு நாட்டில் பிறந்தவர்களுக்கும் அந்த பாக்யம் கிடைக்கவில்லை.

அக்காலத்தில் அத்தேசத்தில் இருப்பவர்களுக்கே பயன்படக் கூடியவை விபவாவதாரங்கள் என்பதை 'பெருக்காறு போலே விபவங்கள்' என்று தக்கதொரு உதாஹரணம் கொண்டு விளக்கு கிறது ஸ்ரீ வசநபூஷணம்.

இங்கு ''ப்ரத்யாஸந்நமாயும், தாத்காலிகர்க்கு உப ஜீவ்யமாய், பாஶ்சாத்யனானவனுக்கு துர்லபமான பெருக்காறு போலே யாய்த்து'' என்ற ஸ்ரீ வசநபூஷண வாக்யமும், ''மண்மீதுழல்வாய்'' என்கிறபடியே பூமியிலே அவதரித்து ஸஞ்சரித்ததும் தத்கால வர்த்திகளுக்கு ஆஶ்ரயணீயமாய் பிற்காலத்தில் உளனான இவ னுக்குக் கிட்டாதபடியான விபவம்'' என்ற மாமுனிகளின் ஸ்ரீ ஸூக்தியையும் அநுபவிக்க வேண்டும்

இந்த வாக்யங்களின் அர்த்தம் பின்வருமாறு.

மத்ஸ்ய-கூர்மாதிகளாயும் ராமக்ருஷ்ணாதிகளாயுமான விப வாவதாரகாலத்தில் எம்பெருமான் கொண்டுள்ள திருமேனி யாருக்குப் பயன்படும்? அதை யார் கண்டு அனுபவிப்பார்கள்? என்பதை அருளிச் செய்கிறார்.

இந்த விபவத் திருமேனி அதாவது ஸ்ரீராமக்ருஷ்ணாதிகள் அவதரித்த போது கொண்டுள்ள திருமேனி இங்கேயே பூவுலகி லேயே மிக ஸமீபத்தில் அண்மையில் உள்ளது. இதை அநுப வித்து ஆசை தீர்த்துக் கொள்ள ஸ்ரீ வைகுண்டம் செல்லவேண் டாம்; மிகத் தூரத்தில் (சேய்மையில்) உள்ள திருப்பாற் கடலுக் கும் செல்லவேண்டாம்; அயோத்யை, த்வாரகை முதலான





இடங்களில் நாமிருந்தபடியே ஸேவிக்கலாம்படி இருக்கும் இந்த விபவத் திருமேனி. இப்படி எம்பெருமான் அழகிய திருமேனி கொண்டு அவதரித்துப் பல ஆயிரக்கணக்கான வருஷங்கள் இந்த பூமியிலேயே ஸஞ்சரித்துள்ளான். ஆனாலும் அந்தக் காலத்தில் அந்த தேசத்தில் உள்ளவர்கள் மட்டுமே அநுபவித்து ஆனந்தப் படக் கூடியதாயிருக்கும் இந்த விபவாவதாரத் திருமேனி. அப்படிப்பட்டவர்களாலேயே ஆஶ்ரயிக்கத் தக்கதாயிருக்கும். ஆனால் ஒரு நாள் பிற்பட்டுப் பிறந்தவர்களுக்கு அந்தத் திருமேனி தர்சிக்கக் கிடைக்காது. (பாஶ்சாத்யன்-பின்பு தோன்றியவன்.)

காட்டாற்றில் உண்டாகும் ஜல ப்ரவாஹம் இதற்கு ஏற்ற உதாஹரணம் ஆகும். இது யாவரும் அறிந்ததேயாம். அதாவது காட்டாற்றில் உண்டாகும் வெள்ளம் அந்தக் காலத்தில் அந்த ஆற்றங்கரையில் இருப்பவர்க்கு மட்டுமே பயன்படுவதாகும். வெள்ளம் வடிந்த பிறகு அங்கிருப்பவர்களுக்கும் சரி, சில நாட்கள் கழித்து வந்தவர்களுக்கும் சரி, அந்த ப்ரவாஹ ஜலம் கிடைக்காது. அவர்களுடைய தாஹமும் தணியாது. 'ஆகவே பெருக்காறு போலே விபவங்கள்' என்று கூறுகிறது ஸ்ரீ வசன பூஷணம்.

எம்பெருமானுடைய ஐந்து வகைப்பட்ட நிலைகளில் கீழ் காட்டிய வகையில் தற்போது ஸம்ஸாரிகளாயுள்ள நமக்கு நான்கு நிலைகளில் உள்ள எம்பெருமான்களுடைய திருமேனிகள் பயன்படா. எம்பெருமான் திருமேனியை ஸேவிக்கவேண்டும் என்ற தாஹத்தை அவை தீர்க்கா.

ஆக நமக்குப் பயன்படக் கூடியது - திருமேனியை ஸேவிக்க வேண்டும் என்று விரும்பும் நம்முடைய விருப்பத்தைப் பூர்த்தி செய்து வைப்பது - அர்ச்சாவதாரத்தில் உள்ள எம்பெருமா னுடைய திருமேனி ஒன்று தான் ஆகும்.

இது பற்றி ஸ்வாமி ஸ்ரீதேசிகன் தத்த்வத்ரயசுளகத்தில் 'அர்ச்சாவதாரமானது பரவ்யூஹாதி லக்ஷணங்களோடே ஸ்வயம் வ்யக்தாதி ப்ரக்ரியையிலே தேசகாலாதி விப்ரகர்ஷம் அற்று மாம்ஸ சக்ஷுஸ்ஸுக்களுக்கும் அனுபவிக்கும்படித் தோற்றா நிற்கும் நிலை,' என்று அருளிச் செய்துள்ளார்.

பரரூபம், வ்யூஹரூபம், விபவரூபம் இவற்றுள் ஏதேனும் ஒன்றின் ரூபத்தை அதன் லக்ஷணங்களோடே அர்ச்சை உருவில் எழுந்தருளப் பண்ணலாம். இதில் தேசத்தினாலோ காலத்தினாலோ இடைவெளி கிடையாது. நாம் இருக்கும் இடத்திலேயே நாம் இருக்கும் காலத்திலேயே இந்த அர்ச்சாமூர்த்தியான எம்பெருமானே எழுந்தருளியிருப்பான். எப்பொழுதும் எழுந்தருளியிருப்பான்; ஜ்ஞானக்கண் வேண்டாதபடி நமக்குள்ள மாம்ஸக் கண்களைக் கொண்டே இந்த ரூபத்தை அனுபவிக்கலாம் என்றவாறான பெருமை இதற்கு உண்டு. மற்ற ரூபத்திற்கு இத்தகைய ஏற்றம் கிடையாது. இந்த ரூபமும் மிக்க அழகுடையதாகவே இருக்கும்.

நாம் அனைவரும் ஸ்ரீக்ருஷ்ணாவதாரத்தில் பின்பட்டவர்கள். நமக்கு விபவாவதாரம் கொண்டிருந்த எம்பெருமானுடைய திவ்யாத்புத ஸேவை எப்படிக் கிடைக்கும்? ஆகவே அர்ச்சாவதாரத்தில் ஸ்ரீ ந்ருஸிம்ஹன், ஸ்ரீராமன், ஸ்ரீ க்ருஷ்ணன் முதலான திருவுருவம் கொண்டு எழுந்தருளியிருக்கும் எம்பெருமான்களுடைய திவ்ய திருமேனி தர்சனம் தான் நம்முடைய விடாயை (ஆசையை)த் தீர்த்து வைக்கவல்லதாகும். இதையும் தக்க உதாஹரணம் கொண்டு விளக்குகிறது ஸ்ரீ வசனபூஷணம்.

காட்டாற்றில் பெருக்கு எடுத்து ஓடும் போது ஆங்காங்கு உள்ள பெரும் பள்ளங்களில் தீர்த்தம் நிறைந்து நிற்கும். வெள்ளமாக ஓடி வந்த ஜலம் வடிந்து விடும். இந்த மடுக்களில் தேங்கி நிற்கும் ஜலம் ஒரு போதும் வற்றாது. வெள்ளம் வடிந்து போய்ப்





பல நாட்கள் பல மாதங்கள் கழித்து வந்தவர்களுடையவும் தாஹத்தை இந்த ஜலம் தீர்த்து வைக்கும்.

இப்படிப் பெருக்காற்றில் தேங்கி நிற்கிற மடுக்கள் போன்றது அர்ச்சாவதார நிலை. எம்பெருமான் ஸ்ரீ ராமனாகவும், ஸ்ரீ க்ருஷ்ணனாகவும் விபவாவதாரம் செய்த போது எடுத்துக் கொண்ட திருமேனி போன்ற திருமேனிகளைக் கொண்டவனாகவே எம்பெருமானை அர்ச்சா உருவத்தில் எழுந்தருளப் பண்ணுகிறோம். இப்படிப்பட்ட அர்ச்சா திருமேனிகளைக் கொண்டு ஸ்ரீ ராம க்ருஷ்ணாதிகளான விபவாவதாரத்து எம்பெருமான்களை ஒருவாறு நினைவு கூர்ந்து உள்ளம் மகிழ்கிறோம் நாம்.

ஈரச்சொல்லாகிய ஆழ்வார்களின் அருளிச் செயல்கள் யாவும் இந்த அர்ச்சாரூபத்தின் அனுபவத்தினால் உண்டானவையேயாம். இவற்றின் மூலமாக அர்ச்சைத் திருமேனியின் அழகை நாம் அனைவரும் அனுபவிக்கலாம்-அனுபவித்து வருகிறோம்.

இங்கு வ்யாக்யானத்தில் மாமுனிகள்:- 'முன்பு சொன்னவை போலன்றிக்கே அவனுக்கு விடாய் கெடப் பருகலாம்படிப் பெருக்காற்றிலே தேங்கின மடுக்கள் போலேயாய்த்து, இவனுக்கும் தேசகால கரண விப்ரக்ருஷ்டமன்றிக்கே கோயில்களிலும் க்ருஹங்களிலும் என்றும் ஒக்க எல்லோர்க்கும் கண்ணுக்கு இலக்காம்படி நிற்கிற பின்னானார் வணங்கும் சோதியான அர்ச்சாவதாரம்.'

இந்த அர்ச்சாவதாரம் நமக்கு வெகு தூரத்திலிருக்கிறது என்று சொல்லி இதை விட வேண்டாம். மிக ஸமீபத்திலேயே உள்ளது. முன் காலத்திலிருந்தது நம் காலத்தில் இல்லை என்று காலத்தினால் இடைப்பாடு (இடைவெளி - விப்ரகர்ஷம்) சொல்ல வேண்டாம்; நம் காலத்திலேயே உள்ளது. கண்களுக்கு எட்டாமல் மிக ஸூக்ஷ்மமாயிருக்கிறது என்று சொல்ல வேண்டாம். நம் கண்களுக்குத் தெரியும்படி ஸ்தூலமான பரிமாணத்தில் உள்ளது

இந்த அர்ச்சைத் திருமேனி. இப்படி கோயில்களிலும், வீடுகளிலும் என்றும் எவ்விடத்திலும் நம் கண்களுக்கும் புலனாகும்படி தேஜோரூபியாய் இருக்கிறான். இப்படிப்பட்ட அர்ச்சாவதாரம் கொண்ட எம்பெருமானை திருமங்கையாழ்வார் பின்னானார் வணங்கும் சோதி என்று அருளுகிறார்.

இந்த அர்ச்சாவதாரமே நமக்குப் பல வகைகளிலும் பயன் தருவதாகும். 'பெருக்காற்றில் தேங்கின மடுக்கள் போல்' என்று பல மடுக்களை ஒரு அர்ச்சாவதாரத்திற்கு உதாஹரணமாகக் காட்டியுள்ளது ஸ்ரீவசனபூஷணத்தில். பெருக்காற்றில் தேங்கின மடுபோலே அர்ச்சாவதாரம் என்று சொல்லலாம் அன்றோ! இப்படிச் சொல்லாமல் 'மடுக்கள் போலே' என்று பன்மையில் சொன்னதன் கருத்தை மாமுனிகள் இங்கு வ்யாக்யானத்தில் விவரித்துள்ளார். 'பல இடங்களிலும் ஸந்நிதி பண்ணி நிற்கிற படியை நினைத்திறே (நினைத்தன்றோ) 'மடுக்கள் போலே' என்று பஹுவசனத்தாலே (பன்மையாலே) அருளிச் செய்தது.

மடுக்கள் போலே என்று மட்டும் சொல்லாமல் 'பெருக்காற்றில் தேங்கின' என்ற அடைமொழியைச் சேர்த்து 'பெருக்காற்றிலே தேங்கின மடுக்கள் போலே' என்று கூறியதற்கும் கருத்து அருளிச் செய்கிறார் மாமுனிகள். உதாஹரணத்தைக் கவனித்தால் ப்ரக்ருத விஷயமும் நன்கு புரியும், மடுக்களில் தேங்கியுள்ள ஜலம் வேறு எங்கிருந்தோ புதியதாக வந்து விடவில்லை. முன்பு பெருக்கு எடுத்து ஓடிய ஜலமே தான் அன்றோ! அவ்வாறே தான் அர்ச்சையில் கொண்டுள்ள திருமேனிகள் யாவும் முன்பு பரம், வ்யூஹம், விபவம் என்ற அவதாரங்களில் எம்பெருமான் கொண்டிருந்த திருமேனிகள் போன்றனவே. அவற்றை விட விலக்ஷணங்கள் (வேறானவை) அல்ல. ஆனால் இது அர்ச்சையின் வகையில் அமைந்துள்ளது என்பதே இதன் சிறப்பு என்று. மடுவில் எப்பொழுதும் ஜலம் நிறைந்திருப்பது போல் மற்றைய அவதாரங்களில் உள்ள குணங்கள் யாவும் இங்கு நிறைந்திருக்கும். ஆனால் அவை யாவர்க்கும் ப்ரகாசியா.





இந்த அர்ச்சாவதாரம் பற்றி ஸ்வாமி ஸ்ரீதேசிகன் தத்த்வமாத்ருகையில் அருளிச்செய்துள்ளதையும் இங்கு நாம் அநுபவிக்க வேண்டும்.

''அர்ச்சாவதாரமாவது:-''தமர் உகந்தது எவ்வுருவம், அவ்வுருவம் தானே, தமர் உகந்தது எப்பேர் மற்று அப்பேர்' 'நெஞ்சினால் நினைப்பான் எவன் அவனாகும் நீர்கடல் வண்ணனே!' என்னும்படி,-ஸ்வயம் வ்யக்த- ஆர்ஷ-வைஷ்ணவ - திவ்ய-மாநுஷ ஸ்தாநங்களிலே ஸர்வ ஸஹிஷ்ணுவாய், அர்ச்சக பாரதந்த்ரியத்துக்கு எல்லை நிலமாய் சேஷ சேஷி பாவசபளமாய் இருக்கும் ரூபம்.

தன்னை ஆராதிப்பவர் தனக்கு என்ன உருவம் தருகிறாரோ அதையே தனக்கு உருவமாக உகந்து ஏற்றுக் கொள்வான் அர்ச்சா ரூபியான எம்பெருமான். அதாவது ஒருவன் தன்னை மத்ஸ்ய ரூபத்திலேயே திருமேனியைப் பண்ணி அதில் எழுந்தருள வேண்டும் என்று ப்ரார்த்தித்தால் அவன் ப்ரார்த்தித்தபடியே அந்த மத்ஸ்ய ரூபத்தையே தனக்கு உருவமாக விரும்பி ஏற்பான் எம்பெருமான். நான் இந்த உருவத்தில் தான் இருப்பேன், அந்த உருவத்தைத் தான் கொள்வேன் என்ற தனியான அபிப்ராயம் இல்லாதவன் எம்பெருமான் என்றபடி. அவ்வாறே அவர்கள் தனக்குவைக்கும் பெயரையே தன் பெயராக விரும்பி ஏற்பான் இவன். அப்படியே தன்னை ஆராதிப்பவர்கள் எதைத் தனக்கு நிவேதநம் செய்கிறார்களோ அதையே தன் ஆஹாரமாக விரும்பி ஏற்றுக் கொள்வான் என்றவாறெல்லாம் அத்புதமாக அர்ச்சாவதாரத்தில் எம்பெருமானுடைய பெருமையை விவரித்துள்ளார்கள். விரிவுக்கு அஞ்சி இத்துடன் நிற்கிறோம்.

ஸ்ரீபட்டரும் இதன் பெருமையை விவரித்தருளியுள்ளார்.

ஆக இவ்வளவாய் பரம்-வ்யூஹம்-விபவம்-ஹார்தம் (அந்தர்யாமி) அர்ச்சை என்ற ஐந்து நிலைகளிலுமே எம்பெருமான் திவ்ய

திருமேனியுடன் கூடியேயிருக்கிறான் என்பது விளக்கப்பட்டது.

இவ்விஷயம் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் அர்த்தபஞ்ச காதிகாரத்தில் நன்கு கூறப்பட்டுள்ளது.

இந்த ஐந்து நிலைகளிலுமே இந்தத் திருமேனி ஶுபாஶ்ரயம் அதாவது ஶுபமாகவும், ஆஶ்ரயமாயும் இருக்கும். தன்னை த்யானிப்பவர்களுடைய ஸம்ஸாரபந்தத்தைப் போக்குவதாயும், த்யானத்தின் ஆரம்பத்திலே த்யானிப்பவர்களின் த்யானத்திற்கு எளிதில் விஷயமாகக் கூடியதாயும் இருக்கும்.

ஆனால் நம் எல்லோர்க்கும் இப்பொழுதும் அனுபவிக்கக் கூடியது அர்ச்சாவதாரத் திருமேனியேயாகும். இந்த அர்ச்சையின் அத்புதமான திருமேனி அழகைத்தான் ஆழ்வார்களும், ஆசார்யர் களும் அனுபவித்து அந்த அநுபவத்தைத் தம்முடைய திரு வாக்குகளால் வெளியிட்டுள்ளார்கள்.

பொதுவில் எம்பெருமானுடைய திவ்ய திருமேனியின் பெரு மையை 'தத்வத்ரயம்' என்ற க்ரந்தத்தில் ஸ்ரீ பிள்ளைலோகாசார்யர் அத்புதமான மஹாவாக்யம் ஒன்றால் விவரித்துள்ளார்-அதாவது:-

'விக்ரஹம்தான் ஸ்வரூப குணங்களிலும் காட்டில் அத்யந்தாபிமதமாய், ஸ்வாநுரூபமாய், நித்யமாய், சுத்த ஸத்த்வாத்மகமாய் சேதன தேஹம்போலே ஜ்ஞானமயமான ஸ்வரூபத்தை மறைக்கை அன்றிக்கே, மாணிக்கச் செப்பிலே பொன்னையிட்டு வைத்தால்போலேயிருக்கப் பொன்னுருவான திவ்யாத்ம ஸ்வரூபத்துக்குப்ரகாஶகமாய், நிரவதிகதேஜோ ரூபமாய், ஸௌகுமார்யாதி கல்யாணகுணநிதியாய், யோகித் யேயமாய், ஸமஸ்தபோக வைராக்ய ஜநகமாய், நித்ய முக்தாநு பாவ்யமாய் வாசத்தடம்போலே ஸகலதாபஹரமாய் அநந்தாவ தாரகந்தமாய் ஸர்வரக்ஷகமாய், ஸர்வாபாஶ்ரயமாய், அஸ்த்ர பூஷணபூஷிதமாய் இருக்கும்' என்று.





விக்ரஹம் என்பது சரீரத்தைக் குறிக்கும். இங்கு எம்பெருமா னுடைய திவ்ய திருமேனியைக் குறிக்கிறது.

சுருக்கமாக இதற்கு விவரணம் தருகிறோம் இங்கு-

இது எம்பெருமானுக்கு மிகவும் ப்ரியமா யிருக்கும்-அபிமதமாயிருக்கும்-அவனுக்கு அவனுடைய ஆத்ம ஸ்வரூ பமும், அவனுடைய கல்யாண குணங்களும் கூட அபிமதங்களா யிருக்கும். ஆனால் இது மிகமிக அபிமதமாயிருக்கும். ஒப்புயர் வற்ற (நிரதிஶயமான) ஆனந்தத்தைத் தருவது இது என்பதே இதில் ப்ரதாநகாரணமாகும். ஸ்வயம் ப்ரகாஶமான தன் ஸ்வரூ பத்திற்கு ஏற்ப இந்தத் திருமேனியும் ஸ்வயம் ப்ரகாஶமா யிருப்பதால் இவனுக்கு அநுரூபமாயிருக்கும் இந்தத் திருமேனி.

நித்யமாய், அநாதிகாலமாய் நித்யமாகவே இருக்குமிந்தத் திருமேனி ஏகரூபமாய், வளர்ச்சி தேய்தல் முதலான மாறு பாடுகள் ஏதுமில்லாததாய் இருக்கும். இந்த இரண்டு விசேஷணங் களும் பரரூபத்திற்கு உள்ளனவாகும்.

அவதாரத்திருமேனிகள் பல குறிப்பிட்ட காலம் இருந்து விட்டு அழிந்துவிடுகின்றன. குழந்தைப்பருவம், யௌவனப் பருவம் ஆகியவற்றில் வளர்ச்சி முதலிய மாறுபாடுகள் காணப் படுகின்றனவே என்று முன் கூறிய விஷயத்தில் ஸந்தேஹம் கொள்ள வேண்டாம். நம்முடைய சரீரத்தில் கர்மா காரணமாக உண்டாகும் வ்ருத்தி, க்ஷயம், (வளர்ச்சி, தேய்வு) முதலான மாறுபாடுகளைப் போலல்லாதன அவை. எம்பெருமானுடைய ஸங்கல்பம் காரணமாக உண்டாகின்றன அவை. இவற்றுக்கு மூலமான பரரூபம் எப்பொழுதும் வளர்ச்சி தேய்வுகள் (வ்ருத்திக்ஷயங்கள்) ஆகிற மாறுபாடில்லாதது என்று தாத்பர்யம் (கருத்து). ஸத்த்வ குணம் மட்டுமே கொண்ட அப்ராக்ருதமான த்ரவ்யத்தால் ஆனது பரமாத்ம சரீரம். ஜடமான ப்ரக்ருதியின் பரிணாமமான நம்முடைய சரீரம் நம்முடைய ஆத்ம ஸ்வரூபத்தை மறைக்கும்.

எம்பெருமானுடைய திவ்ய திருமேனியோ பொன் போல் மிளிரும். ஜ்ஞானமயமான அவனுடைய ஆத்ம ஸ்வரூபத்தை மறைக்காது. அதுமட்டுமன்றி அந்த திவ்யாத்ம ஸ்வரூபத்தை ப்ரகாஶப்படுத்தும்.

மாணிக்கத்தால் செய்த செப்பு தன்னுள்ளே வைக்கப்பட்டிருக்கும் பொன்னைத் தெளிவாகக் காட்டுகின்றதன்றோ? அவ்வாறே எம்பெருமான் திருமேனி அவனுடைய திவ்யாத்ம ஸ்வரூபத்தை ப்ரகாசப்படுத்தும். மரம், தகரம் இவற்றால் செய்த செப்பு தன்னுள்ளே இருக்கும் பொன்னைக் காட்டாமல் மறைக்கும். இது போன்றது ஜடமான ப்ரக்ருதியின் பரிணாமமான நம்முடைய சரீரம்.

இதற்குமேலான தேஜஸ் மற்றொன்றுக்குக் கிடையாது என்று சொல்லும்படித்தானே மிக அதிகமான தேஜஸ்ஸை உடையதாயிருக்கும் எம்பெருமானுடைய திருமேனி.

மிகமிகச்சிறந்த, ஒப்புயர்வற்ற-ஸௌகுமார்யம் (மென்மை), ஸௌகந்த்யம் (நறுமணம்), லாவண்யம் (அழகு) முதலான கல்யாண குணங்களை மிகக் கொண்டது எம்பெருமானுடைய திவ்ய திருமேனி.

யோகிகளுடைய த்யானத்திற்கு இலக்காகி அவர்களால் த்யானிக்கத் தக்கதாயிருக்கிறது இந்தத் திருமேனி. ஸகல ஜநமோஹநமாய் - தன்னை தர்சிப்பவர்கள் பண்டிதர்களாயினும் பாமரர்களாயினும் எவராயிருந்தாலும் அனைவரையும் தன்னிடத்தில் அத்யந்தம் ஆசை கொண்டவர்களாய் அதாவது பித்துப் பிடித்தவர்களாய்ச் செய்யவல்லது இந்த திருமேனி. இந்தச்சிறப்பு பரனான எம்பெருமான், வ்யூஹரூபியான எம்பெருமான், விபவாவதாரம் கொண்ட எம்பெருமான், அந்தர்யாமியாய் இருக்கும் எம்பெருமான், அர்ச்சையில் இருக்கும் எம்பெருமான் ஆக ஐவகை நிலையில் இருக்கும் எம்பெருமான்களுடைய திருமேனி





கள் அனைத்துக்குமே உண்டு. பரரூபத்தில் நித்யஸூரிகளும்; முக்தர்களும் ஈடுபட்டு மயங்கிக் கிடப்பார்கள். வ்யூஹரூபத்தில் ஶ்வேதத்வீபத்தில் வஸிப்பவர்களும், ஸநகாதியோகிகளும் ஈடுபட்டிருப்பார்கள்.

விபவாவதாரத்தில் எம்பெருமான் திருமேனியில் அக்காலத்திலிருந்த மஹர்ஷிகளும் பாமரர்களும் பசு-பக்ஷ்யாதிகளும் மயங்கிக் கிடந்தனர் என்று இதிஹாஸ புராணங்கள் வாயிலாகக் கேட்டு வருகிறோம்.

அந்தர்யாமி ரூபத்தில் யோகிகளும் ஆழ்வார்கள் முதலானோரும் ஈடுபட்டு மோஹித்துக் கிடக்கிறார்கள் என்பதும் பல ப்ரமாணங்களாலும் அருளிச் செயல்களாலும் அறியக்கிடக்கிறது.

ஸ்வாமி நம்மாழ்வார் அந்தர்யாம்யவதாரத்தின் திருமேனி அழகில் ஈடுபட்டு ஆறுமாத காலம் மோஹித்துக் கிடந்தார் என்பது பகவத் விஷயத்தில் ப்ரஸித்தம். இந்தத் திருமேனியின் அநுபவம் மற்றைய போகங்கள் அனைத்திலும் வைராக்யத்தை உண்டு பண்ணுவதாயிருக்கும். அதாவது இந்தத் திருமேனியின் அழகிலே ஈடுபட்டவர்கள் வேறு எந்த போகத்தையும் விரும்ப மாட்டார்கள் என்றபடி. ஏன் மோக்ஷத்தையும் விரும்ப மாட்டார்கள்.

'இச்சுவை தவிர யான் போய் இந்திரலோகம் ஆளும் அச்சுவை பெறினும் வேண்டேன்' என்று தொண்டரடிப்பொடியாழ்வார் அர்ச்சையில் ஸ்ரீரங்கநாதனுடைய வடிவழகில் ஈடுபட்டு மோக்ஷமும் வேண்டாம் என்றார்.

அவ்வாறே ஸ்வாமி ஸ்ரீதேசிகனும் ஸ்ரீதேவப் பெருமாள் திருமேனியழகிலே ஈடுபட்டு ஸ்ரீவைகுண்ட வாஸத்திலும் தனக்கு விருப்பம் இல்லை என்று சபதமிட்டு அருளியுள்ளார்.

ஸ்ரீஆளவந்தாரும், ஒரு தடவையாவது இந்த பூவுலகில் எம்பெருமானுடைய திருமேனி ஸேவை கிடைக்கும் என்ற

ஆசையால் மிகச் சிறந்த போகத்தையும் மோக்ஷத்தையும் த்ருணமாக (புல்லாக) மதித்திருப்பார்கள் மஹான்கள்: என்பதை 'ஸக்ருத் த்வதாகார விலோகநாஶயா த்ருணீக்ருதாநுத்தம புக்தி முக்திபி: மஹாத்மபி:' என்ற ஶ்லோகத்தின் பகுதியில் அருளியுள்ளார்.

'மனைப்பால் பிறந்தார் பிறந்தெய்தும் பேரின்பமெல்லாம், துறந்தார் தொழுதார், அத்தோள்.' (இந்நில உலகில் பிறந்தவர்கள் பெறக்கூடிய ஸுகங்கள் அனைத்தையும் விட்டவர் எம்பெருமானுடைய திருபுஜங்களையே தொழுவார்கள்) என்று பூதத்தாழ்வாரும் அருளிச் செய்கிறார்.

நித்யஸூரிகளும், முக்தர்களும் எப்பொழுதும் அனுபவித்துப் கொண்டிருக்கும் திருமேனி இது (பரரூபம்). மணம் மிகுந்த தாமரைத் தடாகம் போல் தன்னில் ஆழ்ந்தவர்களுக்கு ஸர்வ தாபங்களையும் போக்கவல்லது இந்தத் திருமேனி.

ஸ்வாமி நம்மாழ்வாரும் 'என் விடாய் (ஆசை-தாபம்) எல்லாம் தீரும்படி ஒரு தாமரைத் தடாகம் போலே வந்து தோற்றியருள வேணும் என்கிறார். 'தாமரை நீள் வாசத்தடம் போல் வருவானே ஒரு நாள் காண வாராயோ' என்று.

''எனக்கு ஒரே பெண்ணான என் புத்தி, கானல் நீர் போல் பொய்யான நிலையற்றவையான பல்வகைப்பட்ட இந்த நிலவுலக போகங்களாலே மயக்கப்பட்டு, களைப்படைந்தாள். அப்படிப்பட்டவள் புண்யமானதும் கம்பீரமானதுமான நீ ஆகிற குளத்தில் படிந்து ச்ரமம் தீருகிறாள். வெயிலில் கொதிப்படைந்த பெண் க்ரீஷ்ம காலத்தில் குளிர்ந்தகுளத்தில் நீராடித் தாபம் தீருவது போல் இவளும் தாபம் தீரப் பெறுகிறாள்'' என்பதை.

'கம்பீர புண்ய மதுரம் மம தீர்பவந்தம் க்ரீஷ்மே தடாகமிவ ஶீதமநு ப்ரவிஷ்டா' என்று தேவநாயக பஞ்சாஶத்தில் உள்ள ஒரு ஶ்லோகத்தில் அருளுகிறார் ஸ்வாமி ஸ்ரீ தேசிகன்.





பரனான ஸ்ரீ வைகுண்டநாதனுடைய திருமேனி மற்றைய அவதாரங்களில் எம்பெருமான் கொள்ளும் திருமேனிகளுக்கெல்லாம் மூல காரணம் ஆகிறது. 'ஆதியஞ்சோதி உருவை அங்கு வைத்து இங்குப் பிறந்த' அங்கு இருந்தபடியே வைத்துக் கொண்டு இங்குப் பிறந்த அதாவது நித்ய விபூதியில் (பரமபதத்தில்) உள்ள நித்ய ஸூரிகள் அநுபவிக்கும்படியே லீலா விபூதியில் ஸம்ஸார மண்டலத்தில் உள்ளவர்களும் அனுபவிக்கும்படியாக வந்து அவதரிக்கிறான் எம்பெருமான் என்று ஸ்வாமி நம்மாழ்வாரும் அருளிச் செய்கிறார். இந்தப் பரரூபத்திலிருந்து தான் மற்றைய அவதாரங்களில் கொள்ளும் திருமேனிகள் உண்டாகின்றன என்றபடி.

மேலும் இந்தத் திருமேனியே ஸர்வரூபமாகவும் அமைகிறது. அதாவது எம்பெருமானிடமிருந்து ஐஶ்வர்யத்தை விரும்புபவர்கள், ஆத்மாநுபவத்தை விரும்புபவர்கள், எம்பெருமான் திருவடிகளையே விரும்பும் உபாஸகர்கள், ப்ரபந்நர்கள்- சரணகதி செய்பவர்கள், மற்றும் ஸ்ரீ வைகுண்டத்தில் எம்பெருமானை அநுபவித்துக் கொண்டும் கைங்கர்யம் செய்துக் கொண்டும் இருப்பவர்களான நித்யஸூரிகள் முக்தர்கள் இப்படிப் பல வகைப்பட்டவர்களுக்கும் அநிஷ்டங்களைப் போக்கி இஷ்டங்களைக் கொடுத்தருளும் எம்பெருமான் திவ்ய மங்கள விக்ரஹத்தோடு (திவ்ய திருமேனியோடு) கூடியே இருப்பான். திவ்ய திருமேனியுடன் கூடியிருந்தே அனைவருக்கும் அநிஷ்டங்களைப் போக்கியும் இஷ்டங்களைத் தந்தும் அருள்கிறான் என்றபடி.

மேலும் ஸர்வ திவ்ய தத்த்வங்களுக்கும் அபிமானிகளான (நிர்வாஹகர்களான) தேவதைகள் மூலமாக ஆஶ்ரயம் ஆவதால் ஸர்வஜகத்துக்குமே ஆதாரமாகிறது இந்தத் திவ்ய திருமேனி. இதை 'புருடன்மணிவரமாக' என்ற பாசுரத்தில் ஸ்வாமி ஸ்ரீதேசிகன் விவரித்தருளியது ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியாவில் முன்பு தத்த்வத்ரயாதிகாரத்தில் வெளிவந்துள்ளது.

ஆக இவ்வளவில் தத்த்வத்ரயம் என்ற க்ரந்தத்தில் உள்ள திருமேனியின் சிறப்பு கூறும் மஹாவாக்யம் ஓரளவு விளக்கப் பட்டது.

ஸ்ரீ ஸஹஸ்ரநாமத்திலும் ஸுஷேண: என்ற திருநாமத்தால் ஸ்ரீ வ்யாஸ பகவான் இந்தத் திருமேனியின் சிறப்பை மிக சிறப்பாகக் காட்டியுள்ளார். அதையும் மற்றையவற்றையும் மேலே விவரிப்போம்.

---



## 5. ''ஸுஷேணன்''

**सुषेणनाम्ना व्यासोऽपि भगवद्वर्ष्मवैभवम् ।**
**प्राचीकशद्यत्तदत्र विवृणोति विशेषतः ॥**
**नारायणो यतिश्रेष्ठः मालोलासक्तमानसः ।**
**अटन् कर्नाटकं देशं मध्ये लब्धावकाशतः ॥**

**ஸுஷேணநாம்நா வ்யாஸோऽபி பகவத்வர்ஷ்ம வைபவம் ।**
**ப்ராசீகஶத் யத்தத்ர விவ்ருணோதி விஶேஷத: ॥**
**நாராயணோ யதிஶ்ரேஷ்ட: மாலோலாஸக்தமாநஸ:**
**அடந் கர்நாடகம் தேஶம் மத்யே லப்தாவகாஶத: ॥**

வ்யாஸபகவான் ஸ்ரீ ஸஹஸ்ரநாமத்தில் 'ஸுஷேண:' என்ற திருநாமத்தினால் எம்பெருமானுடைய திருமேனியின் பெருமையை நன்கு விளக்கியுள்ளார். அதை இங்கு இப்பொழுது விரிவாக அநுபவிப்போம்.

இந்தத் திருநாமம் துவங்குமுன் வ்யாக்யாநத்தில் ஸ்ரீ பராஶர பட்டர் என்ற ஆசார்யர் **'अथाऽन्यद्रहस्यम्'** (அத-அந்யத்- ரஹஸ்யம்) என்று அவதாரிகை (தோற்றுவாய்) இட்டுள்ளார். அதாவது இதிலிருந்து ரஹஸ்யமான-ஸூக்ஷ்மமான விஷயம் கூறப்படுகிறது என்று.

எம்பெருமானுடைய திருமேனி மிக ரஹஸ்யமானது. யாவர்க்கும் எளிதில் புலனாகாதது என்று இதன் பெருமையை அவதாரிகையிலேயே அருளிச் செய்கிறார் ஸ்ரீ பட்டர்.

இனி 'ஸுஷேண:' என்ற திருநாமத்தின் பொருளைக் காண போம். இதில் 'ஸு+ஸேநா' என்று இரண்டு பதங்கள் உள்ளன. ஸு+ஸேநா - யஸ்ய - ஸ:=ஸுஷேண: என்று 'பஹுவ்ரீஹி

ஸமாஸம்' அன்மொழித் தொகை கொள்ள வேண்டும். எவனுடைய ஸேநா 'ஸு' அழகியதோ அப்படிப்பட்டவன் 'ஸுஷேணன்' என்று கூறப்படுகிறான். அதாவது அழகிய ஸேனையை உடையவன் ஸுஷேணன் ஆகிறான் என்றபடி. எம்பெருமான் தான் ஸுஷேணன் எனப்படுகிறான். அவனே அழகிய ஸேனையை உடையவனாகிறான்.

அவனுயை திவ்ய திருமேனிதான் இங்கு 'ஸேநா' என்று கூறப்பட்டுள்ளது. இது ஸேனை போலிருப்பதால் ஸேனை யாகிறது. ஸேனை, எதற்குப் பயன்படுகிறதோ அம்மாதிரியே எம்பெருமானுடைய திவ்ய திருமேனியும் பயன்படுகிறது.

ஸேனை எதற்குப் பயன்படுகிறது? ராஜாக்கள் தனக்குக் கீழ்ப்படியாதவர்களை வஶீகரித்துத் தமக்கு அடியவர்களாகக் கொள்ள இந்த ஸேனை பயன்படுகிறது. அதாவது, தனக்கு வஶமாகாதவர்கள் அனைவரையும் தன் ஸேனையைக் கொண்டு தனக்கு வஶமாக்கிக் கொள்கிறார்கள் ராஜாக்கள்.

எம்பெருமானும் தன்னுடைய இந்தத் திருமேனியைக் கொண்டே யாவரையும் வஶீகரிக்கிறான். ஆகையால் காய: ஸேநேவ அஸ்ய, ஶரீரம் ஸேனை போல் இருக்கிறது இவனுக்கு என்று இவன் ஸுஷேணன் ஆகிறான்.

இவனுடைய இந்த ஶரீரம் நம்முடைய ஶரீரம் போல் ஜடமாய், ப்ராக்ருதமாய் இருப்பதன்று. நம்முடைய ஶரீரம், ஜடம், தானாக ப்ரகாஶியாதது. ப்ரக்ருதியின் பரிணாமத்தினால் ஏற்பட்டது. ரஜஸ், தமஸ்ஸுக்களுடன் கலந்தது. ஆகவே அஶுப மானது.

அவனுடையது அப்படிப்பட்டதன்று. அது அஜடம். ஸ்வயம் ப்ரகாஶம். தானாகவே ப்ரகாஶிப்பதாகும். ஸத்வகுணம் மட்டுமே நிறைந்தது. அதாவது ப்ரக்ருதி பரிணாமம் அன்று. ஶோபநமானது. பஞ்சோபநிஷத் என்ற மந்த்ரமயமானது.





இப்படிப்பட்ட இந்த திவ்ய திருமேனியைக் கொண்டுதான் எம்பெருமான் பத்தர்களையும், முக்தர்களையும், நித்யர்களையும் ஜயிக்கிறான். தன்னிடத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர் களாகச் செய்கின்றான் என்றபடி.

ஸ்ரீ வைகுண்டத்தில் திவ்ய திருமேனியுடன் கூட இருக்கும் எம்பெருமான் பரவாஸுதேவனே. வ்யூஹம், விபவம், அந்தர் யாமி, அர்ச்சாவதாரம் என்ற நிலைகளிலும் அந்தத் திருமேனியி லிருந்தே பற்பல ஶரீரங்களைக் கொள்கிறான். பரவாஸுதேவனு டைய திவ்ய திருமேனி ஸ்ரீ வைகுண்டத்தில் இருக்கும் நித்ய ஸூரிகளையும், முக்தர்களையும் வஶீகரிக்கின்றது. ஆகவே நித்யஸூரிகள், முக்தர்கள் இவர்களை ஜயிப்பதற்குக் காரண மாகிறது இந்தப் பரவாஸுதேவனுடைய திருமேனி.

வ்யூஹாவதாரங்களில் ஸங்கர்ஷணன் முதலானோரும் தம் தம்முடைய திருமேனிகளால், ஸநகாதிகள், ஶ்வேத த்வீப வாஸிகள் முதலானவர்களை வஶீகரிக்கிறார்கள். விபவாவ தாரத்திலும் அர்ச்சையிலும் கொண்டுள்ள திருமேனிகளால் எம்பெருமான் பத்தர்களையும் (ஸம்ஸாரிகளையும்) வஶீகரிக் கிறான்.

பத்தர்கள், முக்தர்கள், நித்யஸூரிகள் இவர்களுடைய விஜயத்திற்கு அதாவது இவர்களை வஶீகரிப்பதற்கு ஸேனை போல் உதவுவதால் இந்தத் திருமேனியே எம்பெருமானுக்கு அழகிய ஸேனையாகிறது.

இந்த அர்த்தத்தை 'ஸுஷேண:' என்ற திருநாமத்தின் பாஷ்ய உரையில் அத்யத்புதமான ஸ்ரீ ஸூக்திகளால் விளக்கியருளுகிறார் ஸ்ரீ பட்டர்:-

**'अथ अन्यद्रहस्यम् । शोभना-शुद्धसत्वमयी बद्धमुक्तनित्यविजयोप - करणत्वात् सेनेव पञ्चोपनिषत्कायोऽस्येति सुषेणः ।'**

(அத அந்யத்ரஹஸ்யம் - ஶோபநா- ஶுத்தஸத்வமயீ பத்த-முக்த - நித்ய விஜயோபகரணத்வாத் ஸேநேவ - பஞ்சோப நிஷத் காய: அஸ்யேதி-ஸுஷேண:) என்று. எம்பெருமான் திருமேனி நிறம் யாது?

**भगवद्धर्मणो रूपं अथ ज्ञेयं कृतात्मभिः ।**
**परतत्त्वस्य निष्कर्षः येनाऽस्मद्गुरुभिः कृतः ॥**

**பகவத் வர்ஷ்மணோ ரூபம் அத ஜ்ஞேயம் க்ருதாத்மபி: ।**
**பரதத்த்வஸ்ய நிஷ்கர்ஷ: யேநாஸ்மத்குருபி: க்ருத: ॥**

இதுவரை எம்பெருமானுடைய ஐவகை நிலைகளிலும் அவனுக்கு திவ்யமான திருமேனி உண்டு என்பதை அறிந்தோம். இனி தத்த்வத்தை அறிய விரும்பும் நாம் அந்தத் திருமேனியின் ரூபம் (வர்ணம், நிறம்) எது? என்பதை அவஶ்யம் அறிய வேண்டும். கறுப்பு, வெண்மை, சிவப்பு, பச்சை என்றிப்படிப் பலவகைப்பட்ட ரூபங்களில் - நிறங்களில் எது பகவானுடைய திருமேனிக்கு உள்ளது என்பதையும் அறிய வேண்டும். நம் பூர்வாசார்யர்கள் வர்ணத்தை (நிறத்தை)க் கொண்டுதான் பரதத்வ நிஷ்கர்ஷம் செய்துள்ளனர்.

யாருக்காவது ஶரீரம் உண்டு என்று கொண்டால் அதன் நிறம் என்ன? என்ற கேள்வி கட்டாயம் எழும். அம்மாதிரி இப்போது எம்பெருமானுக்குத் திருமேனி (ஶரீரம்) உண்டு என்று பல பகுதிகளில் பல ப்ரமாணங்களைக் கொண்டு எழுதி வந்துள்ளோம். இதில் எம்பெருமானுடைய திருமேனியின் நிறம் யாது? வெண்மையா, கருமையா, மற்றும் வேறு ஏதாவதா? என்ற கேள்வி கட்டாயம் எழுகின்றது. இதற்கு விடையாக இப்பொழுது ப்ரமாணங்கள் கூறுவதைத் தொகுத்து இந்தக் கட்டுரை மூலம் எழுதுகிறோம்.





பரவாஸுதேவனான எம்பெருமானுடைய திருமேனியின் நிறம் கருமையே ஆகும். அதாவது கறுத்த திருமேனி கொண்டவன் பரவாஸுதேவன் என்றபடி.

பொதுவில் பகவானுடைய திருமேனியின் நிறம் கருமையேயாம். ஸ்ரீ வைகுண்டநாதனுடைய திருமேனியும் கருமை நிறம் கொண்டதேயாகும். இதற்கு ப்ரமாணங்கள் பலப் பல உள்ளன.

முதலில் ஸர்வஜ்ஞனான எம்பெருமானாலேயே மதிநலம் (தத்த்வஜ்ஞாநம்) பெற்ற ஆழ்வார்களுடைய, அவர்களுள்ளும் ஸர்வக்ஞனான எம்பெருமானிடமிருந்தே ஸர்வார்த்த க்ரஹணம் செய்தருளிய திருமங்கையாழ்வாருடைய அருளிச் செயலைக் கொண்டு இந்த அர்த்தத்தை அறிவோம்.

திருமங்கையாழ்வார் அருளிச்செய்த ஆறு ப்ரபந்தங்களில் திருநெடுந்தாண்டகம் என்பது ஒரு ஶாஸ்த்ரம் என்றே நம் பூர்வர்களால் கருதப்படுகிறது. முப்பது பாசுரங்களைக் கொண்டது இது.

இதிலே இரண்டாவது பாட்டு தற்போது இங்கு ப்ரமாணமாகக் காட்டப்படுகிறது. எம்பெருமான் தனக்குப் பண்ணின உபகாரங்கள் பலவற்றை முதற்பாட்டில் அருளிச் செய்தார் திருமங்கையாழ்வார். இரண்டாவது பாட்டில் தனக்கு எம்பெருமான் செய்த சிறந்த உபகாரம் ஒன்றைக் குறிப்பிடுகிறார். அதாவது:-

ப்ரஹ்மா- விஷ்ணு-ஶிவன் என்று ப்ரஸித்தர்களான மும்மூர்த்திகளையும் கண்டு இவர்கள் மூவரும் ஒருவரே என்ற ப்ரமம் ஆழ்வாருக்கு வராதிருக்கத் தன்னுடைய வடிவழகின் சிறப்பை நன்கு காட்டித் தந்தான் எம்பெருமான். இது ஒரு பெரிய உபகாரம் அன்றோ!

**பார் உருவி நீர் எரிகால் விசும்புமாகிப்**
**பல்வேறு சமயமுமாய்ப் பரந்து நின்ற**
**ஏர் உருவில் மூவருமே என்ன நின்ற**
**இமையவர் தம் திரு உரு வேறெண்ணும் போது**

**ஒருருவம் பொன்னுருவம் ஒன்று செந்தீ**
**ஒன்று மாகடல் உருவம் ஒத்து நின்ற**
**மூவுருவம் கண்டபோது ஒன்றாம்சோதி**
**முகில் உருவம் எம் அடிகள் உருவந்தானே!**

***(திருநெடுந்தாண்டகம்-2)***

**இதன் திரண்ட பொருள்:-** அழகிய ஶரீரங்களையுடைய மூவருமே ப்ரதாநர் என்னும்படி இருக்கிற ப்ரஹ்ம - விஷ்ணு - ருத்ரர்களுடைய ரூபங்களை வேறாகப் பிரித்துப் பார்க்கும் போது ஒரு வடிவு அதாவது ப்ரஹ்மாவின் வடிவு, பொன்னின் ஸ்வபாவம் கொண்டது. மற்றொரு வடிவு அதாவது ருத்ரனுடைய வடிவு சிவந்த அக்நியின் வடிவு போன்றதாகும். மற்றொரு வடிவு அதாவது ஶ்ரிய: பதியான நாராயணனுடைய வடிவு பெரிய கடல்போல ஶ்ரமஹரமான அதாவது தாபங்களைப் போக்கு கின்றதான வடிவு ஆகும்.

சேர்ந்து நிற்கிற இந்த மூன்று வடிவுகளையும் ப்ரமாணங்களைக் கொண்டு ஆராயும் போது ஒருவனாய் (ஒப்பற்றவனாய்) விளங்குகின்ற காளமேக நிப ஶ்யாமளமான (நீருண்ட மேகத்திற்கு ஒப்பான) வடிவு- ஸர்வஸ்வாமியான ஸர்வேஶ்வரன் வடிவமாம் எம்பெருமான் ஒருவன் தான். பஞ்ச பூதங்களை ஸ்ருஷ்டித்தான், பல வகைப்பட்ட மதங்களை உடைய இந்த ஜகத்தை ஸ்ருஷ்டித்தான். ஒவ்வொரு பொருளையும் வ்யாபித்து அதற்கு அந்தராத்மாவாக நிற்கிறான். உண்மை நிலையை உணரும்போது 'பரம் ஜ்யோதிஸ்' என்ற ஶப்தத்திற்குப் பொருளாய் இவன் ஒருவன் தான் விளங்குகிறான். இப்படிப்பட்டவனுடைய வடிவு கறுத்த மேகம் போன்று இருக்கும் என்று எம்பெருமானை வேறுபடுத்திக் காட்டியருளினார் திருமங்கையாழ்வார்.





இதை வெளியிடும் வகை மிக அழகு. இதனை ரஸிக்க வேண்டும். 'முகில் உருவம் தான் எம் அடிகள் உருவம்' மும்மூர்த்திகளுள் நம்முடைய ஸ்வாமி யார் என்பது அறியாமல் திகைத்து நிற்கும் உலகத்தவர் நன்கு உணரும்படி நம்முடைய ஸ்வாமியின் உருவம் மேகம் போல் கறுத்து விளங்கும், இப்படிப்பட்ட திருமேனியை உடையவன் தான் நம் -ஸ்வாமி என்கிறார்.

ஆகப் பரதத்வமாய் நிற்கும் எம்பெருமானுடைய திவ்ய திருமேனியின் நிறம் கறுப்பு. இந்த நிறத்தைக் கொண்டு தான் பரதத்வத்தை நிர்ணயிக்க வேண்டும் என்கிறார் ஆழ்வார்.

இங்கு மும்மூர்த்திகளுள் ஒவ்வொருவருடைய ஶரீரத்தின் நிறத்திற்கும் உதாஹரணம் தரும்போது ப்ரஹ்மாவின் ஶரீரத்திற்குப் பொன்னையும், ஶிவனுடைய ஶரீரத்திற்கு அக்நியையும், எம்பெருமானுடைய திருமேனிக்குப் பெருங்கடலையும் ஒன்று பொன்னுருவம், ஒன்று செந்தீ, ஒன்று மாகடல் உருவம் என்று காட்டியுள்ளார். கடைசியாய் முடிக்கும்போது எம் அடிகளின் உருவம் கடல் உருவம் என்று தானே கூற வேண்டும். அப்படிக் கூறாமல் முன்பு கூறாததான முகிலை (மேகத்தை)ச் சொல்லி 'முகில் உருவம் எம் அடிகள் உருவம்' என்று அருளியுள்ளார்.

இங்குப் பெரியவாச்சான்பிள்ளை அருளிய பொருள் இது: கடல், முகில் இரண்டையும் இங்கு எம்பெருமான் திருமேனிக்கு உவமையாகச் சொன்னதன் கருத்து இதுதான். அதாவது கடலுக்குள்ள தன்மை பகவானுக்கும் உண்டு என்று காட்டுவதற்காக முதலில் ஒன்று மாகடல் உருவம் எனப்பட்டது. கடலின் தன்மை-ஸ்வபாவம் எது? தன்னைப் பார்ப்பவர்களுடைய துன்பத்தைப் போக்கும் கடல். தீங்கு செய்யாத ப்ராணிகள், தீங்கு செய்யும் துஷ்ட ப்ராணிகள் என்ற பாகுபாடு (வ்யத்யாஸம்) இல்லாதபடி எல்லா ப்ராணிகளுக்கும் தன்னுள்ளே இடம் கொடுக்கும் கடல். விலையுயர்ந்த ரத்நம், முத்து முதலியவற்றுக்கும் பயனற்ற

அல்பங்களான பல பொருள்களுக்கும் ஆதாரமாக இருக்கும் கடல்.

இப்படியே எம்பெருமானுடைய திருமேனி பார்ப்பவ ருடைய துன்பங்களையெல்லாம் போக்கவல்லது. யாவர்க்கும் தன் பக்கலிலே இடம் தரவல்லது.

முகில் (மேகம்) என்பது எம்பெருமானுடைய திருமேனிக்கு நேரே உபமாநமாக இருக்கவல்லது.

மேகம் மழை பொழிந்து உலகைக் காப்பது போல் எம்பெரு மானுடைய திருமேனியும் எல்லோரையும் தன் குளிர்ச்சியினால் காக்கிறது, நம் எம்பெருமான் எல்லோரையும் விட உயர்ந்தவன் என்பதற்கு அடையாளமாக இருக்கிறது.

எம்பெருமானுடைய திருமேனி நிறத்துக்கு மற்றும் பல உவமைகளைப் பல உபநிஷத்துக்கள் எடுத்துக் காட்டுகின்றன. அவற்றுள் சில:-

**'यथा पाण्डाविकं, यथा इन्द्रगोपः, यथा माहारजनं वासः, यथा सकृद्विद्युत्तम्'**

(யதா பாண்டாவிகம், யதா இந்த்ரகோப:, யதா மாஹாரஜநம் வாஸ:, யதா ஸக்ருத்வித்யுத்தம்) என்று.

எம்பெருமானுடைய திருமேனி - வெண்கம்பளம் போன் றும், பட்டுப் பூச்சி போன்றும், குஸும்பச் சாயை கொண்ட ஆடை போன்றும், மின்னல் போன்றும் நிறம் கொண்டதாயிருக் கும் என்று உபநிஷத்துக்கள் வெண் கம்பளம், பட்டுப்பூச்சி, 'ரோஸ் கலர்' கொண்ட ஆடை, மின்னல் இவற்றை எம்பெருமான் திருமேனிக்கு உவமையாகக் காட்டுகின்றன. வெண்கம்பளத்தின் நிறம் - வெண்மை, பட்டுப்பூச்சியின் நிறம் நல்ல சிவப்பு, குஸும்பப் பூவின் சாயை கொண்ட ஆடை 'ரோஸ் கலர்' உடையது. மின்னல் பொன்னின் நிறம் கொண்டதாகும். இவற்றை





உதாஹரணமாகக் கூறியதால் எம்பெருமான் திருமேனிக்கும் இவ்வளவு நிறங்களும் உண்டு என்றன்றோ ஏற்படுகிறது. இப்படி யிருக்கக் கருமை நிறம் மட்டும் தான் உண்டு என்று முன் கூறியது எப்படிப் பொருந்தும்? என்ற ஸந்தேஹம் விஷயம் அறிந்தவர் களுக்கு வரக்கூடும். இதற்குப் பரிஹாரம் இதுவே:-

எப்பொழுதும் உள்ள நிறம் கருமையே. மற்றைய நிறங்களை எம்பெருமான் சிற்சில அவதாரங்களில் தன் திருமேனியில் கொள்கிறான். உதாஹரணமாக ஸ்ரீ ந்ருஸிம்ஹன், ஸ்ரீ ஹயக்ரீவன் முதலான அவதாரங்களில் எம்பெருமான் வெண்மை நிறம் உடைய திருமேனியைக் கொள்கிறான். இம்மாதிரிதான் மற்றைய அவதாரங்களிலும் மற்றைய நிறங்களைக் கொள்கிறான்.

ஆக முகில் போன்ற உருவம் தான் எம்பெருமானுக்குப் பொதுவில் எப்பொழுதும் உள்ளது. மற்றைய நிறங்களில் திருமேனி அவ்வப்பொழுது கொள்ளப்படுவதாகும். அபிநவ தேஶிகன் ஸ்ரீ.உ.வே.மஹாவித்வான் உத்தமூர் ஸ்வாமி தாமியற்றிய உரையில் இவ்விடத்தில் அருளிச் செய்ததுள்ளார் இப்படியே. அதாவது:-

'மாகடலிலிருந்து முகில் தோன்றி எங்கும் பரவுகின்றாப் போலே பரவாஸுதேவனாகவும், பரந்த கடலிற் பள்ளி கொண்டு மிருக்கிறவன் முகில் வண்ண விஷ்ணுமூர்த்தியாகத் தோன்றி வானத்தில் நிலைத்து, வியன் மூவுலகுக்கும் அமுதம் அளிக்கின்ற வன் ஆகிறான்'.

முகிலுக்கு மற்றைய உவமைகளை விடச் சிறப்பு உண்டு என்பது 'நீலமேகன்' என்றே பெருமாளுக்குப் பெயர் வழங்குவ தாலும், அடியார்கள் தாங்களும் அப்பெயரை வைத்துக் கொள்வ தாலும் தெளிவாகும். அவதாரங்களிலும் வெவ்வேறு நிறத்தை யும் எம்பெருமான் இசைவதுண்டு. உபநிஷத்திலும் இது ப்ரஸித்தம். மற்றைய நிறங்கள் வேண்டும்போது கொள்ளும் நிறங்களாகும்.

பரமபதத்தில் இவன் இசைந்த முதல் நிறம் முகில் வண்ணமே.

ப்ரஜாபதியை தேவதையாகக் கொண்ட யாகம் ஒன்று வேதத்தில் விதிக்கப்பட்டுள்ளது. இந்த யாகம் பகவானுடைய ப்ரீதிக்காகச் செய்யப்படுகிறது. இதில் பயன்படுத்தப்படும் பஶுக்கள் கருமை நிறம் கொண்டவையாக இருக்க வேண்டும். ஏனெனில் யாகத்தின் தேவதைக்கு என்ன நிறமோ அந்த நிறம் அந்தப் பஶுக்களுக்கும் இருக்க வேண்டும் என்ற நியதி உண்டு. ப்ரஜாபதி என்ற தேவதை ஶ்ரிய: பதியான எம்பெருமானே யாவான். அவன் கருநிறம் உடையவன் அன்றோ. ஆகவே அவனை தேவதையாகக் கொண்ட யாகத்தில் பயன்படும் பஶுக்களும் கருநிறம் கொண்டவைகளாகத் தான் இருக்க வேண்டும் என்கிறது வேதம்.

ஆகவே பொதுவில் எம்பெருமான் திருமேனி நிறம் கருமையேயாகும். இவ்வளவு ஶாஸ்த்ரார்த்தங்களைத் திருவுள்ளத்தில் கொண்டு தான் திருமங்கை மன்னன் 'முகில் உருவம் எம் அடிகள் உருவம் தானே' என்று ஸாரமாக அருளிச் செய்துள்ளார்.

ஆக எம்பெருமானுடைய திவ்ய திருமேனியின் ஶாஶ்வதமான நிறம் கருமையே. வெண்மை, சிவப்பு, பசுமை முதலான நிறங்கள் குறிப்பிட்ட சில காலங்களில் வந்து போகக் கூடியனவாகும். ஆகையால் அவை ஶாஶ்வதங்கள் அல்ல என்பது கிடைத்தது.

இப்படிப்பட்ட கருநிறம் கொண்ட எம்பெருமான் வேறு நிறங்களைக் கொள்ளும் காலங்களையும் திருநெடுந்தாண்டகத்தில் அடுத்த (3வது) பாட்டினால் அருளிச் செய்கிறார். அதை அடுத்து அநுபவிப்போம்.

---



## 6. எம்பெருமான் திருமேனியின் பல வர்ணங்கள்

**परकालादिसूरिणां दिव्यसूक्तिगणैरिह ।**
**भगवद्वर्ष्मवर्णस्य निर्णयः कथ्यतेऽञ्जसा ॥**
**नारायणयतीन्द्रैस्तु नानाशास्त्रज्ञसम्मतैः ।**
**नानाक्षेत्रेषु नाथस्य नानासेवाभिराहृतैः ॥**

**பரகாலாதிஸூரீணாம் திவ்யஸூக்தி கணைரிஹ ।**
**பகவத்வர்ஷ்மவர்ணஸ்ய நிர்ணய: கத்யதேऽஞ்ஜஸா ॥**
**நாராயணயதீந்த்ரைஸ்து நாநாஶாஸ்த்ரஜ்ஞ ஸம்மதை: ।**
**நாநாக்ஷேத்ரேஷு நாதஸ்ய நாநாஸேவாபிராஹ்ருதை: ॥**

மநோ வாக் காயங்கள் மூன்றினாலும் பகவத் விஷயமே போதுபோக்காக இருக்கும் நிலைமை பெற்றுள்ள பாக்யத்தை நினைத்து நினைத்துப் பூரித்து மகிழ்கிறோம்.

காலையில் எழுந்ததும் அனுஷ்டாநம் முடித்துக்கொண்டு ஸர்வதாபங்களையும் போக்கும் பேரழகு கொண்ட ஸ்ரீ மாலோலனைப் பூஜிக்கிறோம். பின்னர் பக்தர்களின் பேரோலக்கத்தில் (பெருங்கோஷ்டியில்) இந்த மாலோலனையே எதிரில் நிறுத்தி அவனுடைய கல்யாண குணங்களை வாக்கினால் வர்ணித்துப் பலரையும் வஶீகரிக்கிறோம். பிறகு வேதாந்த க்ரந்தகால க்ஷேபங்களில் இவன் பெருமைகளை எடுத்துரைக்கிறோம். இடையில் உள்ள காலங்களில் இவனை நினைத்தே மகிழ்கிறோம். பிறகு கிடைத்த அவகாஶங்களில் நம் ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியா வாசகர்கள் ஆயிரக்கணக்கானவர் மனம் மகிழும்படி கட்டுரைகள் பல எழுதி வருகிறோம். அதற்காகப் பல புஸ்தகங்களையும் ஸேவித்து (படித்து) வருகிறோம். உண்ணவும் உறங்கவும் எடுத்துக் கொள்ளும் அவகாஶம் மிகக்குறைந்ததேயாகும்.

தற்போது எம்பெருமானுடைய திருமேனி நிறம் பற்றிய நிர்ணயங்களைத் திருமங்கையாழ்வார் முதலான திவ்யஸூரிகளுடைய ஸ்ரீ ஸூக்திகளைக் கொண்டு பூர்வாசார்யர்கள் செய்துள்ள நிர்ணயத்தை (முடிவை) நாம் இப்பொழுது இங்கு எழுதி வருகிறோம். இதற்காகப் பல ஶாஸ்த்ரங்களின் பொருள்களை அறிகிறோம். ஸஞ்சாரத்தில் இருப்பதால் பற்பல திவ்யதேஶங்களுக்குச் செல்கிறோம். ஆங்காங்கே எழுந்தருளியுள்ள அத்யத்புத திருமேனி கொண்டுள்ள எம்பெருமான்கள் பலரை ஸேவிக்கிறோம். இந்த ஸேவையினால் நாம் தன்வயமிழந்து எம்பெருமானிடத்திலேயே ஒன்றியுள்ளோம். இந்த நிலையில் தான் மாதந்தோறும் அருள்மொழிகள் பிறக்கின்றன. இவற்றால் பண்டிதர்கள், பாமரர்கள் என்ற வேறுபாடின்றி அனைவரும் மகிழ்கிறார்கள் என்பதை ஆங்காங்கு நேரிலும், தபால் மூலமாகவும் அறிந்து மகிழ்கிறோம்.

இப்படி வாசகப் பெருமக்கள் மகிழ்ந்து தரும் ஆதரவுதான் பல கார்யங்கள் நடுவே சிக்கியுள்ள நமக்கு இம்மாதிரி விஷயங்களை எழுதுவதில் உத்ஸாஹத்தையும் ஊக்கத்தையும் தருகிறது. வாசகப் பெருமக்களுக்கு மிகவும் நன்றி கூறுகிறோம். தொடர்ந்து உங்கள் உள்ள மகிழ்ச்சியை நமக்குத் தயங்காமல் எடுத்துக் கூறுங்கள்.

சென்ற இதழில் எம்பெருமானுக்கு (ஸ்ரீ பரமபத நாதனுக்கு) நிரந்தரமான திருமேனி நிறம் கருமைதான் என்றும் சிற்சில அவதாரங்களில் பொதுவான கருமை நிறத்தை மாற்றிக்கொண்டு வெண்மை, சிவப்பு, பசுமை முதலான வேறு நிறங்களையும் கொள்கிறான் என்றும் கூறப்பட்டுள்ளது.

இனி எந்த எந்த ஸமயத்தில் எந்த எந்த நிறத்தைக் கொள்கிறான் என்பதை இந்த அருள்மொழியில் விளக்குகிறோம்.





திருமங்கையாழ்வார் அருளிச்செய்த திருநெடுந்தாண்டகம் என்ற மஹாப்ரபந்தத்தில் 3வது பாசுரம் இவ்விஷயத்தை நன்கு விளக்குகிறது.

**திருவடிவில் கருநெடுமால் சேயன் என்றும்**
**திரேதைக்கண் வளையுருவாய்த் திகழ்ந்தான் என்றும்**
**பெருவடிவில் கடல் அமுதம் கொண்டகாலம்**
**பெருமானைக் கருநீலவண்ணன் தன்னை**
**ஒருவடிவத்து ஓர் உருவென்று உணரலாகாது**
**ஊழிதோறூழி நின்றேத்தல் அல்லால்**
**கருவடிவிற் செங்கண்ணவண்ணன் தன்னைக்**
**கட்டுரையே யார் ஒருவர் காண்கிற்பாரே!**

**(திருநெடுந்தாண்டகம் 3ம் பாட்டு)**

இங்குப் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநத்தில் அருளிச் செய்துள்ள விஷயங்கள் மிக அத்புதங்கள்.

இந்த மூன்றாவது பாட்டினால் திருமங்கையாழ்வார் எம்பெருமானுடைய திருமேனியை அநுபவிக்கிறார். இத்தால் வடிவை அநுபவிக்கிறார் என்பது வ்யாக்யாந வாக்யம். திருமேனி தான் நமக்குப் பரமபோக்யம் என்பதையும் அழகாக அருளிச் செய்தார்.

எம்பெருமானுடைய திவ்யாத்மஸ்வரூபம் பரமாநந்த ரூபமானது. உலகப் பொருள்கள் யாவற்றையும் விடச் சிறந்தது. அதைவிடச்சிறந்தவை அந்த ஸ்வரூபத்தில் உள்ள திருக்கல்யாண குணங்கள்.

நிர்குண பரப்ரஹ்மவாதிகளான அத்வைதிகள் கூட ப்ரஹ்ம ஸ்வரூபத்தை ஒப்புக் கொண்டுள்ளனர். ஆனால் அதற்கு எவ்வித குணமும் இல்லை என்கிறார்கள். குணமில்லாத ஸ்வரூபத்தை அநுபவிக்கவே முடியாது. ஆகவே அது ரஸமில்லாத பொருள்

போல் அநாதரிக்கப்பட வேண்டியதாய் விடும். நம் ஸித்தாந் தத்தில் அந்தப் பரப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்திற்குப் பற்பல திருக் கல்யாண குணங்கள் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளன. அந்தக் குணங்களுக்குப் பெருமை மிக அதிகம். குணங்களின் பெருமை யைப் பார்த்தால் ஆத்மஸ்வரூபத்தை விட்டு விடலாம் போல் தோன்றும். அவ்வளவு உயர்ந்தவை குணங்கள்.

எம்பெருமானுடைய திவ்ய திருமேனியின் பெருமையைப் பார்த்தால் எம்பெருமானுடைய ஆத்மஸ்வரூபம், அதில் உள்ள கல்யாணகுணங்கள் இரண்டுமே கூடச் சுவையற்ற பொருள்கள் போல் அநாதரிக்கப்பட வேண்டியனவாயிருக்கும்.

ஆக எம்பெருமானுடைய திவ்ய ஆத்மஸ்வரூபம், அவ னுடைய திவ்ய திருக்கல்யாண குணங்கள் இரண்டையும் விடத் திருமேனியே சிறந்தது ஆகிறது.

மந்தமான புத்தியுடைய நம் போன்றவர்களால் எம்பெரு மானுடைய திவ்யாத்மஸ்வரூபத்தையோ, அவன் திருக்கல்யாண குணங்களையோ எடுத்த எடுப்பிலேயே- த்யாநத்தின் ஆரம்ப தசையிலேயே - எளிதில் அறியமுடியாது. இப்படிப்பட்ட நமக்கும் கூட அந்த இரண்டையும் எளிதில் காட்டவல்லது எம்பெரு மானுடைய திருமேனியே தான். 'ஸ்வரூபத்துக்கும் ஸ்வரூ பாஶ்ரயமான (ஸ்வரூபத்திலிருக்கிற) குணங்களுக்கும் ப்ரகா ஶகமாய் நிரதிஶய போக்யமாய் காளமேகநிபஶ்யாமமாய் இருக்கும் வடிவு" என்கிறார் பெரியவாச்சான்பிள்ளை.

ஸ்வரூபமும் குணங்களும் போக்யங்கள் தான். ஆனால் வடிவு - திருமேனி - நிரதிஶயபோக்யம் என்கிறார். இதற்கு மேற்பட்ட சிறந்த வேறு ஒரு பொருள் இல்லாதபடி இதுவே பரமபோக்யம் என்றபடி. இத்தைக் கருத்தில் கொண்டுதான் இந்தப் பாட்டின் ஆரம்பத்தில் திருமங்கையாழ்வார் திரு மேனியை 'வடிவு' என்றே கூறலாமானாலும் அப்படிக் கூறாமல்





'திரு' என்ற ஒரு உரிச்சொல்லைச் சேர்த்துத் 'திருவடிவு' என்று அருளியுள்ளார்.

ஆகவேதான் பகவானுடைய ஸ்வரூபம், அதில் உள்ள குணங்கள் இரண்டையும் விட மிகச்சிறந்தது திருமேனி. இந்தப் பொருளை விளக்கும் பெரியவாச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்திகள் திருமேனியை விட போக்யங்களாய் இருக்கின்றன.

'ஸ்வரூபத்தைக் காற்கடைக்கொண்டு (கால்பக்கம் தள்ளி விட்டு, அதாவது அலக்ஷ்யம் செய்துவிட்டு) பற்றவேண்டி யிருக்கும் குணங்கள்.

'உபயத்தையும் (ஸ்வரூபம், திருக்கல்யாண குணங்கள் இரண் டையும்) காற்கடைக் கொண்டு (புறக்கணித்துவிட்டு) பற்ற வேண்டும்படியிறே வடிவின் போக்யதை இருப்பது' என்று.

இது நமக்கு அநுபவத்திலும் கிடைக்கிறது. நாள்தோறும் ஸ்ரீ மாலோலனுடைய திருமேனியழகில் ஈடுபட்டுக் கிடக்கும் நமக்கு அவனுடைய ஆத்மஸ்வரூபத்தையோ அவனுடைய திருக் கல்யாண குணங்களையோ எண்ணிப் பார்க்கவும் தோன்ற வில்லையே.

அவையிரண்டையும் புறக்கணித்துவிட்டு அவன் வடிவழகில் தான் நாள்தோறும் நிமிஷம் தோறும் ஈடுபட்டு வருகிறோம்.

சிரிப்புடன் கூடி அங்காந்திருக்கும் (திறந்திருக்கும்) திருவா யும் திருக்காதுகளின் கீழ் ஜ்வலிக்கும் இரண்டு பெரிய வெள்ளைக் கடுக்கன்களும் நீண்ட திருவபிஷேகமும் (கிரீடமும்), அஞ்சல் என்ற அபயஹஸ்தமும், இவனைத் தழுவி நிற்கும் அல்லிமாதர் ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் சிறிய திருமுகமண்டலமும் எப்பொழுதும் நம் முன்னே வந்து நின்றிடுகின்றன. நின்றடுகின்றன. (அடு கின்றன- ஹிம்ஸிக்கின்றன.)

ஸ்ரீ மாலோலனுடைய திருமேனி அழகு காண்பார் அனை வரையும் ஆழ்வார் நிலைக்கே கொண்டு வந்து விடும்.

இப்படி முதலில் அவதாரிகையில் திருமேனி அழகின் சிறப் பைக் கூறி அப்படிப்பட்ட வடிவை அநுபவிக்கிறார் என்று இந்தப் பாட்டை விளக்குகிறார் பெரியவாச்சான் பிள்ளை.

'திருவடிவில் கருநெடுமால்' என்றும், 'கருவடிவில் செங்கண்ண வண்ணன் தன்னை' என்றும் இருமுறை எம்பெருமான் திருவடிவில் கருநிறம் கொண்டவன் என்பதைக் குறிப்பிடுகிறார் ஆழ்வார். இதனால் இந்தக் கருநிறம் ஒன்றுதான் அவன் கொண்டுள்ள ஸ்வாபாவிகமான நிறம் என்று ஏற்படுகிறது.

கருநெடுமால் - உபய விபூதிக்கும் நிர்வாஹகனான எம்பெரு மான் கருநிறம் கொண்ட விலக்ஷணமான திருமேனியை உடைய வன் என்பது கூறப்பட்டது.

இப்படிப்பட்டவன் ஒவ்வொரு யுகத்திலும் தன் திருமேனி நிறத்தை மாற்றிக் கொள்கிறான் என்கிறார் மேலே.

பொதுவில் இந்தப் பாட்டில் கூறப்படும் விஷயங்களின் சுருக்கம் இதுவே. அதாவது-

க்ருதயுகத்தில் எம்பெருமான் வெண்மை நிறம் கொண்ட திருமேனியை ஏற்றுக்கொள்கிறான். க்ருதயுகத்தில் எம்பெருமா னுடைய திருமேனி நிறம் வெண்மையாக இருக்கும். த்ரேதா யுகத்தில் அவனுடைய திருமேனி நிறம் சிவப்பாக இருக்கும். கலியுகத்தில் அவனுடைய திருமேனி நிறம் கருப்பாக மாறும். இவ்வளவுதான் இப்பாட்டின் ப்ரதாநப் பொருள். இதில் த்வாபரயுகத்தில் எம்பெருமானின் திருமேனி நிறம் என்ன என்பது குறிப்பிடப்படவில்லை. ஆனாலும் திருமழிசை ஆழ்வா ருடைய பாசுரத்தை ஒட்டி த்வாபரயுகத்தில் எம்பெருமானுடைய





திருமேனி நிறம் சிவப்புமின்றி நீலமும் இன்றி பாசியின் பசும் புறம் போல் வெளுத்த பச்சை நிறம் என்று கொள்ள வேண்டும்.

இவ்வளவுதான் நாம் இப்பொழுது இங்கு அறிய வேண்டிய விஷயம். ஆனால் இவ்விஷயத்தை வெளிப்படுத்தும் இப்பாசு ரத்தின் சொற்சுவை-பதங்களின் சேர்த்தியழகு மிகவும் ரஸிக்கத் தக்கதாகும். முதலில் க்ருதயுகத்தைச் சொல்லிவிட்டு அதன் பிறகு தான் அதற்கு அடுத்த த்ரேதாயுகத்தைச் சொல்ல வேண்டும். இந்த க்ரமத்தை மாற்றி முதலில் த்ரேதாயுகத்தை எடுக்கிறார் திருமங்கையாழ்வார்.

''திருவடிவில் கருநெடுமால் சேயன் என்றும் த்ரேதைக்கண்'' என்பதால் எம்பெருமான் த்ரேதாயுகத்தில் சேயன் - சிவப்பு நிறம் உடையவனாகிறான். கருநிறம் கொண்ட திருமேனியை உடைய எம்பெருமான் என்பதால் அவனுக்கு எப்பொழுதும் ஸ்வாபாவிக மாய்-நிரந்தரமாய் இருக்கும் நிறம் கறுப்பு என்றதாயிற்று. ஆக ஶாஸ்வதமான நிறம் கறுப்பு நிறம். த்ரேதாயுகம் வந்ததும் வரும் நிறம் சிவப்பு. இது அவ்வப்பொழுது வந்து போகும் (ஆகந்துகம்) என்பதும் கூறப்பட்டதாகிறது.

ஆக த்ரேதாயுகத்தில் எம்பெருமான் திருமேனி நிறம் சிவப் பாக இருக்கிறது என்ற காரணத்தினால் அந்தச் சிவப்பு நிறம் தான் ஶாஸ்வதமான நிறம் என்று நினைக்கக்கூடாது. த்வாபரயுகம் வந்தால் இந்த நிறம் மாறிவிடும். சேயன்: சிவந்த வடிவுடை யவன். த்ரேதைக் கண் சேயன் = த்ரேதாயுகத்தில் வந்தால் சிவந்த வடிவு உடையவனாய் இருக்கும்.

த்ரேதாயுகத்தில் சிவப்பு நிறம் கொள்ளக் காரணமும் உண்டு என்கிறார் பெரியவாச்சான் பிள்ளை.

ப்ரக்ருதிக்கு மூன்று குணங்கள் உண்டு. அவை ஸத்த்வம், ரஜஸ், தமஸ் எனப்படும். ஸத்த்வகுணம் வெண்மைநிறம்

என்றும் ரஜோகுணம் சிவப்பு நிறம் என்றும், தமோகுணம் கருமைநிறம் என்றும் ஶாஸ்த்ரம் கூறுகிறது.

**க்ருதயுகத்தில்** ஜநங்கள் ஸத்த்வகுணம் நிறைந்தவர்களாக இருப்பார்கள். ஆகையால் அவர்கள் வெண்மை நிறத்தையே தான் விரும்புவார்கள். பக்தர்களுடைய விருப்பத்திற்கு ஏற்ற வாறுதான் எம்பெருமான் தன் திருமேனி நிறத்தையும் கொள் கிறான். ஆகவே க்ருதயுகத்தில் எம்பெருமான் திருமேனி நிறம் வெண்மை.

**த்ரேதாயுகத்தில்** ஜநங்கள் ரஜோகுணம் மிகுந்தவர்களாக இருப்பதால் அவர்கள் சிவப்பு நிறத்தையே தான் விரும்பு வார்கள். ஆகவே அவர்களுடைய விருப்பத்திற்கு ஏற்ப சிவப்பு நிறம் வாய்ந்த திருமேனி கொள்கிறான் எம்பெருமான்.

**த்வாபரயுகத்தில்** ஜநங்கள் ரஜோ குணமும் தமோ குணமும் கலந்தவர்களாயிருப்பார்கள். ஆகையால் அவர்களுடைய விருப் பத்திற்குத் தக்கபடி சிவப்பு மட்டுமின்றி நீலம் மட்டுமின்றிச் சிவப்பும், நீலமும் கலந்த நிறம் உடைய திருமேனியைக் கொள்கிறான் எம்பெருமான்.

**கலியுகத்தில்** ஜநங்கள் பெரும்பாலும் எம்பெருமானை ஸேவிப்பதில் ஆசையற்றவர்களாகவே இருப்பார்கள். ஆகை யால் எம்பெருமான் இந்த நிறத்தில் தான் திருமேனி கொண்டு ஸேவை தரவேண்டும் என்று நிர்பந்திப்பவர் ஒருவருமிலர். ஆகையால் எம்பெருமான் தனக்கு எப்பொழுதும் உள்ள கரு நிறத்தோடேயே அதாவது கருநிறம் கொண்ட திருமேனி யோடேயே ஸேவை தருகிறான்.

இவ்விஷயத்தை இங்குப் பெரியவாச்சான்பிள்ளை அருளிச் செய்யும்படி - க்ருதயுக புருஷர்கள் ஸத்த்வோத்தரர் ஆகையாலே (ஸத்த்வகுணம் மிகுந்தவர்களாகையாலே) வெளுப்பாயிற்று





அவர்கள் உகப்பது. ஆகையாலே அவர்களுடைய ருச்யநு குணமாக (அவர்களுடைய ஆசைக்கு ஏற்ப) ஶுக்ல வர்ணமான வடிவை உடையனாயிருக்கும்.

**த்ரேதாயுகத்திலே** புருஷர்கள் (ஜீவாத்மாக்கள்) ரஜ: ப்ரசுரர் ஆகையாலே அதாவது ரஜோகுணம் மிகுந்தவர்களாகையாலே சிவப்பிலேயாயிற்று ருசி உண்டாயிருப்பது. அந்த ருச்யநு குணமாகச் சிவந்த வடிவைக் காட்டும். ஸத்த்வம் வெளுத்தி ருக்கக் கடவதாய் ரஜஸ் சிவந்திருக்கக் கடவதாய் தமஸ் கறுத்தி ருக்கக் கடவதாயிறே இருப்பது. த்வாபரயுகத்தில் உள்ளார் ரஜஸ் தமோமிஶ்ரராய் (ரஜஸ்ஸூம் தமஸ்ஸூம் கலந்திருப்பவர்களாய்) இருக்கையாலே அவர்களுடைய ருச்யநுகுணமாகச் சிவப்பும் அன்றியிலே நீலமும் அன்றியிலே இருக்கும் வடிவை உடைய வனாய் இருக்கும். (இது இங்குச் சொல்லப்படாவிட்டாலும் ப்ரமாணத்தைக் கொண்டு கூறப்பட்டதாகவே கொள்ள வேண்டும்).

**கலிகாலத்தில்** தன் பக்கல் (எம்பெருமானிடத்தில்) அபிமுக ராய் (நோக்குடையவர்களாய்) ஒரு வர்ண விஶேஷத்திலே ருசி பண்ணுவார் (ஆசை கொள்பவர்) இல்லாமையாலே ஸ்வாபா விகமான வடிவு தன்னைக் கொண்டிருக்கும் என்று அருளுகிறார் பெரியவாச்சான் பிள்ளை.

இங்குக் கவனிக்கவேண்டிய விஷயம் ஒன்று உள்ளது. அதாவது ஸத்த்வகுணம் வெளுத்தும், ரஜோ குணம் சிவந்தும், தமோ குணம் கறுத்தும் இருக்கும் என்று இங்குக் கூறப்பட் டுள்ளது.

உபநிஷத் வாக்யமும் **'अजां एकां लोहितशुक्लकृष्णाम्'** (அஜாம் ஏகாம் லோகித ஶுக்ல க்ருஷ்ணாம்) என்று ப்ரக்ருதி என்ற தத்த்வம் சிவப்பும், வெளுப்பும், கருமையுமாகிற மூன்று

நிறங்களை உடையது. இதற்குக் காரணம் அதில் ரஜஸ்ஸும், ஸத்த்வமும், தமஸ்ஸும் இருப்பதால் என்று கூறியுள்ளது. ஸத்த்வம், ரஜஸ், தமஸ் என்ற க்ரமத்தில் நிறங்களைச் சொல்லும் போது வெளுப்பு, சிவப்பு, கறுப்பு என்றுதான் சொல்ல வேண்டும். ஆனால் ஸ்வதந்த்ரையான உபநிஷத் இந்த க்ரமத்தை மாற்றி ரஜஸ், ஸத்த்வம், தமஸ் என்ற க்ரமத்தைக் கொண்டு சிவப்பு, வெளுப்பு, கருப்பு என்று நிறத்தையும் மாற்றிச் சொல்லு கிறது.

இந்த முறையைத்தான் திருமங்கையாழ்வாரும் இந்தப் பாசுரத்தில் எம்பெருமான் க்ருதயுகத்தில் வெளுப்பான ஶரீரம் கொள்கிறான் என்று முதலில் க்ருதயுகத்தை சொல்ல வேண்டி யிருக்க அவ்வாறு சொல்லாமல் முறையை மாற்றி முதலில் த்ரேதாயுகத்தை எடுத்து இதில் எம்பெருமான் சிவந்த திருமேனியை உடையவனாய் இருப்பான் என்று அருளிச் செய்துள் ளார். இதற்குப்பிறகுதான் க்ருதயுகத்தைப் பற்றி அருளிச் செய்கிறார்.

நாம் இப்பொழுது இங்கு விஷயம் புரிவதற்காக க்ருதம், த்ரேதா, த்வாபரம், கலி என்ற க்ரமத்திலேயே நிறங்களை விளக்கி யுள்ளோம். இவ்வளவோடே இதை நிறுத்திக் கொள்ளலாம்.

இதில் த்வாபரத்தை விட்டு விட்டார் திருமங்கை ஆழ்வார் அதையும் சேர்த்து முழுமையுமாகத் திருமழிசைப்பிரான் திருச்சந்தவிருத்தத்தில் அருளிச் செய்துள்ளார். அதை விளக்கினால் தான் எடுத்துக்கொண்ட விஷயம் நிறைவு பெறும்.

இப்பொழுது இங்கு எடுத்துக்காட்டப்பட்ட திருநெடுந் தாண்டகம் 3வது பாசுரத்தில் யுகங்களை ஆழ்வார் குறிப்பிடும் அழகைப் பெரியவாச்சான் பிள்ளை வெகு அழகாக எடுத்துக் காட்டியுள்ளார். அதை இதற்கும் முன்பாக அநுபவித்து விட்டு





மேலே செல்வோம். நீங்கள் கட்டாயம் இதை விரும்புவீர்கள் என்று எண்ணி அதன் அழகை விளக்குகிறோம் இப்போது.

இந்தப் பாசுரத்தில் திருமங்கையாழ்வார் த்ரேதாயுகம், க்ருதயுகம் என்ற இரண்டு யுகங்களை மட்டும் தான் வெளிப் படையாகக் கூறியுள்ளார். த்வாபரயுகமும் கலியுகமும் இங்குக் கூறப்பட்டதாக நாம் கொள்ள வேண்டும்.

கூறியுள்ள இரண்டு யுகங்களில் முதலில் த்ரேதாயுகத்தை 'திரேதைக்கண்' என்றே ஸ்பஷ்டமாக அதன் பெயரைக் கொண்டே கூறியுள்ளார். ஆனால் க்ருதயுகத்தை அதன் பெயரால் சொல்லவேயில்லை. அந்த யுகத்தில் எம்பெருமான் அவதரித்துச் செய்த செயலைக் கொண்டு அதைக் குறிப்பிடுகிறார்-

'பெருவடிவில் கடல் அமுதம் கொண்ட காலம்' என்று. அத்யத்புதங்களான திருமேனிகள் பலவற்றை எடுத்துக் கொண்டு கடல்கடைந்து அமுதத்தைப் பெற்ற காலம் என்று க்ருதயுகத்தைச் சொல்லி, அந்தக் காலத்தில் வளையுருவாய்த் திகழ்ந்தான்; வளை, சங்கம் போன்ற வெளுத்த திருமேனியுடன் விளங்கினான் என்று.

ஆக அம்ருதம் கடைதல் என்ற அத்யத்புதமான திருவிளை யாடல் நிகழ்ந்த காலம் க்ருதயுகம். ஆகையாலே அதை மிகவும் உகந்து அதைக்கூறி அப்படிப்பட்ட அமுதம் கடைந்த காலம் அது என்று க்ருதயுகத்தைக் கூறியருளுகிறார் திருமங்கைமன்னன்.

பெரியோர்கள் அனைவருமே அன்று மட்டுமன்று. இன்றும் தமக்குப் பிடித்த நிகழ்ச்சி நடந்த காலத்தை அப்படியே கூறாமல் அந்த நிகழ்ச்சியைக் கூறிப்பிட்டே அந்தக் காலத்தைக் குறிப்பிடு வார்கள்.

பாமரர்கள் கூடப் பழைய காலத்தைக் குறிப்பிடும் போது தனக்குக் கல்யாணம் நடந்த காலம் அது என்றோ, தனக்குப் புத்ரன் பிறந்த காலம் அது என்றோ கடந்த காலத்தைக் குறிப்பிடுவார்கள்.

ஸந்யாஸிகள்கூடத் தமக்கு ஸந்யாஸம் கிடைத்த நாள் என்றே கடந்த காலத்தைக் கூறுவார்கள்.

இம்மாதிரிதான் திருமங்கையாழ்வார் எம்பெருமான் அமுதம் கடைந்த செயலை மிக மிக விரும்புபவர். ஆதலால் அந்த நிகழ்ச்சியைக் கூறி 'கடல் அமுதம் கொண்ட காலம்' என்கிறார். இது க்ருதயுகத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சியாகும். அன்று அனைவர்க்குமே அமுதம் கிடைத்தது. மோக்ஷம் தவிர மற்றைய பயன்களை விரும்பும் தேவதைகளுக்குச் சாவா மருந்து எனப்படும் அம்ருதம் கிடைத்தது. ஸமுத்ரம் கடைந்த எம்பெருமானுக்கும் அமுதில் வரும் பெண்ணமுதம் என்று கொண்டாடும்படி இருக்கிற பெரியபிராட்டி என்கிற சிறந்த அமுதம் கிடைத்தது.

நமக்கெல்லாம் கூட இவையிரண்டையும் விடச் சிறந்த அமுதம் ஒன்று கிடைத்தது. அது என்ன தெரியுமா? நால்தோள் அமுதமேயாகும். ஸமுத்ரத்தைக் கடையும் போது நான்கு திருக்கரங்களைக் கொண்டு கடைந்தான். அந்த நிலையில் எம்பெருமான் பரமபோக்யனாய் இருந்தமையால் அவனை நால்தோள் அமுதம் என்கிறார் ஆழ்வார். இப்படி எல்லோரும் அமுதம் பெற்ற காலம் அந்த க்ருதயுகம் ஆதலால் இதையிட்டு அந்தக் காலத்தைக் குறித்தபடி.

இங்கு இந்த அர்த்தத்தை விளக்கும் பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீ ஸூக்திகள் பின்வருமாறு:- தேவதைகளுக்கும் தனக்கும் (எம்பெருமானுக்கும்) எனக்கும் (ஆழ்வாருக்கும்) கடலிலே அமுதத்தை உண்டாக்கின காலம். தேவதைகள் பந்தகமான (ஸம்ஸார பந்தத்தைத் தருவதான) அம்ருதத்தைக் கொண்டு போனார்கள். தான் (எம்பெருமான்) பெரியபிராட்டியாகிற அம்ருதத்தை ஸ்வீகரித்தான். விண்ணவர் அமுதுண அமுதில் வரும் பெண்ணமுதுண்டான்.

இவையிரண்டுமன்று இவர்க்கு போக்யம். 'நால்தோள் அமுது' என்கிறபடியே கையும், திருவாழியுமாய்க் கொண்டு





கடல் கடைந்தவனேயாயிற்று இவர்க்கு போக்யம். தேவதைகளும் தங்கள் அபிமதம் பெற்றார்கள். அவனும் தன் அபிமதம் பெற்றான். நானும் என் அபிமதம் பெற்றேன்.

இப்படி எல்லோருக்கும் அபிமதம் (விரும்பியது) கிடைத்த காலம் அந்த க்ருதயுகம் என்று இந்த நிகழ்ச்சியை முன்னிட்டே க்ருதயுகத்தைக் குறிப்பிட்டருளுகிறார் ஆழ்வார்.

இதற்கு மிகப் பொருத்தமான உதாஹரணம் ஒன்றை இங்குப் பெரியவாச்சான்பிள்ளை எடுத்துக் காட்டுகிறார்.

ஸ்ரீரங்கத்தில் வாழும் நல்லார்கள் தங்களிடம் யாராவது வந்து இந்தக் கார்யத்தைச் செய்து முடிக்க நீண்டகாலம் ஆகும். தற்போது அடுத்தடுத்து ப்ரஹ்மோத்ஸவங்கள் நடைபெற்று வருகின்றன. பங்குனி மாதத்தில் பங்குனி உத்தரத்திற்குச் சேர ப்ரஹ்மோத்ஸவம் நடைபெறும். ஆகப் பங்குனி மாதம் முடிந்த பிறகு நீர் சொன்ன கார்யத்தைச் செய்து தருகிறோம் என்று சொல்லவேண்டியிருக்க-அந்த நல்லோர்கள் அப்படிச் சொல்லாமல் பெரிய திருநாளுக்குப் பிறகு அந்தக் கார்யத்தைச் செய்து தருகிறோம் என்று கூறுவார்களாம். இது பெரியதிருநாளிலே அவர்களுக்கு உள்ள ஆர்வத்தைக் காட்டுகிறது அன்றோ!

இங்குள்ள சுவை மிகுந்த வ்யாக்யாந ஸ்ரீ ஸூக்திகள் 'பெரிய திருநாளிலே ஆதரம் உடையார் பங்குனி மாஸத்துக்குப் பின்பு கார்யம் செய்கிறோம் என்ன ப்ராப்தமாயிருக்க, பெரிய திருநாளுக்குப் பின்பு கார்யம் செய்கிறமே என்னுமாப்போலே' என்று.

த்ரேதாயுகத்தில் எம்பெருமான் ஸ்ரீராமனாக அவதரித்துக் கடலில் அணைகட்டி அதை அடைத்துள்ளான். க்ருதயுகத்தில் கடல் கடைந்தான் எம்பெருமான். இந்த இரண்டு செயல்களும் கடலைப் பற்றியவைதான். ஆனால் ஆழ்வாருக்குப் பிடித்தது

கடலைக்கடைந்தது தான். அதனால் தான் கடல் அமுதம் கொண்ட காலம் என்றார். கடலை அடைத்த செயல் அவ்வளவாகப் பிடித்தமில்லாமையால் வெறுமனே திரேதைக்கண் என்றருளினார் என்கிறார் அரும்பத உரைகாரர்.

இப்பாசுரத்தில் சொற்களின் சுவையை அநுபவிக்கப் புகுந்தால் கட்டுரை ஒரு பெரிய பாரதம் ஆகிவிடும். ஆகவே இத்துடன் இதை நிறுத்திவிட்டு எடுத்த விஷயத்தை விவரிப் போம்.

ஆக க்ருதயுகத்தில், அதாவது கடல் அமுதம் கொண்ட காலத்தில் வளையுருவாய், சங்கின் நிறம் உடையவனாய் விளங்கினான். த்ரேதாயுகத்தில் சிவந்த திருமேனி கொண்டு விளங்கினான். த்வாபரயுகத்தில் சிவப்பும் நீலமும் கலந்த நிறம் கொண்ட திருமேனியுடன் விளங்கினான். கலியுகத்தில் கருநிறம் (நீல நிறம்) கொண்ட திருமேனியுடன் விளங்கினான். இதுதான் இவனுடைய ஸ்வாபாவிகமான-நிரந்தமான நிறம்.

இப்படிப் பற்பல நிறம் கொள்வதற்குக் காரணமும் முன்பு கூறப்பட்டது. அதாவது க்ருதயுகத்தில் உள்ளவர்கள் ஸத்த்வ குணம் மிகுந்தவர்களாதலால் ஸத்த்வ குணத்தின் நிறம் வெளுப்பு ஆகையால் அவர்கள் விரும்புவது வெளுப்பு நிறத்தையே யாதலால் அவர்களுடைய விருப்பத்திற்கு ஏற்ப அந்த வெளுப்பு நிறத்தையே கொண்டான். த்ரேதாயுகத்தில் இருப்பவர் ரஜோ குணம் மிகுந்தவர்களாதலால் அவர்கள் சிவப்பு வர்ணத்தையே விரும்புபவர்களாதலால் எம்பெருமானும் அவர்களுடைய விருப்பத்திற்கு ஏற்ப. அந்தச் சிவப்பு நிறத்தையே தன் திருமேனிக்கும் கொண்டான். த்வாபரயுகத்தில் இருப்பவர்கள் ரஜஸ்ஸூம் தமஸ்ஸூம் கலந்தவர்களாயிருப்பவர்கள் ஆகையால், அவர்களுடைய விருப்பத்திற்கு ஏற்பச் சிவப்பும், கருப்பும் கலந்த நிறத்தையே தன் திருமேனி நிறமாகக் கொண்டான்.





கலியுகத்தில் ஏன் கரு நிறம் கொண்டான்? என்ன காரணம்? இந்தக் கேள்விக்கு முன்பு கூறியது போல் காரணம் கூறமுடியாது. ஏனென்றால் கலியுகத்தில் பொதுவில் எம்பெருமானை ஸேவிப் பதிலேயே விருப்பம் இல்லாதவர்களாகத்தான் ஜநங்கள் இருப்பார்கள்.

**कलौ जगत्पतिं विष्णुं सर्वस्रष्टारं ईश्वरम् ।**

**नार्चयिष्यन्ति मैत्रेय! पाषण्डोपहताः जनाः ॥**

**கலௌ ஜகத்பதிம் விஷ்ணும் ஸர்வஸ்ரஷ்டாரம் ஈஶ்வரம் ।**

**நார்ச்சயிஷ்யந்தி மைத்ரேய! பாஷண்டோபஹதா: ஜநா: ॥**

'எம்பெருமான் பெருமை அறியாமல் மற்றைய தேவதைகளோடு எம்பெருமானை ஒப்பிட்டும் ஒன்றாக்கியும் பேசுபவர்கள் பாஷண்டிகள். கலிகாலத்தில் இவர்கள் மிகுந்திருப் பார்கள். இவர்களால் கலக்கப்பட்ட ஜநங்கள் ஜகத்தை எல்லாம் ஸ்ருஷ்டிக்கும் விஷ்ணுவை அர்ச்சிக்க மாட்டார்கள்' என்று அன்றே ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் ஸ்ரீ பராஶர மஹர்ஷி கூறியுள்ளார்.

மைத்ரேய! கலிகாலத்தில் மக்கள் படும்பாடு பாராய்! இக்காலம் தட்டாதவன் - அதாவது இந்தக் கலிகாலத்தின் தோஷம் தீண்டாதவன் - நீ ஒருவன் தான் உள்ளாய் என்று தன் ஶிஷ்யனான மைத்ரேயனைக் கொண்டாடுகிறார். ஆகவே, கலிகாலத்தில் ஜநங்கள் எம்பெருமானை விரும்பாமையால் தன்னுடைய ஸ்வாபாவிகமான - இயற்கையான ரூபத்தோடு அதாவது கருநிறத் தோடேயே இருக்கிறான்.

ஜநங்கள் எம்பெருமானை ஸேவிப்பதில் விருப்பம் கொண்டு, எம்பெருமானே! 'நீர் இந்த ரூபத்தில் இந்த நிறத்தில் ஸேவை தரவேண்டும்' என்று விரும்பினால் தான் பகவான் அவர்

கள் விரும்பும் நிறத்தைக் கொள்வான். அப்படி அவர்கள் ஒன்றை யும் விரும்பாமையால் தன்னுடைய இயற்கை நிறத்தோடேயே இருந்துவிடுகிறான்.

இவ்விஷயத்தையும் பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீ ஸூக்தியி லிருந்தே அறியலாம். அதாவது. 'கலிகாலத்தில் தன் பக்கல் அபி முகராய் ஒருவர்ண விஶேஷத்திலே ருசி (ஆசை) பண்ணுவார் இல்லாமையாலே ஸ்வாபாவிகமான வடிவு தன்னைக் கொண்டி ருக்கும்' என்று.

உலகத்திலும் பர்த்தா இம்மாதிரி அலங்காரத்தில் தன் பத்நியைப் பார்க்க விரும்பினால் அதன்படி அலங்காரம் செய்து கொள்வாள் பத்நீ. பர்த்தா அவளைப் பார்ப்பதையே வெறுக் கும்போது அவள் தன் இயற்கையழகோடேயே இருந்து விடு வாள். அவ்வாறே! எம்பெருமானும் பக்தர்களின் விருப்பப் படியே நடந்துகொள்வான். அவர்கள் விரும்பாதபோது தன் இயற்கை நிறத்தோடேயே இருந்துவிடுகிறான்.

திருமங்கையாழ்வாருடைய ஸ்ரீ ஸூக்திகளே இவ்விஷயத் தில் ப்ரபல ப்ரமாணமாகிறது. இவர் எம்பெருமானை நேரில் கண்டதுபோல் ஒருவரும் கண்டதில்லை. இந்த ஆழ்வாரே இப் பாசுரத்தின் முடிவில் இவ்வாறு அருளிச்செய்கிறார்.

'கருவடிவிற் செங்கண்ண வண்ணன் தன்னைக் கட்டுரையே யார் ஒருவர் காண்கிற்பார்?' என்று.

ஸ்வாபாவிகமான வடிவை, அதாவது கருநிறமும் சிவந்த கண்ணும் கொண்ட திருமேனியையே எனக்குக் காட்டினான்.

'யார் ஒருவர் காண்கிற்பார்? நிர்ஹேதுகமான பகவத் அநுக்ரஹத்தாலே நான் கண்டு பேசினாற் போலே எவர்தான் கண்டு பேசவல்லார்? அப்படிக் கண்டு பேசியவர் எவராவது உண்டா! ஹே-மனஸ்ஸே! நீயே சொல்லு' என்கிறார். வேதங்கள்





கூட நான் கண்டு பேசினபடி பேசவில்லை. அவனை நேரில் காணுமலேயே 'நீல தோயத மத்யஸ்தா' கருமேகத்தைத் தன் நடுவில் கொண்ட மின்னல் போன்றவன் எம்பெருமான் என்று தூரத்தில் இருந்து கொண்டே வேதங்கள் வர்ணித்துள்ளன. 'நீலம் உண்ட மின்னன்ன மேனிப் பெருமான்' என்று நம்மாழ்வார் திருவிருத்தத்தில் எம்பெருமான் வடிவை வர்ணித்துள்ளார்.

நீல மேகத்தை விழுங்கிய மின்னல் போன்ற வடிவுடையவன் எம்பெருமான் என்பதே இதன் பொருள். இப்படிச் சொன்ன நம்மாழ்வாரும் நான் எம்பெருமானைக் கண்டாற் போல் காண வில்லை. அவர்கள் இயற்கையிலேயே மற்றைய விஷயங்களை வெறுத்தவர்கள். அதிகமான வைராக்யம் உடையவர்கள். எம் பெருமானை ஸேவிக்க வேண்டும் என்ற ஆர்வமும் அவர்களுக்கு இயற்கையிலேயே இருந்தது. இதனால் அவர்கள் எம்பெரு மானைக் கண்டனர். அவர்களுக்கு எம்பெருமான் பொதுவில் தன்னைக் காட்டினான். எனக்குக் காட்டித்தந்தது போல் அவர்களுக்குத் தன்னை முழுவதும் காட்டவில்லை.

தன்னிடத்தில் எப்பொழுதுமே ஆசைகொண்ட பர்த்தாவை பத்நீ வஶீகரிக்க வேண்டிய அவஶ்யமும் இல்லை. அதற்காகத் தன்னை அதிகமாக அலங்கரித்துக் கொள்ள வேண்டியதும் இல்லை.

தன்னிடத்தில் விமுகனாய் இருக்கும் பர்த்தாவைத் தான் வஶீகரிக்க வேண்டும். அதற்காகப் பத்நீ தன்னை மிகைப்படுத்தி அலங்கரித்துக் கொள்ள வேண்டும். இம்மாதிரி வகுப்பைச் சார்ந்தவன் நான் என்கிறார் திருமங்கையாழ்வார். இவர் தன்னைப் பற்றிச் சொல்லியுள்ளதை நாம் எடுத்து எழுதவும் சொல்லவும் கூசுகிறோம். இவர் அருளுகிறார். 'எனக்கு இயற்கையிலே எம்பெருமானிடம் ஈடுபாடு இல்லை. அவனிடம் நெருங்கா மலே விமுகனாகவே அதாவது பராங்முகனாகவே இருந்தேன்.

இதற்கு விபரீதமாக இதர விஷயங்களிலேயே ஈடுபட்டிருந்தேன். இப்படிப்பட்ட என்னை வஶீகரிக்க நினைத்தான். பொதுவாகத் தன் அழகைக் காட்டினால் நான் எளிதில் ஈடுபடமாட்டேன். அதற்காகத் தன் வடிவழகு முழுவதையும் சிறப்பாக விஶேஷித்துக் காட்டி என்னைத் தன் வஶப்படுத்த நினைத்த எம்பெருமான் அப்படியே சிறப்பாகத் தன் வடிவைக் காட்டினான். அதிலிருந்து அவனையே விரும்பும் பக்தனாக மாறினேன். ஆகையால் நான் தான் எம்பெருமானைப் பற்றியும், அவன் வடிவழகு, அதன் நிறம் முதலியவற்றைப் பற்றியும் பேசவல்லவன். நான் கண்டால் போல் எவர் கண்டார் மனமே! நீ நன்கு ஆராய்ந்து பார்த்துச் சொல் என்று தன் மனதைப் பார்த்து - கட்டுரை, யார் ஒருவர் காண்கிற்பாரே! எல்லோரும் பேசலாம். ஆனால் என்னைப் போல் எம்பெருமானை எவராலும் காண முடியாது-என்கிறார்.

இங்குப் பெரியவாச்சான் பிள்ளை:-

'வேதங்களும் ஈஶ்வரனுடைய வடிவு இருக்கும்படியை 'நீல தோயதமத்யஸ்தா' **(नीलतोयदमध्यस्था)** என்று கடக்க நின்று பேசிப் போம். இத்தனையல்லது கண்டதில்லை.

'நீலம் உண்ட மின்னன்ன மேனிப்பெருமான்' என்றவர்களும் நான் கண்டாற்போலே கண்டார்களோ! நைஸர்கிகமான (இயற்கையான) விரக்தியையும், நைஸர்கிகமான ப்ரேமத்தையும் உடையராய் அன்றோ அவர்கள் கண்டது. நைஸர்கிகமான பகவத் வைமுக்யத்தையும் அவிஷய ப்ராவண்யத்தையும் உடைய நான் அவ்வாறு இவ்வாறாய்க் கண்ட காட்சிக்கு ஸத்ருஶம் உண்டோ? ஆன பின்பு நான் கண்ட காட்சியை வேதங்கள் கண்டதோ! ஆழ்வார்கள் கண்டார்களோ?'' என்று சவால் விடுகிறார் (மார் தட்டிப் பேசியருளுகிறார்) திருமங்கையாழ்வார். ஆகவே தான் இவருடைய ஸ்ரீ ஸூக்தியை முக்யமாகக் கொண்டு எம்பெருமானுடைய திருமேனி நிறம் விளக்கப்பட்டது.





உலகத்தில் உள்ள கறுப்பு- சிவப்பு- வெளுப்பு ஆகிய இந்த முக்குணங்களும் ப்ரக்ருதியின் குணங்களான தமஸ், ரஜஸ் ஸத்த்வம் என்ற மூன்று குணங்களால் உண்டானது. எம்பெருமான் அந்தந்த யுகத்திற்கு ஏற்றவாறு கொள்ளும் சிவப்பு, வெளுப்பு ஆகியவை பக்தர்களின் விருப்பத்திற்கு ஏற்பத் தன் ஸங்கல்பத்தினால் கொள்ளும் அப்ராக்ருதமான குணங்களாகும். அவனுடைய திருமேனியும் அப்ராக்ருதம்.

இந்தப் பாகுபாடு அறியாமல் இதர மதஸ்தர்கள் எம்பெருமான் திருமேனி நிறமான கருப்பைக் கொண்டு ஶ்ரிய: பதியான எம்பெருமானைத் தாமஸ மூர்த்தி என்று ப்ரபல பத்ரிகையில் கூசாமல் எழுதுவதும் அதை அப்படியே பலரும் கொள்வது மாகிற அநீதிகள் நிகழ்கின்றன. பகுத்தறிவுடையார் இம்மாதிரியான அநீதிகளுக்குத் தம் நெஞ்சில் இடம் தரமாட்டார்கள். கருநிறமே எம்பெருமான் திருமேனியின் நிரந்தரமான நிறம் என்பதை இந்தத் திருநெடுந்தாண்டகத்திலேயே அடிக்கடி ஸாதித்தருள்கிறார் ஆழ்வார். 13வது பாட்டில் 'கார்வண்ணம் திருமேனி' (இவனுடைய திருமேனி மேக வண்ணம் கொண்டது) என்றும், 24வது பாட்டில் 'இலங்கொலி நீர்ப்பெரும் பௌவம் மண்டியுண்ட பெருவயிற்ற கருமுகிலே ஒப்பர் வண்ணம்' (பெருங்கடலின் நீரை மிச்சம் இன்றி மணலோடு பருகி வயிறு பருத்த மேகத்தைப் போன்ற திருமேனி உடையவன் எம்பெருமான்) என்றும் பல தடவைகள் அருளிச் செய்துள்ளார்.

இப்போது இங்குத் திருநெடுந்தாண்டகம் 25வது பாசுரத்தையும் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். எம்பெருமான் தனக்குக் காட்டின திருமேனியை நமக்கும் காட்டியருளுகிறார் ஆழ்வார். இதில் 'மின்னிலங்கு திருவுருவு' என்று.

மின் இலங்கு திரு உருவு:- மின்னல்போல் விளங்குகின்ற திருமேனி. மேகத்தின் நிறம் கருப்பு, மின்னலின் நிறம் ஸ்வர்ணம்

போன்ற மஞ்சள் நிறம். இதைக்கொண்டது எம்பெருமான் திருமேனி. என்கிறார் இதில். இது முன்பு கூறியதற்கு முரணானது என்று தோன்றுகின்றதன்றோ! இந்தக் கேள்விக்குப் பெரியவாச் சான்பிள்ளை மூன்று வகைகளில் பதில்கள் கூறுகிறார். இப்பொழுது நாம் இங்கு 2வதான பதிலையே அநுபவிப்போம். அதாவது: முன் கூறியபடி எம்பெருமான் திருமேனி நிறம் கறுப்புதான். அதை மாற்றிக்கொள்ள வேண்டாம். ஆனால் மின்னலைப் போன்றது என்று சொல்வது எப்படி? என்ற கேள்வி வரும். அதற்குப் பதில்-இந்த மின்னல் நிறம் திருமேனியினுடையதன்று. எம்பெருமான் திருக்கையில் எப்பொழுதும் சக்ரத்தை ஏந்தியுள்ளான் அன்றோ! அந்தச் சக்ரத்தாழ்வான் கோடி ஸூர்யன்களுக்கு ஸமமான காந்தி உடையவன் என்பதும் ப்ரஸித்தம். பாலஸூர்யனுடைய நிறமும் மின்னலுடைய நிறமும் அநேகமாக ஒத்திருக்கும். அப்படிப்பட்ட அந்தச் சக்ரத்தாழ்வானுடைய ஸ்வர்ணகாந்தி, கருப்பு நிறம் உடைய எம்பெருமான் திருமேனி முழுவதும் பரவி நிற்கிறது. அப்பொழுது அவன் திருமேனியின் கருப்பு நிறம் உள்ளடங்கி சக்ரத்தாழ்வானுடைய பொன்நிறம் மேலாக நின்று ஸேவை தருகிறது. இதனால் மின்னல்போன்று விளங்குகின்றது எம்பெருமான் திருமேனி.

ஆக ஸ்வாபாவிகமான கருநிறத்தைக் கொண்டு முகிலுருவம் என்றும் 'கார்வண்ணம்' என்றும் 'பெருவயிற்ற கருமுகிலே ஒப்பர் வண்ணம்' என்றும் அருளிச் செய்தார் திருமங்கை ஆழ்வார். கிட்ட நெருங்கி நின்று ஸேவித்தால் கருநிறத்தின் மீது பரவியுள்ள சக்ரத்தாழ்வானுடைய பொன் நிறம் விளங்கும். இதன் காரணமாக 'மின்னிலங்கு திருவுருவு' என்று அருளினார். இதில் முரண்பாடு ஒன்றுமே இல்லை. இங்குப் பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீ ஸூக்திகள்: காளமேகத்தை அருணகிரணத்தாலே வழியவட்டினாற் போலே திருவாழியாழ்வானுடைய தேஜஸ் திருமேனி எங்கும் ஒக்கப் பரவி இருக்கையாலே சொல்லுகிறது 'மின்





இலங்கு திருவுருவு' என்று. மிக்க கவனத்துடன் ரஸிக்க வேண்டிய விஷயம் இது.

ஸ்ரீ பாஷ்யகாரர் அருளிய வேதார்த்த ஸங்க்ரஹ வ்யாக்யானத்திலும் இவ்வாறு கூறப்பட்டுள்ளது. உபநிஷத்துக்களில் ஒரு இடத்தில் 'நீலதோயதமத்யஸ்தா' என்று மேகவர்ணமான கருநிறம் உடைய திருமேனி கொண்டவன் எம்பெருமான் என்று கூறப்பட்டுள்ளது. மற்றும் சில இடங்களில் 'ஆதித்யவர்ணன்' ஸூர்யனுடைய நிறம் போன்ற நிறம் உடையவன் என்றும், 'வித்யுத்வர்ணன்' மின்னல் நிறம் உடைய திருமேனி கொண்டவன் என்றும் கூறப்பட்டுள்ளது. இவற்றைப் பார்க்கும்போது எம்பெருமானுடைய திருமேனி நிறம் கருப்பா? சிவப்பா? என்ற ஸந்தேஹம் வரும். இதற்குப் பதில் கூறுகிறார் உரையாசிரியர் தக்கதோர் உதாஹரணத்தைக் காட்டி. அதாவது ஒளி மிகுந்த மரகதப் பச்சைக்கல் ஒன்று உள்ளது. அதன் மீது பால ஸூர்யனுடைய சிவந்த கிரணம் பட்டு முழுவதும் பரவி நிற்கிறது. அப்பொழுது அந்த பச்சை மரகதக் கல்லின் நிறம் என்ன/ பச்சையா? சிவப்பா? இரண்டும் கலந்த ஒரு அபூர்வமான நிறம். இரு நிறங்களும் சேர்ந்து காணப்படுகின்றன. இதில் பச்சை ஸ்வாபாவிகம். அதாவது அந்த மரகதக்கல்லின் இயற்கை நிறம். சிவப்பு ஸூர்யகிரணத்தினுடையது. இரண்டும் சேர்ந்து அபூர்வ நிறமாகத் தோற்றம் தருகின்றன. அவ்வாறே தான் எம்பெருமான் திருமேனி நிறமும். இதை உரையாசிரியர்:-

**'तथा च भगवद्विग्रहः बालातपानुलिप्तमरकतगिरिनिभो विभाति' ।**

ததா ச பகவத்விக்ரஹ: பாலாதபானுலிப்த மரகத கிரிநிபோ விபாதி ।

என்று எடுத்துக் காட்டியுள்ளார்.

இங்கு எம்பெருமானுடைய கருப்பு நிறம் கொண்ட திரு

மேனியில் சக்ரத்தாழ்வானுடைய பொன்னிறம் படிந்து நிற்கிறது. இவற்றுள் கருநிறம் ஸ்வாபாவிகம்-இயற்கையில் உள்ளது. இதன் காரணமாக 'நீலதோயதம்' என்றும் 'கார்வண்ணன்', 'முகிலுருவம்', 'முகிலே ஒப்பர் வண்ணம்' என்றும் மேகத்திற்கு ஒப்பாகக் கூறுப்படுகிறது. பொன்நிறம் சக்கரத்தாழ்வானுடையது. இது திருமேனியின் கருமை நிறத்தின் மீது படிந்துள்ளதால் இதைக் கொண்டு 'ஆதித்யவர்ணன்' என்றும் 'வித்யுத்வர்ணன்' என்றும் 'மின் இலங்கு திருஉருவு' என்றும் சொல்லப்படுகிறது. இரண்டு விதமாகக் கூறுவதும் பொருத்தம் உடையதே. முரண்பாடு கிடையாது.

இங்கு 'பாலாதபானுலிப்த மரதக கிரிநிப:' என்ற வேதார்த்த ஸங்க்ரஹ உரை வாக்யமும் 'காளமேகத்தை அருணகிரணத்தாலே வழியவட்டினாற்போலே திருவாழியாழ்வானுடைய தேஜஸ் திருமேனி எங்கும் ஒக்கப் பரவி இருக்கையாலே 'மின்னிலங்கு திருவுருவு' என்று சொல்லுகிறது' என்ற ஸ்ரீஸூக்தியையும் ஒப்புநோக்க வேண்டும்.

'எம்பெருமானுக்கு ஒரு பக்கத்தில் எழுந்தருளியிருக்கும் பெரியபிராட்டியாரின் அதாவது மஹாலக்ஷ்மியின் திருமேனி நிறமான ஸ்வர்ண வர்ணமும், பெருமாள் திருமேனியில் பரவுகிறது. மற்றொரு பக்கத்தில் இருக்கும் ஸ்ரீ கோதாதேவியின் திருமேனி நிறமான கரும் பச்சையும் பெருமாள் திருமேனியில் பரவி நிற்கிறது. பொன்நிறமும் கரும்பச்சை நிறமும் ஒரு வஸ்துவின் மேல் பரவினால் அந்த வஸ்து இரண்டு நிறங்கொண்டு மயில் கழுத்து போல் தானே காட்சி தரும். அவ்வாறே தான் எம்பெருமான் திருமேனியும்' என்று அருளியுள்ளார் ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் கோதாஸ்துதியில்-

**'दूर्वादलप्रतिमया तव देहकान्त्या गोरोचनारुचिरया च रुचेन्दिरायाः ।**
**आसीदनुज्झितशिखावलकण्ठशोभं माङ्गल्यदं प्रणमतां मधुवैरि गात्रम् ॥**





**தூர்வாதளப்ரதிமயா தவ தேஹகாந்த்யா**
**கோரோசநாருசிரயா ச ருசேந்திராயா: ।**
**ஆஸீத் அநுஜ்ஜித ஶிகாவல கண்டஶோபம்**
**மாங்கல்யதம் ப்ரணமதாம் மதுவைரிகாத்ரம் ॥**

இந்த ஶ்லோகத்தில் பிராட்டியினுடைய திருமேனி நிறமான ஸ்வர்ணவர்ணமும்; கோதா தேவியின் திருமேனி நிறமான பச்சை நிறமும் எம்பெருமான் திருமேனியில் பட்டு எம்பெருமான் திருமேனி மயிற்கழுத்துப் போல் இரண்டு நிறங்கொண்டு விளங்குகின்றது என்று கூறப்பட்டது.

இதுவரை எம்பெருமானுடைய திருமேனி நிறமான கறுப்பு நிறம், சக்ரத்தாழ்வானுடைய மின்னல் போன்ற மஞ்சள் நிறத்துடன் கலந்து ப்ரகாசிக்கிறது என்று கூறப்பட்டது என்ற வ்யத்யாஸம் அறியத் தக்கது. முன்னதில் இரண்டு நிறங்களுமே எம்பெருமானுடையவை அல்ல. இதில் ஒன்று (கறுப்புநிறம்) எம்பெருமானுடையது ; மஞ்சள் நிறம் மட்டும் சக்ரத்தாழ்வானுடையது.

ஆக எம்பெருமான் திருமேனி நிறம் கருப்புதான். சிவப்பு, வெளுப்பு முதலான மற்றைய நிறங்கள் அவ்வப்பொழுது பக்தர்களின் விருப்பத்திற்கு ஏற்ப எம்பெருமான் திருமேனிக்கு மாறிமாறி வரும் நிறங்களாகும்.

---

## 7. யுகம் தொறும் மாறும் மேனி வண்ணம்

**युगभेदाद्वर्णभेदः व्यूह एवेति निश्चितः ।**
**तत्त्वानां मातृका-तत्त्वत्रयमित्यभिविश्रुतौ ॥**
**ग्रन्थौ दर्शयतश्चेमं दुर्विज्ञेयं कृतात्मभिः ।**
**विवृणोति तमेवार्थं नारायणयतीश्वरः॥**

**யுகபேதாத் வர்ணபேத: வ்யூஹ ஏவேதி நிஸ்சித: ।**
**தத்த்வாநாம் மாத்ருகா-தத்த்வத்ரய மித்யபி விஸ்ருதௌ ॥**
**க்ரந்தௌ தர்ஸயதஸ்சேமம் துர்விஜ்ஞேயம் க்ருதாத்மபி: ।**
**விவ்ருணோதி தமேவார்த்தம் நாராயணயதீஸ்வர: ॥**

எம்பெருமானுடைய ஸ்வாபாவிகமான நிறம் கறுப்புதான் என்பது திருமங்கை ஆழ்வார் ஸ்ரீ ஸூக்திகள் கொண்டு விளக்கப் பட்டது. ஸ்ரீ ஆண்டாளும் 'ஊழி முதல்வன் உருவம் போல்' என்று ஜகத்துக்குக் காரணமான எம்பெருமான் திருமேனி நிறம் கருமை தான் என்பதை அருளியுள்ளார்.

ஸ்வாமி நம்மாழ்வாரும் 'முந்நீர் ஞாலம் படைத்த எம்முகில் வண்ணனே' (திருவாய்மொழி 3.2.1) என்று ஜகத்தை ஸ்ருஷ்டிக் கும் எம்பெருமான் மேகம் போன்ற கருத்த திருமேனியோடே கூடியவனாய் இருக்கிறான் என்று அருளிச் செய்தார். ஆக, 'பரமபுருஷனுடைய - பரவாஸுதேவனுடைய - ஜகத் காரண மாய் இருப்பவனுடைய - திருமேனி கருநிறம் கொண்டிருக்கும் என்று ஏற்படுகிறது. இது 'தத்த்வத்ரயம்' என்ற ரஹஸ்யத்தில் ப்ரஸித்தம்.





இந்தக் கரு நிறம் சிற்சில ஸமயங்களில் மாறிவிடும் - திருமே னிக்கு வேறு நிறம் வந்துவிடும் என்பதைக் காரணங்களுடன் சென்ற ஸஞ்சிகையில் விளக்கியுள்ளோம்.

இனி, ஸ்வாமி ஸ்ரீ தேஸிகன் அருளிச் செய்த 'தத்த்வமாத்ருகை, தத்த்வத்ரயசுளகம்' ஆகிய ரஹஸ்யங்களில் இது பற்றி அருளியுள்ள விஷயங்களை இங்கு விவரிப்போம்.

தத்த்வமாத்ருகையில் - "வ்யூஹங்கள் ஆவன- இப்பரரூபம் அடியாகப் பூர்வபூர்வத்திற்கு உத்தரோத்தரம் கார்யமாகக் கொண்டு பிறந்து - 'முன்னை வண்ணம் பாலின் வண்ணம்', 'பாலின் நீர்மை செம்பொன் நீர்மை' இத்யாதிகளிற்படியே க்ருத-த்ரேதாதியுகங்கள் தோறும் மாறி மாறி வரும் நிறங்களை உடைத்தான ரூபங்கள்" என்று அருளியுள்ளார். பரவாஸுதேவ ரூபத்திலிருந்து வ்யூஹம் பிறக்கிறது. இவற்றுள் வாஸுதேவ னிடம் இருந்து ஸங்கர்ஷணன், இவனிடமிருந்து ப்ரத்யும்நன், இவனிடமிருந்து அநிருத்தன் என்ற க்ரமத்திலே இந்த வ்யூஹங் கள் உண்டாகின்றன.

க்ருதயுகம், த்ரேதாயுகம் முதலான யுகங்களிலும் மாறி மாறி வரும் ரூபங்களை உடையனவாயிருக்கும் இந்த வ்யூஹ மூர்த்தி கள் என்பது இதன் பொருள்.

இவ்விஷயத்தில் ஆழ்வார்களுடைய பாசுரங்களை ப்ரமா ணங்களாகக் காட்டியருளுகிறார் ஸ்வாமி ஸ்ரீ தேஸிகன்.

திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் அருளியுள்ளது பின்வருமாறு:-

**"முன்னைவண்ணம் பாலின் வண்ணம் முழுதும் நிலைநின்ற**
**பின்னை வண்ணம் கொண்டல் வண்ணம் வண்ணம் எண்ணுங்கால்**
**பொன்னின் வண்ணம் மணியின் வண்ணம் புரையும் திருமேனி**
**இன்னவண்ணம் என்று காட்டீர் இந்தளூரீரே"-**

**(பெரிய திருமொழி - 4.9.8)**

இந்தப் பாட்டில் திருவிந்தளூர் என்ற திவ்யதேஶத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானிடத்தில், 'உம்முடைய திரு மேனியை ஸ்வாபாவிகமான நிறத்தோடே காட்டித் தந்தருள வேண்டும்' என்று ப்ரார்த்திக்கிறார் ஆழ்வார்.

அவனுடைய திருமேனிக்குப் பல நிறங்கள் இருப்பதால் எது எப்பொழுதும் உள்ள நிறம் என்பதை எளிதில் யாவரும் அறியார். ஶாஸ்த்ரம் கொண்டுதான் அறிய வேண்டும். ''அப்படியின்றி நீரே நான் கண்ணாலேயே கண்டு அநுபவிக்கும்படிக் காட்டியருள வேண்டும்.'' என்கிறார் திருமங்கையாழ்வார்.

முன்னை வண்ணம் பாலின் வண்ணம்:- க்ருதயுகத்தில் வெளுத்த நிறத்தைக் கொண்ட திருமேனியுடன் இருப்பான். க்ருத யுகத்தில் ஜீவாத்மாக்கள் பலரும் ஸத்த்வ குணம் மிகுந்தவர்களாக இருப்பார்கள். ஆகையால் அவர்கள் வெளுத்த நிறத்தையே உகப்பார்கள். ஆகவே அவர்கள் விரும்பும் அந்த வெளுப்பு நிறத்தையே தன் திருமேனிக்கும் கொள்கிறான்.

இப்படி எம்பெருமான் ஜீவர்கள் விரும்பும் நிறத்தையே தான் ஏன் கொள்ளுகிறான் தெரியுமா? காரணம் காட்டுகிறார் பெரிய வாச்சான் பிள்ளை. ஜீவாத்மாக்கள் அனைவரும் தன் விருப்பப் படி நடக்க வேண்டும் என்று எம்பெருமான் விரும்புகிறான். ஆனால் இவன் எதிர்பார்க்கும்படி அவர்கள் நடப்பதில்லை. அதற்காக ஒரு தந்த்ரம் செய்கிறான். ''அவர்கள் (ஜீவாத்மாக்கள்) விரும்பும்படி நாம் நடந்து காட்டுவோம். அதன் பிறகாவது அவர்கள் என்னைப் பார்த்து 'எம்பெருமான் நாம் விரும்பியபடி நடக்கிறானே,அதாவது நாம் (ஜீவர்கள்) எந்த நிறத்தை விரும்புகிறோமோ அந்த நிறத்தையே தானும் விரும்பி ஏற்றுக் கொள்கிறானே, அவ்வாறே நாமும் அவன் விரும்பியபடியே நடந்துக் கொள்வோம், என்று அப்படியே நடப்பார்களோ, அதாவது நாம் விரும்பியபடியே செய்வார்களோ?'' என்ற





எண்ணத்தினால் தான் அவர்கள் விரும்பும் நிறத்தை ஏற்றுக் கொள்கிறான்.

இங்கு பெரியவாச்சான் பிள்ளை அருளிய ஸ்ரீ ஸூக்திகள் பின்வருமாறு:-

''க்ருதயுகத்தில் புருஷர்கள் ஸத்த்வ ப்ரசுரர்களாகையாலே வெளுத்த நிறத்தை உகப்பார்கள் என்று அதற்காக வெளுத்த நிறத்தைக் கொண்டானாய்த்து. அவர்கள் உகந்ததை நாம் செய்யவே ''நாம் (ஜீவர்கள்) உகந்ததை இவன் (எம்பெருமான்) செய்தான். நாமும் (ஜீவர்களும்) இவன் தன்னை உகப்போம்'' என்று ஆதரிப்பார்கள் என்று பார்த்து.

இவற்றால் எம்பெருமானுடைய திருவுள்ளத்தின் சிறப்பு நன்கு தெளிவாகிறது. எப்படியாவது ஜீவாத்மாக்களைத் தன் வஶப்படுத்த வேண்டும் என்று விரும்புகிறான் எம்பெருமான். அவர்கள் முதலில் தன் வஶமாகாதபோது தான் அவர்கள் வஶமாகி நடந்து காட்டுகிறான் என்றபடி.

த்ரேதாயுகம், த்வாபரயுகம் இவற்றில் முன் கூறியபடியே அவரவர்களுடைய ருசிக்கு - ஆசைக்கு ஏற்றபடியே தன் திரு மேனி நிறத்தைக் கொள்கிறான்.

இப்படி மாறிமாறிப் பல நிறங்கள் வரும்போதும் நிரந்தர மான நிறம் எது என்று எண்ணும் காலத்தில் இவனுடைய அஸா தாரண விக்ரஹம் நீர் கொண்டெழுந்த காளமேகம் போலே இருக்கும் என்று ஶாஸ்த்ரங்களில் கூறப்பட்டுள்ளதை அறி கிறோம். நாமும் அதைக் காதால் கேட்டிருக்கிறோம். அவ்வாறு ஶாஸ்த்ரங்களில் கேட்பது மட்டுமன்றி அந்த வடிவும் அதன் நிறமும் இதுதான் என்று நீ நேரில் எனக்குக் காட்டித் தரவேண்டும் என்று உரிமையுடன் கேட்கிறார் திருமங்கையாழ்வார் திருவிந்த ளூர் எம்பெருமானிடத்தில். பெரியவாச்சான் பிள்ளை இதை

அருளும் அழகில், திருமங்கையாழ்வாரின் உரிமைக் குரலை இங்குக் காணவேண்டும்.

'இவனுடைய அஸாதாரண விக்ரஹம் நீர் கொண்டெழுந்த காளமேகம் போலே இருக்கும் என்று ஶாஸ்த்ரங்களிலே கேட்டுப் போகையன்றிக்கே, ''நீ இப்படி ஶாஸ்த்ரங்களிலே கேட்டுப்போந்த வடிவு தானிருக்கும்படி இது காண்'' என்று ஒரு வார்த்தை அருளிச் செய்து அவ்வடிவைக் காட்ட வேண்டும்.

'நம்முடையார்க்கு இவ்வடிவுதான் இது காணுங்கோள்' என்று காட்டவேணும். அதுக்காகவன்றோ நீர் திருவிந்தளூரிலே வந்து நிற்கிறது' என்று.

மேலும் இவ்விஷயத்தைத் திருமழிசைப்பிரானும் திருச்சந்த விருத்தத்தில் தெளிவாக அருளிச் செய்துள்ளார். ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் இதையும் எடுத்துக்காட்டியுள்ளமையால் இதையும் இங்கு அநுபவிப்போம்.

**பாலின் நீர்மை செம்பொன் நீர்மை பாசியின் பசும் புறம்**
**போலும் நீர்மை பொற்புடைத்தடத்து வண்டுவிண்டுலாம்**
**நீலநீர்மை என்றிவை நிறைந்த காலம் நான்குமாய்**
**மாலின் நீர்மை வையகம் மறைத்தது என்ன நீர்மையே.**
**(திருச்சந்த விருத்தம் 44)**

**பாலின் நீர்மை:-** பாலினுடைய ஸ்வபாவம் - நிறம் கொண்டவன். 'வளையுருவாய்த் திகழ்ந்தான்', 'சங்க வண்ணம் அன்னமேனி' என்றும் வெண்மை நிறத்தைக் கூறியுள்ளார்கள் மற்றைய ஆழ்வார்கள். இவர் இந்த வெண்மையையே 'பாலின் நீர்மை' பால் போன்ற நிறம் கொண்ட திருமேனி உடையவன் க்ருதயுகத்தில் என்று அருளுகிறார். முன் காட்டிய பாசுரங்களில் வளை என்றும் சங்கம் என்றும் சங்கத்தைக் குறித்து அதன் நிறம் கொண்டது எம்பெருமான் திருமேனி என்று கூறப்பட்டது.





திருமழிசைப்பிரான் அந்த வெண்மையை 'பாலின் நீர்மை' என்ற சொல்லால் விளக்கியுள்ளார். 'நீர்மை' என்ற சொல் தன்மையை (ஸ்வபாவத்தைக்) குறிக்கும். நிறம், சுவை இரண்டுமே பாலின் நீர்மை (தன்மை) தான். இங்கு இந்த இரண்டு பொருள்களையுமே கொள்ளலாம். பாலின் தன்மையான வெளுப்பு, இனிமை இரண்டுமே எம்பெருமானுடைய திருமேனிக்கு உண்டு. அதாவது எம்பெருமானுடைய திருமேனி பால் போல் வெளுத்திருக்கும். பால்போல் இனியதாயும் இருக்கும் என்றபடி.

இனிக்கும் பதார்த்தங்கள் யாவற்றுடைய இனிப்பும் எம்பெருமான் வடிவுக்கு - திருமேனிக்கு - உண்டு. உபநிஷத்தில் எம்பெருமான் 'ஸர்வரஸ:' எல்லாச் சுவைகளையும் கொண்ட திருமேனி படைத்தவன் என்று கூறப்பட்டுள்ளது.

மணம் (**गन्ध**ம்), சுவை (ரஸம்) யாவும் எம்பெருமானுடைய திவ்யாத்ம ஸ்வரூபத்திற்குக் கிடையாது. திருமேனிக்குத்தான் உண்டு என்பது நம் ஸித்தாந்தம். ஆகவே உபநிஷத்துக்களிலும், மற்றும் பல இடங்களிலும் நிறம், ரஸம், மணம் இவை கூறப்பட்டிருந்தால் போதும். திருமேனியைப் பற்றித் தனியாகக் குறிக்க வேண்டும் என்பதில்லை. இந்த நிறம், ரஸம், மணம் இவையே திருமேனியைக் குறித்துவிடும். திருமேனியின்றி இவை எம்பெருமானுக்குக் கூடா- பொருந்தா. ஆகவே உபநிஷத்தில் 'ஸர்வரஸ:' சுவைகள் அனைத்துக்கும் ஆதாரமாயிருக்கும் எம்பெருமான் திருமேனி என்று கூறியுள்ளதை ஆதாரமாகக் கொண்டு ஆழ்வாரும் 'பாலின் நீர்மை' என்று அருளியுள்ளார்.

மற்றைய ஆழ்வார்கள் 'வளையுருவாய்த் திகழ்ந்தான்' என்றும், 'சங்க வண்ணம் அன்னமேனி' என்றும் சொல்லியிருக்க அந்த ஸ்தாநத்தில் இந்தத் திருமழிசை ஆழ்வார் 'பாலின் நீர்மை' என்று அருளிச் செய்திருப்பதால் இதற்குக் கருத்து இதுவே

என்கிறார் பெரியவாச்சான் பிள்ளை. 'செம்பொன் நீர்மை' - த்ரேதாயுகத்தில் பொன் போன்ற சிவந்த நிறத்தைத் தன் திருமேனியில் கொள்கிறான் எம்பெருமான்.

இங்கு பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யாநம்:-

'வளையுருவாய்த் திகழ்ந்தான்' 'சங்கவண்ணமன்ன மேனி' என்றும் சொல்லுகிற ஸ்தாநத்தில் 'பாலின் நீர்மை' என்கிறது இவ்வெளுப்புக்கு ஆஶ்ரயம் 'ஸர்வரஸ:' என்கிற விஷயம் என்று தோற்றுகைக்காக.

**செம்பொன் நீர்மை**- த்ரேதாயுகத்தில் வந்தால் 'ருக்மாபம்' **(रुक्माभम्)** என்றும், 'சுட்டுரைத்த நன்பொன் உன் திருமேனி ஒளி ஒவ்வாது' என்றும் சொல்லுகிறபடியே சிவந்த திருநிறத்தைக் கொள்ளும். 'சேயன் என்று திரேதைக்கண்' என்கிற ஸ்தாநத்தில் 'செம்பொன் நீர்மை' என்றது அந்நிறத்துக்கு ஆஶ்ரயமான விக்ரஹம் **महार्घ**ம் (மஹார்க்கம்) (விலை மதிப்பு உயர்ந்தது) என்று தோற்றுகைக்காக என்று.

திருமங்கையாழ்வார் த்ரேதாயுகத்தில் சிவப்பு நிறத்தைக் கொள்கிறான் என்றார். இந்தத் திருமழிசையாழ்வாரோ, 'செம்பொன் நீர்மை' சிவந்த பொன்னின் நிறத்தைக் கொள்கிறான் என்று பொன்னை எடுத்துக் காட்டிச் சொல்கிறார். இதன் கருத்து யாதென்னில் பொன்போல் விலைமதிப்புயர்ந்தது என்ற அர்த்தத்தையும் காட்டவேண்டும் என்பதேயாகும்.

இதற்குச் சேர்ந்த ப்ரமாணங்களும் உள்ளன.

**प्रशासितारं सर्वेषां अणीयांसमणीयसाम् ।**
**रुक्माभं स्वप्नधीगम्यं विद्यात्तु पुरुषं परम् ॥**

ப்ரஶாஸிதாரம் ஸர்வேஷாம் அணீயாம்ஸம் அணீயஸாம் ।
ருக்மாபம் ஸ்வப்நதீகம்யம் வித்யாத் து புருஷம் பரம் ॥





பரமபுருஷன் உலகத்தையெல்லாம் ஆள்கிறான், அணுக்களை விட அணுவானவன்; பொன்னிறம் உடையவன்; ஸ்வப்நம் போன்ற ஞாநத்திற்கு விஷயமானவன் என்று அறியவேண்டும் என்கிறது ப்ரமாணம். இதில் பொன்னிறம் உடையவன் என்று கூறப்பட்டுள்ளது.

ஸ்வாமி நம்மாழ்வார் - எம்பெருமான் திருமேனி நிறத்துக்குப் பொன்னும் ஈடாகாது என்கிறார். இப்படி எடுத்துக் கழிப்பதற்குக் கூட அந்தப் பொன்னைச் சிறப்பித்துக் கூறவேண்டும். அதாவது சுட்டு உரைத்த நன் பொன் - காய்ச்சி, உருக்கி, ஓடவைத்து உரைத்த-நன்றான- பொன்னும் கூட எம்பெருமானுடைய ஸ்வாபாவிகமான திவ்யமங்கள விக்ரஹத்தின் ஒளிக்கு ஒப்பாகாது என்கிறார்.

**பாசியின் பசும்புறம் போலும் நீர்மை** - த்வாபரயுகத்தில் பாசியினுடைய புறத்தில் போலே ஶ்ரமஹரமான- அதாவது ஶ்ரமத்தையெல்லாம் போக்குகின்ற திருநிறத்தை உடையவனாவான்.

**பொற்புடைத்தடத்து வண்டு விண்டுலாம் நீலநீர்மை:-**

கலியுகத்தில் எந்த வடிவு கொண்டாலும் விரும்புவார் இல்லாமையாலே ஸ்வாபாவிகமான நீல நிறமான திருமேனியையே கொள்கிறான். (நீலம் - கருமை) இதுதான் இவனுக்கு நிலைநின்ற வண்ணம். 'நிலை நின்ற பின்னை வண்ணம் கொண்டல் வண்ணம்'- என்றார்கள் மற்றையோரும். இப்படியாக மூன்று யுகங்களிலும் நிறம் மாறிமாறி வரும்.

இப்படி எல்லாம் எம்பெருமான் ஜனங்களுடைய விருப்பத்திற்கு ஏற்பத் தன் வடிவின் நிறத்தை மாற்றிக் கொண்டு ஸேவை தந்தாலும் இந்த ஜனங்களுடைய விபரீத வாஸனை - கெட்ட விஷயங்களையே அநாதிகாலமாக அநுபவித்ததால் உண்டான

உள்ளத்தின் பழக்கம்- எம்பெருமானுடைய இந்த ஸௌலப்யத்தையும் மறைக்கின்றதே என்று வியக்கிறார் ஆழ்வார். 'வையகம் மறைத்தது என்ன நீர்மையே' என்று 'பகவதநுக்ரஹத்தையும் அதிஶயித்திருப்பதே அநாதிகால துர்வாஸநை' என்கிறார். பகவானுடைய அநுக்ரஹத்தையும் தடுக்கும்படி மக்களின் துர்வாஸநை மிக்க பலம் உடையதாயிருக்கிறதே' என்றபடி.

ஆக இவ்வளவில் இந்த நிற மாற்றம் வ்யூஹாவதாரத்தில் தான் என்பது விளக்கப்பட்டது.

தத்த்வத்ரய சுளகத்தில் ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் அருளியதையும் இங்கு அறியவேண்டும்.

''வ்யூஹமாவது:- பரரூபத்திலே வாஸுதேவ-ஸங்கர்ஷண ப்ரத்யும்ந- அநிருத்த ரூபேண வரும் வகுப்பு.

இவர்கள் நால்வருக்கும் க்ருத-த்ரேதாதியுக பரிவ்ருத்தி க்ரமத்தாலே ஸித (வெளுப்பு), ரக்த (சிவப்பு), பீத (வெண்மை கலந்த பச்சை), க்ருஷ்ண (கருமை)ங்களான வர்ணங்கள் மாறி மாறி வரும்''.

என்று இவ்விஷயத்தையே ஸ்பஷ்டமாக அருளிச் செய்துள்ளார்.

ஸ்ரீமத் பாகவதத்திலும் இவ்விஷயம் ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டுள்ளது.

**कृतं त्रेता द्वापरं च कलिरित्येषु केशवः ।**
**नानावर्णाभिधाकारो नानैव विधिनेज्यते ॥**
**कृते शुक्लश्चतुर्बाहुः जटिलो वल्कलाम्बरः ।**
**त्रेतायां रक्तवर्णोऽसौ चतुर्बाहुस्त्रिमेखलः ।**
**द्वापरे भगवान् श्यामः पीतवासाः निजायुधः ॥**





**...............कलावपि यथा शृणु ।**
**कृष्णवर्णं त्विषा कृष्णं साङ्गोपाङ्गास्त्रपार्षदम् ॥**

க்ருதம் த்ரேதா த்வாபரம் ச கலிரித்யேஷு கேஶவ: ।
நாநாவர்ணாபிதாகாரோ நாநைவ விதிநேஜ்யதே ॥
க்ருதே ஶுக்லஶ்சதுர்பாஹு: ஜடிலோ வல்கலாம்பர: ।
த்ரேதாயாம் ரக்தவர்ணோऽஸௌ சதுர்பாஹு : த்ரிமேகல: ॥
......................கலாவபி யதா ஶ்ருணு ।
க்ருஷ்ணவர்ணம் த்விஷா க்ருஷ்ணம் ஸாங்கோபாங்காஸ்த்ரபார்ஷதம் ॥

ஸ்ரீ ஸஹஸ்ரநாமத்திலும் வ்யாஸ பகவான் அருளிய 'அநிர்தேஶ்ய வபு:' என்ற 662 வது திருநாமத்திற்கு ஸ்ரீ பட்டர் தம் வ்யாக்யாநத்தில் **युगानुसारिकान्तिश्च** என்று அந்தந்த யுகத்தை அநுஸரித்து வரும் காந்தியை உடையவன் என்று இவ்விஷயத்தை விவரித்தருளியுள்ளார்.

ஸ்வாமி ஸ்ரீ தேஶிகனும் யதிராஜஸப்ததியில் இவ்விஷயத்தை அருளியுள்ளார். ஸர்வேஶ்வரனான எம்பெருமானுடைய ஸேநாபதியான ஸ்ரீ விஷ்வக்ஸேநர் தான் ஸ்வாமி எம்பெருமானாராக அவதரித்து உலகைக் காப்பாற்றினார் என்கிறார். உலகத்தைக் காப்பாற்ற வேண்டிய எம்பெருமான் உலகத்தைக் கெடுக்க முற்பட்டான். அதற்காகப் பல்வேறு மதங்களையும், தெய்வங்களையும் அவற்றை வணங்கும் வகைகளையும் ஒன்றுக்கொன்று முரணான வழிகளில் உண்டுபண்ணி லீலாரஸத்தை அநுபவிக்க விரும்பினான். தம்முடைய வ்யூஹாவதாரத்தைக் கொண்டு அந்த்யவர்ணமான -கடைசி நிறமான - கருப்பை வெளியிடலானான். அதாவது கலியுகம் வந்துவிட்டபடியால் அதற்கேற்பத் தன் கருநிறத்தையே வெளிப்படுத்தினான்.

இப்படிக் கலியுகத்தையும் உண்டு பண்ணி, பலவகை மதங்களையும் தோற்றுவித்து, மக்களை மதிமயங்கச் செய்தான்.

இப்படிச் செய்தவன் யார்? உலகத்தைக் காக்க வேண்டிய எம்பெருமான் தான்!.

ராஜா வழிமுறை தவறி ப்ரஜைகளைக் கெடுக்க முயன்றால் நல்ல மந்த்ரிகள் ப்ரஜைகளைக் காப்பதுபோல், எம்பெருமானுக்கு மந்த்ரியாயும், ஸேநாபதியாயுமிருக்கும் ஸ்ரீ விஷ்வக் ஸேநர் ஸ்வாமி எம்பெருமானாராக அவதரித்தார்; ஸேநாவீரர்களை நியமிப்பதற்காக விஷ்வக்ஸேநர் தம் கையில் ஏந்தியிருந்த அந்தப் பிரம்புதான் த்ரிதண்டமாக மாறிற்று, என்பதை

**नानाभूतैः जगति समयैः नर्मलीलां विधित्सोः**
**अन्त्यं वर्णं प्रथयति विभोः आदिमव्यूहभेदे ।**
**विश्वं त्रातुं विषयनियतं व्यञ्जितानुग्रहस्सन्**
**विष्वक्सेनो यतिपतिरभूद्वेत्रसारस्त्रिदण्डः ॥**

நாநாபூதை: ஜகதி ஸமயை: நர்மலீலாம் விதித்ஸோ:
அந்த்யம் வர்ணம் ப்ரதயதி விபோ: ஆதிம வ்யூஹபேதே ।
விஶ்வம் த்ராதும் விஷயநியதம் வ்யஞ்ஜிதாநுக்ரஹஸ்ஸந்
விஷ்வக்ஸேநோ யதிபதிரபூத் வேத்ரஸாரஸ்த்ரிதண்ட: ॥

இதில் 'விபோ: ஆதிமவ்யூஹபேதே அந்த்யம் வர்ணம் ப்ரதயதி' எம்பெருமானுடைய வ்யூஹ மூர்த்தியானது கடைசி நிறத்தை (கருமையை) ப்ரகாஶப்படுத்துகிற போது என்ற அம்ஶம் மட்டும்தான் இங்கு இந்த விஷயத்திற்குச் சேர்ந்ததாகும்.

வாசகப் பெருமக்களில் பலர் ஆழ்ந்த அன்பும், குன்றாத ஆர்வமும், கூரார்ந்த அறிவும் கொண்டு இந்த அருள் மொழியை விடாமல் படித்து வருகிறார்கள். சில விஷயங்கள் மிகக் கடிநமாயிருக்கின்ற காரணத்தினால் சுருக்கி எழுதும்போது 'அவற்றையும் ப்ரமாணங்களுடன் விவரித்து எழுத வேண்டும்' என்று நேரில் எடுத்துக் கூறுகிறார்கள். அப்படிப்பட்டவர்





களையும் நாம் மனதில் கொண்டு கூடியவரை ப்ரமாணங்களுடன் எளிதில் அறிவதற்கு அரிய விஷயங்களையும் எளிதில் அறியும் படி விவரித்து எழுதி வருகிறோம் அருள்மொழியில். இவ்விஷயமும் இப்படிப்பட்டதுதான்.

தத்த்வத்ரயத்தில் பிள்ளைலோகாசார்யர் இவ்விஷயம் பற்றி அருளிய சூர்ணிகையின் முடிவில் ''.....அவற்றினுடைய புஜ -ஆயுத - வர்ண - க்ருத்ய - ஸ்த்தாநாதி பேதங்களும் துரவதரங்களுமாய், குஹ்யதமங்களுமாய் இருக்கையாலே சொல்லுகிறிலோம்'' என்று அருளியுள்ளார்.

இங்கு வ்யாக்யாநத்தில் மாமுனிகள்:- ''இவை எல்லாம் சொன்னாலும் ஒருவர்க்கு புத்தி பண்ணவும் அரிதாய், அவதார ரஹஸ்யங்களாகையாலே மிகவும் குஹ்யமுமாய் இருக்கையாலே சொல்லுகிறிலோம் என்கை'' என்று அருளியுள்ளார். அதாவது,

இந்த விஷயங்கள் மிகவும் ஸூக்ஷ்மங்களாய், கடிநங்களாய் இருப்பதால் எடுத்துச் சொன்னாலும் யாவராலும் இவற்றை அறியமுடியாது. மேலும் இவை ரஹஸ்யங்களான விஷயங்கள். பக்தி பூர்வமாக ஆசார்யனைக் கிட்டி இவற்றைத் தனக்கு உபதேஶிக்க வேண்டும் என்று கேட்டாலொழியச் சொல்லக் கூடாத விஷயங்கள் இவை. அம்பலத்தில் அவல்பொதியை (மூட்டையை) அவிழ்த்தால் ஆளுக்கு ஒரு பிடியாக அள்ளிக் கொண்டு செல்வார்கள். அவலும் சிதறிவிடும், கொள்பவர்களுக்கும் வயிறு நிறையாது. அந்த முறையில் 'ரஹஸ்யமான விஷயங்களை அம்பலமாக்கக் கூடாது' என்ற ஶாஸ்த்ரத்தாலும் இவற்றை நாம் விளக்கவில்லை என்றபடி.

இப்படி ஶாஸ்த்ரவஶ்யர்களாய் (ஶாஸ்த்ரங்களுக்குக் கட்டுப் பட்டவர்களாய்) இருக்கும் நம் பூர்வர்கள் விளக்காமல் விட்ட ரஹஸ்யங்களான விஷயங்களை ஆஸ்திகர்களான அன்பர்களின்

ப்ரார்த்தனையின் பேரில் இவ்வளவு விவரித்துள்ளோம்.

ஆக இவ்வளவால் - எம்பெருமானுடைய ஸ்வாபாவிகமான நிறம் கறுப்பு நிறம் தான் என்றும், மற்றைய அவதாரங்களில் க்ருத யுகம் முதலான யுகங்களுக்கேற்ப வெளுப்பு, சிவப்பு, பச்சை, கறுப்பு என்றவாறாக நிறங்களை மாற்றிக்கொள்கிறான் என்பதே ஸித்தாந்தம் என்றும் நம் பூர்வர்கள் நிர்ணயம் செய்துள்ளார்கள்.

ஸ்ரீ ஆண்டாளும் திருப்பாவையில் ''ஆழிமழைக் கண்ணா'' என்ற பாசுரத்தில் ''ஊழிமுதல்வன் உருவம் போல் மெய் கருத்து'' என்று ப்ரளய காலத்தில் - ஸ்ருஷ்டிக்கு முற்பட்ட காலத்தில் - எம்பெருமான் திருமேனி கறுத்திருக்கும் என்பதை மிக ஸ்பஷ்ட மாக அருளியுள்ளார்.

ஸ்வாமி நம்மாழ்வாரும், ஸ்ருஷ்டிக்கும் போது எம்பெரு மான் காளமேகம் போல் கறுத்த திருமேனியைக் கொண்டுள்ளான் என்பதை 'முந்நீர் ஞாலம் படைத்த எம்முகில் வண்ணனே !' *(3.2.1)* என்று அருளியுள்ளார். முந்நீர் ஞாலம்:- மூவகைப்பட்ட நீரை - ஜலத்தை உடைய ஜகத்தை என்றபடி. மூவகைப்பட்ட நீராவன:- 'ஆற்றுநீர், ஊற்று நீர், மழைநீர்' என்ற மூவகை நீர்கள். இவையனைத்தும் சென்று சேரும் கடலையும் குறிக்கும் முந்நீர் என்னும் சொல். இவற்றை உடைய உலகைப் படைக்கும்போது எம்பெருமான் மேகம் போன்ற திருமேனியைக் கொண்டிருக் கிறான் என்பது ஸ்பஷ்டமாகிறது.

தத்த்வத்ரயம் என்ற க்ரந்தத்திலும் பிள்ளைலோகாசாரியர்:- ''இவன் தான் 'முந்நீர் ஞாலம் படைத்த எம் முகில் வண்ணன்' என்கிறபடியே ஸவிக்ரஹனாய்க் கொண்டு ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணும்' என்று அருளியுள்ளார். ஸவிக்ரஹனாய் - திருமேனி யோடு கூடியவனாய் என்றபடி.

இங்கு மணவாள மாமுனிகள் வ்யாக்யாநத்தில் :-இப்படி





ஜகத் ஸர்காதி (ஸ்ருஷ்டி முதலானவற்றுக்கு) கர்த்தாவாகச் சொல்லப்பட்ட இவன் (எம்பெருமான்) தான் எனக்காக ஆற்றுநீர், ஊற்றுநீர், மழைநீர் (வர்ஷஜலம்) என்று மூன்று வகைப் பட்ட நீரை உடைத்தான ஸமுத்ரத்தோடே கூடின ஜகத்தை ஸ்ருஷ்டித்த வர்ஷுகவலாஹகம் (மழை பொழியும் நிலையில் உள்ள கருமேகம்) போலே இருக்கிற வடிவை உடையவனே! (முந்நீர் ஞாலம் படைத்த என் முகில் வண்ணனே!) என்று ஆழ்வாருடைய திவ்யப் ப்ரபந்தத்திலே சொல்லுகிறபடியே ஸவிக்ரஹனாய்க் கொண்டு (திருமேனியுடன் கூடியவனாய்க் கொண்டு) ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்கள் மூன்றையும் பண்ணும் என்கை - என்று அருளியுள்ளார். எம்பெருமானுடைய திருமேனிநிறம் பற்றிய விசாரத்தை இத்துடன் பூர்த்தி செய் வோம்.

இனி திருமேனியின் பெருமையை ஶரணாகதிகத்யத்தில் ஸ்வாமி எம்பெருமானார் அருளிச் செய்துள்ள **'स्वाभिमतानुरूप'** என்று தொடங்கும் சூர்ணிகையைக் கொண்டு அநுபவிப்போம்.

---

# 8. திருமேனி - ''ஸ்வாபிமதம்'', ''அநுரூபம்'', ''ஏகரூபம்''

**भगवद्भाष्यकारोक्तदिशा देवस्य वर्ष्मणः ।**

**माहात्म्यमिह निर्ब्रूते नारायणयतीश्वरः ॥**

பகவத்பாஷ்யகாரோக்ததிஶா தேவஸ்ய வர்ஷ்மண: ।

மாஹாத்ம்யமிஹ நிர்ப்ரூதே நாராயணயதீஶ்வர: ॥

இதுவரையிலான பகுதிகளில் எம்பெருமான் திருமேனியின் மேன்மை, அதன் ஸ்வாபாவிகமான (இயற்கையான) வர்ணம், அது மாறும் காலம், வகை முதலியன பற்றி விரிவாக விளக்கப் பட்டது.

இனி எம்பெருமானுடைய இந்தத் திருமேனியைப் பற்றி ஸ்வாமி எம்பெருமானார் தாம் இயற்றிய ஶரணாகதிகத்யம், ஸ்ரீ கீதாபாஷ்ய அவதாரிகை முதலான இடங்களில் அருளிச் செய் துள்ளவற்றை அநுபவிப்போம்.

எம்பெருமானார் திருவாக்கிலிருந்து வெளிவரும் ஸ்ரீ ஸூக்தி கள் ஒவ்வொன்றுமே பரம போக்யமாக இருக்கும். ஶரணாகதி கத்யத்தில் எம்பெருமான் திருமேனியைப் பற்றிய சூர்ணிகை:-

**'स्वाभिमतानुरूप - एकरूप - अचिन्त्य - दिव्याद्भुत - नित्य - निरवद्य - निरतिशय औज्ज्वल्य - सौन्दर्य - सौगन्ध्य - सौकुमार्य - लावण्य - यौवनाद्यनन्त गुणनिधि दिव्यरूप'**

ஸ்வாபிமதாநுரூப - ஏகரூப - அசிந்த்ய - திவ்யாத்புத - நித்ய நிரவத்ய - நிரதிஶய ஔஜ்ஜ்வல்ய - ஸௌந்தர்ய - ஸௌகந்த்ய - ஸௌகுமார்ய - லாவண்ய - யௌவநாத்யநந்த குணநிதி திவ்ய ரூப ! என்பதாகும்.





எம்பெருமான் கொண்டுள்ள திருமேனி அவனுக்கு மிகவும் அபிமதமாய் - ப்ரியமாய் இருக்கும். அவனுக்கு ஏற்றதாயும் இருக்கும். எவ்வித மாறுதலுமின்றி என்றும் ஒரே மாதிரியாகவே இருக்கும். மற்றைய பொருள்களோடு ஒத்திட்டுப் பார்த்து இப்படித்தானிருக்கும் இந்தத் திருமேனி என்று எண்ண முடியாத படி இருக்கும். இதற்கு ஏற்ற உபமாநம் கிடையாது. ப்ராக்ருத மாய் - அதாவது நம் ஶரீரம் போல் ப்ரக்ருதியினால் செய்யப்பட்ட தாய் - இராது.

எத்தனை காலம் அநுபவித்தாலும் நிமிஷந்தோறும் புதிய தாகவே தோன்றும்.அழிவின்றி நித்யமாய் இருக்கும் இந்தத் திருமேனி. எவ்வித தோஷமும் இதற்குக் கிடையாது. இது ஒப்பும் உயர்வும் அற்ற ஒளியுடையதாயிருக்கும். அழகு பொருந்திய அவயவங்களை உடையதாயிருக்கும் இது. மிக்க நறுமணம் கொண்டதாயிருக்கும். மிகவும் ம்ருதுவாய் அதாவது தொட்டால் வாடும்படியான மென்மை உடையதாய் இருக்கும் இந்தத் திருமேனி. இந்தத் திருமேனியில் முழுவதுமாக அழகு பரவி யிருக்கும். எப்பொழுதும் யௌவநப்பருவமே கொண்டிருக்கும் இந்தத் திருமேனி. மற்றும் அளவிடமுடியாத குணங்களுக்கு இருப்பிடமாக இருக்கும் இந்த எம்பெருமானுடைய திருமேனி என்பது இந்த சூர்ணிகையின் - வாக்யத்தின் பொருள்.

ஸ்ரீ கீதாபாஷ்யத்தின் அவதாரிகையிலும் இதே வாக்யம் தான் உள்ளது.

இனி இதில் உள்ள ஒவ்வொரு பதத்தினுடைய அர்த்தத் தையும் விளக்குவோம்.

**ஸ்வாபிமத அநுரூப:** இந்தத் திருமேனி எம்பெருமானுக்கு அபிமதமாய் - உகந்ததாய் இருக்கும். அவனுக்கு ஏற்றதாயும் இருக்கும் என்றபடி.

**ஸ்வாபிமத** - பரமாத்மாவினுடைய ஸ்வரூபம் அதாவது ஆத்மா மிக உயர்ந்த ஆநந்தமாய் இருக்கும். உலகிலும் அவனவனுடைய (அததனுடைய) ஆத்மா அவனவனுக்கு (அததற்கு) மிகவும் ப்ரியமாக இருப்பதைக் கண்டு வருகிறோம்.

அவனவனுடைய ஆத்மா அவனவனுக்குப் பிடித்தமாயிருக்கும் என்று சொல்லும்போது - பிடித்தமாய் - ப்ரியமாய் இருக்கும் ஆத்மா வேறு, அதை விரும்புகிற ஆத்மா வேறு என்று தோன்றும். அவ்வாறு இல்லை. ஒரே வஸ்துவையே வேறுபடுத்திச் சொல்லுவது உலகிலும் ஶாஸ்த்ரங்களிலும் காணக் கூடியதே.

ஒரு உதாஹரணம் பார்ப்போம். ராஹுவினுடைய தலை (**राहोः शिरः**) என்ற வழக்கு உலகில் உண்டு. இதைப் பார்க்கும் போது ராஹு என்பவன் ஒருவன் இருக்கிறான். அவன் ஶரீரத்தினுடைய ஒரு அவயவம் - தலை - வேறாக இருக்கிறது என்றுதான் தோன்றும். இங்கு ராஹு வேறு, தலை வேறு என்று இரண்டு பொருள்கள் கிடையா. தலை பாகத்திற்கே ராஹு என்று பெயர். ஆக வஸ்து ஒன்றாக இருந்தாலும் வ்யவஹாரம் செய்யும்போது வேறுபடுத்திக் கூறுவது உண்டு. அவ்வாறே எம்பெருமானுக்குத் தன் ஆத்மஸ்வரூபம் மிகவும் ப்ரியமாக இருக்கும் என்றால் ப்ரியமாக இருக்கும் ஆத்மா வேறே, அதை விரும்பும் ஆத்மா வேறே என்று கொள்ளக் கூடாது.

புத்ரன் தகப்பனுக்குப் ப்ரியமானவன் என்று சொல்லும் போது ப்ரியனான புத்ரன் வேறு. அவனை விரும்பும் தகப்பன் வேறு என்று அங்கு இரண்டு வஸ்துக்கள் (ஆத்மாக்கள்) உண்டு. அம்மாதிரி இங்குக் கொள்ளக்கூடாது.

ஆக எம்பெருமானுடைய ஆத்மஸ்வரூபம், அதாவது ஆத்மா பரமாநந்தரூபமாய் இருக்கும் என்றபடி.





இப்படிப் பரமாநந்தமாயிருக்கும் ஆத்மா மற்றொன்றை விரும்புகின்றது என்றால் அது எப்படிப் பொருந்தும்? என்ற கேள்வி ஒன்று இங்கு எழுகின்றது. அதாவது, தானே (எம்பெருமானுடைய ஆத்மாவே) ஒப்புயர்வற்ற ஆநந்தமாய் இருக்க அது மற்றொன்றை விரும்புகிறது என்றால் இந்த ஆத்மஸ்வரூபத்தைக் காட்டிலும் உயர்ந்த ஆநந்த ரூபமாய் இருக்கிறது இந்தத் திருமேனி என்று தானே ஏற்படுகிறது. அப்பொழுது ஆத்மஸ்வரூபம் ஒப்புயர்வற்ற ஆநந்தமாயிருக்கிறது என்று ப்ரமாணங்கள் கூறுவது எப்படிப் பொருந்தும்?

உலகில் ஒப்புயர்வற்ற அழகு ஒருவனுக்கு இருந்தால் அவன் மற்றொருவனுடைய அழகை - அழகிய ஶரீரத்தை - விரும்ப மாட்டான். ஏன்? இவன் தானே ஒப்புயர்வற்ற அழகுடையவன். மற்றையோருடைய அழகு இவனுடைய அழகைவிடக் குறைந்தது தானே. இவன் மற்றொரு அழகனை விரும்பினால் இவனுடைய அழகு அவனுடைய அழகை விடக் குறைந்தது என்று தானே சொல்லவேண்டி வரும்.

அம்மாதிரியே இங்கும் எம்பெருமானுடைய திவ்யாத்மஸ்வரூபமே நிரதிஶய (அதாவது தன்னிலும் மேம்பட்டதொன்றில்லாதபடி) ஆநந்தமாயிருக்க இது மற்றொன்றை அதாவது திருமேனியை விரும்பும், அதாவது அந்தத் திருமேனி இவனுக்கு அபிமதமாய் - விருப்பத்திற்குரியதாய் - விரும்பத்தக்கதாய் இருக்கும் என்று கூறுவது பொருந்தாது. ஆக எம்பெருமான் திருமேனியை ஸ்வாபிமத - தனக்கு ப்ரியமாய் இருக்கும் என்று எப்படிக் கூறலாம்?

திருமேனி எம்பெருமானுக்கு ப்ரியமாய் - அபிமதமாய் - இருக்கிறது என்றால் அப்போது திவ்யாத்மஸ்வரூபத்துக்கு இல்லாதபடி இது அதிக ஆநந்தமாயிருக்கும் என்றன்றோ ஏற்படும்? ஆகவே 'ஸ்வாபிமத' என்ற விஶேஷணம் பொருந்தாது

என்ற ஆக்ஷேபம் எழுகிறது. இதற்கு நம் பூர்வர்கள் அழகிய முறையில் பதில் கூறியுள்ளார்கள்.

பகவானுடைய திவ்யாத்மஸ்வரூபம் மிக உயர்ந்த ஆநந்த ஸ்வரூபமாகவேதானிருக்கும். இதில் எவ்விதமான குறைவும் கிடையாது. இப்படி இருக்கச் செய்தேயும் இது திவ்ய திருமேனியை விரும்புவதில் எவ்விதத் தவறும் இல்லை. எம்பெருமானை அநுபவிப்பவர்கள் (பக்தர்கள், ஞாநிகள் முதலாக) அனைவரும் எம்பெருமானைத் திருமேனியுடன் சேர்ந்தேதான் அநுபவிக்கிறார்கள். ஆகவே பகவானுடைய திவ்யாத்ம ஸ்வரூபம் மிக்க ஆநந்த ரூபமாயிருந்தாலும் அது அவ்வாறே உள்ள திருமேனியை விரும்புவதில் எவ்வித தோஷமும் கிடையாது.

மிகச் சிறந்ததாயும் அநுகூலமாகவும் அதாவது உயர்ந்த ஆநந்த ரூபமாயும் இருக்கிறது எம்பெருமானுடைய திவ்யாத்ம ஸ்வரூபம் என்ற காரணத்தினால் இது மற்றொன்றை விரும்புவது கூடாது- பொருந்தாது என்று கூறுவது சரியன்று. தான் சிறந்த ஆநந்தரூபமாயிருந்தும் தன்னைப் போன்ற வஸ்துவை விரும்பலாம்.

உலகில் மிக அழகனாக இருப்பவன் அழகிய ஆபரணங்களை விரும்புகிறான். இதை நாம் நேரில் கண்டுவருகிறோம். தான் அழகிய ஶரீரம் படைத்திருந்தாலும் அழகிய ஆபரணங்களை விரும்புகிறான். அவற்றைப் பெற்றுப் பூண்கிறான்-அணிகிறான். இது உலகில் காணும் உண்மை. இவன் தானே அழகனாக இருக்கும் காரணத்தினால் மற்றொன்றை விரும்புவது சரியன்று என்ற வாதம் இங்கு இடம்பெறுமா?

இவ்வாறே தான் எம்பெருமானுடைய திவ்யாத்ம ஸ்வரூபம் நிரதிஶயாநந்த ரூபமாக (உயர்வற்ற ஆநந்த ரூபமாக) இருந்தாலும் நிரதிஶயாநந்த ரூபமான திருமேனியை விரும்பலாம்.





எம்பெருமான் நிரதிஶயாநந்த ரூபமாய் - உயர்வற்ற ஆநந்த ரூபமாய் இருக்கும் திருமேனியை விரும்புவதால் திவ்யாத்ம ஸ்வரூபத்திற்கு, அதாவது எம்பெருமானுக்குள்ள சிறப்பு - ஆநந்த ரூபமாயிருக்கும் தன்மை குறையாது, பாதிக்கப்படாது.

இவ்விஷயத்தைத் தான் ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் ஶரணாகதிகத்ய பாஷ்யத்தில் கீழே கூறியபடி தக்க உதாஹரணம் கொண்டு விளக்கியுள்ளார். **सा च अभिरूपस्य आभरणाभिमतिवत् न स्वरूपानुकूल्यबाधिका** (ஸா ச அபிரூபஸ்ய ஆபரணாபிமதிவத் ந ஸ்வரூபாநுகூல்யபாதிகா) என்று. அழகாயிருப்பவன் அழகான ஆபரணங்களை விரும்புகிறான். உலகில் காணும் உண்மை இது.

அழகிய ஆபரணங்களை விரும்புகின்றவன் அழகனாக இருக்கக்கூடாதா? அழகிய ஆபரணங்களை விரும்புவதால் இவனுக்கு அழகு இல்லை என்று ஏற்படுமா! ஆக அழகனாக இருப்பவன் அழகிய ஆபரணங்களை விரும்புகிறான். இவ்வாறே தான் உயர்வற்ற ஆநந்த ஸ்வரூபனாயிருக்கும் எம்பெருமான் அம்மாதிரியாயிருக்கும் தன் திருமேனியை விரும்புவதில் எவ்வித தோஷமும் கிடையாது. ஆகவே திருமேனி அபிமதமாய்-ப்ரியமாய் இருக்கும் என்பது சரியே.

**ஸ்வாநுரூப** - பரமாத்ம ஸ்வரூபத்திற்கு ஏற்றதாயிருக்கும் அவனுடைய திருமேனி. நம்முடைய ஆத்மஸ்வரூபத்திற்கும் நம்முடைய ஶரீரத்திற்கும் எவ்வளவு வேறுபாடுகள் உள்ளன என்பதை நன்கு புரிந்துகொண்டால் நம்முடைய ஆத்ம ஸ்வரூபத்திற்கு எள்ளளவும் ஏற்புடையதன்று - அதாவது ஏற்றதன்று - நாம் கொண்டுள்ள ஶரீரம் என்பது புரியும்.

நம்முடைய ஆத்மஸ்வரூபத்திற்கும் அதாவது ஆத்மாவிற்கும் நம்முடைய ஶரீரத்திற்கும் உள்ள வேறுபாடுகளை முதலில் அறிவோம். நம்முடைய ஆத்மா அதாவது ஆத்மஸ்வரூபம்

'அப்ராக்ருதம்'. அதாவது ப்ரக்ருதியினுடைய பரிணுமத்தினால் வந்ததன்று. ஆகவே அது அப்ராக்ருதம். ஶரீரம் ப்ரக்ருதியி னுடைய பரிணுமத்தினால் உண்டானது. ஆகவே இது ப்ரா க்ருதம்.

நம் ஆத்மா நித்யம். நம்முடைய ஶரீரம் அழியக்கூடியதாகை யாலே அநித்யம். ஆத்மா- ஸ்வயம் ப்ரகாஶம். அஜடம். ஶரீரம் ஸ்வயம் ப்ரகாஶம் அன்று. அதாவது ஜடம்.

ஸ்வயம்ப்ரகாஶம் - ஞாநத்தினுடைய உதவியின்றித் தானாகவே தோன்றக் கூடியது. இப்படியல்லாதது - அதாவது ஞாநத்தைக் கொண்டே அறியத்தக்கது அஸ்வயம்ப்ரகாஶம். இவற்றின் அர்த்தம் பல தடவைகள் முன்னமே விளக்கப்பட்டுள்ளது. ஆத்மா தோஷம் அற்றது. ஶரீரம் தோஷங்களுக்கு இருப்பிட மானது. அதாவது அழுக்குடம்பு என்று சொல்லும்படியுள்ளது ஶரீரம். ஆத்மா இஷ்டத்தைத் தரவல்லது. ஶரீரம் அநிஷ்டங் களைத் தரவல்லது.

எம்பெருமானுடைய திருமேனி இப்படியல்லாமல் அவ னுக்கு - அதாவது அவனுடைய ஆத்மஸ்வரூபத்திற்கு ஏற்றதாகவே இருக்கும். அதன் விளக்கம் இதோ:

எம்பெருமானுடைய ஆத்மஸ்வரூபம் அப்ராக்ருதம். அவ் வாறே அவன் கொண்டுள்ள திருமேனியும் ஶரீரங்களும் அப்ராக்ருதங்களேயாம். எம்பெருமானுடைய திவ்யாத்ம ஸ்வரூபமும் நித்யம், அவனுடைய திருமேனியும் நித்யம்.

எம்பெருமானுடைய ஆத்மஸ்வரூபமும் ஸ்வயம்ப்ரகாஶம்; அவ்வாறே அவனுடைய திருமேனிகளும் ஸ்வயம் ப்ரகாஶங்களே. அவனுடைய ஆத்மஸ்வரூபமும் தோஷமற்றது, அவன் திருமேனியும் தோஷமற்றது.



அவனுடைய ஆத்மஸ்வரூபமும் இஷ்டத்தை யாவர்க்கும் தரவல்லது. அவ்வாறே அவனுடைய திருமேனியும் யாவர்க்கும் இஷ்டத்தைத் தரவல்லது.

அவனுடைய ஆத்மஸ்வரூபமும் உபாஸிக்கத்தக்கது. திரு மேனியும் உபாஸிக்கத் தக்கதாயுள்ளது.

அவனுடைய ஆத்மஸ்வரூபம் ஸ்ரீ வைகுண்டம் சென்று அடையத் தக்கதாகையால் ப்ராப்யமாய் இருக்கும். அவ்வாறே அவனுடைய திருமேனியும் அடையத் தக்கதாய் ப்ராப்யமாய் இருக்கிறது. அதாவது ஸ்ரீ வைகுண்டத்தில் சென்று நாம் அநுப விப்பதும் திருமேனியோடு கூடிய எம்பெருமானைத்தான் என்றபடி. எம்பெருமானுடைய ஆத்மஸ்வரூபம் தன்னை உபா ஸிப்பவர்களுடைய தோஷங்களை - பாபங்களைப் போக்கும் - அவ்வாறே அவன் திருமேனியும் உபாஸிப்பவர்களுடைய தோஷங்களை- பாபங்களைப் போக்கும்.

அவனுடைய ஆத்மஸ்வரூபம் உலகில் உள்ள சேதநங்கள் அசேதநங்கள் யாவற்றுக்கும் ஆதாரமாய் இருக்கும். அவ்வாறே அவனுடைய திருமேனியும் இவற்றுக்கெல்லாம் ஆதாரமாய் இருக்கும். அதாவது சேதநங்கள் அசேதநங்கள் யாவும் அஸ்த்ரங் கள், ஆபரணங்கள் இவற்றின் உருவில் எம்பெருமான் திருமேனி யில் இடம் பெற்றுள்ளன. சேதநனான ஜீவாத்மா கௌஸ்துபம் என்ற சிறந்த ரத்நத்தின் உருவில் எம்பெருமானுடைய திரு மார்பில் இடம் பெற்றுள்ளான். அசேதநமான ப்ரக்ருதி, எம் பெருமான் திருமார்பில் உள்ள மறு என்பதன் உருவில் இடம் பெற்றுள்ளது. மறு என்பது ரோமத்தின் சுழி. இப்படியே மற்றும் பல அசேதநங்களும் எம்பெருமான் திருமேனியில் இடம் பெற்றிருக்கின்றன என்பதை ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் அஸ்த்ர பூஷணாத்யாயம் கூறுகிறது. ஸ்வாமி ஸ்ரீ தேஶிகனும் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் 'புருடன் மணிவரமாக' என்ற பாசுரத்தில் இவ்விஷயத்தை அருளிச் செய்துள்ளார்.

ஆக பகவானுடைய ஆத்மஸ்வரூபமும் ஜகத்துக் கெல்லாம் எப்பொழுதும் ஆதாரம், அவ்வாறே அவனுடைய திருமேனியும் ஜகத்துக்கெல்லாம் ஆதாரமாய் இருக்கிறது.

ஆக இவ்வளவால் எம்பெருமானுடைய திருமேனி, எம் பெருமானுடைய திவ்யாத்ம ஸ்வரூபத்துக்குப் பிடித்ததாய் - ப்ரியமாய் - அபிமதமாய் இருப்பதுடன் அதற்கு ஏற்றதாயும் இருக் கிறது. ஆகவே ஸ்வாபிமதாநுரூப என்று அருளியுள்ளார் ஸ்வாமி எம்பெருமானார். உலகில் ப்ரியமான வஸ்து ஏற்றதாய் இராது; ஏற்ற வஸ்து பிடித்ததாய் - ப்ரியமாய் இராது; அவ்வாறின்றித் திருமேனி எம்பெருமானுக்கு அபிமதமாயும் - ப்ரியமாயும், அவனுக்கு அநுரூபமாயும், ஏற்றதாயும் இருக்கும் என்றபடி.

**ஏகரூபமாயும்** இருக்கும் இந்தத் திருமேனி. ஏகரூபமா யிருக்கிறது என்றால் எப்பொழுதும் எந்த நிலையிலும் எவ்வித மாறுதலுமில்லாமல் இருக்கிறது என்று அர்த்தம். எம்பெருமான் பரவாஸுதேவனாயிருக்கும் நிலையில் கொண்டுள்ள திவ்ய திருமேனிக்கு, அதாவது பரவாஸுதேவ ரூபத்திற்கு எவ்வளவு மஹிமைகள் உண்டோ அவ்வளவு மஹிமைகளும் எம்பெருமான் மற்றைய நிலைகளில், அதாவது வ்யூஹம், விபவம், அர்ச்சை, அந்தர்யாமி என்ற நிலைகளில் கொள்ளும் திருமேனிகளுக்கும் உண்டு என்றபடி.

ராமக்ருஷ்ணாதிகளான விபவாவதாரங்களில் கொண்டுள்ள திருமேனிகளை ராக்ஷஸர்கள் - அஸுரர்கள் அடிக்கும் போது அவற்றில் புண்கள் ஏற்படுவதையும், ரத்தம் பெருகுவதையும் கண்டு இந்தத் திருமேனிகள் நம் ஶரீரம் போன்றவைகள் தான் என்று நினைக்கக்கூடாது. அவ்வாறே அர்ச்சாவதாரத்தில் செப்பு, வெள்ளி, பொன், மரம் முதலியவற்றால் திருமேனிகள் செய்யப் படுகின்றன என்பதால் அவற்றையும் இகழக்கூடாது. இப்படிப் பட்ட திருமேனிகள் கூட ஸ்ரீ வைகுண்டத்தில் ஆதிஶேஷனாகிற



பர்யங்கத்தில் (மெத்தையில்) வீற்றிருக்கும் பரவாஸுதேவ னுடைய திவ்ய திருமேனிக்கு உள்ள பெருமைகள் அனைத்தும் உடையனவேயாம். அதாவது இந்தத் திருமேனிகளும் அப்ராக்ருதங்களேயாம். ஶுபாஶ்ரயங்களும் ஆகின்றன. ஶுபாஶ்ரயம் என்ற பதத்திற்குப் பொருளாவது உபாஸிப்பவர் களுடைய தோஷத்தைப் போக்குகின்றன. த்யாநத்தின் ஆரம்ப தஶையிலேயே த்யாநத்திற்கு இலக்காகின்றன என்பதேயாம். மற்றும் அந்தத் திருமேனிக்கு உள்ள எல்லாப் பெருமைகளும் எம்பெருமான் மற்றைய நிலைகளில் கொள்ளும் திருமேனிகளுக்கும் உண்டு.

எம்பெருமான் தேவனாகவும், ஹம்ஸம், மத்ஸ்யம், முத லான திர்யக்குகளாகவும் மனுஷ்யர்களாகவும் விசித்ரமாக அவதாரம் செய்கிறான். இந்த நிலையில் உள்ள திருமேனிகள் விசித்ரங்களாக பல விதங்களாக இருப்பதைக் கொண்டு அவன் திருமேனி ஏகரூபமாக - ஒரே விதமாக இல்லையே என்று நினைக்க வேண்டாம் இந்த நிலைகளில் கூட இவற்றுக்கு மூல காரணமான பரவாஸுதேவனுடைய திருமேனி - ஸ்ரீ வைகுண் டத்தில் உள்ளது - மாறுபடாமல் ஒரே விதமாக இருப்பதால் இதைக் கொண்டும் எம்பெருமான் திருமேனி ஏகரூபமாய் இருக்கிறது என்றும் சொல்லலாம்.

ஆக இவ்வளவால் எம்பெருமான் திருமேனி பகவானுக்கு அபிமதமாய், அநுரூபமாய் இருப்பதோடு ஏகரூபமாயும் இருக்கிறது என்பது விளக்கப்பட்டது.

---

## 9. ''அசிந்த்யம், திவ்யம், அத்புதம்''

**अचिन्त्यत्वं च दिव्यत्वम् अद्भुतत्वमिह क्रमात् ।**
**वर्ण्यते वपुषो विष्णोः नारायणयतीश्वरैः ॥**

அசிந்த்யத்வம் ச திவ்யத்வம் அத்புதத்வமிஹ க்ரமாத் ।
வர்ண்யதே வபுஷோ விஷ்ணோ: நாராயணயதீஸ்வரை: ॥

ஸ்வாமி எம்பெருமானார் ஶரணாகதி கத்யத்தில் அருளிய சூர்ணிகையின் (வாக்யத்தின்) படி எம்பெருமான் திருமேனி எம்பெருமானுக்கு அபிமதமாயும் (உகந்ததாயும்), அநுரூபமாயும் (ஏற்றதாயும்) ஏகரூபமாயும் (எவ்விதமாறுதலுமின்றி ஒரே மாதிரியாகவும்) இருக்கும் என்பது சென்ற பகுதியில் விளக்கப்பட்டது.

இனி இவற்றுக்கு அடுத்துக்கூறியுள்ள அசிந்த்யத்வம் திவ்யத்வம், அத்புதத்வம் முதலியவற்றை முடிந்தவரை இந்த இதழில் விளக்குவோம். எம்பெருமான் திருமேனி **अचिन्त्य** (அசிந்த்ய) மாய் இருக்கும். சிந்திப்பதற்கு அரிதாய் இருக்கும். கண்ணால் பார்த்து அறியமுடியாத வஸ்துக்கள் சிலவற்றைத் தர்க்கங் கொண்டு இது இப்படிப்பட்டது என்பதை ஒருவாறு அறியலாம். அப்படிக்கூட எம்பெருமானுடைய திருமேனியின் தன்மையை அறியமுடியாது.

ஒரு வஸ்துவைப் புரிந்துகொள்வதற்கு அதற்கு ஒப்பான ஒரு வஸ்துவைக் கொண்டு அதன் தன்மைகளை அறிந்து அம்மாதிரி தான் இதுவும் என்றுகாட்டும் வழி உலகில் உண்டு. அம்மாதிரி கூட பகவானுடைய திருமேனியைப் புரிந்து கொள்ள முடியாது. ஏனெனில் இதற்கு ஒப்பான வேறு ஒரு பொருள் இருந்தால்





அன்றோ அதை இட்டு இதைப் புரிந்து கொள்வதற்கு. இதற்கு ஒப்பான பொருள் வேறு எதுவும் கிடையாதே!

எம்பெருமானுடைய திவ்யமங்கள விக்ரஹத்தை த்யாநம் - சிந்தநம் - செய்யுமாறு ப்ரமாணங்கள் விதித்துக் கூறுகின்றன. இந்தத் திருமேனி சிந்த்யமாய் த்யாநத்திற்கு யோக்யமாய் இருப்பதால்தானே இதைச் சிந்திக்குமாறு-த்யானிக்குமாறு ப்ரமாணங்கள் கூறுகின்றன. ஆக (சிந்த்யமாய்) சிந்திப்பதற்கு ஏற்றதாயிருக்கும் இந்தத் திருமேனியை அசிந்த்யம் - சிந்திப் பதற்குத் தகுதி அற்றது - என்று கூறுவதின் கருத்து என்ன என்று அறியவேண்டும். மற்றைய வஸ்துக்களோடு ஒப்பிட்டு அறிவதற்கு அரிது இந்தத் திருமேனி என்பது தான் இதன் கருத்து.

முகம் சந்த்ரனைப்போல் இருக்கிறது என்று இம்மாதிரி உலகில் ஒத்த பொருளைக் காட்டி வர்ணிப்பது உண்டு. அம்மாதிரி எல்லாம் திருமேனியைக் காட்டி நிரூபிக்க முடியாது என்றபடி.

நம்முடைய ஶரீரத்தைக் காட்டி எம்பெருமான் திருமேனியை நிரூபிக்க முடியாது. நம்முடைய ஶரீரமும் கைகால் முதலான அவயவங்களுடன் கூடியிருக்கிறது. அவனுடைய ஶரீரமும் கைகால் முதலியன அவயவங்களுடன் கூடியிருக்கிறது. ஆக நம்முடைய ஶரீரத்தை ஒருவகையில் ஒப்பாகக் காட்டி இம்மாதிரி தான் அவனுடைய ஶரீரம் இருக்கும் என்று இவ்வாறு கூறு வதும் முடியாததே.

நம்முடைய ஶரீரம் அவயவங்களுடன் கூடியிருப்பதால் அநித்யமாகிறது. எம்பெருமானுடைய ஶரீரம் அவயங்களுடன் கூடியிருந்தாலும் அது நித்யம் என்றே ப்ரமாணங்களால் கூறப் பட்டிருப்பதால் நித்யமாகவே இருக்கிறது. அது அநித்யம் ஆவதில்லை.

ஸாவயவமான அதாவது அவயவங்களுடன் கூடியுள்ள வஸ்து அநித்யமாகத் தானிருக்கும் என்று பொதுவில் ஒரு

வ்யாப்தி, ஒரு நியதி உண்டு. ஆனால் எம்பெருமானுடைய திருமேனி நித்யமானது என்று ஸ்பஷ்டமாக ப்ரமாணங்களில் கூறியிருப்பதால் இந்த வ்யாப்தி இங்கே வராது.

ஆக அவயவங்களுடன் கூடியிருப்பதால் அநித்யமாய்த்தான் இருக்க வேண்டும் என்ற தர்க்கத்திற்கு அப்பாற்பட்டது இந்த எம்பெருமான் திருமேனி. ஆகவே தான் இது அசிந்த்யம் எனப் படுகிறது.

இங்கு ஒரு விஷயம் அறிய வேண்டுவது மிகவும் ஆவஶ்யகம் ஆகும்.

நம் போன்றோரின் ஶரீரம் அநித்யமாயிருப்பதற்குக் காரணம் அவயவங்களுடன் கூடியிருக்கை மட்டும் அன்று. அவயவங்களால் உருவாக்கப்பட்டிருக்கையே காரணம் ஆகும். அவயவங்களுடன் கூடியிருக்கை என்பதற்கும், அவயவங்களால் உருவாக்கப் பட்டிருக்கை என்பதற்கும் பொருளில் நிறைய வேறுபாடு உண்டு. அவயவங்களுடன் கூடியிருக்கை - அவயவங்களை உடையதாயிருக்கை. இது நம் ஶரீரம், எம்பெருமான் திருமேனி இரண்டுக்கும் பொதுவானது. அவயவங்களால் உருவாக்கப் பட்டிருக்கை என்றால் ஒவ்வொரு அவயமாக ஒட்டவைத்து அதன் பிறகு ஒட்டுமொத்தமாக உண்டாக்கப்பட்டிருக்கை. ஒரு தேரை எடுத்துக் கொள்வோம். முதலில் சக்கரம், பட்டரை, கம்பங்கள் முதலானவற்றைத் தனியாகச் செய்து பிறகு ஒன்றாகச் சேர்த்து தேராக உருவாக்கப்படுகிறது. இதுதான் அவயவங்களால் உருவாக்கப்பட்டிருக்கை எனப்படுகிறது. ஶாஸ்த்ரகாரர்கள் இதனை **अवयवारब्धत्व** ம் (அவயவ ஆரப்தத்வம்) என்கிறார்கள். இதுதான் அநித்யமாயிருக்கைக்குக் காரணம். இது நம் ஶரீரத்திற்கு உண்டு. ஆனால் எம்பெருமான் திருமேனிக்கு இது கிடையாது. அவன் திருமேனி நம் ஶரீரம் போல் கைகால் முதலான அவயவங்களால் ஒட்ட வைத்து உருவாக்கப்பட்டதன்று. அவய





வாரப்தம் அன்று. ஆகையால் அது அநித்யமாவதில்லை என்ற உண்மையை நாம் இங்கு அறியவேண்டும்.

ஸ்ரீ ஸஹஸ்ர நாமத்தில் வ்யாஸர் '**अमूर्तिरनघोऽचिन्त्य:** (அமூர்த்திரநகோऽசிந்த்ய:) என்று பகவானை அசிந்த்யன் என்றார். இப்பொழுது இங்கு எம்பெருமானுடைய திருமேனியை அசிந்த்யம் என்று எம்பெருமானார் குறிப்பிட்டருளினார்.

பொருள் மட்டும் இரண்டுக்கும் ஒன்றே. எம்பெருமானையும் ஒப்பான பொருள் காட்டி விளக்க முடியாது. அவன் திருமேனியையும் ஒப்பான பொருள் காட்டி விளக்க முடியாது. இரண்டிற்கும் ஒப்பான பொருள் இல்லையே!

***அசிந்த்யம்:*** இதரஸஜாதீயதயா சிந்தயிதும் அஶக்யமாயிருக்கும் என்று பெரியவாச்சான் பிள்ளை. ''**अचिन्त्यत्वोक्तिः इतरसजातीयतया चिन्तयितुम् अशक्यताम् आह** அசிந்த்யத்வோக்தி: இதரஸஜாதீயதயா சிந்தயிதும் அஶக்யதாம் ஆஹ) என்று ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன். பொருள் முன் விளக்கப்பட்டதேயாகும் அதாவது மற்ற பொருள்களோடு ஒப்பிட்டுப் பார்க்க முடியாதிருக்கையே அசிந்த்யமாயிருக்கை என்றபடி.

மேலும் **திவ்ய**மாயிருக்கும் இந்தத் திருமேனி. திவி பவம் (**दिवि भव** ம்) திவ்யம் - அப்ராக்ருத லோகமான ஸ்ரீ வைகுண்டத்தில் இருப்பது என்ற பொருளைத் தருகிறது இந்த திவ்ய ஶப்தம்.

மேலும் **அத்புத**மாயும் இருக்கும் இந்தத் திருமேனி. அத்புதமாயிருக்கையாவது நிமிஷந்தோறும் புதியதாகத் தோற்றுகை. இதனால் காண்பவர்க்கு மிக்க ஆஶ்சர்யத்தைத் தருவதாயிருக்கும் இந்தத் திருமேனி. பக்தர்களை உருகச் செய்யும். பகைவர்களைக் காலில் விழச் செய்யும். இப்படியிருக்கைதான் அத்புதமாயிருக்கையாகும்.

**"முழுசி வண்டாடிய தண்துழாயின்**
**மொய்ம்மலர்க் கண்ணியும், மேனியம் சாந்து**
**இழுசிய கோலம் இருந்தவாறும்**
**எங்ஙனம் சொல்லுகேன் ? ஓவிநல்லார்**
**எழுதிய தாமரையன்ன கண்ணும்**
**ஏந்து எழில் ஆகமும் தோளும் வாயும்**
**அழகியதாம் இவர் ஆர்கொல் என்ன**
**அட்டபுய கரத்தேன் என்றாரே!"**

***(பெரிய திருமொழி 2.8.7)***

திருமங்கையாழ்வார் நாயகியின் தன்மையைப் பெற்று அஷ்டபுஜத்து எம்பெருமான் திருமேனியிலே ஈடுபட்டதைத் தாயாருக்குக் கூறுகிறார் இதில். அழகிய திருமேனியிலே நெருங்கத் தொடுத்த திருத்துழாய் மாலையைச் சாற்றிக் கொண்டிருந்தார். அந்தத் திருத்துழாய்களில் நிறைந்துள்ள தேனைப் பருகவந்த வண்டுகள் தேனைப்பருகிக் களித்து அதிலே முழுகிப் பரபரப்புடன் நர்த்தனம் செய்கின்றன. இப்படிப்பட்ட மாலையை அணிந்திருக்கும் அழகை எப்படி எடுத்துக் கூறுவது? என்று வியக்கிறார் திருமங்கைநாயகி. மேலும் திருமேனியில் வேண்டும் இடங்களில் நல்ல சந்தனக் குழம்பு பூசப்பட்டுள்ளது. இதையும் என்னால் எப்படிக் கூறமுடியும்?

சித்திரம் எழுதுவதில் வல்லராய் இருப்பவர்கள் எழுதிய தாமரை இதழ் போன்ற கண்கள் இவருடைய திருமுகத்திலே உள்ளன. மிக்க ஒளியுடைய திருமார்பும் திருத்தோள்களும், திருப்பவளமும், அதாவது உதடுகளும், மிக்க அழகுடையனவாயிருக்கின்றன என்று அட்டபுயகரத்து எம்பெருமானுடைய திருமேனியின் அத்புதமான அழகில் ஈடுபட்டுப் பேசுகிறார் திருமங்கைநாயகி.





**सर्वदा सर्वैः, सर्वथा अनुभवेऽप्यपूर्ववदतिविस्मयनीयत्वम् अद्भुतत्वम्**
(ஸர்வதா ஸர்வை:, ஸர்வதா அனுபவேபி அபூர்வவத் அதி விஸ்மயநீயத்வம் அத்புதத்வம்) என்று ஸ்ரீ பட்டர் ஸ்ரீ ஸஹஸ்ரநாமத்தில் 'அத்புத' என்ற 846 வது திருநாமத்திற்கு உரை எழுதும்போது விவரித்துள்ளார். எல்லாக் காலத்திலும், யாவரும், எல்லாவகைகளாலும் அநுபவித்த போதும் தெவிட்டாமல் முன்பு அநுபவித்திராத புதிய பொருள் போலவே தோற்றும்படி இருக்கைதான் அத்புதத்வம் என்றபடி.

**'எப்பொழுதும் நாள் திங்கள் ஆண்டு ஊழி ஊழி தொறும்**
**அப்பொழுதைக்கு அப்பொழுது என் ஆராவமுதமே ||**

**திருவாய்மொழி *(2.5.4)***

என்று ஸ்வாமி நம்மாழ்வாரும் இந்த அத்புதத்வத்தை விளக்கியருளியுள்ளார். இதன் அர்த்தத்தை நம்பிள்ளையும் ஈட்டில் 'க்ஷண காலம், அத்யல்ப காலம் அநுபவிப்பது, ஒரு நாள் அநுபவிப்பது, ஒருமாஸம் அநுபவிப்பது, ஒரு ஸம்வத்ஸரம் (ஆண்டு) அநுபவிப்பது, கல்பம் தோறும் கல்பம் தோறும் அநுபவிப்பது. இப்படிக் காலதத்வம் உள்ளதனையும் அநுபவியா நின்றாலும் பூர்வ க்ஷணத்தில் அநுபவம் போலேயன்று உத்தர க்ஷணத்தில் அநுபவம்' என்று விவரித்துள்ளார்.

அத்புதமாயிருக்கை ஆஶ்சர்யமாயிருக்கையேயாகும். எம் பெருமான் செய்த பற்பல விதங்களான அவதாரங்களுக்கேற்பத் திருமேனியும் பற்பல வடிவங்களில் அமைகின்றது. ஒவ்வொரு நிமிஷமும் அபூர்வமான பொருள்போல் அநுபவிக்கத் தக்கதாய் இருக்கிறது. சிறிய ஆலிலையில் ஶயநம், விஶ்வரூபம் கொள்ளல் முதலான நிலைகளில் காணப்படும் ஆஶ்சர்யமாயிருக்கும் தன்மைதான் இங்கு அத்புத ஶப்தத்தினால் குறிக்கப்படுகிறது என்று ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் அருளுகிறார். ஸ்ரீ ஸஹஸ்ர

நாமத்திலும் **नैकमायः** (நைகமாய:) என்ற திருநாமத்திற்கு வ்யாக்யாநம் அருளிய ஸ்ரீ பட்டர் **मुग्धशिशुरूप-अपरिमित जगन्निगरण-निरालम्बन-एकोदक-वटदलशयनाद्यनन्त-अतर्क्याश्चर्यो- नैकमायः।**

(முக்தஶிஶுரூப-அபரிமித ஜகந்நிகரண- நிராலம்பந- ஏகோதக - வடதளஶயநாத்யநந்த-அதர்க்யா ஆஶ்சர்யோ நைக மாய:)

ஆலினிலையில் ஶயநித்திருக்கும்போது எம்பெருமான் கொண்டுள்ள திருமேனி சிறு குழந்தைத் திருமேனி. இந்த நிலையில் அந்தக் குழந்தை உருவத்தில் அளவற்ற உலகம் அனைத்தையும் விழுங்கி வயிற்றில் அடக்கி வைத்திருந்தான் இவன். குழந்தை உருவத்துடன் வயிற்றில் உலகங்கள் அனைத்தையும் கொண்ட இவன் ஒரு சிறு ஆலிலையில் படுத்திருந்தான். அந்த மரத்தின் வேர் எங்கு உள்ளது. எப்படி நிலைத்திருக்கிறது என்பது ஒன்றுமே புரியாத நிலை. எங்குப் பார்த்தாலும் ஒரே ப்ரளய ஸமுத்ர ஜலம். இதில் எவ்வளவு ஆஶ்சர்யங்கள் அடங்கியுள்ளன. இவற்றுள் ஒன்றைக் கூட யோசித்துப் பார்க்கவும் முடியாதபடி இருந்தது. இதுதான் அத்புதமாய், ஆஶ்சர்யமாயிருக்கை.

பொய்கையாழ்வார் இந்த அத்புத ஆஶ்சர்யச் செயலில் ஈடுபட்டு அவனிடமே ஒரு கேள்வி கேட்கிறார்.

**பாலன் தனதுருவாய் ஏழுலகுண்டு ஆலிலையின்**
**மேலன்று நீ வளர்ந்தது மெய் என்பர்-ஆல் அன்று**
**வேலை நீர் உள்ளதா? விண்ணதோ! மண்ணதோ!**
**சோலை சூழ் குன்றெடுத்தாய் சொல்லு .**

**(முதல் திருவந்தாதி 69)**

உலகங்கள் அனைத்தையும் சிறிய வயிற்றில் அடக்கி வைத்துக்கொண்டு நீ ஆலின் இலைமேல் சிறு குழந்தையாக அன்று துயின்றது உண்மை என்று வைதிகர்கள் கூறுகிறார்கள்.





சிறு பிள்ளையான பருவத்திலேயே மலையைக் கையிலே எடுத்துத் தாங்கி நின்று கோபர்களைக் காத்த ஆஶ்சர்யமான சேஷ்டிதங்களை உடையவனே! அந்த ஆலிலை அலைமோதும் கடலில் இருந்ததா? அல்லது ஒரு பிடிப்புமில்லாமல் நிராலம்பநமாக வானில் (ஆகாயத்தில்) இருந்ததா? அல்லது கரைந்துபோன இப்பூமியில் இருந்ததா நீயே சொல். பொய்கையாழ்வார் பெருவியப்புடன் கண்ணனையே கேட்கிறார். இவ்வாறெல்லாம் திருமேனியின் அத்புதத் தன்மையைப் பூர்வர்கள் விவரித்துள்ளனர்.

---

# 10. திருமேனி ''நித்யம்'', '' நிரவத்யம்''

**मासद्वयेन विच्छिन्नं भगवद्वर्ष्मवर्णनम् ।**
**पुनरारभते हृष्टः नारायणयतीश्वरः ॥**

**नित्यत्वनिरवद्यत्वे भाष्यकारेण दर्शिते ।**
**भगवद्वपुषस्तेऽथ निरूपयति सादरम् ॥**

மாஸத்வயேந விச்சிந்நம் பகவத்வர்ஷ்மவர்ணநம் ।
புநராரபதே ஹ்ருஷ்ட: நாராயணயதீஶ்வர: ॥

நித்யத்வ-நிரவத்யத்வே பாஷ்யகாரேண தர்ஶிதே ।
பகவத்வபுஷஸ்தேऽத நிரூபயதி ஸாதரம் ॥

ஸ்வாமி எம்பெருமானார் ஶரணாகதி கத்யத்தின் ஆரம்பத்தில் எம்பெருமானுடைய திருமேனியைப் பற்றி ஒரு சூர்ணிகை யினால் மிக அத்புதமாக வர்ணித்துள்ளார். அதில் உள்ள ஒவ்வொரு பதத்தையும் பூர்வாசார்யர்கள் விவரித்துள்ள முறையில் நாம் ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியா இதழ்களில் விளக்கி வருகிறோம்.

சென்ற இதழில் எம்பெருமான் திருமேனி அசிந்த்யமாயும், திவ்யமாயும் அத்புதமாயும் இருக்கிறது என்ற விஷயம் விளக்கப் பட்டது. அதாவது (1) அசிந்த்யமாயிருக்கை, (2) திவ்யமா யிருக்கை, (3) அத்புதமாயிருக்கை என்ற மூன்று விஷயங்கள் விளக்கப்பட்டன. எம்பெருமானுடைய திருமேனி நித்யமாயும், நிரவத்யமாயும் இருக்கும் என்றும் அருளியுள்ளார் எம்பெருமானார். இப்பொழுது இவ்விரண்டையும்- அதாவது நித்யமாயிருக்கை, நிரவத்யமாயிருக்கை என்ற இரண்டையும் இங்கு விவரிக்கிறோம்.





எம்பெருமானுடைய திருமேனி நித்யமாயிருக்கும் என்றபடி. நம்முடைய ஶரீரங்கள் அநித்யங்களாயிருப்பது போல் எம்பெரு மானுடைய திவ்ய திருமேனி அநித்யமாயிராது. நித்யமாகவே இருக்கும் என்று கருத்து.

இப்படி நித்யமாயிருக்கும் திருமேனி பரவாஸுதேவ னுடையதாகும். பரவாஸுதேவன் கொண்டுள்ள திருமேனி தான் நித்யமாயிருக்கும். விபவாவதாரங்களில் ராமன், க்ருஷ்ணன் முதலான எம்பெருமான்கள் கொண்டுள்ள திருமேனிகள் அநித்யங்கள்.

ஸ்ரீ வைகுண்டத்தில் ஆதிஶேஷனாகிற மெத்தையில் எழுந் தருளியிருக்கும் பரவாஸுதேவனுடைய திவ்ய திருமேனி இங்கு நித்யம் என்று கூறப்படுகிறது. **'नित्यं नित्याकृतिधरं'** (நித்யம் நித்யாக்ருதிதரம்) முதலான ப்ரமாணங்கள் பரவாஸுதேவனான எம்பெருமானுடைய திருமேனி நித்யமானது என்று கூறுகின்றன. அதைத்தான் ஸ்ரீ பாஷ்யகாரர் சுருக்கி 'நித்யம்' என்று ஒரே பதத்தினால் குறிப்பிட்டருளியுள்ளார்.

எம்பெருமான் அவ்வப்பொழுது அவதார காலங்களில் கொள்ளும் திருமேனிகள் அநித்யங்களாயினும் பரவாஸு தேவனுடைய திருமேனி எப்பொழுதும் உள்ளதாய், அதாவது நித்யமாய் இருக்கும். இப்படி எம்பெருமானுடைய திருமே னியை நித்யம் என்றதால் அது கல்பிக்கப்பட்டது, அதாவது தோற்றுவிக்கப்பட்டது, ஒருவரால் செய்யப்பட்டது, என்றெல் லாம் பிறர் கூறும் வாதங்கள் தப்பானவை என்று சொல்லப் பட்டதாகிறது.

அவதாரங்களில் எம்பெருமான் கொண்டுள்ள திருமேனிகள் அநித்யங்களாயினும் அவை பொய்யானவை அல்ல. ஸத்யங்க ளானவையே என்பதும் அறியத்தக்கது. மற்றைய மதத்தினர்

எம்பெருமானுடைய அவதாரத் திருமேனிகள் அவித்யையினால் தோற்றுவிக்கப்பட்டவையே என்று கூறுகின்றனர். அது தவறானது என்பது இதனால் கூறப்பட்டதாகிறது.

பரவாஸுதேவனான எம்பெருமானுடைய திருமேனி நித்யம் என்பதில் ப்ரமாணங்கள் பற்பல உள்ளன.

தத்த்வத்ரயத்தில் எம்பெருமானுடைய திவ்ய திருமேனியை விளக்கும் சூர்ணிகையில் - வாக்யத்தில் - உள்ள நித்யமா யிருக்கும் என்ற பதத்திற்கு வ்யாக்யாநம் செய்யும் போது ஸ்ரீ மணவாள மாமுனிகள் ''நித்யம் ஆகையாவது - ஸ்வரூப குணங்களோபாதி அநாதிநிதநமாயிருக்கை'' என்று அருளி யுள்ளார். அதாவது எம்பெருமானுடைய ஸ்வரூபம் நித்யம், அவனுடைய குணங்களும் நித்யங்கள். அவ்வாறே எம்பெருமானுடைய திருமேனியும் நித்யமாயிருக்கும் என்றபடி.

ஸ்வரூப குணங்களோபாதி (ஸ்வரூபகுணங்களைப் போலே) அநாதிநிதநமாயிருக்கை (**अनादिनिधन** மாய் இருக்கை) = ஆதியும், அழிவும் இல்லாதிருக்கை என்றபடி.

ஆக இவ்வளவால் எம்பெருமானுடைய திருமேனி நித்யமா யிருக்கும் என்றபடி.

இப்படிப்பட்ட திருமேனி **'निरवद्य'** (நிரவத்ய)முமாய் இருக்கும் என்று அருளியுள்ளார் எம்பெருமானார்.

**निरवद्यम் (நிரவத்யம்)** தோஷம் இல்லாதிருக்கை. நம் போன்ற கர்மபரவஶர்களான ஜீவர்களுடைய ஶரீரத்திற்குப் பல தோஷங்கள் உண்டு. அவற்றில் ஒன்றும் எம்பெருமானுடைய திருமேனிக்குக் கிடையாது என்றபடி.

நம்முடைய ஶரீரங்கள் நாம் முன்பு செய்த நல்வினை, தீவினைகள் (புண்யங்கள், பாபங்கள்) இவை காரணமாக





உண்டானவை. துன்பங்களைத் தருகின்றவை. இம்மாதிரியான வகைகளில் பல தோஷங்களை உடையது நம்முடைய ஶரீரங்கள்.

எம்பெருமானுடைய திருமேனி அப்படிப்பட்டது அன்று. அதாவது புண்ய பாபங்களாகிற கர்மாக்களால் உண்டானதன்று. அது ஒருபோதும் எந்தத் துன்பத்தையும் தராதது. நம் ஶரீரத்தில் முதுமை முதலான தோஷங்கள் உண்டு. அவன் திருமேனியில் இவையும் கிடையா.

நம்முடைய ஶரீரத்தை எடுத்து அதில் உள்ள தோஷங்களைக் காட்டி இம்மாதிரியான தோஷங்கள் ஒன்றும் எம்பெருமா னுடைய திருமேனிக்கு இல்லை என்று இதுவரை கூறப்பட்டது.

இனி எம்பெருமானுடைய திவ்யாத்ம ஸ்வரூபத்திற்குக் கூட ஒரு தோஷம் உண்டு. அதுவும் அவனுடைய திருமேனிக்குக் கிடையாது என்று ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் காட்டி யருளுகிறார். அதாவது எம்பெருமானுடைய திவ்யாத்ம ஸ்வரூபம் கல்யாண குணங்கள் பல நிறைந்திருப்பினும் அதற்கு ஒரு தோஷம் உண்டு. அதாவது யோகம் செய்ய ஆரம்பிக்கின்றவர்களால் அறியமுடியாமல் இருப்பதேயாகும். யோகம் செய்ய ஆரம்பிப்பவர்களால் எம்பெருமானுடைய திவ்யாத்ம ஸ்வரூபத்தைப் பற்றி அறிய முடியாது. முதிர்ந்த யோகம் பெற்றவர்களால் தான், த்யாநம் செய்து முதிர்ச்சி பெற்றவர்களால் தான் இந்த திவ்யாத்ம ஸ்வரூபத்தை அறிய முடியும். ஆக த்யாநத்தின் (யோகத்தின்) ஆரம்ப நிலையில் இருப்பவர்களால் அறிய முடியாமல் இருக்கை என்ற ஒரு தோஷம் எம்பெருமானுடைய திவ்யாத்ம ஸ்வரூபத் திற்கு உள்ளது. அந்த தோஷமும், அவனுடைய திருமேனிக்குக் கிடையாது. எப்பொழுதும், யாராலும் எளிதில் அறியும்படியா யிருக்கும் இந்தத் திருமேனி. ஆகவே, யோகத்தின் ஆரம்ப நிலையில் உள்ளவர்களால் அறியமுடியாதிருக்கை என்ற தோஷம் உடைய திவ்யாத்ம ஸ்வரூபத்தைக் காட்டிலும் இந்த

தோஷமும் இல்லாமல் இருக்கும் இவனுடைய திருமேனி சிறந்தது என்று தெளிவாகிறது இதனால்.

ஸ்வாமி எம்பெருமானார் கத்யத்தில் எம்பெருமான் திரு மேனியை வர்ணிக்கும் வாக்யத்தில் 'திவ்ய-அத்புத- நித்ய -நிரவத்ய' என்று இவ்வாறு சேர்த்து அருளிச் செய்துள்ளார். இதன்படி, திவ்யத்வம், அத்புதத்வம், நித்யத்வம், நிரவத்யத்வம் என்றிவ்வாறாக ஒவ்வொன்றையும் தனித்தனி குணமாகக் கொண்டு வ்யாக்யாநம் செய்யப்பட்டது.

ஆனால் பெரியவாச்சான்பிள்ளை 'நித்ய-நிரவத்ய' என்று இரண்டு பதங்களும் தனித்தனியே 'நித்யத்வம்- நிரவத்யத்வம்' என்று இரண்டு குணங்களைக் கூறுகின்றன என்று கொள்ளாமல் 'நித்ய-நிரவத்ய' என்று இரண்டு பதங்களையும் 'நித்ய நிரவத்யம்' என்று ஒன்றாகச் சேர்த்து 'எப்பொழுதும் தோஷம் அற்றிருக்கை' என்று ஒரே குணமாக வ்யாக்யாநம் செய்துள்ளார். சில வஸ்துக்கள் ஒரு ஸமயம் தோஷமில்லாமல் (நிரவத்யமாய்) இருந்து பிறகு இந்த நிலை மாறிப்போய் தோஷம் உள்ளதாய் (ஸாவத்யமாய்) ஆகிவிடுவது உண்டு. எம்பெருமான் திருமேனி அப்படியின்றி எப்பொழுதும் தோஷம் அற்றிருக்கும் என்று அர்த்தம் கூறுகிறார்.

பெரியவாச்சான்பிள்ளை திருமேனிக்கு 'இல்லை' என்று கூறும் தோஷமும் விசித்ரமானது. அதாவது ஸ்வார்த்தமாயிருக்கை தோஷம். தனக்கென்றிருக்கை தான் அது. இது மிகப்பெரிய தோஷம். எப்பொழுதும் இந்த தோஷம் இல்லாததாயிருக்கும் எம்பெருமான் திருமேனி. இந்தக் கருத்தைக் குறிக்கும் ஸ்ரீ ஸூக்தி இதோ-'நித்ய நிரவத்யம் - நித்ய நிர்தோஷமாயிருக்கை. அதாவது என்றும் ஒக்க ஸ்வார்த்தமாயிராதொழிகை.'

உலகில் ஒருவன் நிறையப் பணம் வைத்திருக்கிறான். அந்தப் பணம் தனக்காகத் தான் இருக்கிறது. இது பிறர்க்காக அல்ல. இந்தப் பணத்தைக் கொண்டு நான் தான் ஸுகத்தை அநுபவிப்





பேன், என்னுடைய பணம் என்னுடைய ஸுகத்திற்காகத்தான் இருக்கிறது, இதைக்கொண்டு பிறர் யாரும் ஸுகம் பெறக்கூடாது என்று இருந்தால் இது அந்தப் பணத்திற்கு உள்ள மிகப்பெரிய தோஷமாகும். பிறர்க்குப் பயன்படாத பணம் இருந்தும் பயனில்லை தானே.

அந்த ஒருவனிடம் உள்ள அந்தப் பணமே அவனுக்காக அன்றிப் பிறர்க்காகவே இருந்தால் அந்த நிலை அந்தப் பணத் திற்கு மிக்க பெருமையைத் தருவதால் அது குணமாகும்.

இந்த வகையில் எம்பெருமான் கொண்டுள்ள அத்புதமான ஆநந்தமயமான இந்தத் திருமேனி யாருக்காக ஏற்பட்டது? இந்தத் திருமேனி எம்பெருமானுடையது தான். அவன் தான் இதைக் கொண்டுள்ளான். ஆனால் யாருக்காக இந்தத் திருமேனியைக் கொண்டுள்ளான் என்பதைத்தான் பார்க்க வேண்டும்.

ஆநந்த ரூபமான இந்தத் திருமேனியைக் கொண்டு, தான் மட்டும் இன்பத்தை அநுபவித்தால் அது அவனுக்கு ஸ்வார்த்த மாகிறது. பிறர்களுக்கு இந்தத் திருமேனி கொஞ்சமும் பயன்பட வில்லை என்று கொண்டால் இது தோஷமாகும் இந்தத் திருமே னிக்கு. ஆனால் எம்பெருமான் கொண்டுள்ள திருமேனி அவனுக் காக அன்று. அது ஸ்வார்த்தம் அன்று. பின்னை? பரார்த்தமே. பிறர்களுக்காகவே. சில நாட்கள் மட்டும் இப்படி என்பதில்லை. எப்பொழுதுமே பரார்த்தமாகப் பிறர்களுடைய ஆநந்தத்திற் காகவே இந்தத் திருமேனி ஏற்பட்டுள்ளது. ஆகவேதான் இது நித்ய நிரவத்யமாயிருக்கிறது என்று கூறப்பட்டது.

**न ते रूपं नचाऽऽकारो नाऽऽयुधानि न चाऽऽस्पदम् ।**
**तथाऽपि पुरुषाकारो भक्तानां त्वं प्रकाशसे ॥**

ந தே ரூபம் ந சாऽऽகாரோ நாऽऽயுதாநி ந சாऽऽஸ்பதம் ।
ததாऽபி புருஷாகாரோ பக்தாநாம் த்வம் ப்ரகாஶஸே ॥

எம்பெருமானே! உன்னுடைய திவ்யாத்ம ஸ்வரூபம், திவ்ய மங்கள விக்ரஹம், திவ்யாயுதம், ஸ்ரீ வைகுண்டம் முதலான உன்னுடைய திவ்யாஸ்தாநங்கள் இவையெல்லாம் உனக்காக அல்ல. இவையனைத்தும் பக்தர்களுக்காகத் தான் ஏற்பட்டவை என்றபடி.

இப்படி எம்பெருமான் திருமேனி பக்தர்களுக்கு ஆநந்தம் தருவதற்காகவே ஏற்பட்டுள்ளது என்பது இதனால் தெளிவாகிறது.

திருமங்கையாழ்வார் திரு இந்தளூர் என்ற திவ்ய தேஶத்திற்கு எம்பெருமானை மங்களாஶாஸநம் செய்ய எழுந்தருளுகிறார். ஆனால் இவர் நினைத்தபோது பெருமாள் ஸேவை கிடைக்க வில்லை. அதனால் வருந்திய இவர் 'வாசிவல்லீர் இந்தளூரீர் வாழ்ந்தே போம் நீரே!'' என்று வெறுத்துப் பாசுரம் அருளியுள்ளார். 'இந்தளூரீர்! வாழ்ந்தே போம் நீரே' என்ற (பெரிய திருமொழி 4.9.4) இதன் உரையில் பெரியவாச்சான் பிள்ளை- ''உம்முடைய (இந்தளூர் எம்பெருமானுடைய) உடம்பு உம்மை ஆசைப்பட்டார்க்காகக் கொண்டது என்றிருந்தோம். அங்கன் அன்றாகில் அத்தை நீரே கட்டிக்கொண்டு வாழும்'' என்று அருளியுள்ளார்.

அயலாருக்காகக் கொண்ட பொருள் அவர்களுக்குப் பயன் படாதபோது இம்மாதிரி சொல்வது உலக இயல்புதானே.

ஆக இதனால் எம்பெருமான் திருமேனி பக்தர்களுக்காக ஏற்பட்டது என்பது தெளிவாகிறது.

இப்பொழுது தனக்காகவே ஏற்பட்டது இது என்ற தோஷம் இதற்கு இல்லையன்றோ? அதனால் தான் நித்யநிரவத்யமா யிருக்கிறது எம்பெருமானுடைய திருமேனி என்கிறார் பெரிய வாச்சான்பிள்ளை.





ஆக எம்பெருமான் திருமேனி நம் ஶரீரத்தைக்காட்டிலும் சிறந்தது. எம்பெருமானுடைய திவ்யாத்மஸ்வரூபத்தை விடவும் சிறந்தது என்றெல்லாம் இதுவரை கூறப்பட்டன.

---

# 11. ''ஔஜ்ஜ்வல்யம் - ஸௌந்தர்யம் - ஸௌகந்த்யம்''

**औज्ज्वल्यं निरतिशयं तथा सौन्दर्यमित्यपि ।**
**तथाविधं च सौगन्ध्यं भगवद्वपुषो विदुः ।।**
**प्रमाणैस्तानि निर्ब्रूते पूर्वाचार्यप्रदर्शितैः**
**नारायणो यतीशानः मालोलार्चननिर्वृतः ।।**

ஔஜ்ஜ்வல்யம் நிரதிஶயம் ததா ஸௌந்தர்யமித்யபி ।
ததாவிதஞ்ச ஸௌகந்த்யம் பகவத்வபுஷோ விது: ।
ப்ரமாணை: தாநி நிர்ப்ரூதே பூர்வாசார்யப்ரதர்ஶிதை: ।
நாராயணோ யதீஶாந: மாலோலார்ச்சநநிர்வ்ருத: ।।

ஶரணாகதி கத்யத்தில் ஸ்வாமி எம்பெருமானார் அருளிச் செய்த முறையில் எம்பெருமான் திருமேனியின் குணங்களில் நித்யத்வம், நிரவத்யத்வம் என்ற இரண்டும் முன் விளக்கப் பட்டன. இந்த இதழில் அவற்றுக்கு அடுத்தாற்போல் கூறப் பட்டுள்ள நிரதிஶய ஔஜ்ஜ்வல்யம், நிரதிஶயஸௌந்தர்யம்; நிரதிஶயஸௌகந்த்யம் என்ற மூன்று குணங்கள் விளக்கப் படுகின்றன.

இவற்றுள் நிரதிஶய ஔஜ்ஜ்வல்யம் என்பது இதற்கு மேலான சிறந்த ஒளி கிடையாது என்னும்படி மிக உயர்ந்த ஒளியைப் பெற்றிருக்கையாகும்.

'எல்லா தேஜஸ்ஸுக்களையும் அகப்படுத்திக் கொண்டி ருக்கும் ஔஜ்ஜ்வல்யம்' என்று பெரியவாச்சான் பிள்ளை அருளி யுள்ளார்.

உலகில் அக்நியினுடைய ப்ரகாஶத்தைவிட நக்ஷத்ரங்களின் ப்ரகாஶம் சிறந்திருக்கும். அதைவிடச் சந்த்ரனின் ப்ரகாஶம்





சிறந்திருக்கும். இப்படி மேன்மேலும் போய்க் கொண்டே யிருக்கும் ஒளிப்பொருள்களின் ப்ரகாஶம். ஆனால் எம்பெருமா னுடைய ப்ரகாஶத்தைவிடச் சிறந்த ப்ரகாஶம் வேறு எதற்கும் கிடையாது என்று சொல்லும்படி மற்றைய ஒளிப்பொருள்களின் ப்ரகாஶங்களையெல்லாம் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கும் எம்பெருமானுடைய ப்ரகாஶம் என்பது.

கண்ணன் ஹஸ்தினாபுரத்தில் துர்யோதநனுடைய அரண் மனைக்கு எழுந்தருளினான். அப்பொழுது தன்னுடைய ஒரு திருக்கையினால் விதுரரையும் மற்றொரு திருக்கையினால் ஸாத்யகி என்பவரையும் பற்றிக்கொண்டு எழுந்தருளினான்.

அந்த ஸமயத்தில் அங்கு இருந்த அரசர்களுடைய முககாந்தி முழுவதும் மறைந்து விட்டது.

ஸூர்யன் உதித்தால் சந்த்ரன், நக்ஷத்ரங்கள் முதலானவற்றின் ஒளிகள் யாவும் ஒடுங்கிவிடுவதைப் பார்த்துத் தானே வருகி றோம். அம்மாதிரிதான் கண்ணனுடைய தேஜஸ்ஸினால் மற்றை அரசர்களுடைய முக தேஜஸ் முழுவதும் மறைக்கப்பட்டு விட்டது என்கிறார் வ்யாஸர்.

**पाणौ गृहीत्वा विदुरं सात्यकिं च महाबलम् ।**
**ज्योतींष्यादित्यवद्राजन्! कुरून् प्रच्छादयन् श्रिया ।।**

பாணௌ க்ருஹீத்வா விதுரம் ஸாத்யகிம் ச மஹாபலம் ।
ஜ்யோதீம்ஷ்யாதித்யவத் ராஜந்! குரூந் ப்ரச்சாதயந் ஶ்ரியா ।।

என்று. இங்கு எடுத்துக்காட்டிய உதாஹரணத்தில் ஸூர்ய னுடைய தேஜஸ் மற்றைய ஒளிப்பொருள்களின் ஒளிகளை மறைப்பதாகக் கூறப்பட்டுள்ளது. ஆனால் அந்த ஸூர்யனுடைய ஒளியையும் கூட மறைக்கும் பெருமை வாய்ந்தது எம்பெருமா னுடைய ஔஜ்ஜ்வல்யம்-ஒளி.

**न तत्र सूर्यो भाति न चन्द्रतारकं नेमा विद्युतो भान्ति कुतोऽयमग्निः ।**

**तमेव भान्तमनुभाति सर्वं तस्य भासा सर्वमिदं विभाति ॥**

ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ரதாரகம் நேமா வித்யுதோ
பாந்தி குதோऽயம் அக்நி: ।

தமேவ பாந்தம் அநுபாதி ஸர்வம் தஸ்ய பாஸா
ஸர்வமிதம் விபாதி ॥

என்று உபநிஷத் கூறுகிறது. எம்பெருமானுக்கு எதிரில் ஸூர்யன், சந்த்ரன், நக்ஷத்ரங்கள், மின்னல் இவை ஒன்றுமே ப்ரகாஶிக்காது. இப்படி இருக்க எம்பெருமான் எதிரில் அக்நி ப்ரகாஶிக்காது என்பது பற்றிச் சொல்லவும் வேண்டுமா? இவையனைத்தும் எம்பெருமானுடைய தேஜஸ்ஸினால் தான் ஒளிபெற்று விளங்குகின்றன. ஆக மற்றைய ஒளிப்பொருள்களை எல்லாவற்றையும் தன்னுள்ளே கொண்டுள்ளான் எம்பெருமான் என்றபடி-

இந்த அர்த்தத்தைப் பரமஶிவனும் ஸ்ரீ ந்ருஸிம்ஹாநுஷ்டுப் மந்த்ரத்தில் உள்ள நான்காவது பதமான ஜ்வலந்தம் என்ற பதத்திற்கு வ்யாக்யானமாக மந்த்ரராஜபத ஸ்தோத்ரத்தில் ஒரு ஶ்லோகத்தினால் விளக்கிக் கூறுகிறார். அந்த ஶ்லோகமாவது.

**ज्योतींष्यर्केन्दुनक्षत्रज्वलनादीन्यनुक्रमात् ।**

**ज्वलन्ति तेजसा यस्य ज्वलन्तं तं नमाम्यहम् ॥**

ஜ்யோதீம்ஷ்யர்கேந்துநக்ஷத்ரஜ்வலநாதீந்யநுக்ரமாத் ।

ஜ்வலந்தி தேஜஸா யஸ்ய ஜ்வலந்தம் தம் நமாம்யஹம் ॥

என்றபடி.





ஸூர்யன், சந்த்ரன், நக்ஷத்ரங்கள், அக்நி இவை முதலான ஒளிப்பொருள்கள் அனைத்தும் ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிம்ஹனுடைய தேஜஸ்ஸினால் தான் ப்ரகாஶிக்கின்றன.

இவ்வாறு மற்றைய ஒளிப்பொருள்களின் ஒளிகளை மறைக்கும்படியான பெருமையுடைய ஒளியைப் பெற்றவன் ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்ஹனேயாவான். ஆகையால் **ஜ்வலந்தம் தம்** - ஜ்வலிக்கின்றவனான ஸ்ரீ ந்ருஸிம்ஹனை வணங்குகிறேன் என்கிறார் ருத்ர பகவான்.

'நந்தாத கொழுஞ்சுடரே' என்றும் 'ஒண்சுடர்க்கற்றை' என்றும் 'ஆதி அம்சோதி' என்றும் ஆழ்வார்கள் எம்பெருமானை ஒளிமயமாக உஜ்ஜ்வலஸ்வரூபியாக வர்ணித்துள்ளார்கள்.

ஆகவேதான் 'ஸர்வ தேஜஸ்ஸுக்களையும் அகப்படுத்திக் கொண்டிருக்கும் ஔஜ்ஜ்வல்யம்'' என்று கூறப்பட்டது.

எம்பெருமான் திருமேனியினுடைய இப்படிச் சிறந்த ஔஜ்ஜ்வல்யத்தை ஸ்ரீ கீதையில் வ்யாஸ பகவான் நன்கு விளக்கிக் காட்டுகிறார்.

**दिवि सूर्यसहस्रस्य भवेद्युगपदुत्थिता ।**

**यदि भास्सदृशी सा स्याद् भासस्तस्य महात्मनः ॥**

***(ஸ்ரீ கீதை 11-12)***

**திவி ஸூர்யஸஹஸ்ரஸ்ய பவேத் யுகபதுத்திதா ।**

**யதி பாஸ்ஸத்ருஶீ ஸா ஸ்யாத் பாஸஸ்தஸ்ய மஹாத்மந: ॥**

என்று. இந்த ஶ்லோகம் எம்பெருமானுடைய திருமேனி ஒளி அபரிமிதமானது என்பதைக் காட்டுகிறது என்று ஸ்வாமி எம்பெருமானார் அருளியுள்ளார்.

ஆயிரம் ஸூர்யன்களிலிருந்தும் ஒரே ஸமயத்தில் ஒளிக் கற்றைகள் கிளம்பவேண்டும். அவ்வாறு கிளம்பும் ஒளிக்

கற்றைக்கு ஒப்பாகும் எம்பெருமான் திருமேனி ஒளி என்று இங்குக் கூறப்படுகிறது.

இங்கு ஆயிரம் ஸூர்யன்கள் என்று கணக்கிட்டுக் கூறியிருப்ப தால் எம்பெருமானுடைய திருமேனி ஒளியும் கணக்கில் அடங்கி விடும் அன்றோ! ஆயிரம் ஸூர்யன்களின் ஒளியைவிடப் பத்தா யிரம் ஸூர்யன்களுடைய ஒளி சிறந்ததாகத் தானே இருக்கும். ஆகையால் ஆயிரம் ஸூர்யன்களின் ஒளிக்கு ஒப்பான எம்பெரு மான் திருமேனி ஒளி பத்தாயிரம் ஸூர்யன்களின் ஒளியைவிடக் குறைந்ததாகத் தானே இருக்கும் என்று எண்ணவேண்டாம் என்பதை ஸ்வாமி எம்பெருமானார் முன்காட்டிய ஸ்ரீ கீதா ஶ்லோகத்தின் வ்யாக்யாநத்தில் **तेजसोऽपरिमितत्वदर्शनार्थमिदम् । अक्षय्यतेजस्स्वरूपमित्यर्थः ।** (இங்கு எம்பெருமானுடைய திருமேனி யின் தேஜஸ் அபரிமிதம் என்பதைக் காட்டுவதற்காகவே இந்த உதாஹரணம். எம்பெருமானுடைய திருமேனி ஒளி குறைவற்றது என்றபடி) என்று அருளியுள்ளார். இங்கு **सहस्रं** (ஸஹஸ்ரம்) ஆயிரம் என்பது எண்ணைக் குறிப்பதன்று. அநந்தம் என்ற பொருளைக் குறிப்பதாகும். அநந்தம்-எல்லை (முடிவு) அற்றது என்றபடி.

இதுதான் நிரதிஶய ஔஜ்ஜ்வல்யமாகும். இதனால் இப்படிப் பட்ட தேஜஸ்ஸை உடைய எம்பெருமானுடைய திருமேனி பரமபோக்யமாய் எப்பொழுதும் அநுபவிப்பதற்கு உரியதா யிருக்கும் என்று கூறப்பட்டதாகிறது.

இதற்கு மேல் இங்கு ஒரு ஸந்தேஹம் (கேள்வி) எழக் கூடும். அதாவது எம்பெருமானுடைய திருமேனி ஶுத்த ஸத்த்வமய மான, ப்ரக்ருதியின் கார்யமாகாத, ஸ்வயம் ப்ரகாஶமான ஒரு த்ரவ்யத்தினால் ஆனது. அவ்வாறே ஸ்ரீ வைகுண்டம் சென்றுள்ள முக்தர்களுடையவும், அங்கேயே எப்பொழுதும் இருக்கிற நித்யஸூரிகளுடையவும் ஶரீரங்கள் கூட இந்த அப்ராக்ருதமான





த்ரவ்யத்தைக் கொண்டுதானே செய்யப்பட்டுள்ளன. ஆக எம் பெருமானுடைய திருமேனி, நித்யர்கள் முக்தர்கள் இவர்க ளுடைய ஶரீரங்கள் யாவற்றுக்கும் ஒரே த்ரவ்யம் தான். அதாவது ஒரே இனத்தைச் சார்ந்த த்ரவ்யந்தான் மூலகாரணம் ஆகிறது. ஆகையால் ஒரே த்ரவ்யத்தினால் உண்டான ஶரீரங்கள் யாவும் ஒரே மாதிரியாகத்தானே இருக்க வேண்டும். 22 'காரெட்' உடைய தங்கக்கட்டியிலிருந்து செய்யப்பட்ட நகைகள் பலவாக இருப்பினும் அவற்றின் பண்பு-இயல்பு 'காரெட்' மதிப்பு யாவும் ஒரே மாதிரியாகத்தானே இருக்கிறது. அவ்வாறே தான் இங்கும் ஒரே மூலகாரணத்திலிருந்து- அதாவது அப்ராக்ருதமான ஶுத்த ஸத்வத்ரவ்யத்திலிருந்து உண்டான நித்யமுக்தர்களுடையவும் எம்பெருமானுடையவுமான ஶரீரங்களுக்கும் ஒரே மாதிரியான தன்மைதானே இருக்க வேண்டும். இதுதானே பொதுவான நியதி. இதன்படித்தானே இங்கும் இருக்க வேண்டும். இப்படி இருக்க எம்பெருமான் திருமேனிக்கு மட்டும் நிரதிஶய ஔஜ்ஜ்வல்யம் உண்டு என்று கூறுவது எப்படிப் பொருந்தும்? என்பதே இங்கு ஸந்தேஹம்- கேள்வி-ஆகும்.

இதற்கு உரிய பதில் இதோ-ஒரே இனத்தைச் சார்ந்த த்ரவ்யத் தினால் உண்டான பல பொருள்களுக்குள்ளும் ஏற்றத்தாழ்வு களைக் கொண்ட வெவ்றோன பண்புகள்- இயல்புகள்- தன்மைகள் உண்டு. இதற்கும் ஏற்ற உதா ஹரணம் ஒன்றைக் காணலாம். மின்மினிப்பூச்சி, நக்ஷத்ரங்கள், சந்த்ரன், ஸூர்யன் இவற்றின் ஶரீரங்கள் அனைத்தும் ஒரே த்ரவ்யத்திலிருந்து - அதாவது ஒரே மூல காரணத்திலிருந்து தோன்றியவையேயாகும். இவையனைத் தும் தேஜஸ் என்ற த்ரவ்யத்திலிருந்து தோன்றியதேயாகும். ஆனாலும் மின்மினிப் பூச்சியின் ஶரீரத்தைக் காட்டிலும் அதிக மான ஒளி நக்ஷத்ர தேவதைகளின் ஶரீரத்திலிருக்கிறது. இதைவிட அதிகமான ஒளி சந்த்ரனுடைய ஶரீரத்திலும், அதைவிட அதிக மான ஒளி ஸூர்யனுடைய ஶரீரத்திலும் இருக்கிறது.

இப்படி ஒரே இனத்தைச் சார்ந்த த்ரவ்யத்திலிருந்து தோன்றிய முன் கூறிய ஶரீரங்களில் ஏற்றத்தாழ்வுடைய ஒளிகள் இருப்பது போல் நித்ய ஸூரிகள், முக்தர்கள், எம்பெருமான் இவர்களுடைய ஶரீரங்கள் அனைத்தும் கூட ஒரே த்ரவ்யத்திலிருந்து தோன்றியனவேயாயினும் இவற்றுக்குள் ஏற்றத்தாழ்வுடைய ஔஜ்ஜ்வல்யம் இருக்கலாம் அன்றோ? இதை நன்கு மனதில் வாங்கிக் கொண்டால் முற்கூறிய ஸந்தேஹமோ கேள்வியோ எழாது.

இவ்விஷயத்தை தத்த்வத்ரயத்தில் எம்பெருமான் திருமேனியைப் பற்றி விளக்கும் சூர்ணிகையில் (வாக்யத்தில்) உள்ள 'இவ்விக்ரஹந்தான் நிரவதி **(धि)** க தேஜோரூபமாய் இருக்கும்' என்ற அம்ஶத்துக்கு (பாகத்துக்கு) வ்யாக்யாநம் செய்யுமிடத்தில் மாமுனிகள் நன்கு விளக்கியருளியுள்ளார். அங்குள்ள ஸ்ரீ ஸூக்திகள் இவை.

நிரவதிக தேஜோரூபமாகையாவது 'நித்ய முக்த விக்ரஹங்களும் இதுவும் ஏகஜாதீயத்ரவ்யமாயிருக்கச் செய்தே ஏகஜாதீய த்ரவ்யாத்மகமான கத்யோத **(खद्योत)** ஶரீரதேஜஸ்ஸைக் காட்டில் ஆதித்ய ஶரீரத்திற்கு உண்டான தேஜோதிஶயம் போலே இவை ஸாவதிகதேஜஸ்ஸாம்படி, தான் நிரவதிக தேஜஸ்ஸை வடிவாக உடைத்தாயிருக்கை'. இதன் பொருள்தான் இங்கு விளக்கப் பட்டது.

இதுவரை எம்பெருமான் திருமேனியின் ஏற்றத்தை அருளிச் செய்தார். இனி எம்பெருமான் திருமேனியின் குணங்களை அருளிச் செய்கிறார். **(खद्योत)** *(கத்யோத: - மின்மினிப் பூச்சி)*

ஸ்வாபிமதமாயும் (தனக்கு மிக உகந்ததாயும்) ஸ்வாநுரூபமாகவும் (தனக்கு ஏற்றதாயும்) ஏக ரூபமாயும், அசிந்த்யமாயும், திவ்யமாயும், அத்புதமாயும், நித்யமாயும், நிரவத்யமாயும், நிரதிஶயமான ஔஜ்ஜ்வல்யத்தை உடையதாயும் இருக்கும் எம்பெருமான் திருமேனி என்று இதுவரை கூறப்பட்டது. பக்தர், முக்தர், நித்யஸூரிகள் இவர்களுடைய ஶரீரங்கள் இம்மாதிரி இரா என்று எம்பெருமானுடைய திருமேனிக்கு உள்ள வைலக்ஷண்யம் (வேறுபாடு, ஏற்றம்) கூறப்பட்டதாகிறது.





இனி எம்பெருமான் திருமேனியினுடைய குணங்களைக் கூறுகிறார் ஸ்வாமி எம்பெருமானார். 'நிரதிஶய ஸௌந்தர்ய' என்று ஆரம்பித்து. இங்கு ஸௌந்தர்யம் கூறப்படுகிறது. அடுத்து லாவண்யம் கூறப்படுகிறது. இந்த இரண்டு பதங்களுக்கும் அர்த்தத்தில் கொஞ்சம் வேறுபாடு உள்ளது. பொதுவில் இரண்டு பதங்களும் 'அழகு' என்ற பொருளைத்தான் கூறுகின்றன. ஒரு பொருளைக் கூறுவதற்கு ஒரு பதமே போதுமே? இரண்டு பதங்கள் வேண்டாமே என்று நினைக்கக்கூடும். அம்மாதிரி நினைக்க வேண்டாம் என்பதற்காக இரண்டு பதங்களுக்கும் சிறிதளவு பொருளில் வேறுபாட்டைக் காட்டியுள்ளனர் நம் பூர்வாசார்யர்கள். அதாவது-

ஸௌந்தர்யம் என்ற சொல் ஒவ்வொரு அவயவத்தினுடையவும் அழகைக் கூறுகிறது. லாவண்யம் என்பது அவயவியினுடைய அழகைக் கூறுகிறது என்று.

அவயவஶோபை- ஸௌந்தர்யம், அவயவிஶோபை- லாவண்யம் என்று அருளியுள்ளனர்.

எம்பெருமான் திருமேனியில் தனித்தனி அவயவங்களும் மிக்க அழகுடன் விளங்குகின்றன என்பதைக் கூறுகிறது ஸௌந்தர்யம் என்ற சொல்.

அவயவி என்பது அவயவங்களை உடைய ஸமுதாயத்தைக் கூறுகிறது. அவயவங்கள்-கை, கால் முதலான உறுப்புக்கள். அவயவி இந்த அவயவங்களை உடைய முழுவதுமான ஶரீரம். இதனுடைய அழகைக் கூறுகிறது லாவண்யம் என்ற சொல்.

ப்ரத்யேகமாக எம்பெருமான் திருமேனியில் திருவடிகள் முதலாக எல்லா அவயவங்களுமே மிக்க அழகு பெற்றிருக் கின்றன என்பது 'ஸௌந்தர்ய' பதத்தால் கூறப்படுகிறது.

அவயவங்கள் மட்டுமல்லாமல் அவயவங்களுடைய ஸமு தாய அமைப்பான திருமேனி முழுவதுமே கூட அழகு பெற்று விளங்குகின்றது என்பது கூறப்படுகிறது லாவண்ய பதத்தினால். ஔஜ்ஜ்வல்யத்திற்கு அடைமொழியாக- விஶேஷணமாக- வழங்கப்பட்ட 'நிரதிஶய' என்ற பதம் மேலுள்ள ஸௌந்தர்யம், ஸௌகந்த்யம், ஸௌகுமார்யம், லாவண்யம் முதலான எல்லா குணங்களுக்கும் அடைமொழியாகிறது.

ஆக எம்பெருமான் திருமேனியில் உள்ள திருவடி முதலான எல்லா அவயவங்களுமே உயர்வற்ற அழகு பெற்று விளங்கு கின்றன என்றபடி.

தற்போது எடுத்துக்கொண்ட இந்தச் சூர்ணிகையில் உள்ள பதங்களுக்கு விளக்கம் தந்த பிறகு எம்பெருமான் திருமேனியில் உள்ள அவயவங்களின் அழகை ஆழ்வார்களும் ஆசார்யர்களும் அநுபவித்தபடி விளக்க நினைத்துள்ளோம்.

ஸௌந்தர்யம் அவயவஶோபை என்றே ஆசார்யர்கள் அனைவரும் வ்யாக்யாநம் செய்துள்ளனர்.

எம்பெருமானுடைய அவயவ ஶோபையை ஸ்ரீ க்ருஷ்ணவ தாரத்தில் அருளிச் செய்கிறார் ஸ்ரீ ஶுகப்ரஹ்ம மஹர்ஷி.

**तासामाविरभूच्छौरिः स्मयमानमुखाम्बुजः ।**
**पीताम्बरधरः स्रग्वी साक्षान्मन्मथमन्मथः ॥**

தாஸாம் ஆவிரபூத் ஶௌரி: ஸ்மயமாநமுகாம்புஜ: ।
பீதாம்பரதர: ஸ்ரக்வீ ஸாக்ஷாந்மந்மதமந்மத: ॥ என்று.





கண்ணனுடைய குழலோசை கேட்டு யமுனைக் கரையில் இரவில் இடைப்பெண்கள் அனைவரும் கூடி விட்டனர். கண்ணன் அன்போடு அவர்களை அணைத்துத் தழுவி மகிழ்வித் தான். இதனால் கர்வம் கொண்ட அந்தப் பெண்களை ஶிக்ஷிப்ப தற்காக அந்த நள்ளிரவில் அவர்களை அங்கேயே விட்டுவிட்டு மறைந்தான். இதனால் வருந்திய அந்த கோபிகைகள் கீதம் பாடி அவனைத் துதித்தனர். இதனால் மனம் இரங்கிய கண்ணன் அவர்கள் நடுவில் தோன்றி ஸேவை தந்தான். அப்பொழுது அவனிடம் காணப்பட்ட அழகை- ஸௌந்தர்யத்தைத் தான் மேலே காட்டிய ஶ்லோகத்தினால் வர்ணித்துள்ளார் - ஸ்ரீ ஶுக ப்ரஹ்மம்.

தாமரை போன்ற திருமுகத்தில் புன்னகை பொலிய, புதிய பீதாம்பரத்தைத் திரு அரையில் (இடுப்பில்) சாற்றிக் கொண்டும், திருத்தோள்களில் மாலைகள் தாங்கியும், கோபிகைகள் ஸாக்ஷாத்தாக நேரே கண்ணால் காணும்படி மன்மதனுக்கும் மன்மதனாக-மிக்க அழகுள்ளவனாக - ஆவிர்பவித்தான் கண்ணன் என்கிறார். இந்த ஸௌந்தர்யத்தை ஸேவித்ததும் இவர்கள் இரவில்பட்ட கஷ்டங்கள் அனைத்தும் பறந்து ஓடிவிட்டன. எம்பெருமான் திருமேனியில் ஒவ்வொரு அவயத் திலும் அழகு வெள்ளமிட்டு ஓடுகிறது. இதுதான் ஸௌந்தர்யம். நிரதிஶய ஸௌந்தர்யம்:- வேறு உயர்ந்தது கிடையாதபடி- இதுவே மிக உயர்ந்தது என்னும்படி இருக்கிறது எம்பெருமா னுடைய ஸௌந்தர்யம் என்பது.

இப்படிப்பட்ட ஸௌந்தர்யம் காரணமாகத்தான் ஸ்ரீ ஶுகப்ரஹ்மம் மேற்கூறியபடி ஶ்லோகம் அருளிச்செய்தார் என்று அருளுகிறார் இங்கு வ்யாக்யாநத்தில் ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன்.

இப்படி விபவாவதாரத்தில் மஹர்ஷிகள் அநுபவித்த நிரதிஶய ஸௌந்தர்யத்தை அர்ச்சையில் ஆழ்வார்கள் அநுபவிக்கிறார்கள். விபவத்தில் எழுந்தருளி இருந்தவன் தான் இப்போது நாமும் வணங்கும்படி அர்ச்சையில் எழுந்தருளியுள்ளான்.

ஸ்வாமி நம்மாழ்வார் தென்திருப்பேரை என்ற திவ்யதேஶத்தில் எழுந்தருளியிருக்கும் அர்ச்சா மூர்த்தியான மகரநெடுங் குழைக் காதனிடத்தில் இப்படிப்பட்ட நிரதிஶய ஸௌந்தர்யத்தை அநுபவித்து அதைப்பாசுரமாகப் பாடித்தந்துள்ளார்.

பாசுரமும் நிரதிஶய ஸௌந்தர்யம் உள்ளதாகவே இருக்கிறது.

**செங்கனிவாயின் திறத்ததாயும்**
**செஞ்சுடர் நீள்முடித் தாழ்ந்ததாயும்**
**சங்கொடு சக்கரம் கண்டுகந்தும்,**
**தாமரைக் கண்களுக்கு அற்றுத் தீர்ந்தும்**
**திங்களும் நாளும் விழா வறாத**
**தென்திருப்பேரையில் வீற்றிருந்த**
**நங்கள் பிரானுக்கு என் நெஞ்சம் தோழீ**
**நாணும் நிறையும் இழந்ததுவே!**

**திருவாய்மொழி (7-3-3)**

ஸ்வாமி நம்மாழ்வார் தலைவித் தன்மையைப் பெற்றுத் தென்திருப்பேரை எம்பெருமானிடத்தில் பெருங்காதல் கொள்கிறார். அவனுடைய நிரதிஶய லாவண்யத்திலே ஈடுபட்டு நிற்கிறார்.

இவளை நோக்கி இவளுடைய தோழி கூறுகிறாள்: ''நீ ஒரு பெண் என்பதையும் மறந்து முன்பின் தெரியாத ஒருவனிடம் காதல் கொள்ளலாமா! நமக்கு இது தகாது என்று நெஞ்சை (மனஸ்ஸை) ஒருங்கப்பிடித்து (அடக்கி)த் தரித்திருக்க வேண்டாமோ?'' என்று.





இதற்குப் பராங்குஶ நாயகி கூறும் பதில். தோழீ! நீ என்னைப் பார்த்து நெஞ்சை அடக்கி நிறுத்த வேண்டாமா? என்று கூறுகிறாயே! அது என் வஶத்தில் இருந்தால்தானே நான் அதை அடக்குவதற்கு? அது என்னைவிட்டு அகன்று அந்தத் தென்திருப்பேரை எம்பெருமான் அழகிலே ஈடுபட்டு அங்கேயே சென்றுவிட்டது. அதுவும் தன் வஶமல்லாமல் தன்னுடைய சொத்துக்கள் அனைத்தையும் இழந்து விட்டது என்கிறாள். நெஞ்சுக்கு சொத்தாவது- நாணமும், மடப்பமும் தான். நாணம்-வெட்கம், மடப்பம்- இளமைப் பருவத்திற்கே உரிய தயக்கம். இவற்றைத் தன் நெஞ்சம் இழந்துவிட்டது என்கிறார் இந்தப் பாசுரத்தில்.

இதற்குக் காரணம் இந்த எம்பெருமானுடைய திவ்யாவயவ ஸௌந்தர்யம்தான் என்கிறார்.

செங்கனிவாயின் திறத்ததாயும், செஞ்சுடர் நீண்முடித் தாழ்ந்ததாயும், சங்கொடு சக்கரம் கண்டுகந்தும், தாமரைக் கண்களுக்கு அற்றுத் தீர்ந்தும் என் நெஞ்சு நாணும் நிறையும் இழந்தது காண் என்கிறாள். ஆழ்வாருடைய நெஞ்சத்தைக் கொள்ளை கொண்டவன் தென்திருப்பேரையில் வீற்றிருந்த எம்பெருமான். இந்த க்ஷேத்ரத்தில் மாஸோத்ஸவங்களும் திவஸோத்ஸவங்களும் (நாள்தோறும் நடைபெறும் உத்ஸவங்கள்) இடையறாமல் தடைபடாமல் நடந்து வருமாம்.

இப்படிப்பட்ட இந்த எம்பெருமானுடைய கோவைப் பழம்போல் சிவந்து கனிந்துள்ள திருஅதரத்தின் (உதடுகளுக்கு) வஶமாகிவிட்டது என் நெஞ்சம். இத்தோடு மட்டுமல்லாமல், இவனே ஸர்வலோகேஶ்வரன் எனக் காட்டித்தரும் கிரீடத்தின் அழகிலே ஈடுபட்டுத் தங்கிவிட்டது என் நெஞ்சம். மேலும் எம்பெருமான் திருக்கைகளில் இருந்து கொண்டு எம்பெருமானுக்கு அழகு தரும் திருவாழி திருச்சங்குகளை (சக்ரம், ஶங்கம்)க் கண்டு மகிழ்ந்தது. அதற்கும்மேல் அவனுடைய

திருக்கண்களின் அழகில் ஈடுபட்டு இனி மற்றொருவர்க்கு ஆகாத படி, அதாவது மற்றொரு எந்த விஷயத்தையும் அநுபவிக்க மாட்டாதபடி- அநந்யார்ஹமாய் அவனுக்கே உரியதாய் நின்றது என்னெஞ்சம். இதன் பயனாய் இந்த நெஞ்சம் தன்னுடைய சொத்தான - தன்னுடைய பண்பான - நாணம் (வெட்கம்), நிறை (மடப்பம்- தயக்கம்) மற்றும் பலவற்றையும் இழந்து நிற்கிறது.

எம்பெருமானுடைய திவ்ய ஸௌந்தர்யத்தில் ஈடுபட்டதால் எல்லோரும் எல்லாவற்றையும் இழந்தனர் என்று ஆழ்வார் அருளிச்செய்யும் அழகை இங்கே ரஸிக்க வேண்டும். அதாவது-

எம்பெருமானுடைய திவ்ய ஸௌந்தர்யத்தில் ஈடுபட்டவர்கள் பிறர்களுக்கு உரியவர்கள் ஆக மாட்டார்கள். ஆகையால் என்னுடைய தாய்மார்கள், தோழிகள் அனைவரும் என்னை இழந்துவிட்டனர். இப்படிப்பட்டவர்கள் தங்களுக்காகவும், தாங்கள் பயன்பட மாட்டார்கள். ஆகையால் நானும் என்னை இழந்தேன். அதாவது நான் எனக்கு இன்பம் தேடிக்கொள்வதற்காக இல்லேன் என்றபடி. இப்படி என் நெஞ்சமும் எம்பெருமானுடைய திவ்ய ஸௌந்தர்யத்தில் ஈடுபட்டுத் தன்னுடைய நாணத்தையும் நிறைவையும் இழந்தது என்ற அர்த்தத்தை ஆழ்வார் அருளியதாக ஈடு என்ற வ்யாக்யாநம் கூறுகிறது.

''தாய்மார், தோழிமார்கள் என்னை இழந்தார்கள். நான் என்னையே இழந்தேன்; நெஞ்சு நாணும் நிறையும் இழந்தது' என்று.

இப்படி 'என்னை ஸௌந்தர்யாதிகளால் வஶீகரித்த எம்பெருமான் தென்திருப்பேரை என்ற திவ்ய தேஶத்தில் எழுந்தருளியுள்ளான். என்னை வஶீகரிப்பதற்காகத் தான் இங்கு எழுந்தருளியுள்ளான், மாஸந்தோறும் நாட்கள் தோறும் உத்ஸவங்கள் தொடர்ந்து நடைபெறும் இந்த க்ஷேத்ரத்தில்' என்று இந்த க்ஷேத்ரத்தின் பெருமையையும் வர்ணிக்கிறார் ஆழ்வார்.





ஆழ்வாருடைய மனம் ஒன்றே எம்பெருமானுடைய திருமேனியில் பல அவயவங்களையும் பற்றி நின்று ஆங்காங்குள்ள அழகுகளை எல்லாம் அநுபவிக்கிறது.

எம்பெருமானுக்கு உள்ள ஸாமர்த்யம் அத்தனையும் அவனிடத்தில் ஈடுபட்ட தன் மனத்துக்கும் வந்துவிட்டது என்கிறார்.

அவன் (எம்பெருமான்) கடல் கடையும்போது எட்டுவிதங்களான திருமேனிகளைக் கொண்டான். இதுவும் (நெஞ்சமும்) எம்பெருமானுடைய ஒவ்வொரு அவயவத்தையும் தனித்தனியே அநுபவிப்பதற்காகப் பல வடிவு கொண்டது என்கிறார் - நம்பிள்ளை ஈட்டில். ''அம்ருதமதநத்தில் தான் எட்டு வடிவு கொண்டாப்போலே காணும் இதுவும் விஷயாதீநமாகப் பல வடிவுகொள்ளுகிறபடி. அவனுடைய ஐஶ்வர்யம் அடைய (முழுக்க) இதுக்கு உண்டாகக் கடவதிறே'' என்று.

கடல் கடையும் போது எம்பெருமான் கொண்ட எட்டு வடிவுகள்:

1. கடல் கடைய மந்தர பர்வதத்தை தேவர்களும், அஸுரர்களும் தூக்கிவர நடுவில் முடியாதவர்களாய் அதைக் கைவிட்டு விட அப்பொழுது எம்பெருமான் கருடவாஹநத்தில் எழுந்தருளி அந்த மந்தர மலையைக் கருடன் தோளில் வைத்து அநாயாஸமாகத் தூக்கிவந்து கடற்கரையில் சேர்த்தான் என்று புராணம் கூறுவதால் கருடாரூடமான திருமேனி ஒன்று.

2. கடையும்போது அஸுரர்கள் நடுவே ஒரு வடிவு கொண்டு கடைந்தான்.

3. அம்மாதிரியே தேவர்கள் நடுவே ஒரு வடிவு கொண்டான்.

4. கடலில் மூழ்க ஆரம்பித்த மலையைத் தாங்குவதற்காகக் கொண்ட கூர்ம வடிவு ஒன்று.

5. கூர்மத்தின் முதுகில் நின்ற மலை ஆடும் போது அது நிலைத்து நிற்க மலையின் மீது எழுந்தருளியிருக்கக் கொண்ட வடிவு ஒன்று.

6. அஸுரர்கள், தேவர்கள் இருவராலும் கடைய முடியாமல் கைவிடப்பட்ட போது தனித்து நின்று கடல் கடைவதற்காகக் கொண்ட வடிவு ஒன்று.

7. திருப்பாற்கடலிலிருந்து தோன்றிய திருமகளை மணம் புரிந்து கொள்வதற்காகக் கொண்ட வடிவு ஒன்று.

8. அமுதம் கொடுப்பதற்காகக் கொண்ட பெண் வடிவு ஒன்று.

ஆக எட்டு வடிவுகள் கொண்டான் அம்ருத மதநம் செய்யும் போது. இம்மாதிரியாக ஆழ்வாருடைய நெஞ்சமும் எம்பெருமானுடைய திருமேனியில் உள்ள பல அவயவங்களின் ஸௌந்தர்யத்தை அநுபவிப்பதற்காகப் பல வடிவுகளைக் கொண்டது என்கிறபடி. இவ்வளவால் அர்ச்சாவதாரத்தில் உள்ள எம்பெருமானுக்கும் நிரதிஶயமான (மிக உயர்ந்ததான) ஸௌந்தர்யம் உண்டு என்று கூறப்பட்டதாகிறது. இப்படிப்பட்ட நிரதிஶய ஸௌந்தர்யம் தென் திருப்பேரையில் ப்ரஸித்தம் என்பதை ஆசார்யஹ்ருதயம் காட்டுகிறது.

**'சென்று சேர்வார்க்கு உசாத்துணையறுக்கும் 'ஸௌந்தர்யம்' மாநகரிலே கோஷிக்கும்'** என்ற சூர்ணிகையினால்.

திருத்தாயாரின் பேச்சையும் கேளாமல் தென்திருப்பேரைக்கே சென்று சேர்வேன் என்ற உறுதி பூண்டவர்கள் தனக்கு உசாத்துணையாக- சிறந்த துணையாக இருக்கும் நெஞ்சையுமிழந்து அல்லல் படும்படி அவர்களுடைய நெஞ்சை அபஹரிக்கும் படியான லாவண்யம் தென்திருப்பேரை எம்பெருமானிடத்தில் ப்ரஸித்தம். அவ்வூரில் உள்ள அந்தணர்கள் இந்த எம்பெருமானை அநுபவித்து ஸாம வேதத்தை கோஷிப்பார்கள்.





மகர நெடுங்குழைக் காதனின் லாவண்யத்தில் ஈடுபட்டதால் எழுந்ததே இவ்வாநந்த ஸாம கோஷம்.

இங்கு எடுத்துக்காட்டிய ஆசார்ய ஹ்ருதய சூர்ணிகையின் முழுப்பொருளையும் இங்கு விளக்கவில்லை. தற்போது எடுத்துக்கொண்டுள்ள விஷயத்திற்கு, அதாவது எம்பெருமான் திருமேனியின் நிரதிஶய ஸௌந்தர்யத்தினுடைய விளக்கத்திற்கு வேண்டுவது மட்டுமே விளக்கப்பட்டுள்ளது.

இதற்கு அடுத்துக் கூறப்பட்டுள்ள குணம் நிரதிஶய **ஸௌகந்த்யம்** அதாவது ஒப்புயர்வற்ற நறுமணம் கொண்டிருக்கை. இது எம்பெருமானுடைய திருமேனிக்கே உரிய குணமாகும்.

இவன் திருமேனியில் அநுகூலங்களான லோக ப்ரஸித்தங்களான நறுமணங்கள் யாவும் மிகச் சிறந்து விளங்குகின்றன என்றபடி.

உபநிஷத்திலும் இவன் **'सर्वगन्धः'** (ஸர்வகந்த:) என்று கூறப்பட்டுள்ளான்.

இவன் திருமேனியின் கந்தத்தை - நறுமணத்தை- அநுபவிக்கும்போது புஷ்பங்கள் சந்தனம் முதலான பொருள்களின் மணங்கள் எடுபடா. அவையனைத்தும் இவன் திருமேனி நறுமணத்தில் அடங்கிக் கிடக்கும் என்றபடி.

மேலும் இவனுடைய திருமேனியின் நறுமணம் மற்றைய அனைத்தையும் கூட நறுமணம் உடையனவாகச் செய்யும் பெருமையுடையது என்பதைப் பெரியவாச்சான் பிள்ளை 'ஸர்வகந்த' என்கிறபடியே ஸர்வத்தையும் பரிமளிதமாக்கவற்றாயிருக்கை' என்று அருளியுள்ளார்.

ஆக இவ்வளவால் எம்பெருமான் திருமேனியினுடைய நிரதிஶய ஔஜ்ஜ்வல்யம், நிரதிஶய ஸௌந்தர்யம், நிரதிஶய ஸௌகந்த்யம் என்ற மூன்று குணங்கள் மட்டும் விவரிக்கப் பட்டன. திருமேனியின் மற்றைய குணங்கள் பற்றி மேலே காண் போம்.

---



## 12. "ஸௌகுமார்யம்"

**भगवद्वर्ष्मणो यच्च सौकुमार्यं सुकीर्तितम् ।**
**तदस्मिन् विवृतं लेखे नारायणमुनीश्वरैः ॥**

பகவத் வர்ஷ்மணோ யச்ச ஸௌகுமார்யம் ஸுகீர்த்திதம் ।
ததஸ்மிந் விவ்ருதம் லேகே நாராயணமுநீஶ்வரை: ॥

**तिरुवण् परिचाराख्ये क्षेत्रे विलसतो हरेः ।**
**वपुषीदं सौकुमार्यं कारिजो मुनिरन्वभूत् ॥**

திருவண்பரிசாராக்யே க்ஷேத்ரே விலஸதோ ஹரே: ।
வபுஷீதம் ஸௌகுமார்யம் காரிஜோ முநிரந்வபூத் ॥

**किङ्गृहाधिपतौ देवे सौकुमार्यमिदं परम् ।**
**पामराणामपि स्पष्टं अनुभाव्यं प्रकाशते ॥**

கிங்க்ருஹாதிபதௌ தேவே ஸௌகுமார்யமிதம் பரம் ।
பாமராணாமபி ஸ்பஷ்டம் அநுபாவ்யம் ப்ரகாஶதே ॥

இந்த வ்யாஸத்தில் ஸ்ரீ பாஷ்யகாரர் அருளிய ஸௌகுமார்யம் என்ற திருமேனி குணம் நம்மால் நன்கு விளக்கப்படுகிறது. ஸ்வாமி நம்மாழ்வார் இந்த ஸௌகுமார்யத்தைத் திருவண் பரிசாரத்து எம்பெருமான் விஷயத்தில் அநுபவித்துப் பாசுரம் அருளிச் செய்துள்ளார். ஆனால் பாமரர்களும் நன்கு கண்டு அநுபவிக்கும்படியான ஸௌகுமார்யம் திருவுள்ளூர் எம்பெரு மான் ஸ்ரீ வீரராகவன் திருமேனியில் ப்ரகாஶிக்கிறது.

இதுவரை ஸ்வாமி எம்பெருமானார் கத்யத்திலும், மற்றும் ஸ்ரீ கீதாபாஷ்ய அவதாரிகையிலும் எம்பெருமானுடைய திவ்ய

திருமேனியைப் பற்றி அருளிச் செய்த சூர்ணிகையில் (வாக்யத் தில்) உள்ளபடி ஸ்வாபிமத-அநுரூப - ஏகரூப- அசிந்த்ய-திவ்ய- அத்புத - நித்ய - நிரவத்ய - நிரதிஶய ஔஜ்ஜ்வல்ய - ஸௌந்தர்ய - ஸௌகந்த்யம் முடிவாக உள்ள திருமேனியின் தன்மைகள் விளக்கப்பட்டன.

இனி இதில் ஸௌகுமார்யம் என்ற குணம் விளக்கப் படுகிறது.

**ஸௌகுமார்யம்:** எம்பெருமான் திருமேனிக்குள்ள குணங் களில் மிகச் சிறந்த குணமாகும் இது. புஷ்பத்தின் மலர்ச்சி போல் திருமேனியின் மென்மை- ம்ருதுவாயிருக்கும் தன்மை. புஷ்ப ஹாஸன் என்று எம்பெருமானுக்கு ஒரு திருநாமத்தைத் தரும் திருமேனி குணம் இது.

இவனுடைய அருள் பெற்றவர்களுக்கு இவனுடைய போக்ய தையை- இனிமையைக் கொடுக்கும் இந்த ஸௌகுமார்யம். மாலையில் மலரும் மலர்கள் தங்கள் மலர்ச்சியினால் அனைவ ருக்கும் இனியனவாகின்றன அன்றோ? அதுபோல் எம்பெரு மான் அனைவர்க்கும் அநுபவிக்கத் தக்கவனாகிறான் இவனு டைய இந்தத் திருமேனி மென்மையினால்.

அதாவது எம்பெருமானுடைய திருமேனி நன்கு மலர்ந்த மலர்கள் போல் யாவருக்கும் அநுபவிக்கத்தக்கதாகிறது.

ஆண்டாளும் கருவிளைமலர், காயா மலர் போன்றவற்றைப் பார்த்து நீங்களும் எம்பெருமானுடைய திருமேனியின் ஒளியைக் காட்டுகிறீர்களே! ('கருவிளை ஒண் மலர்காள்! காயா மலர்காள்! திருமால் உளவொளி காட்டுகின்றீர்) என்று அருளியுள்ளார்.

ஸ்வாமி நம்மாழ்வாரும்





**தூநீர் முகில்போல் தோன்றும் நின்**
**சுடர் கொள்வடிவும் கனிவாயும்**
**தேநீர்க் கமலக் கண்களும்**
**வந்தென் சிந்தை நிறைந்தவா**
**மாநீர் வெள்ளிமலை தன்மேல்**
**வண்கார் நீல முகில்போல**
**தூநீர்க் கடலுள் துயில்வானே!**
**எந்தாய்! சொல்ல மாட்டேனே!**

**-திருவாய்மொழி (8.5.4)**

என்று எம்பெருமானுடைய ஸௌகுமார்யத்தில் ஈடு பட்டுள்ளார்.

எம்பெருமான் திருமேனி, மழை பொழியும் நிலையில் உள்ள மேகம் போன்று கண்டபோதே காண்பவருடைய ஶ்ரமத்தை எல்லாம் போக்கவல்லதாயிருக்கிறது. நிரதிஶய ஔஜ்ஜ்வல்யம் பெற்று விளங்குகிறது திருமேனி என்பதை நின் சுடர் கொள் வடிவு என்று அருளுகிறார். பார்த்தபோதே பறித்து உண்ணும்படி இருக்கும் பழம் போல் விளங்குகின்ற திருவாய். தேனாகிற தண்ணீரை உடைய தாமரைப் பூப்போல் அதாவது தண்ணீரை விட்டுப் பிரியாதிருக்கிற தாமரைப்பூப் போன்ற கண்கள் என்றபடி. இதனால் எம்பெருமானுடைய புஷ்பஹாஸ ஸௌகு மார்யத்தை - புஷ்பங்களின் மலர்ச்சி போன்ற எம்பெருமா னுடைய திருமேனியின் மென்மையை - அநுபவித்து அருளு கிறார் ஆழ்வார்.

எம்பெருமானுக்கு மஹாபலம் ஒரு புறம் இருக்கும் போதே இந்த ஸௌகுமார்யமும் உண்டு.

உலகில் கடினங்களான கார்யங்களைச் செய்பவனுடைய உடலும் பெரும்பான்மையாகக் கடினமாகத் தான் இருக்கும். ஆனால் எம்பெருமான் மஹாபலவான். கடினங்களான கார்யங்

கள் பலவற்றையும் செய்யவல்லவன். ஆனாலும் - மென்மை- ஸௌகுமார்யம் பெற்றவனாய்த் திகழ்கிறான்.

இந்தத் தத்த்வத்தை நேரில் கண்டு சொன்னவள் - ஶூர்ப்பணகை என்ற அரக்கி ஆவாள்.

ராக்ஷஸியான இவளுடைய காதையும் மூக்கையும் ஒருவன் (ஸ்ரீராமன்) அறுத்தான் என்றால் அவன் எவ்வளவு பலம் உள்ளவ னாய் உறுதியுடைய (கடிநமான) ஶரீரத்தைப் பெற்றிருக்க வேண்டும்? ஆனால் அவன் (ஸ்ரீராமன்) அப்படிக் கடிநமான ஶரீரம் கொண்டவன் அல்லன். காதையும் மூக்கையும் பறி கொடுத்த ஶூர்ப்பணகையே சொல்லுகிறாள் **'सुकुमारौ-महाबलौ'** (ஸுகுமாரௌ- மஹாபலௌ) என்று. ஸ்ரீ ராமனுடைய திரு மேனியின் ஸௌகுமார்யத்தை- மென்மையை- ஒரு ராக்ஷஸியே (ஶூர்ப்பணகையே) அநுபவித்துப் பேசியுள்ளாள் என்றால் பரம பக்தர்களான ஆழ்வார்கள் அநுபவித்துப் பேசக் கேட்க வேண்டுமோ?

இப்படிப்பட்ட எம்பெருமான் திருமேனி ஸௌகுமார் யத்தை - மென்மையை- ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளை தம்முடைய மென்மை வாய்ந்த இனிய தமிழ்ச் சொற்களாலே விளக்கியருள் வதைப் பார்ப்போம் இங்கு.

**ஸௌகுமார்யமாவது:** 'நாய்ச்சிமாரும் உறைக்கப் பார்க்கப் பொறாதபடி புஷ்பஹாஸ ஸுகுமாரமாய் இருக்கை' என்று . அதாவது பிராட்டிமார்களான ஸ்ரீ - பூமி- தேவிகள் தங்கள் திருக்கண் மலர் கொண்டு எம்பெருமான் திருமேனியைச் சற்று உற்று நோக்கினாலேயே அதைப் பொறுக்க மாட்டாமல் திரு மேனி வாடிவிடும்படியிருக்குமாம் என்றபடி.

பிராட்டிமார்களுடைய பார்வையையும் தாளாதபடி ம்ருதுவாயிருக்கும் என்றவாறு.





பிராட்டியின் திருமேனி எப்படிப்பட்டது தெரியுமா? ஸ்ரீ பட்டர் அருளிச் செய்கிறார் கேளுங்கோள்.

ஒரு ஸமயம் பிராட்டி தாமரைப் பூவில் எழுந்தருளி யிருக்கிறாள். அந்த நிலையில் திடீரென்று திருவடியில் நெருப்பு பட்டதுபோல் பிராட்டி துடிக்கிறாள். காரணம் வேறொன்று மில்லை. அந்தத் தாமரைப் பூவில் உள்ள மெல்லிய மகரந்தப் பொடி அவள் திருவடியில் விழுந்ததுதான். அதனால் அவளு டைய திருவடி நெருப்பு பட்டதுபோல் கன்றிப்போய் விட்டது.

காரணம் புரியாத தோழிமார்கள் எங்கு, என்ன ஏற்பட்டது என்று பிராட்டியின் திருமேனியை உற்று நோக்கினார்கள். அவ்வளவுதான் - திருமேனி முழுவதும் வாடிவிட்டது. இப்படிப் பட்ட பிராட்டி துணிச்சலுடன் தன் திருக்கைகளில் இரண்டு தாமரைப்பூக்களையே தாங்கி நிற்கிறாளே! இது என்ன ஸாஹஸம்? தாமரைப்பொடி பட்ட அளவிலேயே கன்றிவிடும் திருவடிகளை உடைய பிராட்டி தாமரைப் பூவையே தாங்கி இருக்கிறாள் என்பது துணிச்சலால் தான் என்கிறார் பட்டர்.

இவ்வளவு மென்மை வாய்ந்த பிராட்டியினுடைய பார்வையையும் எம்பெருமான் திருமேனி பொறுக்கவில்லை என்றால் இவன் திருமேனி மென்மையும் மேன்மையும் எளிதில் புலனாகின்றதன்றோ! பிராட்டி திருமேனியினுடையது ஸௌகு மார்யம். இவன் திருமேனியினுடையது நிரதிஶய ஸௌகு மார்யம்.

இந்த ஸௌகுமார்யத்தை ராம க்ருஷ்ணாத்யவதார காலங் களில் மஹான்கள் பலரும் அநுபவித்துப் பாராட்டியுள்ளார்கள். இப்படிப்பட்ட இந்த ஸௌகுமார்யம் அர்ச்சாவதாரத்திலும் ப்ரஸித்தம்.

உலகில் பெரும்பாலானோர் அர்ச்சா மூர்த்திகளை வெறும் கல்லாகவும் செப்பு முதலான உலோகங்களாகவுமே கருதி

வருவார்கள். இப்படியின்றி அத்யந்த ஸௌகுமார மூர்த்தியாய் எண்ணும் மஹான்கள் மிகக் குறைந்த அளவில்தான் உள்ளனர்.

ஸ்ரீமத் இஞ்சிமேட்டு அழகியசிங்கர் கோடை காலத்தில் வெப்பம் தாளாமல் தவிப்பது வழக்கம். அதற்காக எப்பொழுதும் விசிறி கொண்டு விசிறியவாறே இருப்பார்கள் கைங்கர்யபரர்கள். அப்பொழுதெல்லாம் இஞ்சிமேடு ஸ்ரீமத் அழகியசிங்கர் உள்ளமுருகி ஸாதிப்பது வழக்கம். நமக்கு இவ்வளவு தாபம் ஏற்படுகிறதே! வெள்ளி மண்டபத்திற்குள் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ மாலோலனுக்கு எவ்வளவு தாபம் இருக்கும்? நாம் தாபம் தீர விசிறி முதலியவற்றைக் கொண்டு தாபம் தீர்த்துக் கொள்கிறோம். அவனுக்கும் அம்மாதிரி செய்தால் என்ன? என்று எண்ணி உள்ளம் உருகுவது வழக்கம்.

இதற்குக் காரணம் அர்ச்சையிலும் ஸௌகுமார்யத்தை, மென்மையை அநுபவித்ததுதான். இதன் பயனாய் உடனே வெள்ளி மண்டபத்தின் பின்புறம் ஒரு சிறு துளையை உண்டாக்கி ஒரு பட்டு நூற் கயிற்றைத் தொங்கவிடச் செய்து அதன் நுனியைக் கொண்டு முடித்து ஸ்ரீ மாலோலன் திருமுடிக்கு மேல் ஒரு சிறிய 'வெல்வெட்' பங்கா தொங்கவிடச் செய்தாயிற்று. கைங்கர்ய பரர்களை அவ்வப்பொழுது வெளியில் தொங்கும் அந்தக் கயிற்றை இழுத்து ஸ்ரீ மாலோலனுக்கு விசிறி கைங்கர்யம் செய்ய நியமித்தாயிற்று. இவர்களும் மாறி மாறி அவ்வாறே மாதக் கணக்கில் செய்து வந்தனர். இப்படியெல்லாம் மஹான்கள் அர்ச்சாவதாரத்திலும் எம்பெருமான் திருமேனியினுடைய ஸௌகுமார்யத்தை அநுபவித்துள்ளனர்.

ஸ்ரீ நாதத்வாரகையிலும் இப்பொழுதும் 24 மணி நேரங் களிலும் த்வாரகாநாதனுக்கு (கண்ணனுக்கு) பங்கா இழுத்து விசிறி கைங்கர்யம் செய்து வருகிறார்கள். சற்று நேரம் காற்று இல்லாவிட்டால் எம்பெருமான் திருமேனி வாடிவிடும் என்று





தானே இந்த மஹான்களின் மனோ பாவம்? இந்த மனோபாவம் யாவர்க்கும் வர வேண்டும்.

ஒரு ஸமயம் கோடை காலத்தில் திருவேங்கடம் உடையா னுக்குத் திருமஞ்ஜநம் நடந்து கொண்டிருந்ததாம். அங்கு அப்பொழுது ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமி எழுந்தருளியிருந்து மங்களாஶாஸநம் செய்து கொண்டு எழுந்தருளியிருந்தாராம். அப் பொழுது அர்ச்சக ஸ்வாமி வெள்ளி கிண்டியிலிருந்து தீர்த்தத்தை மெல்லிய தாரையாக திருமுடிமேல் சேர்த்துக் கொண்டிருந் தாராம். அதைக் கண்ட ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமி தாபம் மிகுந்த இந்தக் காலத்தில் எம்பெருமான் திருமேனி தாபம் தீர நிறைய தீர்த்தத்தைத் திருமேனியில் சேர்த்தால் தாபம் தணியும் என்று எண்ணி அர்ச்சகரை நோக்கி, ஓய்! நிறைய தீர்த்தத்தைப் பெருமாள் திருமேனியில் சேரும். மெல்லிய தாரையாகச் சேர்க்க வேண்டாம். நிறைய பெரிய தாரையாகச் சேரும் என்று ஸாதித் தாயிற்றாம்.

அதைக் கேட்ட அர்ச்சகரும் விநயத்துடன் ஸ்வாமிந்! காலத் தின் வெப்பத்தை மட்டும் கண்டு ஸ்வாமி இப்படி ஸாதித் தாகிறது. ஆனால் நிறைய சடக்கெனக் குடத்துத் தீர்த்தத்தைச் சேர்த்தால் பெருமாளுக்கு மூச்சுத்திணறல் ஏற்படுமே என்ற எண்ணத்தினால்தான் இவ்வாறு மெதுவாக மெல்லிய தாரையாகத் தீர்த்தம் சேர்க்கிறேன் என்றாராம்! அதைக் கேட்டு ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமியும் அர்ச்சகருடைய அர்ச்சாவ்தாராநு பவத்தைப் பாராட்டியாயிற்றாம்.

இந்த இரண்டு மஹான்களுடைய அர்ச்சாவதாராநுபவம் எப்படி இருக்கிறது? நமக்கு இப்படிப்பட்ட அநுபவமிரா விட்டாலும் அவர்களுக்கு இருக்கும் மனோபாவத்தை நாம் புரிந்து கொண்டு ரஸிக்கவாவது வேண்டும்.

ஸ்வாமி நம்மாழ்வார் இப்படிப்பட்ட இந்த ஸௌகுமார்யத்தைத் தமக்கு மாதாமஹ க்ருஹமான, அதாவது தம் திருத்தாயாருடைய பிறந்தகமான, திருவண் பரிசாரத்திலே அர்ச்சாரூபியாக எழுந்தருளியிருக்கும் எம்பெருமானிடத்திலே அநுபவிக்கிறார் என்பதை அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் ஆசார்ய ஹ்ருதயத்திலே 'ஶ்ரமமனஞ் சூழும் ஸௌகுமார்ய ப்ரகாஶம் ஆய்ச்சேரியிலே' என்று அருளியுள்ளார். (173வது சூர்ணிகை).

க்ருஷ்ணனுக்குப் பிறந்து வளர்ந்த இடம் ஆய்ச்சேரி. க்ருஷ்ண-த்ருஷ்ணு தத்த்வமான (க்ருஷ்ணபக்தியே வடிவு கொண்டவரான) ஆழ்வார் அவதரித்த இடம் திருவண் பரிசாரம் என்னும் க்ஷேத்ரம். ஸ்வாமி நம்மாழ்வாருடைய திருத்தாயாரான உடைய நங்கையார் என்பவருடைய பிறந்தகம் திருவண்பரிசாரம் என்ற க்ஷேத்ரம். இதைத் திருப்பதிஸாரம் என்றும் கூறுவர்.

இந்த க்ஷேத்ரத்தில் எழுந்தருளியிருக்கும் அர்ச்சாமூர்த்தியான எம்பெருமானுடைய ஸௌகுமார்யத்தில் ஸ்வாமி நம்மாழ்வார் மிகவும் ஈடுபட்டு மங்களாஶாஸநம் செய்துள்ளார். இந்த எம்பெருமான் விஷயமாக ஸ்வாமி அருளிச் செய்துள்ள பாசுரங்களில் இந்த ஸௌகுமார்யம் தெளிவாக ப்ரகாஶிக்கிறது.

ஸ்ரீ வைகுண்டத்தில் நித்யஸூரிகள் பரம ப்ரீதியோடே எப்பொழுதும் பரிசர்யை- பணிவிடை- செய்து கொண்டிருக்கும் எம்பெருமானானவன் அத்யத்புதமான ஒப்புயர்வற்ற ஸௌகுமார்யம் கொண்டுள்ள அந்தத் திருமேனியோடு கூடவே இந்த நில உலகத்தில் இந்த க்ஷேத்ரத்தில் ஸம்ஸாரிகளான பாமரஜனங்களுடைய துக்கத்தைப் போக்குவதற்காக அவதரித்தான்.

இந்த உலகத்தில் இவனுடைய மேன்மையையும், திருமேனி மென்மையையும் (ஸௌகுமார்யத்தையும்) அறிவார் எவராவது உண்டா? ஒருவருமில்லை. இவனுடைய ஸௌகுமார்யத்தை





அறிந்து ஐயோ! இப்படிப்பட்ட ஸுகுமாரமான திருமேனியோடே கூட நமக்காக இந்த உலகில் அவதரித்துள்ளானே எம்பெருமான்! என்று உணர்ந்து - 'தணியா வெந்நோய்.' இந்த நில உலகில் உள்ள ஸம்ஸாரிகளுடைய நோய்கள் தணியா (வேறு எந்த உபாயத்தினாலும் தீராத) கொடிய நோய்; இதைப் போக்குவதற்காகத் தான் இவன் அவதரித்துள்ளான். அவதரிக்கும்போது 'திருநீலமணியார் மேனியோடு' ஸேவிக்கும்போதே (பார்க்கும் போதே) ஸேவிப்பவருடைய தாபங்கள் யாவும் தீரும்படி நீல மணிபோல் மிக அழகியதான திருமேனியோடே அவதரித்தான். இந்த தத்த்வத்தை- உண்மையை- அறிந்தது என் மனம் ஒன்றே ஆகும்.

இப்படிப்பட்ட மிகுந்த ஸௌகுமார்யத்தை உடைய எம்பெருமான் தான் இதன் பெருமை அறியாதார் நிறைந்த இந்த உலகிலே அவதரித்து ஸம்ஸாரிகளின் பாபத்தையெல்லாம் போக்குகின்றான் என்ற தத்த்வத்தை அறிந்த என் மனம் குழம்பி ஶ்ரமப்படுகிறது.

இது மட்டுமா! மிகுந்த ஸுகுமாரனான இவன் 'அணியார் ஆழியும் ஶங்கமும் ஏந்துமிவர் காண்மின்' என்று உலகத்தவர்க்கு எடுத்துக் காட்டி இவனுடைய ஸௌகுமார்யத்தை விளக்குகிறார்.

எம்பெருமான் அநாயாஸமாகத் தன் திருக்கைகளிலே திருவாழி- திருச்சங்குகளை (சக்ரம்-ஶங்கம் இவற்றை) ஏந்திக் கொண்டு ஸேவை தருகிறான். இந்தத் திருவாழியும் திருச்சங்கும் புஷ்பம்போல் தொடுவதற்கு இன்பம் தருவனவாய் (ஸுக ஸ்பர்ஶங்களாய்) இருக்கும் என்பது ப்ரஸித்தம். இப்படி இருக்கும்போதும் எம்பெருமான் மலைகளை எடுத்து நிற்பது போல் இவற்றைத் தாங்கி நிற்கிறானே என்று ஆழ்வார் அஞ்சி அருளிச் செய்கிறார்.

இங்கு ஒரு விசாரம்.

ஸ்வாமி எம்பெருமானார் ஶரணாகதிகத்யத்தில் எம்பெருமானுடைய திருவாபரணங்களைப் பற்றி விவரிக்கும்போது ஸ்வோசித விவித என்றாரம்பித்து நடுவில் 'நிரதிஶய ஸுகந்த நிரதிஶய ஸுகஸ்பர்ஶ' என்று அருளியுள்ளார். எம்பெருமான் அணிந்துள்ள திருவாபரணங்கள் சிறந்த நறுமணம் கொண்டவை என்றும் தொடுவதற்கு மிகுந்த ஸுகத்தைக் கொடுக்கும் ஸ்பர்ஶத்தை உடையவை என்றும் அருளியுள்ளார்.

எம்பெருமானுடைய திருவாபரணங்கள் ஸுகஸ்பர்ஶங்களாக- உறுத்தாதவைகளாக- மென்மை வாய்ந்தனவாக உள்ளன என்பதைப் பெரியவாச்சான் பிள்ளை மிக அழகாக விளக்கியுள்ளார்.

உலகில் நாம் அணியும் ஆபரணங்கள் அணியும் காலத்தில் அழகைத் தரக்கூடியவையாய் இருக்கும். ஆனால் ஸ்த்ரீகளுடன் நெருங்கி ஸுகத்தை அநுபவிக்கும் போது அவை நடுவே நின்று உறுத்தும். ஆகவே அம்மாதிரியான அநுபவகாலங்களில் அவற்றைக் கழற்றி வைத்து விடுகிறோம்.

ஆனால் எம்பெருமானுடைய திருவாபரணங்கள் அப்படி இராதனவாம். பிராட்டிமார்களுடன் நெருங்கிக் கலக்கும் ஸமயத்திலும் இவனுடைய திருவாபரணங்கள் இவர்களை உறுத்தா. தம்பதிகள் இருவரும் மாலை சூடியிருந்தால் அவற்றைக் கழற்றிப் போட்டுவிட்டா கலக்கிறார்கள்? இவர்கள் இருவரும் உடலோடு உடல் கலக்கும்போது அந்த மாலைகள் தடையாக இரா. சந்தநமும் இப்படித்தானே இருக்கும்? ஆக மாலை, சந்தநம் முதலியன தம்பதிகளுக்கு போக காலத்திலும் தூக்கி எறிய வேண்டாதபடி உடலில் இருந்து கொண்டே ஆநந்தத்தை அளிக்கின்றன அன்றோ! இவ்வாறேதான் எம்பெருமானுடைய





திருவாபரணங்களும் அந்த ஸமயத்திலும் உடலை உறுத்தாமல் நெருக்கத்திற்குத் தடையாயிராமல் திருமேனியிலேயே இருக்குமாம். இப்படியிருக்கையால் ஆபரணங்கள் ஸுக ஸ்பர்ஶங்கள் என்று சொல்லப்படுகின்றன.

இதை விளக்கும் பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீ ஸூக்திகள்:

''நிரதிஶய-ஸுகஸ்பர்ஶ'' -அல்லாத ஆபரணங்கள் அழகுக்கு உறுப்பாகையாலே (காரணமாகையாலே) போகத்தில் வந்தால் கழற்ற வேண்டிவரும். இவையோ (எம்பெருமானுடைய திருவாபரணங்களோ) என்னில் பிராட்டிமாரோட்டைக் கலவியிலும் கழற்ற வேண்டாதபடி 'ஸ்ரக்'(மாலை) சந்தநாதிகளோபாதி (சந்தநாதிகள் போல்) அநுகூலமாயிருக்கும்'' என்றவையே.

இந்த ஸ்ரீ ஸூக்திகளின் ரஸத்தை நன்கு அறிந்து அநுபவிக்க வேண்டும். உலகில் ஆபரணங்கள் வெறும் அழகுக்கு மட்டுமே காரணங்களாகின்றன. ஆகையால் போக காலத்தில் அவற்றைக் கழற்ற நேரிடுகிறது. புஷ்பமாலை சந்தநப் பூச்சு அழகுக்கு மட்டுமல்லாமல் போகத்துக்கும் காரணமாவதால் அவை களையப்படுவதில்லை.

எம்பெருமானுடைய திருவாபரணங்கள் அழகுக்கும் போகத்துக்கும் ஆக இரண்டுக்குமே காரணமாவதால் போக காலத்திலும் அவை உடனிருக்கின்றன. கழற்றப்படுவதில்லை. ஆழ்வார்களும் 'கூராராழி வெண்சங்கேந்தி கொடியேன்பால் வாராயே' என்று ஆயுதங்களோடேயே எம்பெருமானை அநுபவிக்க ஆசைப்படுகிறார்கள்.

ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் கத்யபாஷ்யத்தில் இதே வாக்யத்திற்கு அருளியுள்ள அர்த்த விஶேஷத்தையும் இங்கே அறிந்து ரஸிக்க வேண்டும். **अनभिमतकाठिन्याभावात् निरतिशयसुखस्पर्शत्वम् ।**

(அநபிமதகாடிந்யாபாவாத் நிரதிஶயஸுகஸ்பர்ஶத்வம்) என்று அருளுகிறார் ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன்.

நிரதிஶய ஸுகஸ்பர்ஶம் என்பதால் (தொடுவதற்கு ஸுகம் தருபவைகளாக இருக்கும் ஆபரணங்கள்) அவை மிக்க மென்மையை உடையவையாயிருக்கும் என்று எண்ணத் தோன்றும். அப்படி எண்ண வேண்டாம். அந்த ஆபரணங்கள் எப்பொழுதும் கடிநங்களாகவேதான் இருக்கும். ஆனாலும் அந்தக் காடிந்யம்- கடிநத் தன்மை- அதாவது உறுத்தும் தன்மை போக காலத்தில் மிகவும் வேண்டத் தக்கதாயிருக் கும் - விரும்பத்தக்கதாயிருக்கும்.

எம்பெருமானுடைய திருவாபரணங்கள் ஸுகஸ்பர்ஶங் களாயிருக்கின்றன என்றால் அவை கடிநங்களாக இருந்தபோதும் அந்தக் காடிந்யம் - கடிநத் தன்மை பக்தர்களுக்கு அபிமதமாகிறது- விரும்பத்தக்கதாகிறது என்றபடி. ஆகவே திருவாபரணங்கள் கடிநங்களேயாயினும் விரும்பத்தகாத காடிந்யம் அவற்றுக்கு இல்லை - அதாவது அவற்றின் காடிந்யம் - கடிநத்தன்மை - பக்தர்களுக்கு விரும்பத் தக்கதாயிருக்கிறது என்கிறபடி. இப்படிக் கூறியதால் அவற்றின் ஸ்பர்ஶத்தினால் - ஸம்பந்தத்தினால் எம்பெருமான் திருமேனியில் நோவு- வருத்தம் உண்டாவதில்லை என்று ஏற்பட்டது.

நம் ஸித்தாந்தத்தில் எம்பெருமானுடைய திவ்யாயுதங்கள், ஆயுதங்கள் என்ற வகுப்பில் மட்டும் சேராமல் ஆபரண வகுப்பிலும் சேர்கின்றன. ஆகையால் ஆபரணங்களுக்குச் சொன்ன 'நிரதிஶய ஸுகஸ்பர்ஶ' மாயிருக்கும் நிலை, திவ்யாயுதங்களுக்கும் உண்டு. எனவே ஸ்ரீ பாஷ்யகாரர் திவ்யாயுதங் களைத் தனியாக எடுத்து அவை நிரதிஶய ஸுகஸ்பர்ஶங்களாயிருக்கும் என்று சொல்லவில்லையே என்று ஸந்தேஹிக்க வேண்டாம். இவ்வளவால் ஆயுதங்கள் கடிநங்களாயிருந்த போதிலும், அவற்றைத் தாங்குவதில் அவனுக்கு ஶ்ரமம் ஏதும் இல்லை என்பது கூறப்பட்டதாகிறது.





இப்படி எம்பெருமானுக்குத் திருவாழியையும் திருச் சங்கையும் தாங்குவதில் எவ்வித ஶ்ரமமும் இல்லைதான். ஆயினும் அவனுடைய ஸௌகுமார்யத்தை அநுபவிக்கும் ஆழ்வாருக்கு அவன் இவ்வாறு ஸுகஸ்பர்ஶங்களான திருவாழியையும் திருச்சங்கையும் தாங்கி நிற்பது வருத்தத்தை விளைவிக்கிறது. எம்பெருமானுடைய மிகுந்த ஸௌகுமார்யம் இவ்வாறு ஆழ்வாருடைய திருவுள்ளத்துக்கு ஶ்ரமத்தை - வருத்தத்தை உண்டாக்குகிறது.

ஆகையால் தான் இந்த நிலையை 'அணியார் ஆழியும் சங்கமும் ஏந்தும் அவர் காண்மின்' என்று அச்சத்துடன் உலகத் தவர்க்கு எடுத்துக்காட்டுகிறார் ஆழ்வார். பாசுரத்தின் முழு வடிவம் இதோ-

**பணியா அமரர் பணிவும் பண்பும் தாமேயாம்**
**அணியாராழியும் சங்கமும் ஏந்து மவர் காண்மின்**
**தணியா வெந்நோய் உலகில் தவிர்ப்பான் – திருநீல**
**மணியார் மேனியோடு என் மனம் சூழ வருவாரே.**

**– திருவாய்மொழி (8-3-6)**

இது திருவண்பரிசாரத்து எம்பெருமானைப் பற்றிய பாசுரமாகும். இந்தத் திவ்யதேஶத்தில் எம்பெருமான் நித்யஸூரிகள் வணங்கும்படியான பெருமை பெற்றவன். இந்தப் பாசுரத்தில் ஸ்வாமி நம்மாழ்வார் நித்யஸூரிகளை 'பணியா அமரர்' என்று குறிப்பிடுகிறார்.

'அமரர் என்று மட்டும் சொன்னால் ஸாதாரண தேவர் களையும் குறிக்கும். இவர்கள் வணங்கும் பெருமாள் என்றால் பெருமை ஏதுமில்லை என்று இவர்களை விட்டாலும் முக்தர் களைக் குறிக்கும் இந்த அமரர் என்ற சொல். இவர்கள் பல காலம் ஸம்ஸாரத்திலிருந்து கொண்டு பல பிறவிகள் எடுத்துப் பற்பல

கஷ்டங்களை அநுபவித்துப் பிறகு ஏதாவது புண்யத்தின் பயனாய் பக்தியோகம் அல்லது ஶரணாகதி இவற்றுள் தனக்கேற்ற வகையில் ஏதேனும் ஒன்றை அநுஷ்டித்து அதன் பயனாய் ஸம்ஸார பந்தம் நீங்கப் பெற்று மோக்ஷம் அடைந்தவர்கள் ஆவர்.

இவர்களைவிடச் சிறந்தவர்கள் நித்ய ஸூரிகள். இவர்கள் எப்போதும் ஸ்ரீ வைகுண்டத்திலேயே இருந்து கொண்டு எம்பெருமானை ஸேவித்து வருபவர்கள் ஆவார்கள். இவர்கள் பணிவதால் தான் எம்பெருமானுக்குப் பெருமை என்று அவர் களைக் குறிப்பதே தகும் என்ற காரணத்தினால் 'அமரர்' சொல்லுக்கு அடைமொழியாக (விஶேஷணமாக) 'பணியா' என்ற ஒரு சொல்லை இட்டுள்ளார் ஸ்வாமி நம்மாழ்வார் - 'பணியா அமரர்' என்று.

இவர்கள் ஒருவரையும் - அதாவது எம்பெருமானைத் தவிர வேறு எவரையும் - பணியாதவர்கள் - வணங்காதவர்கள் என்ற பெருமை இவர்களுக்கு உண்டு. ஸம்ஸாரிகளான நமக்கும், முக்தர்களுக்கும் கூட இந்தப் பெருமை கிடையாது.

முக்தர்கள் முக்தராவதற்கு முன் எடுத்த பிறவிகள் பலவற்றுள் பற்பல அற்ப பலன்களைப் பெறவேண்டிப் பலரைப் பணிந் திருப்பார்கள். இவர்களுக்கு நிறையக் குறைகளிருப்பதால் அவற்றைத் தீர்த்துக் கொள்ள அவரவர்களை நாட - வணங்க வேண்டிய வாய்ப்பு உண்டு. அற்ப தேவதைகளும் அப்படியே தான். நித்யஸூரிகள் மட்டும் ஶ்ரிய: பதியான எம்பெருமானைத் தவிர்த்து மற்றைய யாரையும் வணங்கியதில்லை. வணங்க வேண்டிய வாய்ப்பும் கிடையாது. இவர்களுக்கு ஏதாவது குறை யிருந்தால் அன்றோ அதைத் தீர்த்துக்கொள்ளப் பிறரை நாட வேண்டி நேரிடும். ஆகவே பணியா அமரர்கள் நித்யஸூரிகள். இவர்களுடைய நமஸ்காரத்திற்கும் ஜ்ஞானத்திற்கும் விஷய மானவன் இவன்தான் என்பதைக் காட்டுகிறார் ஆழ்வார்.





இங்கு ஈடு என்ற வ்யாக்யாநத்தில் உள்ள வாக்யங்கள்:-

'வேறே சிலரைப் பணிய ஸம்பாவனை (ப்ரஸக்தி-வாய்ப்பு) இல்லாத நித்யஸூரிகள். முன்பு அஸேவ்யர் (வணங்கத்தகாதவர்) காலிலே குனிந்து (வணங்கி) அநுகூலித்து 'அழுக்கு உடம்பு, எச்சில் வாய்' என்று அநுதபித்து (பஶ்சாத்தாபம் கொண்டு) பின்பு வகுத்தார் (நமக்கு ஏற்பட்ட ஆசார்யர்கள்) காலிலே குனிந்த வர்கள் அல்லர் நித்யஸூரிகள்.

முக்தராயிருப்பவர்கள் இப்பொழுது எம்பெருமானைத் தவிர வேறு யாரையும் வணங்காதவர்கள்தான். ஆயினும் முக்தராவ தற்கு முன்பு அவர்கள் எப்படி இருந்தனர் என்பதைப் பார்க்க வேண்டும்.

ஸம்ஸாரத்தில் சிக்கியிருந்த இவர்கள் நிறையக் குறை உடையவர்களாய் இருந்தார்கள். தங்களுடைய இந்தக் குறை களைத் தீர்த்துக் கொள்ள வணங்கத்தகாதவர்களையெல்லாம் வணங்கி, அவர்களை ஆராதித்து வந்தனர். இப்படிப் பல காலம் சென்ற பிறகு 'ஐயோ, நாம் கெட்டு விட்டோமே? வணங்காத வர்களை வணங்கி மேன்மேலும் இந்த ஸம்ஸாரத்திலேயே பிறந்து அழுக்கு உடம்பையும், எச்சில் வாயையும் கொண்டு வாழ்கிறோமே என்று நிர்வேதம் (பஶ்சாத்தாபம்) உண்டாகப் பெற்றுப் பிறகு தமக்கு ஏற்பட்ட ஆசார்யர்களை அடைந்து அவர்களை ஸேவித்து உபாயத்தை அநுஷ்டித்து அதன்பின் மோக்ஷம் பெற்றவர்கள் முக்தர்கள்.

நித்யஸூரிகள் இப்படிப்பட்டவர்கள் அல்லர். எப்பொழு துமே ஸம்ஸார பந்தம் சிறிதும் இல்லாதவர்கள். எம்பெரு மானைத் தவிர வேறு யாரையும் எதற்காகவும் வணங்காதவர்கள்.

அப்படிப்பட்டவர்கள் வணங்கும் பெருமான் இன்று நமக்காக, நம்முடைய கஷ்டங்களைப் போக்குவதற்காக இங்கு அவதரித்துள்ளான் என்று அவன் பெருமையை உணர்த்துகிறார் ஆழ்வார்.

இப்படி எம்பெருமானின் பெருமையை நாட்டார்க்கு உணர்த்தும் ஆழ்வார் அவனுடைய திருமேனி குணங்களில் ஈடுபட்டு மனம் வருந்துகிறார். அதாவது-

மிக மென்மை வாய்ந்த- ஸுகுமாரமான - திருமேனி கொண்டு ஶங்கு சக்ரங்களைத் தாங்கிக் கொண்டிருக்கிறானே இது தகுமா? திருமேனி திருக்கைகள் வாடிவிடாவா என்று மனம் வருந்துகிறார். அதனால் தான் நம்மை நோக்கியும் 'அணியார் ஆழியும் ஶங்கும் ஏந்தும் அவர் காண்மின்' என்று கூறிக் காட்டுகிறார். ஆனால் நம்முடைய மனதில் இந்த ஸௌகுமார்யம் படவில்லை- தோன்றவில்லை.

இதே பதிகத்தில் (திருவாய்மொழியில்) 3வது பாட்டில் சுமக்க முடியாதவைகளான சக்ரம், ஶங்கு இவற்றைச் சுமக்கின்றானே எம்பெருமான்! என்கிறார் 'ஆளும் ஆளார் ஆழியும் சங்கும் சுமப்பார்தாம்' என்று.

மிக்க பளு-கனம் உடைய வஸ்துக்களைத் தாங்கும்போது தான் சுமக்கிறான் என்ற வினைச் சொல்லைப் பயன்படுத்துவர் உலகோர். அவ்வாறே தான் இங்கும் எம்பெருமானைப் பார்த்து 'சக்ரம், சங்கு இவற்றைச் சுமக்கிறான் இவன்' என்று நமக்கு எடுத்துக் கூறுகிறார்.

ஈட்டில் உள்ள வாக்யங்களை இங்கே அறிய வேண்டும். ''ஆபரணமான திவ்யாயுதங்கள் அவன் (எம்பெருமான்) ஸௌகுமார்யத்தாலே மலையெடுத்தாற்போலே சுமையாய்த்





தோற்றுகிறது இவர்க்கு. எதிரிகளுக்கு அஸ்த்ரமாய், அநுபவிப்பார்க்கு ஆபரணமாய் இருக்கின்றவை'' என்று.

எம்பெருமான் திருக்கையில் உள்ள ஆயுதங்கள் வெறும் ஆயுதமாக மட்டும் இருப்பதில்லை. பாபம் செய்தவர்களுக்கு அவற்றைப் போக்க அவை ஆயுதங்கள் ஆகின்றன. எம்பெருமானுக்கு இவை ஆபரணங்களாய் இருந்து கொண்டு அழகைத் தருகின்றன. இவ்வாறே முக்தர்களுக்கும் நித்யர்களுக்கும் கூட இந்த ஆயுதங்கள் எம்பெருமான் விஷயத்தில் ஆபரணங்களாக மட்டுமே தான் காட்சி யளிக்கும்.

ஆபரணங்கள் இவற்றை அணிபவர்க்குச் சுமையாக இருப்பதில்லை. இந்த வகையில்தான் ஆபரணங்களாக விளங்கும் இந்த சக்ரம்-ஶங்கம் முதலான ஆயுதங்களைத் தரிப்பதில் எம்பெருமானுக்கு எவ்வித ஶ்ரமமும் இருக்காது. ஆனாலும் அந்த எம்பெருமானுடைய திருமேனி ஸௌகுமார்யத்தை - மென்மையை உற்று நோக்கும்போது இந்தச் சக்ரம்-ஶங்கம் முதலானவை எம்பெருமானுக்குப் பொறுக்க முடியாத சுமையாக இருக்குமோ என்று எண்ணி வருந்தத் தோன்றும்.

ஆழ்வார் எம்பெருமானிடம் அதிகமான பக்தி உள்ளவராகையாலே அவன் திருமேனியின் ஸௌகுமார்யத்தை நன்கு அறிவார். ஆகையால் அந்தச் சக்ரம்-ஶங்கம் இவை எம்பெருமானுக்குப் பெருஞ்சுமையாக இருக்குமே என்று எண்ணி உள்ளம் உருகுகிறார். அந்த உருக்கம் ஒரு பாசுரமாக வெளிப்படுகிறது. அதன் முதல் அடிதான் இங்கு வேண்டியது இப்போது. 'ஆளும் ஆளார் ஆழியும் சங்கும் சுமப்பார் தாம்' என்பதே முதல் அடி. இதில் 'ஆழியும் சங்கும் சுமப்பார் தாம்' என்ற வாக்யத்தில் தான் ஆழ்வாருக்கு எம்பெருமானிடம் உள்ள பரிவு நன்கு வெளியாகிறது.

பரிவுடையார்க்குத் தான் ஸௌகுமார்யம் நன்கு புலனாகும். ஸௌகுமார்யம் தெரிந்தால் தான் இம்மாதிரியாக உள்ளம் உருக முடியும். நமக்கு எம்பெருமானிடம் பரிவு- பக்தி இல்லை. ஆகவே அவனுடைய ஸௌகுமார்யம் புலனாவதில்லை - தெரிவதில்லை. ஆகவே இம்மாதிரி உள்ளம் உருகுவதுமில்லை. உலகிலும் பெற்றோர்கள் தம் பெண்ணுக்குச் சிறிய வயதிலேயே கல்யாணம் செய்துவைக்க,அவளும் தன் இளம் வயதிலே நல்ல குழந்தையைப் பெறுகிறாள். அந்தக் குழந்தையும் நன்கு வளர்ந்து வருகிறது. வளர்த்தியான அந்தக் குழந்தையை அநாயாஸமாக மகிழ்ச்சியுடன் தன் இடுப்பில் சுமந்து தன் பிறந்தகத்துக்கு வருகிறாள். அந்தக் குழந்தை தாய்க்கு பாரமாவதில்லை. ஆனாலும் இவளுடைய பெற்றோர்கள் 'என் பெண் இவ்வளவு பெரிய குழந்தையைச் சுமந்து வருகிறாளே' என்று பரிந்து பேசுவார்கள்.அந்தப் பெண்ணுக்கு அவளுடைய குழந்தை பாரமாக இல்லை. ஆனாலும் இவளுடைய பெற்றோர்களுக்கு அது சுமையாகத் தோன்றுகிறது. காரணம் என்ன? அந்தப் பெண் மீது அவளுடைய பெற்றோர்கள் கொண்ட பாசம் தான்.

அந்தப் பாசம் நமக்கு எம்பெருமானிடம் இருந்தால் ஸ்வாமி நம்மாழ்வாரைப் போல் நம்முடைய நெஞ்சமும் உருகும். ஆக இவ்வளவால் விவரித்த ஸௌகுமார்யம் 'திருவண் பரிசாரம்' என்ற திவ்யதேஶத்தில் அர்ச்சையில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானிடம் ப்ரகாஶிக்கிறது என்றபடி.

பாசுரம் அங்கே - அநுபவம் இங்கே

ஸ்வாமி நம்மாழ்வார் அருளிச் செய்த முன் காட்டிய பாசுரம் திருவண் பரிசாரத்திலே. ஆனால் அநுபவம் நமக்குத் 'திரு எவ்வுளூரிலே'. திருவண் பரிசாரத்து எம்பெருமான் விஷயமாக ஸ்வாமி நம்மாழ்வார் அருளிய பாசுரங்கள் மிகவும் சுவை





யுடையனவாய்- பரம போக்யங்களாய் உள்ளன. ஆனால் அவற்றில் உள்ளபடி அநுபவம் அந்த எம்பெருமானுடைய திருமூர்த்தியில் இன்று நமக்குக் கிடைப்பதில்லை. பாசுரங்களின் அழகுக்கு ஏற்ற அழகை அம்மாதிரியான சில இடங்களில் அநுபவிக்க முடிவதில்லை.

இந்த வ்யாஸம் எழுதும்போது நாம் திருவுள்ளூரில் ஸ்ரீ வீரராகவப் பெருமாளுடைய தை ப்ரஹ்மோத்ஸவத்தில் அந்வயித்து அவனுடைய ஸௌகுமார்யத்தை அநுபவித்து வந்தோம்.

'ஆளும் ஆளார் ஆழியும் ஶங்கும் சுமப்பார் தாம்' என்று ஸேவிப்பவர் மனம் கலங்கும் நிலை திருவுள்ளூரில் ஸ்ரீ வீர ராகவனை ஸேவிப்பார் அனைவருக்கும் உண்டாகிறது.

அர்ச்சாவதாரத்தில் ஶங்கம்-சக்ரம் இவற்றின் அழகு ஸ்ரீ வீரராகவனுக்குச் சிறப்பாக அமைந்துள்ளது. இவனுக்கே உரிய அழகு இது. அர்ச்சாவதார ரஸிகர்களான மஹான்கள் இம்மாதிரி ஶங்க-சக்ரங்களின் அழகு, மற்றைய எம்பெருமான்கள் திறத்தில் காணக் கிடைப்பதில்லை என்று சொல்லியுள்ளனர்.

அகன்று விளங்கும் ஶங்கம்-சக்ரம் இவற்றை ஏந்திக் கொண்டு பக்த உலா கண்டருளும்போது இந்தத் திருமேனி இந்தச் சுமையைப் பொறுக்குமா? என்று எல்லோருமே அஞ்சுவார்கள்.

திருவண் பரிசாரத்தில் ஆழ்வாருக்கு மட்டுமே இம்மாதிரி அநுபவம் உண்டாயிற்று. திருவுள்ளூரிலே ஸேவிப்பார் அனைவருக்குமே இம்மாதிரி அநுபவம் உண்டாகிறது. ஆக எம்பெருமானுடைய திருமேனி மிகச் சிறந்த ஸௌகுமார்யம் உடையதாகும்.

ஆனால் இந்த அருள்மொழியைப் படிப்பவர்களுடைய புத்தி மட்டும் ஸௌகுமார்யம் உடையதாயிருக்கக் கூடாது. இவர்களுடைய புத்தி ஸௌகுமார்யம் (மென்மை) உடையதாயிருந்தால் ஸூக்ஷ்மமான அர்த்தங்களைப் புரிந்து கொள்ளமுடியாததாகி விடும். யாவற்றையும் எளிதில் அறிந்து கொள்ளும் வகையில் கடிநமாய் இருக்க வேண்டும்.

ஶரீரம் ம்ருதுவாய் - ஸுகுமாரமாய் இருக்கலாம். ஆனால் ஜ்ஞானம் (புத்தி) மட்டும் ஸௌகுமார்யம் (மென்மை) வாய்ந்ததாய் இருக்கக் கூடாது.

---



## 13. "லாவண்யம்", "யௌவநம்"

पार्थस्य सारथौ देवराजे वीररघूद्वहे ।
प्रह्लादवरदे चैवं लावण्यमिदमद्भुतम् ॥
अनुभूयाऽसकृद्दृष्टाः नारायणयतीश्वराः ।
निर्ब्रमस्तन्निरुपमं यतिराजेन कीर्तितम् ॥

பார்த்தஸ்ய ஸாரதௌ தேவராஜே வீரரகூத்வஹே ।
ப்ரஹ்லாதவரதே சைவம் லாவண்ய மிதம் அத்புதம் ॥
அநுபூயாऽஸக்ருத் ஹ்ருஷ்டா: நாராயணயதீஶ்வரா: ।
நிர்ப்ரூமஸ்தந்நிருபமம் யதிராஜேந கீர்த்திதம் ॥

உலகில் ஸம்ஸாரிகளாயிருப்பவர்கள் ஆங்காங்கு இருக்கும் தன் பேரன் பேத்தி முதலான குழந்தைகளுடன் கூடி அநுபவித்து மகிழ்வதுபோல் நாம் ஆங்காங்கு எழுந்தருளியிருக்கும் எம்பெருமான்களைக் கூடி அவர்களுடைய திருமேனி அழகில் ஈடுபட்டு அதை அநுபவித்து மகிழ்கிறோம்.

நிர்வாஹத்தில் இடையிடையே ஏற்படும் பற்பல ஶ்ரமங்களுக்கும் பரிஹாரமாக அமைவது பகவதநுபவமேயாகும்.

நாள்தோறும் நாம் ஆராதித்து வரும் ஸ்ரீ மாலோலனுடைய திவ்ய லாவண்யமே நம்மை ஆநந்தக் கடலில் அமிழ்த்துகிறது. இதற்கும் மேல் பற்பல திவ்யதேஶத்து எம்பெருமான்களுடைய் வடிவழகும் அவ்வப்பொழுது கிடைக்கப் பெற்றுப் பேராநந்தம் எய்தி வருகிறோம்.

திருவல்லிக்கேணியில் பல மாதங்கள் தங்கியிருப்பதால் ஸ்ரீ பார்த்தஸாரதியினுடைய திவ்ய லாவண்யம், அவ்வப்போது ஸ்ரீ காஞ்சிக்குச் செல்வதால் தேவாதிராஜனுடைய ஒப்புயர்வற்ற

லாவண்யம், நமக்குச் சொந்தமான ஸ்ரீ வீரராகவனுடைய அபார லாவண்யம், இவ்வாறே நம் ஸ்ரீ மடத்திற்கு மூலஸ்தானமான ஸ்ரீ அஹோபில க்ஷேத்ராதிபதியான ஸ்ரீ ப்ரஹ்லாத வரதனுடைய அத்யத்புதமான லாவண்யம் இவற்றை அடிக்கடி அநுபவித்து ஆநந்த பரிதராயிருக்கும் நாம் ஶரணாகதி கத்யத்தில் யதிராஜரான ஸ்ரீ பாஷ்யகாரர் அருளிய லாவண்யத்தை இந்த இதழில் விளக்குகிறோம்.

இதற்கு முன் பகுதியில் நிரதிஶயமான ஸௌகுமார்யத்தை அநுபவித்தோம். அநுபவிப்பித்தோம்.

ஸௌகுமார்யத்துக்கு அடுத்து இடம் பெற்ற திருமேனி குணம் லாவண்யம் ஆகும்.

லாவண்யம்- அவயவி ஶோபா (**लावण्यम्-अवयविशोभा**) அவயவங்களை உடைய ஸமுதாயத்தின் அழகு லாவண்யம் எனப்படும் என்று ஶ்ருதப்ரகாஶிகாசார்யர் உரையிடுகிறார்.

ஒவ்வொரு அவயவத்திலும் உள்ள அழகு ஸௌந்தர்யம் எனப்படும். அது விளக்கப்பட்டது முன்னமே.

லாவண்யம் - ஸமுதாய ஶோபா (**लावण्यं-समुदायशोभा**) என்கிறார் பெரியவாச்சான் பிள்ளை.

ஸமுதாயம் என்பது அவயவி என்று முன் கூறப்பட்டது. திருமேனி முழுவதும் பரவியுள்ள அழகு லாவண்யம் எனப்படுகிறது.

திருவடி, திருக்கரம் இவ்வாறான ஒவ்வொரு அவயவங்களில் மட்டும் உள்ள அழகு, ஸௌந்தர்யம் என்று கூறப்படுகிறது. திருமேனி முழுவதிலும் உள்ள அழகு, லாவண்யம் என்று கூறப் படுகிறது என்று ஸௌந்தர்யம், லாவண்யம் இரண்டுக்கும் வேறுபாடு காட்டியுள்ளனர் பூர்வாசார்யர்கள்.





இதை மாற்றித்தான் சொன்னால் என்ன? என்ற கேள்வி இங்கு எழலாம். அதாவது ஒவ்வொரு அவயவத்திற்கென்று உள்ள அழகை லாவண்யம் என்றும் ஸமுதாயத்தில் உள்ள அழகை ஸௌந்தர்யம் என்றும் ஏன் மாற்றிச் சொல்லக் கூடாது? அதாவது அவயவ ஶோபையை லாவண்யம் என்றும் அவயவிஶோபை யை ஸௌந்தர்யம் என்றும் ஏன் சொல்லக்கூடாது என்ற கேள்வி இங்கு எழலாம்.

இதற்குப் பதில் கூறுவது போல் அமைகிறது இங்குப் பெரியவாச்சான் பிள்ளை காட்டிய விளக்கம். அந்த விளக்கம் பின் வருமாறு:- 'லாவண்யம் ஸமுதாய ஶோபை-அதாவது லவணம் போலே எங்கும் ஒக்க வ்யாபித்து நின்று ரஸத்தைத் தரவற்றா யிருக்கை' என்று. நீரில் போட்ட லவணம்-உப்பு அந்த நீர் முழுவதும் பரவித் தன் ரஸத்தைக் கொடுக்கும். அதுபோல் இந்த அழகு திருமேனி முழுவதும் பரவி நின்று ஸேவிப்பவர்களுக்கு ரஸத்தை - ஆநந்தத்தைக் கொடுத்துக் கொண்டிருக்கும்.

கற்கண்டு முதலியவற்றைக் காட்டிலும் எளிதில் கரைந்து எங்கும் பரவி ரஸம் தரவல்லது உப்பேயாதலால் அதைத்தான் உபமாநமாகக் கொடுக்கிறார்கள் பூர்வர்கள். மேலும் உப்பு தன்னிடையில் சிக்கிய பொருளையும் விரைவில் உப்பாகவே மாற்றும் தன்மையுடையதாகும்.

திருவடியின் அழகு திருக்கரத்திற்குக் கூடாது-இராது. இவ்வாறே அந்தந்த அவயவங்களின் அழகு அந்தந்த அவயவங்க ளுக்கு மட்டுமே சிறப்பாக அமையும். ஸமுதாய ஶோபை என்ற இந்த லாவண்யம் திருமேனி முழுவதுக்கும் பொதுவானதா யிருக்கும். இந்த லாவண்யத்தினால்தான் உலகம் முழுவதையும் வ்யாபித்து மகிழ்விக்கிறான் எம்பெருமான் என்கிறது ஸ்ரீ பாஞ்சராத்ரம் **विश्वमाप्याययन् कान्त्या पूर्णेन्द्वयुत तुल्यया** (விஶ்வம் ஆப்யாயயந் காந்த்யா பூர்ணேந்த்வயுத துல்யயா) என்று. அதாவது

களங்கமில்லாத பதினாயிரம் பூர்ணசந்த்ரன்களுக்கு ஒப்பான காந்தியினால் உலகத்தை வ்யாபித்து மகிழ்விக்கிறான் எம்பெருமான் என்பது இதன் பொருள்.

அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை லாவண்யத்திற்கு விளக்கம் தருகிறது:-

**भूयिष्टं तेज एवाऽद्भिः बहुलाभिः मृदूकृतं ।**
**चक्षुरानन्दजननं लावण्यमिति कथ्यते ॥**

பூயிஷ்டம் தேஜ ஏவாऽத்பி: பஹுலாபி: ம்ருதூக்ருதம் ।
சக்ஷுராநந்தஜநநம் லாவண்யமிதி கத்யதே ॥

ஒளிப்பொருளை எடுத்து (இது கற்பனை) நிறைய தண்ணீரோடு சேர்த்து அரைத்து ம்ருதுவாக ஆக்கினால் அது கண்ணுக்கு ஆநந்தத்தைத் தரும் அன்றோ! அதுதான் லாவண்யம் என்று கூறப்படுகிறது என்பது இதன் பொருள்.

ஆக இவ்வளவால் திருமேனி முழுவதும் பரவியுள்ள அழகுக்கு லாவண்யம் என்பது பெயர் என்று கூறப்பட்டது.

ஸ்ரீ ராமாவதாரத்தில் தண்டகாரண்யத்திற்கு ஸ்ரீ ராமன் எழுந்தருளும்போது தன் திருமேனி காந்தியினால் - லாவண்யத்தினால் தண்டகாரண்யத்தை அழகியதாகச் செய்து கொண்டு எழுந்தருளுகிறான்.

**'शोभयन् दण्डकारण्यं दीप्तेन स्वेन तेजसा'**

(ஶோபயந் தண்டகாரண்யம் தீப்தேந ஸ்வேந தேஜஸா)

என்று வால்மீகி கூறுகிறார்.

ஸ்ரீ க்ருஷ்ணாவதாரத்தில் கண்ணன் ஹஸ்திநாபுரத்தில் துர்யோதந ஸபையில் ப்ரவேஶிக்கும்போது தன் திருமேனி





காந்தியினால் - ஒளியினால் அங்குள்ள அரசர்களின் முககாந்திகளை மங்கும்படிச் செய்து கொண்டு எழுந்தருளினான்.

**'ज्योतींष्यादित्यवद्राजन्! कुरून् प्रच्छादयन् श्रिया'**

(ஜ்யோதீம்ஷ்யாதித்யவத் ராஜந்! குரூந் ப்ரச்சாதயந் ஶ்ரியா )
என்று வ்யாஸர் கூறினார். இந்த தேஜஸ்- காந்திதான் லாவண்யம் எனப்படுகிறது.

தண்டகாரண்யத்திற்குள் ஸ்ரீ ராமன், லக்ஷ்மணன் ஸீதை இவர்களுடன் ப்ரவேஶிக்கிறான். இவர்களுடைய லாவண்யம் - ஸௌந்தர்யம் இவற்றையெல்லாம் தண்ட காரண்யத்தில் உள்ள ருஷிகள் அநுபவிக்கிறார்கள். உடனே அவர்களுக்கு ஸ்ரீ ராமனிடம் மிகுந்த ப்ரேமபாஶம் உண்டாகிவிடுகிறது. இவனுடைய அழகுக்கு த்ருஷ்டி தோஷம் வராமல் இருக்க வேண்டுமே என்று கலங்குகிறார்கள். இதன் விளைவாய் இவர்கள் ஸ்ரீ ராமனுக்கு மங்களாஶாஸநம் செய்கிறார்கள்.

இது பற்றி வால்மீகி கூறுகிறார்.

**रूपसंहननं लक्ष्मीं सौकुमार्यं सुवेषताम् ।**
**ददृशुर्विस्मिताकाराः रामस्य वनवासिनः ॥**
**मङ्गलानि प्रयुञ्जानाः प्रत्यगृह्णन् दृढव्रतम् ।**

ரூபஸம்ஹநநம் லக்ஷ்மீம் ஸௌகுமார்யம் ஸுவேஷதாம் ।
தத்ருஶு: விஸ்மிதாகாரா: ராமஸ்ய வநவாஸிந: ॥
மங்களாநி ப்ரயுஞ்ஜாநா: ப்ரத்யக்ருஹ்ணந் த்ருடவ்ரதம் ॥

தண்டகாரண்யத்தில் உள்ள ருஷிகள் தற்போது வநவாஸம் செய்துவரும் ஸ்ரீ ராமனைக் கண்டார்கள். அவனை மட்டுமல்லாமல் அவனுடைய உருவத்தோற்றத்தை (**रूपसंहननम्**) (ரூபஸம்ஹநநம்)யும் கண்டனர். இதுதான் ஸமுதாய ஶோபை

எனப்படும் லாவண்யம் ஆகும். பிறகு ஸௌகுமார்யத்தையும் கண்டனர். இவற்றைக் கண்ட ருஷிகள் ஸ்ரீ ராமனுக்கு எந்த விதமான தோஷமும் ஏற்படாமலிருப்பதற்காக மங்களாஶாஸநமும் செய்கிறார்கள் என்கிறார் வால்மீகி.

இப்படிக் கண்டவர்களைக் கலங்க வைக்கும் லாவண்யத்தை அர்ச்சாவதாரத்திலும் ஆழ்வார்கள் அநுபவிக்கிறார்கள்.

ஸ்வாமி நம்மாழ்வாருடைய அநுபவத்தை இப்போது நாம் அநுபவிப்போம்.

ஸ்வாமி நம்மாழ்வாருக்குத் திருக்குறுங்குடி நம்பியினிடத்தில் மிகுந்த ஈடுபாடு உண்டென்பது ப்ரஸித்தம். அந்த எம்பெருமான் விஷயமான தன் ஈடுபாட்டை வெளிப்படுத்தி ஒரு திருவாய் மொழி அருளிச் செய்துள்ளார்.

நாயிகா பாவ (**भाव**)த்தை அதாவது தலைவித் தன்மையைப் பெற்று இந்தப் பதிகத்தை அருளிச் செய்கிறார் ஆழ்வார்.

கல்யாணப் பருவத்திலிருக்கும் தன் பெண்ணான பராங்குஶ நாயகியைத் தன் க்ருஹத்தில் காணாத இவர் தாயார் இவர் (பராங்குஶ நாயகி) திருக்குறுங்குடி சென்றுள்ளமை அறிந்து நீ இவ்வாறெல்லாம் தனித்துச் செல்லக்கூடாது என்று கோபித்துக் கொள்ள அதற்குப் பதிலாகப் பராங்குஶ நாயகி- ஸ்வாமி நம்மாழ் வார் அருளிச் செய்த பதிகம் தான் இங்கு குறிக்கப்படுகிறது.

ஆழ்வாருடைய திருவுள்ளத்தை - ஆசார்யருடைய ஹ்ருத யத்தை - ஸ்ரீமத் அழகியமணவாளப் பெருமாள் நாயனார் எடுத்துக் காட்டுகிறார் ''வைஷ்ணவ வாமநத்தில் நிறைந்த நீலமேனியின் ருசி ஜநக விபவ லாவண்யம் பூர்ணம்'' (102) என்ற வாக்யத்தில். 'திருக்குறுங்குடி' என்ற திவ்யதேஶத்தை இங்கு 'வைஷ்ணவ வாமநம்' என்று குறிக்கிறார் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார். இதற்கு ஒரு கருத்தும் அபிப்ராயமும் உண்டு. அதாவது:-





இங்கு எழுந்தருளியிருக்கும் 'நம்பி' பரிபூர்ணன் என்ற திருநாமம் கொண்ட எம்பெருமானை 'வாமநன்' என்கிறார் இவர். அந்த ப்ரஸித்தனான வாமநன் தன்னுடைய சொத்தான பூமியைப் பெறுவதற்கு மஹாபலியினிடத்தில் யாசகனாய்ச் சென்று யாசித்தான். இது விபவாவதாரத்தில்.

இங்கு அர்ச்சையில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானும் ஸ்ரீ பாஷ்யகாரரிடத்தில் யாசகனாய்ச் சென்று நமக்கு வேதாந் தார்த்தத்தை அருளிச் செய்ய வேண்டும் என்று யாசித்து அவ்வாறே ஸ்ரீ பாஷ்யகாரர் அருளிச் செய்த வேதாந்தார்த்தங் களைக் கேட்டு ஸ்ரீ பாஷ்யகாரருக்கு ஶிஷ்யராகி 'நாமும் நம் இராமாநுசனை உடையோம்' என்று இந்த எம்பெருமானே அருளிச் செய்தாராகையாலே இவர் வாமநன் ஆகிறார். மேலும் இந்த எம்பெருமான் வாமநாவதாராம்ஶம் என்று புராணத்தில் ப்ரஸித்தி உள்ளபடியாலும் இவர் வாமநன் ஆகிறார். ஸ்ரீ ராமாநுஜ ருடைய ஸம்பந்தம் பெற்றவராகையாலே 'வைஷ்ணவ வாமநன்' ஆனார். நம்பி என்பது இயற்பெயரானபடியால் வைஷ்ணவ-வாமந - நம்பி எனப்படுகிறார்.

இவர் வைஷ்ணவரானதற்கு மற்றோர் காரணமும் கூறப் படுகிறது. அதாவது திருவாய்மொழியில் ஐந்தாவது பத்தில் **'எங்ஙனேயோ அன்னைமீர்காள்'** என்று தொடங்கும் ஐந்தாவது திருவாய்மொழி இந்தத் திருக்குறுங்குடி என்ற திவ்யதேஶத்தைப் பற்றியது. இதில் 11வதான கடைசிப் பாசுரத்தில் **பலன்** சொல்லும்போது ஸ்வாமி நம்மாழ்வார் **''அறியக் கற்றுவல்லார் வைட்டணவர்''** என்று இந்தத் திவ்ய தேஶத்தைப் பற்றிய இந்தத் திருவாய்மொழியைக் கற்றவர்கள் வைஷ்ணவர் ஆவார் என்று அருளிச் செய்துள்ளமையால் இத்திருவாய்மொழியை யறிந்த வைஷ்ணவர்கள் பலர் இங்கு வாஸம் செய்வதால் இது **வைஷ்ணவ வாமந க்ஷேத்ரம்** எனப்படுகிறது. முன்பு வைஷ்ண

வனான வாமநனுடைய க்ஷேத்ரம் என்ற பொருள். தற்போது - வைஷ்ணவர்களுடையதான வாமந க்ஷேத்ரம் என்ற பொருள். இந்த க்ஷேத்ரத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் திரு மேனியில் லாவண்யம் பூர்ணமாயிருக்கும் என்று கூறப்படுகிறது.

இது விபவ லாவண்யம் ஆகும் என்றும் கூறப்படுகிறது. இதற்குக் கருத்து- விபவாவதாரத்தில் வாமநனான எம்பெருமா னுடைய ஸம்பந்தம் இந்த க்ஷேத்திரத்திற்கு உண்டு என்பதைத் தெரிவிப்பதற்கும் குறுங்குடி- என்ற சொல்லுக்கு 'குறியவன் குடி' குறியவனான - வாமநனானவனுடைய குடி என்ற பொருளைத் தெரிவிப்பதற்கும் தான் விபவ லாவண்யம் என்று கூறப்பட்டது என்கிறார் ஸ்ரீ மணவாள மாமுனிகள். இந்த லாவண்யம் இந்த எம்பெருமானையே மேலும் மேலும் ஸேவிக்க வேண்டும் என்ற ஆசையை உண்டு பண்ணக் கூடிய தாய் இருக்கும் என்கிறார்.

இந்த அர்த்தங்கள் இந்த திவ்ய தேஶத்தைப் பற்றிய திருவாய்மொழிப் பாசுரங்களில் ப்ரஸித்தங்கள்.

ஸ்வாமி நம்மாழ்வார் திருக்குறுங்குடி நம்பியின் வடிவழ கிலே ஈடுபட்டுத் தலைவித்தன்மையை, அதாவது நாயிகா பாவத்தை (பெண் தன்மையை)ப் பெற்று அவன் நினைவாகவே இருக்க இவள் நிலைகண்ட இவளுடைய தோழிமார்களும் அன்னைமார்களும் இவளை இதிலிருந்து விலக்க வந்தபோது அவர்களுக்குத் தலைவியான ஸ்ரீ பராங்குஶ நாயகி பதில் சொல்லுவதாய் அமைந்துள்ளது இந்தத் திருவாய்மொழி.

**நிறைந்த வன்பழி நங்குடிக்கு இவளென்று**
**அன்னை காண கொடாள்**
**சிறந்த கீர்த்தித்திருக்குறுங்குடி**
**நம்பியை நான் கண்டபின்**





**நிறைந்த சோதிவெள்ளம் சூழ்ந்த**
**நீண்ட பொன் மேனியொடும்**
**நிறைந்து என்னுள்ளே நின்றொழிந்தான்**
**நேமி அங்கை உளதே.**

**-திருவாய்மொழி (5.5.7)**

பராங்குஶ நாயகியான ஸ்வாமி நம்மாழ்வார் அருளிச் செய்கி றார். 'நாம் பரந்யாஸம் பண்ணின விஷயத்தில் மீண்டும் ப்ரயத்நம் செய்யாதிருக்க வேண்டும் என்று சொல்லி என் தாயார் என்னைத் தடுக்கிறார். ஆனால் அதன்படி நான் நடந்து கொள்ளமுடியாதபடி நம்பி என்னை வஶீகரித்து விட்டான்' என்று தன் நிலைமையை எடுத்துக் கூறுவதாக அமைந்துள்ளது இந்தப் பாசுரம். இதன் பொருள்:-

திருக்குறுங்குடிநம்பி சிறந்த கீர்த்தி உடையவன். நான் (ஆழ்வார்) அவனைக் கண்டபின் அவனுடைய கீர்த்தி - சோதி மேலும் சிறந்தது-நிறைந்தது. இப்படி நிறைந்த அவனுடைய சோதி வெள்ளம் (தேஜஸ்ஸினுடைய ப்ரவாஹம்) என்னைச் சூழ்ந்து கொண்டது. அதுமட்டுமன்று. அந்த நம்பி தன்னுடைய திருமேனியோடு என்னெஞ்சினுள்ளே நிறைந்து அந்த இடத்தை விட்டு அகலாதபடி நின்று விட்டான். அவனுடைய திருமேனி யோ அளவிடமுடியாத படி பரமபோக்யமாக இருந்தது. அது மட்டுமன்று-அவன் திருக்கையில் சக்ரமும் இருந்தது என்கிறார்.

நம்பி தன்னுடைய திருமேனி அழகை - அதாவது லாவண் யத்தைக் காட்டி என்னை வஶீகரித்து விட்டான். ஆகவே தோழி மார், தாய்மார் ஆகியோருடைய பேச்சுக்களின் படி நான் நடந்து கொள்ள முடியவில்லை. அவர்களுடைய பேச்சுக்கள் என் ஹ்ருத யத்தில் நுழைய முடியாதபடி முழு இடத்தையும் ஆக்ரமித்துக் கொண்டுள்ளான். நீங்கள் சொல்லும் ஹிதவார்த்தைகள் என் நெஞ்சினுள் புக வேண்டுமானால் அவனை என் நெஞ்சை விட்டு

அப்புறப்படுத்துங்கள். அப்போது தான் நான் உங்கள் வார்த்தையைக் கேட்டு அதன்படி நடந்து கொள்வேன்.

திருமேனியின் முழு அழகெல்லாம் ஒரு புறம் இருக்கட்டும். அவன் திருக்கையில் திருவாழி ஏந்தியுள்ளானே இதொன்றே போதுமே என்னை வஶீகரிப்பதற்கு. அவனுடைய திருக்கையில் திருவாழி இல்லாமல் இருந்திருந்தால் நான் ஒரு வேளை அவனுடைய வடிவழகிலிருந்து மீளுவேன் என்றெல்லாம் நம்பியினிடத்தில் தனக்குள்ள ஈடுபாட்டை வெளியிட்டுள்ளார் ஆழ்வார்.

இங்குள்ள ஈடு என்ற வ்யாக்யாநத்தில் உள்ள வாக்யங்கள் ரஸிக்கத்தக்கனவாகும். அவை இவையே:- ''உங்கள் (தாய்மார்கள்) ஹிதவசனம் கேட்கைக்கு உள் அவகாஶம் இல்லாதபடி நிறைந்து நின்றான். அவனை என் உள்ளினின்றும் புறப்படச் சொல்ல மாட்டிகோளே! வெறும் புறத்திலே ஆலத்தி வழிக்க வேண்டும். கையிலே அதாவது இயற்கையிலேயே அழகு மிகுந்த கையிலே திருவாழியும் ஆனால் மீளப்போமோ! ..வடிவழகெல்லாம் ஒரு தட்டும், கையும் திருவாழியுமான அழகு ஒரு தட்டுமாயுமிற்றிருப்பது. அவன் கையில் திருவாழி இருக்க என்றாலே பழிக்கு அஞ்சி மீளப்போமோ'' என்று. இதில் 'நிறைந்த சோதி வெள்ளம்' என்பதுதான் லாவண்யத்தையும் அதில் ஆழ்வார் ஈடுபட்டமையையும் குறிக்கிறது.

மேலும் அவயவஶோபை எனப்படும் ஸௌந்தர்யமும் சேர்ந்து என்னை வஶீகரித்துவிட்டது என்பதை முன் பாசுரங்களிலும் அருளியுள்ளார்.

ஒரு ஸமயம் இந்த அழகில் ஈடுபட்டுப் பிறகு இதை விட்டு விடுவது என்றில்லாதபடி மேன்மேலும் அநுபவிக்க வேண்டும்படித் தூண்டக் கூடியதாயுள்ளது இந்த அழகு என்ற விஷயத்தை- இந்தப் பதிகத்தின் முதற்பாசுரத்திலேயே- 'சங்கினோடும்,





நேமியோடும் தாமரைக் கண்களோடும் செங்கனிவாய் ஒன்றினோடும் செல்கின்றது என் நெஞ்சமே!'

**(திருவாய்மொழி 5.5.1)**

என்று அருளிச் செய்துள்ளார்.

ஆக இவ்வளவால் நிரதிஶயமான (இதற்கு மேல் உயர்ந்ததொன்றில்லாத) லாவண்யம் விபவாவதாரத்தில் போல் திருக்குறுங்குடி நம்பியின் பக்கலிலும் ப்ரஸித்தம் என்று கூறப்படுகிறது.

இந்த அழகு ஸ்த்ரீகளை மட்டுமன்றிப் புருஷர்களையும் கூட வஶீகரிக்கக் கூடியதாயிருக்கிறது. இந்தப் புருஷர்களிலும் நாகரிகர்களான புருஷர்களையன்றி, ரஸமேயறியாத, வெறும் சருகுகளைத் தின்று கொண்டு ஜீவித்திருக்கும் ருஷிகளையும் கூட மோஹிக்கச் செய்யவல்லதாயிருக்கும். இவர்கள் கூட இந்த அழகை ரஸித்துத் தங்களைப் பெண்களாகப் பாவித்து இவனையே மணக்க வேண்டும் என்ற தீவ்ரமான நிலைக்குக் கொண்டு செல்லும் இந்த அழகு என்றெல்லாம் இதன் பெருமை விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

இதற்கு அடுத்துக் கூறப்பட்டுள்ள குணம் யௌவநம் ஆகும். உலகில் குமாரப் பருவத்திற்கு அடுத்து இந்த யௌவநம் என்ற பருவம் வருவதைக் காண்கிறோம். ஆனால் எம்பெருமானுடைய திருமேனிக்கு உள்ள யௌவநம் எப்போதுமே இருப்பதாகும். நித்யமான யௌளவநமாகும் இது. **'युवाऽकुमारः'** (யுவாகுமார:) குமாரனாக இல்லாமலேயே யுவாவாய் இருப்பவன் என்கிறது ஶ்ருதி. தேவர்களிலும் சிலர் பிறக்கும்போதே யௌவநத்துடனேயே பிறக்கிறார்கள். ஆகையால் குமாரப் பருவம் வந்து கழிந்த பிறகுதான் யௌவநப் பருவம் வரவேண்டும் என்பதில்லை.

ஆக - எம்பெருமானுடைய திருமேனியின் யௌவநம் இம்மாதிரியாக மற்றும் பல குணங்களை உடையது.

இவ்வளவில் எம்பெருமான் ரூபம் (ஶரீரம்) இல்லாதவன் என்ற வாதம் மறுக்கப்பட்டது. அவனுக்குத் திருமேனி உண்டு, அதற்கு அநேக குணங்கள் உண்டு.

இனி எம்பெருமான் திருமேனியில் உள்ள ஒவ்வொரு அவயவங்களின் பெருமைகளை அமலனாதிபிரான், இதன் உரைகள் கொண்டு அநுபவிப்போம்.

**यौवनान्ता गुणा ये च भगवद्विग्रहे स्थिताः ।**
**कीर्तिताः भाष्यकारेण सर्वे ते विवृताः इति ॥**
**नारायणयतीशानैः नारायणपरायणैः ।**
**लक्ष्मीनृसिंहसेवाप्त परमानन्द तुन्दिलैः ॥**

யௌவநாந்தா குணா: யே ச பகவத் விக்ரஹே ஸ்திதா: ।
கீர்த்திதா: பாஷ்யகாரேண ஸர்வே தே விவ்ருதா இதி ॥
நாராயண யதீஶாநை: நாராயண பராயணை: ।
லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ ஸேவாப்த பரமாநந்த துந்திலை: ॥

---

ஸ்ரீ:
ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ பரப்ரஹ்மணே நம:

# ஏரார் குணமும் எழிலுருவும்

## எம்பெருமானின் ஸ்வரூப ரூப குணங்கள் ஒரு அறிமுகம்

45ம் பட்டம் ஸ்ரீமதழகியசிங்கர் அருளியது

பாகம் 3

# ஆராத அழகமுதம்



ஸ்ரீ அஹோபிலமடம் 45வது பட்டம் ஸ்ரீமதழகியசிங்கர்
ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியாவில் அருளிய அருள் மொழிகளின் தொகுப்பு



திருப்பாணாழ்வார்
உறையூர்

# ஏரார் குணமும் எழிலுருவும்

## பாகம் 3

# ஆராத அழகமுதம்

பொருளடக்கம்

# 1. ''திருக்கமல பாதம்''

हरेश्चरणमाहात्म्यं पूर्वाचार्यैः प्रपञ्चितम्।
मनागिह समग्राहि नारायणयतीश्वरः ॥

प्राप्यं च प्रापकं चापि भोग्यं पावनमेव च ।
सर्वेषां नः कुलधनं भगवच्चरणद्वयम् ॥

यामुनार्यैस्तथा चाऽन्यैश्शुकाद्यैश्च महर्षिभिः ।
आदिभक्तैश्च बहुभिर्बहुधा चोपवर्णितम् ॥

ग्रन्थविस्तरभीत्यैव तावन्नेह व्यतन्यत ।
अथाऽप्युपात्तमात्रेण हृष्येयुस्साधवो ध्रुवम् ॥

ஹரேஶ்சரணமாஹாத்ம்யம் பூர்வாசார்யை: ப்ரபஞ்சிதம் ।
மநாகிஹ ஸமக்ராஹி நாராயணயதீஶ்வர: ॥

ப்ராப்யம் ச ப்ராபகம் சாபி போக்யம் பாவநமேவ ச ।
ஸர்வேஷாம் ந: குலதநம் பகவச்சரணத்வயம் ॥

யாமுநார்யை: ததாசாऽந்யை: ஶுகாத்யைஶ்ச மஹர்ஷிபி: ।
ஆதிபக்தைஶ்ச பஹுபி: பஹுதா சோபவர்ணிதம் ॥

க்ரந்தவிஸ்தரபீத்யைவ தாவந்நேஹ வ்யதந்யத ।
அதாऽப்யுபாத்தமாத்ரேண ஹ்ருஷ்யேயு: ஸாதவோ த்ருவம் ॥

எம்பெருமானுடைய திருவடி மஹிமையைப் பூர்வாசார்யர்கள் நன்கு விவரித்துள்ளார்கள். எம்பெருமான் திருவடிகளே தான் நம் அனைவருக்கும் ப்ராப்யமும், ப்ராபகமும், போக்யமும், பாவநமும், குலதனமும் ஆகிறது.

ஆளவந்தார், மற்றும் பிற ஆசார்யர்கள், ஶௌகப்ரஹ்மர்ஷி முதலான ருஷிகள், ஆழ்வார்கள், மற்றும் பலர் திருவடிகளைப் பற்றிப் பலவிதமாகப் புகழ்ந்துள்ளனர்.

கட்டுரை நீண்டுவிடும் என்ற அச்சத்தினாலேயே அவை யனைத்தையும் இங்கு நாம் எழுதவில்லை. ஆயினும் எழுதிய வரையிலான விஷயங்களைக் கண்டு நல்லோர்கள் அனைவரும் ஆனந்திப்பார்கள் என்று நம்புகிறோம்.

இதுவரை கடந்த ஸஞ்சிகைகளில் - பொதுவாக எம்பெரு மானார் ஶரணாகதி கத்யத்தில் எம்பெருமானுடைய திருமேனி யின் குணங்களைப் பற்றி அருளிய சூர்ணிகையின் (வாக்யத்தின்) படி திருமேனி குணங்களை விளக்கி வந்தோம்.

இவற்றுள் ஸௌந்தர்யம், லாவண்யம் - இவற்றை மிக விரிவாக வெளியிட்டோம். ஸௌந்தர்யம் என்பது அவயவ ஶோபை, லாவண்யம் என்பது அவயவி (ஸமுதாய) ஶோபை என்பதும் கூறப்பட்டது. இனி எம்பெருமான் திருமேனியின் திருவடி முதல் திருமுடி வரையில் உள்ள அவயவங்களின் அழகை நம் பூர்வர்கள் எப்படி வர்ணித்துள்ளார்கள்? அவற்றில் எப்படி ஈடுபட்டுள்ளார்கள்? என்பனவற்றை அவர்களின் ஸ்ரீ ஸூக்திகளைக் கொண்டு விவரிக்க முயல்கின்றோம்.

இவ்விஷயத்திற்கு ப்ரமாணமாகத் திருப்பாணாழ்வார் அருளிய **'அமலனாதிபிரான்'** என்ற திவ்யப்ரபந்தத்தையே கொள் கிறோம். இதற்குப் பெரியவாச்சான் பிள்ளை, அழகிய மணவாளப் பெருமாள் நாயனார், ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் ஆகிய ஆசார்யர்கள் அருளிய வ்யாக்யானங்களையும் ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் அருளிய **பரமபதஸோபாநத்தில்** ப்ராப்தி பர்வாவையும் உறுதுணையாகக் கொள்கிறோம்.





திருப்பாணாழ்வார் திருவரங்கனைப் பாதாதி கேஶாந்தமாக அதாவது திருவடி முதல் திருமுடி வரையாக ஒவ்வொரு அவயவ மாக அநுபவித்து அருளியுள்ளார்.

எம்பெருமானுக்கு ஶேஷபூதராய் (அடியவர்களாய்) இருப் பவர் முதலில் பற்ற வேண்டியவை திருவடிகளேயாம். ஆகவே இதிலிருந்து அநுபவத்தைத் தொடங்குகின்றனர் நம் பூர்வா சார்யர்கள்.

தற்போது எடுத்துக்கொண்ட விஷயத்தை முற்றிலும் முடிப் பது மிக அரிது. எமக்கு மட்டும் அன்று. முன்னோர்களுக்கும் கூட இப்படித்தான். ஆனாலும் எம்பெருமானுடைய இன்னருளால் முடித்துள்ளார்கள் முன்னோர்கள். நமக்கும் அவனுடைய இன்னருள் துணையாகும்.

ஸ்ரீ பட்டர் இப்படித்தான் முதலில் தயங்குகிறார். தயக்கத் திற்குக் காரணத்தையும் காட்டுகிறார்.

எம்பெருமான் திருமேனியின் அவயவங்களை அநுபவிக்கப் புகுந்த தம்முடைய கண்ணை நோக்கிக் கூறும் வ்யாஜத்தில் தம்மு டைய தயக்கத்தை வெளியிடுகிறார்.

ஸ்ரீ பட்டருடைய திருக்கண் ஸ்ரீ ரங்கராஜனுடைய திருமேனி யில் உள்ள அவயவங்கள் அனைத்தையும் அனுபவிக்கக் கட வேன் என்று புகுந்தது. முதலில் ஒரு அவயவத்திலே படிந்து அதன் அழகை அனுபவிக்க ஆரம்பித்தது. அவ்வளவுதான். அந்த ஸௌந்தர்யத்திலேயே மூழ்கிவிட்டது அது. மற்றோர் அவயவத் திற்குச் செல்ல முடியாதபடி நின்றுவிட்டது.

'அவயவங்கள் அனைத்தையும் விடாமல் கண்டு அனுபவிப் பேன்' என்று ஆரம்பித்த நான் ஒரு அவயவத்தின் அத்புதமான அழகிலே மூழ்கி நின்று விட்டேனே. மற்றைய அவயவங்களை

எப்படிக் கண்டு அனுபவிப்பேன் என்று தயங்குகிறது ஸ்ரீ பட்டருடைய திருக்கண்.

**एकैकस्मिन् परमवयवेऽनन्तसौन्दर्यमग्नं सर्वं द्रक्ष्ये कथम्?**

(ஏகைகஸ்மிந் பரம் அவயவேऽநந்த ஸௌந்தர்யமக்நம், ஸர்வம் த்ரக்ஷ்யே கதம்) என்பது தான் கண்ணினுடைய தயக்கம்.

இப்படித் தயங்கிய தம்முடைய திருக்கண்ணைத் தேற்றுகிறார் பட்டர் **इति मुधा मामधा मन्दचक्षुः ।** அறிவிலியான ஏ கண்ணே! வீணுக ஏன் இவ்வாறு தயங்குகிறாய்? நீ கூறியபடி ஒவ்வொரு அவயவத்திலும் எல்லையற்ற ஸௌந்தர்யம் (அழகு) இருக்கத்தான் இருக்கிறது. அது உன்னைத் தன்னிடத்திலேயே மூழ்கச் செய்யும். ஆனாலும் உனக்கு உற்றதுணை ஒன்று உண்டு. அது உன்னிடம் நட்புக் கொண்டு உன்னை எல்லா அவயவங்களையும் அனுபவிக்கும்படிச் செய்யும். அதுதான் லாவண்யம். அது உன்னை மற்றைய அவயவங்கள் அனைத்தையும் அனுபவிக்கும்படிச் செய்யும்.

ஒவ்வொரு அவயவத்திலும் ஸௌந்தர்யம் மிகுந்து கடல் போல் தேங்கியுள்ளது. ஆனாலும் லாவண்யம் என்ற ஸமுதாய ஶோபை உன்னை ஓரிடத்தில் மட்டும் நிலைத்திருக்க ஒட்டாதபடி வேறு இடத்திற்கும் இழுத்துச் சென்றுவிடும்.

ஆகையால் ஒரு அவயவத்திலேயே மூழ்கியுள்ள நான் மற்றோர் அவயவத்தின் அழகை அனுபவிக்க அங்கு எப்படிச் செல்வேன் என்று கலங்க வேண்டாம் என்று தன் கண்ணை ஸமாதானப்படுத்துகிறார் ஸ்ரீ பட்டர்:-

**त्वां सौभ्रात्रव्यतिकरकरं रङ्गराज! अङ्गकानां**
**तल्लावण्यं परिणमयिता विश्वपारीणवृत्तिः ।**





(த்வாம் ஸௌப்ராத்ரவ்யதிகரகரம் ரங்கராஜ அங்ககாநாம் தல்லாவண்யம் பரிணமயிதா விஶ்வ பாரீணவ்ருத்தி:)

என்று இங்கு அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் அருளிய ஸ்ரீ ஸூக்திகள் ரஸிக்கத்தக்கன:-

'பெரிய பெருமாள் அர்ச்சாரூபியாய் இருக்கச் செய்தேயும் தம்முடைய ஸௌந்தர்யத்தை ஆவிஷ்கரிக்க அந்த ஸௌந்தர்ய ஸாகரத்தை லாவண்யமாகிற மரக்கலத்தாலே (ஓடத்தாலே) எங்கும் ஒக்க அனுபவிக்கிறோம்' என்று.

ஸௌந்தர்யத்தை ஸமுத்ரமாக வைத்து- அதிலே மூழ்கின இவர் லாவண்யமாகிற ஓடத்தைக் கொண்டு ஆங்காங்குச் சென்று எல்லா அவயவங்களையும் அனுபவிக்கிறார் என்றபடி.

ஸ்ரீ பட்டர் தம் விஷயத்தில் அருளிச் செய்த முறை திருப்பாணாழ்வார் விஷயத்திலும் பொருந்துகிறது.

சாப்பாட்டு ரஸிகன் ஒருவன். ஒரு சிறந்த விருந்தில் அந்வயிக்கிறான். அதில் பரிமாறும் உணவு வகைகளையெல்லாம் ஒன்று விடாமல் உண்பேன் என்று கூறி அதில் உட்காருகிறான். முதலில் பொங்கல் பரிமாறுகிறார்கள். மேலும் பல் வகைகள் உள்ளன. இந்தப் பொங்கலே மிகுந்த சுவையுடையதாய் பரம போக்யமாய் இருக்கிறது. இதிலே ஈடுபட்டு இதனை உண்ணப் புகுந்த இவன், இதை விட்டு மற்றொன்றை உண்ணுவது எப்படி? இதுவே என்னை இப்படி வஶீகரித்து விட்டதே என்கிறான். இந்த நிலையில் உணவு பரிமாறுகிறவர் இவனிடம் ஹிதம் எண்ணி, 'இதற்குமேல் உள்ள உணவுகளிலும் மிகுந்த சுவை உண்டு. அவையும் பரம போக்யங்களாய் இருக்கும்' என்று சொல்லி இவனை மேலே உண்ணச் செய்கிறார். அதுபோல்தான் இங்கும் ஸௌந்தர்யம் இவனைக் கால்கட்ட, லாவண்யம் மேலே இழுத்துச் செல்லுகிறது.

முதலில் அடியிலிருந்து (திருவடியிலிருந்து) பாடத் தொடங்கியவர் திருப்பாணாழ்வார்.

திருமுடியிலிருந்து தொடங்கித் திருவடிவரை துதிப்பது ஒரு வகை. திருவடியிலிருந்து தொடங்கித் திருமுடி வரை துதிப்பது மற்றோர் வகை. 'தான்' என்று அஹங்காரம் கொண்டவன், வேறு பலனை விரும்புபவன் திருமுடியிலிருந்து தொடங்கித் திருவடி வரை துதிப்பவன். உதாஹரணம் - ப்ரஹ்மா தான் செய்த அஶ்வ மேத யாகத்தில் ஸ்ரீ தேவாதிராஜன் ஆவிர்பவிக்க அவனைக் கண்டு **किरीटकेयूरकरत्नकुण्डलं** (கிரீட கேயூரக ரத்நகுண்ட லம்) என்று திருமுடி முதலாகத் தொடங்கி **निकुञ्चितोत्तानितपादयुग्मम्** (நிகுஞ்சி தோத்தாநிதபாதயுக்மம்) என்று திருவடிவரை துதித்தான்.

ஸ்வாமி ஸ்ரீ தேசிகனும் 'மெய்விரதமான்மியம்' என்ற ப்ரபந்தத்தில் 'இருபரிதி இயைந்த மகுடமும்' என்று திருமுடி தொடங்கி 'உலகடைய நின்ற கழல்களும்' என்று திருவடிகள் வரை நான்முகன் துதித்ததாகவே அருளியுள்ளார்.

மற்றொன்றை விரும்பாமல் எம்பெருமானையே பெற விரும்பும் பரமைகாந்திகளாயிருப்பவர் திருவடி தொடங்கி திருமுடி வரை துதிப்பார்கள். இந்தத் திருப்பாணாழ்வாரே இதற்கு உதாஹரணம். இதை அடியொற்றித்தான் ஸ்வாமி ஸ்ரீ தேஶிகனும் பகவத்த்யாந ஸோபாநத்தில் திருவடி தொடங்கியே துதித்துள்ளார்.

முதற்பாட்டில் பெரிய பெருமாள் திருவடிகளின் அழகு மேல் விழுந்து தம்மை அடிமை கொண்டதென்கிறார் திருப்பாணாழ் வார்.

ஸ்ரீரங்கநாதனுடைய திவ்ய நியமனத்தினால் திருப்பாணாழ்வார் லோக ஸாரங்க மஹர்ஷியின் திருத்தோள்மேல் ஏறி எழுந்தருளும்போது நடுவழியில் ஒன்பது பாட்டுக்களை அருளிச் செய்தார். 'கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெயுண்ட வாயன்' என்ற பத்தாவது பாட்டைத் திருக்கோயிலுக்குள்





எழுந்தருளிய பின் அருளினார் என்று பூர்வாசார்யர்கள் அருளியுள்ளனர். ஆகவேதான் முதல் பாட்டின் கடைசி பாதத்தில் ''அரங்கத்தம்மான் திருக்கமலபாதம் வந்து என் கண்ணினுள்ளன ஒக்கின்றதே என்று திருப்பாதங்கள் தாமே மேல் வந்து விழுந்து என் கண்ணினுள் புகுந்தன போலிருக்கின்றன'' என்கிறார்.

எம்பெருமான் திருவடியைக் 'கமலம்' என்று ஆழ்வார் அருளியுள்ளதால் தாமரைக்கு உள்ள அழகு, குளிர்ச்சி, மலர்ச்சி, மணம் ஆகியவை இந்தத் திருவடிக்கும் உண்டு என்று தோன்றுகிறது. ஆனால் தாமரைப்பூ பகலில் மட்டும் தான் மலர்ந்திருக்கும். இரவில் மூடிக்கொள்ளும். சில நாட்கள் தான் வாடாதிருக்கும். சில நாட்கள் கழிந்தபிறகு வாடிவிடும். திருவடியாகிற தாமரைக்கு அந்தத் தோஷங்கள் கிடையா.

உலகத்தில் உள்ள தாமரை ஸூர்யனைக் கண்டால் மலரும். ஆனால் இந்தத் திருவடித் தாமரை தம்மை ஆஶ்ரயித்துள்ள பக்தர்களைக் கண்டபோது மலரும்.

திருப்பாணாழ்வார் என்ற இவர் பக்தர்களுள் சிறந்தவராகையால் இவரைக் கண்டபோதே எம்பெருமான் திருவடியாகிற தாமரைப்பூ மலர்ந்ததால் இதைத் திருக்கமலபாதம் என்று இவரே அருளிச் செய்துள்ளார்.

திருக்கமலபாதம் வந்து என் கண்ணினுள்ளன ஒக்கின்றன. என் கண்ணினுள்ளே இருக்கின்றன போலாயிற்று என்பதால் எம்பெருமான் திருவடியே நானிருக்கும் இடம் நாடி வந்து என் கண்ணினுள் இருக்கின்றன என்று கூறியதாக ஏற்படுகிறது.

தன்னுடைய கண்ணினால் எம்பெருமான் திருவடியை நோக்கினால் அந்தத் திருவடிக்கு ஏதாவது தீங்கு வந்து விடும் என்று தன் கண்ணை மூடிக் கொண்டாராம் ஆழ்வார். ஆனாலும் பரமக்ருபையால், மூடிக் கொண்ட தன் கண்ணைத் திறந்து

கொண்டு அதனுள் நிற்கின்றதாம் எம்பெருமான் திருவடி என்று அருளியபடி.

**सदा दर्शनं** (ஸதா தர்ஶநம்) எப்பொழுதும் தர்ஶநம் செய்து கொண்டிருக்கும் நித்ய ஸூரிகளுடைய கண்களுக்கு இலக்காகும் திருவடிகள், நித்ய ஸம்ஸாரி என்னும்படி இவற்றை இதுவரை காணாது இருந்த என் கண்ணுக்கும் இலக்கானபடி என்று வியக்கிறார் ஆழ்வார்.

அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் இங்கு வ்யாக்யா நத்தில் இந்தத் திருவடிகளின் பெருமையை அருளும் விதத்தை யும் நாம் இங்கு அநுபவிக்க வேண்டும். அதாவது:-

'ஆதித்ய ஸந்நிதியில் அலரும் தாமரைப் பூப்போலே ஆஶ்ரிதர்கள் ஸந்நிதியில் மலருமாய்த்து திருவடிகள்' இதன் அர்த்தம் சற்றுமுன் விளக்கப்பட்டது. மேலும் 'பிராட்டி திருமுலைத் தடத்திலும் திருக்கண்களிலும் ஒற்றிக் கொள்ளும் திருவடிகள்' என்று அருளியுள்ளார். இதற்கு விளக்கம் வேண்டாம்.

அம்மான் திருக்கமலபாதம்: ஸ்வாமியானவனுடைய திரு வடி என்பதால் நமக்கென்று ஏற்பட்ட திருவடி இதுதான் என்பதும் கூறப்பட்டதாகிறது.

இந்தத் திருவடி தவிர மற்றைய எந்த அடியும் நமக்கு வேண்டாம் என்றபடி. இங்கு மற்றைய அடி என்றது மற்றைய தேவதைகள், அவர்களின் பக்தர்கள் ஆகியவர்களின் அடியை. நம் எம்பெருமான் அவனுடைய பக்தர்கள், நம் ஆசார்யர்கள் இவர்கள் திருவடியை விலக்கினதாகக் கொள்ளக்கூடாது.

ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் அருளிய முநிவாஹந போகம் என்ற வ்யாக்யாநத்தில் இவ்விடத்தில் இந்தத் திருவடியைப் பற்றி அருளிய விதமும் அழகியது.





'திருக்கமலபாதம்: பாவநத்வ - போக்யத்வங்களாலே ஶுபாஶ்ரயங்களான திருவடிகள்; திருவுக்கு லீலாகமலம் போலேயிருக்கிற பாதம் என்னவுமாம் என்று.

எம்பெருமானுடைய திருவடி பாவநமாயிருக்கிறது. தம்மை ஆஶ்ரயித்தவர்களுடைய தோஷங்களைப் போக்கி அவர்களைப் பரிஶுத்தர்களாகச் செய்ய வல்லது.

இது மட்டுமன்றி இந்தத் திருவடி - போக்யமாயும் இருக்கிறது. அதாவது மிகவும் சுவையுடையதாய் அனை வருக்கும் அனுபவிக்கும்படி இருக்கிறது என்றபடி.

உலகில் பஞ்சகவ்யம் என்பது பாவநம். தோஷத்தைப் போக்கி ஶுத்தமாக்குவது. ஆனால் அது போக்யமாய் இராது. 'மது' முதலியன போக்யமாயிருக்கும். ஆனால் அவை பாவநமா யிரா. இந்த இரண்டு விதமாயுமிருக்கும் சிறப்பு எம்பெருமான் திருவடிக்குத்தான் உண்டு.

எம்பெருமான் திருவடி பாவநமாய், அஶுத்தியை- தோஷத்தைப் போக்கவல்லதாயிருக்கும் என்பதைப் பல ப்ரமா ணங்களாலும் அறியலாம்.

அஹல்யையினுடைய ஶாபத்தை (பாபத்தை)ப் போக்கி அவளைப் பரிஶுத்தையாக்கிப் பதிவ்ரதைகளின் கோஷ்டியிலே முதலில் சேர்த்து வைத்தது திருவடிதானே. மற்றும் பல ப்ரமா ணங்களாலும் வ்ருத்தாந்தங்களாலும் இதை அறியலாம்.

ஸ்ரீ விபீஷணாழ்வானும் தன்னை முடி சூட்ட வந்த ஸ்ரீ ராம னிடம் உன் திருவடியை என் தலைமீது வைத்தருள்வாய். அது தான் எனக்கு ஏற்ற கிரீடம். என்னுடைய பழியையும் போக்க வல்லது உன் திருவடியாகிற கிரீடமேயாகும். ராவணனுக்குப் பின் பிறந்தவன். அதாவது ராவணன் தங்கியிருந்த தாய் வயிற்றிலே தங்கியிருந்தவன் நான் என்ற பெரும் பழி உலகில்

எனக்கு இருந்து வருகிறது. அந்தப் பழியைத் தொலைத்தருள வேண்டுமானால் உன் திருவடியைத்தான் என் ஸிரஸ்ஸில் வைத்தருள வேண்டும்.

**'விளைவினை அறியும் வென்றி வீடணற்கு என்றும் வியா**
**அளவறு பெருமைச் செல்வம் அளித்தனையாயின் ஐயா!**
**களவியல் அரக்கன் பின்னே தோன்றிய கடன்மை தீர**
**இளையவற் கவித்த மௌலி என்னையும் கவித்தி ,**

என்று வேண்டுகிறான்.

உன்னுடைய இந்தத் திருவடியேதான் என் பழியையும் போக்கவல்லது. அளவற்ற செல்வத்தையும் தரவல்லது என்று கூறுகிறான் விபீஷணன் என்று கம்பன் காட்டியுள்ளான். (கம்பராமாயணம் யுத்த காண்டம்- விபீடணன் அடைக்கலப் படலம்)

திருவடி பரம போக்யமாயிருக்கும் விஷயத்தை ஸ்வாமி நம்மாழ்வார் ஸ்ரீ ஸூக்தி மூலமே அநுபவிக்கலாம்.

எம்பெருமான், ஸ்வாமி நம்மாழ்வாருக்குத் தாமே வலுவில் வந்து மோக்ஷம் தருவதாகச் சொல்லுகிறான்.

ஆழ்வாரோ 'அது வேண்டாம்' என்கிறார்.

ஆழ்வாருக்கு மோக்ஷத்தின் ஸ்வபாவம் - சிறப்பு தெரியாது; அதைச் சொன்னால் அதைப் பெறுவார் என்று எண்ணிய எம்பெருமான், ஓய் ஆழ்வீரே! நான் கொடுப்பதாகச் சொல்லுகிற மோக்ஷம் மிகச் சிறந்த புருஷார்த்தம் காணும். பரமாநந்த ரூபமாய் பரம போக்யமாய் இருக்கும் 'மாவீடு' என்றான்.

இதைக் கேட்ட பிறகும் கூட ஆழ்வார் அப்படிச் சிறந்த மோக்ஷமானாலும் எனக்கு வேண்டாம் என்று மறுத்து விட்டார். பெருமாளும் விடவில்லை. மேலும் அதன் சிறப்பை எடுத்துக் காட்டுகிறார்.





'ஓய்' ஆழ்வீர்! ஸாதாரணமான வீடு அன்று காணுமது மாவீடு. அது மட்டுமன்று 'எம்-மா-வீடு', எல்லா வகைகளாலும் சிறந்த வீடு-மோக்ஷம் என்றான். இப்படிச் சொன்ன பிறகும் கூட ஆழ்வார் அது எனக்கு வேண்டாம் என்று மறுத்துவிட்டார்.

இதைக் காட்டிலும் மிக மிகச் சிறந்த புருஷார்த்தம் ஒன்றை இவர் விரும்பியுள்ளார். ஆகவேதான் இதை வேண்டாம் என்கிறார். மோக்ஷத்தின் ஸ்வரூபம். அதன் ஸ்வபாவம்- இயல்பு இவற்றையறியாமல் இவர் அதை வேண்டாம் என்று சொல்ல வில்லை. மோக்ஷத்தைப் பற்றி நன்கு அறிந்துள்ளார். ஆயினும் அதை வேண்டாம் என்கிறார். எம்பெருமான் திருவடிதான் அந்தப் பரமபுருஷார்த்தம். இது இங்கேயே கிடைக்கப் பெற்றால் எதற்கு அந்த கண்ணால் பார்க்க முடியாத மோக்ஷம்?

உலகில் ஒருவன் பாலின் சுவை அறியாமல், அது புளிக்கும், கசக்கும் என்று ப்ரமம் கொண்டு அதை ஒருவர் தர வரும்போது தனக்கு வேண்டாம் என்கிறான்.

'பால் கொடுக்க வந்தவரோ இவன் பாலின் சுவையறி யாதவன். ஆகவே பாலின் சுவையை இவனுக்கு எடுத்துக் கூறி னால் இவன் கட்டாயம் பால் குடிப்பான் என்று எண்ணி, அப்பா! இந்தப் பால் மிகவும் சுவையுடையது. மிகச் சிறந்தது என்றெல் லாம் எடுத்துக் கூறி அவனுக்கு உண்மையை விளக்குகிறார். அவனும் அதன் சுவையை அறிந்து அந்தப் பாலைப் பெற்றுக் குடிக்கிறான். சுவைக்கிறான்.

பாலின் சுவையறியாதவனை உண்மையை அறிவித்துத் தெரிவிக்கலாம்.

மற்றொருவன் 'பால் தித்திக்கும்- இனிக்கும். ஆனாலும் எனக்குப் பால் வேண்டாம் என்கிறான். இவனைத் திருத்த முடியுமா?

இந்த இரண்டாவது வகையைச் சேர்ந்தவர் ஸ்வாமி நம்மாழ்வார். மோக்ஷ ஸ்வரூபத்தை நன்கு அறிந்தவரேதான். ஆயினும் அதைவிடச் சிறந்த புருஷார்த்தமான திருவடி கிடைப்பதால் அதை வேண்டாம் என்கிறார். இதிலிருந்து என்ன கிடைக்கிறது? பரமபோக்யமான- பரம புருஷார்த்தமான மோக்ஷத்தை விடப் பரம போக்யமாய் உள்ளது எம்பெருமான் திருவடி என்ற உண்மை கிடைக்கிறது. எம்பெருமான் தர வந்தது எம்-மா-வீடு. இதை மறுக்கும் ஸ்வாமி நம்மாழ்வார் விரும்புவது 'செம்-மா-பாதபற்பு'.

இங்குள்ள வ்யாக்யாந வாக்யங்கள் மிக அழகியவை. 'பால் கசக்கும், புளிக்கும் என்பாரைத் திருத்தலாம். அதுதான் தித்தித்தாலும் வேண்டாம் என்பாரைத் திருத்தலாவதே' என்பன. இதற்குப் பொருந்திய வகையில் பல ப்ரமாண ஶ்லோகங்கள் உள்ளன. அவற்றை விவரிக்கப் புகுந்தால் பாரதமாம்.

உபாயாநுஷ்டாநம் செய்து அதாவது ஶரணாகதி செய்து முக்தனானவன் ஸ்ரீ வைகுண்டம் சென்று அங்கு ஆதிஶேஷ ஶயநத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானை ஒவ்வொரு அவயவமாக அநுபவிக்கும் வகையை ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் பரமபத ஸோபாநம் என்ற சில்லரை ரஹஸ்யத்தில் ப்ராப்தி பர்வாவில் மிக அழகாக வர்ணித்துள்ளார். அதையும் இங்கு அநுபவிக்க வேண்டுவது மிகவும் ஆவஶ்யகமாகும். அதாவது ''வேதங்களுக்கெல்லாம் மேல் சாத்தாய், ஸர்வாத்மாக்களுக்கும் ஸாமாந்ய தைவதமான பொது நின்ற பொன்னங்கழலைப் பார்த்து 'ஒரு காலில் சங்கு ஒரு காலில் சக்கரம். பத்து விரலும் மணிவண்ணன் பாதங்கள் ஒத்திட்டருந்தவா' என்று.

இந்த ஸ்ரீ ஸூக்திகளின் அர்த்தம் வெகு அழகியது. எம்பெருமான் திருவடிகள் வேதங்களுக்கெல்லாம் மேல் சாத்தாய் இருக்கின்றனவாம். மேல்சாத்து- மேலே சாத்தப்படும் வஸ்த்ரம்.





இதனால் வேதத்தினுடைய மணம் இதில் நிறைந்திருக்கிறது என்று கூறியபடியாகிறது. ஸர்வ வேதங்களும் எம்பெருமானுடைய திருவடியைக் கூறுகின்றன என்றபடி.

மேலும் இந்தத் திருவடி ஸர்வாத்மாக்களுக்கும் பொதுவான தைவதமாய் பொது நின்ற பொன்னங்கழலாயிருக்கும்.

இன்னார்-இனையார் என்ற பாகுபாடின்றி எல்லாரும் சென்று அடைவதற்கு உரியதாயிருக்கும் இந்தத் திருவடி. இப்படி ஆஶ்ரயித்தவர்களுடைய வினைகளையெல்லாம் தீர்க்க வல்லதும் இந்தத் திருவடி. இந்த விஷயத்தைப் பேயாழ்வார் தாமியற்றிய மூன்றாவது திருவந்தாதியில் 88வது பாசுரத்தில் அருளிச் செய்துள்ளார்.

**'அது நன்று, இது தீது என்று ஐயப்படாதே**
**மது நின்ற தண்டுழாய் மார்பன்- பொதுநின்ற**
**பொன்னங்கழலே தொழுமின்-முழுவினைகள்**
**முன்னங்கழலும் முடிந்து.'**

அது நல்லதா? இது கெட்டதா? என்று ஸந்தேஹப்பட்டுக் காலத்தைக் கழிக்க வேண்டாம். யாவர்க்கும் பொதுவாய் விளங்கும் எம்பெருமான் திருவடியை ஆஶ்ரயிங்கோள். அப்பொழுதே நீங்கள் முன் செய்த பாபங்கள் அனைத்தும் நாஶம் அடைந்து விடும் என்பது இதன் பொருள். இதனால் பாவநத்வம் விளக்கப்பட்டதாகிறது.

பிறகு திருவடியின் அழகைக் கண்டு அதைப் பரம போக்யமாய்க் கொண்டு முக்தன் அநுபவிக்கும்படியை அருளுகிறார் ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன்.

பெரியாழ்வார் பாசுரம் இதற்குக் கைகொடுக்கிறது.

ஒரு திருவடியில் சங்கின் சின்னம்-அடையாளம், மற்றொரு திருவடியில் சக்ரத்தின் சின்னம். இப்படி அழகிய சின்னங்கள்

இரண்டு திருவடிகளையும் கொண்டு கண்ணன் ஆயர்பாடி முழுவதும் திரிந்து இந்த இலச்சினைகளை (அடையாளங்களை) பதித்து அனைவரையும் பேரின்ப வெள்ளத்தில் மூழ்கும்படிச் செய்கிறான்.

முத்தும், ரத்னமும், நல்ல வைரங்களும் மாறிமாறிப் பதித்தாற் போல் விரல்கள் பத்தினாலும் அழகு பெற்று விளங்குகின்றது மணிவண்ணன் தன் திருவடி என்றெல்லாம் பெரியாழ்வார் யஶோதையின் நிலைமையில் அருளிச் செய்துள்ளார். நவரத்னங்களின் வர்ணம் கொண்ட சாந்து பூசப்பட்டுள்ளது திருவடி விரல்களில்.

இப்படி அழகினால் பரமபோக்யமான திருவடி, இந்தத் திருவடி நமக்கு மட்டும்தான் போக்யம் என்பதில்லை. அவனுக்கே கூட அது போக்யமாயிருக்கிறது.

ஆகையால் சிறு குழந்தை வடிவில் தன்னுடைய திருப் பாதத்தைத் தன்னுடைய சிறு கையினால் பிடித்துத் தன் வாயில் வைத்துச் சுவைத்து உண்கிறான் என்பதை 'பேதைக்குழவி பிடித்துச் சுவைத்துண்ணும் பாத கமலங்கள்' என்று அருளி யுள்ளார். 'திருக்கைகளாலே பிடித்துத் திருப்பவளத்திலே வைத்து ஆஸ்வாதித்து (அநுபவித்து) புஜிக்கும்-உண்ணும். இத்தால் 'விஷ்ணோ:பதே பரமே மத்வ உத்ஸ:' என்று வேதமும் 'தேனே மலரும் திருப்பாதம்' என்று நம்மாழ்வாரும் சொல்லக் கேட்டி ருக்கையாலே திருவடிகள் தன்னின் போக்யதை தன்னைப் பரீக்ஷிக்கைக்காகப் பருவத்துக்கு அநுகுணமாக இருக்கிறபடி.

நாம் வேதத்தை ப்ரமாணமாகக் கொண்டு சிலவற்றைக் கொள்ளுவதுபோல் அவனும் 'விஷ்ணுவின் திருவடியில் தேனுளது''என்று கூறும் வேத வாக்யத்தை ப்ரமாணமாகக் கொண்டு தன் திருவடியின் போக்யதையை - ருசியை அநுபவிக்கிறான்.





ஆக அவன் திருவடி அவனுக்கும் நமக்கும் போக்யம்.

இதற்குமேல் எம்பெருமான் திருவடி நமக்குச் செய்யும் உபகார விஶேஷத்தை இங்கு எழுத விரும்புகிறோம். பகவத் விஷய வ்யாக்யாநங்களில் இந்த விஷயம் சொல்லப்பட்டுள்ளது. ஆனால் ஊன்றிப் பார்த்துப் புரிந்து கொள்ள வேண்டிய விஷய மிது. நம் ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியாவின் தரம் உயர்ந்திருப்பது போல் நம் ஸ்ரீ ந்ருஸிம்ஹ ப்ரியா வாசகர்களின் தரமும் மிக மிக உயர்ந் திருப்பதால் அவர்கள் கட்டாயம் இதை ரஸிப்பார்கள் என்று எண்ணி எழுதுகிறோம்.

நாம் அனைவரும் எம்பெருமானைப் பெற்று அவனை அநுபவிக்கத்தான் பிறந்துள்ளோம். இந்த உண்மை அறியாதார் சிலர் அவனை விட்டு உலகில் அல்பங்களான மற்றைய விஷயங் களில் ஈடுபட்டு எம்பெருமானை மறந்து விடும் நிலையில் இருக்கின்றனர்.

இவர்களுள் மிகுந்த புண்யங்களைச் செய்துள்ளவர்களை எம்பெருமான் தன் திருவடிகளாலே அவர்கள் வேறு விஷயங் களுக்குச் செல்லாதபடித் தடுத்து தன்னிடம் ஈடுபாடு கொள்ளும் படிச் செய்கிறான் என்பதே நாம் இங்குச் சொல்ல விரும்பிய விஷயம். இது புரியும். ஆனால் ஆழ்வார் அருளிய வகையைக் காட்டிப் புரிய வைப்பதில் தான் கொஞ்சம் ஶ்ரமம் உள்ளது. அதாவது திருவாய்மொழியில் ஆறாவது பத்தில் இரண்டாம் திருவாய்மொழி மிக ப்ரஸித்தமானது. ஸ்வாமி நம்மாழ்வார் தலைவித் தன்மை பெற்றுஅருளிச் செய்துள்ளார். இதில்:

'எம்பெருமான் தன்னிடம் விளம்பித்து-அதாவது காலம் கடந்து வருகிறான். அதனால் பராங்குஶநாயகிக்குக் கோபம் வருகிறது. அவனை நோக்கி 'நீர் இங்கே வரவேண்டாம். உமக்கு வேண்டிய பெண்கள் நிறைய பேர்கள் இருக்கிறார்கள். அங்கே செல்லும், இங்கே வரவேண்டாம்' என்று விரட்டுகிறார். ஊடல்

என்று இதற்குப் பெயர். உலகிலும் தம்பதிகளிடம் இதைக் காணலாம்.

இப்படி எம்பெருமான் ஸ்வாமி நம்மாழ்வாராகிய தலைவியை நெருங்கிவர இவரும் கோபம் கொண்டு அவனை மறுத்து விட்டு மணல்களால் சிறிய சிறிய வீடுகளைக் கட்டுவதும் சிறிய கற்களைப் பொறுக்கி ஒரு பாத்ரத்தில் இட்டு அடுப்பில் வைத்துச் சமைப்பதுமாகிற சில விளையாட்டுகளில் ஈடுபடுகிறாள். இந்தச் செயல்களைச் 'சிற்றிலிழைத்தல் - சிறு சோறு சமைத்தல்' என்று இலக்கியங்கள் கூறும். இவை இளமைப்பருவத்துப் பெண்கள் செய்யும் செயல்களாகும். இப்படி இவர்கள் தன்னைப் பாராமல் வேறு விஷயங்களில் ஈடுபட்டுக் காலம் போக்குவதை எம்பெருமானால் ஸஹிக்க முடியவில்லை.' ஆழ்வாருடைய (பராங்குஶ நாயகியினுடைய) பிரிவு வாட்டுகிறது இவனை. ஆகவே தூரத்திலிருந்து பார்த்துக் கொண்டிருந்த எம்பெருமான் ஓடோடி வந்து தன்னுடைய அழகிய திருவடியால் இந்தச் சிற்றிலையும் - சிறு சோறு சமைப்பதையும் சிதைத்து அழித்து விடுகிறான்.

எம்பெருமானிடம் உண்மையான காதல் இருப்பதால் தன் காதலன் தன் திருவடியால் இவற்றை அழிப்பது பராங்குஶ நாயகிக்கு மிகவும் பிடித்தமாய்- போக்யமாய் இருக்கிறது. அப்படியே அவன் திருவடிகளைப் பிடித்துக் கொண்டு இதுவே வ்யாஜமாக எம்பெருமானுடன் கூடுகிறாள்.

அப்போது அருளிச் செய்கிறார் பராங்குஶ நாயகி:- நாங்கள் மிகவும் கஷ்டப்பட்டுச் செய்த இந்தச் சிற்றிலையும் - சிறு சோறு சமைப்பதையும் அழித்து விட்டாயே! இது தகுமா! எங்கள் மீது தயவு இருந்தால் நீ இப்படிச் செய்வாயா? உன் அழகிய திருக்கண்களைக் கொண்டு நாங்கள் விளையாடும் இந்த விளையாட்டைப் பார்த்துக் கொண்டே இருக்க மாட்டாயா? தயவு இல்லாதவர் செய்யும் செயலையன்றோ நீ இப்போது செய்துள்ளாய்.





**உகவையால் நெஞ்ச முள்ளுருகி உன் தாமரைத் தடங்கண் விழிகளின்**
**அகவலைப்படுப்பான் அழித்தாயுன் திருவடியால்**
**தகவு செய்திலை யெங்கள் சிற்றிலும் யாமடு சிறுசோறுங்கண்டு - நின்**
**முகவொளி திகழ முறுவல் செய்து நின்றிலையே.**

**-திருவாய்மொழி (6.2.9)**

என்று அருளியுள்ளார் ஸ்வாமி நம்மாழ்வார்.

மாதரார் கயற்கண் எனும் வலையுள்பட்டு அழுந்த நினைத்த, அதாவது பெண்களின் கண்களாகிற வலையுள் அகப்பட்டு ஸம்ஸாரத்திலேயே அழுந்த நினைத்த எங்களை, அவ்வாறு அதனுள் விழுந்து அகப்படாத வண்ணம் உன்னுடைய தாமரை போன்ற நீண்டு அகன்ற விழிகளாகிற வலையினுள் நாங்கள் அகப்பட்டு ஆனந்தம் பெறுவதற்காகத்தான் எங்கள் சிற்றிலை அழித்தாய். அவ்வாறு அந்தச் சிற்றில் முதலியவற்றை நீ உன் திருவடிகளால் அழிக்காவிட்டால் நாங்கள் அதிலேயே விருப்பம் கொண்டு அதிலேயே ஈடுபட்டு எங்கள் வாழ்நாள் முழுவதையும் வீணே போக்கியிருப்போம் என்கின்றார்.

ஒரு பெண் தன் குலம், கோத்ரம், செல்வம் இவற்றுக்குப் பொருந்தாத தாழ்ந்த ஒருவனை மணக்க விரும்பி அவனிடத்திலேயே மனஞ்செலுத்தி அதற்காகச் சில செயல்களை புத்திசாலித்தனத்துடன் செய்து வருகிறாள். அதைக் கண்டான் தமப்பன். தன் பெண் மிகவும் ஸாமர்த்யத்துடன் செயல்படுவதைப் பார்த்தான். ஆனால் அதையே பார்த்துக் கொண்டிராமல் அவளைத் தடுத்து அந்தப் பையனிடம் உள்ள பற்றுதலையும் அழித்தான். சிறிது நாட்கள் கழித்து எல்லாவற்றாலும் சிறந்த ஒரு புருஷனை மணம் செய்வித்தான். அன்று அவன் அந்தப் பெண்ணுடைய தகாத செயலைத் தடுத்தபோது அந்தப் பெண் சற்று மனம் கலங்கினாள்.

தகுந்த கணவனைப் பெற்று ஆனந்த வாழ்க்கை நடத்தும்போது அன்று தந்தை தன் விருப்பத்தைத் தடுத்தது சிறந்த புருஷனைக் கொடுப்பதற்காகத்தானே என்பதை அறிந்து தகப்பனாரிடம் வந்து அன்று நீங்கள் என்னுடைய தகாத செயலைத் தடுத்திரா விட்டால் நான் வழி தவறிச் சென்று பல கஷ்டங்களை அநுப விக்க வேண்டிவரும். நீங்கள் அன்று அதைத் தடுத்தது அதை விடச்சிறந்த லாபம் கிடைப்பதற்குத் தானே என்பதை நினைத்து மகிழ்கிறேன் என்பாள் அன்றோ! அவ்வாறுதான்! இங்கும்.

இன்னும் இதற்கு ஏற்ற உதாஹரணங்கள் அவரவர்கள் கொள்ளலாம்.

இவ்வாறுதான் நம் விஷயத்திலும் எம்பெருமான் செய்து வருகிறான். நம்மை அநுக்ரஹிக்க எண்ணி நம்மிடம் அவன் அணு கும் போது நாம் அவனைப் புறக்கணித்து அற்ப பயன்களைப் பெற எண்ணித் தகாத செயல்களிலே ஈடுபடுகிறோம். நம்மிடம் பரமக்ருபை கொண்ட எம்பெருமான் நம்மைத் தீயவழியில் செல்லாத வண்ணம் தன் திருவடியால், திருவடிபோன்ற ஆசார்யர் களால், நம்மைத் தடுத்து நமக்கு ஶாஶ்வதமான பரமானந்தத் தைத் தருகிறான்.

எம்பெருமான் நம்மைப் பெறுவதற்கு அவனுக்கு உபாயமாய் அமைந்ததும் அவனுடைய திருவடியே. நாமும் அவனை அடைய நமக்கு உபாயமாயிருப்பதும் அவன் திருவடியே என்ற ரஸத்தை ஈட்டில் நம்பிள்ளை காட்டியருளியுள்ளார். 'அவனுடைய அபிமத ஸித்திக்கும் ஸாதநம் திருவடிகள் காணும்' என்று.

மேலே எடுத்த இந்தப் பாசுரத்தின் அர்த்தத்தை இதன் வ்யாக்யாநமான ஈட்டிலிருந்து புரிந்து கொள்வது சற்று கடினம்.

இதை எடுத்து மேற்கோளாகக் காட்டி மற்றைய இடங்களில் தரும் விளக்கத்தினால் இதைத் தெளிவாகப் புரிந்து கொள்ளலாம்.





திருப்பாவையில் 'சிற்றஞ் சிறுகாலே' என்ற பாசுரத்தில் 'உன் பொற்றாமரையடியே போற்றும் பொருள் கேளாய்' என்ற இடத்தில் ஆறாயிரப்படி வ்யாக்யாநத்தில் ஸ்ரீ அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்:- உன் பொற்றாமரையடி பெண்களுக்குப் புறம்பு அந்ய பாதைகள் உண்டானால் க்ருஷ்ணன் அவற்றைக் குலைப்பதும் திருவடிகளாலே. அழித்தாய் உன் திருவடியால்' என்று அருளியுள்ளார். (புறம்பு அந்யபாதைகள் - மற்றைய விஷயங்களிலே உண்டாகும் பற்றுக்கள்).

தீய விஷயங்களை விலக்குவது மட்டுமல்லாமல் அவற்றில் மீண்டும் நம்முடைய மனம் ஒருபோதும் போகாதபடியும் தடுத்துவிடுகிறது திருவடி. இதை ஸ்ரீ ஆண்டாள் 'சிற்றிலோடு எங்கள் சிந்தையும் சிதைக்க வல்லாய்', என்று அருளியுள்ளாள்.

ஆக எம்பெருமான் திருவடியே நமக்கு எல்லா வகைகளாலும் பற்றத்தக்கதாகும்.

இந்தத் திருவடியின் மஹிமையை ஆங்காங்குப் புராணங்கள், இதிஹாஸங்கள், மற்றும் ஆழ்வார்களுடைய ஸ்ரீ ஸூக்திகள், இவற்றைக் கொண்டு சிறப்பித்துக் கூறினால் பாரதமாம்!

பகவத் த்யாந ஸோபாநம், தேவநாயக பஞ்சாஶத் முதலான ஸ்தோத்ரங்களில் ஸ்வாமி ஸ்ரீ தேஶிகனும் ஒவ்வொரு அவயவத் தையும் நன்கு வர்ணித்துள்ளார். அவகாஶம் இருப்பின் அடுத்த இதழ்களில் விவரிப்போம்.

அமலனாதிபிரான் அடியார்க்குஎன்னையாட்படுத்த
விமலன் * விண்ணவர்கோன் விரையார்பொழில்வேங்கடவன் *
நிமலன்நின்மலன்நீதிவானவன் நீள்மதிளரங்கத்தம்மான் * திருக்
கமலபாதம்வந்து என் கண்ணினுள்ளன ஒக்கின்றதே. (1)

## 2. அரைச் சிவந்த ஆடை

**हरिपीताम्बरस्याऽस्य माहात्म्यं बहुविस्तृतम् ।**
**सङ्गृह्याऽकथयत्स्वादु नारायणयतीश्वरः ॥**

(ஹரிபீதாம்பரஸ்யாऽஸ்ய மாஹாத்ம்யம் பஹுவிஸ்த்ருதம் ।
ஸங்க்ருஹ்யாऽகதயத் ஸ்வாது நாராயணயதீஶ்வர: ॥

திருப்பாணாழ்வார் தாம் அருளிச் செய்த அமலனாதிபிரான் என்று தொடங்கும் திவ்யப்ரபந்தத்திலே முதல் பாட்டில் தம்முடைய கண்களிலே திருவரங்கனுடைய திருக்கமல பாதங்கள் தாமே வந்து நின்றன என்பதை அருளிச் செய்தார்.

இரண்டாவதான பாட்டில் ஆழ்வார் தம்முடைய சிந்தை எம்பெருமானுடைய திருவரையில் (இடுப்பில்) உள்ள சிவந்த பீதாம்பரத்தில் தானே சென்று சேர்ந்தது என்று அருளிச் செய்கிறார். முதலில் எம்பெருமான் தானே வந்து ஆழ்வாருக்குத் தன் அநுபவருசியை உண்டு பண்ணினான். ருசி கண்ட ஆழ்வார் அடுத்துத் தாமே மேல்விழுந்து அநுபவிக்கிறபடியை இப் பாட்டில் அருளிச் செய்கிறார்.

திருமங்கை ஆழ்வாரும் இப்படியே தான் அருளிச் செய்கிறார். திருவாலி எம்பெருமான் விஷயத்தில் 'வந்து உனதடியேன் மனம் புகுந்தாய் புகுந்ததற்பின் வணங்கும் சிந்தனைக் கினியாய்' என்று. எம்பெருமானே! இத்தனை காலமாக உன் விஷயத்தின் ருசியையே அறியாமலிருந்த என் மனத்தில் நீ வந்து புகுந்தாய். காரணம் உன் அடியவன். உனக்கு ஶேஷபூதன் என்பதேயாகுமா? உனக்கு நான் அடியவன் என்பதை நான் அறியாவிட்டாலும் இதை அறிந்த நீ என்னை அகல ஒட்டாமல் தடுத்து ஆட்கொள்ள நினைத்து என் மனத்திலே வந்து புகுந்தாய். அதன் பின் நான் வணங்கும் தெய்வ மாய் சிந்தனைக்கினியனாக (என் எண்ணத்திற்கு இனியனாக) நீ ஆனாய் என்கிறார் திருமங்கை மன்னன்.





பசு ஒன்று கன்றை ஈன்றது. பிறந்த உடனே அந்தக் கன்று தாய்ப்பசுவின் மடியில் உள்ள பாலின் ருசி அறியாமல் திகைத்து நிற்கும். அது அப்படியே போகட்டும் என்று அந்தத் தாய்ப்பசு நினைப்பதில்லை. தானே அந்தக் கன்றினிடம் அதன் வாயில் தன் முலைக்காம்பைக் கொடுக்கும். அதன்பின் அந்தக் கன்றுக்குட்டி முலைப்பாலைச் சுவைத்து உண்ணும். இப்படி தாய்ப்பாலின் ருசியை அறிந்த அந்தக் கன்று தாய் தூரத்திலிருந்தாலும் அது காலால் உதைத்துத் தள்ளினாலும் கூட, தானே வலுவில் சென்று பாலைச் சுவைத்து உண்ணும்.

இந்த முறையைத்தான் திருப்பாணாழ்வார் விஷயத்திலும் காண்கிறோம் என்கிறார்கள் உரையாசிரியர்களான பூர்வர்கள். அவர்கள் அருளிய வாக்யங்களே ருசி உடையன. அவை இவையே:-

'ஈன்று அணித்தான நாகு தன் கன்றுக்கு வாஸனை இல்லாமை யாலே முதலில் தானே தன் முலையை அதன் வாயிலே கொடுக்கும். பின்பு சுவடு (ருசி) அறிந்தால் கன்றுதானே இது (பசு) காற்கடைக் கொள்ளிலும் (வெறுத்தாலும்) மேல் விழுமிறே!''

அப்படியே திருவடிகள் தாமே வந்து போக்யமானபடி சொன்னார் முதற்பாட்டில். இதில் தம்முடைய நெஞ்சு சுவடு அறிந்து மேல் விழுந்தபடியைச் சொல்லுகிறார்- 'அரங்கத்தம் மான் அரைச்சிவந்த ஆடையின் மேல் சென்றதாம் என் சிந்தனை யே' என்று. எம்பெருமான் தாமே வந்து அநுக்ரஹித்தபடியை 'திருக்கமலபாதம் வந்து' என்று அருளிச் செய்தார். இங்கு 'வந்து'. என்பது கவனிக்கத்தக்கது.

இந்த இரண்டாவது பாசுரத்தில் ஆழ்வாரே மேல் விழுந்தபடியைச் 'சென்றதாம் என் சிந்தனையே' என்று அருளிச் செய்கிறார். இங்கு 'சென்றதாம்' என்பது கவனிக்கத் தக்கது.

எம்பெருமான் திருவடியை அநுபவித்து வந்த ஆழ்வாருடைய சிந்தை (மனம்) திடீரென்று இதை விட்டு எம்பெருமானுடைய பீதாம்பரத்திடம் சென்றது ஏன்! என்பதை ஆராய வேண்டும்.

ஓர் அகத்தில் நிறைய ருசி மிகுந்த பக்ஷணங்கள் பல செய்து வைத்துள்ளனர். அந்த அகத்துக்குச் சென்ற ஒருவன் முதலில் ஒரு பக்ஷணத்தைச் சாப்பிடுகிறான். பிறகு அதை விட்டு மற்றோர் பக்ஷணத்தைச் சாப்பிடுகிறான். இவன் முதலில் சாப்பிட்ட பக்ஷணத்தை ஏன் விட்டான் என்ற கேள்விக்கு என்ன பதில்? முதலில் சாப்பிட்ட பக்ஷணத்தின் இனிமை திகட்டி விட்டது. போதும் என்றதாயிற்று. அதன் சுவையை நன்கு அநுபவித்து விட்டபடியால் அதன் ஆசை குறைய அதைப் புறக்கணித்து அடுத்து வேறோர் பக்ஷணத்தைச் சுவைக்க முற்படுகிறான் என்பது தான் பதிலாகும். இது அந்த பக்ஷணங்கள் விஷயத்தில் சரிப்படும். அவற்றின் சுவை ஓர் அளவுக்கு உட்பட்டிருக்கும். திகட்டி விடும். அதன் ஆசையும் போய்விடும்.

எம்பெருமான் விஷயத்தில் திருவடிகளை அனுபவிக்கப் புகுந்த ஆழ்வாருடைய திருவுள்ளம் அவற்றை விட்டுப் பீதாம்பரத்திற்குச் சென்றதற்கும், இந்த முறையையே காரணமாகக் கொண்டால் திருவடிகளின் சுவையும் ஒரு அளவுக்கு உட்பட்டதாகிவிடும். இவற்றின் சுவை அளவற்றது என்ற பெருமை குறைந்து விடும். ஆகவே ஆழ்வாருடைய திருவுள்ளம் திருவடிகளை விட்டுப் பீதாம்பரத்தை அநுபவிக்கச் சென்றமைக்கு இந்தக் காரணத்தைக் காட்டக் கூடாது. வேறு காரணம் என்ன? இதற்கு முன்னோர்கள் காட்டும் காரணத்தை நாம் அறிவதே சிறக்கும். நாமாக எதையும் புதிதாகக் கற்பனை செய்ய வேண்டாம்-அதாவது-

கடலில் உள்ள ஒரு துரும்பு திடீரென்று அந்தக் கடலை விட்டுக் கரையை வந்து சேருகிறது, ஏன்? கடலை நன்கு





அளவிட்டு அறிந்து அதில் ஆசையை விட்டுவிட்டா கரையைச் சேர்ந்தது? கடலை அளக்கவும் முடியாது. அதில் ஆசையையும் விட முடியாது; பின்! அலைகள் உயரக் கிளம்பி மேன்மேலென மோதும்போது, அந்த அலைகளால் அலைக்கப்பட்ட அந்தத் துரும்பு தன் வயமின்றித் தானே கரையில் சேருகிறது அன்றோ! அம்மாதிரிதான் இங்கும் திருவடியின் அழகு அலைகள் ஆழ்வார் திருவுள்ளத்தை அலைத்து இழுக்க அதன் மேல் கிளர்ந்த பீதாம்பரத்தினுடைய அழகு அலைகள் இவருடைய சிந்தனையைத் தன்னிடம் இழுத்துக் கொண்டன. ஆக இந்தத் துரும்பு கடலை நன்கு அளந்து அறிந்து கொண்டு அதில் ஆசையை விட்டுக் கரை சேர்வதில்லை.

ஆக எம்பெருமான் திருவடிகளின் சுவையும் குறைவற்றது, அளவற்றது. அதில் ஆசையும் போகவில்லை. ஆனாலும் பீதாம்பரத்தின் அழகு இவரை இழுத்துச் சென்று விட்டது.

இந்த அர்த்தத்தைப் பூர்வர்களுடைய வாக்யங்களால் அறிவது மிகவும் சுவையுடையதாகும்.

'திருவடிகளிலே கிடந்த திருவுள்ளம் திருப்பரிவட்டத்தின் மேலே சேர்ந்தபடி எங்ஙனே என்னில்? தான் அறிந்து நேரில் விஷயத்தின் போக்யதைக்கு (சுவைக்கு)க் குற்றமாம். ஆகையால் போக்யதை அளவுபட்டதுமன்று. ஆசை தலை மடிந்ததுமல்ல.

கடலோதங் கிளர்ந்து அலைக்கப்புக்கால் உள்ளே கிடந்த தொரு துரும்பு கடலையளவிட்டு அன்றே கரையிலே ஏறுவது? ஒரு திரையிலே ஒரு திரை ஏற வீசுமத்தனையிறே' என்ற ஸ்ரீ ஸூக்திகளேயாகும்.

கமலம் போல் சிவந்த திருவடிகளை அநுபவித்த பிறகு இந்தச் சிவப்புக்கு ஒத்த சிவப்பு நிறமுடைய திருப்பீதாம்பரத்தை

அநுபவிக்கிறார் ஆழ்வார் என்று ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் அவ தாரிகை அருளியுள்ளார்.

'அரங்கத்தம்மான் அரைச் சிவந்த ஆடையின் மேல் சென்ற தாம் என் சிந்தனையே!' என்று தம்முடைய நிலை கண்டு வியக் கிறார் திருப்பாணாழ்வார்.

அரங்கத்தம்மான் அரைச்சிவந்த ஆடையின் மேல் - இந்தச் சிவந்த ஆடை பக்தர்களின் மனவருத்தத்தையெல்லாம் போக்க வல்லது.

ஸ்ரீ ப்ருந்தாவநத்தில் கண்ணன் கோபிகைகளுடன் நெருங்கி விளையாடி வந்தான். அவர்களுக்குத் தன்னிடத்தில் உள்ள பக்தி யை நேரில் கண்டு மகிழ்கிறான். கண்ணா! உன்னை விட்டு ஒரு க்ஷணம் கூடப் பிரிந்து வாழமாட்டோம் என்றெல்லாம் தங்க ளுடைய நிலையைக் கூறுகிறார்கள் கோபிகைகள்.

இதைக் கேட்ட கண்ணனுக்குக் கூடவே ஒரு ஸந்தேஹம் எழுந்தது. இவர்கள் நம்மைக் கண்டபோது மற்றையோர் எதிரில் தானே இப்படியெல்லாம் பேசுகிறார்கள். மறைவிலும் இவர்க ளுடைய மனநிலை இப்படியே இருக்குமா? இதை நாம் பரீக்ஷித்து அறிய வேண்டும் என்று விரும்பிக் கண்ணன் சற்று மறைந்து விட்டான். அப்போது அவர்கள் பட்ட கஷ்டங்களை அறிந்த கண்ணன் இனியும் இவர்களைப் பரீக்ஷிக்கக் கூடாது. மேலும் நாம் மறைந்திருந்தால் இவர்கள் உயிர் வாழ மாட்டார்கள் என்று எண்ணி உடனே அவர்கள் எதிரில் தோன்றினான். நம்மை அலைய விட்ட கண்ணனை இனி நாம் அவன் நேரே வந்தாலும் பார்க்கக்கூடாது என்று ப்ரணய கோபம் (ஊடல்) கொண்டிருந் தனர் அந்தக் கோபிகைகள். இதை அறிந்த கண்ணன் அவர்கள் கோபத்தைப் போக்க என்ன செய்தான் தெரியுமா? புதிய சிவந்த பீதாம்பரத்தைத் திருஅரையில் சாத்திக்கொண்டு தோன்றினான்.





அந்த பீதாம்பரத்தைக் கண்டதுமே அவர்களுடைய மனத்தில் இருந்த கோபம்-தாபம் யாவும் ஒழிந்தன என்று ஸ்ரீமத் பாகவதத்தில் ஶுகப்ரஹ்மம் அருளியுள்ளார்.

**तासामाविरभूत् शौरिः स्मयमानमुखाम्बुजः ।**

**पीताम्बरधरः स्रग्वी साक्षान्मन्मथमन्मथः ॥**

**தாஸாம் ஆவிரபூத் ஶௌரி: ஸ்மயமாநமுகாம்புஜ: ।**

**பீதாம்பரதர: ஸ்ரக்வீ ஸாக்ஷாந்மந்மதமந்மத: ॥**

வருந்திய இடைப்பெண்களின் முன்னிலையில் சிரித்த திரு முகத்துடனும், பீதாம்பரம் அணிந்தும், மாலை சூடியும், மன் மதனையும் வெல்லும் மன்மதனாகத் தோன்றினான் கண்ணன் என்கிறார். **பீதாம்பரதர:-** இவன் பக்கல் இடைப் பெண்கள் நெஞ்சிற் பிறந்த ப்ரணய ரோஷத்தாலுள்ள மனம் எல்லாம் ஆறும்படியாயிற்று உடைவாய்ப்பு இருப்பது.

'நெஞ்சுகளிற் பிறந்த புண்ணெல்லாம் தீர்ந்து இத்தோடே பணி போகும்படியாயிற்று இருப்பது' என்று ஈட்டில் நம் பிள்ளை வ்யாக்யாநம் செய்தருளுகிறார்.

கண்ணன், தான் இடுப்பில் அணிந்துள்ள பீதாம்பரத்தைக் கொண்டு பக்தைகளான கோபிகைகளின் கோபத்தை ஆற்றினான். அது மட்டுமன்றிக் கோபம் தீர்ந்த கோபிகைகள் அந்த பீதாம் பரத்தைத் தொட்டு அதைச் சரி செய்து கண்ணனுக்கு மேலும் அழகு செய்தார்களாம் என்றபடி.

'உடையார்ந்த ஆடை' 'கௌஶேய புஷ்பிததடம்' என்றும் ஆழ்வார்களும் ருஷிகளும் இதில் ஈடுபடுகிறார்கள். எம்பெரு மான் திருவரையில் புஷ்பம் பூத்தாப் போலிருக்கிறதாம் இந்தச் சிவந்த ஆடை.

அரைச்சிவந்த ஆடை கருத்த நிறம் உடைய திருமேனிக்கு அழகு ஊட்டும் சிவப்பு நிறம். பரபாகம் தருவதான நிறம் இது. பரபாகம் (**परभाग**ம்) என்பது ஒரு நிறத்துக்குப் பெருமை தரும் மற்றோர் நிறம். கருத்த நிறம் உடைய திருமேனிக்கு நீலப் பட்டாடை அழகு தராது.கறுப்புக்கு நீலநிறம் பொருந்தாது. சிவந்த ஆடை- அதாவது சிவப்பு நிறம் பொருந்தும். கறுப்பு நிறத்திற்குச் சிவப்பு நிறம் அழகு தரும்.

ஸ்வாமி நம்மாழ்வாரும் திருவாசிரியம் முதற்பாட்டில் 'செக்கர் மாமுகில் உடுத்து' என்று எம்பெருமான் ஆடையழகை அநுபவித்து வெளியிடுகிறார்.

திருப்பாற்கடலில் ஶயநித்திருக்கும் எம்பெருமானை வர்ணிக்கிறார் ஸ்வாமி நம்மாழ்வார். கடலலைகள் மீது ஒரு மரகதக்குன்றம் படுத்திருப்பது போல் உள்ளான் எம்பெருமான் என்கிறார். அந்த மரகதக்குன்றம் செக்கர் மாமுகில் உடுத்திருக்க வேண்டும்-அதாவது சிவந்த மேகத்தை அரையில் உடுத்திருக்க வேண்டும். அப்படிப்பட்ட ஒரு மரகதக்குன்றம் இருந்தால் அது எம்பெருமான் திருமேனிக்கு ஒப்பாகும் என்கிறார்.

சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகளும் திருவேங்கடம் உடையவனை வர்ணிக்கும்போது அவனை ஒரு மேகமாக உருவகப்படுத்தி அந்த மேகம் மின்னலையே வஸ்த்ரமாக உடுத்திருக்க வேண்டும். அப்படிப்பட்ட ஒரு மேகம், மின்னலை வஸ்த்ரமாக உடுத்துக் கொண்டுள்ள ஒரு மேகம் நிற்பது போல் நிற்கிறான் திருவேங்கடவன் என்பதை 'மின்னுக்கோடி உடுத்து விளங்குவிற் பூண்டு ...நன்னிறமேகம் நிற்பது போல' என்று வெளியிட்டுள்ளார்.

இங்கு ஸ்வாமி ஸ்ரீ தேஶிகனுடைய அநுபவமும் பரம போக்யமாயிருக்கும். முநிவாஹநபோகம் என்ற தம் உரையில்





அருளிய ஸ்ரீ ஸூக்திகளையும் இங்கு அநுபவிக்க வேண்டும். ''படிச்சோதி ஆடையொடும் பல்கலனாய் நின் பைம்பொன் கடிச் சோதி கலந்ததுவோ'' என்னும்படி திகழா நின்ற திருஅரையிலே மது-கைடப ருதிர படலத்தாலே போல பாடலமாய் மரகத கிரிமேலே பாலாதபம் பரந்தாப்போலேயிருக்கிற திருப்பீதாம் பரத்திலே'' என்று.

தன் அநுபவத்திற்கு ஸ்வாமி நம்மாழ்வாருடைய அநுப வத்தைப் ப்ரமாணமாகக் காட்டியருளுகிறார் இங்கு.அதாவது திருமாலிருஞ்சோலை எம்பெருமானை அநுபவித்த ஸ்வாமி நம்மாழ்வாருக்கு ஒரு ஸந்தேஹம் உண்டாகிவிட்டது. அதைத் தீர்த்து வைக்குமாறு பெருமாளையும் பிராட்டியையுமே கேட்டருளுகிறார்.

உன்னுடைய முகத்தின் தேஜஸ்ஸே ஒரு கிரீடமாக உன் ஶிரஸ்ஸில் இருக்கிறதா? இவ்வாறே இயற்கையிலே அழகுடன் கூடிய உன்னுடைய பீதாம்பரத்தின் ஒளிதான் உன்கடிச் சோதியாய் உன் திருவரையின் தேஜஸ்ஸாக விளங்குகின்றதா? அல்லது உன் திருவரையின் தேஜஸ் தான் பீதாம்பரமாக விளங்குகிறதா? என்று வியக்கிறார்- வினவுகிறார் ஸ்வாமி நம்மாழ்வார்.

இப்படி மயர்வற்ற- அஜ்ஞாநமோ, ஸந்தேஹமோ, விபரீத ஜ்ஞாநமோ சிறிதுமில்லாத ஸ்வாமி நம்மாழ்வாரே வியந்ததான ஆடை இந்த அரங்கத்தம்மானுடைய சிவந்த ஆடை.

எம்பெருமான் ஒரு ஸமயம் மது-கைடபர் என்ற அஸுரர் களைத் தம் திருத்துடையினாலே அறைத்துக் கொன்றான். அப்போது அவர்களுடைய ஶரீரத்திலிருந்த ரத்தம் தான் இவ்வாறு சிவந்து திருவரையில் படிந்துள்ளதோ என்னும்படியாயிருக்கிறது இந்தப் பீதாம்பரம்.

மேலும் மரகத மலையின் மீது இளம் ஸூர்யனுடைய (உதயஸூர்யனுடைய) சிவந்த கிரணங்கள் பரவினாப்

போலிருக்கிறது எம்பெருமான் திருவரையில் இந்தப் பீதாம்பரம் என்றெல்லாம் ஸ்வாமி ஸ்ரீ தேஶிகனுடைய அநுபவம் இருக்கிறது.

முக்தன் பரமபதம் சென்று அங்கு எம்பெருமானை ஒவ்வொரு அவயவமாக அநுபவிக்கும் முறையை ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் பரமபதஸோபாநம் என்னும் ரஹஸ்ய க்ரந்தத்தில் அருளிச் செய்கிறார்.

முக்தன் பரமபதநாதன் திருவரையில் (இடுப்பில்) உள்ள பீதாம்பரத்தை ஸேவித்து மரகதக்குன்றம் ஒத்த திருமேனியிலே மாணிக்க ஒளி சூழ்ந்தாற் போலே பொருந்தின பொன்னொத்த ஆடையைப் பார்த்து 'படிச்சோதி ஆடையொடும் பல்கலனாய் நின் பைம்பொன் கடிச் சோதி கலந்ததுவோ' என்று சொல்லி வியப்பான்.

இதன் அர்த்தம் சற்று முன் விவரிக்கப்பட்டுள்ளது.

இப்படிப்பட்ட எம்பெருமானுடைய திருவரையில் உள்ள பீதாம்பரத்தில் என்னுடைய சிந்தனை தானே சென்றதே! என்று வியக்கிறார் திருப்பாணாழ்வார்.

'சோற்றிலே எனக்கு மனம் சென்றது' என்னுமாப்போலே ஆஶ்சர்யப்படுகிறார் ஆழ்வார் என்கிறார்கள் பெரியவாச்சான் பிள்ளையும் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும். உலகில் பாமரர்கள் தன் மனம் சாப்பாட்டில் சென்று லயித்தது என்று சொல்லுவது போல் ஆழ்வாரும் எம்பெருமான் அணிந்துள்ள பீதாம்பரத்தில் தன் சிந்தனை சென்றது என்கிறார் என்றபடி.

இத்தனை நாட்கள் வரை யார் யாருடையவோ ஆடைகளில் படிந்து வந்த என் சிந்தனை இப்போது எம்பெருமானுடைய திரு ஆடையில் படிந்தது என்கிறார்.

உலகத்தவர்கள் அணியும் ஆடைக்கும் எம்பெருமான் அணிந்துள்ள ஆடைக்கும் எவ்வளவு வ்யத்யாஸம் உள்ளது? யௌவந





வயதுள்ள ஒரு பெண்மணி அழகிய ஆடை அணிந்து வீதி வழியே செல்கிறாள். அவளுடைய ஆடையை ஒரு புருஷன் சற்று நேரம் உற்று நோக்கினால் என்ன நேரும்? பிறனுடைய மனைவியான இந்தப் பெண்ணின் மீது தவறான எண்ணங்கொண்டதால் தான் இவன் அவளையும் அவளுடைய ஆடையையும் உற்று நோக்குகிறான் என்று பிறர் இந்த உலகிலேயே பழிப்பார்கள்- பழிக்கிறார்கள்.

அந்தப் பழியையும் பொருட்படுத்தாமல் இவன் அந்தப் பெண்ணின் ஆடையையே உற்று நோக்கி ரஸித்தால், இவனுக்கு மரணத்துக்குப் பின் கொடிய நரகமும் உண்டாகும். இப்படிப் பல அநர்த்தங்களை உண்டு பண்ணும் பிறர்களுடைய ஆடைகளையே கண்டு ரஸித்து வந்த என் சிந்தனை தற்போது அவற்றை விட்டு எம்பெருமானுடைய ஆடையைப் பற்றிற்றே என்று வியந்து மகிழ்ந்து அருளிச் செய்கிறார் ஆழ்வார் என்று பூர்வர்கள் உரையிட்டுள்ளனர். ஆழ்வாருக்கு இம்மாதிரியான நிலை எப்போதும் கிடையாது. ஆயினும் ஆழ்வார் கருத்தாக உரையாசிரியர்கள் கூறுகின்றனர். இதனால் பிற பெண்களின் ஆடைகளை ஆவலுடன் பார்ப்பதனால் வரும் அநர்த்தங்களைக் காட்டுவதற்காக இவ்வாறு ஆசிரியர்கள் அருளியதாக நினைக்க வேண்டும்.

பிற பெண்ணின் ஆடைகளைக் கண்டால் வரும் அநர்த்தங்கள் கூறப்பட்டன. எம்பெருமான் திருஆடையைப் பார்ப்பதினால் வரும் ப்ரயோஜநத்தையும் அறிய வேண்டும் அன்றோ! அந்த ப்ரயோஜநம் இதுபோல. எம்பெருமான் திருமேனியில் அணிந்துள்ள பீதாம்பரம் இந்த உலகில் பார்ப்பவருக்குப் பேராநந்தத்தைத் தரவல்லது. வைத்த கண் வாங்காமல் மேன் மேலும் பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும் என்ற ஆவலைத் தூண்டிக் கண்களைத் தன் பால் இழுக்கும். ஆநந்தத்தைத் தரும்.

உலகில் பெண்கள் அணியும் ஆடைகள் குறிப்பிட்ட பருவத்தில் - வயதில் தான் அவர்களுக்கும் பார்ப்பவர்களுக்கும் நன்றாக

இருக்கும். பருவம் மாறினால் அந்த ஆடைகள் ரஸிக்கத் தக்கவையாக இராது. எம்பெருமான் நித்யயுவாவாய் அழியாத அழகு உடையவனாய் இருப்பதால் அவன் அணிந்திருக்கும் ஆடை அவனுக்கும் பார்ப்பவர்க்கும் எப்பொழுதுமே அழகை யும் ஆநந்தத்தையும் தருவதாயிருக்கும்.

எம்பெருமானுடைய பீதாம்பரத்தை இந்த உலகில் ஸேவித்து மகிழ்பவர்களுக்கு மரணம் உண்டான பிறகும் பரமபதத்தில் எப்பொழுதும் மாறாமல் இருந்து **सदा पश्यन्ति** (ஸதா பஶ்யந்தி) என்றபடி ஸேவிக்கலாம்படி விஷயமாகும்.

இப்படிப்பட்ட பெருமையுடைய பீதாம்பரத்தில் என்னு டைய சிந்தனை சென்றது என்கிறார் ஆழ்வார் என்று கூறுகிறார் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார். அந்த வாக்யங்கள் இவை:-

'ஆருடைய கூறையுடை கண்டு உகக்கக்கடவ நெஞ்சு இதிலே அகப்பட்டது'

'த்ருஷ்டத்திலே லோக கர்ஹிதமாய் - அத்ருஷ்டத்திலே வெந் நரகிலே தள்ளவும் கடவதான உடைகளிலே ப்ரவணமான என் மனஸ்ஸு த்ருஷ்டத்தில் ஆகர்ஷகமாய் அத்ருஷ்டத்தில் ஸதா பஶ்யந்திக்கு விஷயமான திருப்பீதாம்பரத்தில் விழுந்து நசை பண்ணுநின்றது' என்கிறார் ஆழ்வார்.

எம்பெருமான் சாற்றிக்கொண்டிருக்கும் பீதாம்பரங்களை எத்தனை காலம் வைத்த கண் வாங்காமல் ஸேவித்துக் கொண்டிருந்தாலும் எவரும் பழிக்கமாட்டார்கள்- புகழத்தான் செய்வார்கள்.

பழிக்குக் காரணமான பிறர் வஸ்த்ரங்களையே மக்கள் பெரும்பாலும் பார்க்கிறார்களே தவிர, புகழுக்கும் பரமாநந்தத் துக்கும் காரணமாயிருக்கும் எம்பெருமான் அணிந்த பட்டாடை களை உலகில் பலர் பார்ப்பதில்லையே.





ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் இங்கு இந்த விஷயத்தை 'அநாதிகாலம் அநுசித விஷயங்களிலே ஓடி, அவர்கள் ஆடையிலே கட்டுண்ட என் சிந்தை இவன் திருவடிகளைப் பற்றின. என்னாலும் மீட்க ஒண்ணுதபடி திருப்பீதாம்பரத்தில் சென்று துவக்குண்டது' என்று அருளுகிறார். அர்த்தம் முன் கூறியதே.

திருவடிகளின் அழகு வெள்ளத்திலே மூழ்கின ஆழ்வா ருடைய நெஞ்சு மேலே ஏறி திருப்பீதாம்பரத்தில் சென்று சேர்ந் தது. ஆழ்வாரும் அறியாதபடி அவரும் நியமிக்காதபோதும் திருப் பீதாம்பரத்தில் சென்று சேர்ந்ததைக் கண்ட ஆழ்வார்தான் இப்படி அருளுகிறார்.

ஒரு புண்யகாலத்தில் ஸமுத்ரத்தில் பலர் துறையிலே இறங்கி ஸ்நாநம் செய்கிறார்கள். அவர்களுள் ஒருவர் சிறு வயதினனான தன் பிள்ளையுடன் அந்தத் துறையிலே இறங்கி ஸ்நாநம் செய்தார். ஸ்நாநம் செய்தபின் தன் பிள்ளையை அங்குக் காணவில்லை, சுற்று முற்றும் தேடிப் பார்த்தபோது அவன் கரைமீது ஏறி நிற்பதைக் கண்டு தனக்கும் தெரியாமல் கடலிலிருந்து அந்தப் பையன் கரையேறிக் கும்பலில் நிற்பதைக் கண்டு மகிழ்வார் அன்றோ! அம்மாதிரி தான் ஆழ்வாரும் எம்பெருமானுடைய திருவடி அழகிலே மூழ்கிய தம் சிந்தை தாமும் அறியாமல் திருப்பீதாம்பரத்தின் மீது ஏறி நின்றுள்ளதைக் கண்டு மகிழ்கிறார்.

இதை முன்னோர்கள்:- 'தீர்த்தமாடாநிற்க- துறையிலே பிள்ளையைக் கெடுத்து (போக்கி)த் திருவோலக்கத்திலே (கரைமீதுள்ள பெரிய கோஷ்டியிலே) காண்பாரைப்போலே திருவடிகளில் ஒன்றும் திருப்பீதாம்பரத்தே கண்டபடி'.

'பீதாம்பரம் பரம போக்யமாய் ஆகர்ஷகமாய் ஸேவிப்பவரை ஸ்ரீ வைகுண்டத்திற்கு இட்டுச் சென்று அவர்கள் எப்பொழுதும் காணும்படி நிறுத்த வல்லது. எம்பெருமானுக்கு வஶப் படாதவர்களை வஶீகரிக்கவல்லது இந்தப் பீதாம்பரம்.

ஏற்கெனவே வஶீகரிக்கப்பட்டவர்கள் ஏதாவது ஒரு காரணத் தினால் ப்ரணய கோபம் (காதல் கோபம்!) கொண்டால் அதை ஆற்றவல்லது எம்பெருமானுடைய பீதாம்பரம்.

முன்பே தனக்கு வஶமானவர்களாய் தனக்கு மிகவும் வேண்டியவர்களாய் இருப்பாரை மற்றோர் அறியாத வண்ணம் மறைத்துக் கொண்டு போகப் பயன்பட வல்லது இந்தப் பீதாம் பரம்.

எம்பெருமான் தனக்கு மிகவும் வேண்டிய ஒரு பெண்ணை (பக்தையை) இருளில் ஒருவரும் அறியா வண்ணம் தன் பீதாம் பரத்தினால் மூடி மறைத்து அழைத்துச் சென்றதைக் கண்ட ஒரு பெண் கூறிய வார்த்தை பெருமாள் திருமொழியில் ப்ரஸித்தம். அதாவது:-

**'மின்னொத்த நுண்ணிடையாளைக் கொண்டு,**
**வீங்கிருள்வாய் எந்தன் வீதியோடே**
**பொன்னொத்த வாடை குக்கூடலிட்டுப்**
**போகின்றபோது நான் கண்டு நின்றேன்'**

என்பதுதான் அந்தப் பெண்ணின் பேச்சு.

இதற்காகத்தான் எம்பெருமான் க்ருஷ்ணவதாரத்தில், அவதரிக்கும்போதே பீதாம்பரத்துடன் அவதரித்தான் என்பர் முன் னோர். இப்படிப் பூர்வாசார்யர்கள் காட்டியுள்ள பீதாம்பரத்தின் மஹிமையைப் படித்த பிறகாவது நம்முடைய சிந்தனை இதில் செல்லும் என்று நம்புகிறோம்.





திருக்கமல பாதத்தில் சென்ற ஆழ்வாருடைய அநுபவம் அரைச் சிவந்த ஆடையில் சென்று அத்துடன் நிற்காமல் மேலே மேலே போய்க்கொண்டே இருக்கிறது. நாமும் இத்துடன் நில்லாமல் மேலே மேலே நம்முடைய சிந்தனையைச் செலுத்துவோம்.

---

**உவந்தவுள்ளத்தனாய் உலகமளந்துஅண்டமுற ✱**
**நிவந்தநீள்முடியன் அன்றுநேர்ந்தநிசாசரரை✱**
**கவர்ந்தவெங்கணைக்காகுத்தன் கடியார்பொழிலரங்கத்தம்மான் ✱ அரைச்**
**சிவந்தஆடையின்மேல் சென்றதாம்என்சிந்தனையே. (2)**

## 3. ''அயனைப் படைத்த எழில் உந்தி''

**हरेस्तु नाभिकमलं उत्पाद्य चतुराननम् ।**
**कारणं ह्येष जगतः नान्यः कश्चिद्भवेदिति ॥**
**विना शास्त्रपरामर्शं सर्वान् बोधयतीह नः ।**
**अतः श्रीपाणनाथस्तु तत्रैवाऽऽसीत् सुमग्नधीः ॥**

ஹரேஸ்து நாபீகமலம் உத்பாத்ய சதுராநநம் ।
காரணம் ஹ்யேஷ ஜகத: நாந்ய: கஶ்சித் பவேதிதி ॥
விநா ஶாஸ்த்ர பராமர்ஶம் ஸர்வாந் போதயதீஹ ந: ।
அத: ஶ்ரீபாணநாதஸ்து தத்ரைவா஽ஸீத் ஸுமக்நதீ: ॥

சென்ற பகுதியில் எம்பெருமான் அரையில் உள்ள பீதாம் பரத்தை திருப்பாணாழ்வார் அநுபவித்த வகையை அநுபவித் தோம். இனி பீதாம்பரத்திற்கு மேல் உள்ள திரு நாபீகமலத்தையும் அதற்கு ஆதாரமாயிருக்கும் திருஉந்தியையும் ஆழ்வார் அநுபவிக் கும் வகையை நாமும் அநுபவிப்போமாக.

முதலில் கமலம் போல் சிவந்த திருவடிகளின் அநுபவம்; அடுத்துத் திருவடிகள் போலும் அந்தி (செவ்வானம்) போலும் சிவந்து சிறந்து விளங்கும் பீதாம்பரம், இவற்றை அநுபவித்து விட்டு மூன்றாவது பாசுரத்தில் திருநாபீ கமலத்தையும் அதற்கு ஆதாரமான அழகிய திருநாபி (உந்தி)யையும் அநுபவிக்கிறார் ஆழ்வார்.

திருப்பாணாழ்வார் மிகவும் ரஸிகர். ஆகையாலே அவர் பீதாம்பரத்தின் அழகில் ஆழ்ந்து நிற்பதைக் கண்ட எம்பெருமா னுடைய திருநாபீ (திருவுந்தி) அவரைத் தன் பக்கலிலே இழுத்துக் கொள்ள விரும்பிற்று. பீதாம்பரத்தைவிடத் தனக்குச்





சிறப்பு இருந்ததால் அதைக் காட்டி ஆழ்வாரைத்தன் பக்கலில் இழுத்துக் கொள்ளலாம் என்று நினைத்த திரு நாபீகமலம் தனக் குள்ள சிறப்பைக் காட்டி ஆழ்வாரைத் தன் பக்கலிலே இழுத்துக் கொண்டு விடுகிறது.

நாபி என்றால் கொப்பூழ் (தொப்புள்). அதில் தோன்றிய தாமரைப்பூ திருநாபீகமலம் எனப்படுகிறது. இதற்குள்ள பெருமை என்ன? படைக்கும் தொழிலை மேற்கொண்டுள்ள நான்முகனையும் முதலில் படைத்த பெருமை இந்தத் திருநாபீ கமலத்திற்கு உண்டு. எம்பெருமானுடைய திருநாபீகமலத்தி லிருந்துதான் சதுர்முக ப்ரஹ்மா பிறந்தான் என்கின்றன ப்ரமாணங்கள்.

ஆக சதுர்முகனைப் படைத்த பெருமை தனக்கே அதாவது நாபீகமலத்திற்கே உரியதுதானே! அதைக் காட்டி ஆழ்வாருடைய மனத்தைத் தன் பால் இழுத்துக் கொள்கிறது திரு நாபீகமலம்.

உலகுக்கெல்லாம் (அதாவது ப்ரஹ்மா, சிவன் முதலாக எல்லாவற்றுக்கும்) தானே காரணம் என்பதைத் தன் திரு நாபீகமலத்தைச் சான்றாகக் காட்டி எம்பெருமான் நிரூபிக்கிறான். இங்கு வ்யாக்யாநத்தில் அவதாரிகை அத்புதமாக உள்ளது.

திருப்பாணாழ்வார் பெருமாளை அநுபவிக்கத் தொடங்கின உடனேயே முதல் பாசுரத்தில் 'ஆதிபிரான் உலகுக்கெல்லாம் காரணம்; இவனே எல்லாவற்றுக்கும் மேம்பட்டவன்'' என்று காட்டினார்.

இதைக் கேட்ட ஜனங்களுக்குக் கலக்கம் உண்டாகக் கூடும். ப்ரஹ்மா, விஷ்ணு, ஶிவன் என்ற மூவருமே ஜகத்துக்குக் காரணம் என்று ப்ரமாணங்கள் கூறுகின்றனவே.

ஸ்ரீ பராஶரரும் ஸ்ரீ விஷ்ணு புராணத்தில்:

सृष्टिस्थित्यन्तकरणीं ब्रह्म विष्णु शिवात्मिकाम् ।
स संज्ञां याति भगवान् एक एव जनार्दनः ॥ (ஸ்ரீவிஷ்ணுபுராணம்)

(ஸ்ருஷ்டிஸ்தித்யந்தகரணீம் ப்ரஹ்ம விஷ்ணு ஶிவாத்மிகாம் ।
ஸ ஸம்ஜ்ஞாம் யாதி பகவாந் ஏக ஏவ ஜநார்தந: ॥

என்கிறார். ப்ரஹ்மா, விஷ்ணு, ஶிவன் ஆகிய மூவருமே தான் ஜகத்துக்குக் காரணமாயிருப்பவர்கள் என்று இதனால் ஏற்படுகிறதன்றோ?

இப்படி இருக்க எம்பெருமானை மட்டும் ஜகத்காரணம் என்றும் எல்லாவற்றுக்கும் மேம்பட்டவன் இவன் என்றும் கூறுவது எப்படிப் பொருந்தும்? இந்த உண்மையை அறிவது எப்படி? என்பதுதான் கலக்கம்.

இந்தக் கலக்கத்தை எப்படிப் போக்குவது என்று எம்பெருமான் சிந்திக்கலானான். ஶாஸ்த்ரங்களைக் கொண்டு எம்பெருமான்தான் ஜகத்காரணம் என்பதைத் தெளிவாக அறியச் செய்தால் என்ன? என்றும் நினைத்தான். முடிவில் அதுவும் சரியன்று எனத் தோன்றிற்று எம்பெருமானுக்கு.

நாம் ஶாஸ்த்ரங்களைக் கொடுத்தால் அந்த ஶாஸ்த்ரங்கள் யாருக்குத் தத்த்வ ஜ்ஞாநத்தைத் தரும்? மிகுந்த புண்யஶாலிகளாய், எம்பெருமானான மதுஸூதநனுடைய கடாக்ஷம் பெற்றவர்களுக்குத் தான் தத்த்வஜ்ஞாநத்தைத் தரும். இப்படியல்லாதவர்களுக்கு விபரீத ஜ்ஞாநத்தைத் தான் தரும். மதுஸூதந கடாக்ஷம் பெற்றவர்கள் மிகக் குறைந்த அளவில்தானே இருப்பார்கள். மதுஸூதந கடாக்ஷம் பெறாதவர்கள்தான் அதிகமாக இருப்பார்கள். அவர்களுக்கு இந்த ஶாஸ்த்ரங்கள் விபரீதமான (உண்மைக்குப் புறம்பான) அர்த்தங்களைத் தான் தரும். ஆகையால் ஶாஸ்த்ரங்களைக் கொண்டு மக்களின் மதிமயக்கத்தைப் போக்கமுடியாது. ஆகவே எம்பெருமான் தன்னுடைய





திருநாபீகமலத்தில் யாவரும் காணும்படியாகச் சதுர்முக ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்துக் காட்டினான். இவனால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட சதுர்முக ப்ரஹ்மா எப்படி ஜகத்காரணமாக இருக்க முடியும்?

இவ்விஷயங்களை வாயால் சொல்லி விளக்கினால் அதைப் பலரும் புரிந்து கொள்ள மாட்டார்கள். அந்த விஷயங்களையே படமாகப் போட்டு காட்டினால் ஸந்தேஹமே உண்டாகாதன்றோ? ஶயனத் திருக்கோலத்தில் எம்பெருமானை ஸேவிக்கும் போது திருநாபீகமலத்தில் ப்ரஹ்மா பிறந்திருப்பதைக் கண்டால் யார் ஜகத் காரணம் என்று பிறர் சொல்லாமலேயே எளிதில் நாம் யாவரும் தெரிந்து கொள்ளலாமே!

ஆகத் திருநாபீகமலம் நான்முகனைப் பெற்றுக் காட்டி இந்த எம்பெருமான் ஒருவன் தான் ஜகத்காரணம். ப்ரஹ்மாவே பிறந்தான் என்றால் ருத்ரன் முதலானோர் பிறந்தனர் என்பதைத் தனியே எடுத்துக் கூறவே வேண்டியதில்லையன்றோ!

ஶாஸ்த்ரங்களுக்கெல்லாம் இல்லாத இந்தப் பெருமை எம்பெருமான் திரு நாபீகமலத்திற்கு மட்டுமே உள்ளது.

எம்பெருமான் தான் ஜகத்துக்குக் காரணம். ப்ரஹ்மா-ருத்ரன் முதலானோர் ஜகத்துக்குக் காரணபூதர்கள் அல்லர் என்பதை யாவரும் எளிதில் அறியும்படிச் செய்ய முடியாதவை ஶாஸ்த்ரங்கள். ஶாஸ்த்ரங்களால் எம்பெருமானே ஜகத்துக்கெல்லாம் காரணம் என்பதை யாவரும் அறியும்படிச் செய்யமுடியாது. இந்த ஶாஸ்த்ரங்களே பகவத்பக்தி இல்லாதவர்களுக்கு விபரீதமான ஜ்ஞாநத்தை உண்டு பண்ணிவிடும்.

ஆகையால் எம்பெருமானே ஜகத்துக்கெல்லாம் காரணம் என்பதை எப்படியாவது யாவருக்கும் எளிதில் உணர்த்த வேண்டும் - யாவரும் அறியும்படிச் செய்ய வேண்டும் என்று

எண்ணிய எம்பெருமான் தன்னுடைய திருநாபியிலேயே தாமரைப்பூவை உண்டு பண்ணி அதில் சதுர்முக ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்துக் காட்டினால் இந்த உண்மையை எளிதில் யாவரும் அறிவார்கள் என்று அப்படியே செய்தான். இந்தத் திருநாபீ கமலத்தை நேரில் ஸேவிப்பவர்கள் ஶாஸ்த்ரங்களின் உதவி யின்றியே நேராகவே- கண்ணினாலேயே இந்த எம்பெருமான் தான் ஸர்வஜகத்துக்கும் காரணம். இவனே எல்லாவற்றுக்கும் மேம்பட்டவன் என்பதை உணர்வார்கள். உணர்கிறார்கள்.

உலகில் வார்த்தைகளால் விளக்க முடியாத சில கருத்துக் களைப் படம் போட்டுக் காண்பிப்பது உண்டு. வார்த்தைகள் (சொற்கள்) ஒரு ஸமயம் விபரீதமான அர்த்தத்தையும் தந்து விடும். அதே அர்த்தத்தைப் படம் போட்டுக் காண்பித்தால் விபரீதம் ஏதும் விளையாது. அந்தக் கருத்தைப் படத்தின் மூலம் உள்ளபடியே அறிவார்கள்.

இந்த அர்த்தத்தை ஶ்ரீ பட்டர் அத்யத்புதமான ஒரு ஶ்லோகத் தினால் விளக்கியருளுகிறார்:- அந்த ஶ்லோகம் இதோ:-

**त्रयो देवास्तुल्याः त्रितयमिदमद्वैतमधिकं**

**त्रिकादस्मात् तत्त्वं परमिति वितर्कान् विघटयन् ।**

**विभोर्नाभीपद्मो विधिशिवनिदानं भगवतः**

**तदन्यद् भ्रूभङ्गीपरवदिति सिद्धान्तयति नः ॥**

த்ரயோ தேவாஸ்துல்யா: த்ரிதயமிதமத்வைதமதிகம்

த்ரிகாதஸ்மாத் தத்த்வம் பரமிதி விதர்க்காந் விகடயந் ।

விபோர்நாபீபத்மோ விதிஶிவநிதாநம் பகவத:

ததந்யத் ப்ரூபங்கீபரவதிதி ஸித்தாந்தயதி ந: ॥

-ஶ்ரீரங்கராஜஸ்தவம் பூர்வஶதகம் 116





உலகத்தில் பரதத்த்வம் எது என்பதை நிஶ்சயித்து அறிவதில் மந்தமதிகளுக்குப் பல சிக்கல்கள், ஸந்தேஹங்கள், விபரீத முடிவுகள் உண்டாகின்றன.

சிலர் ப்ரஹ்மா, விஷ்ணு, ஶிவன் இவர்கள் மூவரும் ஸமமாக இருப்பவர்கள் தான். இவர்களுக்குள் யாருக்கும் ஏற்றத்தாழ்வு ஏதும் கிடையாது என்று கூறுகின்றனர்.

மற்றும் சிலர் ப்ரஹ்மா- விஷ்ணு- ஶிவன் இவர்கள் மூவர்கள் அல்லர். மூவராக நினைக்கப்படும் இவர்கள் ஒருவரே - அதாவது ஒரே தத்த்வமே என்று கூறுகின்றனர்.

இன்னும் சிலர் இந்த மூவரைக் காட்டிலும் மேம்பட்ட ஒன்று உளது. அதுவே பரதத்த்வம் என்கின்றனர்.

இப்படிப்பட்ட விபரீதங்கள் ஏற்பட்டுள்ளன. இந்த விபரீத வாதங்களை, ஶாஸ்த்ரங்களை எடுத்துக் காட்டி ஒழிப்பது மிகவும் கடினமானது. எல்லோருக்கும் இது எளிதன்று. ஶ்ரீ பட்டர் அருளுகிறார். இப்படி ஸந்தேஹிப்பவர்கள் பள்ளிகொண்ட எம்பெருமானுடைய திருநாபீகமலத்தைப் பார்க்க வேண்டும். ஸேவிக்க வேண்டும். அப்போது இவர்களுடைய ஸந்தேஹங்கள் அனைத்தும் ஒரு நொடியில் அழிந்து விடும். பாம்பணையில் பள்ளி கொண்டிருக்கும் எம்பெருமானுடைய திருநாபியிலிருந்து (கொப்பூழிலிருந்து) ஒரு தாமரைப்பூ ஓங்கி உயர்ந்து நிற்கிறது. அது ஒன்றே இந்த விபரீத வாதங்கள் அனைத்தையும் ஒடுக்கிவிடுகிறது. இந்தத் தாமரைப்பூ சதுர்முக ப்ரஹ்மாவைப் பெற்றுக் கொடுத்திருக்கிறது.

இங்குதான் மக்கள் கவனிக்க வேண்டும். நாபீகமலத்தின் மூலம் சதுர்முக ப்ரஹ்மாவை உண்டு பண்ணின எம்பெரு மானும், இவனால் உண்டு பண்ணப்பட்ட சதுர்முக ப்ரஹ்மாவும் இந்தச் சதுர்முக ப்ரஹ்மாவினால் உண்டுபண்ணப்பட்ட ஶிவனும் எப்படி ஏற்றத்தாழ்வில்லாமல் இருக்கமுடியும்? எப்படி

இந்த மூவரும் ஒருவராக இருக்க முடியும்? எப்படி இந்த எம்பெருமானை விட மேம்பட்ட ஒரு தத்த்வம் இருக்க முடியும்?

உலகத்தைப் படைக்கும் சதுர்முக ப்ரஹ்மாவே இந்த நம் எம்பெருமானிடமிருந்து பிறந்தான். இவனுக்கு அதீநனாக இருக்கிறான் என்றால், மற்றையவை அனைத்தும் இந்த எம்பெருமானுடைய புருவத்தின் நெரிப்புக்கு அதீநங்கள் என்பதைத் தனித்துச் சொல்ல வேண்டுமா?

எம்பெருமான் ஒருவன்தான் பரதத்த்வம் - என்பதே சரியானது என்பதை திருநாபீகமலம் ஒன்றே நமக்குத் தெளிவாகக் காட்டுகிறது என்கிறார் ஸ்ரீ பட்டர் இந்த ஶ்லோகத்தினால்.

வேதங்களால் எளிதில் நிஶ்சயிக்க முடியாத விஷயத்தை எம்பெருமானுடைய திருநாபீகமலம் ஒன்றே தெளிவுபடுத்துகிறது. எம்பெருமானின் பள்ளிகொண்ட திருக்கோலம் ஒரு அழியாத சித்திரம். இதன்மூலம் நம் ஸித்தாந்தத்தை எளிதில் அறியலாம் அன்றோ. இனியும் எதற்கு வீணான விபரீதவாதங்கள்?

இந்த வகையில் எம்பெருமானுடைய திருநாபீகமலம் ஒரு பெரும் பெருமையைப் பெற்றுள்ளது. ஆகவே, இந்தப் பெருமையைக் காட்டி, எம்பெருமானுடைய திருவரைப் பீதாம்பரத்தில் ஈடுபட்டு அதிலேயே மூழ்கியிருந்த திருப்பாணாழ்வாருடைய மனஸ்ஸைத் தன்னிடம் இழுத்துக் கொள்கிறது எம்பெருமானுடைய திரு நாபீகமலம்.

இந்த அர்த்தத்தை அழகிய மணவாளப் பெருமாள் அருளிய ஸ்ரீ ஸூக்திகளைக் கொண்டு அறிவது மிக அழகியதாகும். அந்த ஸ்ரீ ஸூக்திகள் பின்வருமாறு:-

''முதற்பாட்டில் 'ஆதிபிரான்' என்று ஜகத் காரண பூதனாய் ஸர்வஸ்மாத்பரனாய் இருக்கும் என்று சொல்லக் கேட்டவர்கள் 'ப்ரஹ்ம-விஷ்ணு ஶிவாத்மிகாம்' என்று மூவர் ஜகத் காரண பூதர்





என்று ப்ரஸித்தழாயிருக்க, இவனே (எம்பெருமானே) ஜகத் காரணபூதன் என்று அறியும்படி என்- என்ன, ஶாஸ்த்ர முகத்தாலே நம்முடைய (எம்பெருமானுடைய) காரணத்வத்தை ப்ரகாஶிப்பித்தோமாகில், அது கர்மாதீநமான ருச்யநுகூலமாக அயதாவாக (உண்மைக்குப் புறம்பாக) ப்ரகாஶிக்கும் என்று பார்த்தருளித் தன் திருநாபீகமலத்திலே ஜகத்காரணபூதராக ப்ரஸித்தரான ப்ரஹ்ம ருத்ரர்களை ஸ்ருஷ்டித்துக் காட்ட அந்த நாபீகமலம் அம்முகத்தாலே தன்னுடைய மேன்மையையும் அழகையும் காட்டி திருப்பீதாம்பரத்திலே துவக்குண்கிற (ஈடுபட்டிருக்கிற) என்னுடைய மனஸ்ஸைத் தன் பக்கலிலே இழுத்துக் கொள்ளா நின்றது (இழுத்துக் கொண்டது) என்கிறார்''.

எம்பெருமானுடைய திரு நாபீகமலம் ஒன்றே மற்றைய விபரீதவாதங்களை அழித்து எம்பெருமான் ஒருவன்தான் உலகுக்கெல்லாம் காரணம் என்பதை நன்கு பறை சாற்றுகிறது என்பதைத் தாம் அருளிய பெரிய திருவந்தாதியில் தெளிவாகக் காட்டுகிறார் நம்மாழ்வார்

**'முதலாம் திருவுருவம் மூன்றென்பர் - ஒன்றே**
**முதலாகும் மூன்றுக்கும் என்பர்- முதல்வா!**
**நிகரிலகுகார் உருவா நின்னகத்ததன்றே?**
**புகரிலகு தாமரையின் பூ'**

**-(பெரிய திருவந்தாதி 72)**

என்று ஜகத்துக்குக் காரணமானவர்கள் மூன்று பேர்கள் - ப்ரஹ்மா-விஷ்ணு- ஶிவன் என்பவர்கள் என்று சிலர் சொல்லுவார்கள். இந்த மூவருக்கும் காரணமாயிருப்பவன் வேறு ஒருவன் உளன் என்பர் மற்றும் சிலர்.

எல்லாவற்றுக்கும், எல்லாருக்கும் காரணமான எம்பெருமானே! இந்தச் சதுர்முக ப்ரஹ்மா, ஶிவன் இவர்கள் அனைவரையும் உண்டாக்கின தாமரைப்பூ உன்னுடைய திருநாபியில்

விளங்கிக் கொண்டிருக்கிறதே! இதைக் கண்ட பிறகும் மேற்கூறிய விபரீதங்களான மதங்கள் நடை யாடுமா? உயிர் வாழுமா? என்று எம்பெருமானையே நோக்கிக் கேட்கிறார் ஸ்வாமி நம்மாழ்வார். இதை அடியொற்றித்தான் மேலே காட்டிய பட்டருடைய ஶ்லோகம் பிறந்தது.

ஸ்ரீ ஆளவந்தாரும் **अजनिष्ट च कस्य नाभेः?** (அஜநிஷ்ட ச கஸ்ய நாபே:?) எவனுடைய நாபியிலிருந்து (கொப்பூழிலிருந்து) உலகம் உண்டாயிற்று? என்பதை எண்ணிப் பாருங்கள் என்கிறார்.

இங்குத் திருப்பாணாழ்வார் ஸ்ரீ ரங்கநாதனுடைய திருநாபியையும் அதன் மீதுள்ள கமலத்தையும் அநுபவித்து அருளிய ஸ்ரீ ஸூக்தி மேலே உள்ளது. **''அந்திபோல் நிறத்தாடையும் அதன் மேல் அயனைப் படைத்ததோர் எழில் உந்திமேலதன்றோ அடியேன் உள்ளத்து இன்னுயிர்'** என்று.

இதற்கு முன் 2வது பாட்டில் இந்த ஆழ்வார் இந்தப் பீதாம்பரத்தையே 'அரைச் சிவந்த ஆடையின் மேல் சென்றதாம் என சிந்தனையே' என்று அநுபவித்துள்ளார். மீண்டும் அந்தப் பீதாம்பரத்தையே 'அந்திபோல் நிறத்து ஆடை' என்று அநுபவிக்கிறார்.

அநுபவித்ததையே அநுபவிப்பதாக நமக்குத் தோன்றினாலும் அந்த அநுபவத்திற்கும் இந்த அநுபவத்திற்கும் மிகவும் வ்யத்யாஸம் உண்டு. விஶேஷமும் உண்டு.

'அரைச் சிவந்த ஆடை' என்றதால் இந்த ஆடையை-பீதாம்பரத்தைக் களைந்தும் விடலாம். ஆகவே இது ஆபரணங்களின் வரிசையிலே சேர்ந்ததாகும். ஆபரணங்கள் எம்பெருமான் திருமேனியில் எப்பொழுதும் இருப்பவை அல்ல. அவற்றை வேண்டியபோது சாற்றலாம். வேண்டாதபோது கழற்றியும் விடலாம். அம்மாதிரிதான் பீதாம்பரமும் என்பது தோன்றுமாறு அமைந்தது 2வது பாசுரத்தில் பீதாம்பரத்தின் அநுபவம்.





3ம் பாசுரத்தில் 'பீதாம்பரம்' கழற்ற ஒண்ணுதபடி எம்பெருமான் திருவரையில் எப்பொழுதுமே இருப்பதாக எண்ணி அநுபவிக்கிறார் ஆழ்வார்.

'அந்திபோல் நிறத்து ஆடை' என்பதால் கருத்தமேகம் போன்ற எம்பெருமான் திருமேனியில் ''திருவரையில் ஸந்த்யா காலத்தில் வானம் சிவந்தது போல் சிவந்து விளங்குகிறது பீதாம்பரம்'' என்கையால் அந்திக் (ஸந்த்யா) காலத்திய சிவப்பு மேகத்தைவிட்டுத் தனித்திருக்காது. அந்தச் சிவப்பை மேகத்தை விட்டுப் பிரிக்கமுடியாது. அவ்வாறே இந்தப் பீதாம்பரமும் திருவரையை விட்டுப் பிரிக்க ஒண்ணுதபடி எப்பொழுதுமே கூடவே பிறந்ததுபோலவே உள்ளது என்பது தோன்ற ஆழ்வாரின் அநுபவம் அமைந்துள்ளது.

'கீழ்ச் சொன்ன சிவந்த ஆடை ஆபரண கோடியிலேயாய் (வகுப்பைச் சார்ந்ததாய்) சாத்தவும், கழற்றவுமாயிருக்கும். இது ஸஹஜம் என்கைக்கு உடலாக 'அந்திபோல் நிறத்து ஆடையும்' என்கிறார். ஸந்த்யாராக ரஞ்ஜிதமான மேகம் போலேயாய்த்துத் திருவரையும் திருப்பீதாம்பரமும் இருக்கிறபடி. திருமேனி மயில் கழுத்துச் சாயலாயிறே இருப்பது. அத்தோடு சேர்ந்த திருப்பீதாம்பரம் ஸந்த்யாகால ரஞ்ஜிதமான காளமேகம் போல ஆகர்ஷகமாயிறே இருப்பது'' என்ற ஸ்ரீ அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் ஸ்ரீ ஸூக்திகளை இங்கு அநுபவிக்க வேண்டும்.

இவற்றுக்குத் தனியாக விளக்கம் வேண்டாம். அந்திக் காலத்தில் வானம் சிவப்பது உலக இயல்பு. அந்த ஸமயத்தில் உள்ள மேகங்களிலும் இந்தச் சிவப்பு நிறம் படியும். இப்படிச் சிவப்பு நிறம்படிந்த காளமேகம் போல் இருக்கிறது எம்பெருமான் திருமேனி. அந்த ஸமயத்தில் விளங்கும் சிவப்பு நிறம் வானத்திலிருந்து மேகத்திலிருந்து பிரித்து எடுக்கமுடியாதபடி ஒட்டி இருக்கும். இவ்வாறே எம்பெருமான் திருமேனியில் திரு

அரையில் உள்ள திருப்பீதாம்பரத்தையும் பிரித்து எடுக்க முடியாது என்பது தோற்றுகிறது இந்த அநுபவத்தில்.

முநிவாஹநபோகம் என்ற வ்யாக்யாநத்தில் ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் இவ்விடத்தில் அருளிய அர்த்த விஶேஷங்களையும் அறிந்து ரஸிக்க வேண்டும்.

பாசுரத்தில் 'அந்திபோல் நிறத்து ஆடை' அந்திக்காலத்திய வானம்போல் சிவந்த ஆடை என்று ஆழ்வார் அருளியுள்ளார்.

'அந்தி' என்பது ஸந்த்யையைக் குறிக்கிறது. ஸந்த்யை (அந்தி) இரண்டு. ஒன்று ப்ராதஸ்ஸந்த்யை (காலை அந்தி) மற்றொன்று ஸாயம் ஸந்த்யை (மாலை அந்தி), இந்த இரண்டு ஸந்த்யைகளில் (அந்திகளிலும்) வானம் சிவக்கும். காலை ஸந்த்யைக்கு (அந்திக்கு) ஒரு விஶேஷம் உண்டு. மாலை ஸந்த்யைக்கும் (அந்திக்கும்) ஒரு விஶேஷம் உண்டு. அந்த இரண்டு விஶேஷங்களும் திருப்பீதாம்பரத்திற்கும் உண்டு.

காலை ஸந்த்யையை பூர்வ ஸந்த்யை என்றும் மாலை ஸந்த்யையை பஶ்சிம ஸந்த்யை என்றும் கூறுவார்கள். காலை அந்திப்பொழுதில் (பூர்வஸந்த்யையில்) வானம் சிவந்தால் உடனே ஸூர்யோதயம் உண்டாக இருள்கள் விலகிவிடும். இருள்களைப் போக்கவல்லது பூர்வஸந்த்யை (காலை அந்தி). மாலை அந்தியில் (பஶ்சிம ஸந்த்யையில்) வானம் சிவந்தால் வெப்பம் மிகுந்த ஸூர்யனுடைய கிரணங்கள் மறைய மக்களின் தாபங்கள் குறையும். ஆக ஜனங்களுடைய தாபங்களைத் தீர்க்க வல்லது பஶ்சிம ஸந்த்யை. இந்த இரண்டு விஶேஷங்களையும் எம்பெருமானுடைய திருப்பீதாம்பரத்திலே காணலாம்.

'அந்திபோல் நிறத்து ஆடை' என்ற இடத்தில் பூர்வஸந்த்யை போல் சிவந்த ஆடை என்று கொண்டால் இந்த பீதாம்பரமும் ஒரு ஸூர்யோதயத்திற்குக் காரணமாகிறது. எந்த ஸூர்யோதயத்திற்கு





என்பதை உற்று நோக்க வேண்டும். தத்த்வஜ்ஞாநமாகிற ஸூர்யனுடைய உதயத்திற்கு என்று கொள்ள வேண்டும். ஆகப் பூர்வ ஸந்த்யைபோல் (காலை அந்தி போல்) என்று கொண்டால் ஸம்யக்ஜ்ஞாநமாகிற ஸூர்யனுடைய உதயத்திற்குக் காரணமாகிறது. பூர்வஸந்த்யை (காலை அந்தி) வந்தால் ஸூர்யோதயம் அடுத்து உண்டாவது திண்ணம்.

அம்மாதிரி எம்பெருமான் திருவரையில் உள்ள பீதாம்பரம் நம்முடைய அஜ்ஞாநமாகிற இருளைப் போக்கித் தத்த்வஜ்ஞாநமாகிற ஸூர்யோதயத்திற்குக் காரணமாகிறது.

பஶ்சிம ஸந்த்யை (அந்தி மாலை) மக்களுடைய வெளிப்புறத்திலுள்ள தாபத்தைப் போக்குகிறது.

பீதாம்பரம் பஶ்சிம ஸந்த்யை போல் மக்களுடைய தாபத்ரயத்தை- ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் என்ற மூன்று தாபங்களையும் - போக்குகிறது என்று அருளிச் செய்கிறார் ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன்.

இதுவரை மீண்டும் திருப்பீதாம்பரத்தின் அழகை ஆழ்வார் அநுபவித்தபடியை நாமும் அநுபவித்தோம். அதற்குமேல் உள்ள திருநாபியின் அழகை அநுபவிக்கிறார் ஆழ்வார். 'அதன்மேல் அயனைப் படைத்ததோரெழில் உந்தி' என்று.

எம்பெருமானாலே நியமிக்கப்பட்டு ஜகத்தை ஸ்ருஷ்டிப்பவன் சதுர்முக ப்ரஹ்மா. அவனையும் படைத்த பெருமையைப் பெற்றுள்ளது எம்பெருமானுடைய திருநாபிக்கமலம். இந்தப் பெருமை - மேன்மை எம்பெருமானுடைய மற்றைய அவயவங்களுக்குக் கிடையாது.

இந்தப் பெருமையை 'எழில் உந்தி என்று உந்திக்கு 'எழில்' என்ற அடைமொழி (விஶேஷணம்) தந்து விளக்குகிறார்.

சதுர்முகனைப் பெற்றதால் அழகுடையதாயிருக்கிறது என்கிறார்.

உலகில் குழந்தை பெறுவதால் பெண்களுடைய அழகு குறைந்து விடும் என்று சொல்லுவதுண்டு.

ஒருவன் மற்றொருவன் மீது கொண்டுள்ள த்வேஷம் (பகைமை) அவனுடைய மரணம் வரை தான் தொடரும். பகைக்கு விஷயமானவன் மரணம் அடைந்து விட்டால் அவன்மீது அந்த ஒருவன் கொண்டுள்ள பகையும் போய்விடும். பெண்களின் அழகு அவள் பிள்ளை பெறும் வரை தான் நீடிக்கும். ப்ரஸவித்த பிறகு அவளுடைய அழகும் போய்விடும். தம்பதிகளிடையே உண்டாகும் ப்ரணய கோபம் (ஊடலினால் உண்டாகும் கோபம்) பிறகு உண்டாகும் அன்பினால் போய்விடும். ஒருவனுடைய கௌரவமும் அவன் பிறரை யாசிக்காதவரையில் தான். பிறரை ஏதாவது ஒன்று யாசித்தால் யாசிப்பவனுடைய கௌரவம் போய்விடும் என்கிறார் ஸ்ரீராமன் ஸ்ரீ ராமாயணத்தில் யுத்த காண்டத்தில் ராவணன் மீது கோபம் கொண்டுள்ள விபீஷணனை நோக்கி.

தமையன் மீது கோபம் கொண்டுள்ள ஸ்ரீ விபீஷணனுக்கு அவன் தமையனான ராவணன் இறந்த பிறகும் கோபம் கூடாது என்பதை உணர்த்த இத்தனை உதாஹரணங்கள்.

ப்ரஸவத்திற்குப் பின் அழகு அழியும் என்பதும் இந்த உதாஹரணங்களில் ஒன்றாகும்.

இதன்படி சதுர்முகனைப் பெற்ற பிறகு எம்பெருமான் நாபிக்கு- நாபீகமலத்துக்கு அழகு குறைய வேண்டியிருக்க அவ்வாறின்றி அதிகமாக இருக்கிறது அழகு என்கிறார்கள் உரையாசிரியர்கள்.

உலகத்தில் உத்பாதகருடைய (பெற்றவருடைய) அழகு ப்ரஸவாந்தமாயிருக்கும் (ப்ரஸவத்திற்குப் பின் முடிவதாக-





அழிவதாயிருக்கும்). இவனை (சதுர்முகனை) உண்டாக்கின பிறகு ஒளியும் 'அழகும்' மிக்கதத்தனை.

ஓர் எழில் உந்தி: உந்தி கொப்பூழ் (தொப்புள்) இது நன்கு சுழிந்து ஆழ்ந்து அழகாக உள்ளது. இதை வர்ணிக்கிறார் கூரத்தாழ்வான் ஸ்ரீ வரதராஜஸ்தவத்தில் பின்வருமாறு:-

**सौन्दर्याख्या सरिदुरसि विस्तीर्य मध्यावरुद्धा**
**स्थानाल्पत्वाद् विषमगतिजावर्तगर्ताभनाभिः ।**
**प्राप्य प्राप्तप्रथिमजघनं विस्तृता हस्तिनाथ!**
**स्रोतोभेदं भजति भवतः पाददेशापदेशात् ॥५५॥**

**(ஸௌந்தர்யாக்யா ஸரித் உரஸி விஸ்தீர்ய மத்யாவருத்தா**
**ஸ்தாநால்பத்வாத் விஷம கதிஜாவர்த்த கர்த்தாபநாபி: ।**
**ப்ராப்ய ப்ராப்த ப்ரதிம ஜகநம் விஸ்த்ருதா ஹஸ்திநாத!**
**ஸ்ரோதோ பேதம் பஜதி பவத: பாததேஶாப தேஶாத் ॥ ௫௫ ॥**

ஹே! ஸ்ரீ வரதராஜ! உம்முடைய திருமேனி முழுவதும் ஸௌந்தர்யம் (அழகு) ஒரு பேராறு போல் ஓடுகிறது. இது திருமுடி முதல் திருவடிவரை உள்ளது. திருமுடி என்னும் மலையிலிருந்து உண்டாகிப் பெருகுகிறது இந்த அழகுப் பேராறு. பெரிய தாழ்வரை போல் அகன்றுள்ள உம்முடைய திருமார்பிலே வந்து குதித்து அகன்று பரவுகின்றது. அங்கிருந்து கீழ்நோக்கி இறங்கும் போது உம்முடைய இடைப் பகுதி (இடுப்புப் பகுதி) சிறுத்திருப்பதால் அங்கே சுருண்டு ஓடிவரும்போது ஆழ்ந்து வட்டமாய் அந்த அழகுப் பேராற்றின் நடுவே விளங்கும் நீர்ச் சுழல் போல் விளங்குகிறது உம்முடைய கொப்பூழ்.

அதற்குக் கீழே இந்த அழகுப் பேராறு திருக்கால்கள் என்ற வாய்க்கால்களாக பிரிந்து ஓடுகிறது என்று. ஆக அழகு வெள்ளத்தின் நடுவே உண்டாகும் நீர்ச் சுழல்போல் விளங்குகிறது எம்பெருமானுடைய கொப்பூழ் என்றபடி.

ஸ்வாமி ஸ்ரீ தேஶிகனும் பகவத்யாநஸோபாநத்தில் ஸ்ரீ ரங்கநாதனுடைய திருநாபியை இவ்வாறே- அதாவது ஆற்றின் நடுவே விளங்கும் நீர்ச்சுழிபோல் இருக்கிறது என்று வர்ணித்துள்ளார்.

இந்த நீர்ச்சுழி மிகுந்த ஆழம் உடையதாயிருக்கும். தன்னிடத்தில் அகப்பட்டவர்களைத் தன்னிடத்திலேயே சிக்க வைத்து விடும். இந்தத் திருநாபி என்ற சுழியும் மிக்க ஆழம் உடையது. இதன் அழகில் ஈடுபட்டவரைத் தன்னிடத்திலேயே சிக்க வைக்கும் பேரழகுடையது.

ஸ்ரீ ஆண்டாளும் 'கொப்பூழில் எழு கமலப் பூ அழகர்' என்று எம்பெருமானுடைய நாபீகமலத்தை வர்ணித்துள்ளாள்.

இப்படிப்பட்ட எம்பெருமானுடைய சிவந்த ஆடை, அது சூழப்பெற்றும் சதுர்முகனைப் படைத்தும் பெருமையுடன் விளங்கும் திரு நாபீகமலம் இவற்றில் அடியேனுடைய சிந்தை சென்று படிந்துள்ளது என்று திருப்பாணாழ்வார் அருளுகிறார்.

ஸ்வாமி நம்மாழ்வார் தம் நெஞ்சை நோக்கி 'மருடியேலும் விடேல் கண்டாய் நம்பி பற்பநாபனையே' என்று அருளுகிறார். அதாவது 'ஏ நெஞ்சமே! நீ எம்பெருமானுடைய பெருமையையும் உன்னுடைய தாழ்வையும் நினைத்து மருண்டாலும் (அஞ்சினாலும்) கூட அழகனான நம் பத்மநாபனை விட்டு அகலாதே. அவனையே சென்று அடைவாயாக' என்று அருளிச் செய்கிறார்.

திருப்பாணாழ்வார் இந்தத் திருநாபியில் ஈடுபட்ட தன்னை அடியேன் என்கிறார். காரணம் என்ன தெரியுமா? எம்பெருமான் யாவருக்கும் ஸ்வாமி- நாம் அனைவரும் அவனுக்கு ஶேஷர்கள் - தாஸர்கள் என்று ஶாஸ்த்ரம் கொண்டு அறியவில்லை. அந்த நாபியின் அழகு இவ்வாறு பேசும்படிச் செய்தது என்பது ஆழ்வார் திருவுள்ளம்.





இந்தத் திருநாபீகமலத்தின் பெருமை மிக அதிகமானது. உலகத்தைப் படைத்தல் போன்ற ஒரு பதவியில் இருக்கும் ப்ரஹ்மா முதலானவர்களை - அஹங்காரிகளை உண்டு பண்ணும் இந்தத் திருநாபீகமலம். ஆனால் அதே ஸமயம் எம்பெருமானுடைய அழகுக்குத் தோற்று அஹங்காரம் ஏதுமின்றி அடியேன் (தாஸன்) என்று இருப்பவர்களை அழிக்கும், தன் வயமிழக்கச் செய்து அவர்களை அப்படியே அழித்துவிடும். தன் வஶமாக்கிக் கொள்ளும். இப்படிப்பட்ட திரு நாபீகமலத்தை ஸேவித்ததுமே திருப்பாணாழ்வார் அடியேன் என்கிறார்.

இதற்குச் சான்றாக ஒரு கதையைக் காட்டுகிறார் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்:

'பிள்ளை அழகிய மணவாளர்' அரையர் என்பவர் ஒருவர் ஸ்ரீ ரங்கநாதனுக்குத் திருவாய்மொழி விண்ணப்பம் செய்பவர் இருந்தார். அவர் ஒரு ஸமயம் ஸ்ரீ ரங்கநாதனிடம் சென்று அடியேன் திருவேங்கடமுடையானை ஸேவித்து வர வேண்டும் என்று விரும்புகிறேன். நியமநம் ஆகவேண்டும் - அநுமதிதர வேண்டும் என்று ப்ரார்த்தித்தார். இதைக் கேட்டதும் ஸ்ரீ ரங்கநாதனுக்கும் கொஞ்சம் அஸூயை வந்து விட்டது. நம்மிடமே இருந்து கொண்டு நமக்கே திருவாய்மொழி பாடி வரும் இவர் எதற்காகத் திருவேங்கடமுடையானை ஸேவிக்கப் போக வேண்டும். நம்மிடமில்லாத அழகு அவரிடம் இருக்கிறதா! என்றெல்லாம் எண்ணினான். ஆனாலும் அதை வெளியில் காட்டவில்லை.

உடனே தன்னிடம் அநுமதி கேட்ட அரையரை நோக்கி 'சரி, நீர் திருமலைக்குப் போவதற்கு முன் 'அமலனாதிபிரான்' என்ற பத்துப் பாடல்களையும் என்னுடைய ஸந்நிதியில் என் எதிரில் மறுபடியும் ஒருமுறை இசையுடன் பாடி விண்ணப்பம் செய்யும்' என்று ஸ்ரீரங்கநாதன் நியமித்தான். அந்த அரையர் ஸ்வாமியும்

மிகுந்த பக்தியுடன் அமலனாதிபிரானைப் பாடி விண்ணப்பம் செய்து நின்றார். அதைக் கேட்டு மகிழ்ந்த ஸ்ரீ ரங்கநாதன் 'நீர் திருவேங்கடமுடையான் ஸந்நிதிக்குப் போனாலும் போகலாம், போகாமல் இருந்தாலும் இருக்கலாம். உம் இச்சையின்படிச் செய்யும் என்று சொன்னானாம்.

இதைக் கேட்ட அந்த அரையர் ஸ்ரீ ரங்கநாதனை ஸேவித்து விட்டு இனி நான் அங்கே (திருவேங்கட முடையான் ஸந்நிதிக்குப்) போகவில்லை. அங்கே காணக் கிடைக்கும் அழகை இங்கேயே கண்டு விட்டேன். ஆனால் இங்கே காணக்கிடைக்கும் அழகை அங்கே காணக் கிடைக்காது என்று திருவேங்கடம் செல்லாமல் நின்று விட்டாராம். இதற்கு என்ன காரணம் தெரியுமா? திருநாபீகமலத்தின் அழகு இவரை அவ்வாறு வஶீகரித்து விட்டமைதான் காரணம் ஆகும்.

இவ்விடத்தில் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் அருளியுள்ள ஸ்ரீ ஸூக்திகள்:-

'பிள்ளை அழகிய மணவாளர் அரையர் பெருமாள் திருவடிகளிலே புக்கு 'நாயன்றே! அடியேன் திருவேங்கடமுடையானைத் திருவடி தொழுது வரவேணும் என்று நினையா நிற்கிறேன்! என்று விண்ணப்பம் செய்ய 'வாரீர் அமலனாதிபிரானை ஒரு கால் இசை சொல்லிக் காணீர் என்று திருவுள்ளமாக; பின்னையும் ஒரு கால் இசையை விண்ணப்பம் செய்யக் கேட்டருளி' 'இனிப்போகிலும் போம்; இருக்கிலும் இரும்' என்று திருவுள்ளமாயினார். முதலில் கண்படுவது திருநாபீகமலமிறே.

இப்பாட்டில் பெரிய பெருமாள் பக்கலிலே திருவேங்கடமுடையானான தன்மையும் உண்டு என்கிறது' என்று.





ஸ்ரீரங்கத்தில் ஶயநத்திருக்கோலத்தில் பெரிய பெருமாளையும் (மூலவரையும்), நின்ற திருக்கோலத்தில் நம்பெருமாளையும் (உத்ஸவரையும்) ஸேவிக்கலாம்.

திருமலையில் மூலவர் உத்ஸவர் இருவரையும் நின்ற திருக்கோலத்தில் தான் காணலாம்.

ஸ்ரீரங்கத்தில் நின்ற திருக்கோலத்தில் எழுந்தருளியிருக்கும் நம்பெருமாளை ஸேவித்துத் திருவேங்கடமுடையானை ஸேவித்ததாக எண்ணி மகிழலாம். ஆனால் அங்கு ஶயநத்திருக்கோலத்திலிருக்கும் பெரிய பெருமாளை நினைவுறுத்தும் திருக்கோலம் ஏதும் இல்லை. இந்தத் திருநாபீகமலத்தை அங்கு ஸேவிக்க வாய்ப்பே இல்லையன்றோ! இதை உணர்ந்த காரணத்தினால் தான் அரையர் திருவேங்கடம் செல்லவில்லை. இப்படி எல்லோரையும் வஶீகரிக்கவல்லது ஸ்ரீ ரங்கநாதனுடைய திருநாபீகமலம்.

---

**மந்திபாய் வடவேங்கடமாமலை ✱ வானவர்கள்**
**சந்தி செய்யநின்றான் அரங்கத்தரவினணையான் ✱**
**அந்திபோல்நிறத்தாடையும் அதன்மேலயனைப்படைத்த**
**தோரெழில் ✱**
**உந்திமேலதன்றோ அடியேனுள்ளத்தின்னுயிரே (3)**

# 4. திருவயிறும் உதர பந்தமும்

नाभीकमलमत्येति कुक्षिर्भगवतो भृशम् ।
ब्रह्माणमसृजत् पद्मं कुक्षिर्धत्ते तदप्यहो ।।

धत्ते पद्मं तमेवैकं कुक्षिस्तु निखिलं जगत् ।
अतः कुक्षेरतिशयः पाणनाथं वशेऽकरोत् ।।

(நாபீகமலம் அத்யேதி குக்ஷிர் பகவதோ ப்ருஶம் ।
ப்ரஹ்மாணம் அஸ்ருஜத் பத்மம் குக்ஷிர்தத்தே ததப்யஹோ ॥

தத்தே பத்மம் தமேவைகம் குக்ஷிஸ்து நிகிலம் ஜகத் ।
அத: குக்ஷேரதிஶய: பாணநாதம் வஶேऽகரோத் ॥

எம்பெருமான் திருநாபீகமலத்தை வென்றுவிட்டது எம்பெருமானுடைய திருவயிறு. அவனுடைய நாபீகமலம் ப்ரஹ்மாவைப் படைத்ததால் பெருமை பெற்றது. ஆனால் அந்த நாபீகமலத்தையும் தாங்கி நின்று அதற்கு ஆதாரமாயிருப்பதால் அதைவிடச் சிறந்து விளங்குகிறது எம்பெருமானுடைய திருவயிறு.

நாபீகமலம் ப்ரஹ்மா ஒருவனை மட்டும்தான் தாங்கி நிற்கிறது. ஆனால் எம்பெருமானுடைய திருவயிறு உலகம் முழுவதையுமே தாங்கி நிற்கிறது. ஆகவே திருநாபீகமலத்தையும் விடச் சிறந்து விளங்குகிறது எம்பெருமானுடைய திருவயிறு. இந்தச் சிறப்பைக் காட்டித் திருப்பாணாழ்வாரைத் தன் வஶமாக்கிக் கொண்டது இந்தத் திருவயிறு.

★★★★

சென்ற இதழில் எம்பெருமானுடைய திருநாபீகமலத்தை ஆழ்வார் அநுபவித்த வகையை ரஸித்தோம். இந்த இதழில் எம்பெருமான் திருவயிற்றையும் அதன்மேல் சாற்றப்பட்டுள்ள





திருப்பட்டயத்தையும் திருப்பாணாழ்வார் அநுபவிக்கும் வகையை ரஸிப்போம்.

முதல் பாட்டில் 'ஆதி' என்ற பதத்தினால் ஶ்ரிய: பதியான எம்பெருமான் ஜகத்காரணம் என்று அருளினார் திருப்பாணாழ்வார். அந்தக் காரணமாயிருப்பவன் ஶ்ரிய: பதியான எம்பெருமான்தான் என்பதைச் சுட்டிக் காட்டுகிற பெருமை தனக்கிருக்கிறது என்பதைக் காட்டி அந்தத் திருநாபீகமலம் ஆழ்வாருடைய மனத்தைத் தன்னிடத்தில் இழுத்துக் கொண்டது. இவ்விஷயம் மூன்றாவது பாசுரத்தில் விளக்கப்பட்டது. நான்காவதான இந்தப் பாசுரத்தில் தன்னுடைய உள்ளம் எம்பெருமானுடைய திருவுதரத்திலும் அதைச் சுற்றியுள்ள உதரபந்தநம் எனப்படும் பட்டயத்திலும் சென்று சேர்ந்தது என்கிறார்.

ஆழ்வாருடைய திருவுள்ளம் தாமாக உந்தியைவிட்டுத் திருவயிற்றின் அநுபவத்திற்குப் போகவில்லை. அதுவே வலுவில் வந்து ஆழ்வாருடைய திருவுள்ளத்தை இழுத்துக் கொண்டு போயிற்று என்கிறார் இதில். திருநாபீகமலத்தைக் காட்டிலும் இதற்கு (திருவயிற்றுக்கு) அதிகமான பெருமை என்ன இருக்கிறது? திருநாபீகமலம் அயனைப் படைத்து அதனால் அழகாக இருக்கிறது. இதற்கு என்ன பெருமை? என்று நம்மைச் சிந்திக்க வைக்கிறது.

எம்பெருமானுடைய உதரத்தையே இவ்விஷயம் பற்றிக் கேட்டுவிடுவோமே! இதற்கு எம்பெருமானுடைய திருஉதரமே பதில் தருகிறது:

'நாபீகமலம் நான்முகனைத்தானே படைத்தது. அந்த நாபீகமலத்திற்கு ஆதாரம் எது? அதாவது அதைத் தாங்குவது யார்? நான் தானே! நான் அதைத் தாங்காவிடில் அது எங்கு எப்படி உயர்ந்து நிற்கும்? என்னாலே தாங்கப்படுகிற திருநாபீகமலத்தின் பெருமையை மட்டும் பார்க்கிறீர்களே! அதற்கு ஆதாரமா

யிருக்கும் என்னுடைய பெருமையையும் பாருங்கோள்' என்கிறது திருவயிறு.

திருவயிற்றுக்குப் பெருமை மேலும் உள்ளது. எம்பெருமான் திருவயிற்றில் மூன்று மடிப்புக்கள் உள்ளன. உலகிலும் புஷ்டியுள்ள ஶரீரத்தில் மடிப்புக்கள் விழுவதைக் காண்கிறோம். எம்பெருமான் திருவயிற்றில் மூன்று மடிப்புக்கள் உள்ளன. அந்த மடிப்புக்கள் மூன்றாயிருப்பதற்கு என்ன காரணம் தெரியுமா? எம்பெருமான் திருவயிற்றில் மூன்று மூன்றான வஸ்துக்கள் உள்ளன. அவற்றை எண்ணிக் காட்டுகின்றன இந்த மூன்று மடிப்புக்கள். அந்த மூன்று மூன்றான வஸ்துக்கள்:- மூன்று வகைப்பட்ட சேதநர்கள். பத்தர்-முக்தர் - நித்யஸூரிகள் என்று மூவகைப்படுவர் சேதநர்கள். ஶுத்தஸத்த்வம், ப்ரக்ருதி, காலம் என்று மூவகைப்படும் அசேதநங்கள். இவை எம்பெருமான் திருவயிற்றினுள் இருக்கின்றன ப்ரளய காலத்தில். ஆக எம்பெருமான் திருவயிறு தன்னிடத்தில் மூன்று மடிப்புக்களைக் கொண்டு தன் உள்ளே இருக்கும் மூவகைப் பொருள்களை எண்ணிக் காட்டுவதன் மூலம் இந்த எம்பெருமான்தான் ப்ரளய காலத்தில் உலகம் அனைத்தையும் என்னுள் (திருவயிற்றினுள்) வைத்து ரக்ஷிக்கிறான். நான்தானே (திருவயிறுதான்) இவற்றை ப்ரளயம் கொண்டு போகாதபடி ரக்ஷிக்கிறேன். ஸ்ருஷ்டி காலத்தில் நானே தான் இவற்றை வெளியில் விடுகிறேன். இதைத்தான் சதுர்முக ப்ரஹ்மா ஸ்ருஷ்டிக்கிறான் என்று உலகோர் அவனுக்குப் பெருமை தருகின்றனர். உண்மையில் அந்தப் பெருமை யாருக்கு? எனக்குத்தானே!

இதை நன்கு அறிந்த ஸ்ரீ ஆளவந்தார் கேள்வி கேட்கிறாரே-

**कस्योदरे हरविरिञ्चिमुखः प्रपञ्चः?** (கஸ்யோதரே ஹரவிரிஞ்சிமுக: ப்ரபஞ்ச:?) ப்ரஹ்ம ருத்ரமுகமான ஸகல பதார்த்தங்களும் மஹாப்ரளயத்திலே யாருடைய வயிற்றிலே லயித்திருக்கின்றன? என்று.





திருநாபீகமலத்தைத் துதி செய்த ஸ்ரீ பராஶரபட்டரே என்னையும் (எம்பெருமானுடைய திருவயிற்றையும்) துதி செய்திருக்கிறார். அதையும் கேளுங்கோள்.

முன் கூறிய வகையில் நான் என்னுள்ளே இருக்கும் மூவகைப்பட்ட அசேதநங்களையும் சேதநங்களையும் கணக்கிட்டு உலகுக்குக் காட்டி எம்பெருமானுடைய பெருமையை வெளியிடுகிறேன்.

நாபீகமலம் சதுர்முக ப்ரஹ்மாவை மட்டுந்தானே தாங்குகிறது? நான் மூவகை சேதநங்களையும், அவ்வாறே மூவகைப்பட்ட அசேதநங்களையும் தாங்கி நிற்கிறேன். இதனால் எம்பெருமானுடைய - மேன்மையை (பரத்வத்தை) வெளிப்படுத்துகிறேன். இது மட்டுமன்று, எம்பெருமானுடைய - எளிமையை ஸௌலப்யத்தையும் காட்டுகிறேன். அன்று கண்ணன் வெண்ணெய் திருடியதற்காக ஸ்ரீ யஶோதைப் பிராட்டி அவனைத் தாம்பு (கயிறு) கொண்டு கட்டினாளே- பெருமாள் திருமேனியில் எந்த இடத்தில் கட்டினாள் தெரியுமா? என் மீதுதானே (திருவயிற்றின் மீது தானே) கட்டினாள். அதன் தழும்பு இப்போதும் அதாவது ஸ்ரீ ரங்கநாதனாக அர்ச்சாரூபத்தில் இருக்கும்போதும் என்னிடம் இருக்கிறது. அதை மறைப்பதற்காகத்தான் ஸ்ரீ ரங்கநாதன் இப்போதும் உதரபந்தநம் - திருவயிற்றுப் பட்டை என்ற ஒரு திருவாபரணத்தை அணிந்திருக்கிறான். அதைச்சற்று நகர்த்திப் பார்த்தால் அன்று ஸ்ரீ யஶோதைப் பிராட்டி என்மீது கயிறு கட்டியதனால் ஏற்பட்ட வடு இன்றும் தெரியும். இதனால் எம்பெருமான், தன்னை ஆஶ்ரயித்தவர்கள் விஷயத்தில், அவர்கள் தன்னைக் கட்டவும் அடிக்கவுமாம்படி ஸுலபனாய் இருக்கிறான் என்பது நன்கு தெரிய வருகிறதன்றோ?

இப்படி மூன்று மடிப்புக்களால் எம்பெருமானுடைய பரத்வத்தை - பெருமையையும் - தாம்பின் தழும்பினால் அவனு

டைய ஸௌலப்யத்தையும் வெளிப்படுத்தி வருகிறேன். இதற்காகத்தான் எனக்குப் பட்டம் கட்டியுள்ளார் பெரியோர்கள். உலகிலும் ஸமர்த்தர்களாக இருப்பவருக்குப் பட்டம் கட்டுவதைப் பார்த்து வருகிறோம் அன்றோ?

இதைப் பரமரஸிகரான ஸ்ரீ பட்டர் என்ற ஆசார்யர் அருளிச் செய்துள்ளார் ஸ்ரீ ரங்கராஜஸ்தவத்தில் பூர்வ ஶதகத்தில் 115வது ஶ்லோகத்தில். இப்போது அர்த்தத்தைப் புரிந்து கொண்டு விட்டோம். இனி இதை விளக்கும் ஶ்லோகத்தையும் அறிவோமாக:-

त्रिविधचिदचिद्वृन्दं तुन्दावलम्बि वलित्रयं
विगणयदिवैश्वर्यं व्याख्याति रङ्गमहेशितुः ।
प्रणतवशतां ब्रूते दामोदरत्वकरः किणः
तदुभयगुणाकृष्टं पट्टं किलोदरबन्धनम् ॥

(த்ரிவிதசிதசித்ப்ருந்தம் துந்தாவலம்பி வலித்ரயம்
விகணயதிவைஶ்வர்யம் வ்யாக்யாதி ரங்கமஹேஶிது: ।
ப்ரணதவஶதாம் ப்ரூதே தாமோதரத்வகர: கிண:
ததுபயகுணாக்ருஷ்டம் பட்டம் கிலோதரபந்தநம் ॥

ஆக இப்படிப்பட்ட மேன்மை எனக்கு மட்டும் தான் உள்ளது என்று இந்தப் பெருமையைக் காட்டித் திருப்பாணாழ்வாருடைய திருவுள்ளத்தைத் தன் பக்கம் இழுத்துக் கொள்கிறது எம்பெருமானுடைய திருவயிறும் அதன் மீது சாற்றியுள்ள உதரபந்தநமும்.

இவ்விஷயத்தைத்திருப்பாணாழ்வாரே அருளிச் செய்வதாக ஸ்ரீ அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் தம்முடைய உரையிலே அருளிச் செய்கிறார். இதை அவருடைய ஸ்ரீ ஸூக்திகளைக் கொண்டே அநுபவிப்போம்.





''தம் (திருப்பாணாழ்வாருடைய) திருவுள்ளம் திருநாபீ கமலத்திலே சுழியாறு படுகிறபடியை (சுற்றிச் சுற்றி வருவதை)க் கண்டு 'திருநாபீகமலத்துக்கு ஆஶ்ரயமான திருவயிறும், இந்தத் திருநாபீகமலத்துக்கு வெறும் ப்ரஹ்மா ஒருவனுக்கு இருப்பிடமான மேன்மையும் அழகும் அன்றோ உள்ளது. இதற்கு ஆஶ்ரயமான நம்மை (திருவயிற்றை)ப் பார்த்தால் பத்த-முக்த - நித்ய ரூபமான த்ரிவித சேதநர்க்கும், த்ரிகுணாத்மகமாயும், (ப்ரக்ருதியாயும்), ஶுத்த ஸத்த்வாத்மகமாயும்- அதாவது நித்ய விபூதியாயும், ஸத்த்வ ஶூந்யமாயும் (காலமாயும்) உள்ள அசேதந வர்கத்துக்கும் ஆஶ்ரயமான மேன்மையும் ஆஶ்ரிதர்க்குக் கட்டவும் அடிக்கவுமாம்படி எளியோமான ஸௌலப்யத்தையும் (நீர்மையையும்) உடையோமான ஏற்றத்தாலே பட்டங்கட்டி அன்றோ நாமிருப்பது, என்று தனக்கு (திருவயிற்றுக்கு) திருநாபீ கமலத்திலுமுண்டான ஏற்றத்தைக் காட்டி திருநாபீகமலத்திலே ஆழங்கால் படுகிற என்னெஞ்சைத் தன் பக்கலிலே வர இசிக்க (இழுக்க), அத்திருவயிற்றை ஆஶ்ரயமாகப் பற்றி நிற்கிற திரு உதரபந்தம் தன் பக்கலிலே வர ஈர்த்து மேலிட்டு நின்று தன் (திருப்பாணாழ்வாருடைய) திருவுள்ளத்தில் ஸ்வைர (தன்னிஷ்டப்படியான) ஸஞ்சாரம் பண்ணுகிறபடியைச் சொல்லுகிறார்.

என் உள்ளத்துள் திருவயிற்று உதரபந்தம் உலாகின்றது என்றதால் இந்த அர்த்தம் கிடைக்கிறது.

ஸ்ரீ ரங்கநாதன் திருவயிற்றிலே அன்று ஸ்ரீ க்ருஷ்ணாவதாரத்தில் ஸ்ரீ யஶோதை பிராட்டி கட்டின தாம்புக் கயிற்றின் தழும்பு இன்றும் இருக்கிறது. அதை மறைப்பதற்காகத்தான் தங்கத்தினால் திருவயிற்றுப்பட்டை என்று சொல்லப்படும் உதரபந்தநம் என்ற திருவாபரணம் சாற்றப்பட்டுள்ளது என்பதற்கு ஒரு ஐதிஹ்யம் - பூர்வாசார்யர்கள் சொல்லிவரும் ஒரு கதை உண்டு:

திருப்பாவை 5ம் பாட்டில் 'தாமோதரனைத் தூயோமாய்' என்ற இடத்தில் ஆறாயிரப்படி வ்யாக்யாநத்தில் அழகிய மண வாளப் பெருமாள் நாயனார் - 'பணைகளிலே தாவினவாறே உடை நழுவத் தழும்பைக் கண்டு இடைச்சிகள் சிரித்தார்கள். அத்தழும்பு தோன்றாமைக்கிறே நம்பெருமாள் கனையம் மேல் சாத்து சாத்துகிறது, என்று ஜீயர் அருளிச் செய்துள்ளார்,' என்று கூறியுள்ளார்.

இதை ஒரு பெரியவர் விளக்கினார் தம் உபந்யாஸத்தில். ஒரு வெள்ளிக்கிழமை அன்று ஸ்ரீ ரங்கநாதனும் ஸ்ரீ ரங்கநாய்ச்சியாரும் மங்களஸ்நாநம் செய்து பக்தர் ஒருவர் பரிவுடன் ஸமர்ப்பித்த பட்டாடையை அணிந்தனர்.

மாலை சந்த்ரபுஷ்கரிணீ கரையில் இருவரும் உல்லாஸமாக விளையாடிக் கொண்டிருந்தனர். அப்பொழுது அங்குள்ள புன்னை மரத்தில் நிறையப் பூக்கள் பூத்து வாஸனையை வீசிக் கொண்டிருந்தன. ஸ்ரீ ரங்கநாய்ச்சியார் அந்தப் புஷ்பத்தின் மிகுந்த மணத்தில் மனத்தைச் செலுத்தித் தன் பர்த்தாவான ஸ்ரீ ரங்கராஜனைப் பார்த்து 'இந்த மரத்தின்மீது ஏறி எனக்காக உம்முடைய திருக்கைகளாலே புஷ்பங்கள் பறித்துத் தாரும்' என்று வேண்டிக் கொண்டாள்.

பெண்டாட்டியின் வேண்டுகோளை மறுப்பவன் எவனும் இருப்பதில்லையன்றோ! ஸ்ரீ ரங்கராஜனும் தன் பத்நியான ஸ்ரீ ரங்கநாய்ச்சியார் வேண்டுகோளை ஏற்று உடனே மரத்தின் மீது ஏறிக் கிளைகளின் நுனியில் புஷ்பங்களைக் கைநீட்டிப் பறிக்கலானாள். அவன் உடுத்திருந்தது புதிய பட்டு வஸ்த்ரமாதலால் அது சற்றுத் திருவரையிலிருந்து (இடுப்பிலிருந்து) நழுவியது. அந்த ஸமயம் அங்கே நாலைந்து இடைப் பெண்கள் மாடுகள் மேய்த்துக் கொண்டிருந்தனர். அவர்கள் கண்ணில் ஸ்ரீ ரங்கராஜனுடைய திருவயிற்றின் அடியில் அன்று ஸ்ரீ யஸோதைப் பிராட்டி





கட்டின கட்டினுடைய தழும்பு பட்டது. (இவர்கள் இந்த வரலாற்றைக் கேட்டிருக்கிறார்கள்.) (ரங்கநாதன் தானே கண்ணன். இந்தத் திருப்பாணாழ்வாரே கூட மேலே 'கோவலனாய் வெண்ணெய் உண்ட வாயன் அண்டர்கோன் அணி அரங்கன்' என்று ஸ்ரீ ரங்கநாதனையேதான் கண்ணனாக அநுபவித்துள்ளார்.) ஸ்ரீ ரங்கநாதன் திருவயிற்றின் அடியில் இருந்த தழும்பைப் பார்த்ததும் அவர்கள் கை தட்டிச் சிரித்து விட்டனர்.

ஸ்ரீ ரங்கநாய்ச்சியாருக்கு அந்தச் சிரிப்பினால் ஸ்ரீ ரங்கநாதன் மீது ஸந்தேஹம் வந்து விட்டது. அது என்ன வடு என்று கேட்டாள். பதில் சொல்லவில்லை. தான் பால்யத்தில் செய்த தவறுகளையெல்லாம் ஸ்ரீ ரங்கநாய்ச்சியாரிடம் சொல்லாமலேயே, தான் மிகப் பெரியவன் என்று அவளைக் கல்யாணம் செய்து கொண்டுள்ளான். இப்போது வெண்ணெய் திருடியதால் அம்மா கட்டிய கட்டின் தழும்பு என்றால் அவள் என்ன நினைப்பாளோ என்று இவள் கேட்ட கேள்விக்குச் சரியான பதில் சொல்லாமல் மழுப்பி விட்டான். ஆனால் ஸ்ரீ ரங்கநாய்ச்சியார் இத்துடன் விடவில்லை. அந்த இடைப் பெண்களிடமே சென்று என்னுடைய பர்த்தாவைக் கண்டு கை தட்டிச் சிரித்தீர்களே! அதற்கு என்ன காரணம்? கூறுங்கள் என்று துருவித் துருவிக் கேட்க அவர்கள் உண்மையைக் கூறிவிட்டு, இதைப் பற்றி யாரும் உங்களுக்குக் கல்யாணத்திற்கு முன் சொல்லவில்லையா! உன் கணவன் ஒரு 'நவநீத சோரன்' என்று கிளப்பியும் விட்டார்கள்.

அவ்வளவுதான், ஸ்ரீ ரங்கநாய்ச்சியாருக்குக் கோபம் உண்டாகி ஸ்ரீ ரங்கநாதனைப் பார்த்து இப்படிப்பட்டவரா நீர்? கல்யாணத்திற்கு முன்னமே இதைப் பற்றிச் சொல்லியிருக்க வேண்டாமா? என்றெல்லாம் கடிந்து கொண்டாள்.

பிறகு ஸ்ரீ ரங்கநாதன் அவளிடம் அவதார ரஹஸ்யத்தை எல்லாம் எடுத்துச் சொல்லி ஸ்ரீ யஸோதைப்பிராட்டி முன்பு தவம்

செய்து என்னைக் கட்டி அணைத்து முத்தமிட்டு வேண்டியபடி என்னைக் குழந்தையாகக் கொண்டு அநுபவிக்க வேண்டும் என்று வரம் கேட்டுக் கொண்டாள். அதற்காகத்தான் இவ்வாறெல்லாம் அவள் கட்டும்படி நின்றேன். அவள் மட்டுமன்று, என்னிடம் பக்தி கொண்டவர்கள் யாராயிருந்தாலும் அவர்களுக்கு மிக மிக எளியவனாய் இருப்பேன்.

நான் தாம்பினால் கட்டுண்டதை ஆழ்வார்கள் அனைவருமே கொண்டாடியுள்ளார்கள். ஸ்வாமி ஸ்ரீ நம்மாழ்வார் 'எத்திறம் உரலினோடு இணைந்திருந்து ஏங்கிய எளிவே' என்று இந்தக் கட்டுண்ட கதையை நினைத்து ஆறுமாத காலம் மூர்ச்சித்து விட்டார். அந்த இடைப் பெண்களின் வார்த்தையைக் கேட்டு நீ இவ்வாறு தவறாக நினைத்துவிட்டாயே! என்று விளக்கம் தந்து அவளை ஸமாதாநம் செய்தான் ஸ்ரீ ரங்கநாதன். அவளும் கோபம் தீர்ந்து மகிழ்ந்து அவனை ஆலிங்கநம் செய்து கொள்ள இருவரும் திருக்கோயிலுக்குள் எழுந்தருளிவிட்டனர்.

அன்றிரவு ஸ்ரீ ரங்கநாதன் யோசித்துப் பார்த்தான். இந்தத் தழும்பு இனி யார் கண்ணிலும் படாதபடி இருக்க என்ன செய்ய லாம்? தற்போது நடந்ததுபோல் - அதாவது பிராட்டி பிறர் பேச்சைக் கேட்டு கலங்கியதுபோல் யாரும் கலங்கக் கூடாது என்று எண்ணித் தங்கத்தினால் ஒரு பெரிய பட்டையான ஒட்டி யாணம் - பட்டம் ஒன்றை பக்தர் ஒருவர் மூலம் பெற்று அணிந்து கொண்டான். அதுதான் இன்று 'உதரபந்தநம்' எனப்படுகிறது. உண்மையில் திருவயிற்றின் அடியிலுள்ள தழும்பை மறைப்ப தற்காகத்தான் அது என்று அந்தப் பெரியவர் சொன்னார்.

இந்தத் தழும்பு எம்பெருமானுடைய தோஷத்தைக் காட்ட வில்லை. எம்பெருமான் தன்னுடைய பக்தர்களுக்கு அதீநனாய் அவர்கள் கட்டவும் பிடிக்கவும்படி அவர்களுக்கு ஸுலபனா யிருப்பவன் என்பதைக் காட்டுகிறது.





ஆக சதுர்முகனை உண்டாக்கின திருநாபீகமலத்துக்கும் ஆதாரமாயிருப்பது, மூன்று மடிப்புக்களால் தன்னுள் (எம்பெரு மான் திருவயிற்றினுள்) மூன்று லோகங்களும் இருப்பதைக் காட்டுவது, தழும்பைப் பெற்றிருப்பது, ஆகியவற்றின் மூலம் எம்பெருமானுடைய ஸௌலப்யம், பரத்வம் இவைகளை எம்பெருமான் திருவயிறும் அதைச் சூழ்ந்துள்ள உதரபந்தநமாகிற பட்டமும் தானே காட்டுகின்றன. இந்தப் பெருமை திரு நாபீகமலத்துக்குக் கிடையாதன்றோ? இவற்றைக் காட்டித் திருப்பாணாழ்வாருடைய திருவுள்ளத்தைத் திருவயிறும் உதர ப்ந்தநமும் இழுத்துச் செல்கின்றன.

அமலனாதிபிரான் என்ற இந்த ப்ரபந்தத்தில் உள்ள ஒவ் வொரு பாசுரத்திலும் கடைசிப் பாதத்தை மட்டும்தான் நாம் இங்கு விவரித்து எழுதுகிறோம். அவயவங்களுடைய ஸௌந்தர் யத்தை அநுபவிப்பதுதானே நம்முடைய நோக்கு.

முழுப் பாசுரத்தையும் விவரிக்கப் புகுந்தால் அது பாரதம் போலாகும். ஆகவே தான் திரு அவயவங்களைக் குறிக்கும் பகுதியை விவரிப்பதோடு மட்டும் நாம் நிற்கிறோம்.

இப்படி ஆழ்வாருடைய திருவுள்ளத்தைக் கொள்ளை கொண்டது யாருடைய திருவயிறு தெரியுமா? அரங்கத்து அம்மா னுடையதுதான் என்பதை அரங்கத்து அம்மான் திருவயிறு என்று அருளிச் செய்கிறார்.

உபயவிபூதிநாதனாயிருக்கும் எம்பெருமான் ஸ்ரீரங்கத்திற்கு அம்மான் - ஸ்வாமி - என்று சொல்லும்படித் தன் வைபவத்தைக் குறுக்கிக் கொண்டான்- குறைத்துக் கொண்டான்.

எதற்காகத் தன் வைபவத்தைக் குறுக்கி-குறைத்துக் கொள்ள வேண்டும்? என்றால் ஸம்ஸாரிகளான நமக்காகத்தான்.

ஸ்ரீ வைகுண்டநாதனாய் - ஸ்ரீ வைகுண்டத்துக்கு நிர்வாஹக னாய் அங்கேயே இருந்தால் இந்த மாதிரி ஒவ்வொரு அவயவமாக நெருங்கிச் சென்று நம்மால் அநுபவிக்க முடியுமா? ஸம்ஸாரி களால் ஸ்ரீ வைகுண்டத்திற்கே செல்ல முடியாதே. ஆகையால் ஸம்ஸாரிகளான நம்மையெல்லோரையும் அநுக்ரஹம் செய்வதற் காகத்தான் அந்தப் பெருமையையும் உதறித்தள்ளிவிட்டுத் திருவரங்கத்து அம்மான் என்று எல்லோரும் சொல்லும்படி இங்கு வந்து படுத்தான்.

வ்யாக்யாநத்தில்:- ஸம்ஸாரிகளுக்காகக் கோயிலிலே (திருவரங்கத்திலே) சாய்ந்தருளி, தன்னுடைய ஸ்வாமித்வத்தை உதறிப்படுத்தவனுடைய திருவயிற்றுதரபந்தம், என்கிறார்.

எம்பெருமானுடைய திருவயிறு வெறுமனே ஆபரணம் ஏதுமின்றிக்கே இருக்கும்போதே மிக அழகியதாயிருக்கும்.

பராங்குஶ நாயகியான ஸ்வாமி நம்மாழ்வாரை வஶீகரித்த வயிறு எம்பெருமானுடையதாகும். திருக்குறுங்குடி நம்பியி னுடைய வயிற்றின் அழகிலே ஈடுபட்டு மோஹித்திருப்பவர் ஸ்வாமி நம்மாழ்வார். ''சிற்றிடையும், வடிவும், பாவியேன் முன் நிற்குமே'' என்று ஸ்வாமி நம்மாழ்வாருடைய திவ்யமான அநுபவம். சிற்றிடை இங்கே உதரத்தை- வயிற்றைக் குறிப்ப தாகக் கொள்ள வேண்டும்.

இப்படி ஏற்கெனவே அழகான திருவயிற்றுக்குத் திருவா பரணமாக உதரபந்தநத்தையும் (பட்டத்தையும்) சாற்றிவிட்டால் அழகு பன்மடங்காகிவிடுமன்றோ!

நல்ல குழந்தைகளைப் பெற்றால் அந்தப் பெற்ற வயிற் றுக்குப் பட்டம் கட்டுவதுண்டு அன்றோ? அம்மாதிரி இங்கு நான்முகனைப் பெற்ற இந்தத் திருவுதரத்திற்கு (திருவயிற் றுக்கு)ப் பட்டம் கட்டியபடி என்கிறார்கள் முன்னோர்கள்.





இப்படித் திருவயிற்றுக்கும் அழகு தரக்கூடிய இந்த உதர பந்தநம் தன்னுடைய நெஞ்சினுள் நிலைத்து நின்று உலாவு கின்றது என்கிறார் திருப்பாணாழ்வார் 'என்னுள்ளத்துள் நின்று உலாகின்றதே' என்று.

இது செய்த செயல்களைப் பாருங்கள். இந்தத் திருவயிற்று உதரபந்தம் என்னுடைய நெஞ்சம் திருப்பீதாம்பரத்திலும் செல்ல ஒட்டாதபடி அதைத் தடுத்து அதற்குமேல் உள்ள நாபீகமலத் திலும் என்னெஞ்சு செல்லாதபடித் தடுத்து அதிலிருந்து மீண்டு வரும்படி என்னெஞ்சை இழுத்துக் கொண்டது. பிறகு என்னெஞ் சம் அந்தத் திருநாபீகமலத்தில் ஈடுபடத் தொடங்கியது. அங்கும் நெஞ்சம் செல்ல ஒட்டாமல் அதைத் தடுத்து நிறுத்தித் தானே முன்வந்து என்னெஞ்சில் உலாகின்றது. தன்னுடைய பெருமை யெல்லாம் நன்கு தெரியும்படிப் பெரிய இடத்தில் ஒரு மத்தகஜம் செருக்குடன் உலாவுவது போல் உலாவுகின்றது என்கிறார் திருப்பாணாழ்வார்.

அணுவான தன்னுடைய நெஞ்சம் உதரபந்தநம் என்ற மத்த கஜம் உலாவுவதற்கேற்ற அகன்ற இடம் உடையது என்கிறார். உலாவ வேண்டும் என்றால் பெரிய-விஶாலமான இடத்தில் தானே முடியும்?

ஸ்வாமி நம்மாழ்வாரும் எம்பெருமான்தம்முடைய நெஞ்சத்தை வைகுந்த வான்நாடு போல் அதாவது ஸ்ரீ வைகுண்டம் என்னும் லோகம் போல் ஒரு நாடாக்கி அதில் குடி புகுந்து விட்டான். 'மாயப்பிரான் என் வல்வினை மாய்ந்து அற நேசத்தினால் நெஞ்சம் நாடு குடிகொண்டான்' என்று அருளியுள்ளார். இந்த முறையில் எம்பெருமானுடைய திருஉதரபந்தநம் என்னும் திருவயிற்றுப் பட்டம் என் நெஞ்சினுள்ளே வந்து உலாகின்றது என்கிறார்.

இனி ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் 'பரமபத ஸோபாநம்' என்ற ரஹஸ்யத்தில் முக்தன் பரமபதத்தில் எம்பெருமானைக் கிட்டி அவனுடைய திருவயிற்றை அநுபவிக்கும் வகையை அருளிச் செய்துள்ளார். அதையும் இங்கே அநுபவிப்போமாக. அங்குள்ள ஸ்ரீ ஸூக்திகள்:

'ப்ரளயாபத்துக்கள் வந்தால் ப்ரபஞ்சத்தையெல்லாம் உள்ளே வைத்து ரக்ஷிக்கும்படியான திரு உதரத்தைப் பார்த்து 'காரேழ், கடலேழ், மலை ஏழ், உலகுண்டும் ஆராவயிற்றான்' என்றபடி எம்பெருமானுடைய இந்தத் திருவயிறுதானே இந்த ப்ரபஞ்சத்தையெல்லாம் தன் உள்ளே வைத்து ரக்ஷிக்கிறது. இது மிகப் பெரிய இடம் உடையது.

எவ்வளவு சாப்பிட்டாலும் நிறையாத வயிறு. இப்படித் தானே ஆழ்வாருடைய அநுபவமும் உள்ளது.

ஸ்வாமி நம்மாழ்வார் 'காரேழ் கடலேழ் மலையேழ் உலகுண்டும் - ஆராவயிற்றான்' புஷ்கலாவர்த்தம் முதலான ப்ரஸித்தங்களான ஏழு மேகங்கள், ஏழு ஸமுத்ரங்கள், ஏழு மலைகள் இவற்றைக் கொண்ட உலகம் முழுவதையும் உண்ட போதும் த்ருப்தி அடையாதவன் எம்பெருமான் என்று அருளியுள்ளார்.

இங்கு ஒரு விசேஷம் அறிய வேண்டும். இவ்வளவையும் உண்டபோதும் எம்பெருமானுடைய திருவயிறு நிரம்பவில்லை என்ற பொருள்படப் பாசுரம் அமைந்துள்ளது. 'இவ்வளவு சாப்பிட்டும் இவன் வயிறு நிரம்பவில்லை' என்று உலகில் சாப்பாட்டுப் பேர்வழியைச் சொல்வது போல் இங்கு எம்பெருமானை ஆழ்வார் அருள்வதாக நினைக்கக் கூடாது.

இங்கு ஜகத்தை உண்பது என்பது ப்ரளயாபத்தில் ஜகத்தை ரக்ஷிப்பதைக் குறிக்கிறது. ஜகத்தை ப்ரளயம் கொண்டு அழித்து





விடாதபடித் தன் திருவயிற்றிலே வைத்துக் காப்பாற்றியும் பிறகு ஸ்ருஷ்டி காலம் வந்ததும் அவற்றை வெளிப்பட ஸ்ருஷ்டித்துப் பல நன்மைகளைச் செய்தும் இவர்களுக்கு நாம் ஒன்றும் செய்யவில்லையே என்று குறைபடுகிறானாம் எம்பெருமான். இதைத்தான் ''ஆராதவயிற்றான்'' என்று ஆழ்வார் அருளுகிறார் என்கிறது ஈட்டு வ்யாக்யாநம். இதில் உள்ள ஸ்ரீ ஸூக்திகள் ''ஸ்ருஷ்டி தொடக்கமாக மோக்ஷ பர்யந்தமாக ரக்ஷ்யவர்கத்தினுடைய ஸர்வவித ரக்ஷணத்தையும் பண்ணிப் பின்னையும் 'ஒன்றும் செய்யப் பெற்றிலோம்' என்றிருக்குமவன், என்று''.

இதனால் நம்மிடம் எம்பெருமான் திருவுள்ளம் இருக்கும் விதம் தெளிவாகிறது.

இவ்விடத்தில் ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் முநிவாஹநபோகம் என்ற தம் வ்யாக்யாநத்தில் மிக அத்புதமாக வேதாந்தார்த்தத்தைக் காட்டி அருளியுள்ளார்.

**'दामोदरं बन्धगतं'** என்கிறபடியே பந்தகதருக்கு மோக்ஷ ஹேதுவான தாமோதரத்வத்தை வெளியிடா நின்ற திருவயிற்றில் 'திரு உதரபந்தம்' என்று திருநாமத்தை உடைத்தான திருவாபரணம்.

நாம் புண்ய பாபங்கள் எனப்படும் இருவகைக் கர்மாக்களாலே பந்தம் பெற்று இருக்கிறோம்- பத்தராயிருக்கிறோம் - கட்டுண்டு நிற்கிறோம். இந்த ஸம்ஸார பந்தம் போக வேண்டுமானால் எம்பெருமான் கட்டுண்டதை நினைத்தால் போதும். அவனுடைய பந்தம் - கட்டு நம்முடைய பந்தத்தை- கட்டைப் போக்கிவிடும் என்று ப்ரமாணங்கள் கூறுகின்றன. திருவயிறு - உதரபந்தநம் திருமேனியின் நடுவில் அமைந்துள்ளது. இது மூலமந்த்ரத்தில் நடுவில் 'நம:' என்ற ஶப்தம் போலாகும். திருப்பாணாழ்வார் எம்பெருமானுடைய திருமேனியின் மத்ய

பாகத்தில் ஈடுபடுகிறார். மூலமந்த்ரத்தின் நடுப்பதமான நமஶ் ஶப்தார்த்தத்தில் ஈடுபடுகிறார்.

''இது திருமந்த்ரத்திலும் திருமேனியிலும் மத்யமத்தில் வரும் அநுபவம்'' என்று அருளுகிறார்.

''இப்படி உலகனைத்தையும் உள்ளே வைத்துக் காப்பது இந்தத் திருவயிறு தானே'' என்றிப்படியெல்லாம் முக்தன் எம்பெருமான் திருவயிற்றை அநுபவிக்கிறான் என்கிறார் ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் 'பரமபத ஸோபாந'த்தில் ப்ராப்தி பர்வாவில்.

இவ்விஷயத்தையே சற்று மாற்றி 'பகவத்த்யாந ஸோபாநம்' என்ற ஸ்தோத்ரத்திலும் 'தேவநாயக பஞ்சாஶத்' என்ற ஸ்தோத்ரத்திலும் அநுபவித்துள்ளார் ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன்.

இதுவரை எம்பெருமானுடைய திருமேனியில் உள்ள அவயவங்களில் ஒவ்வொன்றும் ஒன்றைவிட ஒன்று சிறந்து விளங்குகிறது. இந்தக் கட்டுரையில் திருநாபியைக் காட்டிலும் திருவயிற்றுக்கும் அதைக் காட்டிலும் உதரபந்தநத்திற்கும் உள்ள சிறப்பு கூறப்பட்டது.

இதற்கு மேல் எம்பெருமானுடைய திருமார்பு தன்னுடைய சிறந்த பெருமையை விவரித்துக் கூறுவதைக் காத்திருந்து படியுங்கள்.

---

சதுரமாமதிள்சூழ் இலங்கைக்கிறைவன்தலைபத்து
உதிரவோட்டி * ஓர்வெங்கணையுய்த்தவன் ஓதவண்ணன் *
மதுரமாவண்டுபாட மாமயிலாடரங்கத்தம்மான் * திருவயிற்று
உதரபந்தம் என்னுள்ளத்துள்நின்றுஉலாகின்றதே (4)



## 5. ''திரு ஆர மார்பு''

हरेर्वक्षोऽतिशेतेऽथ तस्य कुक्षिं तथाविधाम् ।
कुक्षिः प्रलयकाले हि बिभर्ति निखिलं जगत् ॥
अतस्तस्या अतिशयः कादाचित्को न शाश्वतः ।
हरेर्वक्षस्तु तद्धत्ते कौस्तुभादिमिषात् सदा ॥

अपि च-

हरेरितरवैजात्यबोधिकां परमां श्रियम् ।
स्वदेशेन वहद् वक्षः सर्वेभ्योऽपि विशिष्यते ॥
महिम्नाऽनेन वक्षस्तु पाणनाथं वशेऽकरोत् ।
श्रीमद्वक्षोदर्शनेन सद्यो दासोऽभवन्मुनिः ॥

ஹரேர் வக்ஷோऽதிஶேதேऽத தஸ்ய குக்ஷிம் ததாவிதாம் ।
குக்ஷி: ப்ரளயகாலே ஹி பிபர்தி நிகிலம் ஜகத் ॥
அதஸ்தஸ்யா: அதிஶய: காதாசித்கோ ந ஶாஶ்வத: ।
ஹரேர் வக்ஷஸ்து தத் தத்தே கௌஸ்துபாதிமிஷாத் ஸதா ॥

அபி ச-

ஹரேரிதரவைஜாத்யபோதிகாம் பரமாம் ஶ்ரியம் ।
ஸ்வதேஶேந வஹத் வக்ஷ: ஸர்வேப்யோऽபி விஶிஷ்யதே ॥
மஹிம்நாऽநேந வக்ஷஸ்து பாணநாதம் வஶேऽகரோத் ।
ஸ்ரீமத்வக்ஷோதர்ஶநேந ஸத்யோ தாஸோऽபவந் முநி: ॥

சென்ற பகுதியில் திருப்பாணாழ்வாருடைய திருவுள்ளத்தை எம்பெருமானுடைய திரு வயிறும் திரு உதரபந்தநமும்

தம்முடைய பெருமையைக் காட்டித் தம் வஶமாக்கிக் கொண்ட மையை அநுபவித்தோம்.

இந்தப் பகுதியில் இதைக் கண்ட எம்பெருமானுடைய திருமார்பு தனக்கே உரிய பெருமையைக் காட்டித் திருப்பாணாழ் வாரைத் தனக்கு அடிமையாக்கிக் கொள்வதை அநுபவிப்போம்.

எம்பெருமானுடைய திரு உதரம் (திருவயிறு) தன் பெருமையைக் கூறும்போது நாமும்-ஆமாம், இந்த குக்ஷிக்கு (திருவயிற்றுக்கு) உள்ள பெருமை வேறு எதற்குமே - எந்த அவயவத்துக்குமே கிடையாது என்றே நினைத்தோம்.

இப்போது திருமார்பு தன் பெருமையைக் கூறுவதைக் கேட்டால் திருவயிற்றின் பெருமை அல்பமானதாகவேதான் தோற்றும். திருமார்பு கூறும் தன் பெருமையை நாமும் கேட்போமே! திருமார்பு கூறுகிறது-ஆழ்வார் திருவுள்ளத்தைத் திருவயிறு தன்னிடத்தில் ஈர்த்துக் கொண்டதைக் கண்டே அதன் பெருமை பெரியது என்று நீங்களோ, (ஜநங்களோ) அதுவோ (அந்தத் திருவயிறோ) நினைக்கக்கூடாது. அந்தத் திருவயிறு கூறிய அதன் பெருமை என்ன?.

1. சேதந அசேதநங்களாகிய ஜகத் முழுவதையும் என்னுள் வைத்திருக்கிறேனே. இந்தப் பெருமை வேறு எவருக்கும் கிடையாது. எனக்கே உரிய பெருமை இது.

2. உலகத்தைப் படைக்கும் சதுர்முக ப்ரஹ்மாவை நான்தானே படைத்தேன். அவன் தங்கியிருக்கும் கமலம் என்னிடமிருந்து தானே உண்டாயிற்று. அதோடு மட்டுமல்லாமல் சதுர்முகனை ஸ்ருஷ்டித்து, அந்த எம்பெருமான் தான் பரதத்த்வம், அவனே தான் ஜகத்காரணம் என்பதையும் நான்தானே பறை சாற்றுகிறேன். இந்தப் பெருமையும் என்னுடையது தானே. ஆக இத்தகைய பெருமை யாருக்கு உண்டு? என்று கூறிற்று எம்பெருமானுடைய திருவயிறு.





3. மேலும் திருவயிறு கூறிற்று. இப்போது சொன்ன பெருமைகள் யாவும் எம்பெருமான் ஸர்வஸ்மாத்பரன் - எல்லாப் பொருள்களையும் விட, அனைவரையும் விட, உயர்ந்தவன் என்று அவனுடைய பரத்வத்தைக் காட்டுவதற்காகவே பயன்படும்.

எம்பெருமானுக்குப் பரத்வம் மட்டும் இருந்தால் போதுமா? யாவரும் அஞ்சாமல் நெருங்கமுடியாதே இந்தப் பரத்வத்தினால். ஆக ஸௌலப்யமும் அதாவது எளிமையும் வேண்டும். அந்த எளிமைக்கும் சான்று என்னிடத்தில்தான் உள்ளது.

இப்படி ஶ்ரிய: பதியான எம்பெருமான் அன்று ஸ்ரீ க்ருஷ்ணனாக அவதரித்து ஆயர்பாடியில் வளரும் போது தன் வீட்டிலேயே வெண்ணெய் திருட அதை அவன் தாயான யஶோதை கண்டு விட உடனே ஒரு தாம்புக்கயிற்றைக் கொண்டு அவனைக் கட்டி உரலினோடு பிணைத்து வைத்தாளே! இந்தக் கதையை நீங்கள் கேட்டிருப்பீர்கள் அல்லவா! அந்தக் கயிற்றை எந்த இடத்தில் பதியவைத்துக் கண்ணனைக் கட்டினாள் யஶோதை? தெரியுமா! என்னிடத்தில் தானே. அப்படி அன்று அவள் (யஶோதை) கட்டிய தாம்பின் அடையாளம், வடு (தழும்பு) இன்னமும் என்னிடத்தில் தானே உள்ளது.

ப்ரஹ்மாவைப் படைத்து மிக உயர்ந்தவனாயிருக்கும் எம்பெருமான் ஒரு இடைப் பெண் பிடித்துக் கட்டும்படியாக நிற்கிறானே! இது என்ன ஸௌலப்யம்! என்ன எளிமை! என்று எல்லோரும் கொண்டாடுவதற்குக் காரணமாய் அமைந்த தழும்பு என்னிடம் தானே உள்ளது என்றும் எம்பெருமானுடைய திருவயிறு தன் பெருமையைக் காட்டித்தானே திருப்பாணாழ் வாரைத் தன் பக்கலிலே இழுத்துக் கொண்டது.

இப்போது எனக்கு (திருமார்புக்கு) உள்ள பெருமைகளைக் கூறுகிறேன். அவற்றையும் கேளுங்கள். அப்போதுதான் என் சிறப்பை நீங்கள் அறிவீர்கள்.

1) திருவயிறு சேதநங்களும் அசேதநங்களுமாகிய இந்த உலகத்தைத் தன்னுள்ளே வைத்திருப்பதாகத் தன் பெருமையைச் சொல்லிற்றே! இது எத்தனை நாட்கள் உள்ளது என்பதை நேயர்களே! நீங்களே யோசித்துப் பாருங்கள்.

ப்ரளயம் நேரும்போது தான் உலகத்தைத் தன்னுள்ளே வைத்துத் தாங்குகிறது இந்தத் திருவயிறு. இதற்கே இவ்வாறு பெருமைப்பட்டுக் கொள்கிறது இந்த வயிறு. நான் (திருமார்பு) எப்பொழுதுமே உலகத்தைத் தாங்கி நிற்கிறேனே! இவ்வளவு சொன்னால் உங்களுக்குப் புரியாது. இவ்விஷயத்தைப் பராஶர மஹர்ஷி ஸ்ரீ விஷ்ணுபுராணத்திலே அருளிச் செய்கிறார். அதைக் கேளுங்கள்.

**श्रीवत्ससंस्थानधरमनन्तेन समाश्रितम् ।**
**प्रधानं बुद्धिरप्यास्ते गदारूपेण माधवे ॥**

**ஸ்ரீ வத்ஸ ஸம்ஸ்த்தாநதரம் அநந்தேந ஸமாஶ்ரிதம் |**
**ப்ரதாநம் புத்திரப்யாஸ்தே கதாரூபேண மாதவே ||**

***(1.22.69)***

ஆதிஶேஷன் தாங்கி நிற்கும் ப்ரக்ருதி என்ற அசேதந தத்த்வம்- ஸ்ரீ வத்ஸம் என்ற மருவின் உருவிலும், புத்தி எனப் படும் **'மஹான்'** என்ற அசேதந தத்த்வம் **(ग)** கதையின் உருவிலுமாக எம்பெருமான் திருமேனியில் இடம் பெற்றிருக்கின்றன. இவ்வாறே:

**आत्मानमस्य जगतो निर्लेपमगुणामलम् ।**
**बिभर्ति कौस्तुभमणिस्वरूपं भगवान् हरिः ॥**

**ஆத்மாநம் அஸ்ய ஜகதோ நிர்லேபம் அகுணமலம் |**
**பிபர்த்தி கௌஸ்துபமணிஸ்வரூபம் பகவான் ஹரி:||**





உலகில் உள்ள அசேதநப் பொருள்களுக்கு ஆத்மாவாயிருப்பதும், அவற்றின் குணங்களான ஸத்த்வம் - ரஜஸ்- தமஸ் என்ற முக்குணங்கள் அற்றதும் அவற்றின் மலங்களால் (அழுக்குகளால்) தீண்டப்படாததுமான சேதநமான ஆத்ம தத்த்வத்தைக் கௌஸ்துபம் என்ற மணியின் உருவில் எம்பெருமான் தன் திருமார்பில் தரித்துள்ளான் என்றும் இதை விளக்கியுள்ளார் ஸ்ரீ பராஶரர்.

ஜீவ தத்த்வத்திற்கு அபிமாநி தேவதை - அதாவது ஜீவதத்த்வத்தைச் செயல்படுத்துவதற்காகத் தனித்து எம்பெருமானால் நியமிக்கப்பட்ட தேவதை - ஸ்ரீ கௌஸ்துபம் என்ற ரத்நத்தின் உருவில் இருக்கும் ஒரு நித்யஸூரி. ஆகக் கௌஸ்துபம் ஜீவாத்மாக்கள் அனைத்துக்கும் ப்ரதிநிதி. இதை எம்பெருமான் தன் திருமார்பில் எப்பொழுதுமே தரித்துக் கொண்டிருப்பதால் ஜீவதத்த்வத்தையே - ஜீவாத்மாக்களையே தரிப்பதாக ஆகிறது.

இவ்வாறே எம்பெருமான் திருமார்பில் ஸ்ரீ வத்ஸம் என்று சொல்லப் படுகிற ஒரு மறு (மயிர்ச்சுழி) உள்ளது. அதுவும் ஒரு நித்ய ஸூரியால் அதிஷ்டாநம் செய்யப்பட்டுள்ளது. இதன் உருவில் ஒரு நித்ய ஸூரியே உள்ளார் என்பது நம் ஸித்தாந்தம். இதுதான் அசேதந தத்த்வங்களுக்கெல்லாம் மூல காரணமான ப்ரக்ருதி என்று சொல்லப்படுகிற அசேதந தத்த்வத்திற்கு அதிஷ்டாந தேவதையாகும். இதை எம்பெருமான் தன் திருமார்பில் எப்போதுமே தரித்துவருவதால் அசேதந தத்த்வங்களும் எம்பெருமான் திருமேனியில் இடம் பெற்றனவாகின்றன. ஆகையால் அசேதந தத்த்வங்களைக் கூட எம்பெருமான் தான் திருமார்பில் எப்போதுமே தரித்து வருகிறான் என்று. எம்பெருமானும் அந்தக் கௌஸ்துபம், மறு என்பவற்றை என்னிடம் வைத்துத்தானே அவற்றைத் தாங்குகிறான். ஆகையால் ஸாக்ஷாத்தாக - நேரிடையாகச்

சேதநங்களையும் அசேதநங்களையும் தாங்கி நிற்பது நான்தானே. ஸ்வாமி ஸ்ரீ தேஶிகனும் 'புருடன் மணிவரமாகப் பொன்னா மூலப்ரக்ருதி மறுவாக' என்று ஒரு பாசுரத்தினால் வெளியிட் டுள்ளார் இக்கருத்தை. ஏதோ ஒரு ஸமயத்தில் மட்டும் சேதநங்கள் அசேதநங்கள் இவற்றைத் தாங்கி நிற்கும் எம்பெருமான் திருவயிற்றுக்கு இந்தப் பெருமை உண்டா?

2) அடுத்தபடியாகத் தன் உந்தியிலிருந்து கிளம்பிய தாமரைப் பூவில் நான்முகனைப் படைத்து அதனால் அழகு பெற்றுத் திகழும் அவனுடைய திருவயிற்றைக் காட்டிலும் தனக்குள்ள பெருமையையும் கூறுகிறது எம்பெருமானுடைய திருமார்பு. அதாவது, திருவயிறு உந்திப்பூவில் நான்முகனை உண்டு பண்ணிக் காட்டிற்று. அதுவும் எப்பொழுது? ஏதோ ஒரு காலத் தில், அதாவது ஸ்ருஷ்டியின் ஆரம்ப காலத்தில். பிறகு அந்த சதுர்முகன் அந்த நாபீகமலத்திலிருந்தும் புறப்பட்டுப் போய் விட்டான்.

திருவயிற்றுத் திருவுந்திப்பூ, தான் சதுர்முகனைத் தாங்கி நிற்பதுபோல் காட்டிக் கொண்டிருக்கிறது. தற்போது சதுர்முகன் அதில் இல்லை. வெறும் தாமரை மட்டும் தான் உள்ளது.

(தாயார் தன் பிள்ளையைச் சிறு வயதில் தன் கையில் வைத்துக் கொண்டு 'போட்டோ' எடுத்துக் கொள்கிறாள். அந்தப் படத்தைத் தம் வீட்டில் மாட்டி வைக்கிறார்கள். தற்போது அந்தப் பைய னுக்கு வயது அறுபது. தாயாருக்கு வயது தொண்ணூறு. இந்த நிலையில் தாயார் படுக்கையில் கிடக்கிறாள். பிள்ளை ஓடியாடிப் பல கார்யங்களைச் செய்து வருகிறான். தாயார் இடுப்பில் - கையில் அவன் இல்லை. ஆனால் 'போட்டோ' மட்டும் தாய் குழந்தையை இடுப்பில் ஏந்தி இருப்பதாகவும் இந்தப் பிள்ளை தாயின் கைகளில் அமர்ந்திருப்பதாகவுமே காட்டுகிறது. என்றோ முன்பு இருந்த நிலையைக் காட்டுகிறது அந்தப் படம்.)





அம்மாதிரிதான் அர்ச்சைகளில் எம்பெருமான் திருவயிற்றி லிருந்து கிளம்பிய தாமரை மலரின்மீது சதுர்முகன் அமர்ந்திருப் பதும். என்றோ ஒருநாள் அதாவது ஸ்ருஷ்டியின் ஆரம்ப காலத் தில் இருந்த நிலையைக் காட்டுகிறது அர்ச்சைகளில் எம்பெருமா னுடைய ஶயநத் திருக்கோல நிலை. இன்று அந்தப் பூ வெற்றுப்பூ தான். சதுர்முகனும் பெரியவனாகி ஸத்யலோகத்தில் ஸரஸ்வதீ தேவியுடன் குடித்தனம் செய்து வருகிறான். ஆகவே என்றோ ஒரு ஸமயம் நிகழ்ந்த நிகழ்ச்சியைக் காட்டி ஆழ்வாரை மயக்கி விட்டது எம்பெருமான் திருவயிறு.

இவ்விஷயத்தில் என்னுடைய (திருமார்பினுடைய) பெரு மையைக் கூறுகிறேன் கேளுங்கோள். நான் (திருமார்பு) எப் பொழுதும் பெரிய பிராட்டியாரைத் தாங்கி நிற்கிறேன். நான் (திருமார்பு) தாங்கி நிற்கும் பெரிய பிராட்டிக்கும், திருவயிறு தாங்கி நிற்கும் சதுர்முகனுக்கும் எவ்வளவு வ்யத்யாஸம் உள்ளது பாருங்கோள். அவன் அந்தத் தாமரைப் பூவை விட்டுப் பிரிந்து விட்டான். இன்று அந்தத் திருவயிறு வெறும் தாமரைப் பூவை மட்டுமே தாங்கி நிற்கிறது. என்னிடம் (திருமார்பிடம்) உள்ள பிராட்டி என்னை (திருமார்பை) விட்டு ஒரு நொடியும் பிரிய மாட்டாள். பிரிந்து செல்ல எண்ணவும் மாட்டாள். ஸ்வாமி நம்மாழ்வார் இவளுடைய இந்த எண்ணத்தை ''அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல்மங்கை உறைமார்பன்'' என்று தம் திருவாக்கினாலேயே அருளிச் செய்துள்ளார். பிராட்டி தங்குவ தற்கு வேறிடமில்லாமல் இங்கு வந்து தங்கவில்லை. அவள் தாமரையாள், தாமரைப் பூவில் வஸிப்பவள். அது மிகுந்த மென்மை. குளிர்ச்சி, நறுமணம் பெற்று விளங்குவதாகும். அப்படிப்பட்ட வாஸஸ்தாநத்தைவிட்டு அவள் என்னிடம் (திருமார்பினிடம்) வந்து அகலாமல் தங்க வேண்டுமானால் என்னிடம் எவ்வளவு மேன்மை இருக்க வேண்டும்? பிராட் டிக்குத் தெரிந்த என் பெருமை உங்களுக்குத் தெரியவில்லையே.

இனியாவது தெரிந்து கொள்ளுங்கள். ஆகவே தான் திருமங்கை யாழ்வார் 'பந்திருக்கும் மெல்விரலாள் பாவை பனிமலராள் வந்திருக்கும் மார்வன் எவ்வுள் கிடந்தானே' என்றார். மற்றும் ஓர் ஒப்பிலாப் பெருமை எனக்கு உள்ளதைச் சொல்லுகிறேன் கேளுங்கள்!.

எம்பெருமான் திருவயிறு படைத்த சதுர்முகன் தேவதாந்தரம் (பிற தெய்வம்) ஆகையால் ப்ரபந்நர்களால் வணங்கத் தகாதவன். அவன் எப்பொழுதும் எம்பெருமானுடைய திருநாபீ கமலத்திலிருந்தால் அவன் ஸம்பந்தம் காரணமாகப் பெரியோர் கள் எம்பெருமானையே கூட ஸேவிக்காமல் போய்விடுவார்கள். அதனால் தான் சதுர்முகனைப் பிறந்த உடனேயே தன் உந்தித் தாமரைப் பூவை விட்டு அகன்று போகுமாறு கூறிவிட்டான் எம்பெருமான். ஆகச் சதுர்முகன் திருநாபீகமலத்தில் இருந்தால் எம்பெருமானைக் கூடப் பெரியோர்கள் வணங்க மாட்டார்கள். (ஆனாலும் சில இடங்களில் நான்முகனோடு பெருமாளை வணங்குவது வேறு வழியில்லாமையால் ஆகும்).

நான் தாங்கி நிற்கும் பிராட்டி இல்லாமற் போனால் பரமைகாந்திகள் எம்பெருமானை வணங்க மாட்டார்கள். ஆழ்வா ரும் 'திருவில்லாத் தேவரைத் தேறேன்மின் தேவு' பிராட்டியில்லா தவர்களை தேவதை என்று கொள்ளாதீர்கள் என்றார்.

ஆக அயன் (சதுர்முகன்) இருந்தால் பெருமாளை வணங்க மாட்டார்கள் ப்ரபந்நர்கள். இங்கு பிராட்டி இல்லாமற் போனால் பெருமாளை வணங்க மாட்டார்கள் ப்ரபந்நர்கள். அப்படிப் பட்டவள் என்னிடத்தில் இருக்கிறாள். இதனால் எப்படிப்பட்ட சிறப்பு எனக்கு உள்ளது? சதுர்முகன் எம்பெருமானை விட்டுப் பிரிந்து இருப்பவன். இவள் எம்பெருமானை விட்டுப் பிரியாது இருப்பவள். இவன்தான் நாராயணன் என்று காட்டித் தருபவள். சதுர்முகன் அஹங்காரங் கொண்டு ஸ்வதந்த்ரனாகத் தன்னை எண்ணிக் கொண்டு திரிகிறான்.





பிராட்டியோ ஸௌலப்யத்துக்கு எல்லை நிலமாய் இருப் பவள். திருவாபரணங்களைக் கழற்றிவைத்தாலும் இவளைக் கழற்ற முடியாது. அப்படி எம்பெருமான் திருமேனியில் அவன் திருமார்பில் ஒட்டியிருக்கிறாள்.

இப்படிப்பட்ட பிராட்டிக்குக் கோயிற் கட்டணமாய்- திருக்கோயிலாக - வாஸஸ்தாநமாயிருக்கிற பெருமை பெற்றுள் ளேன் நான். என்னுடைய (திருமார்பினுடைய) பெருமையைப் பற்றி ஸ்ரீ பட்டர் அத்புதமாக அருளிச் செய்துள்ளார். நீங்கள் கேட்டதில்லையோ?

**मलयजशशिलिप्तं मालतीदामतल्पं**
**सुमणिसरवितानं कौस्तुभस्वस्तिदीपम् ।**
**दनुजवृषविषाणोल्लेखचित्रं च लक्ष्मी-**
**ललितगृहमुपासे रङ्गसर्वंसहोरः ॥**

(மலயஜஶஶிலிப்தம் மாலதீதாமதல்பம்
ஸுமணிஸரவிதாநம் கௌஸ்துபஸ்வஸ்தி தீபம் ।
தநுஜ வ்ருஷ விஷாணோல்லேக சித்ரம் ச லக்ஷ்மீ-
லலிதக்ருஹமுபாஸே ரங்கஸர்வம்ஸஹோர: ॥)

***(ஸ்ரீ ரங்கராஜஸ்தவம் - பூர்வஶதகம் -111)***

ஸ்ரீ ரங்கநாதனுடைய திருமார்பு பிராட்டி எழுந்தருளி யிருக்கும் அத்புதமான க்ருஹம். அரண்மனை. அந்த:புரம். அந்த: புரம் எங்கும் வாஸனை மிகுந்த சந்தநங்களால் பூசப்பட்டும், ம்ருதுவான படுக்கைகள் விரிக்கப்பட்டும், மணி முத்துவடங்கள் ஆங்காங்குத் தொங்கவிடப்பட்டும். மங்கள தீபம் ஏற்றிவைக்கப் பட்டும், பல் வகைச் சித்ரங்களால் அலங்கரிக்கப்பட்டும் இருக் கும். பிராட்டியினுடைய திருக்கோயிலான- அரண்மனையான அந்த:புரமான இந்தத் திருமார்பும் இப்படித்தானிருக்கிறது.

திருமார்பு முழுவதும் குங்குமப்பூ பச்சைக் கற்பூரம் - கலந்த உயர்ந்த சந்தநத்தால் நன்கு பூசப்பட்டுள்ளது. மாலதீ புஷ்பங் களைக் கொண்டு நெருக்கமாகத் தொடுக்கப்பட்ட மாலைகளே படுக்கைபோல் விரிந்து கிடக்கின்றன திருமார்பில். முத்துச்சரங் களும் மணிகளாலான சரங்களும் தொங்கவிடப்பட்டுள்ளன. கௌஸ்துபரத்நம் என்ற மங்களதீபம் எப்பொழுதும் ப்ரகா ஶித்துக் கொண்டிருக்கிறது திருமார்பில். அஸுரத்தன்மை வாய்ந்த ஏழு எருதுகளோடு ஸ்ரீ க்ருஷ்ணவதாரத்தில் சண்டை யிட்டபோது அவற்றின் கொம்புகளாலுண்டான வடுக்கள் - தழும்புகள் பல கோணங்களில் சித்ரங்கள் போல அமைந்துள்ளன திருமார்பில். ஆகவே இந்தத் திருமார்பு பிராட்டிக்கு அந்த:புரமாக (க்ருஹமாக) இருப்பதற்கு என்ன தடை?

ஆகவே எம்பெருமான் திருமார்பாகிய நான் பிராட்டிக்குத் திருக்கோயிலாக உள்ளேன். இந்தப் பெருமை வேறு எந்த அவயவத்திற்கு உண்டு! நீங்களே சொல்லுங்கோள் என்கிறது திருமார்பு.

மேலும் அது தன் பெருமையைக் கூறுகிறது.

திருவாபரணங்கள் அனைத்தையும் தாங்கி நிற்பவன் நான்தானே. என்மீது சாற்றப்படும் திருவாபரணங்கள் மிக மிகப் பலவாயிருக்கும். இவ்வாறு எந்த அவயவத்திலும் இவ்வளவு திருவாபரணங்கள் சாற்ற மாட்டார்கள். அவ்வளவு திருவா பரணங்களைச் சாற்றுவதற்கு ஏற்ற இடமும் மற்றைய அங்கங் களுக்குக் கிடையாது. நான் (திருமார்பு) அகன்ற இடம் உடையவ னாயிருக்கிறேன். எவ்வளவு திருவாபரணங்களானாலும் சாற்ற லாம். அர்ச்சையிலும் மன்னார்குடி ஸ்ரீ ராஜகோபாலன், வடுவூர் ஸ்ரீ ராமன் இவர்களுடைய திருமார்புகளையே நீங்கள் காண லாமே. பரந்து அகன்று நின்று எவ்வளவு திருவாபரணங்கள் சாற்றினாலும் நிரப்பமுடியாத இடம் பெற்றிருக்கின்றனவே





இவர்களுடைய திருமார்பு. இந்தப் பெருமையும் எனக்கேயன்றோ உரியது?

மற்றும் ஒன்று கூறுகிறேன் என்று தன் பெருமையைத் தொடர்கிறது திருமார்பு. அதாவது:

''அன்று யஶோதைப் பிராட்டி தாம்புக் கயிறு கொண்டு கட்டினதால் உண்டான தழும்பைத் தாங்கி எம்பெருமானுடைய ஸௌலப்யத்தை நான்தானே உலகுக்குக் காட்டித் தருகிறேன். அந்தப் பெருமை எனக்குத்தானே உள்ளது'' என்று திருவயிறு கூறு கிறதன்றோ. இவ்விஷயத்தில் அதற்கும் மேற்பட்ட பெருமை எனக்கு (திருமார்புக்கு) உண்டு என்பதையும் இங்குக் கூறுகிறேன்.

திருவயிறு கூறியபடி அதில் அன்று கட்டின தாம்பின் வடு - தழும்பு இருப்பதும் அது எம்பெருமானுடைய ஸௌலப் யத்தைக் காட்டி வருகிறது என்பதும் உண்மைதான்.

ஆனால் அதை யாவரும் காணமுடியாதபடி எம்பெருமான் உதரபந்தநம் (ஒட்டியாணம்) என்ற ஒரு ஆபரணத்தை அணிந்து கொண்டு மறைத்துவிட்டானே. இதை மறைத்தமைக்குக் காரணம் முன்னமேயே கூறப்பட்டுள்ளது. அதாவது எம்பெரு மான் திருவரையில் பட்டாடை சிறிது நழுவ, அந்தத் தழும்பு வெளிப்பட, அங்கே அருகில் மாடு மேய்த்துக் கொண்டிருந்த மூன்று நான்கு இடைப் பெண்கள் அதைக் கண்டு சிரிக்க, அதைப் பார்த்துக் கொண்டிருந்த பெரிய பிராட்டி அந்த இடைப் பெண்களைக் கேட்க, அவர்கள் உன் பர்த்தா சிறு வயதில் வெண்ணெய் திருடி அகப்பட்டுக் கொண்டு தாம்பினால் கட்டப் பட்டு அடிபட்டவன் என்று சொல்ல, அதைக்கேட்ட பிராட்டி வெகுண்டாள். அவளை ஒருவாறு ஸமாதாநம் சொல்லித் தேற்றி விட்டு, இனி இந்தத் தழும்பு ஒருவர் கண்ணிலும்படாம

லிருப்பதற்காகத்தானே இவ்வளவு பட்டையான உதரபந்தநம் அணியப்பட்டுள்ளது.

ஆக இந்தத் தழும்பு எம்பெருமானுடைய ஸௌலப்யத்தை வெளிப்படுத்துவதாயிருந்தும் தான் வெளிப்படாமல் எம்பெரு மானால் மறைக்கப்பட்டுள்ளதே. இது இருந்தும் பயனில்லை. இது கிடக்கட்டும். என்னிடமும் (திருமார்பினிடத்திலும்) எம் பெருமானுடைய ஸௌலப்ய ஸூசகமான ஒரு பொருள், ஒரு திருவாபரணம் உண்டு. அது மறைபடாமல் எப்பொழுதும் யாவ ரும் காணலாம்படி உள்ளது. அது என்ன தெரியுமா? அன்று ஸ்ரீக்ருஷ்ணவதாரத்தில் கண்ணனுக்குக் கண்ணெச்சில் - த்ருஷ்டி தோஷம் - வராமல் இருப்பதற்காக யஶோதைப் பிராட்டி அணி வித்த ஆமைத்தாலிதான். இது அந்தத் தாம்பின் தழும்புபோல் மறைபடாமல் வெளிப்படவே நிற்கிறது.

இன்று அர்ச்சையில் ஸ்ரீ ரங்கநாதனாக எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் கௌஸ்துபம், பஞ்சரத்நங்கள் முதலான மிக உயர்ந்த பல திருவாபரணங்களைப் பூண்டிருந்தும் அந்த ஆமைத் தாலியையும் விடாமல் அணிந்து விளங்குகிறானே!

இதைப் பெரியாழ்வார் அநுபவித்துப் பாசுரம் அருளிச் செய்கிறாரே 'அக்குவடம் உடுத்து ஆமைத்தாலி பூண்ட அநந்த சயநன் தக்கமாமணிவண்ணன் வாஸுதேவன் தளர்நடை நடவானோ!' என்று.

**(பெரியாழ்வார்.1.7.2)**

ஒரு இடைப்பெண் அன்று பூட்டின ஆமைத்தாலியை இன்றும் பல திருவாபரணங்கள் இருக்கச் செய்தேயும் விடாமல் அணிந்துள்ளானே. ஸௌலப்யம் இதனால் விளங்கு கின்றதன்றோ?

ஆக என்னிடத்திலும் (திருமார்பினிடத்திலும்) ஸௌலப்ய ஸூசகமான திருவாபரணம் ஒன்று உள்ளது.





மஹான்கள் பலரும் ஸ்ரீ ரங்கநாதனை ஸேவிக்கவரும்போது என்னை, திருமார்பைக் கண்டுகளித்து என்னிடத்தில் உள்ள அந்த ஆமைத்தாலியை நன்கு ஸேவித்து உள்ளம் குளிர்வார்கள். மற்றைய ஆபரணங்களை ஸேவிப்பதால் இவ்வளவு ஆநந்தம் அவர்களுக்குக் கிடைப்பதில்லை.

ஸ்வாமி ஸ்ரீ பட்டர் திருவரங்கனை ஸேவிக்க வருகிறார். அர்ச்சகர்கள் பதக்கங்கள், பஞ்சரத்நம், மகர கண்டிகை கௌஸ்துபரத்நம் போன்றவற்றை ஸேவை பண்ணிவைப் பார்கள். ஆனால் பட்டரோ அவற்றைப் பொருட்படுத்தாமல் அவற்றின் இடையே விளங்கும் ஆமைநகம், புலிநகங்கள் பதித்த பதக்கங்களையும், ஐம்படைத்தாலியையும் கண்டே மகிழ்வார். மற்றைய திருவாபரணங்கள் நடுவிலே மஹாராஜாக்கள் ஸமர்ப்பித்தனவாகும். ஆமைத்தாலி, புலிநகம் பதித்த பதக்கம், ஐம்படைத்தாலி இவை கண்ணனுக்கு அன்று யஶோதை அணி வித்தவையாதலால் ஸௌலப்யத்தை ஸூசிப்பிக்கின்றன. மற்றையவை பரத்வத்தை ஸூசிப்பிக்கின்றனவாகும். அவை வேண்டாம் என்கிறார் ஸ்ரீ பட்டர். (ஐம்படைத்தாலி என்பது சங்கம், சக்ரம் முதலானவற்றைச் செய்து சங்கிலியில் கோர்த்துக் குழந்தைகளுக்கு அணுக்கம், கண்ணெச்சில் முதலிய தோஷம் வாராமைக்காகக் கட்டும் ஒரு திருவாபரணம். தமிழர்களிடை யேயும் இந்த வழக்கம் உண்டு என்பது பண்டைத் தமிழ் நூல்களிலிருந்து புலப்படுகிறது.)

இப்படி ஸ்ரீ பட்டர் மற்றைத் திருவாபரணத்தை ஒதுக்கிவிட்டு ஆமைத்தாலி முதலியவற்றை மட்டும் அநுபவித்ததை அத்புத மான ஒரு ஶ்லோகத்தினால் வடித்துக் கொடுத்திருக்கிறாரே:-

**वक्षस्स्थल्यां तुलसिकमलाकौस्तुभैर्वैजयन्ती**
**सर्वेशत्वं कथयति तरां रङ्गधाम्नस्तदास्ताम् ।**

**कूर्मव्याघ्रीनखपरिमिलत्पञ्चहेती यशोदा-**
**नद्धा मौग्ध्याभरणमधिकं नस्समाधिं धिनोति ॥**

வக்ஷஸ்ஸ்தல்யாம் துளஸி கமலா கௌஸ்துபைர் வைஜயந்தீ
ஸர்வேமுத்வம் கதயதி தராம் ரங்கதாம்நஸ்தத் ஆஸ்தாம் ।
கூர்ம- வ்யாக்ரீநக - பரிமிலத் பஞ்சஹேதீ யமோதா-
நத்தா மௌக்த்யாபரணம் அதிகம் நஸ்ஸமாதிம் திநோதி ॥
என்று. **(ஸ்ரீ ரங்கராஜஸ்தவம் - பூர்வமுதகம் - 113)**

ஸ்ரீ ரங்கநாதனுடைய திருமார்பில் துளஸீமாலை, பிராட்டி யார், கௌஸ்துபம், வைஜயந்தீ மாலை முதலியன இருக்கின்றன. இவை ஸ்ரீ ரங்கநாதனுடைய பரத்வத்தைக் கூறுகின்றன- காட்டுகின்றன. அவை நமக்கு வேண்டாம். ஒருபுறம் இருக் கட்டும். தத் ஆஸ்தாம். அது இருக்கட்டும் என்று ஒதுக்கித் தள்ளு வதால் அவற்றில் பட்டருக்கு விருப்பமில்லை என்று ஏற்படுகிறது.

ஆமைநகம், புலிநகம் இவை அன்று யமோதாபிராட்டி அணிவித்த ஆபரணங்கள். இளமைப் பருவத்தில் அணிவித்தவை எம்பெருமானுடைய இளமை நிலையைக் குறிக்கின்றவை. இவையே நமக்கு ஆநந்தம் அளிப்பவையாகும். மற்றவை இருக் கட்டும் என்கிறார். இதில் பிராட்டியாரையும் சேர்த்து ஒதுக்கி விடுகிறார். பிராட்டியை விட ஸ்ரீ பட்டர் விரும்பும் பெருமை இந்த ஆமைநகம், புலிநகம் பதித்த பதக்கங்களுக்கு உண்டு. இப்படிப்பட்ட இந்த ஆபரணம் என்னிடம்தானே இருக்கிறது. திருவயிற்றின் மேற்புறத்தில் ஒருவரும் காண ஒண்ணாதபடி மறைந்து கிடைக்கும் தாம்பின் தழும்பை விட யாவரும் ஸேவிக்கலாம்படி இருக்கும் இந்த ஆமைநகம், புலிநகம் பதித்த ஆபரணங்கள்தான் சிறந்தவை. இவை என்னிடம்தானே இருக்கின்றன.





மேலும் ஸ்ரீ ரங்கநாதனே ஸர்வேமுவரன். உலகுக்குத் தலை வன் என்ற சிறப்புக்காக இட்ட தனிமாலை. ஒப்பற்று விளங்கும் வாகைமாலை என்மீது தானே இருந்து கொண்டு விளங்குகிறது.

இவ்வாறெல்லாம் தனக்கு உள்ள அதிகமான பெருமைகள் எல்லாவற்றையும் திருப்பாணாழ்வாருக்குக் காட்டி அவரைத் தன் பக்கத்திற்கு இழுத்துக் கொண்டது எம்பெருமான் திருமார்பு. அத்தோடு நில்லாமல் தன்மீது அமர்ந்திருக்கும் பிராட்டியின் கடாக்ஷத்தின் மூலம் ஆழ்வாருக்கு ஸ்வரூப ஜ்ஞாநத்தையும், அதாவது தன் (ஆழ்வாருடைய) ஸ்வரூபத்தைப் பற்றிய ஜ்ஞாநத் தையும் (தான் எம்பெருமானுக்கு தாஸன் என்ற ஜ்ஞாநத்தையும்) தந்தது திருமார்பு.

இதுவரை எம்பெருமானுடைய மற்றைய அவயவங்கள் திருப்பாணாழ்வாருடைய இந்த்ரியங்களான திருக்கண், சிந்தனை, உள்ளத்து இன்னுயிர், உள்ளம் இவற்றைத் தான் ஈர்த்தன- கொள்ளை கொண்டன. ஆனால் இந்தத் திருமார்போ ஆழ்வா ரையே தன்பால் ஈர்த்துக் கொண்டது என்று ஆழ்வாரே வியந்து 'அடியேனை ஆட் கொண்டது' என்று அருளிச் செய்கிறார்.

இதுவரை இங்குக் கூறப்பட்ட விஷயங்கள் பெரும்பாலும் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் அருளிய ஸ்ரீ ஸூக்திகள் காட்டியனவேயாகும். ஒன்றிரண்டு விஷயங்கள் மற்றைய இடங்களில் பூர்வர்கள் காட்டியுள்ளதை ஒட்டி மாஸ்த்ர விரோதம் வராதமுறையில் எழுதப்பட்டன.

இனி அழகிய மணவாளப் பெருமாள் நாயனாருடைய ஸ்ரீ ஸூக்திகளையே அநுபவிப்போமாக.

''மூன்றாம் பாட்டிலே திருநாபீ கமலம் ப்ரஹ்மாவை தரித்துக் கொண்டிருக்கிற தன் மதிப்பையும், அழகையும் காட்டித் தம்முடைய திருவுள்ளத்தைத் திருப்பீதாம்பரத்தினின்றும் தன்

பக்கலிலே இழுத்துக் கொள்ள, அங்கே அது சுழியாறு பட்டபடியிறே சொல்லிற்று.

கீழில் பாட்டில் (நான்காவது பாட்டில்) இத்தைக் கண்ட திருவயிறானது ஸகல சேதநாசேதநங்களையும் தானே தரித்துக் கொண்டிருக்கிற மதிப்பையும் யஶோதைப் பிராட்டி கட்டக் கட்டுண்ட தழும்பைக் காட்டித் தன்னுடைய ஸௌலப்யத் தையும் சிற்றிடையான அழகையும் காட்டி அத்திருநாபீ கமலத்தினின்றும் திருவுள்ளத்தைத் தன் பக்கலிலே இசிக்க (இழுக்க) அங்குப் போக ஒட்டாதே அப்படிக்குப் பட்டம் கட்டி யிருக்கிறாப்போலே இருக்கிற திரு உதரபந்தநம் (மேலிட்டு நின்று ஸ்வைர (யதேச்சமான்) ஸஞ்சாரம் பண்ணுகிறபடியை யிறே சொல்லிற்று''.

''அந்தத் திருவயிற்றுக்கு ஒரு காலவிஶேஷத்திலே (ப்ரளய காலத்தில்) **कादाचित्क**மாக (காதாசித்கம் - என்றோ ஒரு ஸமயம் மட்டும் இருப்பது) ஸகலாண்டங்களையும் வைத்ததாலுண்டான மதிப் பும், ஒருகால் யஶோதைப் பிராட்டி கட்ட- அத்தால் வந்த ஸௌலப்யமுமிறே இருப்பது''.

அப்படியன்றே திருமார்பு. ''ஸ்ரீவத்ஸஸம்ஸ்தாநதரம் அநந் தேந ஸமாஶ்ரிதம் । ப்ரதாநம்'' என்றும் ''ஆத்மாநமஸ்ய ஜகதோ நிர்லேபம் அகுணாமலம் । பிபர்த்தி கௌஸ்துப மணிஸ்வரூபம் பகவாந் ஹரி: ॥'' என்றும் சொல்லுகிறபடியே ஸர்வகாலமும், சேதநாசேதநங்களை ஸ்ரீ வத்ஸ கௌஸ்துப முகத்தாலே (மூல மாக) தரித்துக் கொண்டிருக்கிற பெரிய மதிப்பையும், அவனு டைய (எம்பெருமானுடைய) ஸ்வரூபாதிகளுக்கு நிரூபக பூதை யாய் (ஸ்வரூபத்தை மற்றைய பொருள்களின்றும் பிரித்துக் காட்டுகின்றவளாய்) நீர்மைக்கு எல்லை நிலமாய் இருக்கிற பெரிய பிராட்டியாருக்குத் கோயிற் கட்டணமாய் (நித்யவாஸ - ஸ்தாநமாய்) இருக்கிற ஏற்றத்தையும், உபய விபூதிநாதன்





(லீலாவிபூதி என்ற ப்ராக்ருத மண்டலம், நித்ய விபூதி எனப்படும் அப்ராக்ருத லோகம் ஆகிய இரண்டு லோகங்களுக்கும் நாதன்) என்று இட்ட தனிமாலையை தரித்துக் கொண்டிருக்கிற ஆகாரத் தையும் உடைத்தாய். 'அக்குவடமுடுத்து ஆமைத்தாலி பூண்ட அநந்தசயநன்' என்கிறபடியே யஶோதைப் பிராட்டி பூட்டின ஆபரணங்களையும் உடைத்தாயிறே இருப்பது.

ஆகையாலே அந்தத் திருமார்பானது 'திருவயிற்றிற் காட்டில் தனக்குண்டான ஆதிக்யத்தையும் ஸௌலப்யத்தையும் திரு ஆரம் உள்ளிட்ட ஆபரணச் சேர்த்தியால் வந்த அழகையுடையோம் நாமன்றோ! ஆனபின்பு பேர்கலமான விஶாலமான நமக்குச் சிற்றிடையான தான் நிகரோ! என்று தன் இறுமாப்பைக் காட்டி அத்திரு உதரபந்தநத்தினின்றும் தன் பக்கலிலே இசித்துக் கொள்ள, தம்முடைய நெஞ்சளவன்றே கரணியான (கரணங்கள்- இந்த்ரியங்கள், இவற்றையுடைய) தன்னையும் ஸ்வரூப ஜ்ஞாநாதிகளைப் பிறப்பித்து அடிமை கொண்டபடியைச் சொல்லுகிறார்' என்று. இவற்றின் கருத்துக்கள் இங்கேயே முன்பே விளக்கப்பட்டுள்ளன.

இனிமேலே கடைசிப் பாதத்தை அநுபவிப்போம். இங்கு நாம் ஒவ்வொரு பாசுரத்தையும் முழுவதுமாக விளக்கவில்லை. திரு அவயவத்தைப் பற்றிச் சொல்லும் ஈற்றடியை (கடைசிப் பாதத்தை) மட்டுந்தானே விவரிப்பதாக மேற்கொண்டுள்ளோம்.

அரங்கத்தம்மான் திரு ஆர மார்பதன்றோ அடியேனை ஆட்கொண்டதே!

எம்பெருமான் திரு அரங்கத்தில் திருக்காவேரியின் கரையிலே கிடந்து தபஸ் செய்து அடியேனை ஆட் கொண்டான்.

எம்பெருமானுக்கு அடிமை செய்ய நான்தானே தபஸ் செய்ய வேண்டும்? ஆனால் நான் செய்யவில்லை. அதற்குப் பதிலாக

அவனே திருவரங்கம் வந்து திருக்காவேரியின் கரையில் கிடந்து தபஸ் செய்து என்னைப் பெற்றான் என்கிறார்

''இப்பேற்றுக்கு (இந்தப் புருஷார்த்தத்திற்கு) ஆற்றங் கரையைப் பற்றிக் கிடந்து தபஸ் பண்ணினானும் அவனா யிருந்தது. இல்லையாகில் எனக்கு இக்கனவிய (கநம் உள்ள) பேற்றுக்கு வேறு உபாயம் உண்டாக மாட்டாதே' என்று ஆழ்வார் அருள்கிறார் என்று அவர் கருத்தை அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் அருளுகிறார்.

**திரு ஆரம் மார்பு அது அன்றோ:** பிராட்டியையும் முத்துக் களால் ஆன ஹாரத்தையும் உடையதான திருமார்பு அன்றோ அடியேனை ஆட்கொண்டது? எம்பெருமான் என்னை ஆட் கொள்ளவில்லை. அவனுடைய திருமார்புதான் என்னை ஆட் கொண்டது என்கிறார் திருப்பாணாழ்வார்.

இந்தத் திருமார்பு தங்கத்தினால் ஆன பெரிய பெரிய ஹாரங் களைப் பூண்டிருக்கிறது.

இதனால் ஸ்ரீ ஸூக்தத்தில் உள்ள பதத்தின் பொருள் நன்கு விளக்கப்படுகிறது. அதாவது ஸ்ரீ ஸூக்தத்தில் 'ஹிரண்ய ப்ரா காரம்', 'தங்கத்திலான ப்ராகாரத்தை - மதிள் சுவரை உடையவள் பிராட்டி என்று சொல்லப்படுகிறாள். லக்ஷ்மீ எழுந்தருளி இருக் கும் எந்தக் கோயிலுக்கும் தங்கத்தினால் மதிள் சுவர் அமைத் திருப்பதை யாரும் கண்டதில்லை. இன்று இந்தத் திருமார்பு இதற்கு வ்யாக்யாநம் செய்து விட்டது. திருமார்பின் நடுவில் பிராட்டி எழுந்தருளியுள்ளார். அவளைச் சுற்றிலும் பருத்த - அகன்ற தங்க மாலைகள் வளைந்து தொங்குகின்றன. இந்த ஹாரங்கள் பிராட்டியைச் சுற்றிலும் மதிள் சுவறுகள் போல் உயர்ந்து நிற்கின்றன. இந்தத் தங்க ஹாரங்கள் தான் பிராட்டிக்கு மதிள்களாக - ப்ராகாரங்களாக அமைந்து விளங்குகின்றன. ஆகவேதான் பிராட்டி 'ஹிரண்யப்ராகாரா' என்று சொல்லப் படுகிறாள் என்ற தத்த்வம் புலப்படுகிறது.





பெருமாளுடைய ப்ராகாரங்கள் செங்கல், கருங்கல் இவற்றா லாயிருக்கப் பிராட்டியின் ப்ராகாரங்கள் ஹிரண்யங்களா யிருக்கின்றன!

இப்படி எம்பெருமான் திருமார்பிலே அமர்ந்துள்ள பிராட்டி தான் எனக்கு ஶேஷத்வ (தாஸத்வ) ஜ்ஞாநத்தை உண்டு பண்ணினாள்.

பெருமாளை விட்டுப் பிரிந்து பிராட்டி அஶோகவநத்தில் சிறையிருக்கும்போதே ஜீவாத்மாக்களை எம்பெருமானோடு சேர்த்து வைக்கப் பார்த்தாள்.

'தன்னிடம் வந்த ராவணனை நோக்கி **तेन मैत्री भवतु ते** (தேந மைத்ரீ பவது தே) ஹே! ராவண! நீ எம்பெருமானிடம் நட்புக் கொள்வாயாக என்று உபதேஶித்தாள்.

பெருமாளுடன் கூடியிருக்கும் ஸமயங்களில் பெருமாளுக்கே உபதேஶம் செய்து ஜீவாத்மாக்களை அவனுடன் சேர்த்து வைக்க முயலுவாள். எம்பெருமான் ஜீவாத்மாக்களிடம் அபராதம் கண்டு அவர்களை ஏற்க மறுக்கும்போது 'உலகில் யார் தான் அபராதம் செய்யாமலிருக்கிறார்கள்! எல்லோரும்தான் அபராதம் செய்கி றார்கள். **न कश्चिन्नापराद्ध्यति** (ந கஶ்சிந்நாபராத்யதி) என்று எம்பெருமானுக்கு உபதேஶிப்பாள்.

இப்போது மார்பில் இருக்கும்போது ஜீவனும் கிட்டி வந்தால் இருவரையும் சேரவிடப் பார்க்கமாட்டாளோ? முன்பெல்லாம் ஶேஷத்வ ஜ்ஞாநமில்லாமையால் அகன்று சென்றேன். இப் போது அதை உண்டுபண்ணி அவனுடன் சேரவைக்கப் பார்க்கிறாள்.

இங்குள்ள வாக்யங்கள் மிக அழகியன.

இவனை (ஜீவனை)க் குறித்து 'தேந மைத்ரீ பவது தே' என்றும், 'அவனை (எம்பெருமானை)க் குறித்து' 'ந கஶ்சிந்நாப ராத்யதி' என்றும் சிறையிலிருந்தே (ஸ்ரீ ராமாவதார காலத்தில் ஸீதாதேவி அஶோகவநமாகிற சிறையிலே இருந்துகொண்டே) சேரவிடப் பார்க்குமவள் மார்பிலே இருந்தால் சேரவிடச் சொல்ல வேணுமோ!

இப்படிப்பட்ட ஶேஷத்வஜ்ஞாநம் (தாஸத்வஜ்ஞாநம்) இவருக்குப் பிறந்துள்ளதால்தான் இந்தப் பாசுரத்தில் 'அடியேனை ஆட்கொண்டதே' (தாஸனான என்னை அடிமை கொண்டது') என்கிறார் ஆழ்வார்.

சிறிய திருவடியான அநுமனும் ஸ்ரீ ராமனிடமிருந்து அஶோக வநம் வந்து ஸீதையை ஸேவித்து நிற்க, அவள் 'நீ யார்' என இவனை வினவ இவனும் **वानरोऽहं महाभागे! दूतो रामस्य धीमतः** (வாநரோऽஹம் மஹாபாகே! தூதோ ராமஸ்ய தீமத:।) ஸௌபாக்யவதியான ஸீதாதேவியே! 'நான் ராமனுடைய தூதன்' என்று தன்னை ராமதூதனாகத்தான் தெரிவித்துக் கொண்டான். கூலிக்குத் தூது போவாரையும் தூதன் என்று சொல்வதுண்டு. இவனே பிறகு ராவணன் இருப்பிடம் செல்லுகிறான். இவனைப் பார்த்த ராவணனும் 'நீ யார்' என இவனைக் கேட்கிறான். அங்கு இவன் சொல்லும் வார்த்தையை நன்கு கவனிக்க வேண்டும். **'दासोऽहं कोसलेन्द्रस्य रामस्याऽक्लिष्टकर्मणः।'** (தாஸோऽஹம் கோஸலேந்த்ரஸ்ய ராமஸ்யாऽக்லிஷ்டகர்மண:) அநாயாஸமாகவே செயற்கரியன செய்யும் ராமனுடைய தாஸன் நான் என்றான்.

பிராட்டியிடம் இவன் சொன்ன வார்த்தையையும் பிறகு ராவணனிடம் இவன் சொன்ன வார்த்தையையும் நன்கு உற்று நோக்க வேண்டும்.





பிராட்டியிடம் தன்னை வாநரன் என்று சொல்லிக் கொண்டே ராமதூதன் என்றும் சொல்லிக் கொள்கிறான். ராவணனிடம் சொல்லும்போது தன்னை வாநரன் என்று சொல்லிக் கொள்ள வில்லை 'தாஸன்' என்று மட்டுமே சொல்லிக் கொள்கிறான். இந்த மாற்றத்திற்குக் காரணம் பிராட்டியின் கடாக்ஷமே ஆகும். வால்மீகியும் **'सीतामाश्रित्य तेजस्वी'** (ஸீதாமாஶ்ரித்ய தேஜஸ்வீ) 'ஸீதையை அடைந்த பிறகு தேஜஸ் பெற்றவன் அநுமன்' என்று அருளிச் செய்துள்ளார். ஸீதா கடாக்ஷத்தால் தாஸத்வ ஜ்ஞாநம் பிறந்த பிறகு, தான் வாநரன் என்ற ஜ்ஞாநம் போய்விட்டது. ஆகவே தான் ராவணனிடம் தன்னைப் பற்றிச் சொல்லும்போது 'வாநரன்' என்று சொல்லிக் கொள்ளாமல், 'தாஸன்' என்று மட்டுமே சொல்லிக் கொண்டான்.

**அடியேனை ஆட்கொண்டது:-** தாஸனான என்னை அடிமை கொண்டது, முடி சூட உரிமை பெற்ற ராஜகுமாரன் ராஜ்யம் இழந்து கிடக்க அவனை அழைத்து அவனுக்கு முடிசூட்டி ராஜ்யத்தைக் கொடுக்குமாப்போலே கைங்கர்ய ஸாம்ராஜ்யத் திலே முடி சூடுவதற்கு உரியவனான நான் அஹங்காராதிகளாலே அதை இழந்து கிடக்க என்னைக் கூப்பிட்டு முடி சூட்டியது இந்தத் திருமார்புதான்.

மூன்றாவது பாசுரத்தில் பிராட்டி கடாக்ஷம் பெறுவதற்கு முன்னமேயே அதாவது திருமார்பைக் கிட்டுவதற்கு முன்ன மேயே பீதாம்பரத்தையும், உந்தியையும் திருநாபீகமலத்தையும் ஸேவித்தபோதே 'அடியேன்' உள்ளத்து இன்னுயிரே' என்று தன்னை 'அடியேன்' என்று ஆழ்வார் ஸாதித்துள்ளாரே, ஆகவே அப்போதே அவருக்கு ஶேஷத்வ ஜ்ஞாநம்- தாஸத்வ ஜ்ஞாநம் வந்து விட்டதே. இப்படி பிராட்டி கடாக்ஷத்தாலே தான் இவருக்கு ஶேஷத்வ ஜ்ஞாநம் உண்டாயிற்று என்று கூற முடியுமா என்ற கேள்விக்கும் இங்கு பூர்வர்கள் உரையில் பதில் கூறியுள்ளார்கள்.

முன்பெல்லாம் கூலிச் சேவகரைப்போலே அழகுக்குத் தோற்ற அடிமை அது. இது பிறந்துடைய அடிமை. முன்பு 'அடியேன்' என்று ஆழ்வார் அருளிச் செய்தது திருநாபியின் அழகு காரண மாகக் கூறியதாகும். வேறு எங்காவது இம்மாதிரி இருந்தால் அங்கும் தன்னை 'அடியேன்' என்று கூறிக்கொள்வார் போலும்.

கூலிக்கு அடிமை செய்வார் யார் கூலி கொடுத்தாலும் அடிமை செய்வார்கள். இப்போது பிராட்டி கடாக்ஷத்தினால் ஶேஷத்வ (தாஸன்) ஜ்ஞாநம் பெற்றுத் தன்னை அடியேன் என்று கூறிக் கொள்கிறார். இது ஸ்வரூபம் தெரிந்து கூறியபடியால் மற்றை யோரிடம் இம்மாதிரி கூறிக் கொள்ளமாட்டார் என்று ஸமாதாநம் கூறியுள்ளார்கள். ஆக ஸ்வரூபஜ்ஞாநம் பிறப்பதற்குப் பிராட்டி கடாக்ஷம் அவஶ்யம் வேண்டும் என்றபடி.

திரு-ஆர-மார்பு அது அன்றோ அடியேனை ஆட்கொண்டது, என்னை வஶீகரித்து ஸ்வரூப ஜ்ஞாநத்தை உண்டு பண்ணி அடிமை கொண்டது. இந்த திருமார்பு ஒன்றேதான். வேறு எதுவும் எனக்கு இம்மாதிரி ஜ்ஞாநம் தரவில்லை.

திருப்பாணாழ்வார் அருளிச் செய்கிறார் - என்னை வஶீகரிப்ப தற்குத் திருமார்பு ஒன்றே போதுமாயிருந்தது.

என்னைப் போன்றவர்தானே தொண்டரடிப் பொடி ஆழ்வாரும், அவரைத் திருமார்பு ஒன்றைக் கொண்டே திருத்த முடியவில்லை. பின்னர் தான் வஸிக்கும் ஊர், அதைச் சுற்றிப் பாயும் காவேரி, தான் பள்ளிகொள்ளும் ஆதிஶேஷன், தன்னு டைய ஆஶ்சர்யமான குணங்கள், திருமார்பு, பச்சை மாமலை போன்ற திருமேனி அழகு, தோள்கள், தாமரைக் கண்கள், சிவந்த திருப்பவளவாய், ஜ்வலிக்கும் திரு அபிஷேகம் (கிரீடம்), தேஜஸ் இப்படிப் பலவற்றைக் காட்டித்தான் அவரை வஶீகரிக்க வேண்டியதாயிற்று. இவையனைத்தையும் கண்ட பிறகு அவர்





'அடியேன்' என்றார். என்னை (திருப்பாணாழ்வாரை) வஶீகரிப் பதற்கு இவ்வளவு வேண்டாம். திருமார்பு ஒன்றே போதும் என்கிற திருப்பாணாழ்வார் திருவுள்ளத்தை இங்கு நாயனார் அருளிச் செய்யும் அழகைப் பார்ப்போம்.

'என்னைப்போலே இருப்பார் வேறே சிலரைத் திருத்தி அடிமை கொள்ளுகைக்கு 'பாயு நீர் அரங்கம் தன்னுள் பாம் பணைப்பள்ளிகொண்ட மாயனார் திரு நன் மார்வும்' மரகத வுருவும், தோளும், துவரிதழ்ப்பவளவாயும், ஆயசீர் முடியும், தேசும் என்று தாம் கிடக்கிற ஊருக்கு அலங்காரமான ஆற்றழகு தொடங்கிக் காட்ட வேண்டிற்று. எனக்கு மார்பு ஒன்றே அமைந்தது என்று. இங்குத் தொண்டரடிப்பொடி ஆழ்வார் அருளிய:-

**பாயுநீர் அரங்கம் தன்னுள் பாம்பணைப் பள்ளிகொண்ட**
**மாயனார் திருநன்மார்வும் மரகத உருவும் தோளும்**
**தூயதாமரைக் கண்களும் துவரிதழ்ப்பவள வாயும்**
**ஆயசீர் முடியும் தேசும் அடியரோர்க்கு அகலலாமே!**
**(திருமாலை 20)**

என்ற பாசுரம் கருத்தில் கொள்ளத்தக்கது. திருமார்பின் பெருமை நீண்டு விட்டதோ?

இனி ஸ்வாமி ஶ்ரீ தேஶிகன் தாம் அருளிய உரையில் ஸாதித்திருப்பதை அநுபவிப்போம்.

அவதாரிகை:-

மேல் இரண்டு பாட்டில் (5-6) நாராயண ஶப்தார்த்தம் உள்ளீடாகப் பெரிய பிராட்டியாருடைய நிவாஸத்தால் நிகரில்லாத திருமார்பையும் திருக்கழுத்தையும் அநுபவிக்கிறார் என்று அருளியுள்ளார். இப்பாட்டின் ப்ரதாநார்த்தம் நாராயண ஶப்தத்தின் உட்பொருளை உணர்த்துவது தான்.

மேலே இப்படி க்ஷுத்ரனான என் திறத்தில் இறங்கினவன் தான் தேறவொண்ணுத திருவில்லாத்தேவரில் ஒருவன் அல்லன். 'அகலகில்லேன் இறையும்' என்று 'அலர்மேல் மங்கை உறை மார்பன்' என்னுமிடத்தையும், ஶேஷபூதரான நமக்கு ஸ்ரீதரனே கைங்கர்ய ப்ரதிஸம்பந்தீ என்னுமிடத்தையும் திறம்பாத சிந்தைக்குச் சிக்கெனக் காட்டிக் கொடுக்கிறார்.

அரங்கத்தம்மான் திருவாரமார்பு அதன்றோ அடியேனை ஆட்கொண்டதே. ஸர்வர்க்கும் அநுபவிக்கலாம்படி ஸர்வ ஸஹிஷ்ணுவாய்க் கொண்டு கோயிலாழ்வாருக்குள்ளே (கோயில் கர்பக்ருஹத்திலே) ஸௌலப்ய காஷ்டையோடு விரோதியாத ஸ்வாமித்வ காஷ்டையை உடையரான பெருமாளுடைய ஶேஷித்வபூர்த்திக்கு லக்ஷணமான திருவையும் அழகு வெள்ளத்துக்கு அணை கோலினாப்போலே இருக்கிற ஹாரத்தையும் உடைத்தான திருமார்வன்றோ. ஸ்வாபாவிக ஶேஷத்வாநுபவ ரஸிகனாய், அதுக்குமேலே 'குணைர்தாஸ்யம் உபாகத'னு மான என்னை ஸ்வரூபாநுரூபமான ஸ்தோத்ராதி ஶேஷ வ்ருத்தியிலே மூட்டி அதுக்கு இலக்காய் நின்றது' என்று அருளியுள்ளார்.

கட்டுரை நீண்டு விட்டது. இவற்றின் அர்த்தத்தை நீங்களே தெரிந்து கொள்ளுங்கள். பரமபத ஸோபாநத்தில் ப்ராப்தி பர்வாவில் முக்தன் இதை அநுபவிக்கும்படியை ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் முக்தன் எம்பெருமானை நெருங்கி அவனுடைய திருமார்பைப் பார்த்து மரகத ஶிலாதல மநோஹரமாய், மௌக்திக ஸ்ரீவத்ஸ-கௌஸ்துப வநமாலாவிராஜிதமாய், அலர்மேல்மங்கை இறையும் அகலகில்லேன் என்று உறையும்படி அத்யந்த போக்யமான திருமார்பை அநுபவித்து 'ஆரமார்பதன்றோ அடியேனை ஆட்கொண்டது' என்பது என்று அநுபவிப்பதையும் நாமிங்கு அநுபவிக்க வேண்டும்.





மேலும் 'பகவத்த்யாநஸோபாநம்' 'தேவநாயக பஞ்சாஶத்' மற்றும் மற்றையோருடைய ஸ்தோத்ரங்கள் இவற்றில் திரு மார்பைப் பற்றி விஶேஷங்கள் பற்பல உள. அவை இங்கு எழுதப்படவில்லை. ஆங்காங்குக் கண்டு கொள்வது.

இதற்கு அடுத்து எம்பெருமானுடைய திருக்கழுத்து இப்போது திருமார்பு கூறிய அதன் பெருமைகளையும் விஞ்சி (மீறி)யதாய் இருக்கும் தன் பெருமையைக் கூறி, காட்டி, திருப்பாணுழ்வாரை உய்யக் கொள்ளுகிற விதத்தை அடுத்த பகுதியில் பார்ப்போம். அதுவரை எம்பெருமான் திருமார்பின் பெருமைகளையே சிந்தித்திருப்போம். திருக்கழுத்தின் பெருமையை அநுபவிக்க ஒருமாத காலம் காத்திருங்கள். அப்போதுதான் இவை (திருமார்பின் பெருமைகள்) நம் மநத்தில் தரித்து நிற்கும். ஜீர்ணமாகும். பிறகு திருக்கழுத்தின் பெருமையும் மனத்தில் படும்.

**वक्षसो महिमा चैवं सुदूरं मां व्यलेखयत् ।**
**अतो मया नाऽपराद्धं अपराद्धं हि वक्षसा ॥**

(வக்ஷஸோ மஹிமா சைவம் ஸுதூரம் மாம் வ்யலேகயத் ।
அதோ மயா நாऽபராத்தம் அபராத்தம் ஹி வக்ஷஸா ॥)

---

பாரமாய பழவினைபற்றறுத்து ✱ என்னைத்தன்
வாரமாக்கிவைத்தான் வைத்ததன்றிஎன்னுள்புகுந்தான் ✱
கோரமாதவம்செய்தனன்கொல்அறியேன் அரங்கத்தம்மான் ✱ திரு
**வாரமார்பதன்றோ அடியேனை ஆட்கொண்டதே.** (5)

## 6. ''முற்றும் உண்ட கண்டம்''

**हरेः कण्ठस्त्वथ ब्रूते माहात्म्यं स्वकमद्भुतम् ।**
**नारायणयतीशानः एतल्लिखति सादरम् ॥**
**यद्यपि श्रीहरेर्वक्षः भाति सर्वैर्विभूषणैः ।**
**तथाऽपि तानि सर्वाणि कण्ठ एव बिभर्ति हि ॥**
**वक्षस्स्थिताऽपि सा लक्ष्मीः कण्ठमेवाऽऽलिङ्गति प्रियम् ।**
**तस्मादयं कण्ठभागः वक्षसोऽपि विशिष्यते ॥**

ஹரே: கண்டஸ்த்வத ப்ரூதே மாஹாத்ம்யம் ஸ்வகம் அத்புதம் ।
நாராயணயதீஶாந: ஏதல்லிகதி ஸாதரம் ॥
யத்யபி ஸ்ரீ ஹரேர் வக்ஷ: பாதி ஸர்வைர் விபூஷணை: ।
ததாऽபி தாநி ஸர்வாணி கண்ட ஏவ பிபர்தி ஹி ॥
வக்ஷஸ்ஸ்திதாऽபி ஸா லக்ஷ்மீ: கண்டமேவாऽऽலிங்கதி ப்ரியம் ॥
தஸ்மாதயம் கண்டபாக: வக்ஷஸோऽபி விஶிஷ்யதே ॥

எம்பெருமானுடைய திருமார்பின் அழகைத் திருமார்பு சொல்லக் கேட்டுத் திருப்பாணாழ்வாருடைய திருவுள்ளம் அந்தத் திருமார்பில் ஈடுபட்டது.

இப்பாட்டில் திருமார்புக்கு மேலே இருக்கிற எம்பெருமானுடைய திருக்கழுத்து இப்போது தன் பெருமையை எடுத்துக் கூறித் திருப்பாணாழ்வாருடைய திருவுள்ளத்தைத் தன்னிடத்தில் இழுத்துக் கொள்கிறது.

எம்பெருமான் திருமார்பினுடைய பெருமை சென்ற பகுதியில் அதிகமாக நீண்டுவிட்டது. இதைக் கண்டதும் எம்பெருமான் திருக்கழுத்துக்கு வந்துவிட்டதே கோபம்! என்னாலே பெருமை





பெறும் திருமார்பு என் பெருமையைச் சிறிதும் எண்ணாமல், சொல்லாமல், தன் பெருமையை மட்டுமே கூறிக் கொண்டது. ஸ்ரீமத் அழகிய சிங்கரும் திருமார்புக்கு இவ்வளவு பெருமை வரக்காரணம் யார் என்பதை ஆராயாமல் அதன் பெருமையிலே ஈடுபட்டு இவ்வளவு விரிவாக எழுதியுள்ளாரே என்றெல்லாம் கோபித்துக் கொண்டதும், நாம் (அழகிய சிங்கர்) திருக்கழுத்தை ஸமாதாநப்படுத்தி, உன்னுடைய பெருமையையெல்லாம் நீ எடுத்துக் கூறு. அதையும் அப்படியே விவரித்து விடுகிறோம். இதன் மூலம் பல்லாயிரக்கணக்கானவர்கள் உன் பெருமையை உணர்ந்து ரஸிப்பார்கள் என்று சொன்னோம். இதனால் ஶாந்தமான எம்பெருமான் திருக்கழுத்து தன்னுடைய பெருமையைக் கூறுகிறது. இதைப் பார்க்கும்போது திருமார்பைவிட எம்பெருமான் திருக்கழுத்தே சிறந்தது என்று நாமும் அறிந்து மகிழ்கிறோம். பிறரும் அறிந்து மகிழ்வார்கள்.

திருமார்பு தன் பெருமைக்குக் கூறிய காரணங்கள் யாவை? (1) ஹாரம் முதலான எல்லாத் திருவாபரணங்களையும் என் (மார்பு) மீதுதானே சாற்றுகின்றனர்? நான் மிகவும் பரந்து விஶாலமான இடம் படைத்திருப்பதால் ஆபரணங்கள் அனைத்தும் ப்ரகாஶிப்பது என்னிடத்தில் தானே?

இதை மறுத்துத் திருக்கழுத்து கூறும் தன் பெருமையைப் பாருங்கள்! திருவாபரணங்களைத் தாங்கி விளங்குகிறது திருமார்புதான். ஆனால் அத்தனை திருவாபரணங்களும் அந்தரத்திலா தொங்குகின்றன? அவற்றை யார் தாங்கி நிற்கிறார்? என்பதை யாரும் யோசித்துப் பார்க்கவில்லை. நான் (திருக்கழுத்து) மிக்க உறுதியுடன் பருத்து நீண்டு இருப்பதால் என்மீது அத்தனை ஆபரணங்களையும் தொங்க விடுகிறார்கள் பக்தர்கள். இத்தனை திருவாபரணங்களையும் நான் (திருக்கழுத்து) தாங்காவிட்டால் அவை எப்படித் திருமார்பில் தொங்கி விளங்கும்?

ஒவ்வொரு திருவாபரணமும் எவ்வளவு கனத்திருக்கிறது பார்த்தீர்களா! பழைய காலத்து ராஜாக்கள் உயர்ந்த பொன்னை அதிகமாகச் சேர்த்து வைரம், கெம்பு முதலான சிறந்த கற்களையும் பதித்து ஸமர்ப்பிக்கிறார்கள். இத்தனை கனத்தையும் (பாரத்தையும்) தாங்குவது யார்? திருமார்பு இந்தத் திருவாபரணங்களின் எடையை அறியுமா! இவற்றைத் தாங்குவதில் கொஞ்சமாவது ஶ்ரமத்தை அறியுமா?

திருவாபரணம் கனமாக கெட்டியாக இருந்தால் இதைப் பார்த்து கழுத்து வலிக்கப் போகிறதே! என்று தானே ஸாதாரண மக்களும் கூறுகின்றார்கள் உலகில்?

இத்தனை பளுவையும் அதாவது கனத்தையும் நான் (திருக்கழுத்து) தாங்கி நிற்கிறேன். திருமார்பில் பட்டதும் படாதது மாகத் திருவாபரணங்கள் விளங்குகின்றன. இதைக் கொண்டு திருமார்பு தன் பெருமையைப் பறை சாற்றுகின்றது. அன்று திருப்பாணாழ்வாரும், இன்று ஶ்ரீமத் அழகியசிங்கரும் இதில் மயங்கி விடுவார்கள். பக்கம் பக்கமாக எழுதி மக்களையும் திருமார்பின் அழகில் ஈடுபடச் செய்து அவர்களையும் மயக்குகின்றனர்!

இப்போது நன்கு யோசித்துப் பாருங்கள் நீங்கள். நான் (திருக்கழுத்து) பொறுமையுடன் இத்தனை திருவாபரணங்களையும் தாங்கி நிற்காவிடில் திருமார்பில் திருவாபரணங்கள் எப்படித் தொங்கும்? தங்கும்? ஆகத் திருமார்பின் பெருமைக்குக் காரணம் நான்தான்.

(2) திருமார்பு பெருமைக்குக் கூறிய மற்றோர் காரணம் - பெரிய பிராட்டியாருக்கு (மஹாலக்ஷ்மிக்கு) வாஸஸ்தாநமாயிருக்கும் பெருமை எனக்குத்தானே உண்டு. என்மீதுதானே அவள் அமர்ந்திருக்கிறாள் என்பது.





இதை மறுத்துத் திருக்கழுத்து கூறும் தன் பெருமையையும் பாருங்கள். திருக்கழுத்து கூறுகிறது-

பெரிய பிராட்டியார் மஹாலக்ஷ்மி எம்பெருமான் திரு மார்பில் எப்படி நிலையாக இருக்கிறாள்? பிராட்டியின் திருமேனியை ஏதாவது பசை கொண்டு ஒட்டி வைத்திருக்கிறார்களா? இல்லையே!

எம்பெருமான் தன் திருமார்பில் நிறைய திருவாபரணங்கள் சாற்றிக் கொண்டிருக்கிறான். அவற்றுள் பத்மம் போன்ற வடிவமைந்த பதக்கமும் நீண்டு விளங்குகிறது. அதிலே ஏறி அமர்ந்துள்ளாள் பிராட்டி. அந்தத் தாமரைப் பதக்கத்தை முன் கூறிய வகையில் தாங்குவதும் நான்தானே:

அந்தப் பதக்கம் உறுத்துகிறது: என்னால் தாங்கமுடியாது என்று சொல்லி அதைக் கழற்றிவைத்து விட்டால்? அது என்ன, அந்த பத்ம பதக்கத்துடன் அவளும் பெட்டியில்தானே தூங்க வேண்டும். நான்தான் ஶ்ரமம் பாராட்டாமல் அந்தப் பத்ம பதக்கத்தைத் தாங்கி நிற்கிறேன். அவள் (பிராட்டி) ஜம் என்று அதில் அமர்ந்துள்ளாள். பிறகு திருமார்பு நான்தான் பிராட்டிக்குக் கோயில் கட்டணம். வாஸஸ்தாநம் என்றெல்லாம் சொல்லிக் கொள்கிறது. உண்மையில் அவளையும் தாங்குவது நான்தானே.

சிலருக்குக் கழுத்து குறுங்கழுத்தாக இருக்கும். நிறைய திருவாபரணங்களைச் சாற்றமுடியாது. நான் (எம்பெருமானுடைய திருக்கழுத்து) அப்படி அல்லாமல் நீண்டு பருத்து உருண்டு திரண்டு விளங்குகிறேன். என்னுடைய உயர்வினால் தான் நிறைய திருவாபரணங்கள் என் மீது சுமத்துகிறார்கள். நானும் தாங்கி நிற்கிறேன். சுமப்பது நான், பேர் வாங்கிக் கொள்வது திருமார்பு.

இப்படி நான் தங்கத் திருவாபரணங்கள் பலவற்றைத் தாங்கி

நிற்க அவை அகன்று பரந்த திருமார்பில் சூழ்ந்து பிராட்டிக்கு மதிற்சுவர்போல் விளங்க ஸ்ரீ ஸூக்தமும் பிராட்டியை ''ஹிரண்ய ப்ரகாராம்'' தங்கத்தினாலான ப்ராகாரத்தை உடையவள் என்று வர்ணிக்கிறது. இந்தப் பெருமைக்கெல்லாம் நான்தானே காரணம். ஆகப் பிராட்டி எம்பெருமான் திருமார்பில் 'அகல கில்லேன் இறையும்' என்று அகலாமல் எழுந்தருளியிருப்பது என்னால் தான். ஊஞ்சலைத் தாங்கி நிற்கும் வளைவுக் கம்பிகள் உறுதியுடன் இருந்தால்தான் ஊஞ்சலும் உறுதியுடன் இருக்கும். அதில் அமர்ந்து கொள்பவர்களும் அதை விட்டு அகலாதிருப் பார்கள். ஆகத் திருமார்பு பிராட்டிக்குக் கோயில் கட்டணமாக (வாஸஸ்தாநமாக) இருப்பதற்கும் நான்தான் காரணம், என்று திருக்கழுத்து கூறுகிறது.

மேலும் தொடர்ந்து கூறுகிறது - ஸ்ரீ பட்டர் என்ற ஆசார்யர் தன்னைப் பற்றிச் சிறப்பாகக் கூறியிருப்பதை எடுத்து காட்டுகிறதே திருமார்பு! என்னைப் பற்றி அந்த ஆசார்ய ஶ்ரேஷ்டர் என்ன கூறியுள்ளார் என்பதையும் நானே கூறுகிறேன், கேளுங்கள் என்கிறது திருக்கழுத்து.

செழித்து வளர்ந்த கன்றான பாக்கு மரத்தினுடைய கழுத்து மிக அழகியதாக இருக்கும். இது உலகில் ப்ரஸித்தம். ஶங்கமும் (சங்கும்) மிக அழகியதாக இருக்கும். சங்கினுடைய கழுத்து- நடுபாகம் நன்கு உருண்டு பருத்துத் திரண்டிருக்கும். மேற்புறமும் அடிப்புறமும் சற்றுச் சுருங்கி இருக்கும். இவற்றின் அழகைக் கொண்டு விளங்குகிறது ஸ்ரீ ரங்கநாதனுடைய திருக்கழுத்து. கமுகின் - இளம் பாக்கு மரத்தின் - கழுத்து பசுமை நிறம் கொண்டு பசுகு பசுகு என்றிருக்கும். ஸ்ரீ ரங்கநாதனுடைய திருக்கழுத்தாகிய நானும் அவ்வாறே அதனினும் மேலாகவே பருத்துப் பசுமை நிறம் கொண்டு விளங்குகிறேன்.





சங்கினுடைய கழுத்தின் மேற்புறத்தில் சுற்றிலும் கோடுகள் இருக்கும். அவ்வாறே என்னிடமும் (திருக்கழுத்தினிடத்திலும்) கோடுகள் உள்ளன. இதற்குக் காரணம் தெரியுமா? பிராட்டி திருமார்பில் இருக்கிறாளே தவிர அவள் மகிழ்ந்து எம்பெரு மானை ஆலிங்கநம் செய்துக் கொள்ளும்போது- அதாவது தழுவிக் கொள்ளும்போது அவளுடைய திருக்கைகள் யார் மீது படி கின்றன? சற்றாவது நீங்கள் யோசித்துப் பார்த்தீர்களா! அவள் திருமார்பில் இருந்தாலும் தழுவும்போது என்னைத்தான் தன்னுடைய திருக்கரங்களால் அணைத்துக் கொள்ளுகிறாள். அவளுடைய திருக்கைகள் நிறைய வளைகள் அணியப் பட்டுள்ளன. வளைகள் நிறைந்த தன்னுடைய திருக்கைகளால் என்னை (திருக்கழுத்தை) நன்கு அழுத்தித் தழுவும்போது அந்தத் திருக்கை வளைகள் அப்படியே என்மீது (திருக்கழுத்தின் மீது) படிகின்றன.

அது மட்டுமன்று. இப்படியே பூமி - நீளா தேவிகளும் பேரன்பினால் என்னை (திருக்கழுத்தை) ஆரத்தழுவுகிறார்கள். அவர்களுடைய திருக்கை வளைகளும் என்மீது படிகின்றன. அதனால் என்மீது நிறைய ரேகைகள் (கோடுகள்) புலப்படு கின்றன. இதனாலும் நான் (கழுத்து) சங்கைவிட மிக அழகுடன் திகழ்கிறேன்.

பிராட்டி திருமார்பில் இருக்கிறாளே தவிர திருமார்பை ஒருபோதும் ஆலிங்கநம் செய்து கொள்வதில்லை. என்னைத்தான் (திருக்கழுத்தைத்தான்) ஆலிங்கநம் செய்து கொள்கிறாள். இப்படிப்பட்ட ஏற்றம் எனக்குத்தானே உண்டு? திருமார்புக்கு உண்டா?

ஆக இப்படிப்பட்ட என்னைப் பார்த்து 'இந்தத் திருக்கழுத்து என்னை மகிழ்விக்கட்டும்' என்று ப்ரார்த்திக்கிறார் பட்டர். திருமார்பு ஆட்கொள்ளலாம், அதாவது ஶேஷபூதனாக்கிக்

கொள்ளலாம். ஆனால் ஸந்தோஷம் - மகிழ்ச்சி தருவது நான் தான். இந்த விஷயத்தை வெளியிடும் ஸ்லோகம் ஸ்ரீ பட்டர் அருளியது இதோ-

रमयतु स मां कण्ठः श्रीरङ्गनेतुरुदञ्चित-
क्रमुकतरुणग्रीवाकम्बुप्रलम्बमलिम्लुचः ।
प्रणयविलगल्लक्ष्मी विश्वम्भरा करकन्दली
कनकवलयक्रीडासङ्क्रान्तरेखइवोल्लसन् ॥

ரமயது ஸ மாம் கண்ட: ஸ்ரீ ரங்க்நேதுருதஞ்சித
க்ரமுக தருண க்ரீவா கம்பு ப்ரலம்பமலிம்லுச: ।
ப்ரணயவிலகல்லக்ஷ்மீ விஶ்வம்பரா கரகந்தளீ
கநகவலய க்ரீடாஸங்க்ராந்தரேக இவோல்லஸந் ॥

**(ஸ்ரீ ரங்கராஜஸ்தவம் பூர்வஶதகம் 104)**

இப்படிப் பல உதாஹரணங்களைக் காட்டி அவற்றினுடைய அழகையும் கொள்ளை கொண்டு விளங்குகிறது என்னுடைய (திருக்கழுத்தினுடைய) அழகு என்று அருளியுள்ளாரே பட்டர். இது ஒன்றே போதாதா!

மேலும் எம்பெருமான் எல்லோரையும் வாழவைப்பது கம்பீரமான தன்னுடைய திருக்குரலின் ஓசையினால் தானே, அந்தக் குரலை உடையவன் நான்தானே.

ஒருவன் பார்ப்பதற்கு அழகாக இருக்கிறான். ஆனால் அவனுடைய கண்டத்வநி நன்றாக இல்லை என்றால் அவன் உலகத்தாரால் மதிக்கப்படமாட்டான்.

எம்பெருமானுக்குக் கண்டத்வநியால் ப்ரஸித்தி உண்டு.

वाक्यमभ्याददे कृष्णः सुदंष्ट्रो दुन्दुभिस्वनः ।
जीमूत इव घर्मान्ते सर्वां संश्रावयन् सभाम् ॥





(வாக்யம் அப்யாததே க்ருஷ்ண: ஸுதம்ஷ்ட்ரோ துந்துபிஸ்வந: ।
ஜீமூத இவ கர்மாந்தே ஸர்வாம் ஸம்ஶ்ராவயந் ஸபாம் ॥)

துர்யோதந ஸபையில் ஸ்ரீ க்ருஷ்ணன் வார்த்தை அருள ஆரம்பித்ததும் துந்துபிஸ்வந:- துந்துபிவாத்யத்தின் ஒலிபோல் கம்பீரமான த்வநியை உடையவன் என்று வ்யாஸர் கொண்டாடுகிறார்.

இப்படியெல்லாம் மஹர்ஷிகள் கொண்டாடும்படியான பெருமை பெற்ற த்வநி என்னுடைய (கண்டத்தினுடைய) த்வநி தானே. எம்பெருமானுடைய கண்டத்வநியைத்தானே எல்லோரும் கேட்க விரும்புகிறார்கள். இம்பெருமையில் சற்றே குறைவான பெருமை ஸ்ரீ பாஞ்சஜந்யத்திற்கு- எம்பெருமான் திருக்கையில் உள்ள - ஶங்கத்திற்கு உண்டு. இதனாலும் என்னை (கண்டத்தை- கழுத்தை) ஶங்கத்தோடு ஒப்பிட்டுப் பேசுகிறார்கள் பெரியோர்கள். இப்படி உலகத்தையெல்லாம் வாழவைக்கும் பெருமை பெற்ற த்வநி- ஓசை எனக்கு மட்டும்தானே உண்டு.

திருவயிற்றில் தாய் யஶோதை கட்டின தாம்பின் தழும்பு எம்பெருமானுடைய ஸௌலப்யத்தை- எளிமையைக் காட்டுகிறது என்று திருவயிறு தன் பெருமையைக் கூறிற்று.

அடுத்தபடி திருமார்பு அன்று ஸ்ரீ க்ருஷ்ணுவதாரத்தில் தாய் யஶோதை பூட்டிய ஆமைத்தாலி, புலிநகம் இவை பதித்த ஆபரணங்கள் தன்னிடம் இருந்து கொண்டு எம்பெருமானுடைய ஸௌலப்யத்தைக் காட்டுகின்றன என்று அதன் பெருமையைக் கூறிற்று.

எனக்கும் எம்பெருமான் ஸௌலப்யத்தை - அதாவது எளிமையைப் - பறை சாற்றும் சான்று ஒன்று உண்டு என்று கூறுகிறது திருக்கழுத்து. அதாவது முன்காலத்தில் தூரத்தில் இருக்கும் ஒருவருக்கோ அல்லது பகைவர்களுக்கு நீதி சொல்லவோ ஒருவரைத் தூது அனுப்புவது வழக்கம். தூது செல்பவர் மிக

ஸாதாரணமானவராகத்தான் இருப்பார். அவர் சொன்னபடி எடுத்துச் சொல்லத் திறமையற்றிருப்பார். இது பொதுவான நியதி. ஆகையால் சொல்லவேண்டிய செய்திகளை ஓலையில் எழுதி அதை செல்பவர் கழுத்தில் கட்டிவிடுவார்கள். தூது செல்பவர் அந்த ஓலையுடன் செல்வார். இந்த நிலைமைக்குப் பாண்டவர்கள் கண்ணனை அன்று பயன்படுத்திக் கொண்டனர். கண்ணனும் இதற்கு இசைந்தான். ஸர்வஜ்ஞனான இவனைப் பாமரனாகக் கருதி இவனைத் தூது அனுப்பும்போது அவன் கழுத்திலே அன்று ஓலையைக் கட்டி அனுப்பினார்களாம் பாண்டவர்கள். அன்று அவர்கள் கட்டிவிட்ட மடக்கோலை (மங்கிய ஓலை) இன்றும் என் பக்கலிலே தான் இருக்கிறது என்கிறது எம்பெருமானுடைய திருக்கழுத்து. எம்பெருமானுடைய ஸௌலப்யத்திற்கு- எளிமைக்கு இதைக் காட்டிலும் வேறு என்ன சான்று வேண்டும்?

மேலும் கூறுகிறது திருக்கழுத்து - ப்ரளயம் என்னும் ஆபத்து வரும்போது திருவயிறு உலகம் அனைத்தையும் தன்னிடத்திலே வைத்துக் காப்பதாகக் கூறுகிறதே! அது எப்படி என்பதை யாராவது ஆராய்ந்தார்களா! வயிற்றுக்குள்ளே செல்வதற்கு வழி விட்டது யார்? நான்தானே? கழுத்தின் வழியாகத்தானே யாவும் வயிற்றுக்குள் புகவேண்டும்.

திருமங்கையாழ்வாரைக் கேளுங்கள் என் பெருமையை. என் வழியாக (கழுத்தின் வழியாக)த்தான் அன்று யாவும் திருவயிற்றுக்குள் சென்றன என்கிறார். செஞ்சுடரும், நிலனும், பொங்கார் கடலும், பொருப்பும்; நெருப்பும் நெருக்கிப் புகப் பொன்மிடறு அத்தனைபோது அங்காந்தவன் காண்மின் என்று.

இந்த எம்பெருமான் அன்று ப்ரளய காலத்தில் சந்த்ர ஸூர்யர்களாகிற தேஜஸ்ஸூம், பூமியும், கிளர்ந்தெழும் அலை கடலும், மலைகளும், அக்நியும் ஆகிய இவையனைத்தும் புகும்





படி நெடும்போது திருமிடற்றை - திருக்கழுத்தைத் திறந்து வைத்திருந்தவன் அன்றோ என்கிறார். ஆக நான் வழி விடவில்லை என்றால் உலகம் அனைத்தும் உள்ளே சென்று பாதுகாப்புடன் இருக்க முடியுமா! ஆக எம்பெருமான் உலகத்தை ரக்ஷிப்பது போல் நானும் (திருக்கழுத்தும்) உலகத்தை ரக்ஷிப்பவனாகிறேன். எனக்கும் ஜகத்ரக்ஷகத்வம் உண்டு என்றபடி.

இப்படியெல்லாம் எம்பெருமானுடைய திருக்கழுத்துத் தன் பெருமைகளை எல்லாம் எடுத்துக் காட்டித், திருப்பாணாழ்வாரை உய்யக் கொண்டது, ஸம்ஸாரமாகிற ப்ரளயத்திலிருந்தும் எடுத்து ரக்ஷித்தது என்று திருப்பாணாழ்வாரே அருளிச் செய்கிறார்.

இப்போது இங்கே கூறிய விஷயங்களை அழகிய மணவாளப் பெருமாள் நாயனாருடைய ஸ்ரீ ஸூக்திகளைக் கொண்டு அநுபவிப்போம். அவையாவன: ''கீழ்ப் பாட்டில் (அதாவது ஐந்தாவதான பாட்டில்) திருமார்பானது ஹாராத்யாபரண ஶோபையையும், பெரியபிராட்டியாருக்குக் கோயில் கட்டணமாகிற மேன்மையையும் காட்டித் தம்மை (திருப்பாணாழ்வாரை)த் திருவயிற்றினின்றும் வரவழைத்து எழுதிக் கொண்டபடியிறே சொல்லிற்று.

''இதில் (ஆறாவது பாட்டான இதில்) அந்தத் திருமார்புக்கு மேலாய் **''रमयतु मां स कण्ठः''** (ரமயது மாம் ஸ கண்ட:) ...என்கிறபடியே (இந்த ஶ்லோகமும் இதன் அர்த்தமும் முன்பு இங்கு விளக்கப்பட்டுள்ளது) கமுகுக்கன்றின் கழுத்துப்போலே பசுகு பசுகு என்றிருப்பதாய் ரேகாத்ரயாங்கிதமாய் (மூன்று கோடுகளால் அலங்கரிக்கப்பட்டதாய்) இரண்டருகும் நெருங்கி நடுவு பெருத்திருக்கையாலும் மொசுகு மொசுகு என்றிருக்கிற நாதத்தை (த்வநியை) உடைத்தாயிருக்கையாலும் ஸ்ரீ பாஞ்சஜந்யம் (ஶங்கம்) போலேயிருக்கிற திருக்கழுத்தானது (கூறுகிறது).

"இந்தத் திருமார்புக்குள்ளது, அலர்மேல் மங்கை உறை மார்பா! என்கிறபடியே பெரிய பிராட்டியாருக்குக் கோயில் கட்டணமாயிருக்கிற ஆகாரமும், திரு ஆரத்தாலே (ஹாரத்தாலே) அலங்க்ருதமான ஆகாரமுமேயன்றே. இவளைப் போலே (பெரிய பிராட்டியாராகிற மஹாலக்ஷ்மீ போன்ற) சங்குதங்கு முன்கையராயிருப்பார் (வளைகள் தங்கப் பெற்ற திருக்கைகளை யுடைய) அநேகம் நாய்ச்சிமார்கள் (பூமி-நீளாதேவிகள்) தங்கள் கைகளாலே அணைக்கையாலே அவ்வாபரணங்கள் அழுந்த அவற்றாலே முத்ரிதராய் இருப்போரும் நாம் அல்லவோ!

"ப்ரளயாபத்து வர ஸகலாண்டங்களையும் ததந்தர்வர்த்தி களையும் (அண்டத்திற்குள்ளிருக்கிற ஜீவ ராஶிகளையும்) ரக்ஷித்தோரும் நாம் அல்லவோ!

அது கிடக்க அவள்தான் (பெரிய பிராட்டியார்தான்) மார்பிலே இருந்து அணைப்பது நம்மையன்றோ?

அதுவும் கிடக்க பாண்டவர்கள் தூது விடுகிறபோது கட்டி விட்ட மடக்கோலை இன்று நம் பக்கலிலேயன்றோ கிடக்கிறது.

அந்த ஹாரந்தனக்கும் தாரகம் (धारक ம்) நாமல்லவோ"? என்றெல்லாம் கூறி தன்னுடைய ஆபரண ஶோபையையும், யௌவநத்தையும் ஆபந்நிவாரகத்வத்தையும் காட்டி என்னை (திருப்பாணாழ்வாரை) ஸம்ஸாரமாகிற ப்ரளயாபத்தினின்றும் உஜ்ஜீவிப்பித்தது என்கிறார்" என்று.

ஸ்வாமி ஸ்ரீ தேஶிகனும் ஸ்ரீ வரதராஜ பஞ்சாஶத்தில் பிராட்டி மகிழ்ந்து அடிக்கடி ஆலிங்கநம் செய்து கொள்வதால் அவளு டைய திருக்கை வளைகள் (ஸ்ரீ வரதராஜனுடைய) திருக்கழுத்திலே பதிகின்றன. அதனால் உண்டான தழும்புகள் - கோடுகள் உன்னுடைய திருக்கழுத்தை அழகு செய்கின்றன. இப்படிப்பட்ட அழகிய கோடுகள் வாய்ந்த திருக்கழுத்துடனேயே நாள்தோறும்





காலையில் ஆதிஶேஷஶயநத்திலிருந்து எழுந்திருக்கும் போது ஸேவை தருகிறாய். அந்தத் திருக்கோலத்துடனேயே விளங்கும் நீ என்னுடைய நன்னெஞ்சில் எப்பொழுதும் எழுந்தருளியிருக்க வேண்டும் என்று ப்ரார்த்திக்கிறார். ஶ்லோகமே அத்புதம். இது நம்முடைய மனத்திலிருந்தாலே ஸ்ரீ வரதராஜனும் அந்தத் திருக்கோலத்துடன் நம்முடைய மனத்தில் நிலைத்திருப்பது திண்ணம்.

**अनिभृतपरिरम्भैः आहितामिन्दिरायाः**

**कनकवलयमुद्रां कण्ठदेशे दधानः ।**

**फणिपतिशयनीयादुत्थितस्त्वं प्रभाते**

**वरद! सततमन्तर्मानसं सन्निधेयाः ॥**

அநிப்ருதபரிரம்பை: ஆஹிதாமிந்திராயா:

கநகவலயமுத்ராம் கண்டதேஶே ததாந: ।

பணிபதிஶயநீயாத் உத்திதஸ்த்வம் ப்ரபாதே

வரத! ஸததம் அந்தர்மாநஸம் ஸந்நிதேயா: ॥

***(ஸ்ரீ வரதராஜ பஞ்சாஶத் 47)***

இப்படிப்பட்ட பெருமை வாய்ந்த எம்பெருமானுடைய திருக்கழுத்து தம்மை உஜ்ஜீவிக்கச் செய்த விஷயத்தை ஆறாவ தான இந்தப் பாட்டின் பிற்பகுதியினால் அருளிச் செய்கிறார் 'அரங்கநகர்மேய அப்பன், அண்டரண்ட, பகிரண்டத்தொரு மாநிலம் எழுமால்வரை முற்றும், உண்டகண்டம் கண்டீர் அடியேனை உய்யக் கொண்டதே' என்று.

அண்டம் - ப்ரஹ்மாண்டத்திற்குள் இருக்கும் ஜீவராஶிகளை உடைய அண்டம்; இந்த அண்டத்தையும், பகிர் அண்டம் (வெளி

யில் உள்ள மற்றைய அண்டங்களையும்) தன்னுள்ளே கொண் டுள்ளமையால்; ஒரு மாநிலம் - ஒப்பற்ற மஹாப்ருதிவியையும்; எழுமால்வரை - ஏழு குலபர்வதங்களையும்; முற்றும்- சொல்லிச் சொல்லாதவற்றையும்; உண்ட-அமுது செய்த; கண்டம் கண்டீர் - திருக்கழுத்தானது, அடியேனை உய்யக் கொண் டது. தாஸனான என்னை உஜ்ஜீவிப்பித்தது என்று அருளுகிறார் ஆழ்வார். உண்ட கண்டம் - அமுது செய்ய திருக்கழுத்து. ப்ரஸாதங்களைத்தான் உலகில் உண்பதாகச் சொல்லுவார்கள். இங்கும் எம்பெருமான் உலகத்தை உண்டதாக (அமுது செய்ததாக) ஆழ்வார் அருளிச் செய்துள்ளார்.

அந்நத்தை - ப்ரஸாதங்களை உண்பது எப்படி போக்யமா யிருக்குமோ அவ்வாறே ஜகத்தை ரக்ஷிப்பதும் அதாவது அவற் றைத் தம்மிடத்தே வைத்துக் காப்பதும் எம்பெருமானுக்குப் பரம போக்யமாயிருக்கிறது என்பதைக் குறிக்கிறது.

கடோபநிஷத்தும் **यस्य ब्रह्म च क्षत्रं च उभे भवत ओदनः** (யஸ்ய ப்ரஹ்ம ச க்ஷத்ரம் ச உபே பவத ஓதந:) என்று உலகில் உள்ள சேதநங்கள், அசேதநங்கள் அனைத்தும் எம்பெருமானுக்கு ப்ரளய காலத்தில் ஓதநமாகிறது – அந்நமாகிறது என்கிறது. ஶேஷ பூதனான ஜீவாத்மாக்களுக்கு எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்வதுதான் தாரகம்– அவர்களை உயிர்வாழச் செய்வது. அது போல் ஸர்வஶேஷியான எம்பெருமானுக்கும் தனக்கு ஶேஷபூத மான உலகத்தை ரக்ஷிப்பதுதான் தாரகம். ஜகத்ரக்ஷணம் தான் அவனை (எம்பெருமானை) வாழவைப்பது ஆகும் என்கிறார்.

அடியேனை உய்யக் கொண்டது ஸ்வரூப ஜ்ஞாநத்தையும் பிறப்பித்து ஸம்ஸாரார்ணவத்தினின்றும் எடுத்து அக்கரை ஏற்றி **सन्तमेनम्** (ஸந்தம் ஏநம்) என்னும்படிப் பண்ணிற்று இப்படிப் பட்ட திருக்கழுத்து அன்றோ? என்கிறார்.





ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் தாம் அருளிய முநிவாஹநபோகத்தில் இப்பாட்டுக்கு அருளிய அர்த்த விஶேஷம் அநுபவிக்கத்தக்கது.

இந்தப் பாட்டினால் அருளிச் செய்யப்பட்ட அர்த்தங்களைச் சுருக்கி அருளுகிறார் ஸ்வாமி ஸ்ரீ தேசிகன்.

முற்றும் உண்டகண்டம் கண்டீர் என்பதால் திருக்கழுத்து செய்தருளிய உபகாரத்தைக் காட்டுகிறார் ஆழ்வார். ப்ரளய காலத்தில் எம்பெருமான் திருக்கழுத்து இந்த ஜகத்தைத் தன்னுள்ளே வைத்து ரக்ஷிக்காமல் போனால் என்ன ஆகியிருக்கும்? அவன் விபூதியான இந்த ஜகத்தை முற்றுமாக ப்ரளய ஸமுத்ரம் கொண்டு போயிருக்கும்.

திருமங்கையாழ்வார் இவ்விஷயத்தை மிக நன்றாக அருளி யுள்ளார்.

**..நெற்றிமேற் கண்ணனும் நிறைமொழிவாய் நான்முகனும் நீண்டநால்வாய்**
**ஒற்றைக் கைவெண் பகட்டின் ஒருவனையும் உள்ளிட்ட அமரரோடும்**
**வெற்றிப் போர்க்கடல் அரையன் விழுங்காமல்தான் விழுங்கி உய்யக்கொண்ட**
**கொற்றப்போராழியான் குணம் பரவாச்சிறு தொண்டர் கொடியவாறே.**

**(பெரிய திருமொழி -11.6.3)**

நெற்றிமேல் கண்ணன்-ருத்ரன், நிறைமொழிவாய் நான் முகன்- நான்கு முகங்களாலும் வேதம் சொல்லிக் கொண்டிருக் கும் சதுர்முகன், ஐராவதத்தின் பாகனான இந்த்ரன் மற்றும் உள்ள அமரர்கள் அனைவரையும் எம்பெருமான் தன் திருவயிற்றில் வைத்து ரக்ஷிக்காவிட்டால் இவர்கள் அனைவரையும் கடல் அரசன் விழுங்கியிருப்பான். அவ்வாறு இவர்களை அழியாதபடி காக்கின்றவனான எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங் களைத் துதி செய்யாத அல்பர்களானவர்கள் - மிகக் கொடிய வர்கள் ஆவார்கள் என்று திருமங்கையாழ்வார் இந்த மஹா குணத்தை விவரித்துள்ளார்.

இப்படி எம்பெருமான் ப்ரளய காலத்தில் இதர தேவதை களனைவரையும் தன் திருக்கண்டத்தின் மூலமாகத் தன் திருவயிற்றில் வைத்து ரக்ஷித்துப் பிறகு ஸ்ருஷ்டிகாலம் வந்ததும் இவர்கள் அனைவரையும் திருவாயினால் உமிழ்ந்து வெளிப்படுத் தினான். இதனால் எம்பெருமானுடைய திருவாயின் எச்சில் படாத வேறு தேவதை ஒன்றும் கிடையாது என்பதும் கூறப்பட்ட தாகிறது என்கிறார்.

ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் இந்தப் பாட்டுக்குச் செய்தருளிய அவதாரிகையில் இந்த அர்த்தங்கள் கூறப்படுகின்றன.

காரணவஸ்தையில் எல்லாக் கார்யங்களையும் தன் பக்க லிலே உபஸம்ஹரித்துப் பின்பு ஸ்ருஷ்டிக்கும்படிக்கு உதா ஹரணமாக 'வெற்றிப் போர்க்கடலரையன் விழுங்காமல் தான் விழுங்கி உய்யக் கொண்ட' உபகாரத்தைக் காட்டி நெற்றி மேற் கண்ணனும் நான்முகனும் முதலாக 'எம்பெருமான் உண்டு மிழ்ந்த எச்சில் தேவர் அல்லாதார் தாம் உளரே' என்னும் அர்த்தத் தைப் பேசிக் கொண்டு தம்மை (திருப்பாணாழ்வாரை) ஸம்ஸா ரார்ணவம் (ஸம்ஸார ஸமுத்ரம்) விழுங்காதபடி உய்யக் கொண்ட படியை உபாஸிக்கிறார் என்று ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன், கலியனுரை குடிகொண்ட கருத்துடையவர் ஆதலால், தம்முடைய வ்யாக்யா நத்தில் மேலே காட்டிய திருமங்கை ஆழ்வாருடைய ஸ்ரீ ஸூக்தி யைக் கொண்டு அர்த்த விஶேஷத்தைக் காட்டியுள்ளமை இந்த வ்யாக்யாநத்தில் விஶேஷம்.

ஸ்வாமி பரமபதஸோபாநத்தில் ப்ராப்தி பர்வாவில் முக்தன் திருக்கழுத்தை அநுபவிக்கும் விதத்தை இனி அநுபவிப்போம்:-

முக்தன் ஸ்ரீ வைகுண்டத்தில் ஆதிஶேஷ ஶயநத்தில் எழுந் தருளியிருக்கும் எம்பெருமானை நெருங்கி ஒவ்வொரு அவயவ மாக அநுபவித்து வரும்போது திருக்கழுத்தைப் பார்த்து:-





**कुरुष्व मामनुचरम्** (குருஷ்வ மாம் அநுசரம்) என்றிருப்பாரைக் கூவிக் கொள்ளும்போது **स्निग्ध-गम्भीर-मधुरनाद** மாய் (ஸ்நிக்த-கம்பீர-மதுர-நாதமாய்), நாய்ச்சிமாருடைய வளைத் தழும்போடு வாசியில்லாத **रेखा** (ரேகா) த்ரயத்தை உடைத்தாய், திருமேனி ஒளியாலே பசுத்த ஸ்ரீ பாஞ்சஜந்யம் போலே இருக்கிற திருக் கழுத்தைப் பார்த்து 'முற்றும் உண்ட கண்டம் கண்டீர் அடியேனை உய்யக் கொண்டது' என்று அநுபவிக்கிறான்.

இந்த ஸ்ரீ ஸூக்திகளின் அர்த்தம் அத்புதமானது. எம்பெரு மானுக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்று விரும்புகிறவர்கள் எம்பெருமான் தம்முடைய திருக்குரலாலே ஏவிப் பணி கொள்ள வேண்டும் என்று ஆசைப்படுவர். எம்பெருமானுடைய திருக் குரல் ஓசை அன்பு நிறைந்ததாயும், கம்பீரமாயும், இனியதாயும் இருக்கும். இப்படிப்பட்ட திருக்குரல் ஓசையைக் கொண்டு இந்தக் கைங்கர்யத்தை நீ செய் என்று நியமிக்க அதன் பிறகு அப்படியே கைங்கர்யம் செய்ய வேண்டும் என்று விரும்பு வார்கள்.

ஸ்ரீ பாஷ்யகாரரும் தாம் அருளிய ஸ்ரீ வைகுண்டகத்யத்தில் **''कदा मां भगवान् स्वकीयया अतिशीतलया दृशा अवलोक्य स्निग्धगम्भीर मधुरया गिरा परिचर्यायां आज्ञापयिष्यति''** (கதா மாம் பகவாந் ஸ்வகீயயா அதிஶீதலயா த்ருஶா அவலோக்ய ஸ்நிக்தகம்பீர மதுரயா கிரா பரிசர்யாயாம் ஆஜ்ஞாபயிஷ்யதி) எம்பெருமான் குளிர்ந்த தம்முடைய திருக்கண்களால் கடாக்ஷித்து அன்புடன் கம்பீரமான குரல் ஓசையினால் கைங்கர்யத்தில் என்னை எப் பொழுது நியமிக்கப் போகிறான் என்ற ஆசையை வெளியிட் டுள்ளார். இப்படிப்பட்ட திருக்குரல் ஓசைக்குக் காரணம் இந்தக் கண்டம் தானே என்று முக்தன் அநுபவிக்கிறானாம்.

திருக்கழுத்தின் வைபவத்தையும் சற்றேறக் குறைய திரு மார்பின் வைபவத்துக்குச்சரியாக நாம் இந்த பகுதியில் வெளி யிட்டுள்ளோம்.

ஆகவே எம்பெருமானுடைய திருக்கழுத்துக்கு நம் பேரில் கோபம் குறைந்திருக்கும் என நினைக்கிறோம்.

---

துண்ட வெண்பிறையன் துயர் தீர்த்தவன் * அஞ்சிறைய
வண்டு வாழ் பொழில் சூழ் அரங்க நகர் மேய அப்பன் *
அண்டரண்ட பகிரண்டத்து ஒரு மாநிலம் எழுமால் வரை * முற்றும்
உண்ட கண்டம் கண்டீர் அடியேனை உய்யக் கொண்டதே (6)



## 7 "திருப்பவளச் செவ்வாய்"

**अधरं मधुरं शौरेः अन्यावयवसौष्टवम् ।**
**अधरीकुरुते यस्मात्, तस्मात् सर्वातिशायि तत् ॥**
**एवं सर्वाधिकं रम्यं हरेरधरपल्लवम् ।**
**वयमप्यनुभूयाथ स्यामापहृतचेतसः ॥**

அதரம் மதுரம் ஶௌரே: அந்யாவயவஸௌஷ்டவம் ।
அதரீகுருதே யஸ்மாத், தஸ்மாத் ஸர்வாதிஶாயி தத் ॥
ஏவம் ஸர்வாதிகம் ரம்யம் ஹரேரதரபல்லவம் ।
வயமப்யநுபூயாத ஸ்யாமாபஹ்ருதசேதஸ: ॥

எம்பெருமானுடைய திரு உதட்டின் (திரு அதரத்தின்) பெருமை மிகச் சிறந்து விளங்குகிறது. இது எம்பெருமானுடைய மற்றைய அவயவங்களின் பெருமையைக் கீழ்ப்படுத்த வல்லதா யிருக்கிறது. இதனால் இதன் பெருமை யாவற்றினும் சிறந்து விளங்குகிறது. இப்படிச் சிறந்து விளங்கும் திரு அதரத்தின் அழகை அநுபவித்து நம்முடைய உள்ளத்தையும் அதில் ஈடு படுத்துவோமாக.

ஆறாவதான கீழ்ப்பாட்டில் எம்பெருமானுடைய திருக் கழுத்தின் பெருமையையும் இதில் திருப்பாணாழ்வார் ஈடு பட்டதையும் சென்ற பகுதியில் அநுபவித்தோம்.

எம்பெருமான் நமக்கு ஆபத்ஸகனாக அதாவது ஆபத் காலத்தில் நண்பனாக- இருந்து ரக்ஷிக்கிறான் என்பது ப்ரஸித்தம். ப்ரளய காலத்தில் உலகத்தை ப்ரளய ஸமுத்ரம் கொண்டு போகாத படித் தன்னுள்ளே வைத்து ரக்ஷிக்கிறது திருவயிறும் திருக்கண்ட மும் என்றெல்லாம் இவற்றின் பெருமைகள் பேசப்பட்டன.

இவற்றையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த திரு அதரம் (திரு உதடு) தன் கிட்டே ஆழ்வார் வரும்போது பார்த்துக் கொள் வோம் என்று பேசாமல் இருந்தது. இப்போது திருப்பாணாழ்வார் தனக்கு மிக அருகில் கழுத்தளவும் வந்த உடனே தன் பெருமை களைக் கூற ஆரம்பித்துவிட்டது.

ஏழாவதான இந்தப் பாட்டில் 'செய்யவாய் என்னைச் சிந்தை கவர்ந்ததுவே!'' என்று நான்காவது பாதத்தில் உள்ளது.

இதில் ஆழ்வாருடைய சிந்தையைக் கவர்ந்தது 'செய்யவாய்' என்று கூறப்படுகிறது. இங்குச் செய்யவாய் என்பது சிவந்த திருப் பவளத்தை - அதாவது திரு அதரத்தை - அதாவது திரு உதட்டைக் குறிக்கிறது. ஆக எம்பெருமானுடைய திரு உதடுகளின் பெருமை இதில் கூறப்படுகிறது.'

எம்பெருமானுடைய திரு வயிறும், திருக்கழுத்தும் எம்பெரு மானைப் போல ஆபத்காலத்தில் நண்பனாக இருந்து உதவுகின்ற காரணத்தினால்தானே ஆழ்வார் அவற்றில் ஈடுபட்டார். அதிலும் முதன்மை பெற்றவன் - அதாவது முன்னதாகவே வந்து ஆஶ்ரிதர் களை ரக்ஷிப்பவன் நான்தான் என்பதை எடுத்துக்காட்டி இந்தத் திரு உதடு ஆழ்வாரை வஶீகரிக்கிறது.

ஓய் திருப்பாணாழ்வாரே! நீர் எம்பெருமானுடைய திருவயிற் றிலும் திருக்கழுத்திலும் ஈடுபட்டீரே! என்ன காரணம்? ''எம் பெருமானைப் போலே ஆபத் காலத்திலும் இவை யாவற்றையும் தன்னுள்ளே வைத்து ரக்ஷிக்கின்றன' என்றுதானே? அந்த ஸமயத் திலும் அவற்றைக் காட்டிலும் முந்தி வந்து ரக்ஷிக்கிறவன் நான்தான் என்பதை நீர் அறியவில்லையா? சொல்லுகிறேன் என் பெருமையை. கேளும்.

ப்ரளயாபத்து நேர்ந்தபோது எம்பெருமானுடைய திருக் கழுத்தின் வழியே சென்று எம்பெருமானுடைய திருவயிற்றினுள் சென்றுவிட்டால் அதன் பிறகு ஆபத்து ஏதுமின்றி இருக்கலாம். ஆனால் திருக்கழுத்தினுள் புகுவதற்கு நுழைவாயிலாக (Gate) இருப்பது யார்? நான் தானே! (வாய் தானே) என்கிறது எம்பெரு மானுடைய திருவாய், அதோடு சேர்ந்து நிற்கும் திரு உதடு. வாய் இருந்தும் உதடுகள் அந்த வாயை நன்கு மூடிக் கொண்டு இருந்து விட்டால் ஒரு சிறு துண்டாவது- துளியாவது- உள்ளே செல்லுமா? எல்லாம் வெளியில்தானே இருக்க வேண்டும்? ஆக வாய் இருந்தும் வழி விடுபவன் நான் தான். நான் (உதடு) வழி விட்டால் அதற்குப் பின் திருக்கழுத்தும், திரு வயிறும் உலகத்தை ரக்ஷிக்கும். நான் வாயை மூடிவிட்டால் எதுவும் உள்ளே போக முடியாது. ஆகவே நான் முதலில் உலகுக்கு திரு வயிற்றின் உள்ளே போக வழி விடுகிறேன். இதை நீர் நன்கு உணர வேண்டும். உணர்ந்து விட்டால் என்னை (திரு அதரத்தை) விட்டு வேறு எங்கும் போக மாட்டீர். இப்படிப்பட்ட மஹிமை எனக்கு மட்டுமேதான் உண்டு.

இவ்விஷயத்தை நம்மாழ்வார் நன்கு அறிந்து வெளியிட் டுள்ளார்- திருவாய்மொழியில் 6-ம் பத்து முதல் திருவாய் மொழியில், முதற்பாட்டின் முதல் அடியினால். அதாவது உலகம் உண்ட பெருவாயா! என்று. எம்பெருமான் உலகம் எல்லா வற்றையும் உண்டானே! எப்படி உண்டான்? தான் பெருவாயனா யிருப்பதால் தானே உண்டான்? தன்னுடைய பெரிய திருவாயி னால் உண்டான் என்றபடி. பெருந்தொண்டையால் உண்டான் என்று அருளவில்லை. இவ்விஶேஷத்தை நீர் நன்கு உணர வேண்டும் என்கிறது திருஉதடு திருப்பாணாழ்வாரை நோக்கி.

ரக்ஷிக்கப்பட வேண்டிய - ரக்ஷ்யமான - உலகை விட எம்பெருமான் திறந்து வைத்திருந்த திருவாய் மிகப் பெரிய இடம் உடையதாய் இருந்தது என்றபடி. உதாரர்களாய் - தார்மிகராய் இருப்பவர்கள் ஒருவருக்காயிருந்தாலும் பெரிய மாளிகையைத்

திறந்து வைத்திருப்பது போல் எம்பெருமானும் தன் திருவாயை திருஅதரத்தைத் திறந்து வைத்திருந்தான் என்றபடி.

மேலும் எம்பெருமானை ஆஶ்ரயிக்க, அஞ்சி வருபவர்களை முதலில் ஆதரிப்பவனும் நானேயாவேன். பகைவர்களிட மிருந்து- பாபங்களிலிருந்து - அஞ்சி வருபவர்களை முதலில் அஞ்ச வேண்டாம் என்று கூறி ஆதரிப்பவனும் நானேயாவேன்.

இவ்வளவு பகைவர்கள் - விரோதிகள் - உள்ளனரே! இவ்வ ளவு பாபங்கள் உள்ளனவே! இவையனைத்திலிருந்தும் நாம் விடுபட்டு வாழ்வது எப்படி! என்று அஞ்சி வருபவர்களுக்கு ஆதரவு தர எம்பெருமான் திருக்கையில் உள்ள 'அபய முத்ரை' இருக்கிறதே, அதுவே அஞ்சல் அஞ்சல் (அஞ்சேல் அஞ்சேல் அதாவது அஞ்ச வேண்டாம் அஞ்ச வேண்டாம்) என்று ஆதரித்து அவர்களுக்கு அபயம் அளிக்கிறதே என்று சிலர் ஏன், நீர் கூட (திருப்பாணாழ்வார் கூட) அப்படி நினைக்கலாம். ஆனால் அந்த அபய முத்ரை அருகில் வந்தவர்களுக்குத் தானே தெரியும். அருகில் வந்த பிறகு தானே அபயமுத்ரை ஆதரித்து அபயம் தரும்.

அச்சத்தினால் எம்பெருமானுடைய அருகிலேயே வராமல் வெகு தூரத்திலேயே கண் மறைவாக இருக்கும் அபராதிகளுக்கு (பாபம் செய்தவர்களுக்கு) இந்த அபயமுத்ரை கண்ணில் படாது. ஆகவே அவர்களுக்கு அச்சமும் போகாது. ஆகவே ஆதரிப்பவர் இல்லாமலேயே அவர்கள் (அபராதம் செய்தவர்கள்) விலகியே போக நேரிடும். எம்பெருமானை ஆஶ்ரயிக்காமலேயே அவர்கள் ஸம்ஸாரத்தில் மூழ்கியே இருப்பார்கள்.

அவர்களுக்கும் வாழ்வளித்து அவர்களுடைய அச்சத்தைப் போக்கி அவர்கள் எம்பெருமானை ஆஶ்ரயிக்கச் செய்து வாழ வைப்பவன் நான். எப்படித் தெரியுமா? அச்சத்தினால் (பயத்தி னால்) அருகில் வராமல் தூரத்தில் இருப்பவர்களுக்கும் கேட்கும்





படி எம்பெருமான் ஒரு வார்த்தை அருளிச் செய்கிறான். அந்த வார்த்தையை அச்சத்தினால் தூரத்திலிருக்கும் அபராதிகளும் கேட்கிறார்கள். அவர்கள் அச்சம் தீருகிறார்கள். எம்பெருமான் அருகில் வருகிறார்கள். பிறகு எம்பெருமான் அபய ஹஸ்தத் தினால் தேற்றித் திருவடியை வணங்கி ஆஶ்ரயிக்குமாறு செய்து அவர்களுக்கு மோக்ஷம் வரையிலான ஸகல புருஷார்த்தங்களை யும் தந்தருள்கிறான்.

அந்த வார்த்தை யாரிடமிருந்து உண்டாகிறது? என்னிட மிருந்துதானே வருகிறது! அந்த வார்த்தைகளாவன- ஒன்று கடற்கரையில் பிறந்த வார்த்தை. அதாவது ஸ்ரீ ராமாவதாரத்தில் எம்பெருமான் ஸ்ரீ விபீஷணாழ்வானைக் குறித்து அருளிய வார்த்தை..अभयं सर्वभूतेभ्यः ददाम्येतद्व्रतं मम । (...அபயம் ஸர்வபூதேப்ய: ததாம்யேதத் வ்ரதம் மம) 'அஞ்சிவந்து அடையும் அனைவருக்கும் அபயம் தருகிறேன். இது என்னுடைய வ்ரதம்' என்பதாகும்.

மற்றொன்று- தேர்த்தட்டில் வார்த்தை. அதாவது ஸ்ரீ க்ருஷ்ணாவதாரத்தில் எம்பெருமான் அர்ஜுநனுக்காக அருளிய வார்த்தையாகும்....सर्वपापेभ्यो मोक्षयिष्यामि (...ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி) 'நீ விரும்பும் பலனை வரவொட்டாமல் தடுக்கும் பாபங்கள் அனைத்தையும் போக்கி அவற்றிலிருந்து உன்னை விடுவிப்பேன்' என்ற வார்த்தையாகும்.

இந்த வார்த்தைகள் யாரிடமிருந்து பிறந்தன? நம்மிடமிருந்து பிறந்த வார்த்தைகள்தானே இவை? இவற்றுக்குக் கண்டமும் (திருக்கழுத்தும்) காரணமாகலாம். ஆனால் ப்ரதாந காரணம் நானே தான்.

ஸ்வாமி நம்மாழ்வாரும் எம்பெருமானை நோக்கி 'உன் சோதி வாய் திறந்து தொண்டரோர்க்கு அருளி' என்று என்னுடைய

அழகை அநுபவிக்க ஆசைப்பட்டுப் ப்ரார்த்திக்கிறார். எம்பெருமான் வார்த்தை அருளிச் செய்யும்போது வார்த்தையின் சுவை - இனிமை ஒரு பக்கம் இருக்கட்டும். வார்த்தை அருளிச் செய்யும் போது என்னுடைய (திருவாயினுடைய) அழகும் பரம போக்யமாக அன்றோ இருக்கும். இம்மாதிரியான அழகு எம்பெருமான் திருமேனியில் வேறு எந்த அவயவத்திற்கு உண்டு? 'பூ அலருமாபோலேயாயிற்று வாய் திறந்து வார்த்தை அருளிச் செய்யும் போது திருமுகத்தில் பிறக்கும் செவ்வி அழகு'- என்றெல்லாம் பூர்வர்கள் என்னுடைய (திருஉதட்டின்) அழகை விளக்கியுள்ளார்கள்.

இதுவரை என்னுடைய (உதட்டினுடைய) உபகாரகத்வம் (நான் (உதடு) செய்யும் உபகாரங்களின் சிறப்பு) சொல்லப் பட்டது. இனிமேல் எனக்குள்ள இனிமை - பரமபோக்யத்வம், யாவராலும் அநுபவிக்கப்படும் தன்மையை விவரிக்கிறேன், கேளும்! என்று திரு அதரம் - தன் பெருமையை - தன் இனிமையை, விவரிக்கிறது.

ஆழ்வார் என்னைக் குறிப்பிடும்போது 'செய்யவாய்' சிவந்த வாய் என்று குறிப்பிடுகிறார். இந்தச் சிவப்பு நிறம் எனக்கு (உதட்டுக்கு) எப்பொழுதும் உண்டு. இது எனக்கு இயற்கையாகவே ஏற்பட்டதாகும். ஔபாதிகம் அன்று, அதாவது வேறு ஒரு காரணத்தினால் வந்ததன்று. மற்றைய அவயவங்களுக்கு உள்ள சிவப்பு இப்படிப்பட்டதன்று. சிவந்த கற்கள் பதித்த திருவாபரணத்தின் ஸம்பந்தத்தினால் மற்றைய அவயவங்களுக்குச் சிவப்பு வந்துள்ளது. கோவைப் பழம்போல் நான் (உதடு) சிவந்திருப்பதால் எல்லோரும் என்னைச் சுவைக்க விரும்புகின்றனர். ஸ்வாமி நம்மாழ்வாருடைய அநுபவத்தைப் பாருங்களேன்.





என்னுடைய இனிமையை ஆசார்யனுடைய உபதேஶமின்றி அறிய முடியாது. எம்பெருமானுடைய பெருமையை ஆசார்யனுடைய உபதேஶம் கொண்டுதானே அறிய முடியும். அவ்வாறே தான் என்னுடைய இனிமையை - சுவையையும் ஆசார்யனைக் கேட்டுத்தான் அறிந்து அநுபவிக்க முடியும்.

பெரியாழ்வாருடைய திருமகளாரான ஸ்ரீ ஆண்டாளும் எம்பெருமானுடைய திருப்பவளம் எனப்படும் என்னுடைய சுவையை ஆசார்ய ஸ்தாநத்தில் ஸ்ரீ பாஞ்சஜந்யம் என்ற ஶங்கத்தை வைத்து அதைக் கேட்டு அறிய முற்படுகிறார். அதை ஒரு பாசுரத்தின் மூலமாகவே வெளியிடுகிறார் தம்முடைய ப்ரபந்தத்தில். அந்தப் பாசுரமாவது:-

***கருப்பூரம் நாறுமோ? கமலப்பூ நாறுமோ?***
**திருப்பவளச் செவ்வாய் தான் தித்தித்திருக்குமோ?**
**மருப்பொசித்த மாதவன் தன் வாய்ச் சுவையும் நாற்றமும்**
**விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்லாழி வெண்சங்கே.**
***நாய்ச்சியார் திருமொழி 7.1***

எம்பெருமான் திருக்கைகளிலே ஐந்து ஆயுதங்கள் உள்ளன. அவற்றுள் சிறந்தது - உயர்ந்தது ஸ்ரீ சக்ரத்தாழ்வானே ஆவான். ஸ்ரீ சக்ராயுதமே ஆயுதங்களுக்கு அரசனாகிறான். ஆகவே ஹேதி ராஜன் எனப்படுகிறான். இவனைவிட்டு ஸ்ரீ பாஞ்சஜந்யம் எனப்படும் ஶங்கத்தை நோக்கிக் கேட்கிறாள் ஸ்ரீ ஆண்டாள் என்னுடைய (உதட்டினுடைய) சுவையை. ஏனென்றால் என்னுடைய சுவை ஶங்கத்திற்குத்தான் தெரியும். எப்பொழுதும் எம்பெருமானுடைய திருக்கையில் இருந்து கொண்டு என்னிடம் (உதட்டினிடம்) உள்ள அமுதத்தைப் பருகிவருகிறான் இவன். ஆகவே என்னுடைய பெருமை - சுவை அவனுக்குத்தான் தெரியும். நாம் கேட்கும் விஷயத்தை நன்கு அறிந்தவர்களிடம்தானே கேட்க முடியும்? கேட்க வேண்டும்?

'ஸீனியாரிடி'யில் சக்ரம் முதன்மை பெற்றிருந்தும் அதற்கு என்னுடைய சுவை - பெருமை தெரியாது. எம்பெருமானுக்கு அஸுரர்கள் முதலானோருடன் யுத்தம் நேர்ந்தால் பகைவர்களை அழிக்க அவனை எம்பெருமான் ஏவி விடுவான். அவனும் அதன்படி எம்பெருமான் திருக்கையை விட்டு அகன்று வெகு தூரம் சென்று விடுவான்.

ஆனால் ஶங்கத்தினுடைய நிலை அப்படிப்பட்டதன்று. யுத்தம் நேரும்போது எம்பெருமான் ஶங்கத்தைத் தம் திருவாயில் வைத்து ஊதுவான். அப்போது அந்த ஶங்கம் என்னுடைய சுவையை முற்றும் பருகிக் களிப்பான். ஆகையால் என்னுடைய (உதட்டினுடைய) மஹிமையை முற்றும் அறிந்தவன் ஸ்ரீ ஶங்கத் தாழ்வான்தான். ஆகவே அவனை நோக்கி எம்பெருமானுடைய வாய்ச்சுவை - வாய் அமுதம் - அதாவது என்னுடைய (உதட்டி னுடைய) சுவை, அமுதம் நறுமணம் இவை எப்படி இருக்கும் என்று விரும்பிக் கேட்கிறாள். ஆக ஸ்ரீ ஆண்டாளாகிற ஶிஷ்யை, ஶங்கம் என்ற ஆசார்யன் மூலமாக என்னுடைய (உதட்டி னுடைய) பெருமையை விரும்பிக் கேட்டு அறிகிறாள்.

ஹே ஶங்கமே! எம்பெருமானுடைய திருவாயின் (திரு உதட்டின்) சுவை எப்படி இருக்கும்? அவ்வாறே அதனுடைய நறுமணம் எப்படி இருக்கும்? நான் (ஸ்ரீ ஆண்டாள்) விருப்பம் கொண்டு கேட்கிறேன். கற்பூரம் போல் மணக்குமா! தாமரைப் பூப்போல நறுமணம் கொண்டிருக்குமோ? என்கிறாள்.

எம்பெருமானுடைய சிவந்த உதடு கூறுகிறது- ஓய் ஆழ்வீர்! எம்பெருமானுடைய அவயவங்களில் என்னைத் தவிர்த்த மற்றைய அவயவங்களுக்கு இத்தகைய பெருமை உண்டா! யாராவது யாரிடமாவது மற்றைய அவயவங்களின் பெரு மையைக் கேட்டதுண்டா?





ஆக ஆசார்யன் மூலமாகக் கேட்டறிய வேண்டிய பெருமை - சுவை எனக்கு மட்டும்தான் உண்டு.

ஸ்ரீ ஆண்டாள் என்னுடைய சுவையை அநுபவிக்க முடிய வில்லையே என்பதை வெளியிடும்போது கோபிமார்களுக்கு இந்த பாக்யம் கிடைத்ததே. அவர்களை விட பாஞ்சஜந்யம் என்ற ஶங்கம் என்னுடைய சுவையை எப்போதுமே அநுபவிக்கும் படியான பாக்யம் கிடைத்ததே என்ற தன் எண்ணத்தைப் பொறாமை உணர்ச்சியுடனே வெளியிடுகிறாள் - 'மாதவன் தன் வாயமுதம் பொதுவாக உண்பதனைப் புக்கு நீ உண்டக்கால் சிதையாரோ உன்னோடு செல்வப்பெருஞ்சங்கே' என்று.

இப்படியெல்லாம் எனக்கென்றே உரிய பெருமைகள் பலப்பல உள்ளனவே. ஆழ்வாரே! நீர் என்னிடம் வாரும். என் அழகை ரஸிப்பீராக என்று எம்பெருமானுடைய திரு அதரம் திருப்பாணாழ்வாரைத் தன்னிடம் இழுத்துக் கொள்ளுகிறது. அவ்வாறே ஆழ்வாரும் திரு உதட்டின் அழகைக் கண்டு அநுப வித்தார். அதிலேயே ஈடுபட்டார். அவ்வளவுதான்! ஆழ்வா ருடைய சிந்தையை- நெஞ்சத்தைக் கவர்ந்து விட்டது எம்பெரு மானுடைய திரு அதரங்கள்.

இந்த விஷயங்களைக் காட்டும் இவ்விடத்திய அழகிய மணவாளப் பெருமாளுடைய ஸ்ரீ ஸூக்திகளையும் அநுபவிப் போமிங்கு.

இந்தப் பாட்டின் உள் கருத்தை இந்தப் பாட்டின் அவதாரி கையில் அத்புதமாக அருளிச் செய்கிறார் இவர்.

ஆழ்வார் எம்பெருமானுடைய சிவந்த வாய் - உதடு - என்னைச் சிந்தை கவர்ந்ததுவே! என்கிறார். இதன் கருத்தாவது

தெப்பத்தைத் துணை கொண்டு ஸமுத்ரத்தைக் கடக்க வேண்டும் என்று ஸமுத்ரத்தில் இழிந்த ஒருவன் தெப்பத்தை

இழந்துவிட்டால் எப்படி இருக்கும்? அந்த நிலையில் தான் தற்போது திருப்பாணாழ்வார் உள்ளார் என்கிறார் அழகிய மண வாளப் பெருமாள் நாயனார்.

''ஏழாம்பாட்டில் திரு அதரத்தில் (உதட்டில்) அகப்பட்டபடி சொல்லுகிறார். 'நீஞ்சப்புக்குத் தெப்பம் இழந்தேன் என்னுமாப் போலே' என்று. 'கீழ்ப்பாட்டில், முற்றும் உண்ட கண்டம் கண்டீர் அடியேனை உய்யக் கொண்டது' என்று திருக்கழுத் தானது தன்னுடைய ஆபத்ஸகத்வாதிகளைக் காட்டித் தம்மை எழுதிக் கொண்டபடியையிறே சொல்லிற்று. இதுக்கு மேலான திருப்பவளச் செவ்வாயானது 'உலகம் உண்ட பெருவாயன்' என்கிறபடியே ஆபத்ஸகத்வத்தில் (ஆபத்காலத்தில் நண்பனா யிருக்கையிலும்) முற்பாடர் (முந்திக் கொள்பவர்) நாம் அல்லோ மோ! ஆஶ்ரித ரக்ஷணத்திற்கு உறுப்பாக **'सर्वभूतेभ्यो ददाम्येतद्व्रतं मम** (ஸர்வ பூதேப்யோ ததாம்யேதத்வ்ரதம் மம) **'मित्रभावेन सम्प्राप्तं न त्यजेयं कथञ्चन'** (மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந) **'सर्वपापेभ्यो मोक्षयिष्यामि'** (ஸர்வ பாபேப்யோ மோக்ஷ யிஷ்யாமி) என்றாப்போலே சொல்லுகிற மெய்ம்மைப் பெரு வார்த்தைக் கெல்லாம ப்ரதாந காரணம் நாம் அல்லோமோ!

ஓர் ஆபரணத்தால் இடு சிவப்பன்றிக்கே ஸ்வாபாவிக ஸௌந்தர்யம் உடையோமும் நாமல்லோமோ?

'கருப்புரம் நாறுமோ! கமலப்பூ நாறுமோ! திருப்பவளச் செவ்வாய் தான் தித்தித்திருக்குமோ!' என்று தேஶிகரைக் (ஆசார்ய ஸ்தானத்தில் சங்கத்தை) கேட்கும்படியான ஸௌந்தர்ய ஸாரஸ்யம் உள்ளிட்ட போக்யதையை உடையோமும் நாம் அல்லோமோ! என்றாப் போலே தன்னுடைய ஏற்றத்தைக் காட்டித் தம்முடைய திருவுள்ளத்தை அந்தக் கழுத்தினின்றும் தன் பக்கலிலே வர இசித்துத்துவக்க...அந்தத் திருப்பவளச்





செவ்வாயிலே தாம் அபஹ்ருத ஹ்ருதயராய் (நெஞ்சைப் பறி கொடுத்தவராய்) அகப்பட்டபடியைச் சொல்லுகிறார்' என்று.

ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் தாம் அருளிய முநிவாஹநபோகத்தில் அருளிச் செய்துள்ளதையும் இங்கே அநுபவிக்கவேண்டும். 'கையினார் சுரிசங்கனல் ஆழியர்' என்ற பாட்டில் தம் சிந்தையைத் 'தூமுறுவல் தொண்டை வாய்ப் பிரானுடைய கோலத்திரள் பவளக் கொழுந்துண்டங் கொல்' என்னும்படியான திருப்பவ ளத்தினழகு தன் வஶமாக்கிற்று' என்கிறார்.

ஸ்வாமி நம்மாழ்வாரும் எம்பெருமானுடைய திருப்பவ ளத்தின் - உதட்டின் அழகை மிக அழகாக வர்ணித்துள்ளார்.

எடுத்த எடுப்பிலேயே ஸ்வாமி நம்மாழ்வார் எம்பெரும னுடைய சிவந்த உதட்டைக் கண்டு மிகச் சிறந்த பெருமை பெற்ற ஒப்பற்ற கனியோ, அதாவது பழமோ? என்று வியக்கிறார். உலகத்தில் உள்ள பழங்களைப் போல் இல்லாமல் மிக விலக்ஷணமாக இருக்கும் பழம் இது. உலகத்துப் பழங்கள் பிஞ்சாய் இருக்கும், பிறகு காயாக இருக்கும். பழுத்துச் சில தினங்களுக்குள் அழுகிவிடும். இந்த நிலைகளில் அந்தப் பழத்தைச் சுவைத்து அநுபவிக்க முடியாது. பழமாய் இருக்கும் சிறிய காலத்தில் மட்டும்தான் அவை அநுபவிக்க உரியவை யாயிருக்கும்.

எம்பெருமானுடைய சிவந்த திரு அதரம் ஆகிய பழம் இவ்வாறின்றி எப்பொழுதுமே அநுபவிக்க உரியதாயிருக்கும். இதனால் தான் ஸ்வாமி நம்மாழ்வார் 'வாலியதோர் கனிகொல்' என்று வியந்து பாராட்டுகிறார். இது மட்டுமன்று- தான் செய்த பாபங்கள் தான் இவ்வாறு பழமாகப் பழுத்து எம்பெரு மானுடைய திரு உதடாக இருக்கிறதோ! என்றும் வியக்கிறார். ஸ்வாமி நம்மாழ்வார் நாயிகாபாவத்தில் தலைவித் தன்மையில் இவ்வாறு அருளிச் செய்கிறார்.

எம்பெருமானுடைய திரு அதரத்தை உடனே கடித்துச் சுவைத்து அதன் அமுதத்தைப் பருக வேண்டும் என்று நினைக்கிறார். ஆனால் அவ்வளவு எளிதில் நினைத்தபடியே அநுபவிக்க முடியவில்லை. ஆனாலும் அதில் உள்ள ஆசையை விட முடியவில்லை. அதனால் திருப்பவளக்கனி காணும் தோறும் ஆழ்வாரைத் துன்புறுத்துகிறது. அநுபவிக்கக் கிடைக்காத போது அமுதம் கூட விஷமாகி விடுகிறது. ஆகவே அமுதமும் விஷமாகும்படியாக நான் (ஸ்வாமி நம்மாழ்வார்) மிகுந்த பாபம் பண்ணியுள்ளேன். அந்தப் பாபம் பக்வமாகத் திரண்டு எம்பெருமானுடைய திரு உதடுகள் என்ற உருவத்தில் வந்து நம்மை நலிகின்றன- துன்புறுத்துகின்றன.

மேலும் பலவாறாக வியந்து பாராட்டியருளுகிறார் இந்த எம்பெருமானுடைய உதட்டை.

இப்படிப்பட்ட திரு அதரத்தின் அழகிலிருந்து நான் தப்ப முடியாமல் அகப்பட்டுக் கொண்டு தவிக்கிறேன் என்கிறார் ஸ்வாமி நம்மாழ்வார். 'ஏலும் திசையுளெல்லாம் வந்து தோன்றும்'. நானும் இவை நலியாத (துன்புறுத்தாத) இடந்தேடித் தப்ப விரகு (வழி) பாரா நின்றேன் (பார்த்தேன்). அதுவும் அந்தந்த இடங்களிலே வந்து தோன்றா நின்றது. பார்த்த பார்த்த இடம் எல்லாம் தானேயாய் (திரு அதரத்தின் அழகேயாய்) இரா நின்றது (இருந்தது).

ஏன் இப்படி எம்பெருமானுடைய திரு அதரத்தின் அழகு ஆழ்வாரைத் தொடர வேண்டும்? என்றால் அதற்குரிய காரணத்தையும் கடைசிப் பதத்தினால் அருளுகிறார். 'என் இன்னுயிர்க்கே' என்று.

நான் இதைவிட்டுச் விலகிச் சென்று தப்பிப் பிழைக்கக் கருதி எங்காவது சென்றபோதும் அங்கெல்லாம் இந்த அழகு தொடர்ந்தது நல்லதான என்னுடைய ஆத்மாவைப் பிடிப்பதற்காக என்று.





இப்படி ஆழ்வாரை மயக்கிய பெருமை இந்தத் திரு அதரத்திற்குத்தானே உள்ளது?

பரமபதஸோபாநத்தில் ப்ராப்திபர்வாவில் முக்தன் ஸ்ரீ வைகுண்டத்தில் எம்பெருமானை நேரில் ஸேவித்து அங்கு அவனுடைய திரு அதரத்தின் அழகிலே ஈடுபட்டு அநுபவிக்கும் வகையும் இதுவே.

'செம்பவளத்திரள்போலே' இருக்கிற திவ்யாதர பல்லவத்தைப் பார்த்து 'வாலியதோர்கனி கொல்? கோலம் திரள் 'பவளக் கொழுந்துண்டம் கொல்?', 'கருப்பூரம் நாறுமோ! கமலப்பூ நாறுமோ! திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ' - என்று.

இதன் பொருள் முன்னம் விளக்கப்பட்டதேயாகும்.

இவ்வாறாக எம்பெருமானுடைய திரு அதரம் தன் சிறப்பைக் காட்டி ஆழ்வாரைத் தன் பக்கத்துக்கு இழுத்துக் கொண்டு சென்று அவருடைய சிந்தையையும் பறித்துக் கொண்டது.

இதுவரை காட்டிய திரு அதரத்தின் பெருமைகளை ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் 'தேவநாயகபஞ்சாஶத்'தில் ஒரு ஶ்லோகத்தில் சுருக்கிச் சுவைபட அருளிச் செய்துள்ளார். அது பின்வருமாறு:-

தேவநாயகனே! உன்னுடைய திரு அதரத்தின் அழகை என் என்பது? எத்தனை பேர்கள் இதை அநுபவித்திருக்கிறார்கள்?

யௌவநம் என்கிற பாரிஜாதத்தின் தளிர்போன்றுள்ளது உன்னுடைய திருஅதரம். தெய்வநாயகனாக நிற்கும் உன்னுடைய இந்தத் திரு அதரத்தின் சுவையை தாழ்மைக்குப் பெயர் பெற்ற இடைப் பெண்கள் பலரும் அநுபவித்துள்ளார்கள். ஸ்ரீக்ருஷ்ணாவதாரத்தில் புல்லாங்குழல் அநுபவித்தது இந்தச் சுவையை. நித்ய ஸூரிகளுள் ஒருவரான ஸ்ரீ ஶங்கத்தாழ்வானும் இப்படிப் பலரும் அநுபவித்துள்ள உன் திரு அதரத்தின் சுவையை விரும்பி

என்னுடைய புத்தி என்ற பெண்ணும் உன் திரு அதரத்தைத் தொட்டுப் பார்க்கிறது.

'आरुण्यपल्लवितयौवनपारिजातं
आभीरयोषिदनुभूतममर्त्यनाथ!
वंशेन शङ्खपतिना च निषेवितं ते
बिम्बाधरं स्पृशति रागवती मतिर्मे ।।२७।।

ஆருண்ய பல்லவித யௌவநபாரிஜாதம்
ஆபீரயோஷிதநுபூதம் அமர்த்யநாத!
வம்ஸேந ஸங்கபதிநா ச நிஷேவிதம் தே
பிம்பாதரம் ஸ்ப்ருஸதி ராகவதீ மதிர்மே ||

---

> கையினார் சுரிசங்கனலாழியர் ✱ நீள்வரைபோல்
> மெய்யனார் துளப விரையார் கமழ் நீள்முடி எம்
> ஐயனார் ✱ அணியரங்கனார் அரவினணை மிசைமேய மாயனார் ✱
> **செய்ய வாய் ஐயோ! என்னைச் சிந்தை கவர்ந்ததுவே (7)**



## 8. பேதைமை செய்த பெரியவாய கண்கள்

भगवन्नेत्रयुग्मस्य माहात्म्यं परमाद्भुतम् ।
सर्वेतरप्रतीकानां माहात्म्याच्च विशिष्यते ।।

जन्तोरमुष्य जनने मुमुक्षुत्वं सुदुर्लभम् ।
आपादयति नेत्रं हि सुदीर्घं मधुविद्विषः ।।

பகவந்நேத்ரயுக்மஸ்ய மாஹாத்ம்யம் பரமாத்புதம் |
ஸர்வேதரப்ரதீகாநாம் மாஹாத்ம்யாச்ச விஸிஷ்யதே ||

ஜந்தோரமுஷ்ய ஜநநே முமுக்ஷுத்வம் ஸுதுர்லபம் |
ஆபாதயதி நேத்ரம் ஹி ஸுதீர்கம் மதுவித்விஷ: ||

எம்பெருமானுடைய திருக்கண்களின் மஹிமை மிகச் சிறப்புடையது. இதனால் எம்பெருமானுடைய மற்றைய அவயவங்கள் அனைத்தினுடையவும் பெருமையை விஞ்சி நிற்கின்றன இவை.

கருவிலே திரு உடையனான ஒருவன் பிறக்கும்போதே மதுஸூதநனான எம்பெருமானுடைய நீண்ட திருக்கண் கடாக்ஷத்தைப் பெற்றால் அந்தக் கடாக்ஷம் அவனை ஸாத்விகனாகவும், மோக்ஷத்தில் ஆசை உள்ளவனாகவும் - அதாவது முமுக்ஷுவாகவும் செய்கிறது. இப்படி எம்பெருமான் திருக்கண் கடாக்ஷம் பெற்ற பிறகுதான் அவன் எம்பெருமானிடம் ஈடுபடுகிறான். ஆகையால் நமக்கு முதலிலேயே உபகரிப்பது உதவுவது - எம்பெருமானுடைய திருக்கண்களேயாகும்.

இதுவரை திருப்பாணாழ்வார் எம்பெருமானுடைய திருஅடி முதலாகக் திரு அதரம் (உதடு) வரையிலான எல்லா அவயவங்

களின் அழகையும் அநுபவித்து அருளிய வகையை நாம் அவர் அநுபவம் கொண்டு அநுபவித்தோம்.

இனி எம்பெருமானுடைய திருக்கண்களின் அழகை அவர் அநுபவம் கொண்டு அநுபவிப்போம்.

எம்பெருமானுடைய திருக்கண்களும் தம் பெருமையைத் தாமே கூறுகின்றன.

இந்தத் திருக்கண்கள் திருப்பாணாழ்வார் எம்பெருமானுடைய சிவந்த திருவாயின் ஸமீபம் வரும்வரை கடைக் கணித்துக் கொண்டிருந்தன. அதாவது ஆழ்வார் திருவடியிலிருந்து ஒவ்வொரு அவயவமாக அநுபவித்துக் கொண்டு தன் அருகில் வரும் வரை தம்முடைய (கண்களின்) கடைப்பகுதிகளால் பார்த்துக் கொண்டே இருந்தன. எதிர்பார்த்தபடியே திருப்பாணாழ்வாரும் ஒவ்வொரு அவயவமாக அநுபவித்துக் கொண்டு திருவாய் அளவும் வந்து சேர்ந்தார். இதுதான் தருணம் - ஸந்தர்பம் என்று எண்ணிய திருக்கண்கள் ஆழ்வாரை நோக்கித் தம்முடைய பெருமைகளைக் கூறலாயின.

ஓய் ஆழ்வீர் நீர் இப்போது எம்பெருமானுடைய திருவாயின் அழகில் ஈடுபட்டு உம்முடைய சிந்தையை - மனத்தைப் பறி கொடுத்து நிற்கிறீரே! அப்படிப்பட்ட அழகு என்ன இருக்கிறது திருவாய்க்கு? திருவாயின் சிவப்பு நிறம் என்னைக் கவர்ந்து விட்டது என்பதை 'செய்யவாய்' என்று நீரே குறிப்பிட்டுள்ளீர். ஆகவே அதன் சிவப்பு நிறம் ஒன்று தானே உம்மை மயக்கி விட்டது? என்னைப் பாரும். என்னிடத்திலும் அந்தச் சிவப்பு நிறம் இருக்கிறது. அதுமட்டுமன்று. எம்மிடத்தில் சிவப்பும், கருப்பும், வெளுப்புமான பல நிறங்கள் உள்ளன. இவை ஒன்றோடொன்று சேர்ந்து எங்களுக்கு மிகுந்த அழகைத் தருகின்றன.





மேலும் அந்த வாய் தன் பெருமைக்கு எடுத்துக்காட்டாக ஒன்று சொல்லியிருக்கிறது உமக்கு.அதாவது எம்பெருமானை ஆஶ்ரயிப்பதற்காக அபராதியான ஒருவன் அஞ்சி வரும்போது தூரத்திலிருந்தே அவன் மகிழும்படி, அச்சம் தீரும்படி 'மித்ர பாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந' (நண்பனாக வருபவனை ஒருக்காலும் கைவிடமாட்டேன்) என்ற வார்த்தையைச் சொல்லுவதற்கு ப்ரதாநமான காரணம் நான்தானே என்று இப்படிச்சொல்லி உம்மை அது மயக்கிவிட்டது. நீரும் அதில் மயங்கிவிட்டீர்!

ஜீவன் எம்பெருமானை ஆஶ்ரயிக்க வரும்போது தூரத்திலிருந்தே இந்த வார்த்தையை வெளிப்படுத்துவது திருவாய்தான். அதனாலேயே அதற்குப் பெருமை.

ஆனால் அந்த ஜீவன் எம்பெருமானை ஆஶ்ரயிக்க வருவது யாராலே? உலகில் எத்தனை ஜீவாத்மாக்கள் உள்ளனர்? அனைவரும் எம்பெருமானை ஆஶ்ரயிக்க வருகிறார்களா? இல்லை. ஏன்? இப்படி ஓரிருவர் மட்டும் எம்பெருமானை ஆஶ்ரயிக்க வருவதற்குக் காரணம் என்ன என்பதை அந்தத் திருவாய்தான் சற்று யோசித்துப் பார்த்ததா? அல்லது நீர்தான் யோசித்துப் பார்த்தீரா? அப்படி நீர் யோசித்துப் பார்த்திருந்தால் அந்தத் திருவாயின் அழகில் அழுந்தி இருக்கமாட்டீர்!

வ்யாஸ மஹர்ஷியைக் கேளும். அவர் மஹாபாரதத்தில் ஶாந்திபர்வாவில் என்னுடைய பெருமையை நன்கு அருளிச் செய்துள்ளார். நீர் மட்டுமின்றி யாவருமே இதைக் கொண்டு என் பெருமையை அறியலாமே!

அவர் அருளிச் செய்துள்ளதாவது:

**जायमानं हि पुरुषं यं पश्येन्मधुसूदनः ।**
**सात्त्विकस्स तु विज्ञेयः स वै मोक्षार्थचिन्तकः ॥** (மஹாபாரதம்)

ஜாயமாநம் ஹி புருஷம் யம் பஶ்யேந் மதுஸூதந: ।

ஸாத்த்விகஸ்ஸ து விஜ்ஞேய: ஸ வை மோக்ஷார்த்த சிந்தக: ॥

எந்த ஒருவனைப் பிறக்கும்போதே மதுஸூதநனான எம் பெருமான் தன் திருக்கண்களால் கடாக்ஷிக்கிறானோ அவன் ரஜோகுணமும் தமோகுணமும் அற்றவனாய் பரமஸத்த்வ குணம் உள்ளவனாகிறான். அதனால் மற்றைய பலன்களைத் தரும் உபாயங்களை எண்ணமல் மோக்ஷ பலனைத் தர வல்ல உபாயங் களையே எண்ணுவான் என்று.

எல்லோருடைய முகத்திலும் கண்கள் உள்ளன. அவற்றுக் கெல்லாம் இம்மாதிரியான பெருமை உண்டா?

த்ரிமூர்த்திகளில் எம்பெருமானோடு சேர்த்து எண்ணப்படுகிற நான்முகன், ஶிவன் இவர்களுடைய கண்களுக்குக் கூட எம்பெரு மான் திருமுகத்தில் இருக்கும் பெருமைபெற்ற எங்களுக்கு உள்ள பெருமை கிடையாது. அந்தக் கண்கள் ஒருவன் மீது பிறக்கும் ஸமயத்தில் பட்டால் அவ்வளவுதான்! அவன் ஒரு நாளும் கரையேறமாட்டாமல் ஸம்ஸார ஸாகரத்திலேயே மூழ்குவான். ரஜோகுணத்திற்கும் தமோ குணத்திற்கும் வஶமாகி எப் பொழுதும் சிற்றின்பங்களிலேயே ஈடுபட்டு நிற்பான்.

இவ்விஷயத்தையும் வ்யாஸரேதான் எங்கள் (திருக்கண்கள்) பெருமையைக் கூறும் ஶ்லோகத்திற்கு அடுத்துக் கூறியுள்ளார்.

**पश्येत्येनं जायमानं ब्रह्मा रुद्रोऽथवा पुनः ।**

**रजसा तमसा चाऽस्य मानसं समभिप्लुतम् ॥**

பஶ்யேத்யேநம் ஜாயமாநம் ப்ரஹ்மா ருத்ரோऽதவா புந: ।

ரஜஸா தமஸா சாऽஸ்ய மாநஸம் ஸமபிப்லுதம் ॥ என்று.





ஆக நாம் (எம்பெருமானுடைய திருக்கண்களாகிற நாம்) முதலில் ஒருவனைப் பிறக்கும்போதே விஷயீகரிக்கிறோம்- பற்றுகிறோம். அதன் காரணமாக அவன் பரம ஸாத்த்விகனாகி மோக்ஷோபாயங்களை- மோக்ஷஶாஸ்த்ரங்களைச் சிந்திக்கிறான். அதன் பின் எம்பெருமான் ஸந்நிதிக்கு வருகிறான். அதன் பின் மற்றைய அவயவங்கள் மேல் விழுந்து என்னைப் பார், என் அழகைப் பார் என்று சொல்லி வலுவில் அவனை இழுக்கின்றன.

ஆக ஒரு ஜீவன் இப்படி எம்பெருமான் ஸந்நிதிக்கு வந்து அவனை ஸேவித்து ஒவ்வொரு அவயவத்தின் அழகிலும் ஈடு படுவதற்கும் நாம்தான் ப்ரதாந காரணம் ஆகிறோம்.

மேலும் 'வாய் பேசும் வார்த்தைகள் யாவும் ஸத்யங்கள்' என்று சொல்லமுடியாது. எம்பெருமானாயிருந்தாலும் கூட அவனுடைய திருவாய் சொல்லும் வார்த்தை கூடப் பொய்யாகி விடுகிறது.

ஸ்ரீ க்ருஷ்ணாவதாரத்தில் ஸ்ரீ க்ருஷ்ணனாக அவதரித்த எம் பெருமானே பாரதயுத்தத்தில் பலர் அறிய 'நான் ஆயுதம் எடுக்க மாட்டேன்' என்று தன்னுடைய திருவாயினால்தானே அருளிச் செய்தான். கடைசியில் அது என்ன ஆயிற்று? பொய்யாயிற்று! அவ்வாறே எம்பெருமான் தன் திருவாயினால் அருளிச் செய்யும் 'மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந'. 'நண்பன் என்று வருபவனை ஒருபோதும் கைவிடேன்' என்றாற் போன்ற மற்றைய வார்த்தைகளும் பொய்யாகி விடுமோ என்ற எண்ணம் யாவர்க்கும் உண்டாகலாமன்றோ! அப்போது 'ஆயுதம் எடுக்க மாட்டேன்' என்ற எம்பெருமானுடைய வார்த்தை போல் அவன் அருளிச் செய்யும் அபய ப்ரதாந வார்த்தைகள் பொய்யாகா என்று பாகுபடுத்திக் கூறினால் தானே ஶரணாகதர்களுக்கும் அபய ப்ரதாந வார்த்தைகளில் நம்பிக்கை வரும். அப்போது 'ஆயுதம் எடுக்கமாட்டேன்' என்று எம்பெருமான் அருளிச் செய்த

வார்த்தைக்கும் 'ஆஶ்ரிதர்களை ஒருபோதும் கைவிடேன்' என்றாற்போன்ற அபயப்ரதாந வார்த்தைகளுக்கும் உள்ள வ்யத்யாஸத்தை- அதாவது பேதத்தை (மாறுபாட்டை) எடுத்துச் சொல்லி அந்த வார்த்தை பொய்யாகும். இந்த வார்த்தைகள் பொய்யாகா என்று எடுத்துக் கூற வேண்டும்.

அப்போது 'ஆயுதம் எடுக்க மாட்டேன்' என்றது வஞ்சகர்களான துர்யோதநாதிகளை உத்தேஶித்து வஞ்சனையால் கூறப்பட்டது.

'ஶரணாகதர்களை ஒருபோதும் கைவிடேன்' என்றது தன்னிடம் விஶ்வாஸம்- நம்பிக்கை கொண்டு தன்னை அடைவதற்காக வந்த அன்பர்களை உத்தேஶித்துக் கூறப்பட்டதாகும்.

வஞ்சகர்களுக்கு எம்பெருமான் வார்த்தை சொல்லும் போதும் என்னை (கண்ணை)ப் பாருங்கள். பக்தர்களுக்கு எம்பெருமான் வார்த்தை அருளும் போதும் என்னைப் பாருங்கள். அப்போதுதான் இந்த இருவகை வார்த்தைகளுக்கும் உள்ள பேதம் (வ்யத்யாஸம்) புரியும்.

வஞ்சகர்களை நோக்கிக் கூறும்போது எம்பெருமான் தன்னுடைய திருக்கண்ணுன என்னை ஒருவாறு மடித்து, மூடி சிமிட்டிக்கொண்டு வார்த்தை கூறுவான். அப்போது வஞ்சனை இருப்பது எங்களிடத்தில் (திருகண்களில்) எளிதில் புலனாகும்.

பக்தர்களை நோக்கி அபயத்திற்காக வார்த்தை அருளும் போது எங்களிடத்தில் (திருக்கண்களில்) வாத்ஸல்யம் (அன்பு) நிறைந்திருக்கும். இதைக் கொண்டே எம்பெருமான் அருளும் வார்த்தைகளில் எது பொய்யானது, எது உண்மையானது என்பதை எளிதில் அறியலாம்.

தன்னை ஶரணம் பற்றி வந்த ஸ்ரீ விபீஷணனைத் தன் அருகில் இருக்கும் வாநரர்கள் தடுத்தபோதும் எம்பெருமான் அவனுக்கு





நல்வார்த்தைகள் (அபயம்) அருளினான். அப்போதும் ஸ்ரீ வால்மீகி மஹர்ஷி எங்கள் நிலையை நன்கு படம் பிடித்துக் காட்டியுள்ளார்.

**वचसा सान्त्वयित्वैनं लोचनाभ्यां पिबन्निव ।**

**(வசஸா ஸாந்த்வயித்வைநம் லோசநாப்யாம் பிபந்நிவ)**

ஸ்ரீ ராமன் அன்பினால் அகன்று விரிந்த தன் தாமரைக் கண்களால் ஸ்ரீ விபீஷணனை விழுங்குபவன் போல் பார்த்துக் கொண்டு நல் வார்த்தைகளால் அவனை ஸமாதாநப்படுத்தி ஏற்றான் என்கிறார்.

அப்பொழுது ஸ்ரீ ராமன் அருளிய அபயப்ரதாந வார்த்தை ஸத்யமானது என்பதை எங்கள் நிலையைக் கொண்டுதான் ஸ்ரீ வால்மீகி உறுதிப்படுத்துகிறார்.

ஆக எம்பெருமானுக்கு அடியவர்களிடத்தில் வாத்ஸல்யம் உண்டு என்பதை வெளிப்படுத்துவதும் நாங்கள்தானே என்கின்றன திருக்கண்கள்.

எம்பெருமான் அருளிச் செய்யும் வார்த்தைகளை நம்பலாமா, கூடாதா என்று நாங்கள்தான் அறிவிக்கிறோம். எம்பெருமான் அடியார்களிடத்தில் மிகுந்த வாத்ஸல்யம் கொண்டிருக்கிறான் என்பதை நாங்கள் அறிவித்தால் அதை உணர்ந்த அடியவர்கள் எம்பெருமான் அருளிச் செய்யும் வார்த்தை ஸத்யமானது- மெய்ம்மைப் பெருவார்த்தை என்று அதை நம்புவார்கள். ஆக எம்பெருமான் அடியவர்களிடம் கொண்டுள்ள வாத்ஸல்யத்தை வெளிப்படுத்துபவர்கள் நாங்கள் தான் ஆவோம்.

இவ்வளவு மட்டுமின்றி மற்றும் ஓர் மிகுந்த பெருமை எங்களுக்கு உண்டு. அது என்ன என்பதை நாங்களே கூறுகிறோம், ஆழ்வாரே! நீர் கேளும், என்கின்றன திருக்கண்கள். அதாவது:

'எம்பெருமான் தான் பரதத்வம் - மிகப்பெரியவன், எல்லாவற்றையும் விட, எல்லோரையும் விட மேம்பட்டவன் என்பதை அறிவிப்பவர்களும் நாங்கள் தான்.

ஸ்வாமி நம்மாழ்வார் எம்பெருமான் தான் 'ஸர்வலோகேஶ்வரன்' என்பதைக் காட்டுவது அவனுடைய கண்களாகிற நாங்கள் தான் என்பதை 'அனைத்துலகுமுடைய அரவிந்தலோசனன்' என்று அருளிச் செய்துள்ளார் **(திருவாய்மொழி-6.7.10).** இங்கு வ்யாக்யாநத்தில் பெரியவாச்சான் பிள்ளை- 'அவன் கண் ஸர்வேஶ்வரத்வ ஸூசகம்' என்று எம்பெருமானுடைய மற்றைய அவயவங்களுக்கு இல்லாத, எங்களுக்கு மட்டுமே உடைய, பெருமையை நன்கு விவரித்துள்ளார். எம்பெருமான்தான் ஸர்வேஶ்வரன் என்பதை ஶாஸ்த்ரம் கொண்டு அறிவது மிகவும் அரிது. அறிவுடையவர்களும் அதில்லாதவர்களும் கூட எங்களைக் கொண்டுதான் எங்களைக் கண்டுதான் எம்பெருமானிடத்தில் ஈடுபடுகிறார்கள்.

**यथा कप्यासं पुण्डरीकं एवमक्षिणी** (யதா கப்யாஸம் புண்டரீகம் ஏவமக்ஷிணீ) தண்ணீரை விட்டுப் பிரியாமல் பருத்த தண்டுடன் கூடி, ஸூர்யனால் அலர்த்தப்பட்ட தாமரை போன்றவை எம்பெருமானுடைய திருக்கண்கள் என்கிறது உபநிஷத்.

தமோகுணம் மிகுந்த ராக்ஷஸ வம்ஶத்தில் பிறந்த ஶூர்ப்பணகை என்பவள் **'पुण्डरीकविशालाक्ष'** (புண்டரீக விஶாலாக்ஷ) என்று எம்பெருமானான ஸ்ரீ ராமசந்த்ரனுடைய திருக்கண்கள் புண்டரீகம் எனப்படும் தாமரைப்பூப் போலே இருக்கும், இப்படிப்பட்ட திருக்கண்களை உடையவன் என்றுதானே ஸ்ரீ ராமனிடத்தில் ஈடுபடுகிறாள்.

நவவ்யாகரண பண்டிதனான ஹநுமான் **रामः कमलपत्राक्षः** (ராம: கமலபத்ராக்ஷ:) ஸ்ரீராமன் தாமரைப்பூப்போன்ற திருக்கண்களை உடையவன் என்று சொல்லித் தானே எம்பெருமானிடத்தில் தான் ஈடுபட்டமையை அறிவிக்கிறான்.





எம்பெருமானுடைய அவதாரங்கள் அனைத்திலும் அழகு குன்றாமல் தொடர்ந்து வருவதாகிற பெருமையும் எங்களுக்கே உரியதாகும். **मत्स्यः कमललोचनः** (மத்ஸ்ய: கமலலோசந:) மீனாய் அவதரித்தவன் கமலம் போன்ற கண்களை உடையவன். **महावराहः स्फुटपद्मलोचनः** (மஹாவராஹ: ஸ்புடபத்மலோசந:) பெரும் பன்றியாய் அன்று பார் அகம் கீண்ட எம்பெருமான் நன்கு மலர்ந்த தாமரை போன்ற திருக்கண்களை உடையவன். **रामो राजीवलोचनः** (ராமோ ராஜீவலோசந:) **कृष्णः कमलपत्राक्षः** (க்ருஷ்ண: கமலபத்ராக்ஷ:) என்று ராமனும் கண்ணனும் கூட தாமரை போன்ற திருக்கண்களை உடையவர்களே என்று மஹர்ஷிகள் அனைவரும் கூறியுள்ளார்கள்.

மேலும் உலகில் பற்பல துன்பங்களை- ஆபத்துக்களை அநுபவித்து வரும் ஜீவாத்மாக்கள் அவற்றைப்போக்க எம்பெருமானை ஶரணம் பற்றுகிறார்களே! யாரை முன்னிட்டுக் கொண்டு ஶரணம் பற்றுகிறார்கள் தெரியுமா? நம்மைக் கொண்டுதான்.

த்ரௌபதீ தனக்கு துஶ்ஶாஸநனால் வந்த ஆபத்தைப் போக்க வேண்டும் என்று எம்பெருமானை ஶரணமாகப் பற்றி அழைக்கிறாளே, என்ன சொல்லி அழைக்கிறாள் தெரியுமா?

நல்ல திருவாயை உடையவனே! என்றோ நல்ல கழுத்தை, நல்ல திருமார்பை, அல்லது நல்ல திருவயிற்றை உடையவனே! என்றவாறெல்லாம் அழைக்கவில்லை. எல்லா அவயவங்களையும் விட்டு **'गोविन्द! पुण्डरीकाक्ष ! रक्ष! माम्** (கோவிந்த! புண்டரீகாக்ஷ! ரக்ஷ மாம்! - கோவிந்தனே! புண்டரீகாக்ஷனே! என்னைக் காப்பாய்!) என்று எங்களை முன்னிட்டுத்தானே

அழைக்கிறாள். நாங்களும் அப்படியே அவளுடைய ஆபத்தை எம்பெருமானைக் கொண்டு போக்கி வைத்தோம்.

மிக உயர்ந்த மந்த்ரம் என்று போற்றப்படும் 'ஜிதம்தே' என்று தொடங்கும் ஸ்தோத்ரத்திலும்

**अहं भीतोऽस्मि देवेश! संसारेऽस्मिन् भयावहे ।**
**पाहि मां पुण्डरीकाक्ष! न जाने शरणं परम् ॥**

**அஹம் பீதோऽஸ்மி தேவேஶ! ஸம்ஸாரேऽஸ்மிந் பயாவஹே ।**
**பாஹி மாம் புண்டரீகாக்ஷ! ந ஜாநே ஶரணம் பரம் ॥**

மிகுந்த பயத்தை - அச்சத்தைத் தரும் இந்தக் கொடிய ஸம்ஸாரத்தில் அகப்பட்டுக் கொண்டு அஞ்சியிருக்கிறேன் நான். ஹே! புண்டரீகாக்ஷ! என்னை நீர் தான் காத்தருள வேண்டும். மற்றோர் உபாயம் நான் அறியேன் என்று எம்பெருமானைப் புண்டரீகாக்ஷ! என்று அழைத்துத் தானே ஶரணமாகப் பற்று கிறார்கள்.

மேலும் நித்யஸூரிகள் அனைவரும் எம்பெருமானை பரம போக்யமாக அநுபவித்து வருகிறார்களே, அதற்கு என்ன காரணம் தெரியுமா? எங்களுடைய ஸம்பந்தத்தினால் தான் நித்ய ஸூரிக ளுக்கும் எம்பெருமான் பரமபோக்யனாக ஆகிறான். அவன் பரம போக்யனாயிருப்பதற்கு நாங்கள்தான் காரணம். இவ்விஷயத்தை ஸ்வாமி நம்மாழ்வார் அருளிச் செய்துள்ள அழகைப்பாரும்! **''தாமரைக் கண்ணனை விண்ணோர் பரவும் தலைமகனை''** என்று.விண்ணோர்கள் - நித்யஸூரிகள் - தலைமகனான ப்ரதாந ஸ்வாமியான எம்பெருமானை, தாமரைக் கண்ணன் என்ற காரணத்தினால் அவன் அழகுக்குத் தோற்று அவனைத் துதிக்கி றார்கள் என்று அருளிச் செய்கிறார்.





இவ்விடத்தில் ஈட்டில் நம்பிள்ளை, 'எம்பெருமான் நித்ய ஸூரிகளைக் கண்ணழகாலே தோற்பித்தான். இவரைக் கண்ணி யிலே (கண்ணுகிற வலையிலே) அகப்படுத்தினான்' என்று எங்கள் பெருமையை விளக்கியுள்ளார்.

ஓய் திருப்பாணாழ்வாரே! இவ்வளவாக நாம் சொல்லிவந்த நம்முடைய பெருமைகளையெல்லாம் கேட்டீரன்றோ? இம் மாதிரியான பெருமைகள் இதற்கு முன் நீர் அநுபவித்து வந்த அவயவங்களுக்கு உண்டா என்பதை யோசித்துப் பாரும் என்று தங்களுடைய அநிதரஸாதாரணமான (தங்களுக்கே உரிய) மஹிமையைக் கூறிக் காட்டி நின்றன திருக்கண்கள்.

இதை நன்கு கேட்டறிந்த திருப்பாணாழ்வார் தன் வயமிழந்து பித்துப் பிடித்தவராகி இனி இந்தத் திருக்கண்களை விட்டு மற்று எங்கும் போகாதபடி இவற்றுக்கே ஆளாகி நின்று விட்டார். இவ்விஷயத்தை இந்தப் பாட்டில் திருப்பாணாழ்வாரே வெளிப்படுத்துகிறார்.

இப்படித் திருக்கண்கள் தம்முடைய பெருமைகளைத் தாமே சொல்லக் கேட்ட திருப்பாணாழ்வார் நிலை என்ன ஆயிற்று என்பதையும் நாம் இங்கு அவஶ்யம் கவனிக்க வேண்டும்.

கீழ்ப்பாட்டில், அதாவது 7வது பாட்டில் 'செய்யவாய் ஐயோ என்னைச் சிந்தை கவர்ந்ததுவே' என்று அந்தச் சிவந்த திருவாயை யின்றி மற்றெதையும் நான் அறியேன்' என்றிருந்த திருப்பாணாழ் வார் இப்போது எம்பெருமான் திருக்கண்களின் பெருமைகளை அவற்றின் வாயினாலே சொல்லக் கேட்டு அந்தத் திருக்கண்க ளுக்கே அற்றுத் தீர்ந்து விட்டார்- அதாவது அந்தக் கண்களுக்கே உரியவராய் அவற்றுக்கே வஶமாய் ஆகிவிட்டார். இனி மற்றெதி லும் ஆசை வைக்க மாட்டார். இந்த நிலைமையைப் பெற்று விட்டார் இப்போது.

இந்தத் திருப்பாணாழ்வார் எம்பெருமான் திருமேனியில் திருவடி முதலாக ஒவ்வொரு அவயவத்தின் அழகிலும் ஈடுபட்டு மேன்மேலே உள்ள அவயவங்கள் தம் தம் அழகைக் காட்டி இவரை இழுக்க, முன் அநுபவித்த அவயவங்களை விட்டு வெவ்வேறு அவயவங்களை அநுபவித்தார். அதாவது திருவடி களில் ஈடுபட்ட ஆழ்வார் திருவடிகளிலே அமிழ்ந்து விட வில்லை. அதற்குமேலே உள்ள அரைச் சிவந்த ஆடையின் அழகைக் கண்டு திருவடிகளை விட்டு இதிலே அமிழ்ந்தார். பிறகு இதையும் விட்டு அதன்மேல் உள்ள திரு உந்தியின் அழகைக் கண்டு அதிலே அமிழ்ந்தார்.

இவ்வாறே கீழே அநுபவித்ததை விட்டு மேலே மேலே வெவ்வேறு அவயவங்களில் ஈடுபட்டு வந்தார்.

ஆனால் திருக்கண்களின் அழகைக் கண்டபிறகு இவற்றை விட்டு வேறு அவயவத்திற்குச் செல்லாதபடி இந்தத் திருக்கண்க ளுக்கே அற்று உரியவராய்- அநந்யார்ஹராய் - மற்றொன்றுக்கு உரியர் ஆகாதவராய் இதிலேயே நிலைத்து நின்றுவிட்டார்.

ஸ்வாமி நம்மாழ்வாருடைய நிலையும் இவ்வாறுதான்.

தலைவித்தன்மை பெற்ற ஸ்வாமி நம்மாழ்வார் தென்திருப் பேரையில் எழுந்தருளியிருக்கும் மகர நெடுங்குழைக்காத னுடைய திருமேனியழகிலே - திரு அவயவங்களின் அழகிலே, திருவாயுதங்களின் அழகிலே ஈடுபட்டுப் பிறகு அவனுடைய திருக்கண்களின் அழகிலும் ஈடுபடுகிறார். ஒவ்வொன்றிலும் 'தமக்கு ஏற்பட்ட ஈடுபாட்டை'- பற்றுதலை ஒவ்வொரு சொல் லால் விளக்குகிறார். ஆனால் திருக்கண்களில் தமக்கு ஏற்பட்ட ஈடுபாட்டை- பற்றுதலை விசித்ரமான ஒரு சொல்லைக் கொண்டு வெளிப்படுத்துகிறார். பாசுரம் பின்வருமாறு:





**செங்கனிவாயின் திறத்ததாயும்**
**செஞ்சுடர் நீண்முடித் தாழ்ந்ததாயும்**
**சங்கொடு சக்கரம் கண்டுகந்தும்,**
**தாமரைக் கண்களுக்கு அற்றுத் தீர்ந்தும்,**
**திங்களும் நாளும் விழாவறாத**
**தென்திருப்பேரெயில் வீற்றிருந்த**
**நங்கள் பிரானுக்கென் நெஞ்சம் தோழீ**
**நாணும் நிறையுமிழந்ததுவே.**

**திருவாய்மொழி (7.3.3)**

பராங்குஶநாயகி தென்திருப்பேரை எம்பெருமான் திருமேனி அழகிலே ஈடுபட்டுத் தன்னுடைய நெஞ்சு தன்னுடைய நாணத் தையும், மடப்பத்தையும் இழந்தது என்கிறார். (நாணம் - வெட்கம், மடப்பம் - தயக்கம். இவை பெண்களுக்கே உரிய குணங்கள்).

இங்கே ஸ்வாமி நம்மாழ்வார் தன்னுடைய நெஞ்சம் எம்பெரு மான் திருமேனியில் ஒவ்வொரு இடத்திலும் எப்படி ஈடுபட்டது என்பதை வெவ்வேறு சொற்களைக் கொண்டு காட்டுகிறார்.

எம்பெருமான் திரு அவயவங்களில் ஸ்வாமி நம்மாழ்வா ருடைய மநஸ் ஈடுபட்ட முறை இது. எம்பெருமானுடைய சிவந்த கனிபோன்ற திருவாயின் அருகே சென்றது நம்மாழ்வா ருடைய மநஸ்.

இதை ஆழ்வாரே - 'செங்கனி வாயின் **திறத்ததாய்**' என்று அருளியுள்ளார்.

பிறகு ஆழ்வாருடைய இந்த மநஸ்ஸே எம்பெருமான் திருமுடியின் மீது சிவந்து விளங்கும் கிரீடத்தின் அழகைக் கண்டு அதில் ஈடுபட்டு **நின்றது.** இதை ஆழ்வாரே 'செஞ்சுடர் நீள் **முடித்தாழ்ந்தது'** என்று அருளியுள்ளார். இதற்கு மேலும்

ஆழ்வாருடைய இந்த மநஸ்ஸே எம்பெருமான் திருக்கைகளில் உள்ள சங்கு, சக்ரம் இவற்றைக் கண்டு **மகிழ்ந்தது.** இதை 'சங்கொடு சக்கரங் கண்டு **உகந்தும்'** என்று அருளிச் செய்துள்ளார்.

பிறகு ஆழ்வாருடைய மநஸ் எம்பெருமானுடைய திருக் கண்களின் அழகில் ஈடுபட்டது. ஈடுபட்ட பிறகு அந்த மநஸ் என்ன செய்தது தெரியுமா? மற்று வேறோர் இடத்திற்குச் செல்ல முடியாதபடி அந்த கண்களுக்கே உரியதாய் **அங்கேயே நிலைத்து விட்டது.** இதையும் ஆழ்வாரே 'தாமரைக் கண்களுக்கு **அற்றுத் தீர்ந்து'** என்று அருளிச் செய்கிறார்.

செவ்வாயின் **திறத்ததாயிற்று** ஆழ்வாருடைய மநஸ். பிறகு அதுவே செஞ்சுடர் நீள் முடி**த்தாழ்ந்தது**தாயிற்று. பின்னர் அதுவே சங்கொடு சக்கரம் கண்டு **உகந்தது**தாயிற்று. பிறகு அதுவே தாமரைக் கண்களுக்கு **அற்றுத் தீர்ந்தது.** இங்கு ஆழ்வார் அடுக்கியுள்ள வினைச் சொற்களின் பொருளை நன்கு அனுபவிக்க வேண்டும்.

ஒருவர் ஒரு ஊருக்குச் சென்றார். அந்த ஊரில் இவருக்குத் தெரிந்தவர்கள் - வேண்டியவர்கள் பலர் உள்ளனர். தெரியாதவர் களும் பலர் உள்ளனர். ஊருக்குள்ளே நுழைந்த இவர் தெரியாத வர்களுடைய அகங்களுக்குச் செல்லவில்லை. தெரிந்தவர் களுக்குள்ளும் முதலில் ஒருவருடைய அகத்துக்குச் சென்றார். அங்குச் சற்று நேரம் இருந்து விட்டு அதற்கு அடுத்து மற்றொருவ ருடைய அகத்துக்குச் சென்றார். அங்கு இன்னும் கொஞ்ச நேரம் அதிகம் இருந்துவிட்டுப் பிறகு மற்றொருவருடைய அகத்துக்குச் சென்றார். அதன் பிறகு மற்றொருவருடைய அகம் என்று மேலும் மேலும் சென்றவர் கடைசியாக ஒருவருடைய அகத்துக்குச் சென்றவர் அங்கேயே தங்கிவிட்டார். பிறகு வேறெவருடைய அகத்துக்கும் போகவே இல்லை. என்ன காரணம்? அந்த அகத்தில் அவ்வளவு பற்றுதல்தான் இம்மாதிரி அவரை அங்கேயே தங்கியிருக்கும்படிச் செய்துவிட்டது.





இவ்வாறே தான் ஸ்வாமி நம்மாழ்வாருடைய மநஸ்ஸும் ஒவ்வொரு அவயவத்திலும் சற்று நேரம் ஈடுபட்டுவிட்டு மேன்மேலான அவயவங்களில் சென்று கடைசியில் எம்பெருமா னுடைய திருக்கண்களிலே ஈடுபட்டு இனி வேறெதையும் அனு பவிக்கப் புகுதல் தகாது என்று வேறெதிலும் நோக்கில்லாமல் அங்கேயே நிலைத்து நின்றுவிட்டது.

திருவரங்கனுடைய திருமேனி அவயவங்களில் ஈடுபட்ட திருப்பாணாழ்வார் நிலையும் இம்மாதிரிதான்.

இப்படி எம்பெருமானுடைய திருக்கண்களில் ஈடுபட்ட தன் நிலைமையைத் திருப்பாணாழ்வாரே அருளிச் செய்கிறார் என் கிறார் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார். இவருடைய ஸ்ரீ ஸூக்திகளை அப்படியே அநுபவிப்போமாக:

''எட்டாம் பாட்டில் 'திருக்கண்கள் என்னை அறிவு கெடுத்தன' என்கிறார். கீழிற் பாட்டிலே 'செய்யவாய் ஐயோ என்னைச் சிந்தை கவர்ந்தது' என்று திருப்பவளத்திலே (உதட்டிலே) இவர் (திருப்பாணாழ்வார்) அபஹ்ருத ஹ்ருதயர் (ஹ்ருதயத்தைப் பறி கொடுத்தவராய்) ஆகியபடியைக் கடைக் கணித்துக் கொண்டு கிடக்கிற திருக்கண்களானவை.

'செய்யவாய் ஐயோ' என்று இவர் தாமே சொன்னார். அப்படியே சிவப்பால் வந்த அழகொன்றுமேயன்றோ அந்தத் திரு அதரத்திற்கு உள்ளது. சிவப்பும் கருப்பும் வெளுப்புமான பரபாகத்தில் (வெவ்வேறு நிறங்களின் சேர்க்கையால் உண்டான சிறப்பு) உள்ள அழகுடையோமும் நாம் அல்லோமோ!

'மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம்' என்றாற் போலே வார்த்தைகளும் எல்லாம் ஜீவிக்கையாகிறது 'ஜாயமாநம் ஹி புருஷம் யம் பஶ்யேத்' என்று ஜாயமாந தஶையில் நாம் (திருக் கண்கள்) கடாக்ஷித்த பின்பு ஸாத்த்விகனாய் முமுக்ஷுவான அளவிலேயன்றோ!

அது கிடக்க அந்த வார்த்தைதான் 'ஆயுதம் எடேன்' என்று ஆயுதம் எடுத்தாப்போலே அன்றிக்கே 'மெய்ம்மைப் பெரு வார்த்தை' என்று விஶ்வஸித்திருக்கலாம்படி வாத்ஸல்யம் அடியாகப் பிறந்த வார்த்தை என்று அந்த அகவாயில் வாத்ஸல்யத் துக்கு ப்ரகாஶகமாய் இருப்போமும் நாம் அல்லோமோ!

அது கிடக்க 'யதா கப்யாஸம் புண்டரீகம் ஏவம் அக்ஷிணீ' என்றும் 'அனைத்துலகும் உடைய அரவிந்தலோசனன்' என்றும் சொல்லுகிறபடியே மேன்மைக்கு ப்ரகாஶகமாய் இருப்போமும் நாம் அல்லோமோ!

அதற்கு மேலே 'புண்டரீகாக்ஷ ரக்ஷ மாம்' என்றும் 'புண்டரீ காக்ஷ! ந ஜாநே ஶரணம் பரம்' என்றும் சொல்லுகிறபடியே தம் தாமுடைய ஆபந்நிவாரணத்திற்கு உபாயமாகப் பற்றுவதும் நம்மைப் புரஸ்கரிக்கையாலே உபாயபாவத்தைப் பூரிக்கிறோம் நாம் அன்றோ!

'தாமரைக் கண்ணனை விண்ணோர் பரவும் தலைமகனை' என்று அவனுக்கு போக்யதாப்ரகர்ஷம் உண்டாகிறது நம் மோட்டைச்சேர்த்தியாலன்றோ!' என்றாப்போலே தங்களுடைய (கண்களுடைய) ஏற்றத்தைக் காட்டி 'அவ்வாயன்றி யானறியேன்' என்றிருக்கிற தம்மை, 'தாமரைக் கண்களுக்கு அற்றுத் தீர்ந்து' என்னும்படி பண்ணிக்கொண்ட படியைச் சொல்லுகிறார்.

'செங்கனிவாயின் திறத்ததாயும், செஞ்சுடர் நீள் முடித்தாழ்ந்த தாயும், சங்கொடு சக்கரம் கண்டுகந்தும்' என்றவளவும் சொன் னார் கீழ். 'தாமரைக் கண்களுக்கு அற்றுத் தீர்ந்த'படி சொல்லு கிறார் இதில்.''

ஸ்ரீ ஆளவந்தாரும் தாம் அருளிய ஸ்தோத்ர ரத்நத்தில் **'कः पुण्डरीकनयनः'?** (க: புண்டரீகநயந:?) எவன் தாமரைக் கண்ணன்? என்று திருக்கண்களைக் காட்டித் தானே பரதத்த்வ நிஷ்கர்ஷம் செய்தருளுகிறார்.





இனி இந்தத் திருக்கண்கள் இருக்குமிடத்தைக் காட்டி இந்தக் கண்களின் நிறம், பரப்பு - நெடுமை, இவை தமக்குச் செய்த கொடுமை இவற்றை விவரிக்கிறார் ஆழ்வார். இந்தத் திருக் கண்கள் இருக்குமிடம் அரங்கத்து அமலன் முகம் ஆகும். ஸ்ரீரங்கத்தில் பள்ளி கொண்டிருக்கிற ஸ்ரீ ரங்கநாதனுடைய திருமுகத்தில் இருக்கின்றன இந்தக் கண்கள்.

இந்தத் திருவரங்கன் அமலன் - ஶுத்தன் ஆவான். திருவ ரங்கமே மிகுந்த அழகுடையது. அதற்கு மேலே இதில் பள்ளி கொண்டிருக்கும் எம்பெருமான் ஸ்ரீ ரங்கநாதன் மிக மிக அழ குடையவன். அவனுக்கு மேலே அதிகமான அழகுடையது அவனுடைய திருமுகம். இதற்கும் அழகு தரும்படியா யிருக்கின்றன இரண்டு திருக்கண்கள்.

திருமுகம் சந்த்ரமண்டலம் போலிருக்கிறது. இதில் தாமரை போல் இரண்டு திருக்கண்கள். அதாவது சந்த்ர மண்டலத்தில் இரண்டு தாமரைகள் பூத்தாப்போல உள்ளது என்கிறார். அல்லது எம்பெருமான் திருமுகமே ஒரு தாமரை போலிருக்கிறது என்று கொண்டால் இதில் உள்ள தாமரை போன்ற இரண்டு திருக் கண்கள் ஒரு தாமரையில் இரண்டு தாமரை பூத்தாப்போலேயு மிருக்கின்றன என்றபடி.

ஒரு புஷ்பத்திலே இரண்டு புஷ்பங்கள் பூத்தாப் போலுள்ளது திருமுகம், திருக்கண்கள் இவற்றின் சேர்த்தி.

காளிதாஸன் என்பவன் ப்ரஸித்தனான ஒரு மஹாகவி. இவனை ஆதரித்து வந்தவன் போஜராஜன். இருவரும் பிரியா நண்பர்களாகவும் இருந்தனர். ஒரு ஸமயம் மனவருத்தம் காரணமாகக் காளிதாஸன் போஜனை ஸந்திக்காமலேயே பிரிந்து எங்கோ சென்று விட்டான். அவனைக் காணமல் போஜன் மிக மிக வருந்தினான். அவனைக் கண்டுபிடிக்க ஒரு உபாயத்தை (வழியை)க் கண்டு பிடித்தான். ஒரு பாதி ஶ்லோகத்தில் ஒரு

கேள்வியைக் கேட்டு அதை உலகுக்குப் பறை சாற்றினான். இதற்குப் பதிலளிப்பார் நன்கு ஸம்மாநிக்கப்படுவார் என்றும் அறிவித்தான். காளிதாஸன் உயிருடன் வாழ்ந்திருந்தால் எங்கிருந் தாலும் இதற்குப் பதில் அளிக்க முன்வருவான். இவனைத் தவிர வேறு எவராலும் இதற்குப் பதில் கூற முடியாது. இதற்குப் பதில் கூறுவதற்காக முற்படும்போது காளிதாஸனைக் கண்டுபிடித்து விடலாம் என்பது போஜராஜனின் கருத்து. அந்தக் கேள்வி அடங்கிய பாதி ஶ்லோகம் இதுவே- அதாவது:

**'कुसुमे कुसुमोत्पत्तिः श्रूयते न तु दृश्यते'**

**(குஸுமே குஸுமோத்பத்தி: ஶ்ரூயதே ந து த்ருஶ்யதே)**

புஷ்பத்தில் புஷ்பம் உண்டாயிருக்கிறது என்று கேள்விப் படுவது தவிர காணப்படுவதில்லையே! கண்டதுண்டா? என்று . இந்தச் செய்தி நாடு முழுவதும் பரவிற்று. போஜனுடைய நாட்டின் ஒதுக்குப்புறம் ஒன்றில் தன் காந்தையுடன் (காதலி யுடன்) வஸித்து வந்தான் காளிதாஸன். இவள் இந்தச் செய்தியை இவனிடம் கூறி இந்தப் பாதி ஶ்லோகத்தையும் காட்டினாள்.

இதைக் கண்ட காளிதாஸன் அதை வாங்கி அந்தச் சீட்டிலேயே இதற்குப் பதிலையும் எழுதித் தந்தான். அப்பொழுது தன்னு டைய பேரன்புக்கு உள்ளாகிய அந்தப் பெண்ணை, அவளுடைய அழகிய முகத்தைப் பார்த்து ரஸித்தவாறே அந்தப் பதிலை எழுதுகிறான்:

**''बाले! तव मुखाम्भोजे नेत्रमिन्दीवरद्वयम्'**

**(பாலே! தவ முகாம்போஜே நேத்ரம் இந்தீவர த்வயம்)**

அழகிய பெண்ணே! புஷ்பத்தில் புஷ்பம் உண்டாயிருப்பதை உன் முகத்திலே காணலாமே! உன்னுடைய முகம் தாமரைப் பூப்போலே இருக்கிறது. இதில் கண்களாகிற இரண்டு கரு





நெய்தல் புஷ்பங்கள் உண்டாயிருக்கின்றனவே! என்று எழுதிக் கொடுத்தான். இந்தக் கதையில் இவ்வளவேதான் நமக்கு இங்கு வேண்டியது. இதற்கு மேல் என்ன ஆயிற்று என்ற விசாரம் இப்போது வேண்டாம்.

மஹாகவியான இவன் பெண் பித்து பிடித்தவனாகையால் ஒரு பெண்ணின் முகத்தைப் பார்த்து இவ்வாறு எழுதினான். அவன் பகவத் பக்தனாயிருந்து எம்பெருமானுடைய திருமுகத் தின் அழகில் ஈடுபட்டிருந்தால் இந்தப் பதில் எவ்வளவு அழ கியதாயிருக்கும். நம்முடைய நெஞ்சைக் கொண்டு நோக்கினால் பதில் எப்படி அமையவேண்டும் என்பதை அறியலாமே.

**विष्णो! तव मुखाम्भोजे नेत्रमम्भोरुहद्वयम् ।**

**(விஷ்ணோ! தவ முகாம்போஜே நேத்ரம் அம்போருஹத்வயம்).**

நம்முடைய பூர்வர்கள் பகவத் விஷயம் தவிர மற்றொன்றை அறியாதவர்களாகையாலே ஒரு தாமரையில் இரண்டு தாமரை பூத்தாப்போலே இருக்கிற திருக்கண்கள் என்று அருளினார்கள்.

ஸ்த்ரீகளுடைய கண்களைக் கருநெய்தல் புஷ்பத்துடன் ஒப்பிட்டுப் பேசுதல் கவிகளின் மரபு. ஆகையால் அந்தப் பெண் ணின் கண்களைக் கருநெய்தல்களாக உருவகப்படுத்திக் கூறினான் காளிதாஸன்.

புருஷர்களுடைய - புருஷோத்தமனுடைய - திருக்கண்களைத் தாமரையோடு ஒத்திட்டுக் கூறும் மரபையொட்டி இப்படித் தாமரைப் பூக்களாகப் பூர்வர்கள் அருளியுள்ளார்கள்.

'கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி இருக்கும் திருக்கண்கள்' என்று அவற்றின் பெருமைகளை விவரிக்கிறார் ஆழ்வார். வெண்தாமரைபோல் வெளுத்திருக்கும் திருக்கண்களின் நடுவில் இருக்கும் இரண்டு கருவிழிகள் இவற்றுக்கு அழகைத் தருகிறபடி.

புடைபரந்து: பக்கங்களில் எல்லாம் பரவியிருக்கின்றன இந்தத் திருக்கண்கள்.

மிளிர்ந்து: அலைகள் வீசுவது போல் ஆவல் திருக்கண்களில் அலை மோதுகிறபடி.

எம்பெருமானை ஸேவிக்க வேண்டும் என்றிருக்கிற ஆழ்வாருடைய த்வரையை (விரைவை) விட, ஆழ்வாரை விஷயீகரிக்க வேண்டும் என்ற திருக்கண்களின் த்வரை (விரைவு) அதிகமாக இருக்கிறபடி.

செவ்வரி ஓடி: சிவந்த கோடுகள் திருக்கண்களில் நிறைந்துள்ளபடி, ஶ்ரியபதியாயிருக்கையாலும், வாத்ஸல்யம் கொண்டிருக்கையாலும் சிவந்திருக்கின்றன இந்தத் திருக்கண்கள்.

நீண்ட: தம்மளவும் (திருப்பாணாழ்வார் இருக்குமிடம் வரையிலும்) நீண்டிருக்கிறபடி.

திருக்கண்கள் தமக்கு அருகில் இருக்கிற காதுவரை நீண்டிருக்கின்றன என்றபடி.

திருவரங்கன் திருமுகத்தில் உள்ள இந்த திருக்கண்கள் காதுகள் வரை நீண்டிருப்பதற்கு ஸ்ரீ பட்டர் என்ற ஆசார்யர் சுவை மிகுந்த கருத்து ஒன்றை அருளிச் செய்துள்ளார்.

உலகில் சிறந்த ஜ்ஞாநம் உடையாரையும், அதில்லாரையும் ஒன்றாக மதித்துச் சிறப்பித்தால் பிறர் இந்தச் செயலைப் பழிப்பார்கள். இது என்ன கார்யம்? சிறந்த ஜ்ஞாநம் உடையாரைச் சிறந்த முறையில் சிறப்பிக்க வேண்டாமா? அறிவில்லாதவர்களுடன் சேர்ந்து ஸமமாக நினைக்கலாமா? புலமை உடையவர்களுக்கு என்று தனிப்பட்ட சிறப்பைத் தரவேண்டாமா? என்றெல்லாம் கூறி இகழ்வார்கள். அதற்காக அவர்களுக்குத் தனியாகச் சிறப்புத் தரவேண்டும்.





இந்த முறையில் திருவரங்கனுக்குத் திருமுகத்தில் மட்டும் இரண்டு கண்கள் இருந்தால் போதாது என்று அந்தக் கண்கள் நினைத்தனவாம். பண்டிதர்களுக்கு, அல்லாதார்க்கு ஒரேமாதிரி ஸம்பாவனை கூடாது. இம்மாதிரி ஸ்ரீ ரங்கநாதனுக்கும் மற்றையோருக்கும் இரண்டு கண்களா? இது தவறு என்று நினைத்தனவாம் திருக்கண்கள். இங்கு மற்றையவர் என்பது பரம், வ்யூஹம், விபவம், ஹார்தன் என்ற மற்றைய நிலைகளில் உள்ள எம்பெருமானைக் குறிக்கிறது. இந்த நான்கு வகைப்பட்ட எம்பெருமான்களைக் காட்டிலும் ஸ்ரீ ரங்கநாதன் மிகச் சிறப்புடையவன். ஆகவே மற்றைய நான்கு நிலைகளில் உள்ள எம்பெருமான் திருமுகத்திலும் இரண்டு கண்கள் தான் உள்ளன. ஸ்ரீரங்கநாதனுடைய திருமுகத்திலும் இரண்டு கண்கள் தான் இருந்தால் இவனுக்கு என்ன சிறப்பு?

மற்றைய எம்பெருமான்களைக் காட்டிலும் ஸ்ரீ ரங்கநாதனுக்கு எவ்விதத்தில் மேன்மை - உயர்வு என்பதை முதலில் அறிய வேண்டும். மற்றைய நால்வகைப்பட்ட எம்பெருமான்களைக் காட்டிலும் இவனுக்கு நம்மிடத்தில் க்ருபை அதிகம். அவர்களுக்கு அவ்வளவு க்ருபை கிடையாது.

ஸ்ரீ வைகுண்டநாதனான எம்பெருமானை எடுத்துக் கொள்வோம். அவன் யாருக்கு என்ன க்ருபை, தயை, அநுக்ரஹம் செய்கிறான்? அங்குள்ள நித்யஸூரிகளுக்கு எப்பொழுதும் தன் ஸேவையைத் தந்து வருகிறான். அவர்களுக்கு இவனுடைய க்ருபை வேண்டுவதில்லை. பிறர்க்கு உண்டாகும் கஷ்டங்களைப் பார்த்து அவற்றைப் போக்க விரும்புகை தானே க்ருபை. நித்யஸூரிகளுக்கு எவ்விதக் கஷ்டமும் கிடையாதே. ஆகையால் எம்பெருமானுடைய க்ருபை அவர்கள் விஷயத்தில் பயனின்றிக் கிடக்கிறது. அவர்களுக்கு இவன் செய்யும் உபகாரம் தண்ணீரிலேயே வாஸம் செய்யும் மீனுக்கு மேலும் தண்ணீர் வார்ப்பது போலாகும்.

எவ்விதக் கஷ்டமுமின்றி எப்போதும் ஆநந்தித்துக் கொண்டே இருக்கும் நித்ய ஸூரிகளை, தன் தர்ஶநம் தந்து மேன்மேலும் ஸந்தோஷப்படுத்துவதைத்தானே ஸ்ரீ வைகுண்டநாதன் செய்து வருகிறான். இது மீனுக்குத் தண்ணீர் வார்ப்பதை ஒக்கும்.

வ்யூஹ நிலையில் இருக்கும் க்ஷீராப்தி நாதன் - திருப்பாற் கடல் நாதன் முதலானோருக்கும் கூட ஸ்ரீ ரங்கநாதனுக்குப் போன்ற சிறப்பு கிடையாது. எப்போதும் ஜ்ஞாநிகளாக இருந்து பக்தி செய்து மகிழ்ந்து கொண்டிருக்கும் ஸநகர் முதலான யோகி களுக்கு மட்டுமே தர்ஶநம் கொடுத்துக் கொண்டிருக்கிறான். நம் போல்வாருக்கு எந்த அநுக்ரஹமும் செய்வதில்லை.

விபவ நிலையில் உள்ள ஸ்ரீ ராமன், ஸ்ரீ க்ருஷ்ணன் முதலான எம்பெருமான்கள் அவர்களைப் போலில்லாமல் பூலோகத்தில் வந்து ஸம்ஸாரிகளான சிலருக்கு அநுக்ரஹம் செய்கிறார்கள். ஆனாலும் அவர்கள் ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஒரு குறிப்பிட்ட தேஶத்தில் உள்ள சிலருக்கு மட்டுமே க்ருபை செய்து அவர்கள் துன்பத்தைப் போக்குகிறார்கள். ஸ்ரீ ராமாவதாரத்தில் ஸ்ரீ குஹப்பெருமான், ஸ்ரீ க்ருஷ்ணாவதாரத்தில் ஸ்ரீ விதுரர் போன்ற சிலருக்கு மட்டுமே அநுக்ரஹம் செய்தார்கள் இவர்கள்.

அந்தர்யாமி நிலையில் எம்பெருமான் யோகம் செய்பவர் களால் மட்டுமே ஸேவிக்கத் தக்கவன். நம்போல்வார்க்கு அவனால் அதிகமான பயனில்லை. இப்படிப்பட்ட வர்களுக்கும் கண்கள் இரண்டு.

பூலோகத்திலே, திருவரங்கத்திலே, அர்ச்சாரூபியாக ஶய நித்துக் கொண்டு கால நியமமும், தேஶ நியமமும், ஸேவிக்க வருபவர்கள் இன்ன தகுதி பெற்றிருக்க வேண்டும் என்றாற் போன்ற நியமமும் ஏதுமின்றித் தன்னை ஸேவிக்க வருபவர்கள் மிகுந்த நீசர்களானாலும் அவர்களுடைய தாழ்வைப் பார்க்காமல்





க்ருபை செய்து வருகிறான் ஸ்ரீ ரங்கநாதன். ஸம்ஸார மண்ட லத்தில் ஒருவரும் மிச்சமில்லா மல் ஆத்மஸமர்ப்பணம் பண்ணி னால்தான் எழுந்திருப்பேன் என்று ஶயநித்துக் கொண்டிருக் கிறான் ஸ்ரீ ரங்கநாதன். இதிலிருந்து ஸ்ரீ ரங்கநாதனுக்கு மற்றைய நால்வகை நிலையிலுள்ள எம்பெருமான்களைவிட க்ருபை - மேன்மை அதிகம் என்பது நன்கு புலனாகின்றதன்றோ? இப்படிப்பட்ட பரமதயாளுவான பெரிய பெருமாளுக்கும் திருமுகத்தில் இரண்டு கண்கள்தான் என்றால் அவர்களைக் காட்டிலும் இவனுக்கு என்ன சிறப்பு சொல்லப்பட்டதாகிறது?

ஆகவே மற்றைய எம்பெருமான்களுக்குத் திருமுகத்தில் மட்டும்தான் திருக்கண்கள். ஸ்ரீ ரங்கநாதனுக்குத் திருமேனி முழுவதும் நாங்கள் (திருக்கண்கள்) பரவியிருக்க வேண்டும். அப்போதுதான் இவனுக்கு அவர்களைவிடச் சிறப்பு இருப்பது புலனாகும். ஸ்ரீ ரங்கநாதனுடைய திருமேனி முழுவதையும் தாங்களே ஆக்ரமித்துக் கொண்டு அவனுடைய திருமேனி யெல்லாம் நாங்களேயாக இருக்க வேண்டும் எனத் திருக்கண்கள் நினைத்தனவாம். இதற்காகத் தங்களுக்கு அருகில் இருக்கும் காதுகளை முதலில் ஆக்ரமிக்கக் முற்படுகின்றனவாம்.

உலகம் முழுவதையும் தாங்களே ஆக்ரமித்துத் தங்கள் வஶமாக்க நினைக்கும் அரசன் முதலில் தன்னுடைய நாட்டுக்கு ஸமீபத்தில் உள்ள இடங்களை ஆக்ரமித்து வருவதை நாம் பார்த்துத்தானே வருகிறோம். அம்மாதிரியே தான் திருக் கண்களும் செய்கின்றன என்று.

ஸ்ரீ ரங்கராஜனுடைய திருமேனி முழுவதையும் தாங்களே ஆக்ரமித்துக் கொண்டு திருமேனி முழுவதுமே கண்கள் நிறைந்த தாக இருக்க வேண்டும் என்று விரும்பி முதலில் தங்களுக்கு மிக ஸமீபத்தில் இருக்கும் காதுகளை ஆக்ரமிக்கின்றனவாம் இத்திருக் கண்கள்.

இம்மாதிரி திருக்கண்கள் நீண்டிருப்பதற்குக் கருத்து அருளியது பட்டர். ஸ்ரீ ரங்கராஜஸ்தவத்தில் ஒரு ஶ்லோகத்தினால் இதை வெளியிட்டுள்ளார்.

**कृपया परया करिष्यमाणे सकलाङ्गं किल सर्वतोऽक्षिनेत्रे।**
**प्रथमं श्रवसी समास्तृणाते इति दैर्घ्येण विदन्ति रङ्गनेतुः॥**

க்ருபயா பரயா கரிஷ்யமாணே
ஸகலாங்கம் கில ஸர்வதோऽக்ஷிநேத்ரே।
ப்ரதமம் ஶ்ரவஸீ ஸமாஸ்த்ருணதே
இதி தைர்க்யேண விதந்தி ரங்கநேது:॥ ***(பூ.ஶ.98)***

இதன் கருத்துதான் கீழே விளக்கப்பட்டது.

இங்கு முன் கூறிய கருத்துக்களைக் காட்டும் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாருடைய ஸ்ரீ ஸூக்திகளே பரம போக்யங்கள். அவற்றை இங்கே அநுபவிப்போம்:-

பெரிய பெருமாளுடைய திருக்கண்களானவை திருச்செவியளவும் செல்ல நீண்டிருக்கிறபடிக்கு ஒரு நினைவு (கருத்து) உண்டு என்கிறார் பட்டர். அதாவது:-

''பெரிய பெருமாளுடைய திருக்கண்களானவை 'மீனுக்குத் தண்ணீர் வார்ப்பாரைப்போல நித்யஸூரிகளுக்கு முகம் கொடுத்துக் கொண்டிருக்கிற ஸ்ரீ வைகுண்ட நாதனுக்கும் கண்கள் இரண்டாய், ராம க்ருஷ்ணாத்யவதாரம் பண்ணி குஹாதிகள், விதுராதிகள் தொடக்கமானார் சிலர்க்கு அல்ப காலம் முகம் கொடுத்து விஷயீ ரித்து வந்தாப் போலே, வெறுங்கையோடே போனவர்களுக்கும் கண்ணிரண்டாய், 'ஸம்ஸாரம் கிழங்கெடுத்தாலல்லது எழுந்திரேன்' என்று கோயிலிலே அர்ச்சா ரூபியாய் அவ்வவர் நிகர்ஷங்களை (தாழ்வுகளைப்) பாராதே முகம் கொடுத்துக் கொண்டு கிடக்கிற பெரிய பெருமாளுக்கும் கண்ணிரண்டாயிருக்கவோ? இவருடைய க்ருபையைப் பார்த்தால் உடம்பெல்லாம் கண்ணாக வேண்டாவோ என்று பார்த்து 'எல்லா மண்டலங்களும் தங்களுக்கே ஆக வேணும்' என்றிருக்கும் ராஜாக்கள், முற்படத் தங்களுக்கு ப்ரத்யாஸந்நரான (ஸமீபத்திலிருக்கிற) அன்னியரை அழியச் செய்யுமாப்போலே, பெரிய பெருமாளுடைய அவயவாந்தரங்கள் (மற்றைய அவயவங்கள்) அடைய நாமேயாக வேணும் என்று, பார்ஶ்வ ஸ்தங்களாய் இருக்கின்றவை திருச்செவிகளாகையாலே அவற்றை வென்று அவ்வருகே போவதாக முற்பட அவற்றுடனே அலை எறிகிறாப்போலேயாய்த்துத் திருக்கண்கள் செவிகள் அளவும் நீண்டிருக்கிறபடி'' என்று.

நேரே பார்த்தால் இப் (இந்த) பெரிய வாய கண்கள் என்று தானே கூற வேண்டியிருக்கும்? எதிரில் இருப்பதை 'இந்த' என்றும் மறைவில் இருப்பதை 'அந்த' என்றும் சுட்டிக் காட்டுவது வழக்கம். இதற்கு மாறாக எதிரில் தெரியும் திருக்கண்களை அப் பெரியவாய கண்கள்' என்று அருளியதன் கருத்து - இப்படிப்பட்ட பேரழகு கொண்ட திருக்கண்களைத் தாமே நேரே பார்த்து வர்ணித்தால் தம்முடைய கண்ணே பட்டு அவற்றுக்கு ஏதாவது தீங்கு வந்துவிடுமோ என்று அஞ்சித் தன் முகத்தைத் திருப்பிக் கொண்டு 'அந்தப் பெரியவாய கண்கள்' என அருளிச் செய்கிறார் திருப்பாணாழ்வார்.

பெரியாழ்வாரும் இப்படித்தான் 'அப்பாஞ்சசன்னியமும் பல்லாண்டே' என்று ஸ்ரீ பாஞ்சஜந்யத்திற்குத் தம்முடைய த்ருஷ்டியாலே தோஷம் வராமல் இருப்பதற்காக முகத்தை மாற்றி வைத்துக்கொள்ள, அது மறைவிலிருப்பது காரணமாக 'அந்த' என்று சுட்டிக் காட்டுகிறார்.

இந்தத் திருக்கண்கள் என்னைப் பேதைமை செய்தன. என்னை அடியோடு அறிவிழந்தவனாக- பித்தனாகச் செய்து

விட்டன. ஏற்கனவே எம்பெருமானுடைய திருச்செவ்வாய் என்னுடைய சிந்தையைக் கவர்ந்து விட்டது. இப்போது இந்தத் திருக்கண்கள் என்னை உந்மத்தனாக- பித்தனாகச் செய்து விட்டன. சிவந்த திருவாயினால் நோவுபட்டுள்ள என்னை, இந்தத் திருக்கண்களும் நோவு படுத்துகின்றன.

ஒருவனால் அடிபட்ட ஒருவனை மற்றையவரும் அடிப்பதை உலகில் கண்டுதானே வருகிறோம். அவ்வாறே இந்த இரண்டு திருக்கண்களும் மாறி மாறி என்னைத் துன்புறுத்துகின்றன.

பேதைமை செய்தனவே. ராமனுடைய பாணத்தைவிடக் கொடியன எம்பெருமானுடைய இந்தத் திருக்கண்கள். ராம பாணம் தனக்கு இலக்கானவர்களை வதம் செய்து அவர்களை நிம்மதியாக இருக்கச் செய்கிறது. ப்ராணன் இருந்தால்தானே துக்கம்.

இந்தக் கண்கள் உயிருடன் வைத்தே நம்மை வதம் செய் கின்றன. எம்பெருமானுடைய சிவந்த திருவாய் ஜ்ஞாநம் பிறக் கும் வழியான மநத்தை அபஹரித்தன. திருக்கண்கள் ஜ்ஞாநத்தை அபஹரித்தன. திருடர்கள் ஒரு வீட்டில் கொள்ளையடிக்க வரும் போது முதலில் பிறர் வருவதற்கு வழியான வாயிற்கதவை அடைத்து விட்டுப் பிறகு உள்ளே இருப்பாரைத் துன்புறுத்தி, இருக்கும் பொருள்களைக் கொள்ளையடிப்பதுபோல் இருக்கின் றன இவற்றின் செயல்களும்.

திருடர்களால் கஷ்டம் தான் ஏற்படும். இவை ஸுகத்தைத் தருவதற்காக இவ்வாறு செய்கின்றன. 'ஜ்ஞாநத்தைப் போக்கின' என்பதன் ரஸத்தை அநுபவிக்க வேண்டும். மற்றைய விஷயங் களில் சென்ற ஜ்ஞாநத்தைத் திருப்பி எம்பெருமானுடைய திருமேனி அழகிலேயே ஈடுபட்டு அலமரும்படி (திண்டாடும் படி)ப் பண்ணுகை.





சிலருடைய கண்களில் பட்டு, மதி கெட்டு கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த என்னை, இவருடைய கண்கள் தம் அழகைக் காட்டி அந்தக் கண்களிலிருந்து மீட்டு, இனி மற்றொன்றில் ஈடுபடாதபடிப் பண்ணின என்றபடி. என்னை அகப்படுத்தி, தன்னுள் விழச் செய்து துன்புறுத்திய கண்கள் பெண்களுடைய கண்கள். 'மாதரார் கயற்கண் என்னும் வலையுள் பட்டு அழுந்து வேனை' என்று தொண்டரடிப்பொடி ஆழ்வார் அருளிச் செய் துள்ளார். மற்றையோருடைய கண்கள் மஹத்தான துக்கத்தைத் தருகின்றன. இந்தக் கண்கள் அவற்றில் பற்றறுத்து தம்மிடத்தி லேயே ஈடுபடச் செய்து இவற்றிலே நிலைத்திருக்கும்படியாக என்னைப் பித்தனாக்கி வைத்தன என்கிறார்.

ஸ்வாமி நம்மாழ்வார் 'அவன் கண்களாலே அமலங்களாக விழிக்கும்' (திருவாய்மொழி 1.9.9) என்று அருளிச் செய்கிறார். எம்பெருமான் ஆஶ்ரிதர்களுடைய தோஷங்கள் யாவும் நீங்கும் படியாகக் கடாக்ஷிப்பான். தோஷங்கள் விலகினால், தெளிந்த ஜ்ஞாநம் ஏற்பட்டு எல்லாப் புலன்களாலும் அவனிடமே ஈடு படுவர் ஆஶ்ரிதர் என்பது கருத்து.

ஆனால் என் விஷயத்தில் அது பொய்யாயிற்று. அவனுடைய திருக்கண்கள் எனக்கு இருந்த அறிவையும் போக்கின.

என்னுடைய இந்த நிலையைப் பார்த்தால்,கேட்டால், இனி எவரும் எம்பெருமானிடம் சென்று 'உன் தாமரைத் திருக் கண்களால் கடாக்ஷிக்க வேண்டும்' என ப்ரார்த்திக்க மாட்டார்கள் என்று திருப்பாணாழ்வார் எம்பெருமான் திருக்கண்களின் அழகில் ஈடுபட்டு அதனால் தாம் அறிவிழந்து நிற்கும் நிலையை விவரித்தருள்கிறார் இந்தப் பாட்டில்.

ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் முநிவாஹநபோகம் என்ற தம் வ்யாக்யாநத்தில் இங்கு அருளிச் செய்தவற்றையும் அநுபவிப்போம்.

'ஜிதம் தே புண்டரீகாக்ஷ' இத்யாதிகளிலே தோற்பித்துத் திருவடிகளிலே விழப்பண்ணி மேன் மேலே அநுபவத்தை உண்டாக்கி தாமரைக் கண்களுக்குத் தாம் அற்றுத் தீர்ந்தபடியை அநுபவிக்கிறார்.

**அரங்கத்து அமலன் முகத்து:-** பெரிய பெருமாளுடைய 'கோளிழைத் தாமரை' இத்யாதிகளிலே பேசப்பட்ட பேரழகை யுடைத்தாய் சந்த்ரனும் தாரகையும் ஒன்றினாப்போலே இருக்கிற திருமுகத்தில்.

**கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரி ஓடி நீண்ட அப்பெரியவாய கண்கள்** - நிகர் (ஒப்பு) இல்லாத நீல ரத்நம் போலே இருக்கிற தாரகை (கண்விழி)யின் நிறத்தினால் நீலோத் பல வர்ணங்களாய் ஆஶ்ரித தர்ஶந ப்ரீதியாலே அன்றலர்ந்த தாமரைப் பூப்போலே அதிவிகஸிதங்களாய் (நன்கு மலர்ந்தன வாய்) ஆஸந்நர் - ஸமீபத்திலே உள்ளவர்-எல்லார் பக்கலிலும் ஆதரம் தோன்றும்படியான உல்லாஸத்தை (மலர்ச்சியை) உடை யனவாய், அநந்யர் பக்கல் அநுராகத்துக்குக் கீற்றெடுக்கலாம் படியான சிவந்த வரி (கோடு) களாலே வ்யாப்தங்களாய் (நிறைந் தனவாய்) ஸ்வபாவ ஸித்தங்களான ஆயாம விஸ்தாரங்களை (இயற்கையிலுண்டான நீளம் -அகலம் இவற்றை) உடை யனவான திருக்கண்கள்.

அப்பெரியவாய கண்கள் என்பது நாம் கண்களால் காண்ப தோடு மட்டுமல்லாமல் ஶாஸ்த்ரங்களைக் கொண்டு அறிய வேண்டிய அளவிறந்த சுவையின் சிறப்பையும் மாஹாத்ம்யத் தையும் உடைய கண்கள்.

**என்னைப் பேதைமை செய்தன:** இந்தத் திருக்கண்களின் அநுபவமான சுவையிலே ஈடுபட்ட என்னை - மற்றையவற்றை அறிவதற்கோ மற்றொன்றைச் செய்வதற்கோ தகுதியில்லாதபடிச் செய்தன என்று.





இனிப் பரமபத ஸோபாநத்தில் முக்தன் எம்பெருமானுடைய திருக்கண்களை நேரே அநுபவிக்கும் அழகையும் அநுபவிப் போம்.

'ஈஶ்வரோऽஹம்' என்றிருப்பாரைத் தோற்பித்து 'நமஸ்தே' என்று திருவடிகளிலே விழப்பண்ணும் கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரி ஓடி நீண்ட அப்பெரியவாய கண்களைக் கண்டு ''ஏழையர் ஆவி உண்ணும் இணைக் கூற்றங்கொலோ? அறியேன் ஆழியங் கண்ணபிரான் திருக்கண்கொலோ?'' என்பது, என்று.

அஹங்காரத்தாலே நானேதான் ஈஶ்வரன், எனக்கு மேற்பட்ட ஒருவன் ஈஶ்வரன் அல்லன் என்றிருப்பவர்கள் இந்தத் திருக் கண்களை ஸேவித்ததும் தன் அஹங்காரங்கள் யாவும் தொலையப் பெற்று எம்பெருமானே! உனக்கு நமஸ்காரம், உன் அடியவன் நான் என்றெல்லாம் பேசச் செய்யுமாம் இந்தத் திருக் கண்கள்.

'ஏழையர் ஆவி உண்ணும் இணைக் கூற்றங்கொலோ யான் அறியேன்' என்று ஸ்வாமி நம்மாழ்வார் திருக்கண்களைப் பற்றி அருளிச் செய்கிறார்.

பக்தர்களை இந்தத் திருக்கண்கள் துன்புறுத்துகின்றன. மற்றொன்றில் ஈடுபட்டுக் காலத்தைப் போக்கவும் முடிய வில்லை. எம்பெருமானையும் பெற முடியவில்லை. நடுவே இந்தத் திருக்கண்கள் இப்படி நலிகின்றனவே - துன்புறுத்து கின்றனவே. இந்த இரண்டு திருக்கண்களும் இரண்டு யமன்கள் போலிருக்கின்றன. லோகத்தில் யமன் ஒருவன்தான் உண்டு என்று கேள்விப்பட்டிருக்கிறோம். இருவர் உளர் என்று கேள்விப் பட்டதில்லை. அதிலும் யமன் எல்லார்க்கும் பொதுவாய், பலம் வாய்ந்தவர்கள், பலம் இல்லாதவர்கள், ஆண்கள், பெண்கள்

என்ற பேதம் இல்லாமல் யாவரையுமே துன்புறுத்துவான். இந்த இரண்டு யமன்கள் பகவத் விஷயத்தில் ஈடுபட்டுத் தவிக்கும் துர்பலைகளான பெண்களை மட்டும் துன்புறுத்த வந்த இரண்டு யமன்களோ? ஒன்றுக்கொன்று ஸங்கேதம் - ஸங்கல்பம் பூண்டு நம்மைத் துன்புறுத்தவந்த இரண்டு யமன்களோ? என்று ஸ்வாமி நம்மாழ்வாருடைய அநுபவத்தை ஒட்டி ஸ்ரீ வைகுண்டத்திலும் முக்தனானவன் எம்பெருமானை நெருங்கி அவனுடைய திருக் கண்களை அநுபவிக்கிறான் என்றபடி.

திருக்கண்கள் நீண்டிருப்பது போல் வ்யாஸமும் நீண்டு விட்டது. ஆனால் அவை பேதைமை செய்தன. இவை பேதைமை நீக்கும் என்று நம்புகிறோம்.

---

பரியனாகி வந்த அவுண னுடல் கீண்ட ✱ அமரர்க்கு
அரிய ஆதிப்பிரான் அரங்கத் தமலன் முகத்து ✱
கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட அப்
**பெரியவாய கண்கள் என்னைப் பேதைமை செய்தனவே (8)**



## 9. ''நெஞ்சினை நிறை கொண்ட நீலமேனி''

**भगवद्वपुषश्शोभा शुभा लावण्यसंज्ञिका ।
पाणनाथं समाकर्षत् हृष्टं प्रत्यङ्गदर्शनात् ॥
लावण्यानुभवस्स्वस्य मनोगाम्भीर्यमञ्जसा ।
अपाहरदहो चित्रं! इत्याह मुनिवाहनः ॥**

பகவத்வபுஷஶ்ஶோபா ஶுபா லாவண்யஸம்ஜ்ஞிகா ।
பாணநாதம் ஸமாகர்ஷத் ஹ்ருஷ்டம் ப்ரத்யங்க தர்ஶநாத் ॥
லாவண்யாநுபவஸ்ஸ்வஸ்ய மநோகாம்பீர்யம் அஞ்ஜஸா ।
அபாஹரத் அஹோ சித்ரம் ! இத்யாஹ முநிவாஹந: ॥

கீழ்ப் பாசுரத்தில், திருப்பாணாழ்வார் எம்பெருமான் திருக் கண்களின் அழகில் ஈடுபட்டு அந்தத் திருக்கண்கள் தம்முடைய அறிவை அழித்தன என்றார்.

எம்பெருமானுடைய திருக்கண்கள் பக்தர்களையும், த்வேஷி களையும் ஒரே மாதிரியாகத் துன்புறுத்தும் தன்மை கொண்டன.

பக்தர்கள் அவனைப் பெறாமையாலே முடிவார்கள். த்வேஷி கள் பொறாமையாலே முடிவார்கள்.

ராம பாணங்களாலே அடிபட்ட ராவணன் அன்று நோவு பட்டது போல் இன்று திருப்பாணாழ்வார் எம்பெருமான் திருக்கண்களின் கடாக்ஷம் பெற்று நோவுபடுகிறார்.

ராவணன் நோவுபட்டதை ஸ்ரீ வால்மீகி பகவான் அன்று ஸ்ரீ ராமாயணத்தில்-

**ब्रह्मदण्ड प्रकाशानां विद्युत्सदृश वर्चसाम् ।
स्मरन् राघव बाणानां विव्यथे राक्षसेश्वरः ॥**

**ப்ரஹ்மதண்ட ப்ரகாஶாநாம் வித்யுத்ஸத்ருஶ வர்ச்சஸாம் ।**

**ஸ்மரந் ராகவபாணாநாம் விவ்யதே ராக்ஷஸேஶ்வர: ॥**

என்ற ஶ்லோகத்தினால் வெளியிட்டார்.

ப்ரஹ்மதண்டம் போல் ஜ்வலிக்கின்றவையும், மின்னல் போன்ற ஒளியுள்ளவையுமான ராகவனுடைய பாணங்களை நினைத்து ராக்ஷஸேஶ்வரனான ராவணன் மிகவும் நோவு பட்டான் என்கிறார் வால்மீகி.

ஆண்டாளும் எம்பெருமானுடைய திருக்கண்களால், தான் நோவுபட்டு வருந்தியதை நாய்ச்சியார் திருமொழியில் தானே எழுதிவைத்தாள்-

**கஞ்சைக் காய்ந்த கருவில்லி கடைக்கண் என்னும் சிறைக் கோலால்**

**நெஞ்சு ஊடுருவ ஏவுண்டு நிலையும் தளர்ந்து நைவேனை!**

என்று.

எம்பெருமான் திருக்கண் என்பது ஒரு சிறைக்கோல். அது என் நெஞ்சில் ஊடுருவிப் பாய்ந்தது. அதனால் நான் நிலை தளர்ந்து நைகின்றேன் - வருந்துகின்றேன் என்கிறாள். சிறைக் கோல் = சிறகுகள் கொண்ட அம்பு.

ஸ்ரீ ராம பாணத்தினால் ராக்ஷஸேஶ்வரனான ராவணன் பட்ட பாடுகளை ஸ்ரீ ஆண்டாள் எம்பெருமான் திருக்கண்களினால் படுகிறாள் என்கின்றனர் பூர்வர்கள்.

இப்படித் திருப்பாணாழ்வார் திருவரங்கன் திருமுகத்துக் திருக்கண்களினால் படும் பாடுகளை இவரே அருளிச் செய்யக் கேட்டது எம்பெருமானுடைய திருமேனி.

இது எண்ணுகிறது - இந்த ஆழ்வார் இதுவரை என்னிடம் உள்ள ஒவ்வொரு அவயவத்தையும் தனித் தனியே அநுபவித்தார்.





மல்லிகை, முல்லை போன்ற புஷ்பங்கள் ஒவ்வொன்றையும் தனித்தனியே சூடி அநுபவிப்பாரைப் போல் இவரும் தனித் தனியே ஒவ்வொரு அவயவத்தினுடைய அழகையும் அநுபவித் தார். இதனால் தான் ஶ்ரமப்படுகிறார். இந்த அவயவங்களுக் கெல்லாம் ஆதாரமாயிருக்கும் என்னை (திருமேனியை) அநுப வித்தால் அந்த ஶ்ரமங்கள் யாவும் தீரும். தனித் தனியான புஷ்பங் களைச் சூடுவார்களுக்கு உள்ள குறைபாடுகள், அந்தப் புஷ்பங் கள் பலவற்றாலும் தொடுக்கப்பட்ட கலம்பகன் மாலையைச் சூடுவார்களுக்கு ஸம்பவியா. தனித் தனியான புஷ்பங்களைச் சூடுபவர்களால் அந்தந்தப் புஷ்பங்களின் வாஸனையை மட்டும் தான் அநுபவிக்க முடியும். கலம்பகன் (கதம்ப) மாலையைச் சூடிக் கொண்டால் எல்லாப் புஷ்பங்களின் வாஸனைகளையும் ஒருங்கே அநுபவிக்கலாமன்றோ?

திருப்பாணாழ்வார் இதுவரை தனித் தனியான அவயவங் களைத்தானே அநுபவித்தார். அவற்றுடன் சேர்ந்த என்னை (முழுத் திருமேனியை) அநுபவிக்கவில்லையே.

மற்றைய ஆழ்வார்களைப் போல் நிறைய பாசுரங்களைப் பேசி நம்மை அநுபவிப்பவர் அல்லர் இவர். சுருக்கமாகச் சுவை படப் பேசும் தன்மையுடையவர். ஆதலால் இவரை நாமே முன் சென்று நம்முடைய அழகைக் காட்டி இவரைத் தேற்றுவோம் என்று நினைக்கிறது எம்பெருமானுடைய திருமேனி.

தனக்கென்று தனிப் பெருமையும் உண்டு என்கிறது இது (திருமேனி).

அதாவது:- இதுவரை ஆழ்வார் அநுபவித்த அழகு வாய்ந்த அவயவங்கள் அனைத்துக்கும் நான்தான் ஆஶ்ரயம் - ஆதாரம். ஆபரணங்களும் என்னிடம்தான் சேர்ந்துள்ளன. இவற்றின் சேர்த்தியால் வந்த அழகும் எனக்கு உள்ளது. இது தவிர எனக் கென்று ஏற்பட்ட ஸ்வாபாவிகமான லாவண்யமும் என்னிடம்

உள்ளது. இவற்றுடன் கூடிய என்னுடைய ஸமுதாய ஶோபையை இவர் அநுபவிக்கும்படி நாம் செய்ய வேண்டும் என்றும் எண்ணிற்று இந்தத் திருமேனி.

இதற்காக இந்தத் திருமேனியானது அவயவங்களையும் ஆபரணங்களையும் சேர்த்துக் கொண்டு மேல் விழுந்து ஆழ்வாருடைய திரு உள்ளத்தைத் தன் பக்கலிலே இழுத்துக் கொள்கிறது. ஆழ்வாரும் இதில் அகப்பட்டு அதற்கு வஶமானார். இதை இந்தப் பாட்டில் ஆழ்வார் தாமே அருளிச் செய்கிறார்.

ராஜாக்கள் சிலரை வஶீகரிப்பதற்குத் தங்களுடைய சதுரங்க பலத்தையும் (ஸேனையையும்) திரட்டிக் கொண்டு அந்தச் சிலர் மீது பாய்வார்கள் என்பது உலகில் ப்ரஸித்தம். அதுபோல் தான் இப்போது எம்பெருமான் திருமேனியும் அவயவங்களையும், திரு ஆபரணங்களையும், அழகுகளையும் திரட்டிக் கொண்டு திருப்பாணாழ்வார்மீது பாய்கிறது அவரை வஶீகரிப்பதற்காக. முடிவில் அவரை வஶீகரித்தும் விடுகிறது.

இங்கே அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் அருளிய ஸ்ரீ ஸூக்திகளையும் அநுபவிப்போம்.

''ஊரழி பூசல்போலே நிறமானது எல்லோரையும் கூட்டிக் கொண்டு வந்து என்னெஞ்சைக் கொள்ளை கொண்டதென்கிறார். கீழ்ப்பாட்டில் ''கண்கள் என்னைப் பேதைமை செய்தனவே'' என்று

**''ப்ரஹ்மதண்டப்ரகாஶாநாம் வித்யுத் ஸத்ருஶவர்ச்சஸாம் ।**

**ஸ்மரந் ராகவபாணாநாம் விவ்யதே ராக்ஷஸேஶ்வர: ॥**

என்கிறபடியே ராமஶரம் போலே இருக்கிற அந்தக் கடாக்ஷபாதங்களாலே ''கடைக்கண் என்னுஞ் சிறைக் கோலால் நெஞ்சூடுருவ ஏவுண்டு நிலையும் தளர்ந்து நைவேனை' என்றாப்போலே இவர்படுகிற பாட்டைக் கண்ட திருமேனி





யானது தனிப் பூச்சூடுவாரைப் போலே நம்முடைய அவயவ ஸௌந்தர்யத்தைத் தனித் தனியே அநுபவித்தாரித்தனையன்றோ!

இனிக் கலம்பகன் மாலை சூடுவாரைப் போலே இந்த அவயவங்களுக்கு ஆஶ்ரயமான நம்மை அவற்றோடே கூட அநுபவிக்கப் பெற்றிலரே!

இவர் மற்றைய ஆழ்வார்கள் போலே பரக்கப் பேசி நின்று அநுபவிக்கவும் வல்லர் அல்லர். ஆன பின்பு இந்த அவயவங்களோடும் ஆபரணங்களோடுமாகச் சேர்ந்த சேர்த்தியால் வந்த அழகும் ஸ்வாபாவிக ஸௌந்தர்யத்தால் வந்த அழகுமான நம்முடைய ஸமுதாய ஶோபையை இவர் அநுபவிக்க வேணும் என்று பார்த்து, ராஜாக்கள் உறுபூசலாய்க் கொலையிலே பரந்து தங்களுடைய சதுரங்க பலத்தையும் சேர்த்துக் கொண்டு அணி அணியாகச் சிலர்மேலே ஏறுமாபோலே, இந்தத் திருமேனியானது அவயவங்களையும் ஆபரணங்களையும் சேர்த்துக் கொண்டு தன்னுடைய ஸமுதாய ஶோபையைக் காட்டி 'உய்விடம் ஏழையர்க்கும் அசுரர்க்கும் அரக்கர்கட்கும் எவ்விடம்?' என்று கொண்டு மேல் விழுந்து தம்முடைய (திருப்பாணாழ்வாருடைய) திருவுள்ளத்தைத் தன் பக்கலிலே இழுத்துக் கொள்ள, தாம் (திருப்பாணாழ்வார்) அதிலே அகப்பட்டு நெஞ்சழிந்தபடியைச் சொல்லுகிறார்.''

வழக்கம்போல் பாசுரம் முழுவதையும் விவரிக்காமல் வேண்டுமளவை மட்டும் காட்டும் உத்தரார்த்தத்தின் (பின் பாதியின்) பொருளையே விளக்குகிறோம்.

**கோலமாமணியாரமும் முத்துத் தாமமும் முடிவில்ல தோரெழில் நீலமேனி ஐயோ! நிறை கொண்டதென்னெஞ் சினையே!**

இதில் பெரிய பெருமாள் வடிவு - திருமேனி இருக்கும் படியை (வகையை) அருளிச் செய்கிறார் திருப்பாணாழ்வார்.

திருமேனியில் திருமார்பில் சிறந்த ரத்நங்களால் பதிக்கப் பட்ட ஹாரங்கள் சாற்றப்பட்டுள்ளன.

இதில் பதிக்கப்பட்டுள்ள ரத்நம் ஒவ்வொன்றும் திருமார்பில் ப்ரகாஶிக்கும் ஸ்ரீ கௌஸ்துபரத்நம் போல் பெருமதிப் புடையதாகும்.

இந்த ரத்நஹாரங்கள் எம்பெருமான் திருமேனிக்கு அலங்கார மாய் அமைந்துள்ளன.

மேலும் இந்தத் திருமார்பில் நல்முத்து வடங்களும் ப்ரகாஶிக்கின்றனவாம்.

இந்த முத்துக்களும் எம்பெருமான் திருமேனிக்கு ஏற்றபடி அமைந்துள்ளனவாம்.

எம்பெருமானுடைய திருமேனி மிகவும் ம்ருதுவானது. மிக மென்மையுடையது. இதற்கேற்பத் திருமார்பில் முத்து வடங்கள் அமைந்துள்ளன. இந்த முத்துக்கள் மிகுந்த குளிர்ச்சி உடையன. இப்படிப்பட்ட முத்துக்களால் மூன்று ஸரங்கள், ஐந்து ஸரங்கள், ஏழு ஸரங்கள் என்றாப் போலே முத்து வடங்கள் பல சாற்றப் பட்டுள்ளன.

எம்பெருமான் திருமேனியில் சாற்றப்பட்டுள்ள ரத்நஹாரங் களும் முத்து வடங்களுமே மிக அழகியவையாக இருக்கின்றன. இவை எம்பெருமான் திருமேனியில் சாற்றப்பட்ட பிறகு மேலும் மிக அழகியவையாகக் காட்சியளிக்கின்றன என்பதைத் திருப் பாணாழ்வார் 'கோலமாமணியாரமும் முத்துத் தாமமும்' என்று அருளுகிறார்.

உலகில் நாம் ஆபரணம் பூணுவது நமக்கு இல்லாத ஒரு அழகைப் பெறுவதற்காக.





எம்பெருமான் திருமேனியில் ஆபரணம் சாற்றுவது அவனுக் கில்லாத அழகை உண்டு பண்ணுவதற்காக அன்று. துஷ்டர்க ளுடைய கண்ணெச்சில் படாமைக்காக, இருக்கும் அழகை மறைக்கவே ஆபரணங்கள் சாற்றப்படுகின்றன. எம்பெருமான் திருமேனி ஸம்பந்தத்தால் ஆபரணங்கள் அழகு பெறுகின்றன. இதற்காகவும் எம்பெருமானுக்குத் திருவாபரணங்கள் சாற்றப் படுகின்றன என்பர் பெரியோர்கள்.

**''आभरणस्य-आभरणम्''** (ஆபரணஸ்ய- ஆபரணம்) எம்பெரு மானுடைய திருமேனி. இதன் அழகுக்கு ஒரு எல்லை கிடையாது என்கிறார் ஆழ்வார். 'முடிவில்லதோர் எழில்' என்று. எம்பெரு மானுடைய வெறும் திருமேனியே கூட பரம போக்யமா யிருக்கிறது என்கிறார் அடுத்து 'நீலமேனி' என்ற பதத்தினால்.

இந்த ஆபரணங்களும், ஸமுதாய ஶோபையும் கூட வேண்டாதபடி நீல நிறங்கொண்டு விளங்குகிறது திருமேனி.

ஆதிஶேஷனாகிற திரு அணைமேல் பள்ளி கொண்டிருக்கும் பெரிய பெருமாள் பச்சை (மரகத) ரத்ந மலைபோல் ஸேவை தருகிறான். அவனுடைய திருமேனியினுடைய ஒளிகள் கூட்ட மாகப் பரவுகின்றன. எதிரில் நின்று ஸேவிப்பவர் மீது அந்த ஒளிக்கற்றைகள் படிகின்றன. இந்த அநுபவத்தைப் பெற்ற ஸ்ரீ பட்டர் என்ற ஆசார்ய ஸார்வ பௌமர் தக்கதோர் உதாஹரணம் கொண்டு தம்முடைய அநுபவத்தை வெளியிட்டருளுகிறார். அதாவது நன்கு காய்ந்து உருகிய தங்கத்தினால் செய்யப்பட்ட பொன் மலையொன்று ஸமுத்ரத்தோடு சேர்ந்து நிற்பதாகக் கொள்ள வேண்டும். முதலில், அப்போது அந்தக் கடலிலிருந்து கிளம்பும் அலைகள் கரையில் அருகில் இருப்பவர்களை நனைத்து நீராட்டுவிக்கும் அன்றோ! இவ்வாறு எம்பெருமான் திருமேனியெனும் பச்சை ரத்நமலையில் ஒளிக் கற்றைகள் அவன்

எதிரே உள்ள என்னை (பட்டரை) நனைத்து நீராட்டுகின்றன என்கிறார் ஸ்ரீ பட்டர்.

ஆதிஶேஷன் திருவுருவத்துடன் கூடி விளங்குகிறது எம்பெருமானுடைய திருமேனி. இது பொன்மலையுடன் சேர்ந்து விளங்கும் கருங்கடல் போன்றுள்ளது. ஆதிஶேஷன் உருகிய பொன் மலை போன்றுள்ளான். எம்பெருமான் திருமேனி, கடல் போன்றுள்ளது. ஆதிஶேஷனுடன் சேர்ந்திருக்கும் எம்பெருமான் திருமேனி பொன்மலையுடன் கூடிவிளங்கும் கடல் போன்றுள்ளது என்பது இதன் கருத்து. ஶ்லோகம் இது:-

**द्रुत कनकजगिरि परिमिलदुदधि-**
**प्रचलित लहरिवदहमहमिकया ।**
**स्नपयति जनमिमं, अपहरति तमः**
**फणिशय मरतकमणिकिरण गणः ॥**

**(श्रीरङ्गराजस्तवः-पूर्वशतकम् -८६)**

த்ருத கநகஜகிரி பரிமிலத் உததி-
ப்ரசலித லஹரிவத் அஹமஹமிக்யா ।
ஸ்நபயதி ஜநமிமம், அபஹரதி தம:
பணிஶயமரதகமணி கிரண கண: ॥

***(ஸ்ரீரங்கராஜஸ்தவம் - பூர்வஶதகம் -86)***

***நீலமேனி:-*** திருமேனியில் உள்ள தேஜஸ்ஸை நீக்கி வெறும் திருமேனியை மட்டும் ஸேவித்தால் கூட ஸேவிப்பவர்களின் கண்கள் குளிரும்படி அவற்றில் மை இட்டு எழுதினாப் போலே இருக்கும் திருமேனி என்கிறார்.

***நிறை கொண்டது என்னெஞ்சினையே-*** என் மநத்தினுடைய பூர்த்தியை (அதாவது மற்றெதையும் வேண்டாமல் காம க்ரோதங்





களால் அலை பாயாமல் ஸ்திரமாயிருக்கும் தன்மையை அழித்தது என்கிறார்.

சேதநங்கள் - அசேதநங்கள் இவற்றின் கரணகளேபரங்களை - அதாவது இந்த்ரியங்களையும் இவற்றுக்கு ஆதாரமான ஶரீரத்தையும் ப்ரளயம் அழிக்காதபடி இவற்றைத் தன் திரு வயிற்றிலே வைத்துக் காப்பாற்றியவன் தன் இந்த்ரியங்களையும் திருமேனியையும் காட்டி என்னுடைய இந்த்ரியங்களை அழித்து விட்டானே என்கிறார். நீல நிறங்கொண்ட திருமேனியைக் கொண்டு தனக்குள்ளவற்றையெல்லாம் காட்டி எம்பெருமான் என்னிடம் உள்ளவற்றை எல்லாம் அபஹரித்துக் கொண்டான்.

''நான் (திருப்பாணாழ்வார்) எம்பெருமானிடம் உள்ள அழகெல்லாவற்றையும் அநுபவிக்க வேண்டும் என்று விரும்பியிருந்தேன். இப்படியிருந்த என் விஷயத்தில் எம்பெருமானை அநுபவிப்பதற்கு முக்ய கருவியாய் இருந்த என்னுடைய நெஞ்சைத் தன் பக்கலில் இழுத்துக் கொண்டு விட்டானே எம்பெருமான், என்று சொத்தைப் பறி கொடுத்தவர் சொல்வது போல் 'ஐயோ' என்கிறார் ஆழ்வார்.

இந்தப் பாசுரத்தில் ஸ்ரீ ரங்கநாதனை - ஆலிலைமேல் அன்று துயின்ற பாலகனாய் ஆழ்வார் அநுபவிக்கிறார் 'ஆல மாமரத்தினிலைமேல் ஒரு பாலகனாய்' என்று.

இதனால் கிடைக்கும் ரஸத்தைப் பெரியவாச்சான் பிள்ளை 'இப்பாட்டால் வடதளஶயநமும் பெரிய பெருமாள் பக்கலிலே உண்டென்கிறது' என்று அருளிச் செய்துள்ளார்.

இப்படித் திருப்பாணாழ்வார் பெற்ற அநுபவம் நமக்கு நம்முடை நம்பெருமான் (ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்ஹன்) பக்கலிலே கிடைக்கிறது. எம்பெருமானுடைய எல்லா நிலைகளையும் நாம் ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிம்ஹன் பக்கலிலே அநுபவித்து வருகிறோம்.

கற்கண்டின் சுவையை அநுபவிப்பதற்கு மஹாபண்டிதனாக, மஹா பக்தனாகத்தான் இருக்க வேண்டும் என்ற நியதி கிடையாதே! பண்டிதன் - பாமரன், பக்தன் - பக்திஹீநன் யாவருக்குமே கற்கண்டு தித்திக்கத் தானே செய்யும்!

இனி முநிவாஹந போகத்தில் ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் அருளியுள்ள விஷயத்தை அநுபவிப்போம்.

'அவயவ ஶோபைகளிலே ஈடுபட்ட தம்முடைய (திருப்பாணாழ்வாருடைய) நெஞ்சு வருந்தி அவயவங்கள் அனைத்தினுடையவும் ஶோபையை - அழகை அநுபவித்துப் பிறகு திருமேனி முழுவதிலும் வ்யாபித்திருக்கும் ஸமுதாய ஶோபையை அநுபவித்து அதனால் பூர்ணமான நித்யாநுபவத்தைப் பெற வேண்டும் என்ற ஆசை கொண்டது. இதன் பயனாய் ஸமுதாய ஶோபையை அநுபவிக்க ஆரம்பித்துத் தன்னுடைய (நெஞ்சினுடைய) பூர்த்தியை - நிறைவை இழந்தது தன் நெஞ்சம் என்று இப்பாட்டில் திருப்பாணாழ்வார் அருளுவதாக அவதாரிகை வைத்தருளியுள்ளார் ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன்.

ஆழ்வாருடைய நெஞ்சானது தனித் தனியே திவ்யாவயங்களை அநுபவித்தது. தற்போது ஸமுதாயஶோபையெனப்படும் லாவண்யத்தை அநுபவிக்க முற்பட்டது. அப்போது இந்த ஸமுதாய ஶோபையானது இந்த நெஞ்சு முன்பு பெற்றதாக நினைத்திருந்த காம்பீர்யத்தை - ஆழத்தை அழித்து விட்டது.

இதற்கு மேலும் ஒரு வருத்தத்தைத் தன் நெஞ்சில் உண்டாக்கி விட்டது இந்த அவயவ ஶோபை. அதாவது இப்போது பெற்ற பூர்ணாநுபவத்துக்கு விச்சேதம் வந்துவிட்டால் என்ன செய்வது? என்று அஞ்சி இந்த ஸமுதாயஶோபையும், இதை அநுபவிப்பதற்கு நாமும் எப்போதும் பிரிவின்றி இருக்க வேண்டுமே என்று 'பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு' என்று எப்போதும் மங்களா





ஶாஸநம் பண்ணும்படிப் பண்ணிற்று இந்த ஸமுதாயஶோபை என்கிறார் ஆழ்வார் என்பதை 'ஐயோ! நிறை கொண்டதென்னெஞ்சினையே!' என்று அருளிச் செய்கிறார் என்று ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் உரைத்தருளியுள்ளார்.

ஒவ்வொரு அவயவத்தின் ப்ரத்யேகாநுபவத்தில் ஆழ்வார் வெளியிட்டருளிய ரஸம் (சுவை)அதிகம். அதனால் ப்ரத்யேகாநுபவத்தை வெளியிட்ட வ்யாஸங்களிலும் சுவை அதிகமாக இருந்தது.

---

**ஆலமாமரத்தினிலைமேல் ஒரு பாலகனாய் ***
**ஞாலமேழும் உண்டான் அரங்கத்தரவினணையான் ***
**கோலமாமணியாரமும் முத்துத்தாமமும் முடிவில்லதோ ரெழில் ***
**நீலமேனி, ஐயோ ! நிறைகொண்டதென் நெஞ்சினையே (9)**

## 10. அணியரங்கனைக் கண்ட கண்கள்

पाणनाथोऽनुभूयैवं रङ्गनाथस्य विग्रहम् ।
स्वस्य चित्तं च चिन्ता च नेत्रे चाऽऽत्मा च सर्वथा ॥

तत्र तत्र निबद्धानीत्यब्रवीत् स्वस्य गाथया ।
एवं रङ्गेशसौन्दर्ये बद्धं नेत्रद्वयं स्वकम् ॥

ततोऽन्यन्नैव पश्येद्धि सत्यमित्यब्रवीद् दृढम् ।
इयतस्समयांस्तस्य मुनिवाहस्य सूक्तयः ॥

व्यव्रियन्त सतां प्रीत्यै नारायणयतीश्वरैः ।
विवृत्या चाऽनया श्रीमान् प्रसीदेन्नृहरिर्ध्रुवम् ॥

பாணநாதோऽநுபூயைவம் ரங்கநாதஸ்ய விக்ரஹம் ।
ஸ்வஸ்ய சித்தம் ச சிந்தா ச நேத்ரேசாऽऽத்மா ச ஸர்வதா ॥

தத்ர தத்ர நிபத்தாநீத்யப்ரவீத் ஸ்வஸ்ய காதயா ।
ஏவம் ரங்கேஶஸௌந்தர்யே பத்தம் நேத்ரத்வயம் ஸ்வகம் ॥

ததோऽந்யந்நைவ பஶ்யேத் ஹி ஸத்யமித்யப்ரவீத் த்ருடம் ।
இயதஸ்ஸமயாம்ஸ்தஸ்ய முநிவாஹஸ்ய ஸூக்தய: ॥

வ்யவ்ரியந்த ஸதாம் ப்ரீத்யை நாராயணயதீஶ்வரை: ।
விவ்ருத்யா சாऽநயா ஸ்ரீமாந் ப்ரஸீதேந் ந்ருஹரிர் த்ருவம் ॥

திருப்பாணாழ்வார் திருவரங்கனுடைய திருமேனியில் ஒவ்வொரு அவயவத்தின் அழகிலும் ஈடுபட்டு அந்த ஈடுபாட்டை





அமுதமயமான தம் திருவாக்காலே அருளிச் செய்த அழகை நாம் இவ்வளவு நாட்களாக ஸ்ரீ ந்ருஸிம்ஹ ப்ரியா மூலம் படித்துப் பேரின்பம் பெற்றோம்.

இதற்கு முன் பகுதியில் திருவரங்கனுடைய திருமேனி முழுவதையும் அநுபவித்து அந்த அழகில் திருப்பாணாழ்வார் தன் நெஞ்சைப் பறி கொடுத்தமையை அவர் அருளிய திருப் பாசுரம் கொண்டே அநுபவித்தோம்.

இப்படித் திருவரங்கன் திருமேனி அழகில் ஈடுபட்ட தம் கண்கள் இவனைத் தவிர்த்த மற்ற எதையுமே காண மாட்டாதபடி ஆயின என்று அருள்வதைப் பத்தாவதான இந்தக் கடைசிப் பாசுரத்தைக் கொண்டு அநுபவிப்போம் நாம் இங்கு.

திருப்பாணாழ்வார் இளமை தொடங்கியே பகவத் விஷயத்தில் ஈடில்லாத ஈடுபாடு கொண்டவர். தாழ்ந்த குலத்திலே வளர்ந்தவர். திருவரங்கத்தைத் தவிர்த்த மற்றைய ஊர்களில் வஸிப்பவர் அனைவரும் அல்ப ஸாரங்களான ஶப்தாதி விஷயங்களில் மிகவும் ஆசை கொண்டு, அவற்றைப் பெறுவதற்காகப் பணம் ஸம்பாதிப்பதில் முனைய, அதுவும் எளிதில் கிடைக்காமையாலே மிகவும் வருந்தி நிற்கிற நிலையைக் கண்டு, அந்தப் பிற ஊர்களிலே சென்று வஸிக்க விரும்பாதவராய் நின்றார்.

அதாவது மற்றைய ஊர்களில் வஸிப்பவர்களுடைய தாழ்மையைக் கண்டு அங்கு வஸிக்க விரும்பவில்லை திருப்பாணாழ்வார்.

திருவரங்க க்ஷேத்ரமோ அந்தப் பிற ஊர்களைப் போல் இல்லாமல் மிகச் சிறந்து விளங்குவது திருப்பாணாழ்வாருக்கு நன்கு தெரியும்.

பரம பாவநரான (தன் ஸம்பந்தத்தாலே யாவற்றையும் ஶுத்தங்களாகச் செய்பவரான) பெரிய பெருமாளையும்

பரிபூர்த்தமாகச் செய்ய வல்லது திருவரங்கம் என்ற க்ஷேத்ரம் என்றால் இந்த க்ஷேத்ரத்தின் பெருமை எப்படிப்பட்டது என்பது தெளிவாகிறது.

இவ்விடத்தில் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் அருளியுள்ள ஸ்ரீ ஸூக்தியையும் இங்கே அநுபவிக்க வேண்டும். - 'சிட்டனே செழுநீர்த் திருவரங்கத் தாய்' என்று இவ்வூரோட்டை ஸம்பந்தத்தாலே பாவந பூதர் என்னும்படியான வைலக்ஷண் யத்தை உடைத்தாயிருக்கிறது இவ்வூர் (திருவரங்கம்), என்று. (இப்பாசுரத்தின் ஈடு வ்யாக்யாநத்தில் அருளப்பட்டிருக்கும் பொருள் வேறு.)

மேலும் இவ்வூரில் உள்ளவர்கள் நம்பெருமாளை அநுப வித்துக் கொண்டு அவனுடைய வடிவழகிலே ஈடுபட்டு மோக்ஷத் தையும் விரும்பாமலிருக்கிறார்கள். 'நல்லார்கள் வாழும் நளிர் அரங்கநாகணையான்' என்று சூடிக் கொடுத்த நாச்சியாரும் இவ்வூரில் வஸிப்பவர்களை 'நல்லார்' என்றே அருளியுள்ளாள்.

இப்படிப்பட்ட பெருமையுடைய திருவரங்கத்திலே திருப்பா ணாழ்வார் வாஸம் செய்யலாமே என்றால் 'நாம் (திருப்பா ணாழ்வார்) இவ்வூரிலே புகுருகை இவ்வூருக்கு தோஷத்தை உண்டு பண்ணும்' என்ற திருவுள்ளத்தால் இங்கும் வஸிக்க வில்லை ஆழ்வார் என்பர் பூர்வர்கள்.

மற்றைய ஊர்களில் உள்ளவர்களின் தாழ்வைக் கண்டு திருப்பாணாழ்வார் அங்குச் செல்லவில்லை.

தன்னுடைய தாழ்வைக் கண்டு திருவரங்கத்திற்குள் புகுரவில்லை திருப்பாணாழ்வார்.

''நாம் இவ்வூரிலே புகுருகை இவ்வூருக்கு மாலிந்யாவஹம் (தோஷம் தருவதாகும்) என்று பார்த்து 'அங்குற்றேன் அல்லேன், இங்குற்றேன் அல்லேன்' என்கிறபடியே பிறருடைய நைச்யத் தாலே அங்குப் போகவும் மாட்டாதே, தம்முடைய நைச்யத் தாலே இங்கு (திருவரங்கத்தில்) புகுரவும் மாட்டாதே ஆந்தராளி கராய் (நடுவில் நிற்பவராய்) இருந்தார்'' என்று இவ்விஷயத்தை விளக்குகின்றனர் பூர்வர்கள்.





இப்படிப்பட்ட இவர் லங்கையை விட்டு வந்த ஸ்ரீ விபீஷணன் - சக்ரவர்த்தித் திருமகன் ஸந்நிதியிலும் புகுராமல் ஸமுத்ரத்தின் கரையில் வந்து நின்றதுபோல் இந்தத் திருப்பா ணாழ்வாரும் அன்போடு தென்திசை நோக்கிக் கொண்டு கண் வளருகிற (துயில் கொள்கிற) பெரிய பெருமாளுடைய (ஸ்ரீ ரங்க நாதனுடைய) த்ருஷ்டிபாதமான (கடாக்ஷத்திற்கு விஷயமான) தென்னாற்றங்கரையைப் பற்றி நின்றார். இது திருப்பா ணாழ்வாருடைய நிலை.

இனி பெரிய பெருமாளுடைய நிலையைப் பார்ப்போம்:- அவன் நினைக்கிறான். ''உலகத்தில் உள்ளவர்கள் அனைவரும், அஹங்காரம் கொண்டு, தமக்குத் தகாதவைகளான ஶப்தம் முத லான விஷயங்களில் ஈடுபட்டு அவை கிடைக்காமையால் மிகவும் வருந்திக் கொண்டு காலத்தைக் கழித்து வருகிறார்கள். இப்படிப்பட்ட இந்த நிலையில் இந்தத் திருப்பாணாழ்வார் மட்டும் அந்த ஶப்தாதி விஷயங்களில் ஈடுபட்டுக் கொள்ளாமல் நம்மையே நினைத்து மனம் உருகி நம்மையே பாடி வருகிறார்'' என்று வியந்து தம் திருவுள்ளத்தாலே இவரை மிகவும் உகந்தார் - விரும்பினார்.

இத்துடன் நில்லாமல் பக்தியோகம் முதலான உபாயங்கள் ஏதுமின்றி அகிஞ்சநர்களாயிருப்பார்க்கு முக்யமான உபாயமா யிருக்கும் தம்முடைய திருவடிகளை இவருடைய திருவுள்ளத் திலே வைத்தருளினார் பெரிய பெருமாள். ஆழ்வாரும் தன் திருவுள்ளத்திலே பதிந்துள்ள பெரிய பெருமாள் திருவடிகளை மாநஸ ப்ரத்யக்ஷத்திலே ஸாக்ஷாத்கரித்து... ''அரங்கத்தம்மான்

திருக்கமல பாதம் வந்து என் கண்ணினுள்ளன ஒக்கின்றதே'' என்று அருளிச் செய்தார்.

இந்தத் திருவடிகளுக்குமேலே உள்ள திருப்பீதாம்பரமும் திரு அரையுமான சேர்த்தியை மடிபிடித்து (மேல் விழுந்து) அநுப வித்தார் ஆழ்வார்.

இத்துடன் நில்லாமல் - மற்றைய விஷயங்களிடத்தில் செல்லாமல் நாம் எம்பெருமானையே அநுபவிப்பதற்கு ஸாதந மாய் அமைந்த மனஸ்ஸையும், நம்மையும் உண்டாக்கியது எம்பெருமானுடைய இந்தத் திருநாபீகமலந்தானே என்று புகழ்ந்து அதை அநுபவித்தார். இந்தத் திருப்பாணாழ்வாரைக் கண்ட எம்பெருமானுடைய திரு உதரபந்தம் மேன்மைக்கும், ஸௌலப்யத்திற்கும் பட்டம் கட்டியிருப்பது நாம் அன்றோ என்று தன் பெருமையை அவருக்குக் காட்டி அவரைத் தன் பக்கலிலே இழுக்க, இவரும் - திருப்பாணாழ்வாரும் அதிலே மண்டி (ஆழ்ந்து ஈடுபட்டு) அத்தை அநுபவித்தார்.

அதற்கு மேலேயிருக்கிற எம்பெருமானுடைய திருமார் பானது தன்னிடத்திலே உள்ள ஹாரம் முதலான திருவாபரணங் களையும் பெரிய பிராட்டியாருக்கு வாஸஸ்தாநமாயிருக்கிற பெருமையையும் காட்டித் தன் பக்கலிலே ஆழ்வாரை இழுத்துக் கொள்ள இவரும் அதற்கு வஶமாகி அந்தத் திருமார்பை அநுபவித்தார். அதற்கு மேலே - அந்தப் பிராட்டிக்கும், ஹாரம் முதலான ஆபரணங்களுக்கும் ஆஶ்ரயமான திருக்கழுத்தையும், அதற்கு மேலே திரு அதரத்தையும் (உதட்டையும்) அநுபவித்தார்.

இப்படித் திருப்பாணாழ்வார் எம்பெருமானுடைய திருமேனி யில் அவயவங்களைத் தனித் தனியே அநுபவித்து வர, எம் பெருமான் திருக்கைகளில் உள்ள திரு ஆயுதங்கள் தம்மை ஆழ்வார் அநுபவிக்கவில்லையே என்று மனம் வருந்த, அவற்றின்





வருத்தம் தீர்வதற்காக அவற்றையும் நடுவிலே 'கையினார் சுரிசங்கனல் ஆழியர்' என்று அநுபவித்து அதற்கு மேலே **'अभयं ददामि'** (அபயம் ததாமி) என்று எம்பெருமான் அருளிச்செய்யும் திருவார்த்தைகள் யதார்த்தங்களே அன்றி ஏமாற்றுவதற்காகச் சொன்னவையல்ல என்று நம்மை ஆஶ்வஸிப்பிக்கும் (ஆறுத லளிக்கும்) குளிர்ந்த கடாக்ஷங்களை உடைய திருக்கண்களை அநுபவித்தார் ஆழ்வார்.

இவ்வாறு எம்பெருமானுடைய திருமேனியின் திவ்யா-வயவங்களைத் தனித் தனியே அநுபவித்து ரஸித்த திருப் பாணாழ்வார், பாலும், பழமும், கண்டசர்க்கரையும் (கற்கண்டு) ஆன ரஸவஸ்துக்களைச் சேர்த்து புஜிப்பாரைப் போலே இந்த அவயவங்களோடுண்டான சேர்த்தியால் வந்த அழகையும், ஸ்வாபாவிகமான (இயற்கையாய் இருப்பதான) அழகையும் உடைத்தான திருமேனியின் ஸமுதாய ஶோபையையும் முன்பு அநுபவித்தார் ஆழ்வார்.

இப்படி இந்தத் திருப்பாணாழ்வார் எப்போதும் தம்மையே பூர்ணமாக அநுபவித்து வருவதைக் கண்ட ஸ்ரீ ரங்கநாதன் இவரைத் தன் பக்கலிலேயே இருக்க வைத்துக் கொள்ள வேண்டும் என்று விரும்பினான்.

ஸ்ரீ ரங்கநாதனுடைய திவ்யாத்புதமான திருமேனி தர்ஶநம் ஒரு தடவை கிடைத்தாலும் அதுவே எனக்குப் போதும், வேறு போகமோ மோக்ஷமோ எதுவும் எனக்கு வேண்டாம் என்றிருக் கிறார் இவர் (திருப்பாணாழ்வார்). இப்படிப்பட்டவரை ஒரு க்ஷண நேரமும் நாம் பிரிந்து இருக்க மாட்டோம் என்று நினைத்த ஸ்ரீ ரங்கநாதன் தூரத்தே இருந்து பாடித் தொழும் திருப்பாணாழ் வாரைத் தம்முடைய பக்கலிலே வரவழைப்பது எப்படி? என்று சிந்திக்கலானான்.

தாமே சென்றால் அர்ச்சாவதார நிலைக்குப் பொருந்தாது. 'செயலும் பேச்சும் அற்றது அர்ச்சாவதார நிலை' (**असङ्केतम् - अनालापम्** அஸங்கேதம் - அநாலாபம்) என்பது ப்ரஸித்தம். இதற்கு விரோதம் வராதபடி நாம் நடந்து கொள்ள வேண்டும். ஆகவே, நாமே நேரில் செல்வதும் அவரைக் கூப்பிடுவதும் பொருந்தாது.

'அர்ச்சாவதாரத்தில் செய்கையும், பேசுதலும் அற்றிருக்க வேண்டும் நாம்' என்று நாமே தானே ஸங்கல்பித்துள்ளோம். நம்முடைய ஸங்கல்பத்தை நாமே குலைத்துக் கொள்ளலாமோ! ஆகவே நாமே செல்வதோ- நாமே பேசுவதோ கூடாது என்று இருந்தான் ஸ்ரீ ரங்கநாதன்.

இனித் திருப்பாணாழ்வாரே தம்மிடம் வரும்போது அவரைத் தம்மிடத்திலேயே வைத்துக் கொள்ளலாம் என்பதும் சரி யன்று.ரக்ஷகன் என்று பெயர் பூண்டிருக்கும் நாம் அவர் இருக்கு மிடம் தேடிச் செல்ல வேண்டியிருக்க, அவர் நம்மிடம் தேடி வருதல் நம்முடைய ஸ்வரூபத்திற்கு அடியோடு பொருந்தாது. இது நம்முடைய ஸ்வரூபத்திற்கே பெருத்த நஷ்டத்தை - குறைவை உண்டு பண்ணும்.

ஆகத் தாமும் அங்குப் போக முடியவில்லை. அவரும் தம்மிடம் வருவதிற்கில்லை, என்ன செய்வது?

முன்பு நம்மை நோக்கி ஶரணம் என்று கூவிக் கொண்டு தூரத்தே நின்ற ஸ்ரீ விபீஷணாழ்வானை ஸுக்ரீவ மஹாராஜனைக் கொண்டு அழைத்து வந்தோம் அன்றோ! அவ்வாறே இப்போதும் நம்மை நோக்கி வந்து தூரத்தே நிற்கும் திருப்பாணாழ்வாரையும் யாரையாவது அனுப்பி அழைத்து வருவதே நன்று. அதுவே தகும் என்று யோசித்து நம்பெருமாள் திருப்பாணாழ்வாரை அழைத்து வர யாரை அனுப்பலாம் என்று சிந்திக்கலானான்.





வந்திருப்பவருக்கு ஏற்றவராயிருப்பவரை அனுப்பி வைப் பதே நன்று. முன்பு வந்த ஸ்ரீ விபீஷணன் ராஜ்யத்தை விரும்பி வந்தவனாவான். இவனுடைய இயல்புக்கு ஏற்ப ராஜ்யத்தை விரும்பியவனான ஸுக்ரீவனை அனுப்பினோம்.

திருப்பாணாழ்வாரோ ராஜ்யம் முதலான அல்பங்களான பலனை விரும்பாமல் நம்மையே எப்போதும் மநநம் - சிந்தை செய்து வருகிறார். ''அரைச்சிவந்த ஆடையின் மேல் சென்ற தாம் என சிந்தனையே'' 'உந்திமேல தன்றோ அடியேன் உள்ளத்தின் னுயிரே' 'உதரபந்தம் என்னுள்ளத்துள் நின்றுலாகின்றதே!'' 'செய்ய வாய் ஐயோ என்னைச் சிந்தை கவர்ந்ததுவே!' 'நீலமேனி ஐயோ! நிறை கொண்டது என்னெஞ்சினையே' என்று இவ்வா றாக நம்மையே மநநம் - சிந்தை செய்து வருகிறார். இவர் நம்மைத் தவிர மற்றெதையும் விரும்புபவர் அல்லர். இப்படி அநந்ய ப்ரயோஜநராய் - மற்றைய பலன்களை விரும்பாதவராய் இருக்கும் இவரை அழைத்துவர இவரைப் போல் இருக்கும் ஒருவரைத் தான் அனுப்ப வேண்டும் என்று யோசித்த ஸ்ரீ ரங்கநாதன் தம் பக்கலிலேயே இருந்து கொண்டு, தம்மையே ஸேவித்துக் கொண்டு மற்றொன்றையும் மனத்தாலும் சிந்தியாத வராய் தம்மையே மநநம் - சிந்தை செய்துவரும் ப்ராஹ்மண ஶ்ரேஷ்டரான லோகஸாரங்க மஹாமுநிகளை அனுப்பி ஆழ் வாரை அழைத்துவர நினைத்தான்.

(இங்கு வ்யாக்யாநத்தில் ஸ்ரீ விபீஷணாழ்வானை 'ராஜ்ய காங்க்ஷீ' என்று அருளியிருப்பது ஆபாதரஸிகராய் இருப்பார் (மேல் நோக்காக விஷயங்களை அறிந்து ரஸிப்பார்) சிலருடைய அபிப்ராயத்தாலே என்று கொள்ள வேண்டும் என்று பூர்வர்கள் திருவுள்ளம்.)

தம்மையே எப்போதும் திருப்பாணாழ்வாரும், லோக ஸாரங்க முநிவரும் மநநம் செய்துவருவதால் இருவருமே முநிவர்கள் ஆவார்கள்.

ஆக முநிவரை இட்டு முநிவரை அழைத்து வருவதுதான் உசிதம். அநந்ய ப்ரயோஜநரை இட்டு அநந்ய ப்ரயோஜநரை அழைத்து வருவதுதான் உசிதம் என்று திருவுள்ளம் கொண்டான் ஸ்ரீ ரங்கநாதன்.

ஆனால் இவ்விருவருள் ஒருவர் (திருப்பாணாழ்வார்) உலகத்தவர் கருத்தின்படி இழி குலத்தவர். மற்றொருவர் (லோக ஸாரங்க முநிவர்) உயர் குலத்தவர் ஆவார்.

ஆனாலும் லோகஸாரங்க முநிவருக்குத் தாம் உயர் குலத்தவர் என்ற அஹங்காரம் கிடையாது.

இழி குலத்தைச் சார்ந்தவர்களாயினும் எம்பெருமானிடம் உண்மை பக்தி கொண்டிருப்பார்களாகில் அவர்களையே தனக்கு ஸ்வாமியாகக் கொள்ளும் இயல்புடையவர் லோகஸாரங்க முநிவர். இதற்குக் காரணம், 'இழி குலத்தவர்களேலும் எம் மடியார்களாகிலும் தொழுமினீர் கொடுமின் கொண்மின்' (தாழ்ந்த குலத்தைச் சார்ந்தவர்களாயினும் இவர்கள் மெய்யடி யார்களாய் இருப்பார்களாயின் அவர்களை உயர்குலத்தைச் சார்ந்த நீங்கள் அஹங்காரம் கொண்டு புறக்கணிக்காமல் மனத்தி னால் கௌரவித்து சிறப்பித்துக் கொண்டாடுங்கள். உயர்ந்த ரஹஸ்யார்த்தங்களை அவர்கள் அபேக்ஷித்தால் நீங்கள் அவர்களுக்கு உபதேஶியுங்கள், அவ்வாறே உங்களுக்குத் தெரியாத ரஹஸ்யார்த்தங்களை அவர்கள் அறிந்து வைத்திருந் தால் அவர்களிடமிருந்து நீங்கள் கொள்ளுங்கள்' என்று எம்பெருமானே அடிக்கடி அருளிச் செய்யக் கேட்டிருக்கிறார் இந்த லோகஸாரங்க மஹாமுநி.)

இப்படி எம்பெருமானிடமிருந்து உபதேஶம் கேட்டது மட்டுமின்றி ஆழ்வார்களிடமிருந்தும் இம்மாதிரி உபதேஶம் கேட்டிருக்கிறார் இந்த லோகஸாரங்க மஹர்ஷி.





திருமங்கையாழ்வார், எம்பெருமானே! உன்னுடைய திரு அஷ்டாக்ஷரம் என்னும் மஹா மந்த்ரத்தை நான் அர்த்தத்துடன் கற்று அதன் பயனாய் உன்னடியார்க்கு அடிமை செய்யப் பெற்றேன். நின் திருஎட்டெழுத்தும் கற்று நான் உற்றதும் உன்னடி யார்க்கு அடிமை என்றும், ஸ்வாமி நம்மாழ்வார் 'புண்டரீ காக்ஷனான எம்பெருமானையே த்யாநம் செய்யும்படியான பாக்யம் பெற்றவர் எவராக இருந்தாலும் அவர்தான் நமக்கு எப்பிறப்பிலும் ஸ்வாமிகளாவார். 'பங்கயக் கண்ணனைப் பயிலும் திருவுடையார் யவரேலும் அவர் கண்டீர் பிறப்பிடை தோறெம்மை யாளும் பரமரே' என்றும் உபதேஶித்திருப்பதை இவர் (லோகஸாரங்க முநிவர்) பல தடவைகள் கேட்டுள்ளார். கேட்டது மட்டுமின்றி அவ்வாறே அநுஷ்டித்தும் வருபவர்.

இப்படிப்பட்டவரை நோக்கி ஸ்ரீ ரங்கநாதன் 'நீர் சென்று திருப்பாணாழ்வாரை உம்முடைய தோள் மீதேற்றி எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வாரும்' என்று நியமித்தான்.

லோகஸாரங்க முநிவரும் அப்படியே செய்வதாகத் திரு முன்பே விண்ணப்பம் செய்துவிட்டுத் திருப்பாணாழ்வார் இருக்கு மிடம் சென்று ஸ்ரீ ரங்கநாதனுடைய நியமநத்தைச் சொல்லி அதன் படித் தம்முடைய திருத்தோளிலே ஏறியருளுமாறு திருப்பாணாழ் வாரை ப்ரார்த்தித்தார்.

இது கேட்ட திருப்பாணாழ்வார் முதலில் திடுக்கிட்டார். இழிகுலத்தவனான நான் ப்ராஹ்மணஶ்ரேஷ்டரான லோக ஸாரங்க முநிவருடைய தோளில் ஏறுவதா? இது என்ன அந்யாயம்? நான் அவரைத் தீண்டுவதற்கே தகுதியற்றவனாக இருக்க அவர் தோள் மேல் ஏறுவதா? என்றெல்லாம் எண்ணி வியந்தார், அஞ்சினார். ஆனால் அடுத்த க்ஷணத்திலேயே லோகஸாரங்க முநிவருடைய தோளில் ஏறிவர ஸம்மதித்து விட்டார்.

காரணம் என்ன தெரியுமா? பகவானுடைய நியமநம் தான் முநிவருடைய தோளில் ஏறி வருவதற்குக் காரணமாய் அமைந் துள்ளது என்பதுதான்.

திருப்பாணாழ்வார் தன்னுடைய கருத்தின்படி முநிவருடைய தோளில் ஏறுவது தவறு-பாபம் என்று ஒதுங்கியிருந்தார்.

அவரே 'எம்பெருமானுடைய நியமநம் இது' என்ற பின், இதை மீறினால் பகவானுடைய நியமநத்தை - பகவானையே கூட அவமதித்ததாகும் என்ற அச்சத்தினால் முநிவருடைய தோளின்மீது ஏறினார். இதனால் தன்னுடைய பகவச் சேஷத்வம் - எம்பெருமானுக்கு அடியவனாயிருத்தல் காக்கப்பட்டது என்று எண்ணினார்.

இந்த நியமநத்தை மறுத்தால் எம்பெருமானை மதிக்க வில்லை என்பதாகும். ஆகையால் லோகஸாரங்க முநிவரின் தோள்மீது ஏறினார்.

இம்மாதிரியான செயல், திருப்பாணாழ்வார் போன்ற மஹான்கள் சிலருக்கே பொருந்தும். இதைக் கொண்டு மற்றைய வர்கள் விஷயத்திலும் ஏன் இப்படி செய்யக் கூடாது என்று கேட்பது தவறு.

இதற்கு ஏற்ற உதாஹரணம். திருக்குடந்தையில் ஒரு ஸமயம் திருமழிசையாழ்வார் ஆராவமுதனைத் தர்ஶிக்கச் சென்றார். ஆராவமுதப் பெருமாள் திருமழிசையாழ்வாரின் பெருமைகளை நன்கு அறிவார்.

தமக்குத் தளிகை ஸமர்ப்பிக்கும்போது முதலில் திருமழிசை யாழ்வாருக்கு ஸமர்ப்பித்து அவரை அமுது செய்வித்த (உண்ண வைத்த) பின்புதான் தான் உண்பாராம்.

இங்கு ஒரு கேள்வி: பகவான் சொன்னதற்காக ஆழ்வார் முதலில் அமுது செய்யலாமா? (சாப்பிடலாமா?) என்று.





இதற்குப் பதில்: ஆழ்வார்,தாம் முதலில் உண்ணமாட்டேன் என்று மறுத்தால், ஆராவமுதனும், அவர் உண்ட பிறகு தான் நான் உண்பேன் என்ற பிடிவாதத்தைக் கைவிடாமல் காத்திருப்பான். ஆகவே அவனும் நீண்ட நேரம் பட்டினி கிடக்க நேரிடும். ஆகவே எம்பெருமானை நீண்ட நேரம் பட்டினிபோட விரும்பாத ஆழ்வார் தன் ஸ்வரூபத்துக்குப் பொருந்தாவிடினும் ஆராவமுத னுடைய நியமநம் ஒன்றையே காரணமாகக் கொண்டு அவனுக்கும் முன்னதாக அமுது செய்தாராம். திருநெடுந் தாண்டகம் வ்யாக்யாநத்தில் இந்த ஐதிஹ்யம் உள்ளது.

அவ்வாறுதான் இங்கும்.

லோகஸாரங்க முநிவருடைய தோளில் ஏறி வந்தமையால் திருப்பாணாழ்வாருக்கு 'முநிவாஹநர்' என்ற சிறப்புப் பெயரும் உண்டாயிற்று.

இப்படித் தம்மிடம் வந்த திருப்பாணாழ்வாருக்குப் பெரிய பெருமாள் தம்முடைய ஸ்வரூபம் - ஸ்வபாவம் முதலானவற்றை நன்கு காட்ட, திருப்பாணாழ்வாரும் ஸ்ரீ ரங்கநாதனைத் திருவடி முதல் திருமுடி வரை அநுபவித்து மகிழ்ந்தார்.

இப்படிப்பட்ட ஆழ்வாருக்கு நாம் (ஸ்ரீரங்கநாதன்) எதைத் தரலாம் என்று யோசித்தான். அதாவது பரமபதநாதனுடைய அநுபவத்தையோ அல்லது வ்யூஹரூபியான திருப்பாற்கடல் நாதனுடைய அநுபவத்தை யோ, அல்லது ராமாதிகளான விபவா வதாரத்தின் அநுபவத்தையோ, அல்லது அர்ச்சையில் வேறு ஒரு மூர்த்தியின் அநுபவத்தையோ எதைத் தருவது! என்று சிந்தித்தான்.

திருப்பாணாழ்வாரும் தம்முடைய ப்ரபந்தத்தில் இந்த ஐந்து நிலைகளையும் அநுபவிக்கிறார்.

முதலில் 'ஆதி' பிரான் என்று பரரூபியான எம்பெருமானைக் குறிப்பிடுகிறார். அதை அநுபவிப்பதில் ஆசையிருக்கவே தானே இவ்வாறு - ஆதி என்று கூற வேண்டும். இவ்வாறே 'விண்ணவர் கோன்' என்றும் 'நீதிவானவன்' என்றும் முதல் பாசுரத்திலேயே பரமபதநாதனை அருளிச் செய்கிறார்.

ஆகையால் இவர் (திருப்பாணாழ்வார்) பரமபதநாதனை ஸேவிக்க விரும்புகிறார் என்றும் நினைக்கத் தோன்றுகிறது.

'உலகமளந்து அண்டமுற நிவந்த நீண் முடியன்' என்று த்ரிவிக்ரமனையும், '....வெங்கணைக் காகுத்தன்' என்று சக்ர வர்த்தித் திருமகனையும், தம்முடைய பாசுரங்களில் அநுப விக்கையாலே இவர் விபவாவதாரத்தை ஸேவிக்க விரும்புகிறார் என்றும் நினைக்கத் தோன்றுகிறது.

மேலும் 'விரையார் பொழில் வேங்கடவன்' என்கையாலே அர்ச்சையிலும் திருவேங்கடமுடையானை ஸேவிக்க விரும்பு கிறார் இவர் என்றும் நினைக்கத் தோன்றுகிறது. இவர் எதை விரும்புகிறார் என்பது தெளிவாகத் தெரியவில்லையே என்று ஸ்ரீ ரங்கநாதனே திகைத்து நிற்கிறான்.

ஸ்ரீ ரங்கநாதன் 'உள்ளுவார் உள்ளிற்றெல்லாம் உடனிருந்து அறிபவன்'. ஒவ்வொருவருடைய உள்ளிற்றெல்லாம் அந்தர் யாமியாக இருந்து கொண்டு அவர்கள் நினைப்பதை எல்லாம் அறிபவனே ஆவான். ஆனாலும் இந்த ஆழ்வாரைப் பரீக்ஷிப் பதற்காக உடனே தன்னைப் பூர்ணமாக இவர் அநுபவிக்க ஒட்டா மல் சற்று விளம்பம் (தாமதம்) செய்கிறான் ஸ்ரீ ரங்கநாதன்.

இவர் அபிப்ராயம் தெரியாமல் இவருக்கு ரங்கநாதன் தன்னைக் காட்டினால் 'எனக்கு இது வேண்டாம், நான் விரும்பு வது வேறு' என்று திருப்பாணாழ்வார் மறுத்து விட்டால் தனக்குத் தாழ்வு வந்து விடுமன்றோ! ஆகவே திருப்பாணாழ்வாருடைய





திருவுள்ளத்தை நன்கு அறிவோம் என்று ஸ்ரீ ரங்கநாதன் பரம், வ்யூஹம், விபவம் வேறான அர்ச்சா மூர்த்தி இவற்றைத் தனித்தனியே அநுபவிக்கும்படி அந்தந்த அநுபவங்களைத் திருப்பாணாழ்வாருக்குத்தந்தான். திருப்பாணாழ்வாரும் ''எனக்கு அவை ஒன்றும் வேண்டாம். பரம், வ்யூஹம், விபவம், வேறு அர்ச்சை, அந்தர்யாமி என்ற நிலைகள் யாவற்றையும் நான் பெரிய பெருமாளிடத்திலேயே காண்கிறேன்.

மாடுகளின் குளப்படிகள் கடலிலே ஏகதேசத்தில் அடங்கி யிருப்பது போல் பெரிய பெருமாளிடத்தில் மற்றைய அவதா ரங்கள் யாவும் அடங்கி உள்ளன. பெரிய பெருமாளை ஸேவிப்ப தாலேயே பரம், வ்யூஹம், விபவம், மற்றைய அர்ச்சா மூர்த்திகள் யாவற்றினுடைய அநுபவமும் கிடைத்துவிடும். ஆகையாலே எனக்குப் பெரிய பெருமாளை ஒழிய வேறு ஒருவரையும் அநுப விக்க ஶ்ரத்தை - ஆர்வமில்லை. ஒரு ஸமயம் அவற்றை ஸேவிப் பதில் எனக்கு ஶ்ரத்தை - ஆர்வம் உண்டானாலும் பெரிய பெரு மாளை அநுபவித்த என் கண்கள் மற்றொன்றினைக் காணுவே'' என்று தம்முடைய திருவுள்ளத்தைத் தெளிவாக அருளிச் செய்கி றார் இந்தப் பாசுரத்தில்.

திருப்பாணாழ்வார் இந்தப் பாசுரத்தில் 'அணியரங்கன் என் அமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணுவே' என்று இவ்வளவு மட்டும் அருளிச் செய்தாலே போதும். இப்படியன்றி இந்த ரங்கநாதனை எத்தனை விஶேஷணங்களிட்டு (அடை மொழிகளிட்டு) அநுபவிக்கிறார்?

1) கொண்டல் வண்ணன், (2) கோவலனாய் வெண்ணெய் உண்ட வாயன், (3) என்னுள்ளம் கவர்ந்தான், (4) அண்டர் கோன், என்றெல்லாம் விஶேஷணங்களை அடுக்கி அநுபவிக்கிறார் ஆழ்வார். இவற்றுக்கெல்லாம் இங்கு அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் அருளியுள்ள வ்யாக்யாநம் மிகவும் சுவை

யுடையதாகும். மிகவும் சுருக்கமாக இங்குச் சில ஸ்ரீ ஸூக்திகளை மட்டும் தருகிறோம்.

*1)* ''இவர் பக்கல் ஔதார்யமில்லை என்று போகவோ வடிவில் பசையில்லை என்று போகவோ, *2)* ஸௌஸீல்ய மில்லை என்று போகவோ!, (3) நெஞ்சுக்குப் பிடித்திருந்த தில்லை என்று போகவோ, (4) மேன்மையில்லை என்று போகவோ, (5) ஸௌலப்யமில்லை என்று போகவோ, (6) போக்யதை யில்லை என்று போகவோ, (7) அநுபவத்தில் குறையுண்டென்று போகவோ!'' என்று.

ஒருவரைவிட்டு மற்றொருவரிடம் செல்ல வேண்டுமானால் அதற்குப் பல காரணங்கள் உண்டு.

நாம் அநுபவிக்க - ஆச்ரயிக்க விரும்பும் ஒருவரிடம் ஔதார்யம் (வள்ளன்மை) வாரி வழங்கும் ஸ்வபாவம் இல்லை என்று வைத்துக் கொள்வோம். அப்போது இவரை விட்டு வள்ளன்மை - யாசிப்பவர்க்கு நிறையக் கொடுக்கும் தன்மை - உள்ள வேறு ஒருவரை நாடிப் போக நேரிடும். முதலில் நாம் விரும்பியவரால் ஒரு பைசாவும் கிடையாது என்றாகிவிட்டால் அவரை அநுபவிப்பதால் - ஆச்ரயிப்பதால் என்ன லாபம் என்று முதலில் இவரிடம் வெறுப்பு உண்டாகும். இதன் காரணமாக இவரை விட்டு வேறொருவரை நாடிச் செல்ல நேரும்.

இவ்வாறாக எம்பெருமானை அநுபவிக்க விரும்பி வந்த ஒருவன் இவனுக்கு ஔதார்யம் - வழங்கும் தன்மை இல்லை என்றதால் மற்றொருவனிடத்தில் செல்லத் தோன்றும்.

அப்படியன்று. எம்பெருமான் 'கொண்டல் வண்ணன்'. மேகம் போல் கைம்மாறு (பதில் உதவி - ப்ரதிப்ரயோஜநம்) கருதாமல் அனைவருக்கும் விரும்பியவற்றைக் கொடுக்க வல்லவன் நம்பெருமான் என்பதைக் காட்ட 'கொண்டல் வண்ணன்' என்று ஸ்ரீ ரங்கநாதனை விசேஷிக்கிறார் திருப்பாணாழ்வார்.





பெரிய பெருமாள் தன்னை ஆச்ரயிப்பவர்க்குப் புருஷார்த்தங்கள் அனைத்தையும் 'இவன் இன்னான், இனையவன்' என்றெல்லாம் விசாரிக்காமல் வாரி வழங்குபவன் என்கிறார். மேகமும் இப்படித்தானே, மழை நீரை வாரி வழங்குகின்றது.

எம்பெருமானுக்கு ஔதார்யம் - வள்ளன்மை உண்டு என்பதைத் திருப்பாணாழ்வார் 'கொண்டல் வண்ணன்' என்ற அடைமொழியினால் விளக்குகிறார். கொண்டல் - மேகம், வண்ணம் - ஸ்வபாவம் - தன்மை.

இப்படி எம்பெருமான் பரமோதாரனாக இருந்தாலும் அவனுடைய உருவம் பார்ப்பவர்களுக்குப் பிடிக்காததாய் இருக்குமானால் யாரும் அவனிடம் நெருங்கமாட்டார்கள் என்ற எண்ணத்தைப் போக்குகிறது 'கொண்டல் வண்ணன்' என்ற விசேஷணம். நீருண்டு கருத்த, பெருத்த மேகம் பார்ப்பவருடைய தாபங்களைப் போக்கிக் கண்களுக்குக் குளிர்ச்சியையும், ஆநந்தத்தையும் தருவதுபோல் நம் பெருமானுடைய திருமேனியும் காண்பவர்களுடைய ஸர்வதாபங்களையும் போக்கவல்லது.

ஆகக் 'கொண்டல் வண்ணன்' என்ற விசேஷணம். ஸ்ரீ ரங்கநாதனுக்கு ஔதார்யம் - வள்ளன்மை இல்லை என்ற காரணத்தினாலோ, அல்லது அவன் திருவடிவு பார்ப்பதற்கு இனியதாயிராது என்ற காரணத்தினாலோ அவனை விட்டு அகல வேண்டாம். இவனுக்கு மிகுந்த ஔதார்யமும் உண்டு, தாபங்களைப் போக்கும் திருமேனியும் உண்டு என்றபடி.

இவ்வளவு இருந்தும் ஸௌஸீல்யம் - அதாவது தன் மேன்மையைப் பாராட்டாமல் ஜாதி-குணம் - ஒழுக்கம் இவற்றால் தாழ்ந்தவர்களிடமும் பேதமின்றிப் பழகும் குணம் இல்லாவிடில் உதாரனாயிருந்தும் அவனிடம் யாரும் செல்லமாட்டார்கள். எம்பெருமானும் இப்படி நம் போல்வாருடனும் கலந்து பழகமாட்டானோ என்ற ஸந்தேஹம் வர அதைத் தீர்ப்பதற்கு 'கோவலனாய்' என்ற விசேஷணமிட்டுள்ளார் ஆழ்வார்.

ஆயர் பாடியில் வளர்ந்து இடக்கை - வலக்கை அறியாதவர்க ளுடனும் எம்பெருமான் பழகியுள்ளதை நினைத்தால் இவனு டைய ஸௌஶீல்யத்தை யாவருமே நன்கு அறியலாம்.

இங்கு அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் ஸ்ரீ ஸூக்தி கள் - ''அந்த மேகமானால் ஆகாஶத்தே கடக்க (தூரத்தில்) நின்று வர்ஷித்துப் போமித்தனையிறே! அங்ஙனன்றிக்கே இடையரோடு இடைச்சியரோடு வாசியற (பேதமின்றி) ஒரு நீராக (ஒரு தன்மை யாக)க் கலந்துத் தன் வடிவழகை அவர்களுக்கு ஸர்வஸ்வ தானம் பண்ணினபடி.''

இங்கு அத்புதமான அநுபவம் ஒன்று உள்ளது: நாமும் அதைப் பெற வேண்டும்.

'நாம் ஆஶ்ரயிக்கும் எம்பெருமான் உதாரனாக - வள்ளலாக இருப்பானோ' என்று உலகில் பலர் நினைக்கக் கூடும். அவ்வாறு அவன் இல்லை என்றால் உதாரராயிருப்பாரை அவர்கள் நாடிச் செல்லக்கூடும். இப்படி எண்ணி யாரும் மற்றோரிடம் போக வேண்டாம்.இவனே எல்லாவற்றையும் ஆஶ்ரிதர்களுக்கு வாரிக் கொடுப்பான் - என்பதைத் தெரியப்படுத்த 'கொண்டல் வண்ணன்' இவன் என்றார் முதலில் ஆழ்வார்.

மேகத்தைப் போல் கைம்மாறு கருதாமல் வாரி வழங்குபவன் எம்பெருமான் என்ற நிஶ்சயம் ஏற்பட்டு விட்டது. இதன் மேல் ஜநங்களுக்கு மற்றோர் மேகம் உண்டாகிவிட்டது. அதாவது 'நிறைய மழையைப் பொழியும் **மேகம்** நமக்கு எட்டாக்கை யில் - வெகு தூரத்தில் இருக்கிறது. இவ்வாறே எம்பெருமானும் நமக்கு எட்டாத வகையில் வெகு தூரத்தில் இருந்து கொண்டு விரும்பியதைக் கொடுத்தாலும் அவன் அருகில் சென்று அவனு டன் நெருங்கிப் பழகி ரஸாநுபவம் செய்ய முடியாதோ' என்ற ஸந்தேஹம் வர, அதைப் போக்குவதற்காக 'கோவலனாய்' என்ற





விஶேஷணம். இதனால் எம்பெருமானுடைய ஸௌஶீல்யம் கூறப்பட்டதாகிறது.

நந்தகோபன் தன் வீட்டிலிருக்கும் பசும் பால், பசுந் தயிர், பசும் வெண்ணெய் முதலியவற்றை வாரி விழுங்க ஒரு குழந்தை வேண்டுமே என்று தவம் செய்து பெற்ற பிள்ளை கண்ணன். ஆகையாலே வெண்ணெயுண்பதை மேற்கொண்டான் எம்பெரு மான் என்றபடி.

ஆகையால் எம்பெருமானுக்கு ஸௌஶீல்யமில்லை என்று ஒருவரும் எம்பெருமானை விட்டு அகல வேண்டாம் என்றபடி.

இதற்கு மேல் எம்பெருமான் நம் மனத்துக்குப் பிடிக்காதவனா யிருந்தால் இவனை விட்டு அகலத்தானே வேண்டும் என்று எண்ணுமைக்காக, 'என் உள்ளம் கவர்ந்தானை' என்ற விஶே ஷணம் என்றதாயிற்று.

வெண்ணெய் வைத்த பாத்ரம் இருக்க அதில் இருந்த வெண்ணெயை மட்டும் கவர்ந்தான் எம்பெருமான். அதுபோல் இங்கு நம் ஶரீரமிருக்க அதனுள் இருக்கும் மநஸ்ஸை மட்டும் அபஹரித்தவன் இவன் என்கிறார் ஆழ்வார். இதனால் மனத்துக்குப் பிடிக்காதவன் என்று அகல வேண்டாம் என்ற தாயிற்று.

இவ்வளவு இருந்தும் மேன்மை - பெருமை இல்லை என்பதனால் இவனை விடலாமோ என்ற எண்ணமும் வேண்டாம் என்பதற்காக 'அண்டர்கோன்' என்ற அடைமொழி - விஶே ஷணம். அண்டர்கோன் - நித்ய ஸூரிகளுக்கு நிர்வாஹகன் - அப்படிப்பட்டவன் இப்படித் தாழ வந்தான் என்றபடி. ஆக பரத்வமும் (மேன்மையும்) உண்டு. இது இல்லை என்பதற் காகவும் இவனை விட வேண்டாம் என்றபடி.

இவ்வளவு இருந்தும் எளிதில் யாவராலும் இவனைச் சென்று நெருங்க முடியாதபடி துர்லபனாய் எங்கோ வெகு தூரத்திலிருக்கி

றானோ இவன் என்ற ஸந்தேஹம் வர, அதற்காக 'அணியரங்கன்' என்கிறார். நாம் இருக்கும் இந்த ப்ரக்ருதி மண்டலத்திலேயே ஸ்ரீ ரங்கக்ஷேத்ரத்திலே எழுந்தருளியிருக்கிறான் என்றபடி. ஆகையாலே வெகு தூரத்தில் இருப்பவனிவன் என்றும் இவனை விட வேண்டாம்.

எளிதில் சென்று கிட்டினாலும் அநுபவிக்க முடியாதபடி வெறுக்கத் தக்கதான பொருளாக இருப்பானோ என்ற ஸந்தேஹம் வர அதற்காக 'என் அமுதினை' என்று விஶேஷிக்கிறார் - பரம போக்யனாய் இருக்கிறவன் என்றபடி.

சுவை மிக்கதாய் அநுபாவ்யமாய்- போக்யமாய் இருந்தும் அது பூர்ணமாகக் கிடைக்காமல் அரை வயிறு அநுபவமே கிடைத்தால் வயிற்றைப் பூர்ணமாக்கிக் கொள்ள இவனை விட்டு வேறிடம் செல்ல வேண்டியிருக்குமோ? என்ற ஸந்தேஹம் வர அதை நீக்குகிறார் 'கண்ட கண்கள்' என்ற வாக்யத்தால்.

'இக்காட்சி தான் அரை வயிற்றாய்த்ததாகிலும் புறம்பு போகலாய்த்து; அங்ஙனன்றிக்கே பூர்ணாநுபவம் பண்ணின கண்கள்.'

என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே: ஸ்ரீ ரங்கநாதனுடைய பூர்ணாநுபவம் பெற்றமையால் என்னுடைய கண்கள் - பரம், வ்யூஹம், விபவம், மற்றை அர்ச்சை, அந்தர்யாமி ரூபம் என்ற எம்பெருமானுடைய எந்த நிலையையும் காணாது என்று தன் உறுதிப்பாட்டைத் திருப்பாணாழ்வார் வெளியிட ஸ்ரீ ரங்கநாதனும் இவருக்குத் தன்னுடைய பூர்ணாநுபவத்தைத் தந்து தன் திருமேனியிலேயே ஒன்றிக் கிடக்கும்படிச் செய்து கொண்டான்.

இப்படி ஸ்ரீ ரங்கநாதனுடைய பூர்ணாநுபவத்தில் மூழ்கி இருப்பதால் இந்த ப்ரபந்தத்தில் தம்முடைய பெயரையோ





பாசுரங்களின் எண்ணிக்கையையோ மற்றைய ஆழ்வார்கள் தந்துள்ளது போல் தரவில்லை - குறிக்கவில்லை. இதற்குக் காரணம் அழகிய மண வாளப் பெருமாள் நாயனார் அருளிச் செய்கிறார்:-

ஸ்ரீ ரங்கநாதனுடைய திவ்யாநுபவத்தில் தம்மையே திருப்பாணாழ்வார் மறந்து விட்டார் என்று.

இப்படியே தான் ஸ்ரீ ப்ரஹ்லாதாழ்வானும் ஸ்ரீ ந்ருஸிம்ஹனுடைய திவ்ய தர்ஶநத்தாலுண்டான ஸந்தோஷாதிஶயத்தாலே தன்னையே மறந்து விட்டான். **विसस्मार तदाऽऽत्मानं नान्यत् किञ्चिदजानत**-(விஸஸ்மார ததாऽऽத்மாநம் நாந்யத் கிஞ்சித் அஜாநத!) என்று பராஶர மஹர்ஷி அருளியுள்ளார்.

இவ்வாறேதான் திருப்பாணாழ்வாரும். ஆகவே மற்றைய ஆழ்வார்களைப் போல் ப்ரபந்தத்தின் முடிவில் தம் பெயர், பாசுர எண் முதலியவற்றைக் குறிப்பிடவில்லை.

'அல்லாதார் திருநாமப் பாட்டுப் போலே தம்மைச் சொல்லிற்றிலர்' 'விஸஸ்மார ததாऽऽத்மாநம்' என்கிறபடியே தாம் போக (அநுபவ) ப்ரவணராய்த் தம்மை மறக்கையாலே 'என் அமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே' என்றார். ஸ்ரீரங்கநாதன் திருமேனி அழகிலே துவக்குண்ட என் கண்கள் ப்ராக்ருதமான மற்றைய விஷயங்களைக் காணா' என்று அர்த்தம் சொல்லுவது ஆழ்வாருக்குப் பொருந்தாது. இவர் ஏற்கெனவே ஸர்வ விஷயவிரக்தராயன்றோ பகவத் விஷயத்தில் ஈடுபட்டுள்ளார்.

ஆகவே நம் பூர்வாசார்யர் இங்கு 'மற்றொன்றினை' என்ற சொல்லுக்கு ஸ்ரீ ரங்கநாதனைத் தவிர்த்த மற்றைய நிலைகளில் உள்ள எம்பெருமானையே குறிப்பதாக வ்யாக்யாநம் செய்துள்ளார்கள்.

அதாவது பரரூபத்திலும், வ்யூஹ நிலையிலும், விபவ நிலையிலும் உள்ள எம்பெருமான்களையும், அர்ச்சா நிலையில்

உள்ள மற்றைய எம்பெருமான்களையும் கூட 'என் கண்கள் காணா' என்று ஆழ்வார் திருவுள்ளமாக வ்யாக்யாநம் செய்துள்ளனர்.

இந்த ஸமுதாய ஶோபையை அநுபவித்த பிறகு மீண்டும் திருமுடி முதல் திருவடி வரை தனித் தனியே காணவேண்டும் என்றாலும் அதற்கும் அஶக்தனாக உள்ளேன்.

'இந்தப் பெரிய பெருமாள் தம்மைக் கேஶாதி பாதாந்தமாக அநுபவிக்க வேணுமென்று பார்த்தாலும் ஶக்தனல்லேன்' என்று உரையருளுகிறார் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்.

மற்றொன்றினைக் காணாவே - 'அம்ருத பாநம் பண்ணினாரைப் பாலையும் சோற்றையும் தீற்றப் போமோ!' என்கிறார் உரையாசிரியர். அம்ருதத்தைப் பருகினவர்கள் பாலையும் சோற்றையும் லக்ஷ்யம் செய்வார்களா? அம்மாதிரி தான் இங்கும்.

அடுத்த பகுதியில் இந்தப் பாசுரத்திற்கு ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் அருளிய 'முநிவாஹனபோகம்' என்ற வ்யாக்யாநத்தில் உள்ள விஶேஷங்களை அநுபவிக்கலாம்.

---

> **கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெ**
> **யுண்டவாயன் ✸ என் னுள்ளம் கவர்ந்தானை ✸**
> **அண்டர்கோன் அணியரங்கன் என்னமுதினைக்**
> **கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே. (10)**



## 11. மற்றொன்றினைக் காணாக் கண்கள்

**मुनिवाहनभोगेऽस्मिन् वेदोत्तंसगुरूत्तमैः ।**
**प्रोक्तानेवं विवृणुते नारायणयतीश्वरः ॥**
**भगवद्भक्तियुक्तस्तु परिचर्याकुतूहलात् ।**
**नेक्षेत पद्मयोन्यादीन् तत्पार्श्वे सङ्गतानपि ॥**

முநிவாஹநபோகே஽ஸ்மிந் வேதோத்தம்ஸ குரூத்தமை: ।
ப்ரோக்தாநேவம் விவ்ருணுதே நாராயண யதீஶ்வர: ॥
பகவத்பக்தியுக்தஸ்து பரிசர்யா குதூஹலாத் ।
நேக்ஷேத பத்மயோந்யாதீந் தத்பார்ஶ்வம் ஸங்கதாநபி ॥

திருப்பாணாழ்வார் அருளிய 'அமலனாதிபிரான்' என்ற திவ்ய ப்ரபந்தத்தில் பத்தாவது பாசுரத்தில் உள்ள 'என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே' என்ற பாகத்தின் அர்த்த விஶேஷங்களைச் சென்ற இதழில் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாருடைய உரையில் உள்ளபடி வெளி யிட்டோம்.

இப்போது இந்த மாத இதழில் இந்தப் பாகத்திற்கே ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் அருளிய 'முநிவாஹந போகம்' என்ற வ்யாக்யா நத்தில் உள்ள விஷயங்களை விவரிக்கிறோம்.

**கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெய்**
**உண்டவாயன் என் உள்ளங் கவர்ந்தானை**
**அண்டர்கோன் அணியரங்கன் என்னமுதினைக்**
**கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே.**

அமலனாதிபிரானில் பத்தாவது பாசுரம் இது.

பெரும்பாலரான ஆழ்வார்கள் தாமியற்றிய பாசுரங்களில் தம்முடைய ஊரையும் திருநாமத்தையும் குறிப்பிட்டுள்ளார்கள். ஆனால் திருப்பாணாழ்வார் தாம் அருளிய இந்த 'அமலனாதி பிரான்' என்ற ப்ரபந்தத்தில் கடைசிப் பாசுரமான இதில் தம்முடைய ஊர்-பெயர் எதையுமே குறிப்பிடவில்லை. அடியேன் என்று தம்மை அருளிச் செய்துள்ளமையால் அடியோடு தம்மை மறந்துவிட்டார் இந்த ஆழ்வார் என்றும் சொல்லுவதற்கில்லை.

ஊர்-பெயர் இவற்றைக் குறிக்காமல் தம்மை 'அடியேன்' என்று மட்டும் குறித்துள்ளமையால் மறக்க வேண்டியது எது? மறக்காமல் இருக்க வேண்டியது எது? என்ற பாகுபாட்டைக் காண்பித்து இப்படித் தன் பெயர் - ஊர் இவற்றை மறக்கும்படிச் செய்தது தாம் பெற்ற பெரியபெருமாளுடைய அத்புதமான அநுபவம்தான் என்று சொல்லும்படியுள்ளது.

இங்கு ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் அருளியுள்ள ஸ்ரீ ஸூக்திகள் பின்வருமாறு **(கொண்டல் வண்ணனை)** ''இவ்வாழ்வார் (திருப்பாணாழ்வார்) 'அடியேன்' என்னுமதொழிய இப் பிரபந்தம் தலைக்கட்டுகிற (பூர்த்தி பெறுகிற) அளவிலும் தம்முடைய பேரும் ஊரும் பேச மறக்கும்படித் தாம் பெற்ற அநுபவத்துக்குப் பெரிய பெருமாள் இனி ஒரு விச்சேதம் வாராதபடி பண்ணின படியைக் கண்டு தம்முடைய ஆத்மாவதியான அநந்யாநுபவ ரஸத்தை முக்தனுடைய ஸாம கானத்தின்படியிலே பாடி, அநாதிகாலம் பாஹ்யாநுபவம் பண்ணின க்லேஶம் தீர்ந்து க்ருதார்த்தராகிறார்'' என்று.

எல்லாவற்றாலும் மிச் சிறந்து விளங்கும் ஒரு பொருளை அநுபவிக்கும்போது அந்த அநுபவம் மற்றெதையும் மறக்கச் செய்வது வழக்கமே.

உலகிலும் ஒருவன், தான் ஒரு பொருளை மிகச் சிறந்ததாகக் கருதி அத்தை அநுபவித்து வரும்போது தன்னையும் மறந்து விடுவதைக் கண்டே வருகிறோம்.





பெரிய பெருமாளுடைய அநுபவம் மிகச் சிறந்ததாகும். இப்படிப்பட்ட இந்த அநுபவத்தைப் பெற்ற இவர் இதன் பெருமையால் தன்னுடைய பெயரையும் மறந்தார், ஊரையும் கூட மறந்தார்.

இப்படித் தன் பெயரையும், ஊரையும் மறந்த இவர் தன்னுயை பகவச் சேஷத்வத்தை மட்டும் மறக்கவில்லை. அத்தையும் மறந்துவிட்டால் அநர்த்தமே நேரிடும்.

ஆகவே 'அடியேனை ஆட்கொண்டதே' என்றும், 'அடியேனை உய்யக் கொண்டதே' என்றும் தன்னைப் பற்றிக் கூறிக் கொண்டார்.

இப்படித் தன் ஊர்-பெயர் ஆகியவற்றை மறக்கும்படிச் செய்த பெரியபெருமாளுடைய அநுபவம் இந்த ஆழ்வாருக்குக் கிடைத்தது. கிடைத்த இந்த அநுபவம் மீண்டும் ஒருபோதும் அழியாதபடித் தனக்குப் பெரிய பெருமாள் அருள் செய்தமையைக் கண்டு களித்தார் திருப்பாணாழ்வார். இந்த அநுபவம் இவருடைய ஆத்ம தத்த்வம் உள்ள அளவும் நீடித்திருக்கும். ஆகையால் இந்த அநுபவத்தைப் பாசுரங்கள் உருவில் வெளியிட்டு கானம் செய்கிறார் இந்த ஆழ்வார்.

இது முக்தர்கள் செய்யும் ஸாமகானத்திற்கு ஒப்பாகும். இப்படிப் பாடித் திருப்பாணாழ்வார் இதற்கு முன் அநாதிகாலமாக பாஹ்யாநுபவம் பண்ணி (வெளி விஷயங்களின் அநுபவத்தைச் செய்து) பெற்ற கஷ்டங்கள் யாவும் தீரப் பெற்றவராய் க்ருதார்த்தராகிறார் (பயன் பெற்றவராகிறார்).

இனிப் பாசுரத்தில் உள்ள ஒவ்வொரு விஶேஷணத்திற்கும் அத்புதமான கருத்துக்களை அருளுகிறார் ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன். அநுபவத்தை விளக்கும் போது ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் பெரும்பாலான இடங்களில் தமக்கு முன் இருந்த பெரியோர்கள் காட்டிய

வழியிலேயே செல்கிறார். ஆங்காங்குச் சில புதுமைகளையும் புகுத்துகிறார். தத்வங்களைக் காட்டும்போது தனியாகச் சிறப் பான தமக்கே உரிய பாணியைப் பின்பற்றுகிறார்.

**கொண்டல் வண்ணனை:-**

கொண்டல் என்பது மேகத்தைக் குறிக்கும். மேகம் எங்கும் வர்ஷிக்கும். மழை பொழியும். எம்பெருமானும் எல்லோருக்கும் அநுக்ரஹம் என்ற மழையைப் பொழிகிறான்.

இங்குப் பெரியபெருமாளைக் 'கொண்டல் வண்ணன்' மேகத்தினுடைய ஸ்வபாவத்தை உடையவன் என்று குறிப்பிடு கிறார். இந்தப் பெரியபெருமாள் உபயகாவேரீ மத்யத்தில் ஶயநித்துக் கொண்டிருக்கிறான். இவன் மேகம் போல் வெறும் தண்ணீரைப் பொழிகின்றவன் அல்லன். அருள்மாரி பொழிகின் றவன். இவையனைத்தையும் உள்ளத்தில் கொண்டு உவமையைத் திருத்தியமைக்க வேண்டும். இவ்வாறு ஸ்வாமி உவமையைத் திருத்தியமைக்கிறார்.

''ஒரு காளமேகம் கடல் நீர் அத்தனையையும் பருகி, வயிறு பருத்து இரண்டு காவேரிகளின் நடுவே படுத்துக் கொண்டிருந் தால் எப்படி இருக்குமோ அப்படிப் பெரிய பெருமாள் ஸேவை தருகிறார் என்கிறார் ஆழ்வார்'' என்கிறார் ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன்.

அல்லது பொதுவாக மேகம் செய்யும் செயலைப் பெரிய பெருமாள் செய்கிறார். ஆகையால் இவர் 'கொண்டல்வண்ண' னாகக் கூறப்படுகிறார். மேகம், ஜங்கமப் பொருள் (அசையும் பொருள்) இது,அல்லது ஸ்தாவரப் பொருள் (அசையாப் பொருள்) இது என்ற பாகுபாடின்றி யாவும் வாழும்படி ஜலம்- ஸ்தலம் என்ற பேதமின்றி எங்கும் மழை பொழிகிறது.





இவ்வாறே எம்பெருமானும் மக்களிடையே வேற்றுமை பாராமல் காருண்யம் எனும் நீரைப் பொழிந்து உலகமனைத் தையும் காப்பதால் கொண்டல்வண்ணன், மேகத்தின் ஸ்வபாவம் கொண்டவன் என்று அநுபவிக்கப்படுகிறான்.

இங்கு ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் அருளியுள்ள ஸ்ரீ ஸூக்தி கள்:-''கடலிலுள்ள நீரெல்லாம் வாங்கிக் காவேரீ மத்யத்திலே படிந்ததொரு காளமேகம் போலே, கண்டார்க்கு ஶ்ரமஹரமான திருமேனியை உடையவனை. அங்ஙனன்றிக்கே ஜங்கம- ஸ்தாவ ரங்கள் எல்லாம் உஜ்ஜீவிக்கும்படி ஜல- ஸ்தலவிபாகம் அறக் காருண்ய ரஸத்தை வர்ஷிப்பதொரு காளமேகத்தின் ஸ்வபா வத்தை உடையவனை என்னுமாம்'' என்று.

வெயிலில் வாடிய ப்ராணிகளுக்கு மேகம் தன் வடிவைக் காட்டி அவற்றின் தாபங்களை-ஶ்ரமங்களைப் போக்குவது போல் எம்பெருமானும் தன்னுடைய கறுத்த திருமேனியைக் காட்டியே ஸர்வாத்மாக்களுடையவும் ஶ்ரமங்களைப் போக்கி யருளுகிறான். இதனால் கொண்டல் வண்ணன் என்று இங்குக் கூறப்பட்டுள்ளான் என்றும் அருளியுள்ளார்.

**கோவலனாய் வெண்ணெய் உண்டவாயன்:-** ஶ்ரிய: பதியான எம்பெருமான் கோபாலனானான். வெண்ணெயை உண்டான் என்ற இரண்டு விஶேஷணங்களினால் இரண்டு ஶாஸ்த்ரார்த்தங் கள் வெளிப்படுகின்றன.

(1) எம்பெருமான் ஸர்வலோக ரக்ஷகன், (2) ஆஶ்ரிதர் உகந்த - அதாவது ஆஶ்ரிதர்களுக்கு விருப்பமான த்ரவ்யத்தையே தானும் விரும்பிக் கொள்கிறான். என்ற இரண்டு ஶாஸ்த்ரார்த்தங்கள் இந்த இரண்டு அடைமொழிகளாலே - விஶேஷணங்களாலே வெளிப்படுகின்றன.

ஸர்வரக்ஷகனாய் இருப்பவன் தன்னால் ரக்ஷிக்கப்பட வேண்டியவற்றுள் உயர்வு தாழ்வு பார்த்து உயர்ந்தவற்றை ரக்ஷிப்பதும் தாழ்ந்தவற்றை ரக்ஷியாமலிருப்பதும் செய்யக்

கூடாது. யாவற்றையும் ரக்ஷித்தால்தான் அவன் ஸர்வரக்ஷகன் என்பது நிலைக்கும்.

இடக்கை இது, வலக்கை இது என்று இவ்விரண்டின் பேதத் தை உணர்ந்தால் வலக்கையினால் செய்ய வேண்டிய கார்யமிது. இடக்கை யினால் செய்ய வேண்டிய கார்யமிது. வலக்கையினால் செய்யக் கூடாத கார்யமிது, இடக்கையினால் செய்யக் கூடாத கார்யம் இது என்று அறியலாம். அறிந்தால் செய்ய வேண்டிய வற்றைச் செய்யவும், செய்யக் கூடாதவற்றைச் செய்யாமலிருக் கவும் முடியும். இவையிரண்டையும் தவிர்த்தவர்கள் இடையர் கள் என்று ஒரு ப்ரஸித்தி. இப்படிப்பட்ட வம்ஶத்தில் வளர்ந்து தன்னையும் 'கோபன்' என்று தானே சொல்லிக் கொண்டு நின்றான்.

இப்படி இடையர்களுள் ஒரு இடையனாக அவதரித்த இவன் அவர்களுக்கு நேர்ந்த ஆபத்துக்கள் பலவற்றையும் போக்கினான். அவர்களை ஸம்ரக்ஷித்தான். இதனால் இவன் ஸர்வலோகரக்ஷகன் என்பது யாவர்க்கும் ப்ரஸித்தமாயிற்று.

இவன் எப்போதுமே இடையன்தான். இடை என்பது நடுவே என்ற பொருளையும் தரும். ஆக இடையன் - நடுவில் இருப்பவன். அதாவது ப்ரஹ்மா ஶிவன் இவர்கள் இருவருக்கும் நடுவில் இருப்பவன் என்றபடி.

ப்ரஹ்மா, விஷ்ணு, ஶிவன் என்று மும்மூர்த்திகளைக் குறிக்கும்போது ப்ரஹ்மாவுக்கும் ஶிவனுக்கும் இடையில், நடுவில் வைத்துத்தானே எம்பெருமானை எண்ணுகிறார்கள்.

**मध्ये विरिञ्चिशिवयोः विहितावतारः** (மத்யே விரிஞ்சிஶிவயோ: விஹிதாவதார:) ப்ரஹ்மா, ஶிவன் இவர்களின் நடுவில் அவதாரம் செய்தவன் எம்பெருமான் என்று பூர்வர்களின் அருளிச் செயலாலும் எம்பெருமான் இடையன் என்பது ஸுப்ரஸித்தம்.

**வெண்ணெய் உண்ட வாயன்:** ஆஶ்ரிதர்கள் எந்த ஒரு பொருளை மிகவும் விரும்பியிருப்பார்களோ, அதையே தானும்





விரும்புவான் எம்பெருமான்.

இடையர்கள் மிக விரும்பிச் சேமித்து வைப்பது வெண் ணெயை; இதைத்தான் எம்பெருமானும் அதிகமாக விரும்பு கிறான்.

ஸ்ரீ வைகுண்டத்தில் நித்யஸூரிகள் அப்ராக்ருதமான போக்யவஸ்துக்களைக் கொண்டு எம்பெருமானை உபசரிக்கி றார்கள். விரஜாநதியின் தீர்த்தத்தினால் திரு அபிஷேகம் செய்து வைக்கிறார்கள். அப்ராக்ருதமான திவ்யபுஷ்பங்களைக் கொண்டு மாலைகளாகத் தொடுத்துச் சூட்டுகிறார்கள். பிறகு அப்ராக்ருத மான தூபம் கொண்டு எம்பெருமானுக்கு ஸமர்ப்பிக்கிறார்கள். அலங்காராஸநம் வரை ஸ்ரீ வைகுண்டத்தில் நடைபெறுகிறது. பிறகு நித்யஸூரிகள் போஜ்யாஸநம் ஸமர்ப்பித்து எம்பெரு மானுக்கு அப்ராக்ருதங்களான போஜ்ய பதார்த்தங்களை ஸமர்ப்பிக்க எண்ணியிருந்த ஸமயத்தில் எம்பெருமான் அவற் றை அநாதரித்து விட்டுப் பூலோகத்தில் க்ருஷ்ணனாகத் திருவவ தாரம் செய்து நந்தகோகுலத்தில் பக்தர்களான இடையர்கள் கடைந்து வைத்த வெண்ணெயை அமுது செய்ய இங்கு எழுந் தருளிவிட்டான்!

இவ்விஷயத்தை ஸ்வாமி நம்மாழ்வார் திருவிருத்தத்தில்

**'சூட்டு நன்மாலைகள் தூயன ஏந்தி**
**விண்ணோர்கள் நன்னீர்**
**ஆட்டி அந்தூபம் தராநிற்கவே**
**அங்கு ஓர் மாயையினால்**
**ஈட்டிய வெண்ணெய் தொடுவுண்ணப்போந்து**
**இமிலேற்றுவன் கூன்**
**கோட்டிடை யாடினை கூத்து, அடலாயர்**
**தம் கொம்பினுக்கே.**

-திருவிருத்தம் ***(21)***

என்று அத்புதமாக அருளிச் செய்துள்ளார்.

இங்கு ஈடு என்ற வ்யாக்யாநத்தில் உள்ள அத்புதமான விஷயத்தையும் நாம் அவஶ்யம் அநுபவிக்க வேண்டும்.

ஸ்ரீ வைகுண்டத்தில் நித்யஸூரிகள் அநந்ய ப்ரயோஜநர்களாய் அதாவது எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்வதைத் தவிர அதனால் வரும் வேறு எந்தப் பயனையும் விரும்பாதவர்களாய் எம்பெருமானுக்குத் திருமஞ்ஜநம் செய்வித்து அப்ராக்ருதமான புஷ்பங்களை ஸமர்ப்பித்து அவனை அலங்கரித்தார்கள்.

ஸ்ரீ வைகுண்டத்தில் எம்பெருமானை எதற்காக நீராட்ட வேண்டும்? எம்பெருமான்தான் எதற்கு நீராட வேண்டும்? உடம்பில் அழுக்கு இருந்தால் அதைப் போக்குவதற்காகத் தானே குளிப்பது வழக்கம்? அப்ராக்ருதமான எம்பெருமான் திருமேனியில் அழுக்கு உண்டோ? எதற்காக நீராட வேண்டும்? என்ற ஓர் கேள்வி எழ அதற்கு ஈடு என்ற உரையில் நம்பிள்ளை பதில் அருளுகிறார். 'கர்ம வஶ்யரைப்போலே அழுக்குக் கழலக் குளிக்கையன்றிக்கே அங்குள்ளார்க்கு உஜ்ஜீவநமாக - நாடு வாழக் குளிக்கும் குளிப்பாயிற்று - நம்பெருமாள் திருமஞ்ஜநம் செய்தருளுமாப்போலே' என்று.

கர்மாதீநமான அழுக்கு உடம்பு படைத்தவர்களான நாம் குளிப்பது, உடம்பில் உள்ள அழுக்கு போவதற்காக. எம்பெருமான் திருமஞ்ஜநம் கண்டருள்வது அழுக்கு போவதற்காக அன்று. பின்? இவன் திருமஞ்ஜநம் கண்டருள்வதைக் கண்டு நித்யர்களும் முக்தர்களும் பேரானந்தம் கொள்கிறார்கள். இவன் நீராடினால் நாடு முழுவதும் நல் வாழ்வு பெறும். ஆகையால் தான் எம்பெருமான் திருமஞ்ஜநம் கண்டருள்கிறான்.





பூலோக வைகுண்டம் எனப்படும் திருவரங்கத்தில் நம்பெருமாள் (ஸ்ரீரங்கநாதன்) திருமஞ்ஜநம் கண்டருள்வதும் இம்மாதிரி தானே! என்று அருளுகிறார் நம்பிள்ளை.

இதற்குப் பிறகு அமுது செய்ய வேண்டும். அதற்காக போஜ்யாஸநம் ஸமர்ப்பிக்க விரும்புகிறார்கள் நித்யஸூரிகள். அர்க்யம் முதலியன ஸமர்ப்பித்து தூபமும் ஸமர்ப்பிக்கிறார்கள். மணம் மிகுந்த அகில்புகை ஸ்ரீ வைகுண்டத்தில் திருமாமணி மண்டபம் முழுவதும் சூழ்ந்தது.

இதற்குமேல் தளிகைகள் (ப்ரஸாதங்கள்) ஸமர்ப்பிக்கப்பட வேண்டும். இந்த நிலையில் ஸ்ரீ வைகுண்டத்தில் அத்புதமான நிகழ்ச்சி ஒன்று நடந்தது. அதாவது-

எம்பெருமான் அமுது செய்யும் ஸமயத்தில் ஸ்ரீ வைகுண்டத்தில் நாரதர் முதலானோர் மூலம் ஓர் செய்தி எம்பெருமான் திருச்செவியிலே பட்டது. அந்தச் செய்தியாவது - யஶோதைப் பிராட்டி திருமாளிகையிலே வெண்ணெய் திரண்டது என்பதேயாம். இதைக் கேட்ட உடனே எம்பெருமான் அதை அமுது செய்ய விரும்பி இவ்விடத்திலிருந்து அங்குச் செல்ல ஸங்கல்பம் கொண்டான்.

நித்யஸூரிகளுக்குத் தெரியாமல் நந்தகோகுலம் செல்ல வேண்டும்; நித்யஸூரிகளோ தூக்கமின்றி விழித்த கண்கள் விழித்தபடியே எம்பெருமானை ஸதா தர்ஶநம் செய்து வருகிறார்கள். அவர்கள் கண்களிலே மணலைத் தூவிவிட்டுத் தான் விரும்பியபடியே நந்தகோகுலம் சென்று யஶோதைப் பிராட்டி கடைந்து எடுத்து வைத்த வெண்ணெயை அமுது செய்யலானான்.

தன்னுடைய ஸங்கல்பத்தாலே உண்டாக்கி அதை அமுது செய்வதைவிட பக்தர்களான கோபிகைகள் கை தொட்டு ஶ்ரமப்

பட்டுக் கடைந்து வைத்ததையே எம்பெருமான் மிகவும் விரும்பினான்.

இந்த அர்த்தத்தைத் தரும் இவ்விடத்திய நம்பிள்ளை ஸ்ரீ ஸூக்திகள்: -

'இப்படி இவர்கள் (நித்யஸூரிகள்) அநுவர்த்தியா நிற்க யஶோதைப்பிராட்டி திருமாளிகையிலே வெண்ணெய் திரண்டதென்று கேட்டவாறே திருவுள்ளமானது இங்கே (நந்தகோகுலத்தில்) குடி போந்தது. ப்ராப்தயௌவநரானால் பித்ராதி ஸந்நிதிகள் பொருந்தாதாற் போலே.

அங்கு அங்ஙனே செல்லா நிற்கச் செய்தே இங்கே வெண்ணெய் திரண்டதென்று நாரதாதிகள் சொல்லக்கேட்டு அவர்கள் கொடுக்கிற தூபத்திலே தன்னை மறைத்து 'ஸதா பஶ்யந்தி'பண்ணுகிறவர்கள் கண்ணிலே மணல் தூவினபடி!

தன் ஸங்கல்பத்தாலே உண்டாக்கி புஜிக்குமதிலும் இவர்கள் கை தொட்டு க்லேஶித்ததையாயிற்று விரும்புவது. மத்தின் விவரத்திலுள்ளதையும் (சந்துக்களில் உள்ளதையும் கூட) விடார்களிறே.

அத்புதமான ஸ்ரீ ஸூக்திகள் இவை.

நித்யஸூரிகள் ஸமர்ப்பித்த தூபத்தின் அடர்ந்த புகையிலே தன்னை மறைத்துக் கொண்டு சென்றானாம் எம்பெருமான். உலகிலும் ஆண்களோ - பெண்களோ எவராயினும் சிறிய வயதில் மாதா பிதாக்களின் அருகிலேயே இருந்து அவர்கள் சொற்படி நடந்து வருவார்கள். இப்படி அடங்கி நடந்து வந்தவர்களே யௌவநப்பருவம் வந்து விட்டால் தங்களுக்குப் பிடித்தவற்றை அநுபவிக்கப் பெற்றோர்கள் ஸந்நிதியை விட்டு அகன்று விடுவார்கள். இது உலக இயற்கை. இவ்வாறேதான் இப்போது எம்பெருமானும் என்பதை 'ப்ராப்தயௌவநரானால்





பித்ராதி ஸந்நிதி பொருந்தாதாற்போலே' என்று நம்பிள்ளை மிக நளிநமாக அருளியுள்ளார். இப்பாசுரத்தில் இவ்வளவு நமக்கு இப்போது போதுமாகையால் இத்துடன் இதன் விளக்கத்தை நிறுத்திக் கொள்வோம்.

இப்போது அமலனாதிபிரான் என்ற ப்ரபந்தத்தில் கடைசிப் பாசுரமான 'கொண்டல்வண்ணனை' என்பதில் 'கோவலனாய் வெண்ணெய் உண்ட வாயன்' என்பதற்கு ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் முநிவாஹநபோகம் என்று தாம் அருளிய உரையில் அருளியுள்ள ஸ்ரீ ஸூக்திகளையும் அநுபவிப்போம்.

**கோவலனாய் வெண்ணெய் உண்டவாயன்:-** ''எட்டும் இரண்டும் அறியாத இடையரையும் இடைச்சிகளையும் ரக்ஷிக்கையிலே தன்னுடைய ஸர்வலோக ரக்ஷகத்வம் வெளிப்படும்படி இடையரில் ஒரு ரூபத்தைக் கொண்டு. ஆஶ்ரிதர் உகந்த த்ரவ்யம் எல்லாம் தனக்கு உகப்பென்னும்படி தோற்ற அவர்கள் ஈட்டிய (திரட்டிய) வெண்ணெய், சூட்டுநன் மாலையிற்படியே அப்ராக்ருத போகம் போலே அநுபவித்து அத்தாலே இப்போதும் குணுங்கு நாறும்படியான திருமுகத்தை உடையவன்'' என்று.

இப்படிப்பட்ட எம்பெருமானுக்கு, இடைச்சிகள் வைத்த வெண்ணெய் போலே திருப்பாணாழ்வாருடைய திருவுள்ளமும் - நெஞ்சமும் பரம போக்யமாயிற்று என்பதைத் திருப்பாணாழ்வாரே, 'என் உள்ளம் கவர்ந்தானை' என்று அருளுகிறார்.

இதுவரை எம்பெருமானுடைய ஸௌஶீல்யம் சொல்லப் பட்டது. இனி இவனுடைய பரத்வத்தை வெளியிடுகிறார் ஆழ்வார் அண்டர்கோன் என்று.

அண்டர் என்பது அண்டாதிபதியான ப்ரஹ்மா மற்றும் அண்டத்துக்குள்ளே இருக்கிற தேவாதிகள் அனைவரையும் குறிப்பதாக ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் அருளியுள்ளார். இவர்களுக்கு ஸ்வாமீ. இவர்களைத் தன்னிச்சைப்படி நியமிப்பவன் இவன்.

எளிமைக் குணமாவது எல்லோரிடத்திலும் அரிது. அதாவது எளியோராய் மட்டும் இருப்பவரிடம் உள்ள எளிமை, ஸௌலப்யம் என்னும் குணமாகாது. மேன்மை பெற்றவருடைய எளிமை தான் குணமாகும்.

அண்டர்கோனாயிருந்து இடையர்களுக்கும் எளியனாய் இருக்கிறான் என்பதால் எம்பெருமானுடைய எளிமையே குண மாகும். இதைத்தான் அனைவரும் கொண்டாடுகிறார்கள். பெரிய திருமொழியிலே 11வது பத்தில் திருமங்கையாழ்வார் எம் பெருமானுடைய எளிமையைப் பார்த்து ஒருவர் இகழ மற்றொருவர் அதை மறுத்து அந்த நிலையிலேயே அவனுடைய மேன்மையைப் பேசுவதாகப் பத்துப் பாசுரங்களால் வெளியிடுகிறார்.

ஒருத்தி எம்பெருமான் க்ருஷ்ணாவதாரத்தில் தாம்பினால் கட்டுண்டமையைச் சுட்டிக்காட்டி அவனை இகழ, மற்றொருத்தி அந்த நிலையிலேயே அவனுடைய பெருமையை வெளியிடு கிறாள்.

***'கண்ணிக்குறுங்கயிற்றால் கட்டுண்டான் ஆகிலும் எண்ணற் கரியான் இமையோர்க்கும்' (பெரிய திரு.11-5-5)*** என்ற பாசுரத்தை அடியொற்றி அமைந்துள்ளன கோவலனாய் வெண்ணெயுண்ட வாயன் அண்டர்கோன்' என்ற வாக்யங்கள்.

**அணியரங்கன்:** நித்யஸூரிகளும் தங்களுடைய தேஶமான ஸ்ரீ வைகுண்டத்தை விட்டு இங்கே வந்து ஸேவிக்கும்படியாய், அதனால் ஆகர்ஷகமான (வஶீகரிக்கக் கூடியதான) அழகை யுடையதான ஸ்தாநவிஶேஷம் ஸ்ரீரங்கக்ஷேத்ரம். அநாதிகாலம் மற்றைய விஷயங்களையே அநுபவித்து வந்த என்னை இந்த க்ஷேத்ரத்திலே எழுந்தருளியிருந்து தன் அநுபவத்தைத் தந்து அதுக்குப் பரவஶமாக்கினான் என்கிறார் ஆழ்வார்.





**என் அமுதினை:** பரமபதத்திலும், க்ஷீர ஸமுத்ரத்திலும் ஆதித்ய மண்டலம் முதலானவற்றிலும் இந்த எம்பெருமான் அம்ருதமாய் மிகச் சுவையுடையனாய் இருக்கிறான். ஆனால் அந்த அம்ருதத்தை ஆங்காங்கு உள்ளவர்களால்தான் அநுபவிக்க முடியும்.

அப்படியன்றி நீசனான நானும் அநுபவிக்கலாம்படி இருக்கிறது அணியரங்கனாகிய அமுது. இது என் அமுது. எனக்கு மட்டுமே உரியதான அமுது இது.

தேவலோகத்தில் உள்ள ப்ரஸித்தமான அமுது ஸம்ஸார பந்தத்தை வளர்க்கும்.

இந்த அமுதம் தன்னை அநுபவிப்பவர்களுடைய பிறப்பு இறப்புக்களை அடியோடு ஒழிக்க வல்லது. நிரதிஶயமான போக்யமானது. அல்பமான ஆநந்தத்தைத் தரவல்ல ப்ரஸித்த மான அம்ருதத்தை தேவர்கள் மிகுந்த ப்ரயாஸத்துடன் பெற் றார்கள்.

பரமாநந்தத்தைத் தரவல்ல இந்த அமுதினை நான் (ஆழ்வார்) ப்ரயாஸம் ஏதுமின்றியே பெற்றேன் என்கிறார்.

தேவர்கள் ப்ரயோஜநாந்தரத்தை - மற்றைய ப்ரயோஜநத்தை விரும்புகிறவர்களாகையாலே அந்த அம்ருதத்தை மிகுந்த ஆயாஸத்துடன் பெற வேண்டியிருந்தது.

மற்றைய பலனை விரும்பாமல் எம்பெருமானையே பரம புருஷார்த்தமாக வேண்டியிருக்கும் அடியேனுக்கு அநாயாஸ மாகக் கிடைத்த அமுதமிது.

இப்படிப்பட்ட அமுதினைக் கண்ட கண்கள் மற்றொன் றினைக் காணாவே என்கிறார் திருப்பாணாழ்வார்.

இந்த ஆழ்வார் முந்தைய பாசுரங்களில் 'என் கண்' என்றும்;

'என் சிந்தனை' என்றும் 'அடியேன் உள்ளத்தின்னுயிரே' என்றும், 'என் உள்ளத்துள்' என்றும் ஒவ்வொரு இந்த்ரியத்தையும் என்னுடையது, என்று 'மம' காரம் தோற்றும்படி அருளிச்செய்து வந்தார்.

இவ்வகையில் இந்தப் பாசுரத்திலும் 'அமுதினைக் கண்ட என் கண்கள்' என்று சொல்ல வேண்டியிருக்க அவ்வாறு சொல்லாமல் 'கண்கள்' என்று மட்டும் அருளியதிலிருந்து ஆழ்வாருக்கு 'மம' காரம் போய்விட்டது என்பது தெளிவு.

இதற்கு முன் 'என் உள்ளம்', 'என் சிந்தனை' என்றெல்லாம் பேசியபோது ஆழ்வாருக்கு மமகாரம் இருக்கத்தானே செய்தது? இந்தக் கேள்விக்கு விடை இதோ.

ஸ்வதந்த்ரனாயும் - ஸ்வாமியாயும் உள்ள எம்பெருமான் நமக்கு ஶேஷமாக - சொத்தாக - உடைமையாக ஒன்றைக் கொடுத்தால் அதை நாமும் நம்முடையது என்று அபிமாநித்துக் கொள்ள வேண்டும். இதனால் மமகாரம் உண்டாயிற்று என்று எண்ணலாகாது. ஆழ்வாருடைய இந்த மமகாரம் நிர்மமத்வத்தோடே (மமகாரம் இல்லாமையோடே) சேர்ந்திருப்பதால் பாமரர்களுயைட மமகாரம் போலே தோஷமாகாது.

எம்பெருமானும் தனக்குச் சொந்தமான சொத்துக்களில் சிலவற்றைத் தன் அடியவர்களுக்கு ஶேஷமாக ஆக்குவது தனக்காகவேதான். அவர்களுக்காக அன்று. அதாவது தன்னுடைய சொத்துக்களில் சிலவற்றைத் தன்னடியார்க்கு ஶேஷமாக்கி, அதனால் தான் மகிழ்கிறான் என்றபடி.

இங்குள்ள இவ்விஷயமான ஸ்ரீஸூக்திகளை - ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் அருளியவற்றை - அநுபவிக்க வேண்டும்:-

''ஸ்வதந்த்ர ஸ்வாமியான ஈஶ்வரன் ஸ்வஶேஷ பூதமான சேதந அசேதநங்களில் ஸ்வார்த்தமாக ஒன்றை ஒன்றுக்கு





ஶேஷமாக அடைத்து வைத்தால் அவன் அடைத்தபடி அறிந்து பேசுவார்க்கு நிர்மமத்வத்தோடே சேர்ந்த இம்மமகாரம் அநபிஜ்ஞர் (அறியாதவர்) மமகாரம் போலே தோஷமாகாது'' என்பவை அவை.

அதாவது எந்த ஒரு வஸ்துவையும் அநாதி காலமாகவே தனக்கே ஏற்பட்டது என்று நினையாமல் எம்பெருமான் நமக்கு இதை ஶேஷமாகத் தந்துள்ளான். அதை நாம் நம்முடையதாகக் கருதினால் தான் எம்பெருமான் திருவுள்ளத்திற்கு உகப்பாகும் என்று அறிந்து மமகாரம் கொண்டால் எந்த தோஷமும் வராது என்றபடி.

இவ்வாறான ஶாஸ்த்ரார்த்தம் இதில் அடங்கியுள்ளதை அறிந்து நாமும் ரஸிக்க வேண்டும்.

**கண்கள் மற்றொன்றினைக் காணாவே:-** இதற்கு முன்பெல்லாம் மற்றைய விஷயங்களிலேயே ஈடுபட்டு, அவற்றைக் கண்டபோது களிப்பும், அவற்றைக் காணாதபோது கவர்வும், அதாவது வருத்தமும், அடைந்திருந்த நிலை மாறி இப்போது எம்பெருமான் திருமேனி தவிர மற்றொன்றினைக் காணா நிலைக்கு வந்துள்ளன இந்த என்னுடைய கண்கள் என்கிறார் ஆழ்வார்.

தமக்கு ஏற்பட்ட விஷயத்தைக் காணப் பெற்ற கண்கள் மற்றெதையும் காணா என்றபடி.

இதன் பயன் - ப்ரஹ்மாதிகள் நம்பெருமாளுக்குத் திருவாராதநம் செய்வதற்கு நம் பெருமாள் பக்கலில் வந்து நின்றிருந்தாலும், என்னுடைய கண்கள் அவர்களைச் சிறிதும் காணா என்கிறார் ஆழ்வார்.

ப்ராப்த விஷயத்திலே ப்ரதிஷ்டிதமான (நமக்கு உரிய விஷயத்தில் நிலை பெற்ற) ஸங்கத்தை உடைத்தானபடியாலே

பரிசர்யார்த்தமாக (பூஜைக்காக) வந்து பார்ஶ்வ வர்த்திகளான (எம்பெருமானுக்குப் பக்கத்தில் இருக்கும்) பத்ம யோநிகள் (ப்ரஹ்மா) முதலானோரையும் பாராது என்கிறபடி.

எம்பெருமானிடம் மிகுந்த பக்தி கொண்டவர்கள் பிறரோடு எந்த விதமான ஸம்பந்தமும் வைத்துக் கொள்ள மாட்டார்கள்.

மஹாபாரதத்தில் ஶாந்தி பர்வாவில் ஒரு கதை உள்ளது. அதிலிருந்து இந்த உண்மை புலனாகிறது.

அதாவது ப்ரஹ்மாவின் புத்ரர்கள் ஏகதர் - த்விதர் - த்ரிதர் என்பார் சிலர் உள்ளனர். இவர்கள் யோகத்தின் ஆரம்ப தஶையில் உள்ளவர்கள். எம்பெருமானை ஸாக்ஷாத்காரம் செய்ய வேண்டும் (நேராகக் காண வேண்டும்) என்ற விருப்பம் உள்ளவர்களாய் தபஸ் செய்து வருகிறார்கள். இவர்கள் எம்பெருமானை நேரே காணவில்லை. இவர்கள் ஒரு ஸமயம் ஶ்வேதத்வீபம் (க்ஷீராப்தியில் ஒரு திடல்) சென்றனர். அங்குள்ளவர் மஹாத்மாக்கள்; எம்பெருமானை நேரே ஸாக்ஷாத்காரம் செய்து ஸாக்ஷாத்தான பகவந் மந்த்ரங்களைக் கொண்டே பகவானை ஆராதித்து எம்பெருமானையே எப்போதும் த்யாநம் செய்து வருபவர்கள். வெண்மை நிறம் கொண்டவர்கள். சந்த்ரன் போன்ற காந்தி பெற்றவர்கள்.

இப்படிப் பூர்ணமான பக்தி கொண்ட ஶ்வேதத்வீப வாஸிகள், தங்களிடம் வந்த ஏகதர் - த்விதர் - த்ரிதர் என்பவர்களை ஆதரிக்கவே இல்லை. இவர்களை ஆதரித்து இவர்களுடன் பேசினால் தங்களுடைய தபஸ், த்யாநம் இவை குறைந்து விடும் என்று எண்ணினார்கள். ஆகவே இவர்கள் அந்த ஏகதர் முதலானவர்களை ஆதரிக்கவே இல்லை, கண்ணெடுத்தும் பார்க்கவில்லை. மனத்தாலும் எண்ணவில்லை.





இவ்விஷயத்தை ஏகதர் முதலானோரே - தங்கள் வாயாலேயே

**पुरुषाणां सहस्रेषु येषु वै शुद्धयोनिषु ।**
**अस्मान् न कश्चिन्मनसा चक्षुषा वाऽप्यपूजयत् ॥**

**புருஷாணாம் ஸஹஸ்ரேஷு யேஷு வை ஶுத்தயோநிஷு ।**
**அஸ்மாந் ந கஶ்சித் மநஸா சக்ஷுஷா வாऽப்யபூஜயத் ॥**

என்று கூறியுள்ளார்கள்.

ஆகவே பகவானுடைய அநுபவத்திலே திளைத்தவர்கள் வேறு எவரையும் கண்ணாலும் பார்க்க மாட்டார்கள். 'என்ன முதினைக் கண்ட கண்கள் மற்றென்றினைக் காணா' என்பது உறுதி வாய்ந்ததேயாம்.

இந்த ஏகதர்கள் முதலானோர் இருக்கட்டும். நாரத மஹர்ஷிக்கே இந்த கதி ஏற்பட்டு விட்டது!

ஒரு ஸமயம் நாரத மஹர்ஷி ஶ்வேதத்வீபம் சென்றார். அங்கு முன் கூறியபடி அழகு வாய்ந்த ஶுபர்களான மஹான்களைக் கண்டு தலையால் வணங்கினார். அவர்களும் நாரதரை மநத்தினால் பூஜித்தனர். இதை எம்பெருமான் கண்டான். நாரதருக்குத் தன் திருமேனியைக் காட்டிவிட்டு மீண்டும் ஒரு வார்த்தை சொன்னான் எம்பெருமான். நாரதரே! இங்கே இந்த ஶ்வேதத்வீபத்தில் இருக்கும் இவர்கள் எப்போதும் இடைவிடாமல் என்னையே த்யாநம் செய்து வருகிறார்கள். உம்முடைய ஸமாகமத்தினால் - சேர்க்கை யினால் இவர்களுடைய த்யாநத்திற்குத் தடங்கல் - இடையூறு ஏற்படும். ஆகவே இவ்விடத்தை விட்டு ஶீக்ரமாக அகன்று செல்லும் என்றான் எம்பெருமான்.

லோகத்தில் ஸத்புத்ரர்களைப் பெற்ற க்ருஹஸ்தர் தன் பிள்ளை ஶ்ரத்தையுடன் ஜபம் முதலியன செய்து வரும்போது அவனுடன் பேச யாராவது வந்தால் 'என் பிள்ளை ஜபம் செய்

கிறான். இதை நீங்கள் கெடுக்க வேண்டாம். அப்புறம் செல்லுங்கள்' என்று சொல்லுவதைப் பார்த்துத்தானே வருகிறோம்? அம் மாதிரிதான் இங்கும்.

ஆக எம்பெருமான் திருமேனி அழகிலேயே ஈடுபட்ட தம் முடைய கண்கள், தாம் விரும்பும் எம்பெருமானுடைய திருவாரா தநத்திற்காக அவன் அருகில் நிற்கும் ப்ரஹ்ம - ருத்ராதிகளையும் தன் கண்கள் காணா என்று ஆழ்வார் அருளிச் செய்கிறார் என்று ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் தாம் அருளிய முநிவாஹநபோகம் என்ற அமலனாதிபிரான் வ்யாக்யாநத்தில் அருளிச் செய்துள்ளார். மற்றும் சில விஷயங்கள் முன்னோர்கள் காட்டிபடியே உள்ளன.

இப்படியாக ஸ்வாமி ஸ்ரீ தேஶிகன் முநிவாஹந போகம் என்ற தம் உரையில் விரிவாக அருளியுள்ளதை இங்கு ஓரளவு சுருக்கித் தந்தோம்.

எம்பெருமானுடைய திவ்யாத்மஸ்வரூபத்தில் உள்ள கல்யாண குணங்கள், பிறகு திவ்ய திருமேனி, அதன் குணங்கள், ஸௌந்தர்யம் - லாவண்யம் முதலியவை, மேலும் திருஅரங் கனின் ஸௌந்தர்யத்தைப் பாதாதிகேஶம் அணு அணுவாக அநுபவித்த திருப்பாணாழ்வார் ஸ்ரீ ஸூக்திகள், அவற்றிற்குப் பூர்வாசார்யர்கள் அருளிய விஶேஷார்த்தங்கள் ஆக இவ்விஷயங் களைப் பற்றி இதுவரை வளர்ந்து வந்த அருள்மொழிகள் இத்துடன் நிறைவு பெறுகின்றன.

**சுபம்**



